உ

சிவமயம்.

# காஞ்சிப்புராண வசனம்.

திருக்கைலாச பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்துத்

திராவிடமகாபாஷியகர்த்தரான

சிவஞானயோகிகள் அருளிச்செய்த

காஞ்சிப்புராணத்திற்கு

ம-ா-ா-ஸ்ரீ

தொ. இரத்தினமுதலியார்,

பி. சம்பந்த முதலியார்,

கா. குமாரசாமிபிள்ளை

முதலானவர்கள் கேட்டுக்கொண்டபடி

புரசை அஷ்டாவதானம்

ம-ா-ா-ஸ்ரீ-சபாபதிமுதலியாரவர்கள்

மாணாக்கரும்

காஞ்சிபுரம் பிரிசர்ச் மிஷன் ஹை ஸ்கூல்

தமிழ்ப்புலவருமாகிய

**பு. கனகசபை நாயகர் அவர்கள்**

இயற்றிய

இந்தவசனகாவியம் பலருக்கும் பயன்படும்படி

இவர் இஷ்டர்களில் ஒருவரால்

சென்னை

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



*1887.*

68

## காஞ்சிப்புராண வசனம் செய்தவரால்

இயற்றப்பட்டு

### அச்சிற்பதிப்பிக்கப்பட்டவைகள்.

1. தேவிதோத்திரம்
2. சிவதோத்திரம்
3. திருஒற்றியூர்ப் பதிற்றுப்பத்தந்தாதி
4. திருமயிலைப் பதிற்றுப்பத்தந்தாதி
5. திருவான்மியூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி
6. செங்கற்பட்டு ஸ்ரீகோதண்டராமசாமி பாமாலை
7. மதுரைப்பதிற்றுப்பத்தந்தாதி
8. ஆறுகாடு சுப்பிரமணியசுவாமி மும்மணிக்கோவை முதலியவை
9. கோவிந்தபாடி அகரம் தக்ஷிணாமூர்த்திசுவாமி நான்மணிமாலை முதலியவை
10. கச்சிப்பதிற்றுப்பத்தந்தாதி
11. கச்சபேசுவரர் பதிற்றுப்பத்தந்தாதி
12. கல்பாக்கம் குமாரசாமிகவிராயர் இயற்றிய கம்பர் யமக அந்தாதி உரை

### அச்சிற்பதிப்பிக்க வேண்டுவன.

13. காமாட்சியம்மன்பதிகம்
14. மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் உரை
15. திருக்கழுக்குன்றப்பதிற்றுப்பத்தந்தாதி
16. திருப்போரூர் வெண்பா வந்தாதி
17. மைசூர் நஞ்சுண்குடிப் பதிற்றுப்பத்தந்தாதி
18. திருவாலங்காட்டுப்பதிற்றுப்பத்தந்தாதி
19. காஞ்சிபுரம் அமரீசப்பதிற்றுப்பத்தந்தாதி
20. கம்பர் கருணாரசமஞ்சரி
21. கம்பர்வெண்பா வந்தாதி
22. திருக்குமரகோட்டப் பாமாலை ஊசல் முதலியவை
23. ஆத்திசூடி நீதிக்கலிவிருத்தம்

# படல அகராதி.

உ

சிவமயம்.

# காஞ்சிப்புராணவசனம்.

## பாயிரம்.

---

கடல்சூழ்ந்த உலகமெல்லாம்கண்டு களித்துக் கதி அடையும்பொருட்டுக் கருணைநிதியாகிய சோமசுந்தரக்கடவுள் அறுபத்துநான்கு திருவிளையாடல் செய்தருளப்பெற்ற "பாண்டிவளநாட்டிலே" பொதியமலைச் சாரலிலே பாவநாசம் என்னும் திருப்பதியைச்சார்ந்த விக்கிரமசிங்கபுரத்திலே அகத்தியமகா முனிவரிடத்தில் ஏழுதலைமுறையளவும் பிறைமதிபோல் முறையே வளர்ந்து, அருட்புலமை நிரம்பிவிளங்க வரம்பெற்ற சைவபரம்பரை வேளாளர் குலத்திலே குருலிங்க சங்கமபத்தியிற் சிறந்தவராய்க் கல்விப் பொருளும் செல்வப் பொருளும் உடையவரா யிருந்த "ஆனந்தக்கூத்தர்" என்பவருக்கு அவர் மனைவியராய்க் கற்பினிற்சிறந்த மயிலம்மையார் மணிவயிற்றில் மாசில்லாத மாணிக்கம்போல் அவதாரம் செய்து, முக்களாலிங்கர் என்னும் பிள்ளைத் திருநாமம்பெற்று ஐந்தாம் வயதில் பள்ளிக்கூடத்திற்குப்போய்ப் படித்துவரும் நாட்களில் ஒருநாள் திருவாவடுதுறையி லிருந்து சிவஸ்தல யாத்திரையாகப் புறப்பட்ட சில முநிவர்கள் விக்கிரமபுரத்துவீதியிலேவரக்கண்டு, தெண்டனிட்டுக்கைகூப்பித்தொழுது, சுவாமிகளே! அடியேன்வீட்டிற்கு எழுந்தருளித் திருவமுதுசெய்து, பின்பு சென்றருளவேண்டுமென்று பிரார்த்திக்க, அம்முநிவர்கள், வயதில்சிறியரும் அறிவில் பெரியருமாகிய முக்களாலிங்கர் வழிபாட்டிற்குத் திருஉளமிரங்கி அன்போடு உடன்பட்டு, அவருடன் அவர் மாளிகைக்குப்போய் முக்களாலிங்கர் அருமைக்கருத்தை அறிந்து,அருந்ததியிலும்சிறந்த மயிலம்மையார், உபசரிக்கத் திருவமுதுசெய்து சென்றருளினார்கள். முக்களாலிங்கர், தமது கருத்தின்படி மகான்களை உபசரித்த அருமைத் தாயாரைப்பற்றி.

"அருந்ததியென்னம்மை யடியவர்கட்கென்றும்
திருந்தவமுதளிக்கும் செல்வி—பொருந்தவே
ஆனந்தக்கூத்த ரகமகிழத்தொண்டுசெயும்
மானந்தவாத மயில்"

என்னும் செய்யுளை இயற்றியருளினர். வெளியிற்போயிருந்த ஆனந்தக்கூத்தர் வீட்டிற்குவந்து, நடந்த அற்புதச்செய்திகளைக் கேள்வியுற்றுப், பரமானந்தக் கடலில்மூழ்கி உடனே தமது சற்புத்திர சிகாமணியாகிய முக்களாலிங்கரோடு மேற்கூறியமுநிவர்களிடம்சென்று, வணங்கியபோது சத்திநிபாத முடைய அந்தப்புத்திரர் பிறவித்துன்பக் கடலைக் கடந்து, பேரின்பக்கரை காணக்கருதி, அம்முநிவர்களோடு தாம்செல்லவேண்டும் என்னும்குறிப்பை உணர்த்தப், புத்திரரைப்பிரிய மனம் இல்லாதிருந்தும் பிதா ஒருவாறு உடன்பட்டு வீட்டிற்குத் திரும்பிவிட்டார்.

பிதாநீங்கியபின்பு முக்களாலிங்கர் ஆதின்த்து முநிவர்களோடுசென்று, இடையிலே உள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு, சோணாட்டில் உள்ள திருவாவடுதுறையை அடைந்து, மடாலயத்தினுள்ளே பிரவேசித்து ஆதீன முதற்பரம குரவராகிய நமச்சிவாயமூர்த்திகளைத் தரிசித்துத் திருவருணோக்கம்பெற்று அப்பொழுது சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த பின்வேலப்பதேசிகரை ஒடுக்கத்திலேபோய்த் தரிசித்துப் பேரன்போடுவணங்கினர். வணங்கி, அவரிடத்தில் சைவசந்நியாசமும்சிவதீக்ஷையும் சிவஞானயோகிகள் என்னும் தீக்ஷாநாமமும்பெற்று, மெய்கண்டசாத்திர பண்டார சாத்திரங்களைக் கேட்டருளினர்.

சிவஞானயோகிகள் அகத்தியமுனிவர் வரத்தால் அவதாரம் செய்தவர் ஆதலின் எளிதில் வடமொழிக்கடலும், தென்மொழிக்கடலும், முற்றொருங்குணர்ந்து மெய்யுணர்வு முதிர்ந்து அமர்ந்தருளினர்.

சிவஞான யோகிகள் சமதக்கினி மகா முனிவருடைய புத்திரரும் அகத்திய மகாமுனிவருடைய முதன்மாணாக்கரும் இடைச்சங்கப் புலவர் ஐம்பத்தொன்பதின்மருள் ஒருவருமாகிய திரணதூமாக்கினி என்னும் தொல்காப்பியமுநிவர் அருளிச்செய்த இலக்கணநூலாகிய தொல்காப்பியத்திற்கு உரையாசிரியர் ஆகிய இளம்பூரணர்செய்த உரையாகிய இளம்பூரணமும் சேனாவரையர்செய்த உரையாகிய சேனாவரையமும் நச்சினார்க்கினியார்செய்த உரையாகிய நச்சினார்க்கினியமும் ஆகிய மூன்று உரைகளில் உள்ள சந்தேகங்களைநீக்கித் தெளிவிக்கும்பொருட்டு, அத்தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கும் முதற்சூத்திரத்திற்கும் சூத்திரவிருத்தி எனப் பெயர்பெற்ற பாடியமும் வடமொழித்தருக்க சங்கிரக அன்னம்பட்டீயங்களின் மொழி பெயர்ப்பும், நன்னூலுக்குச் சங்கர நமச்சிவாயப்புலவர் செய்த புத்துரையாகிய விருத்தியுரைத்திருத்தமும் செய்தருளினர். இவை மூன்றும் ஸ்ரீதிராவிட மகாபாடியத்திற்கு அங்கங்கள் எனப்படும்.

அன்றியும் சர்வாத்ம சம்புசிவாசாரியார் அருளிச்செய்த சத்தியரூப சித்தாந்தப் பிரகாசிகையை அப்படியே மொழிபெயர்த் தருளினர்.

அன்றியும் மெய்கண்டதேவர் மொழிபெயர்த் தருளிய வார்த்திகப் பொழிப்பாகிய சிவஞானபோதத்திற்கு ஆசிரியர் அமைத்தருளிய மெய்ப் பொருள் விளங்கும்படி திராவிட மகாபாடியம் எனப்பெயர்பெற்றவிருத் தியுரையும் இலகுவியாக்கியானமென்கிற சிற்றுரையும் அருணந்தி சிவா சாரியார் அருளிச்செய்த சிவஞானசித்தியார் சுபக்ஷத்திற்குப் பொழிப்பு ரையும் செய்தருளினர்.

அன்றியும் சிவாக்கிய சோழமகாராசா காலத்திலே கஞ்சனூரிலே அவதரித்தருளிய ஆசாரிய சரணராகிய ஸ்ரீஅரதத்த சிவாசாரியார் வைண வமதகண்டனம்செய்து, சைவமதஸ்தாபனம் செய்யும்பொருட்டு, நெருப் பிலே பழுக்கக்காய்ச்சிய இருப்புமுக்காலியிலேயெழுந்தருளியிருந்து,சிவபெ ருமானே பரம்பொருள் என இருபத்திரண்டு ஏதுக்களாலே நாட்டியரு ளிய சுலோகபஞ்சகத்தின் மொழிபெயர்ப்பும் அப்பையதீக்ஷிதசுவாமிகள் திருவாக்காகியசிவதத்துவவிவேகமொழிபெயர்ப்பும்காஞ்சிப்புராணத்தின் முற்பாக மொழிபெயர்ப்பும் செய்தருளினர். செய்தருளியகாலம் சாலிவா கனசகஞு 1690 க்குச்சரியான இங்கிலீஷ் 1767ஞுமாம். அன்றியும் யமகரூபமான கம்பரந்தாதி, திருக்ரூபமான முல்லையந்தாதி, கலைசைப்ப திற்றுப் பத்தந்தாதி, குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், கலைசைச் செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத்தமிழ், பெரும்பாலும் உண்மைநாயன்மார் சரிதம் முதலியவற்றைத் தழுவிப் பூருவார்த்தமும் அதற்கு எடுத்துக்காட் டாகத் 'திருவள்ளுவநாயனர்' திருக்குறள் உத்தரார்த்தமுமாகக் கொண்டு, சோமேசர்மீது முதுமொழிவெண்பா, திருவேகம்பர் ஆனந்தக்களிப்,பு செப்பறைப்பதிற்றுப் பத்தந்தாதி, அகிலாண்டேசுவரிபதிகம், மார்கழிமா சம் திருவாதிரை உற்சவத்திலே தேவாரமுதலிய அருட்பாக்கள்திருக்காப் பிடப்பட்டுத் திருவெம்பாவை என்னும் திருவாசகத்திருப்பதிகம், ஒன்று மே ஆன்மார்த்த பரார்த்தபூசாகாலங்களில் ஓதப்பெற்றுவரும் சாம்பிரதா யத்தால் நித்தநியம மந்திரமாகத் திருத்தொண்டர் திருநாமத்தை ஓதி உய் யவேண்டுவார் கருத்துத் தடைப்படா மைப்பொருட்டுத் திருத்தொண்டர் திருநாமக்கோவை, ஆதிபரமாசாரியாராகிய நமச்சிவாயமூர்த்திகண்மீது பஞ்சாக்கரமாலை முதலிய பிரபந்தங்களைச் செய்தருளினர்.

அன்றியும் மரபட்டவணை எனப்பெயர்பெற்ற திருவாவடுதுறை ஆதீ னசாம்பிரதாயக் கட்டளையைத் தருமபுர ஆதீனத்தார் மறுத்தெழுதியதற் கு "மறுப்பின் மறுப்பு" என ஒன்றுசெய்தருளினர்.

இங்ஙனம் உலோகோபகாரமாகப் பல உரைகளையும் பல்நூல்களையும்பலகண் டனங்களையும்செய்து, பலநன்மாணுக்கர்களுக்குப் போதித்து, வடமொழியினும் தென்மொழிசிறந்தது என்று சொல்லும்படி அபிவிருத்திசெய்து, தவமே திரு உருக்கொண்டாற்போலும் விளங்கிய சிவபத்தரும் ஜீவன்முத்தரும் ஆகிய சிவஞானயோகிகள் திருவாய்மலர்ந்தருளிய காஞ்சிப்புராணம் வேதாகமோக்த சைவசித்தாந்தமாயும் மிகக்கற்றவர்களுக்கேயன்றி மற்றவர்கள் எளிதில் அறிந்துகொள்வது அசாத்தியமாயும் இருத்தலால், பெரும்பாலும் அந்நூல்கற்கும் மாணுக்கருக்கும் உபயோகமாயிருக்கும்படி கூடியவரையில் அடைமொழிகளை நீக்காமல் வசனமாக்கித் தருகவென்று காஞ்சீபுரம் முனிசிபாலிடி நேடிவ்ஸர்ஜியனும், வயிஸ்பிரஸிடெண்டும், செங்கற்பட்டுஜில்லா ஆக்டிங் ஸர்ஜியனுமாயிருந்தசெந்தமிழ்ப்பிரியரும், சிவபத்தநேசரும் ஆகிய ம-ா-ா-ஸ்ரீ, தொ. இரத்தினமுதலியார், ஷை முனிசிபாலிடி செயர்மானும், அபாதிகிரியும், கற்றவர்நேசரும் ஆகிய ம-ா-ா-ஸ்ரீ, பி. சம்பந்தமுதலியார், காஞ்சீபுரம். சபாபதிபிள்ளை குமாரரும் ஷை தாலூக்கா நகதிருமஸ்தாவும் நல்லோர்நேசரும் ஆகிய ம-ா-ா-ஸ்ரீ, குமாரசாமிபிள்ளை முதலானவர்கள் கேட்டுக்கொண்டதனாலும் அன்பர் ஏவும் காரியம்செய்தல் அருமைத்தாயினும் அசட்டைசெய்தல் அறன் அன்று ஆதலாலும் சிற்றறிவுடையேன் செய்தவசனத்தில் உள்ளபிழைகளைக் கற்றுணர்வுடையோர் பொறுத்தருள்செய்வர்போலும், காப்புத்திருவிருத்தம் உட்படக் கடவுள்வாழ்த்துகள் எல்லாம் தோத்திரம் செய்தற்குஉரியவைகளாயிருக்கின்றமையால் தோத்திரம்செய்யும்அன்பர்களுக்கு உபயோகமாக அவைகளோடு அவற்றுள் மிகக் கடினமானவைகளுக்குப் பதவுரையும் மற்றவைகளுக்குப் பொழிப்புரையும் அமைத்து அச்சிடப்பட்டன. ஆரம்பத்தில் ஸ்தலசரித்திரத்தை மாத்திரம் எழுத உத்தேசித் ததனால் அது ஒருபிரிவாகவும் நாடு நகரங்கள் ஒருபிரிவாகவும் பிரித்து எழுதப்பட்டிருக்கின்றன. ஆதலின் ஸ்தலசரித்திரம்பார்க்க விரும்புகிறவர்கள் இந்தப்புத்தகத்தின் 82-ஆம் பக்கத்திற்குமேல் பார்க்கக் கடவர். ஷை சிவஞானயோகிகள் மாணுக்கருக்குள்ளே சிறந்தவர் ஆகிய கச்சியப்பமுனிவர் திருவாய்மலர்ந்தருளிய இரண்டாங்காண்டம் வசனரூபமாகச் செய்யப்படுகிறது. இனி அச்சிடப்படும்.

சிவஞானயோகிகள் என்னும் கலைஞானக்கடலில் தோன்றிய செந்தமிழமுதசாரத்தைச் சிவநேசமுடையவர் யாவரும் செவியாகிய வாயால் உண்டு சிவாநந்தச் செல்வராய்ச் சிறந்து வாழும்படி திருவேகம்பர் திருவருள் செய்வாராக.

திருவேகம்பர் திருவடிபோற்றி.

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# காஞ்சிப்புராணம்.

## விநாயகர் காப்பு.

இருகவுட்டுளைவாக்குகார்க்கடங்களிங்குலிகக்
குருநிறத்திழிதோற்றமுன்குலாய்த்தவழ்ந்தேறிப்
பரிதிமார்பினிற்சமனொடுகாளிந்திபயிலுந்
திருநிகர்த்தசீரைங்கரக்களிற்றினைச்சேர்வாம்.

| பதம். | பொருள். |
| --- | --- |
| இரு கவுள் துளை வாக்கு | இரண்டுசெவித்துளைகளிலிருந்துவடியும் |
| கார் கடங்கள் | கருநிறமுள்ள மதங்கள் |
| இங்குலிகம்குரு | சாதிலிங்கம்போல் ஒளிர்நிறமுள்ள |
| நிறத்து | திருமார்பினிடத்து |
| இழிதோற்றம் | ஒழுகும் தோற்றம் |
| முன்குலாய் | முகத்தின்முன்குலாவித் |
| தவழ்ந்து ஏறி | தவழ்ந்து ஏறிக்கொண்டு |
| பரிதிமார்பினில் | சூரியனுடைய மார்பில் |
| சமனொடு காளிந்தி | அவன்குமாரனும் குமாரத்தியுமாகிய யமனும் காளிந்தியும் |
| பயிலும் | விளையாடும் |
| திருநிகர்த்த | காட்சிபோலும் |
| சீர் | சிறப்புவாய்ந்திருக்கும் |
| ஐகரம் | ஐந்துதிருக்கரங்களையும் |
| களிற்றினை | யானைமுகத்தையுமுடைய விநாயகக்கடவுளை இந்நூல் இனிது முடியும்பொருட்டு |
| சேர்வாம். | யாம் தியானிக்கின்றோம். |

## விகடசக்கரவிநாயகர் காப்பு.

விகடசக்கரவாரணந்தொடர்வரும்வித்தகமுகில்வீற
விகடசக்கரவிந்தமன்னவன்றனக்கருளுமெய்த்தலைவாகு
விகடசக்கரவாகமென்முலையுமைகான்முளையென்னுச்சே
விகடசக்கரெந்திரமெனச்சுழல்வெம்பவக்கடனெஞ்சே.

| பதம். | பொருள். |
|---|---|
| வெம் பவம் கடல் | கொடுமையான பிறவிக்கடலில் |
| சக்கரர் எந்திரம் என | குயவர்சக்கரம்போல் |
| சுழல் | இடையறுமற்சுழலும் |
| நெஞ்சே ! | மனமே ! நீ |
| விகடசக்கர ! என்னு | விகடசக்கரவிநாயகரோ! என்றும் |
| ஆரணம் தொடர்வு அரு | வேதங்கள் அணுகுவதற்கு அருமையான |
| வித்தக ! என்னு | ஞானமூர்த்தியே! என்றும் |
| முகில் வீறு அவி | மேகத்தின் கர்வத்தை அழிக்கும் |
| கட! என்னு | மதம்பொழிதலையுடையவரோ! என்றும் |
| சக்கு அரவிந்தம் அன்னவன் றனக்கு | செந்தாமரை மலர்போன்ற கண்களையுடைய திருமாலுக்கு |
| அருளும் | பாஞ்சசன்னியம் என்னும் சங்கு கொடுத்தருளிய |
| மெய் தலைவா ! என்னு | மெய்ப்பொருளே! என்றும் |
| குவி கடம் | குவிந்திருக்கும் செம்பொற் கலசத்தையும் |
| சக்கரவாகம் | சக்கரவாகப்பட்சியையும்போன்ற |
| மெல் முலை | மிருதுவான குஜங்களையுடைய |
| உமைகான்முளை! என்னு | பார்வதிதேவிபுத்திரனே! என்றும் |
| சேவி | துதிசெய்து வணங்கு (வணங்கிப்) |
| கட. | பிறவிக்கடலைக்கடந்து பிழைத்துப்போ. |

இந்தத்தல விநாயகர் திருமாலுக்குச் சங்கும் சக்கரமும்கொடுத்தருளினவர் என்பதைக் குறிப்பிக்க, ஐந்தாம் திருவிருத்தத்தில் சக்கரத்தைப் பிரித்துக் காட்டியதனுல் இந்தத் திருவிருத்தத்தில் அருளியது சங்கு என்க.

## கடவுள் வாழ்த்து.

### சபாநாயகர்.

சங்கேந்துமலர்க்குடங்கைப்புத்தேளுமறைக்கோவுந்தழல்கால் சூல, மங்கேந்துமம்மானுந்தத்தமதுதொழிறலைநின்றுற்றச்செய்தோர், பங்கேந்தும்பெருமாட்டிவிழிகளிப்பவிருமுனிவர்பணிந்துபோற்றக், கொங்கேந்துமணிமன்றுட்குனித்தருளும்பெருவாழ்வைக்குறித்துவாழ்வாம்.

இதன்பொருள்.

நான்குவேதங்களை ஓதிய பிரமதேவனும், செந்தாமரைமலர்போலுங் கையில் பாஞ்சசன்னியம் என்னும் சங்கு ஏந்திய விஷ்ணுவும், அக்கினிச் சுவாலைவீசும் சூலாயுதம் ஏந்திய உருத்திரமூர்த்தியும், தங்கள்தங்கள் தொழில்களாகிய படைத்தல், காத்தல், அழித்தல் முதலியவைகளில் நிலையாக நின்று செய்யும்படி ஏற்படுத்தி, இடப்பாகத்தை இருப்பிடமாகக் கொண்டிருக்கும் சிவகாமித்தேவியாருடைய கண்கள்களிக்கவும், பதஞ்சலி வியாக்கிரபாதர் என்னும் இரண்டுமுனிவர்கள்வணங்கி வாழ்த்தவும், ஞானமணம்வீசும் சிற்சபையில் ஆனந்தக்கூத்து ஆடியருளும், எங்கள் பெருஞ்செல்வமாகிய சபாநாயகரைத்தியானித்து, யாம் எந்நாளும் மாறாஇன்பத்துடன் மகிழ்ந்துவாழ்வோம். (எ-று.) அங்கு-அசை.

### ஏகம்பநாதர்.

தனந்தபெருந்துயர்க் கடன்மீக் கூர்தலினுன்மலைபயந்த தளிர்மூரற், கணங்குழையாள் புரிபூசை முடிவளவுந்தரியாமலிடையே கம்பை, யணங்கினைத்துதெனவிடுத்து வலிந்திறுகத்தழீஇக்கொள்ளவமையாக்காதன், மணந்தருளிக்குறிபூண்டவொருமாவிற்பெருமானைவணக்கஞ்செய்வாம்.

இதன்பொருள்.

தம்மைவிட்டுப்பிரிந்து போனமையால் உண்டாகிய பெருந்துயரக் கடலானது மேன்மேலும் பெருகியதனால், மலையரசன் பெற்றெடுத்த முத்துப்போல் விளங்கும் தந்தங்களையும் கூட்டமாகிய காதணிகளையு முடைய பார்வதிதேவியார் பண்ணியபூசை நிறைவேறும் அளவும் பொறுக்

காமல், அந்தப்பூசையின் நடுவில் கம்பாநதிஎன்னும் பெண்ணைத் தூதாக அனுப்பக்கண்டு திடுக்கிட்டு வலிந்து இறுகக்கட்டித் தழுவிக்கொள்ளவே பேராசையோடு கலந்தருளிச் செங்கைவளைத்தழும்பும் கொங்கைத்தழும்பும் கொண்டருளிய ஒரு மாவடியில் வாழ்ந்தருளும் திருவேகம்ப நாதரை யாம் வணங்குகின்றோம். (எ-று) விடுத்து என்பது விடஎன்னும் வினையெச்சத்திரிபு.

## காமாட்சியம்மை.

ஊன்பிலிற்றுமழுவாளிகலவிதனி லொண்ணாதென்றோர்ந்துநஞ்சந், தான்பிலிற்றும்பாப்பணியைநீப்பவுங்கார்வண்டினங்கடதைந்துமூசத், தேன்பிலிற்றுநறுங்கடுக்கைத்தெரியலைப்பாம்பெனமருண்டத்தெரியனாறுங், கான்பிலிற்றத்தெருண்டணையுங்காமக்கோட்டத்துமையைக்கருத்துள்வைப்பாம்.

### இதன்பொருள்.

பகைவர் மாமிசத்தை உண்டு உமிழும் மழுவாயுதம் ஏந்தும் சிவபெருமான் லீலையில் கூடாதென்றெண்ணி,விஷம்கக்கும் சர்ப்பாபரணத்தை நீக்கிவிடவும், கருநிறமுள்ள வண்டின்கூட்டங்கள் அடர்ந்து சூழ்ந்துகொள்ளும்படி தேனைஉமிழும் நன்மணமுள்ள கொன்றைப்பூமாலையைச் சர்ப்பம்என்றுமயங்கி, அந்தக்கொன்றைப் பூமாலை சுகந்த பரிமளம் வீசுவதனால் சர்ப்பம் அல்லவென்றுதெளிந்து அணுகும்காமக்கோட்டத்தில் கருணைகூர்ந்திருக்கும் காமாட்சிதேவியை யாம் எமது சிந்தனையில் வைக்கின்றோம். (எ-று) தான் அசை.

கருக்காமக்கோட்டிமிரவினையனைத்து மொருங்கெய்திக்கலகஞ்செய்யுந், தருக்காமக்கோட்டியெலாமறவெறிந்தாமினியெனுங்நகைசாலன்பு, சுருக்காமக்கோட்டினைச்சேயரைகரங்கொண்டார்க்குழலைச்சுவடுநல்குந்,திருக்காமக்கோட்டியம்மைசேவடிப்போதெப்போதுஞ்சிந்திப்பாமால்.

| பதம் | பொருள் |
|---|---|
| கரு | பிறவித்துன்பங்களுக்குக்காரணமான |
| காமம் | காமம் வெகுளி மயக்கம் என்னும் |

| | |
|---|---|
| கோள் | மூக்குற்றங்களை உண்டாக்கும் |
| திமிரம் | மலவிருளால் விளையும் |
| வினைஅனைத்தும் | தீவினைகள் எல்லாம் |
| ஒருங்குஎய்தி | ஒருமிக்கச்சேர்ந்துவந்து |
| கலகம் செய்யும் | கலகம் செய்யும் |
| தருக்கு ஆம் | செருக்குடையனவாம்(ஆதலின்) |
| அ கோட்டி எல்லாம் | அந்தவினைகூட்டம் எல்லாவற்றையும் |
| அற எறிந்தாம் | துண்டமாக வீசிஎறிந்தோம் |
| இனி | இனி எந்நாளும் |
| தகை சால் அன்பு | மேன்மைபெற்றோங்கும் அன்பைப்பெருக்குவோம் அல்லாமல் |
| சுருக்காம் | சுருக்கமாட்டோம் |
| அக்கு அரை | அக்குமணியை இடையிலும் |
| ஒட்டினை | பிரம கபாலத்தைச் |
| சேகரம் | செங்கையிலும் |
| கொண்டார்க்கு | கொண்டிருக்கும் ஏகாம்பரநாதருக்குத் |
| மூலைசுவடு | திருமூலைத் தழும்பைக் |
| நல்கும் | கொடுக்கும் |
| திரு காமக்கோட்டி அம்மை | காமாட்சி தேவியாருடைய |
| சே | செவ்விய |
| பாதம்போது | பாதாரவிந்தங்களை |
| எப்போதும் | எப்பொழுதும் |
| சிந்திப்பாம் | யாம் தியானம் செய்வோம் (எ-று) |
| ஆல் அசை. | |

## விகடசக்கர விநாயகக்கடவுள்.

விழிமலர்ப்பூசனையுஞ்ற்றித்திருநெடுமோல் பெறுமாழிமீளவாங்கி, வழியொழுகாச்சலந்தரன்மெய்க்குருதிபடி முடைநாற்றமாறுமாற்று ற், பொழிமதநீர்விரையேற்றிவிகடநடப்பூசைகொண்டுபுதிதாநல்கிப், பழிதபுதன்றாதையினும்புகழ்படைத்தமதமாவைப் பணிதல்செய்வாம்.

### இதன்பொருள்.

திருமால் தன் கண்மலரைப்பறித்துப்பூசைசெய்து சிவபெருமானிடத்தில்பெற்றுக்கொண்ட சக்கராயுதத்தைத்(தக்கன்யாகத்தை அழிக்கவந்த

வீரபத்திரசுவாமிமேல்விட, அது அந்த வீரபத்திரசுவாமி அணிந்திருந்தத லைமாலையில் ஒருதலையினால் விழுங்கப்பட்டு, விடுவச்சேனன் ஆட்டத்தைப் பார்த்துச் சிரித்தபோது மீண்டுவர, அதைப்பிடித்துப்) பூர்வம் நல்வழியில் நடவாத சலந்தராசுரனுடைய தேகத்திற் பெருகும் உதிரத்தில் தோய்ந்ததனால் உண்டாகிய தீநாற்றம் நீங்கும்படி மழைபோற் பொழியும் மதசலவாசனையூட்டிக் கோணங்கிக்கூத்து என்னும் விகடக்கூத்தாகிய பூசையை ஏற்றுப் புதிதாகக் கொடுத்துப் பழியில்லாதோங்கும் தன்பிதாவைப் பார்க்கிலும் பெரும்புகழ் படைத்துவிளங்கும் யானைமுகமுடைய விகடசக்கர விநாயகக்கடவுளையாம் வணங்குகின்றோம், (எ-று.)

## குமரக்கடவுள்.

முருகோட்டந்தரப்பாயுமும்மதமூ மூற்றெடுப்பமுரிவிற்கோட்டு, மொருகோட்டுமழகளிற்றையிருகோட்டுமுதுகளிறூவுலவக்காட்டிப், பருகோட்டநறைவேட்டுப்பைங்கோட்டுத்தினைப்புனத்திற்பரண்மேற்கொண்டு, குருகோட்டும்பெடைமணந்தகுமரகோட்டத்தடிகள்குலத்தாள்போற்றி.

| பதம். | பொருள். |
|---|---|
| பைகோடு | வளமானகுறிஞ்சிமலைச்சாரலில்உள்ள |
| தினைபுனத்தில் | தினைப்புனத்தில் (போடப்பட்டிருக்கும்) |
| பரண்மேற்கொண்டு | பரண்மேல்ஏறிக்கொண்டு |
| குருகு | அத்தினைக்கதிர்களைக்கொய்து உண்ணவரும் கிளி முதலியபறவைகளைக் |
| ஓட்டும் | கூவி ஓட்டுதல்செய்யும் |
| பெடை (க) | மயில்போலும் சாயல்பொருந்திய வள்ளி நாயகியாருடைய |
| ஓட்டம் | அதரத்தில் |
| பருகு நறை | சுவைக்கும் அமுதத்தை |
| வேட்டு | விரும்பிப் (பூர்வம்சிவபெருமானுக்குப்) |
| மூரி (உ) வில் | பெரியவில்லாகிய மேருமலையில் |
| கோட்டும் | எழுத்தாணியாகக் கொண்டு மகாபாரதத்தை எழுதிய |
| ஒருகோடு | ஒருதந்தத்தையுடையவிநாயகராகும் |
| மழகளிற்றை | யானைக்கன்றை |

| | |
|---|---|
| முருகுஒட்டம்தர | வாசனைவீசும்படி |
| மும்மதமும் | மும்மதங்களும் |
| ஊற்றுஎடுப்ப | ஊற்றெடுக்கப் |
| பாயும் | பாயும் |
| இருகோடு | இரண்டுதந்தங்களையுடைய |
| மூதுகளிறு ஆக (உ) | பெரியயானையாக |
| உலவகாட்டி | உலாவும்படிசெய்துபயமுறுத்தித் |
| மணந்த | திருமணம்புரிந்தருளிய |
| குமரகோட்டத்து | குமரகோட்டத்தில்வீற்றிருக்கும் |
| அடிகள் | முருகக்கடவுளுடைய |
| குலம்தாள் | மேன்மையானதிருவடிகளுக்கு |
| போற்றி | வந்தனம் (எ-று) |

(க) பெடை ஆகுபெயர். (உ) மூரி ஆக என்பன முரி ஆ விகாரப்பட்டன.

## வயிரவக்கடவுள்.

எளியனைவலியர்வாட்டின்வலியனையிருநீர்வைப்பி
னளியறத்தெய்வம்வாட்டுமெனுமுரைக்கமையவன்றே
தெளியுமாவலியைச்செற்றோற்செகுத்துரிக்கவயம்போர்த்த
வளியுளர்கச்சிக்காவல்வயிரவர்க்கன்புசெய்வாம்

### இதன்பொருள்.

கடல்சூழ்ந்தஉலகத்தில் எளியானைவலியார் அடித்தால் வலியானைத் தெய்வம் தாட்சணியம் இல்லாமல் அடிக்கும் என்னும் பழமொழிக்குத் தகுதியாக, வாமனன் என்றே நம்பிய மாவலியைக்கொன்ற மாயவனை வதைத்துத்தோலை உரித்துத் திருமேனியிற் கவசமாகப் போர்த்துக்கொண்ட தென்றற்காற்று உலாவும் காஞ்சிமாநகரத்தைக் காக்குங் கடமைபூண்டிருக்கும் வயிரவக்கடவுளுக்கு யாம்அன்புசெய்வோம். எ-று

* போர்த்த என்னும் பெயரெச்சத்தை வயிரவக்கடவுள் என்னும் பெயருடன் கூட்டிமுடிக்க.

## திருநந்திதேவர்.

அங்கணன்கயிலைகாக்குமகம்படித்தொழின்மைபூண்டு
நங்குருமரபிற்கெல்லாமுதற்குருநாதனாகிப்

பங்கயந்துளவநாறும்வேத்திரப்படைபொறுத்த
செங்கையெம்பெருமானந்திசீரடிக்கமலம்போற்றி.

இதன்பொருள்.

அழகியகண்ணுளனுகிய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் திருக்கைலாயத்தைக் காவல்செய்யும் முத்தியிலும் அடிமை என்னும்தொழிலை மேற்கொண்டு, எமது குருபரம்பரைக்கெல்லாம் ஆதியானகுருபரனுகித் தேவர்கள் மேன்மேலும் நெருங்கச் சந்நிதியிலங்கி நிற்கத் தட்டுவதனுல் பிரமதேவன் அணிந்திருக்கும் செந்தாமரைமலர் மணமும் விஷ்ணு அணிந்திருக்கும் செந்துளசிமணமும் சேர்ந்துமணக்கும் வேத்திராயுதத்தைச் செங்கையில்தாங்கிய எம்பெருமானுகிய திருநந்திதேவருடைய சீர்பாதகமலங்களுக்கு வந்தனம். எ-று.

## தமிழாசிரியர்.

காசியினின்றும்போந்துகம்பர்தாமருளப்பெற்று
மாசிலாக்கச்சிமூதூர்மன்னிவீற்றிருந்துபூமே
லாசிலாத்தமிழ்பரப்பியருந்தமிழ்க்குரவுபூண்ட
தேசினன்மலயவெற்பிற்குறுமுனிதிருத்தாள்போற்றி.

இதன்பொருள்.

காசிப்பட்டணத்திலிருந்து வந்து, திருவேகம்பர் அநுக்கிரகம் செய்யப்பெற்று, மாசில்லாதோங்கும் காஞ்சிமாநகரத்தில் நிலைத்து வீற்றிருந்து, இந்தப்பூலோகம் எங்கும் குற்றமற்றுவிளங்கும் தமிழ்ப்பாஷையைப்பரவச்செய்து, அந்த அருந்தமிழ்ப்பாஷைக்கு ஆசிரியராகும் தன்மைபூண்ட மகிமையுடையவராய்ப்பொதியமலையில் வாழ்ந்திருக்கும் அகஸ்திய முனிவருடைய திருவடிகளுக்கு வந்தனம். எ-று.

## திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர்.

பரசமயகோளரியைப்பாலறுவாயனைப்பூம்பழனஞ்சூழ்ந்தசிரபுரத்துத்திருஞானசம்பந்தப்பெருமானைத்தேயமெல்லாங், குரவையிடத்தமிழ்வேதம்விரித்தருளுங்கவுணியர்தங்குலதீபத்தை, விரவியெமையாளுடையவென்றிமழவிளங்களிற்றைவிரும்பிவாழ்வாம்.

இதன்பொருள்.

புறச்சமய வாதிகளாகிய யானைகளுக்கு வலிய ஆண்சிங்கம் போன்றவரும், பிராட்டியார் ஊட்டிய சிவஞானப்பால் மணக்கும் செவ்வாயுடையவரும் உலகத்தார் எல்லாரும் ஆனந்தக் கூத்தாடும்படி செந்தமிழ் வேதமாகிய தேவாரப்பதிகங்களை விரித்துவிளங்கச் செய்தருளும் கவுணியர்குலத்திற்கு ஒரு திருவிளக்குப் போன்றவரும், உள்ளத்திற் கலந்துகொண்டு எம்மை அடிமையாகப் படைத்தாளும் வெற்றி பெற்றோங்கும் சிற்றிளங்களிற்றுனை போன்றவருமாய், அழகிய வயல்களால் சூழப்பட்டிருக்கும் சீகாழியில் திரு அவதாரம் செய்தருளிய திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரை நேசித்து வாழ்கின்றோம்.

## திருநாவுக்கரசு நாயனார்.

இடையறுப்போன்புமழைவாருமிருவிழியுமுழவாரத்தின், படையறுத்திருக்கரமுஞ் சிவபெருமான்றிருவடிக்கேபதித்தநெஞ்சு, நடையறுப்பெருந்துறவும் வாகீசப்பெருந்தகைதன்ஞானப்பாடற், றொடையறுச்செவ்வாயுஞ் சிவவேடப்பொலிவழகுந்துதித்துவாழ்வாம்.

இதன்பொருள்.

பெருமைக் குணமுள்ள திருநாவுக்கரசு நாயனாருடைய மாறுதபத்தியையும்,மழைபோல் ஆனந்த பாஷ்பம்பொழியும் திருக்கண்களையும் பலம்பொருந்திய உழவாரப்படை ஏந்தியதிருக்கரங்களையும், சிவபெருமான்திருவடியிலேயே அழுந்தவைத்த திருவுளத்தையும் நல்லொழுக்கத்தில் சிறிதும் தவறுதல் இல்லாதபெருந் துறவறநிலையையும், சிவஞானப்பாடல்களை இடையறுமல் தொடுக்கும் செவ்வாயையும், சைவவேடத்தின் பேரழகையும், யாம் எந்நாளும்துதிசெய்து மகிழ்ந்து வாழ்வோம். எ-று.

## சுந்தரமூர்த்தி நாயனார்.

ஒருமணத்தைச்சிதைவுசெய்துவல்வழக்கிட்டாட்கொண்டவுவனைக்கொண்டே, இருமணத்தைக்கொண்டருளிப்பணிகொண்டவல்லாளனெல்லாமுய்யப், பெருமணச்சீர்த்திருத்தொண்டத்தொகைவிரித்தபேரருளின்பெருமாளென்றுந், திருமணக்கோலப்பெருமாண் மறைப்பெருமாளெமதுகுலதெய்வமாமால்.

இதன்பொருள்.

வல்வழக்கிட்டு ஒரு திருக்கல்யாணத்தைத்தடுத்து ஆட்கொண்ட அந்தச் சிவபெருமானைக் கொண்டே பரவைநாச்சியார், சங்கிலி நாச்சியார் என்னும் இருவரைத் திருக்கல்யாணம் செய்தருளித் தூதுசெல்லும் ஏவல்கொண்ட வல்லாண்மை யுடையவரும், உலகத்தில்யாவரும்கடைத்தேறும்படி பெருஞ்சிறப்பின் மணம்வீசும் திருத்தொண்டத் தொகையைப் பெருங்கருணையால் விரித்துரைத்த பெருமாளும், எந்நாளும் திருமணக்கோலம்பூண்ட பெருமாளும், மறையவர் பெருமாளும் ஆகிய சுந்தரமூர்த்திநாயனார் எங்கள் குலதெய்வம் ஆவார் எ-று. ஆல்-அசை.

## மாணிக்க வாசக சுவாமிகள்.

பெருந்துறையிற்சிவபெருமானருளுதலும் பெருங்கருணைப்பெற்றிநோக்கிக், கரைந்துகரைந்திருகண்ணீர்மழைவாரத்துரியநிலைகடந்துபோந்து, திருந்துபெருஞ்சிவபோகக்கொழுந்தேறல்வாய்மடுத்துத்தேக்கிச்செம்மாந், திருந்தருளும்பெருங்கீர்த்திவாதவூரடிகளடியிணைகள்போற்றி.

இதன்பொருள்.

(பாண்டியன் சொற்படி குதிரைவாங்க வந்தபோது) திருப்பெருந்துறையில் சிவபெருமான் குருமூர்த்தமாய் எழுந்தருளி உபதேசம் செய்தமாத்திரத்தில் அவரது பெருங்கருணைத் திறத்தைஎண்ணி மனம்கரைந்து ஆனந்தக்கண்ணீர் மழைபோற்பொழியத் துரியநிலையைக்கடந்துபோய், மிகவிளங்கும் சிவபோகம் என்னும் செழுந்தேனை உண்டுதேக்கிட்டு இறுமாந்து இருக்கும் பெரும்புகழ்பெற்றோங்கும் மாணிக்கவாசக சுவாமிகளுடைய திருவடியிணைகளுக்கு வந்தனம்.

## அறுபத்துமூவர்

தத்துமூதெயின்மூன்றுந்தழலெழ
முத்துமூரன்முகிழ்த்தநிராமய
சித்துமூர்த்திதன்றாளிணைசேரறு
பத்துமூவர்பதமலர்போற்றுவாம்.

இதன்பொருள்.

இஷ்டமான இடத்திற்குத் தவழ்ந்து செல்லும் மூப்புரங்களும் எரிந்துபோக முத்தநகை செய்தருளிய நிராமயஞானமூர்த்தியாகிய சிவபெருமானுடைய திருவடிகளைச் சேர்ந்த அறுபத்துமூன்று நாயன்மார்களுடைய பாதாரவிந்தங்களை வணங்குகின்றோம்.

## சேக்கிழார்நாயனார்.

தூக்குசீர்த்திருத்தொண்டத்தொகைவிரி
வாக்கினாற்சொல்லவல்லபிரானெங்கள்
பாக்கியப்பயனாப்பதிகுன்றைவாழ்
சேக்கிழானடிசென்னியிருத்துவாம்

இதன்பொருள்.

அறிவுடையோரால் ஆராய்ந்தறியப்படும் சிறப்புவாய்ந்திருக்கும் திருத்தொண்டத்தொகையைத்திருவாக்கினால் விரித்துச்சொல்லவல்லவராயும் எங்கள் புண்ணியபயனாகியும் குன்றையூரில் வாழ்ந்தருளும் சேக்கிழார் நாயனாருடைய திருவடிகளை எமதுசிரசின்மேல் வைத்துகொள்கின்றோம். எ-று.

## திருக்கூட்டத்தார்.

பேயன்னபுறச்சமயப்பிணக்குநூல்வழியனைத்தும்பிழையெயன்றி, வாயன்மைதெளிந்துசைவசித்தாந்தவழிதேறியதீதவாழ்விற், போயணமியஞ்செழுத்துந்திருநீறுங் கண்டிகையும்பொருளாக்கொண்ட, நாயன்மார்திருக்கூட்டம்பணிந்திறைஞ்சும்பெரும்பேறுநான் பெற்றேனால்.

இதன்பொருள்.

தலைவிரி கோலமாய் ஆடும்பேய்கள்போல் புறச்சமயிகள் ஆடிப்பிதற்றும் ஒன்றோடொன்று ஒவ்வாமல் மாறுபட்டிருக்கும் நூல்கள் எல்லாம்பிழையே அல்லாமல், உண்மை யல்லாமையை அறிந்து சைவசித்தாந்த நெறியில் நின்று தெளிந்து சமயாதீதவாழ்வில் சென்றடைந்து ஸ்ரீபஞ்சாட்சரங்களையும் திருநீற்றையும் திருக்கண்மணி மாலையையும் தங்கள் செல்வமாகக் கொண்டிருக்கும் நாயன்மார்களுடைய திருக்கூட்டத்தைத் தாழ்ந்து வணங்கும் பெருஞ்செல்வத்தை நான்பெற்றுக்கொண்டேன். எ-று. ஆல் அசை.

## பஞ்சாக்கரதேசிகர்.

கயிலாயபரம்பரையிற் சிவஞானபோதநெறி காட்டும்வெண் ணெய், பயில்வாய்மைமெய்கண்டான்சந்ததிக்கோர்மெய்ஞ்ஞான பானுவாகிக், குயிலாரும்பொழிற்றிருவாவடுதுறைவாழ் குருநமச்சி வாயதேவன், சயிலாதிமரபுடையோன் றிருமரபுநீடூழிதழைகமா தோ.

இதன்பொருள்.

திருவெண்ணெய் நல்லூரில் திரு அவதாரஞ்செய்து இரண்டுபிராயத் திலேயே மெய்யுணர்வடைந்து திருக்கைலாய பரம்பரையில் வழங்கிவந்த வடநூற் சிவஞானபோதம் என்னும் சாஸ்திரத்தைத் தமிழில் மொழிபெ யர்த்து விளங்கக் காட்டும் மெய்கண்ட தேசிகருடைய சந்ததிக்கு ஒருமெ ய்ஞ்ஞானசூரியனாகிக் குயில்கள் நிறைந்திருக்கும் பூஞ்சோலை சூழ்ந்து ஓங் கும் திருவாவடுதுறையில் திருக்கைலாயபரம்பரையைச்சேர்ந்தவராய் வா ழ்ந்தருளும் குருநமச்சிவாய தேவருடைய திருமரபு நெடுங்காலம் தழைத் தோங்குக. எ-று. மாது ஓ அசைகள்.

## வேலப்பதேசிகர்.

எவ்வெவகோட்படுபொருளுமஞ்செழுத்தினடக்கியவற்றியல் புகாட்டி, மெய்வ்வகையஞ்சவத்தையினுநிற்குமுறையோதுமுறை விளங்கத்தேற்றி, யவ்வெழுத்தினுள்ளீடுமறிவித்துச்சிவபோகத்த ழுத்திநாயேன், செய்வினையுங்கைக்கொண்டவேலப்பதேசிகன்றாள் சென்னிசேர்ப்பாம்.

இதன்பொருள்.

வேதாகம புராண சாஸ்திரங்களிலிருந்து கொள்ளப்படும் பொருள்க ள் எல்லாவற்றையும் ஸ்ரீ பஞ்சாட்சரத்தில் அடக்கி, அவற்றின் உண்மை யான இயல்புகளை எடுத்துகாட்டி, ஆன்மாக்கள் சாக்கிரம் முதலியஐந்து அவஸ்தைகளிலும் நிற்கும்முறையையும், அவ்வெழுத்துகளை உச்சரிக்கும் முறையையும் விளங்கத்தெரிவித்து,அவ்வெழுத்துகளின் உள்ளீடானபதி பசு, பாசம், என்னும் முப்பொருள்களையும் அறிவித்துச் சிவபோகத்தில் அழுத்தி, நாயினுங்கடையேனுகிய நான்செய்யும்பணிவிடைகளையும் கைக் கொண்டு அருளும் வேலப்பதேசிகருடைய பாதங்களை யாம் எமதுசிரசின் மேற் கொள்வோம். எ-று.

## மற்றையசிவநேசர்கள்.

மறைநான்கும்பயின்றொழுகி யிட்டிகளும்பலவியற்றி மல்லன்ஞாலத், திறவாதபுகழ்படைத்துமீசனிடத்தன்பிலரையெண்ணுதுள்ளம், புறமோதிக்கொலைபயின்றுமதுமாந்துங்கொடும்பாவப்புலையரேனும், அறவாணன்றிருவடிக்கீழன்பினரேலவரெம்மையடிமைகொள்வார்.

### இதன்பொருள்.

நான்கு வேதங்களையும் கற்றுக், கற்றவழியில் நடந்து பல்யாகங்களும் செய்து,வளப்பம்பொருந்திய இவ்வுலகத்தில் என்றும் இறவாதபுகழ்படைத்தும் சிவபெருமானிடத்தில் அன்பில்லாதவர்களை எமதுஉள்ளம் இலட்சியம் பண்ணமாட்டாது. காணாத இடத்தில் நிந்தைசெய்து கொலைத்தொழில் புரிந்து மதுபானம் செய்யும் கொடும்பாவச் சண்டாளர்கள் ஆனாலும் தருமக்கடவுளாகிய சிவபெருமான் திருவடிகளின் கீழ்நிலையாக வைத்திருக்கும் அன்புடையவர்கள் ஆனால் அந்த அன்பர்களே எம்மை அடிமையாகக் கொள்பவர்கள் ஆவார்கள். எ-று.

## அவையடக்கம்.

பொருவில்கச்சியம்புராணம்வண்டமிழினிற்புகலென்
றிருநிலம்புகழ்மணிமதிற்கச்சியேகம்பர்
திருவருட்குரியான்றவர்கூறியசிறப்பால்
உரிமையுற்றெழுமாசைகொண்டுரைத்திடலுற்றேன்.

### இதன்பொருள்.

உலகமெல்லாம்புகழும் மணிமதில்சூழ்ந்து ஓங்கும் கச்சித்திருவேகம்பருடைய திருவருளுக்கு உரியபெரியோர்கள் தனக்கு நிகரில்லாமல் விளங்கும் காஞ்சிப்புராணத்தை வடமொழியிலிருந்து தென்மொழியால் சொல்லு என்று ஏவப்பெற்ற சிறப்பினால் உரிமைகொண்டு ஓங்கிவளரும் ஆசையால் சொல்லலுற்றேன்.

மாயைகாரியவுருக்களுமெம்பிரான்வடிவ
மாயவேலவையருண்மயமாகுமற்றதுபோற்
பேயனேன்பிதற்றுரையுமேகம்பர்தம்பெருமை
தூயகாதையுள்ளுறுதலாற்றுகளறத்தோன்றும்.

இதன்பொருள்.

மாயையின் காரியமாகிய பிரபஞ்சங்களெல்லாம் சிவபெருமானுக்கு வடிவம் ஆயினஎன்றால், அந்தப் பிரபஞ்சங்கள் எல்லாம் அருள்மயமே ஆகும்.அதுபோல் பேயேனாகிய நான்பிதற்றிய சொல்லும் திருவேகம்பருடைய மகிமையை உணர்த்தும் மாசில்லாத சரித்திரத்தில் கலந்திருப்பதனால் அச்சொற்களும் மாசற்றேவிளங்கும்.

இழித்தசொற்புணர்த்தெளியனேனியம்பியகவியுங்
கழித்தவைவகையிலக்கணவழுவுக்குக்காட்டாப்
பழித்திடாதெடுத்தாளுவர்பல்வகைச்சுவையுங்
கொழித்தநாவினராகியவழுத்தபுகுணத்தோர்.

இதன்பொருள்.

பலவகையான நூல்களின் சொற்சுவையையும் பொருட்சுவையையும் திரட்டி ஊட்டும்நாவலராகிய மாசில்லாத குணமுடையவர்கள் இழிவானசொற்களைச் சேர்க்கும் எளியேன் சொல்லிய கவிகளையும் பழித்துத் தள்ளிவிடாமல் எழுத்துச்சொல்பொருள் அணியாப்பு என்னும் ஐந்திலக்கணங்களில் எடுத்துக் காட்டப்படும். இலக்கணவழுக்களுக்குத் திஷ்டாந்தமாக எடுத்து ஆள்வார்கள் எ-று.

எழுத்துப்போலியுமெழுத்தெனவாளுவரதுபோற்
புழுத்தநாயினேன்பிதற்றியசெய்யுட்போலியையும்
பழுத்தகேள்வியோர்கைக்கொள்வரென்பதுபற்றி
விழுத்தநாணினேன்சிவகதைவிளம்புதற்கிசைந்தேன்.

இதன்பொருள்.

புலவர்கள் எழுத்துப்போலிகளையும் எழுத்துகளாகவே கொண்டு உபயோகப்படுத்துவார்கள். அதுபோல் புழுத்த நாய்போன்றவனாகிய நான்பிதற்றிய செய்யுட்போலிகளையும் கல்வி கேள்விகளில் தேர்ந்த பெரியோர்கள் கை ஆள்வார்கள் என்பதை எண்ணி மிகுந்த வெட்கமுடையவனாகி இந்தச்சிவபுராணத்தைச் சொல்லுதற்கு உடன்பட்டேன்.

நெறிவழாவுமைபூசனைபோனெறிபிறழ்ந்தோ
னெறிதருங்கலுங்கைக்கொளுங்கச்சியெம்பெருமாற்
கறிவின்மேலவர்காப்பியப்பனுவல்போலறிவின்
குறியிலேன்கவிப்புன்சொலுங்கொள்வதுவழக்கால்.

இதன்பொருள்.

ஆகமவிதி தவறுமல் பார்வதி தேவியார் பண்ணியபூசையைப்போல் அந்தவிதிதப்பினவராகிய சாக்கிய நாயனர் எறிந்த செங்கல்லையும் கைக்கொண்டருளிய கச்சித் திருவேகம்பருக்கு அறிவிற் சிறந்தபெரியோர்கள் செய்து அணியும் காப்பியங்களைப்போல் அறிவின் அடையாளம் ஒன்றும் இல்லேலுகிய என் கவியில்உள்ள புன்சொற்களையும் கைக்கொள்வது அறிவிற்சிறந்த பெரியோர் வழக்கமாம்.

## சிறப்புப்பாயிரம்.

அருட்பணிக்குரிய மகேச்சுரர்முதலா நாவருந்தருகவென்றறைய, மருட்பகைதுமிக்குங் காஞ்சிமான்மியத்தை வழங்குதென்மொழியினலுணாத்தான், கருப்பகையிரிக்குஞானமுமேனைக்கலைகளுங்கரிசறப்பயின்ற, மருப்பொழிலுடுத்தவாவடுதுறையில்வாழ்சிவஞானமாதவனே.

இதன்பொருள்.

திருவருளிற் சேர்க்கும் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் நான்குபணிகளுக்குரிய ஞானிகள் முதலாகிய நால்வரும்மொழிபெயர்த்துத்தருகவென்று சொல்லியதனல் பிறவிக்குப் பெரும்பகையாகிய ஆணவாதி மலங்களைப் பறந்தோடச் செய்யும் ஞானசாஸ்திரங்களையும் மற்றையகலைஞானங்களையும் கசடறக்கற்றுத் தெளிந்த மணமலர்ச் சோலைகளாற் சூழப்பட்டிருக்கும் திருவாவடுதுறையில் வாழ்ந்தருளும் பெருமைபொருந்திய சிவஞானமுனிவர் மலப்பகையை அறவீசும் காஞ்சித்தல மகிமையைப் பெரியோர்களால் வழங்கப்படும் செந்தமிழால் மொழிபெயர்த்தருளினர்.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

# முதற்காண்டம்.

## திருநாட்டுப்படலம்.

படம் உடைய சர்ப்பங்களை ஆபரணமாக அணியும் திருவேகம்பர் மலையரசன்பெற்ற மகளாகிய பார்வதிதேவியாருடன் எந்நாளும் மகிழ்ந்து ஆன்மாக்களுக்கு இகபரசுகம்உண்டாக அரசுசெய்துவீற்றிருக்கும் வாடுதல்இல்லாத புகழ்படைத்தோங்கும் காஞ்சிமாநகரத்தை உள்ளத்திற்கொண்டுதேவர்கள் வணங்கவரும் பாலிநாட்டுச்சிறப்பை யாம்விரித்துச்சொல்வோம். திருப்பாற்கடலைக்கடையும்படி சென்றவெள்ளைமேனியையுடைய திருமாலைப்போல் வெண்மையானமேகபடலம்சென்று, சமுத்திரத்தில் உள்ள ஜலத்தைக் கலக்கிக்குடித்து, அந்ததத்திருப்பாற்கடலில் ஆலகால விஷம் தோன்றினாற்போல், அதன்சுவாலையால் உடல்கறுத்துத்திரும்பிய அந்தமாயவனை ஒப்பாகக்கருநிறங்கொண்டு ஆகாயமார்க்கமாய்ப்பரவி விரைந்துமீண்டு, திருமால் அந்தநாள் திருக்கைலாயத்தை அடைக்கலம் அடைந்தாற்போல் அழகியசாரல்களால் சூழப்பட்டிருக்கும் நந்திமலையைஅடுத்துப் (பூர்வம் வருணன் மதுரையை அழிக்கும்படி ஏவுதல்செய்ய வந்து யுகாந்தகால மழைபோற்பொழியும் சத்தமேகங்களைத்தடுக்க) நீண்டிருக்கும் கற்றைச்சடைமுடியையுடைய சோமசுந்தரக்கடவுள் அனுப்பவே பெரும்புகழ்படைத்தோங்கும் மதுரைமாநகரம்முழுவதும் நான்மாடக்கூடலாகச்சூழ்ந்துகொண்ட அந்தநான்குமேகங்களைப்போல் அந்தநந்திமலையை முற்றிலும் மூடுதல்செய்து, துண்டுபட்டிருக்கும் வெண்மையான அலைகளையுடைய கருங்கடலின்முகட்டைப்பள்ளமாக்கி, வியாபித்திருக்கும் வெள்ளநீரை உண்ணும்போது, அந்தவெள்ளநீருடன் மறைந்துவந்துதன்னைவெந்துகரிந்துபோகச்செய்த வடவாமுகாக்கினியின் வஞ்சகத்தை அறிந்து, காந்திவீசும் மின்னலாகத்திசைகள்தோறும் உமிழ்ந்து, அப்படி உமிழப்பட்ட அந்தவடவாமுகாக்கினி மறுபடியும்தன்னிடத்தில் அணுகாதிருக்கும் விதத்தைநாடி, ஆகாயத்திலே வளைத்தவில்போல் வில்விட்டுத் த

டைசெய்து என்னை எதிர்த்த நீ இனிமேல் எதிர்ப்பாயானுல் உன் உடலோடும் உயிரை உண்டுவிடுவேன் என்று இடி ஓசை உண்டாக்கி, அடிக்கடி அலைகள்மோதிவீசும் தெண்ணீரையுடைய சமுத்திரத்தை ஆடையாக உடுத்திருக்கும் பூலோகத்தில் உன் உறவினர் எல்லாரையும் சந்ததியற்றுப்போக ஒருமிக்கக்கொன்று உன்கர்வத்தை நான் அழிப்பேன் என்று பகைபாராட்டும் பெருங்கோபம்கொண்டு அக்கினியின்மேல் யுத்தம்செய்ய ஆரம்பித்துப் பெருநீர்மழையைக் கலைஞானமந்திரசத்தியால் வச்சிரபாணம்போல் மடியாதிருக்கச்செய்து எனக்கு மாருப்பெருஞ்செல்வமாகக்கொடுத்தருளும் சத்தியவேதப் பிராமணர்கள்வளர்க்கும் யாகாக்கினியும் சிவபெருமான் ஏந்தும் மழுவும்தவிர, மற்றநெருப்பெல்லாம் இப்பொழுதே இறந்துபோகக்கடவன என்றுசொல்லி, மூங்கில்கள் ஒலிக்கும் காட்டிடங்களும்காந்திவீசும் இரத்தினங்களால் விளங்கும் சிகரங்களையுடைய மலையிடங்களும் தண்ணீர்க்குறைவில்லாத் வயல்கள் சூழ்ந்து விளங்கும் நாட்டிடங்களும் பருக்கைக் கல்லுக்களையுடைய முரம்புநிலங்களை அடுத்து அக்கினி தாண்டவம்செய்யும் மோட்டிடங்களும் தண்ணென்று குளிர்ந்துபோம்படி மழைபொழிந்து மாண்டு ஒழிந்துபோன நெருப்புகள்போக மற்றும்மாளாதொழிந்த நெருப்பெல்லாம் சிதறுண்டுபோய், நான்குவேதங்களையும் கற்றுணர்ந்தவேதியர்கள்செய்யும் யாகசாலைகளில் மறைந்துபோனதைக்கண்டு தானும் தன்கோபாக்கினியை நீக்கிவிட்டுச் சயபேரிகைமுழக்கினுற்போல் பேரிடிமுழக்கம் காட்டித் தன் சௌரியத்தையும் கீர்த்தியையும் இந்திரகோபமாகவும் மூல்லையாகவும் பூலோகம் எங்கும் பொருந்தவைத்து மாசில்லாத அவ்விரண்டும் தன்னையும் சூழ்ந்து கொண்டாற்போல் சீதளவானத்தில் சிவந்து வெண்ணிறம் படைத்தது.

நட்சத்திரங்களால் அலங்கரிக்கப் பட்டிருக்கும் சிகரங்கள் பிளந்து உடைந்துபோகப் பெய்யும் பெருமழைக்குச் சிக்கமாட்டாமல் அவ்விடத்தில் அந்தமழை பெய்யாமல நீங்கிப்போக நினைத்து நெடியமலைகள் எடுத்துக்காட்டும் நெடிய இதழ்களையுடைய செங்காந்தள் என்னும் கொள்ளிவீசும் சுவாலையையுடைய நெருப்பு அந்த மழைநீருடன் மாய்ந்து போயிற்று. சிவஞானம் மேவிடலால் அநாதியிலேயே ஆன்மாக்களைத்தழுவியிருக்கும் ஆணவம் முதலிய மலநோய்தீர்ந்தும் பூர்வவாசனைவந்து அந்த ஆன்மாக்களைத் தாக்கும் தன்மைபோல மழைபெய்வது விட்டு நீங்கியும் மரங்களெல்லாம் தம்மிடத்தில் நேசம்வைத்து வாசம் செய்யும் பறவைகளும் மிருகங்களும் மனக்கவலை யடைந்து வருத்தம் அடையும்படி சிறுதிவலைகளைவீசும். இடி ஓசைகாட்டிப்பெய்யும் இயல்பையுடையமேகபடலங்கள்

ஒக்க, மீன்களைத்தன்னிடத்தில் கொண்டிருக்கும் பெருங்கால்களில் ஓடும்
சலமெல்லாம் தடைப்படவிழுந்து கலக்கும்கார் எருமைகளின்முலைகளில்
சுரக்கும் பால்மிகுதியால் பெரிய மடைகள் எல்லாம் உடைந்துபோகும்.
தனக்குத்துன்பம் உண்டாக்கிய வெயிலை மழையினால் அழித்தல் செய்த
தனக்குரியதெய்வமாகிய தேவேந்திரனுக்குப் பேரொலி முழக்கத்துடன்
வாழ்த்துதல்செய்வதுபோல், மருதநிலப்பறை ஓசையும் மள்ளர்கள் ஆர
வாரம் செய்யும் ஓசையும் முழங்கி ஓடும் இனிமையான நீர் ஓசையும்
விரைந்து ஆகாயத்தில் பிரவேசிக்கும். ஐம்பொறிகளையும் புறத்தில்போ
க விடாமல் அகத்தில் அடக்கி அவை யெல்லாம் திருவருள் ஒன்றையே
தியானித்து அணுகும்படி செய்யும் சிவஞானிகளுடைய செய்கைபோல்
மள்ளர்கள் அநேகமாய்ப் பிரிந்திருக்கும் மடைகளில் தப்பிப்போய்விடா
மல் ஒதுக்கி அடர்ந்திருக்கும் நீர் எல்லாவற்றையும் விசாலமான வயல்
களில் நிறைத்துவைப்பார்கள். பழிதீர்ந்து நல்வழியில் தேடிய செல்வம்
சிறிதும் வீணிற் செலவாகாமல் நல்வழியில் பிரயோசனப் படுவதுபோ
ல், சுவைதிரட்டும் அலைகளையுடைய பாலி நதியின் சீதள சலமெல்லா
ம் தப்பி விருதாவில் போகாமல் கால்வாயின்வழியாகச்சென்று வளமா
ன வயல்களை நிறைக்கும். விசாலமான இடத்தையுடைய பூமி என்னும்
கடுங்கொலைசெய்யும் அசுரனுடைய பெருமைபொருந்திய மார்பைப்பி
ளக்கின்றவர்களைப்போல் நீலமணி நிறம்பொருந்திய எருமைக்கடாக்களை
வரிசைவரிசையாய் நுகத்தடியில் கட்டி உழுபடையால் வயல்கள்தோறு
ம் நின்று உழுகின்றவர்களுடைய சத்தமே எங்கும் உண்டாயிருக்கும்.
கலந்திருக்கும் உழுசால்கள்தோறும் பயந்து எதிர்முகமாய்க் குதித்து
மேல் எழும்வாளைமீன்கள் பெரியகொம்புகளிடத்தில்தாக்கி ஏர் உழும்
எருமைகளைத்தடுக்கும். பெரியவரால் கூட்டங்கள்விரைந்து பாய்ந்து அந்
த எருமைகளை வருத்தப்படுத்தும். அதல்லாமலும் அழகியவாலின் பக்கத்
தில்தாக்கி அதிசீக்கிரமாய் நடக்கச்செய்யும். கொடுமையைமேற்கொண்டு
இருந்த அசுரனுடையதேகத்தைப் பிளந்தமாத்திரத்தில் காண்தபற்குரிய
பூமி தன் நிறமாகிய பொன்நிறத்தைக்காட்டியதுபோல் கிழித்துக்கொண்டு
சென்ற சால்கள்தோறும் நிறத்தினால் விளங்கும்பொன்கட்டிகள் இருந்து
மாட்சிமைப்பட்ட பெருஞ்சோதிவீசி மிகத் தடித்திருக்கும் இருளைவாயிற்
போட்டுக்கொள்ளும், சாம்பேதான் தண்டம் என்னும் சதுர்விதஉபாயங்
களால் பிரித்துப்பின்பு சந்திசெய்விக்கும் தொழிலில்சாமர்த்தியமுள்ள
மந்திரியைப்போல், முன்பு பல கூறுகப் பிரித்தசேறெல்லாவற்றையும்
குழப்பி ஒன்றுக்கித் தேவேந்திரனுக்கு உற்சவம் பண்ணிக் கைகூப்பித்
தொழுது, வரும் இடையூறுகளை நீக்கி நாற்றுகளை வளர்த்தருள்க என்று,

நல்லநாளில் வெண்முளைகளை விதைப்பார்கள். சிவஞானம் விளங்கிய மாத்திரத்தில் உடல், பொருள், ஆவி என்னும் பந்தங்களைக் கொடுத்தவனிடத்தில் மீண்டு அடையக்கொடுத்துவிடும் தன்மைபோல் மள்ளர்கள் பெருகும்படி கட்டிய நீர்க்கலங்கல் மாறித்தெளிந்தபின்பு அந்தத்தெளிநீர் எல்லாவற்றையும் வயல்களுடன் கலந்திருக்கும் வாய்க்கால்வழியில் கவிழ்ப்பார்கள்.

இளங்குழந்தைப்பசிக்கு ஏந்திக்கொண்டிருக்கும் முலைப்பாலை அளவறிந்தூட்டும் தாயைப்போல் பயிரிடும் முறை அறிந்திருக்கும் மள்ளர்கள் முளைகளுக்கு நீர்பாய்ச்சும் சமயம்பார்த்து மிக்கவளமுள்ள வயல்களுக்குப்பாய்ச்சி அந்தமுளைகளைத் தங்கள் பிள்ளைகளைக் காப்பாற்றுவதுபோல் பரிந்து காப்பாற்றுவார்கள்.

பூமியில் ஓரிடத்தில் ஈன்ற தன் குட்டிகளைப் பல இடத்தில்கொண்டுபோய் வைத்துவளர்க்கும் பூனையைப்போல், கருநிறமுள்ள தேகத்தையுடையமள்ளர்கள் தங்கள்கைகளால் நாற்றுகளைவாரிக்கொண்டுபோய்மேன்மைபெற்றிருக்கும் வயல்கள்தோறும் நடுதல் செய்வார்கள். மரகதம்தழைத்துத் தளிர்த்தாற்போல் வளரும் பயிர்கள் அடர்ந்து நிறைந்திருக்கும் கழனியில் சங்கு தவழ்வது, சமுத்திர ஜலத்தைக்குடித்து மேல் எழுந்து வரும் மேகபடலத்தில் சரத்கால சந்திரன் நுழைந்து செல்லும் காட்சியை நிகர்க்கும். மள்ளர்கள்களைபறிக்கும் சமயம்காட்டியமாத்திரத்தில் இளமயில்கள் வயல்களின் வளப்பம்பார்க்கவந்தாற்போல் மள்ளப்பெண்கள்எல்லாரும்மனமகிழ்ந்து வளம்மலிந்தோங்கும் வயல்கள்தோறும்வந்து சூழ்ந்துகொள்வார்கள். தாமரை நீலோற்பலம் செவ்வல்லிமுதலான பசும்புதர்களாகியகளைகளைமுற்றிலும் பறித்தெறிந்தசில பெண்கள் தங்கள்முகம்,கண் வாய்முதலிய உருவங்கள்பெருமைபொருந்தியநீரினிடத்தில்தோன்றியமாத்திரத்தில்நாம் கொய்து எறிந்தசிறுகளைகள் மறுத்துமேன் மேலும்முளைப்பது என்ன வென்று சொல்லுவார்கள். சிலபெண்கள் தாமரையிலும் செவ்வல்லியிலும் நீலோற்பலத்திலும் உள்ள தேனை உண்டு அவைகளில் தங்கி இருந்த வண்டின் கூட்டங்கள் தங்கள் ஒளிபொருந்திய முகங்களிலும் செங்கனிவாய்களிலும், கண்களிலும், கலந்து மொய்த்துக்கொள்ள, அவ்விடங்களி விருந்து அவைகளைப் பிடுங்கி எறிந்து நீக்குவார்கள். சிலபெண்கள் விரிந்திருக்கும் இதழ்களை யுடைய செந்தாமரைமலர்களைப்பறித்துநிகராகும் தன்மையைப்பார்ப்பவர்கள்போல் முகங்களோடுசேர்த்து, அழகிய தேனை வாய்வைத்து உறிஞ்சி, நிகராக மாட்டாதென்று நீக்குவதுபோல் மிகவுயர்ந்திருக்கும் கரைகளின் மேல் எறிந்து விடுவார்கள்! சில பெண்

கள் எங்கள் இணையான கண்களுக்கு இணையாக மாட்டாய் என்பதை நீ சமீபத்தில் வந்துபார் என்று அழைத்துக் காட்டுவதுபோல், முகத்திற்கலந்திருக்கும் நாசிக்கு எதிரோ பிடித்து மோந்துபார்த்துத் தேனைவிடாமல் சொரியும் நீலோற்பல மலரைத் தங்கள் கொண்டையில் முடித்து வைப்பார்கள். சிலபெண்கள் நீர்ப்பாசிகளைக் களைவதற்குக் குனிந்ததனால் நீண்டிருக்கும் கூந்தல்கள் நடுவில்வந்து எம் இனமாகிய இவைகளை வருத்தப்படுத்த வேண்டாம் என்றது போல் கைகளின்மேல் விழுந்து சிக்கிக்கொண்டதனால் நிமிர்ந்து நின்று அழகிய மலர்க் கூந்தலை முடித்துகொண்டு அணுகுவார்கள். தங்களுக்கு மரணம் உண்டாக்கத் துணிந்தவர்களுக்குத் துணிந்து இடர் செய்யாதவர்கள் யார் ? ஒருவருமில்லை, அதுபோல் மள்ளப்பெண்கள் நன்மணம் வீசும் தாமரைகளைக் களைவதனால் முள்ளுகளை அடியில் கொண்டிருக்கும் தண்டுகள் பிடித்துக் கொண்ட மாத்திரத்தில் அவைகள் தங்களை வருத்தப்படுத்திய கைகளைக் கோபத்தோடு கிழித்துப் புண்ணாக்கி விடும். இலவம் பூப்போல் சிவந்திருக்கும் வாயினையுடைய மள்ளப்பெண்கள் தங்களுடைய சுழலும் கண்களைப்பார்த்து நம் இனம் ஆம் என்று முகாரவிந்தங்களின்மேல் பாயும் கயல் மச்சங்களையும் தம் இனம் என்று புறவடிகளின்மேல் வந்து சேரும் ஆமைகளையும் வருத்தமில்லாமல் பிடித்துக் கொள்வார்கள். பலமில்லாத சிறியோர்களும் தங்களை ஒருவர் அடித்தால் தங்களால் செய்யக் கூடிய தீங்குசெய்வார்கள், அதுபோல் ஒழிந்துபோகக் களைந்து எறியும் மள்ளப்பெண்களை அந்த நீரில் மடிந்திருக்கும் குவளைகள் பாம்புபோல் அவர்கள் கால்களைப் பின்னிக்கொண்டு ஐம்பொறிகளும்பயம்அடையச்செய்யும். பகைவரிடத்தில்பட்சம்வைப்பவர்கள்யார். ? ஒருவரு மில்லை. அதுபோல்மாந்தளிர்போலும்மெல்லியதன்மையுள்ள மள்ளப்பெண்கள் தங்கள் முகங்களுக்கும் கண்களுக்கும் வாய்க்கும் பகையாய்த்தேனில் முழுகியவண்டுகள் சிறகு உலர்த்தும் தாமரைகளையும் குளிர்ச்சி பொருந்திய குவளைகளையும் அரும்புகளை யுடைய அல்லிகளையும் முற்றிலும் பறித்து எறிவார்கள். மாசில்லா தோங்கும் பச்சிளம் பயிரின் அழகும் வரம்புகளில் எல்லாம் அணி அணியாய்க்கிடக்கும் பலவர்ணமுள்ள மலர்களும் மலைகளின்மேல் தவழும் மேகங்களும் வானத்தில் இடும்வில்லும் பூமியில் உள்ள பயனை அடைவதற்கு வந்திருப்பதை நிகர்க்கும்! கார் மேகம்போல் கறுத் திருக்கும் பயிர் களின் இடை இடையே மின்னல் உருக்கொண்டு விளங்கினாற் போல் அவ்விடத்தில் உலாவும் அந்தப்பெண்கள் தங்கள் செந்தாமரை மலர் போலும் பாதங்களை மெள்ளப் பெயர்த்து வைத்து வாசனைவீசும் கூந்தலில் கருவண்டுகள் முழங்கிவரக்கரைமேல் ஏறுவார்கள். தலைவியைக் காணாமல் வரும் புன்மங்கண்டு மனங்க

லங்கும் மைந்தர்கள்போல் பெருமகிழ்ச்சி யடைந் திருக்கும் அன்னப் பட்சிகள், பயிர்களை வருத்தும் களைகளைக் களைந் தெறியப்பட்ட நீர்வளமுள்ள வயல்களில் பழமைபோல் பரிமளமுள்ள தேன் ஒழுகப் பூத்திருக்கும் தாமரைப்பூஞ் சயனங்களைத் தேடிவந்து அவைகளைக் காணாமல் கலங்கிவாட்டம் அடையும். பொருள் எல்லாம் கொள்ளைபோய் மிகவறுமை அடைந்த காலத்திலும் பெருமைக் குணமுடையவர்கள் தங்களை நாடிவரும் விருந்தினர் பசியால் வாட்ட மடையப் பார்ப்பார்களோ? பார்க்கமாட்டார்கள் அதுபோல் பசுநிறமுள்ளவயல்கள் இடையறாமல் தேன்பொழியும்மலர் வளப்பத்தை இழந்தும் தங்களை நாடி வரும் வெண்கொக்கு முதலியனவைகள் உண்டுகளிக்க மீன்களை விருந்தாகக் கொடுக்கும். மண்ணுலகத்தில் வசிக்கும் மங்கையருடைய கைவளத்தைக்கண்ட நாம் விண்ணுலகத்தில்வசிக்கும் மங்கையருடைய கைவளத்தையும் காண்போம் என்று எண்ணி விண்ணுலகத்திற்குப்போகத் தொடங்கியதுபோல், வானோங்கிவளரும் பயிர்கள் காண்பவர்கள் கண்களை நிறைக்கும் அழகுடன் செழித்து ஓங்கும் காட்சியுடையதாம்.

பெற்றெடுத்த தாய்தந்தையருடைய குணங்கள் பிள்ளைகளுக்கும் உண்டாம் என்னும் பழமொழியின்படியே விதையில்தோன்றிய முளை முன்னே வெளுத்துக்காட்டிப் பின்பு பசந்து காட்டிய சம்பந்தத்தால் பாலால் நிறைந்திருக்கும் செழுமையான கதிர்களும் முன்னே பரிசுத்தமான வெண்மை நிறமாய்த்தோன்றி மாட்சிமைப்பட்டு பின்பும்மரகத மேனி பெற்று மடல்களைக் கிழித்துக்கொண்டு ஓங்கிவளரும். தெய்வப்பெண்களின் அழகிய கைவளத்தை அறிவதற்கு மேற்சென்று, அலைவீசும் கடல் சூழ்ந்த உலகத்தில் வசிக்கும் பெண்களுடைய கைவளத்திற்கு ஒப்பாகா திருக்கும் தன்மையைப் பார்த்துத் திரும்பினாற் போல் விண்ணுல கத்தை நோக்கி விளங்கி எழுந்த பரவி யிருக்கும் தண்ணீரையுடைய நெல்லுப் பயிர்கள் எல்லாம் பூமியை நோக்கிப் படிந்து வணங்கும்.

புருஷர்களுக்கு எதிரில் பேதைப் பருவத்தில்வணக்கமில்லாமல் பெதும்பைப் பருவத்தில் மிகவும் சிறிது வணங்கி, மங்கைப்பருவத்தில் மிகவும் நாணம் அடையும் குலமாதர்களைப்போல் பயிர்களுக்குத் தலைவர்முன் விளக்க முற்று எழுந்தோங்கும் குற்றமற்ற கதிர்கள் முற்றி வரவரக் கீழ்ப்பணியும். உருவத்தில் பால்பிடித்தலாகிய பலம் அடையாத காலத்தில் தலைநிமிர்த்தி அந்தப்பலம் அடைந்தபின்பு செருக்கற்று மிகவணங்கிப் பழுத்திருக்கும் கதிர்களை யுடைய நெல்லுப்பயிர்கள் ஒருவனுக்குச் செல்வம் வந்தகாலத்தில் மிக்கவணக்கம் வேண்டும். மிக்கவறுமைவந்த காலத்தில்

பெருமையோடு இருத்தல் வேண்டும் என்னும் பெரியோர் சொற்சுவையை வெளிப் படையாகத் தெரிவிக்கும். பரிசுத்தமான சந்திரமண்டலத்திலிருந்து ஒழுகும் கிரணங்கள், துளிதுளியாகத் துளித்தாற் போல் கதிர்களையுடைய நெல்லுப்பயிர்கள் அழகிய முத்துகளை உமிழ்ந்து வயல்களை மேடாக்கிப் புஷ்பங்கள் புஷ்பிக்கும்படி கால்வாய்களி லிருந்து பாய்ச்சிக் கட்டப்பட்ட தண்ணீரை எல்லாம் புறத்தில் விட்டு நிறமுள்ள அந்தநீரை உலர்த்தவரும் மள்ளர்களுடைய மனதை மகிழ்விக்கும். வயல்கள் குலை குலை யாய் வணங்கி யிருக்கும் கதிர்களையுடைய நெல்லுப் பயிர்கள் வில்லுகளாகவும், மிக்கபதருடன் உலர்ந்திருக்கும் கதிர்களைக் கணையாகவும் விளங்கும் தாமரை என்னும் கைகளால் பிடித்து அங்குக் கலந்திருக்கும் பசுங்கதிர்களைக் கொய்யவரும் பறவைகள்பயந்து பறந்தோட அவைகளுக்குத் துன்பம் உண்டாக்கிக் கண்டவர்கள் அதிசய மடையச் செய்யும். திருப்பாற்கடலில் உண்டாகிய ஆலகால விஷத்தால் பால் வண்ணத்தை ஒழித்துக் கார்மேக வண்ணம் படைத்திருந்த திருமால் பெரும்புகழ் படைத்தோங்கும், காஞ்சிமா நகரத்திற்கு வந்து சேர்ந்து, தவம் செய்து செம் பவள வண்ணம் பெற்றதுபோல் வெள்ளை நிறம் மாறிப் பச்சைநிறம் கொண்டெழுந்த நெல்லுப் பயிர்கள் எல்லாம் செம்பொன் நிறம் பெற்றுத் தழைத்திருக்கும், புலவர்கள் புகழ்ந்து பேசும் வள மெல்லாம் பொருந்திய மேருமலையைச் சூழ்ந்திருக்கும் பொன் மயமான சம்பு நாவலோ என்று கண்டோர் அதிசயம் அடைய வளர்ந்தோங்கும் செந்நெற் பயிர்களை அறுக்கும் பருவம் பார்த்துத் தெண்ணீர் வளமுள்ள திருநாவலூரர் ஆகிய சுந்தரமூர்த்தி நாயனார் திரு உளம் மகிழும்படி பரவை நாச்சியாருடைய திருமாளிகைக்கு நித்திய படியாக நெல் எடுக்கும் குண்டை யூர்க் கிழவருக்கு ஒப்பான வர்களாகிய வேளாளர்கள் நாவலோ! என்று அழைக்க மள்ளர்கள் எல்லாரும் மகிழ்ந்துவந்து செய்தொழிலில் முயற்சி செய்யலானார்கள் ஒருவருக்கு ஒரு துன்பம் நேரிட்டால் அந்தத் துன்பம் அவர்களை அடுத்திருப்பவர்களுக்கும் நேரிடுவது நிச்சயமே ஆதலின், மள்ளர்கள் கருவிகொண்டு அறுக்கும் நெற்கதிர்களுடன் அங்கு மலர்ந்திருக்கும் மெல்லியமலர்களையும் சேர்த்து அறுப்பார்கள். வயல்களெங்கும் அரிகிறவர்களும், சேர்க்கிறவர்களும், அடுக்குகிறவர்களும், உறுதியாகக் கட்டுகிறவர்களும், தலைமேல் தூக்கி வைப்பவர்களும், களத்திற்குப் போகச்செய்கிறவர்களும், செம்பொன் மலைபோல் போர்போடுகிறவர்களும், திரும்புகிறவர்களும், ஆகிய இத்தன்மை யுடையவர்களேயாம். அணைபோட்டுத் தடுக்கும் இனிமையான நீரை உடைத்தாயிருக்கின்ற மருதநிலத்திற்கு இறைவனாகிய இந்திரன் பூர்வம் வெறுத்துச் சிறை அரிந்த மலைகளைக் கோபங்கொண்டு சிறைப

டுத்த நினைத்துத் தன் ஒருபக்கத்தில் வைத்தாற்போல் நெல்லுப்போர்கள் சிறந்திருக்கும். மலைகளையெல்லாம் பூமியில்விழுந்து கிடக்கும்படிசெய்த இந்திரன் தன் நிகரில்லாத வாகனமாகிய மேகத்தை ஏவி அந்த மலைகளை வருத்தப்படுத்துவதுபோல் வலியராகிய மள்ளர்கள் பல போர்களைச் சரித்து எருமைக்கடாக்களைக் கயிற்றிற்பிணைத்து நடத்துவார்கள். நெல்லுகள் வைக்கோலில் இருந்து நீங்கியதோ இல்லையோ என்று பலமுறையும் முகத்தை வளைத்துப் பார்ப்பதுபோல் எருமைக் கடாக்கள் தங்கள் அழகியவாயால் செந்நெற்கதிர்களைக் கவ்விச்சுழற்றிக்கலக்கிவிடும். உடலைவிட்டு உயிர் பிரிந்தாற் போலவும் ஊழ்வினைத் தொடர்ச்சி நீங்குவது போலவும் சேர்ந்திருந்த நெல் எல்லாம் வைக்கோல் கூட்டத்திலிருந்து நீங்க எருமைகள் எல்லாம் பிணைக்கயிற்றிலிருந்து நீங்கி அகன்றுபோய்விடும். வைக்கோல்களைநீக்கிக் காற்றின் முகமாய்த் தூற்றினமாத்திரத்தில் ஆணவம் முதலிய மலங்களி லிருந்து நீங்கிய ஞானிகளுடைய ஐம்பொறி வலிகள் அவர்களைவிட்ட கன்றுபோவதுபோல் பதர்கள் எல்லாம் மிகுந்த கூளங்களுடன் அவ்விடம்விட்டு மெதுவாய் அப்பால் ஓடிப்போய்விடும். தரும சாஸ்திர விதிப்படி அங்குச் செய்யத் தக்கவைகளைச் செய்து அவ்வகையில் மிகுந்திருக்கும் செந்நெற் குவியல் எல்லாவற்றையும் மிதித் தெடுத்து நெல்லுக் கொட்டாரத்தில் சேர்த்துச் செய்ய வேண்டிய தருமச்செய்கைகளை மறவாமற் செய்யும் வளமானகுடிகள் அந்தநாடு எங்கும் உள்ளன. சிவபெருமான் கொடுத்தருளிய இருநாழி நெல்லைக் கொண்டே தருமங்களையெல்லாம் நிறைவிக்கும் பார்வதிதேவியாரைப்போல் அழகிய வயல்கள் கொஞ்சமாய் விதைத்த விதைகளைக் கொண்டு குடிகள் எல்லாம் திருத்தியடைய நெல்லுகளை நிரம்பச்செய்யும் விலாசமாகிய வயல்கள் மள்ளர்கள் கொடுத்த தானியங்களைக் கொண்டு விருத்தி செய்து மீளக்கொடுக்குந் தன்மையால் அந்நாட்டில் உள்ள வணிகரை ஒக்கும். அந்நாட்டில் சூழ்ந்திருக்கும் சோலைகள் ஆகாய கங்கையை உண்ணப் போவதுபோல் வளர்ந்து எழுந்து ஓங்கி இருக்கும். எவ்விடங்களிலும் மேகங்களில் உதிரும் ஆலாங்கட்டிகளைப்போல் குளிர்ந்திருக்கும் பாளைகள்வெடித்து அரும்பு உதிரும் பசுநிறமுள்ள கமுகமரங்கள் உள்ளன. வளர்ந்தோங்கும் தென்னமரங்கள் வண்டல் ஆட்டு ஆடும் மங்கையருடைய கொங்கைக்குத் தோல்வியடைந்து, பின்வாங்கும் இளநீர்களை அவர்கள் காணுதிருக்கும்படி அண்டத்தின்மேற் கொண்டுபோய்ப் பாதுகாக்கும், பகைவர் அரணை அழித்து வெற்றி அடைந்தவீரர்கள் தேர்மேல் ஏறிப்போவதுபோல் துறைமுகத்தில் தங்கிக் கூட்டத்துடன் போர்செய்து கைவசப்படுத்திக் கொண்டதடாகத்தைவிட்டுநீங்கி மெல்லிய புஷ்பங்கள் நிறைந்திருக்கும் சிங்காரவனத்

தில் செந்தேன் அடைகளைக் கிழித்துக்கொண்டு, மேற்செல்லும் வாளைமீன்கள் போர்செய்து மாண்டுபோனவர்கள் கதியைக் காட்டும். தாமரை மலர் முதலியவைகளை மேயும்படி ஏரிகளில் செல்லும் காரிள வெருமைகளை அங்குள்ள வாளைமீன்கள் பகைத்து ஆகாயத்திற்கிளம்பி அந்த எருமைகளின் முதுகின்புறத்தில் பாதி உள் அழுந்திக் குழிந்துபோகும்படி குதித்து இடித்துப் போராடி மேலுயர்ந்து பலத்திருக்கும் கரைமேல் ஏறிப் போய்விடச்செய்யும் அதிசயம் உடையன. பெரியஏரிகள் எங்கும் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்என்னும் பஞ்ச தன்மாத்திரைகளைக்கொண்டிருக்கும், ஐம்பொறிகளின் தொடர்ச்சியால் கவரப்பட்டிருக்கும்மனம்கொண்டு அலையும் அறிவீனர்களைப்போல் நீர்நாய்கள் அலைகள்தோறும் துவண்டு எழும்பி முறைமுறையாகக் கீழ் நீரில் சுழலும் காட்சிகள் அறிவுடையோர் எல்லாரும்கண்டு ஆச்சரியம் அடைய உள்ளன. கரையை அடுத்திருக்கும் தண்மையான மலர்களையுடைய காஞ்சிவிருட்சம் கிளைகளாகிய கைகளைநீட்டி மணம்வீசும் கரும்பைத் தடவிக்கொண்டிருக்கும். தோற்றம்வண்டுகள் முழங்கிச்செல்லும் மலர்மாலைகளை அணியும் பலத்த தோள்களையுடைய கணவர்களுடன் ஊடுதல்செய்யும் மடமாதர்கள்மேல் அம்புகளைநிறைத்துப் போர்செய்வதற்குமன்மதன்கையில் வில்பிடிக்கும் தன்மையுள்ளதாம். பூத்துநீராடச்செவ்வணிதாங்கிச்செல்லும் மின்னற்கொடிபோன்ற தலைவிகளும் மாசில்லாத வெள்ளணி அணிந்துசெல்லும் பாங்கிமார்களும் போவதும் வருவதுமாய் விளங்கும் வீதிகளில் எங்கெங்கும் தலைவர்களுக்கு ஆசையுண்டாக்கும்தாசிகளுடையமனதைக்கவலைப்படுத்தும். செம்பொற் கலசத்தை ஒத்ததனங்களையுடைபார்வதிதேவியாருடன்எம்பெருமான் மகிழ்ந்தருளும் திருப்பாசூர் ஆகாயத்தை அளாவியமதிலால் சூழப்பட்டிருக்கும் திருவலம் வாசனைவீசும் தேனை அருவிபோற் பொழியும் பூஞ்சோலைகளையுடைய மற்றையதலங்களும், அனந்தமாகச்சூழ்ந்திருக்கும் வளமான வயல்களையுடையமருதநிலத்தின் அலங்காரத்தை முற்றிலும் வர்ணித்துச்சொல்ல வல்லவர் யாவர் ?

## நெய்தல்.

மேற்சொல்லிய மருதநிலத்தை அடுத்த கழிகள் சூழ்ந்திருக்கும் நெய்தல் நிலமானது மதிமயங்கச்செய்யும் ஆலகால விஷத்தைச் சிவபெருமானுக்குக் கொடுத்தபடியால் நமக்கு உறவாம் என்று பூர்வம்பொய்சொல்லி விலக்கப்பட்ட தாழைகள், அலைமுழங்கும் சமுத்திரத்தோடு சூழ்ந்து உறவுசெய்திருக்கும். தாழையானது பனைமடலேற அஞ்சக்கண்டு அலர் தூற்றும் (பலர் அறியச்சொல்லும், மலர்சொரியும்) புன்னைமரத்தில் பரிம

ளிக்கும் மதுவை உண்டு உமிழும் வண்டுகள் ஒத்துடன் இசைக்கும் (உடன்பட்டுஅந்தப் புன்னைமரத்துடன் சேர்ந்துகொண்டு பலர் அறியச்சொல்லும், சதியுடன் சங்கீதம்பாடும்) வண்டுகள் இறகு உலர்த்தும் அரும்புஅவிழ்ப்பெற்ற நெய்தல் மலர் மணம் இசையும் (மணம்செய்து கொடுப்பதற்குச் சம்மதிக்கும், மணம் இசைந்துகொடுக்கும்) ஆழமாகிய கழிகளில் மீன்களைமேயும் பறவைகள் அதைப்பார்த்து மகிழ்ச்சி அடையும். கற்கண்டு போல் மதுரமானசொல்லைச் சொல்லுகின்ற மாதருடைய அவயவங்களின் அழகைத் திருடிக்கொண்டுபோய்த் தெளிந்திருக்கும் நீரை யுடைய சமுத்திரத்தில் ஒளித்துக்கொண்டிருப்பதை அறிந்துகொண்ட செம்படவர்கள் அந்தச் சமுத்திரத்தில் முழுகிப் பவளங்களையும் சங்குகளையும் வளமான முத்துகளையும் வாரிக்கொண்டுவந்து அந்தமாதர்களுக்குமுன் குவியல் குவியலாய்க்குவித்து வைப்பார்கள். குவிவாகிய பயோ தரங்களின்மேல் கலவைச்சந்தனம் அணியும் பரத்தியர்கள் எங்களுடைய அவயவங்களாகிய கழுத்து,கண், வாய், தந்தங்களின் அழகைத் திருடிக்கொண்டீர்கள் என்று கோபங்கொண்டு, பருத்திருக்கும் சங்கு,கயல்,பவளம், வெண்முத்து முதலியவைகளைப் பிறர்வாங்கிக்கொள்ள விலைக்குவிற்றுப் பெருமகிழ்ச்சி அடைவார்கள்.

கண்களின் அழகைக் கவர்ந்துகொண்ட கடல்மீன்களை உலர்த்தும் உண்ணுதற்குரிய அமுதம் போன்ற மங்கையர் அந்த மீன்களை உண்ணவரும் பறவைகளை வராமல் காக்கும் பண்ணோடு கூடிய பாடலைச் செவியாரக்கேட்க விரும்பும் சமுத்திரமும் சூரியன் ஆகாயத்திற் செல்லும் பகற்காலத்தில் மெள்ளச் சத்தமிடும். கணவனைவிட்டுப் பிரிந்தவர்களுடைய பிராணனை வதைக்கத் தன் வீரப்பிரதாபத்தைச்சொல்லி வாசனை சேர்ந்திருக்கும் தும்பைமாலை சூடி வலிமைபெற்றேறுங்கும் மன்மதன் போர் செய்து நோய் செய்யுங்காலம் என்று எண்ணி, அவன் பேரிகையாகிய சமுத்திரம் அவன் செய்யும் போர்க்கு இணங்க இராக்காலத்தில்பேரொலிசெய்யும். தங்களால் விரும்பப்பட்ட தலைவர்கள்பிரிந்து போனமையால், கண்ணீர் சிந்தித் தாழ்ந்து அழுது புலம்பும் மடமங்கையைப் பார்த்து, ஆழ்ந்திருக்கும் கழி என்னும் மங்கையும், அந்த மங்கையருடன் நின்று அழுவதுபோல பறவைகள் சூழ்ந்து புலம்ப மலர்கள் தேன்துளிகளைத்துளிக்கும். நன்மைதரும்செல்வத்தின்பொருட்டுப்பல சரக்குகளால் நிறைந்திருக்கும் கப்பலின்மேல் ஏறிப்போன நெய்தல் நிலத்தலைவர்கள் வரும் வழிபார்த்துப்புலம்பி வாடியிருக்கும் மாதர்களுடைய இன்னுயிர் தளிர்க்கும்படி அலம்பும் அலைகளையுடைய சமுத்திரமானது சீதளமான சிறுதிவலைகளைவீசும். மிகவும் அற்பமான புறச்சமயத்தாரும் அதிசயம்

அடைந்து புகழ்ந்துபேச, எலும்பைப் பெண்ணுகச்செய்த திருமயிலை திரு ஒற்றியூர் முதலானதிவ்வியஸ்தலங்களால் சூழப்பட்டிருக்கும் நெய்தல் நிலத்தின் பெருமையை அளவிட்டறியும் தன்மையுடையவர் யாவர்?

திருத்தொண்டை வளநாட்டில் நால்வகை நிலங்களுடன் சிறந்திருக்கும் ஐந்திணைவளங்களையும் விளக்கிக்காட்டுவதற்கு, வாசனை வீசும் ஆதொண்டைக்கனிபோன்ற வாயினையுடைய மாதர்கள் சூழ்ந்திருக்கும் குன்றைநகர்ச் சிரேஷ்டகவியாகிய சேக்கிழார் நாயனாரே அல்லாமல் பிறவித்துன்பங்களுக்கு அடிமைகளாம் எம்மைப்போன்றவர்கள் எப்படி அறிந்து சொல்லமாட்டுவார்கள்? இது நிற்க வாசம் செய்கிறவர்களுக்கு இன்பம் ஊட்டும் புகழ்படைத்தோங்கும் அந்த நாட்டில் அந்தத் திணைகள் ஒன்றோடு ஒன்று அங்கங்கே கலந்து கிடப்பனவும் உண்டு.

## திணை மயக்கம்.

மலைகளில் வளர்ந்தோங்கும் அசோகமரங்கள் மலர் சொரிந்து, காட்டுமுருக்கமரங்கள் அவைகளுக்கு எதிரில் சொரிந்த மலர்களில் முழுகி மன்மதன் மேனியெல்லாம் கூட்டமாகிய புஷ்ப பாணம் சொரிந்து, எம்பெருமானுடைய நெற்றிக்கண் நெருப்பில் முழுகிநிற்பதைக்காட்டும். மலைகளில் அடர்ந்திருக்கும் மிளகுக்கொடிகள் சென்று கொன்றைமரத்தின் மேல் மரகதத்தோரணம்போல் தாவிப்படர்ந்து, கிளிக்கூட்டங்களும் சேவல்களும் எதிர்நடக்கக் குறிஞ்சிநிலத்தலைவர்கள் கட்டிவைத்த நெடிய கயிற்றின் காட்சியைக் காட்டும். அவ்விடத்தில் சுற்றுப்பக்கமெல்லாம் மலர்ந்திருக்கும் முல்லைச்செடிகள் அடர்ந்துபெரும்புதர் செய்யவும், அந்தப்புதரின்கீழ் கரடி நுழைந்து நித்திரைசெய்யவும் அவைகளுக்கு நடுவே வளர்ந்தோங்கும் கொன்றை மரத்தின்மேல் மிளகுக்கொடிதாவிப் படரும் தோற்றமானது இராவணன் வந்து கைலாயத்தைப் பெயர்த்த நாளில் பயந்து தழுவிக்கொண்ட பார்வதிதேவியாருடன் கற்றையாக நீண்டிருக்கும் சடையையுடைய சிவபெருமான் நின்றிருந்த நிலையைப் பிரத்தியட்சமாகக்காட்டுவதும் உண்டு.

தாங்கள் வாசம் செய்யும் மலைகளில் கிளைத்திருக்கும் அசோக மலர்களைக் கவர்ந்துகொள்ளும் மன்மதன்மேல் கோபங்கொண்டு யானைக்கூட்டங்கள் கழனிக்குப்போய், அந்த மன்மதன் சேமத்தில் இருக்கும் வில்லுகளாகிய கரும்புகளை அழித்துக்கடித்துத்தின்று ஆரவாரம் செய்யும். மலைகளில் வசிக்கும் குறப்பெண்கள் தினைப்புனங்களில் கிளிமுதலிய பறவைக

ளைஒட்டும் கவண்கொண்டு எறியும் மாணிக்கக்கல்லுகள் மருதநிலத்தில் தெண்ணீர் அலைகளையுடைய தடாகங்களை நிறைத்து மேடாக்கக் கண்டு அந்த மருதநிலத்தில் வாசம்செய்யும் சிறு பிள்ளைகள் கோபங்கொண்டு மணம் வீசும் கூந்தலையுடைய மருதநிலப்பெண்கள் வண்டலாட்டு ஆடுமிடத்தில்போய் அவர்கள் ஆடும் பந்துகளையும் கூட்டமாகிய கழங்குகளையும் அந்த மாதர்கள் அலறத் தங்கள் கைகளால் பிடுங்கி எறிந்து அந்தக் குறிஞ்சி நிலத்தில் உள்ள நீர்ச்சுனைகளை நிறைத்து விடுவார்கள். தாங்கள் தினையளவேனும் பிரயோசனப்படமாட்டார்கள் பிரயோசனப்படுகிறவர்களையும் தங்களைப்போல் செய்துகொள்ளும் உலோபிகளைப்போல் அழகிய வண்டுகள் உண்ணுதபடி கழிகளில் மலர்ந்திருக்கும் நெய்தற் பூவின் மேல் மலைகளில் உள்ள வேங்கைமரங்கள் தேனைப்பொழியும். இதை அறிந்து கோபித்து எழுந்தாற்போல் அச்சம் தரும் கடலில் உள்ள பவளங்கள் நெடிய கொடிகளாகிய கைகளை நீட்டி அழகிய அந்த வேங்கைமரத்தின் குடுமியைப் பிடித்திருக்கும் காட்சியும் ஒரு பக்கத்தில் உண்டு. கடலில் வாசம்செய்யும் காக்கையானது மலைச்சாரலில் வளர்ந்தோங்கும் பலாப்பழத்தின் சுளையைக் கவ்விக்கொண்டு எழுந்து, இராவணன் வில்லெடுத்துப் போர்செய்வதில்வல்ல, தசரதகுமாரனுகிய இராமன் பத்தினியான சீதையைத் திருடிக்கொண்டு ஆகாயமார்க்கமாய் இலங்கைக்குப்போனதுபோல் பறந்துபோய்த் தன் இருப்பிடமாகிய கப்பலிற்சேரும். அக்காலத்தில் மகேந்திரகிரிமேல் நின்று இலங்கைமேற்பாய்ந்த அனுமானைப்போல் நீண்டிருக்கும் வாலையுடைய குரங்கு அந்த மலைமேல் நின்று கடலிற்றங்கிய தோணிமெற்பாய்ந்து அதை அழித்து மீண்டுவரும் சிறப்பும் அவ்விடத்தில் உண்டு. இடைச்சியரிடத்தில் நடை கற்றுக்கொள்ளப்போவதுபோல் வயல்களில் மேயும் அன்னப்பட்சிகளெல்லாம் மாறுவளம் படைத்தோங்கும் ஆயர்பாடியிற்போய் அங்குள்ள பசுவின்பாலைக்குடித்து வருத்தம் நீங்கும். தலைமடைகளுடன் சூழ்ந்திருக்கும் வயல்களையுடைய மருத நிலத்தில் வாசம்செய்யும் மாதர்களின் மதுரவார்த்தைகளைக் கற்றுக்கொள்ளப் போவதுபோல் காட்டில்வாழும் பெண்குயில்கள்போய் அங்குப்பருத்திருக்கும் பாக்குமரத்தின் பழங்களைப்பார்த்துக் கோவைப்பழமென்று தின்னவிரும்பும். கொடுமையுள்ள செம்படவர்கள் கழிகளைக் கலக்கக் குதித்தெழுந்த மீன்கள் இடைச்சியர் பால்குடங்களில்விழுந்து, அங்கு அவர்கள் அடுப்பேற்றிக் காய்ச்சும் பயத்தோடு (பாலோடு, பயத்துடன்) இதற்கு என்னசெய்யலாம் என்று திகைக்கும் மேலும் அவர்கள் தயிர் கடைவதனுல் உண்டாகும் ஓசைக்குப் பயந்து ஓடி ஒடுங்கும் முசல்கள் தாழம்புதரில் அடங்கி, அவ்விடத்தில் உள்ள கடல் ஓசையைக்கேட்டு மனவருத்தமடையும். ஐயோ! கொ

டும்பாவத்தொடர்ச்சி எங்கேபோனாலும்விடாது, (காசிக்குப்போனாலும்
கர்மம்தொலையாது) என்று பிரத்தியட்சமாக ஒருபக்கத்தில் காண்பிக்கும்.
சிற்றிடையையுடைய மள்ளப்பெண்கள் களைந்து எறிந்த சுகந்த தாம
ரை மலர்கள் பேரொலி செய்யும் சமுத்திரத்திற் பெருகும் அலைகளின்
மேல் விளங்கியமாத்திரத்தில் அங்குள்ளவர்கள் சமுத்திரத்தில் தாமரை
பூத்த காரணம் என்ன? வந்து பாருங்கள் என்பார்கள். பிளவுபட்டிரு
க்கும் அலைகளையுடைய சமுத்திரத்தில் கிளைத்திருக்கும் பவளக்கொடிக
ள்போய் மருத நிலத்து வயல்களின்மேல் விளங்கக் கண்டவர்கள் மணம்
வீசும் வயலும் பவளம் ஈன்றது என்ன என்பார்கள். ஒரு பக்கத்தில்
இத்தன்மையாகவிளங்கும் மலைச்சாரல்களில்வசிக்கும் பசுங்கிளிகளும்முல்
லைநிலத்தில்வசிக்கும் குயில்களும்சேர்ந்து பசுவின்பாலைக்குடித்துப் பற
வைகள்கூட்டம் கூட்டமாய் உலாவும் வயல்களையுடைய மருதநிலத்தில்
உள்ளபுஷ்பசயனங்களின்மேல் எதிர் எதிராய்த்தங்கி இருந்து கீதம்பாடும்
அணி அணியான சிகரங்களையுடைய மலைகளில்வசிக்கும் யானைகளும்மரு
தநிலத்தில் உள்ள எருமைக்கடாக்களும் அங்குள்ளகரும்புகளை ஒடித்து இ
ரசத்தைக்குடித்து அலைகளையும்மிக்க நீரையும் உடையகானாறுகளில்படி
ந்துவிளையாடிக்கலந்து உறங்கும் அழகுடையது ஒருபக்கம். முல்லைநிலத்
தில் மலரும்குமிழம் பூவையும் கழிகளையுடைய கடற்கரைச்சோலையில்உ
ள்ளதாழைகள்கொடுக்கும் பொன்னிறப்பூவையும் பூமியினால் சுமக்கப்ப
டும் மலைகளில்மலரும் செங்காந்தட்பூவின்மேல் இரண்டுபக்கமும் தாங்
கிநின்று, சிவபெருமானுக்குச் சாத்துதற்குரியபூவை எடுத்துமோந்த தன்
பத்தினியின் மூக்கை அறுத்துக்கத்தியுடன் ஏந்திப்பூர்வம்நீதியை நிலை
பெறச்செய்த செருத்துணைநாயனார் நின்ற நிலைமையக்காட்டி ஒருபக்க
ம் மிக்கவளம்கொடுக்கும். ஆகாயத்தை முட்டிக்கொண்டிருக்கும் சிக
ரத்தை யுடையமலையில்வளரும் மூங்கிலில் உண்டான முத்துகளும் கட
ற்கரையில் உள்ளமண்ணெல்லாம் மணம்வீசச்சிதறுண்டிருக்கும் புன்னை
அரும்புகளும் இடங்கள்தோறும்கலந்து அவைகளுடன்சேர்ந்திருக்கும் கு
ளிர்ச்சியான தன்முட்டை இது என்றுபகுத்தறிந்துகொள்ள மாட்டாமல்
தளர்ந்து கண்ணுக்கு எட்டியதூரம் வளம்படைத்திருக்கும் மருதநிலத்து
அன்னப்பட்சி துயரப்படும் காட்சியுடையது ஒருபக்கம். சிறுசுனைகளில்
உள்ளமதுவையுண்டு வண்டுகள்சுழன்று ஆடப்பெற்றமுல்லைநிலத்தில் உள்
ளகுயில்கள் கடற்கரையை அடுத்திருக்கும் புன்னைமரங்கள்தோறும் அட
ர்ந்திருக்கும் காக்கைகளின் கூண்டுகளுக்குப்போய் முட்டையிட்டுச்சூழ்ந்
துமீண்டு நன்மணம்வீசும் தேன் ஒழுகப்பூத்திருக்கும் மலர்களையுடைய கா
ஞ்சிமரத்தின் கிளைகளின்மேல் ஏறி ஒளித்திருந்து தனக்குநற்காலமாகிய

வசந்தகாலம்வரும் அளவும்மகிழ்ந்து வாசம்செய்யும்மாறுவளம்காட்டி ஓங்கும் ஒருபக்கம். மிளகுக்கொடியும் பவளக்கொடியும் வயலைப்பசுங்கொடியும் பரிமளிக்கும் தேன்மணம்வீசும் முல்லைக்கொடியும் நான்குதிசைகளிலும்தாவிப்படர அவற்றின் நடுவில்வளர்ந்திருக்கும் மணமுள்ளகுராமரத்தின்மேல், அவ்வழியில்வீசி அடிக்கும்பெருங்காற்றினால் பலமுறை அசைந்தாடும் அந்தக்குராவின்பெண்போலும் இளஞ்செடிகளின் காட்சியானது, கடைக்கண்பார்வையால் வாளாயுதத்தை ஒடிந்துபோகச்செய்யும் கூத்தாடிச்சிகளாகிய தொம்பரப்பெண்கள் ஆடும்கயிறுகளைக்கட்டிய கழைக்கூத்துப்போல்விளங்கும் ஒருபக்கம். இத்தன்மையான அலங்காரமுடைய நால்வகைநிலங்கள் அடுத்திருக்கும் இடங்களில் எல்லாம்பெருங்குடிகள் ஒழுக்கம்தவறாமல் ஓங்கித்தினையளவேனும் தங்கள் தங்கள்கடமையில்தவறாமலிருக்கப்பெற்ற தொண்டைவளநாட்டின்சிறப்பெல்லாம் அறிந்துசொல்லமுழங்கும் அலைகளையுடையசமுத்திரத்தை ஆடையாக உடுத்திருக்கும்பூலோகத்தில்யார் இருக்கின்றார்கள் ? ஒருவருமில்லை. தேவலோகத்திலும்தன்னைத்தானே ஒத்திருக்கும்நாகலோகத்திலும் அப்படியேயென்றால்யாம் வேறுசொல்வது ஏன் ? பலநாட்டுப்பெருவளங்களையும் அவரவர்கோட்பாடுகளையும் எடுத்துச்சொல்லவல்ல பொன்னுலகத்துப் பிரகஸ்பதியின்செருக்கையும் ஆயிரம்நாவுபடைத்திருக்கும், ஆதிசேஷனுடைய அகங்காரத்தையும் அழிக்கவல்ல இந்தக்காஞ்சித்திருநாட்டைப்புலவர்கள் எல்லாம் தொண்டைநாடு என்றுசொல்வார்கள். அப்படிச்சொல்வது பூமிதேவியின்புதிய செந்தாமரைமலர்போலும் முகத்தில் தொண்டைக்கனிபோல்சிவந்திருக்கும் வாயாகும்காரணத்தின் சார்பினாற்போலும்.

சமுத்திரத்தை ஆடையாக உடுத்திருக்கும் பூமிதேவிக்குச்செந்தமிழ்நாடேமதிமுகமாம். அந்தச்செந்தமிழ்நாட்டிலும் புகழ்மலர்ந்தோங்கும்தண்டகநாடே தொண்டைக்கனிபோல் சிவந்திருக்கும்வாயாக, அதிலும் பலசாதிபேதங்களாய்விளங்கும் மனிதர்களுக்கெல்லாம் தங்கள் தங்கள் வருணாச்சிரம தருமங்களை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கத்தெரிவிப்பதனால் நாவு என்றுசொல்லலாகும் காஞ்சிமாநகரத்தின் சிறப்புச்சொல்வோம்.



உ

திருச்சிற்றம்பலம்.

# திருநகரப்படலம்.

---

ஆதிகாலத்தில் பிரமதேவன் காஞ்சிமாநகரத்தை ஒருதட்டிலும் தேவர் உலகங்களை ஒருதட்டிலும்வைத்து நிறுக்க, அவைகளெல்லாம்மேலோங்கிச்செல்ல, நிச்சயமாகவேவிரைந்து தாழ்ந்து பூமியிற்படிந்திருக்கும் இந்தக்காஞ்சிமாநகரத்தை இவ்வுலகத்திலுள்ள ஊர்களோடு ஒப்பாகநினைப்பது அறியாமையேயாம்; பிரமதேவன் அழகெல்லாம் ஒன்றாகச்சேர்த்துக் காஞ்சிமாநகரமாகப்படைத்து அந்தநகரத்தில் நுட்பமானதொழில்களைச் செய்யத்தொடங்கியபோது, பூமியிற்கழிந்துபோன அழகின்சேஷங்களை வேறாக எடுத்து, தேவலோகமாக விளங்கச்செய்தான் போலும்; அல்லாமல்வேறு என்னசொல்லலாம் ? சோமசூரியாக்கினி என்னும்மூன்றுகண்களையுடைய எம்பெருமான் ஆதிநாளில் பிரமதேவனைப்படைத்து வேதம் ஓதுவித்துக் கருணையோடுபார்த்து உலகமெல்லாவற்றையும் சிருஷ்டிசெய் என்று ஏவியபோது, இந்தக்காஞ்சிமாநகரத்தைப்பார்த்து இந்தப்பிரகாரம் சிருஷ்டிசெய் என்றுசொல்லிப் படைத்துவைத்தார். இது என்றுசொல்லலாகும் காஞ்சிமாநகரம்முற்ற உணர்ந்திலேனாகிய என்சொல்லின் அளவில் அடங்கியது ஆகுமோ ? ஆகமாட்டாது. முன்பு ஒருசமயத்தை உண்மையானது என்றுமுற்றிலும் கற்றுணர்ந்து, அந்தச்சமயநெறியில் நின்றவர்கள்பின்பு புண்ணியவசத்தால் சமயங்களுக்குமேலான சைவசமயத்தை அடையப்பெறுவார்களானால் அவர்கள்பேசும் தன்மைபோல் தேவர்கள் இந்தக்காஞ்சிமாநகரத்தைக் காணுந்தோறும் தங்கள்நகரம் சிறந்தது என்று எண்ணியிருந்த தங்களைத்தாங்களே வெட்கப்பட்டு வைதுகொள்வார்கள். நீடூழியாகநிலைத்திருக்கும் இந்தக்காஞ்சிமாநகரத்தில் நிலையாகத் தங்கி நெடுந்தவம் செய்கின்றவர்கள் எல்லாரும் தெய்வலோகத்தையும் பிரமலோகத்தையும் வைகுண்டத்தையும் அமராபதியையுங்கக்கிய அசுத்தமான சாதமாகநினைப்பது அவைகளெல்லாம் இந்தநகரத்தின் கோடிபங்கில் ஒருபங்குக்காயினும் ஒப்பாகமாட்டா என்று எண்ணியேயாம்.!

வண்டுகள் கால்கொண்டு வருத்தப்படுத்த அரும்பு அவிழ்ந்துமலர்ந்து துளித்த இனிமையான சுவையையுடையதேனை உமிழும்பெறுதற்கரிய

சோலைகளின்மேல் உலகத்திற்குத் துணைக்காரணமாகிய மேகத்தின் கூட்டங்கள் அடர்வன, பாடல்பாடிக்கொண்டுவரும் வண்டுகளுக்கு அவ்வண்டுகள்விரும்பும் தேனைக்கொடுக்கும் குணமில்லாத கற்பகநாட்டை அந்தச் சோலைகள் வெல்வதற்குமேல் ஓங்கிவருவதை அறிந்து பயந்துதேவர்களால்புகழப்படும் தேவேந்திரன் தன்வாகனத்தை அனுப்பித்தடுத்து இடைவழியில்மடக்குவதை ஒக்கும்! தேன்ஊற்று எடுக்கும்படி சிறகுகளையுடைய வண்டுகள்முழங்கும் குளிர்ச்சிபொருந்தியபூஞ்சோலைகள்துன்பமிகுந்துஅழகுகுறைந்துபோகும்படி மூடிக்கொண்ட மேகங்களை விரைவில்குதித்து எழுந்து அடிக்கடி உதைத்து, அந்தமேகங்களை அப்புறப்படுத்தி, நிறைந்திருக்கும் நீரையுடைய தடாகங்களில் பிறமும் உரிமைபெற்றிருக்கும் நெடிய இளவாளை மீன்களுக்குப்பிரதி உபகாரம்செய்வதுபோல் அந்தநீர்த்துறைகள்தோறும் செழித்திருக்கின்ற நெடியமரங்களையுடைய சோலைகள் கனிகளையும் செழுந்தேனையும்பொழியும்? குளிர்ச்சியானதளிர்கள் அடர்ந்து புதிதாகியமதுவை இடையறுமல் துளித்துக்கொண்டிருக்கும் நெருங்கிய மலர்க்கிளைகளையுடைய அழகியசோலைகளில் வண்டலாட்டு ஆடும் வாளாயுதம் அஞ்சும் நெடியகண்களையுடையமங்கையரது நெரித்துச்சுரிந்திருக்கும் கூந்தலாகிய மேகத்தைக்காணும்தோறும் அந்தமங்கையருடைய தளிர்போலும் சாயலுக்குத்தோல்வியடைந்து அடிமையாகி எதிரில்நின்று ஆடுவதைப்போல் கலாபத்தையுடைய அழகியமயில்கள் நடனமாடும்; தாவிவரும் பேரலைகளையுடைய தடாகங்கள் சுற்றுப்பக்கமெல்லாம் சூழக்கொண்டிருக்கும் வளமானசோலைகளின் கிளைகள்தோறும் இனிமையான நீராடவரும் மாதர்கள் முன்னுளில் நிறைத்துவைத்த பட்டுச்சேலைகளும் பொன் ஆபரணங்களும் அழகியநீரில் தோன்றியமாத்திரத்தில் அந்தநீரில்நீந்திவிளையாடும் வாலிபர்கள் அவைகளைநீரரமகளிர் என்றுபயந்து கைகுவிக்கவே அதைக்கண்டு அந்தநகரத்துப்பெண்கள் கரைமேல்நின்றுசிரிக்கப்பார்த்துவெட்கம் அடைவார்கள். வாசனையுடன்மலரும் சோலைகளில் செழுமையான அரும்புகள்கட்டு உடைந்துகுளிர்ந்திருக்கும்தேனைப்பொழிவதனுல், தண்ணீரில் அழுந்திப்போன தாமரைப்பூஞ்சயனத்தின்மேல் தங்கியிருந்த அன்னப்பட்சி மெள்ள மெள்ளமேல் ஓங்கிவருவதுபெரும்பாவத்தையும் அஞ்ஞானத்தையும் முரட்டுத்தனத்தையும் உடையசமணர்களால் சமுத்திரத்தில்கட்டிப் போடப்பட்டகல்லுடன் அமிழ்ந்தும் எங்கள் அப்பர்சுவாமிகள் ஸ்ரீபஞ்சாட்சரத்தின் அருளால்மேல் எழுந்துவிளங்குவதை ஒக்கும், பனைபோல் இருக்கும் தும்பிக்கையால் முறை முறையாகத்தண்ணீரைமொண்டு வாயில்வைத்து உண்டுநிறைந்திருக்கும் தடாகங்களைக்குறைந்திருக்கும் தடாகங்கள் ஆகச்செய்யும் வெண்பிறைபோல் நீ

ண்டதந்தங்களையுடைய களிற்றுயானையானது தன் மதசலப்பெருக்கத்தால் அந்தக்குறைந்திருக்கும் தடாகத்தை நிறைந்திருக்கும் தடாகம் ஆக்கும்தன்மையுடையதாம்; தாங்கள்வாசம்செய்யும் இடத்தைப்பகைவர்களுக்குக்கொடுத்துவிட்டு, அந்தப்பகைவர்கள் வாசம்செய்திருந்த இடங்களில் தங்கள்சுற்றத்துடன் வாசம்செய்யப் பரிவருத்தனை (மாற்றிக்கொள்ளுதல்) செய்யும் யானைகள்திரியும்வழிகள் எண்ணிறந்தவைகளாம். மழைநீரைத்தங்கள்மேற்பொழியும் மேகத்தினிடத்திற் செல்லும்படி கோபங்கொண்டு எதிர்த்து இறைப்பதுபோல் மதத்தையும் முறம்போல் தழைத்திருக்கும் காதுகளையும் உடையயுத்தயானைகள் நீண்டிருக்கும் தும்பிக்கைநிறைய நீரைமொண்டு ஆகாயத்தில்வீசும்; யானைகள்செல்லும்வீதிகள் உரல்போன்றகால்களின் சுவடுகள்என்னும் பொன்பாத்திரங்களில் நிறையவார்த்திருக்கும் மதசலத்தைச்செல்வர்கள் பொன்பாத்திரத்தில உள்ளபால்முதலியவைகளை உண்பதுபோல் சிறகுகளையுடையவண்டின்கூட்டங்கள்எல்லாம்தெவிட்டிப்போகும்படி உண்டுவாழ்ந்து முழங்கும்பெருவளமுடையன; கொடுக்கும் கொடைத்தொழிலால் கீழ்ப்பட்டிருக்கும் மேகங்களையெல்லாம் தடைப்படுத்திச்சிறையில் வைத்ததுபோல் அந்நகரத்தில்செல்லும்வேகமான நடையையும் முறம்போலும் இரண்டுசெவிகளையும் தொங்கும்வாயையும் உடைய யானைகளையெல்லாம் கட்டிவைக்கப்பட்டகூடங்கள் எண்ணிறந்தன; யானைகள்வாயால் உமிழும் நுரைகளும்பகைவர்களைப்பகைக்கும்கோபத்தையும் வேகத்தையுமுடைய குதிரைகள் உமிழும்வாய்நுரைகளும்பாய்ந்து சேருக்கும்தெருக்களில் எல்லாம் அந்நகரத்துப்பெண்களின்சிறிய அடிச்சுவடுகள் அழகுநிறைந்திருக்கும் செந்தாமரைமலர்களின் காட்சியைநிகர்க்கும்; சூழ்ந்திருக்கும் பிடரிமயிர்களைக் கொய்வதற்குரிய குதிரைக்காலடியின்சுவடுகள் தோறும் அந்தக்குதிரைகளின்மேல்கட்டிய கல்லணைகளிலிருந்து உதிர்ந்த மாணிக்கங்கள்பிரகாசிப்பனபலதீபங்களையுடையஅகல்களைப்பரப்பிவைத்ததுபோல் குவிந்திருக்கும்வீதிகளெல்லாம் விளங்கும் பெருவளம் உடையன. மல்லர்களையும் மயில்களையும் வானரங்களையும் சிறுமுயல்களையும் போர்செய்யும் பாணங்களையும் வல்லமையால்புறங்காட்டி ஓடச்செய்யும் மேலானநடைகளையும்பல இலக்கணங்களையும் உடையகுதிரைப்பந்திகள் பலவாம். மதயானையைத்தடுத்து ஒருமுயல்வெற்றி அடைந்தகதையைமறுபடியும் ஆரம்பிக்கத்தடித்தஇருளானது சூரியனைப்பிடித்து இழுத்துக்கனைக்கின்றது என்றுகண்டோர் எண்ணும்படிக்குக் கருநிறமுடையனவாகிய குதிரைக்கூட்டங்கள்பற்றிஇழுத்துக்கனைக்கும் செம்பொன்தேர்கள் எண்ணிறந்தனவாம்; மாணிக்கச்சோதியில்மறைந்து இழுத்துக்கொண்டுபோகின்ற குதிரைகளைக் காணாத

வர்களாய், இரதங்களைமாத்திரம்கண்டு சூரன்ஏறிநடத்தும் அழகிய இந்திரசாலத்தேரோ என்றுசந்தேகம் அடையவீதிகளில் அதிக அழகுடன்செல்லும்தேர்கள் எண்ணிறந்தனவாம். வலசாரி இடசாரிமுதலான நான்குவகைநிலைகளால் கற்றுக்கொள்ளும் அச்சம் தரும் வில் வேல் வளை பலகைவாள்கற்கும் விஞ்சையர்கள் தங்கள் ஆண்மையை அழகியவானத்தில் வாசம்செய்யும் விஞ்சையர்கள்பார்த்து ஆச்சரியப்படத்தக்க மேன்மையுடையவர்களாம். கிம்புரிகள் யானைக்கழுத்திலிடும் கயிறுகள் கேடகங்கள், தேர்கள் செம்பொன்னால் செய்யப்பட்ட குதிரைக்கலனைகள் நெடுஞ்சட்டைகள்கொடிய ஆயுதங்கள்முதலான மற்றவைகளையும் வேறு வேறாகச் செய்யநிறைந்திருக்கும் கருமார் கம்மாளர் முதலானவர்கள்வாழும் இடங்கள் அனேகமாம், நடைமலையாகிய யானைமுதலானவைகள் உலாவும் அச்சம்தரும் ஆழமான அகழியால் சூழப்பட்டிருக்கும் சுற்றுப்பட்டணத்தின் சிறப்பாகிய இதைச்சொன்னோம். இனிச்சந்திரனைப்போல் வட்டமிட்டு அழகுவாய்ந்திருக்கும் நகங்களையும் மேகம்போன்ற கூந்தலையுமுடைய மாதர்கள்வாசம்செய்யும் நடுப்பட்டணத்தின் சிறப்புச்சொல்லலுற்றோம்.

குடம்போல் பருத்திருக்கும் பயோதரங்களுக்கு நிகர்என்று சொல்லும்குரும்பை மேற்கோபங்கொண்டு, மாதர்கள் செம்பொற்சுண்ணம் இடிக்கும் உலக்கைகளால் அடிக்க, அந்த உலக்கைகள் மேலேபோய் அடித்துத்திரும்புவதற்குமுன் அவர்கள் நடுங்கும்படி தலைகளின்மேல் தாக்கிச்சிந்தும் தேங்காய்களையுடைய தென்னமரங்கள் இவ்வுலகத்தில் இடர்செய்தவர்களுக்கு எதிராக இடர்செய்பவர்களைப்போல் ஆச்சரியமடைய எங்கும்ஓங்கும்; அழகியவளையல்கள் ஒலிக்கவும் கொங்கைகள் அசையவும் கூந்தல்குலையவும் உடம்பில் அணிந்திருக்கும் ஆபரணங்கள் கல்கலவென்னவும் வியர்வைஉண்டாகவும் சுவாசம் நீளவும்பரிசுத்தமாக அழகு பெறக்கட்டிய பந்துவீசி விளையாடும் மாதர்கள் ஆட்டத்தைக்காணுந்தோறும் காலில்இறுக்கிக்கட்டிய வீரகண்டையுடைய வீரர்களுக்குக்காமம் அதிகரிக்கும்; தங்களுடைய மேனியில் உள்ளமாற்றுயர்ந்த பொன்னிறத்தைக் கவர்ந்து கொள்ளும் செருக்கைஅறிந்து, தண்டிப்பவர்களைப் போல் இடிக்கப்பட்ட செம்பொற்சுண்ணத்தை ஒருவர்மேல் ஒருவர்வீச அந்தச்செம்பொற் சுண்ணம் எங்கும் படர்ந்து தவழ்தலால் பெரிய தேரோடும் தெருக்கள் பொன்னுலகத்தை அவமதித்துச் சிரிக்கும்; மாணிக்கங்கள் சோதி வீசுவதனால் ஒரு போதும் இருள்வந்து அணுகப் பெறாத உப்பரிகைகளின் மேல்வசிக்கும் மாதர்கள் தங்கள் கூந்தலுக்கு ஊட்டும் அகிற்புகையானது ஆகாயத்திற் சென்று மூடிக்கொள்ளும் இருளைஉண்டாக்க அதைப்பார்த்

தவர்கள்ஏனோ? உலகங்கள் கீழ்மேலாயினஎன்று மனம் மயங்குவார்கள். தன்சக்களத்தியாகிய பார்வதிதேவி பூசைசெய்து வரம்பெற்றுக்கொண்ட முறைமையைக் கேட்டுப் பெருமைபொருந்திய கங்காதேவியும் திருவேக ம்பரிடத்தில் வரம் பெற்றுக்கொள்வதற்கு வந்து ஒருவராலும் சொல்ல ஒ ண்ணாத சிறப்புவாய்ந்திருக்கும் காஞ்சிமாநகரத்தைப் பிரதட்சிணம் செய் யும் தன்மையுடையது ஆனவலிமைமிக்க அகழியின் ஆழமும் அகலமும் அளவிட்டுச் சொல்லவல்லவர்யார்? வண்டுகள் முழங்கும் சோலைகள் சூழக் கூட்டமான அலைகள் என்னும் கைகளால் விசாலமான செம்பொன் மதில் மறைந்துபோகத் தழுவிக்கொண்டிருக்கும் குளிர்ச்சியான அகழியானது பூர்வம் திருவேகம்பர் கம்பைநதியைத்தூதாக ஏவியதுபோல் ஏவவந்து எழுகடல்கள் சூழ்ந்து கொள்ளப்பார்த்து அந்தத் திருவேகம்பரை இறுகத் தழுவிக்கொண்ட நவரத்தினங்களைப் பூஷணமாகக் கொண்டிருக்கும் கங் காதேவியை நிகர்க்கும்; இவலைகள் திருவேகம்பருடைய திருமேனியில் வி ளங்கும் தழும்புகளை நிகர்க்கும். அலைகள் எடுத்தெறியும் முத்துகள் ஒருபக் கத்தில் திரண்டு மாசில்லாத கிரணங்களைவீசி, முழங்கும் நீரில் குளிக்கும் யானைக்கூட்டத்தை வெள்ளையானை ஆக்கிவிடக்கரைமேல் இருந்து பார்க் கின்றவர்கள் இந்தத்தீர்த்தம் இம்மையிலேயே தெய்வத்தன்மையைக் குற் றமறக்கொடுக்கின்றது இதுஎன்ன? என்றுஆச்சரியம் அடைவார்கள். திரு ப்பாற் கடலைக்கடைந்து அமுதம் உண்ணத்தொடங்கிய நாளில்மந்தரகிரி யை நாட்டித்தேவர்களும் அசுரர்களும் இருபக்கத்திலும் இருந்துகடைதல் போல், மதமயக்கம்பொருந்திய யானை ஆழமான அகழியைக்கலக்கிச் சுழலமிட அதுகரைமேல் ஏறுவதற்கு ஆரவாரம்செய்து, அதன்காலில் கட்டியிருக்கும் சங்கிலிகளைப் பிடித்துக்கொண்டு யானைப்பாகர்கள் இர ண்டுபக்கத்திலும் இருந்துஇழுப்பார்கள்; நவமணிகளைத்திரட்டிக்கொண் டு பெருகும் குளிர்ச்சியான அலைகளையுடைய அகழியின்நடுவில், கவளத் தை வாங்கிக்கொள்ளும் பெரியமதயானைக் கூட்டங்கள் சுழன்று கலக்கும் காட்சியானது இது உப்புத்தன்மையில்லாத சுத்தசலசமுத்திரம் என்று மேகங்கள் மகிழ்ந்துவந்து தெண்ணீர்வற்ற வாய்வைத்து உறிஞ்சச் சு ழலும் தோற்றத்தை நிகர்க்கும், இத்தன்மையான அகழி என்னும் இது வும் ஒரு கடலாயிருக்க, அதனோடு கடல் எட்டு என்னமல் ஏழு என்று அ றிவிற்சிறந்த பெரியோர்கள் சொல்வார்கள். தவழும் அலைகளையுடைய கட ல்களுக்கு இறுதியில் சூழ்ந்திருக்கும் கடலும் இதுவும் நிச்சயமாகவே சுத்த சலக்கடலென்று எண்ணியே ஒற்றைப்படையில் சேர்த்தார்கள்போலும், சுற்றுப்பக்கங்களில் வளர்ந்தோங்கும் பூஞ்சோலைகளில் பெருகும் தேனும் நீர்மலர்களின் தேனும் பரவி ரிஷபவாகனராகிய திருவேகம்பருக்குப் பார்

வதிதேவியார் அபிஷேகம் செய்யவரும் தேன்கடலைநிகர்க்கும். குடம்போல் பருத்திருக்கும் மடியையுடைய எருமை நாகுகள்விழுந்து சுழலப் பெருகிய பாலால் பிளவுபட்டிருக்கும் அலைகளையுடைய அகழியானது அந்தத் தேன்கடலுடன் பாற்கடலும் வந்ததை நிகர்க்கும், பழம் முதலான பண்டங்களை விற்கும் மாதர்கள் நாள்தோறும் அந்திப்பொழுதில் அந்தப்பண்டங்களைத் தாங்கிய கூடை முதலானவைகளைக் கழுவிய வண்டலால் நீர்வளமுள்ள அகழியானது வந்தனை வழிபாடுசெய்த பார்வதிதேவியார் எங்கள் பிதாவாகிய திருவேகம்பருக்கு அபிஷேகம்செய்த நிர்மாலியங்களில் சிறிதும் கழியாமல் சூழ்ந்து நிறைந்து இருந்ததை நிகர்க்கும். அகழித்தெண்ணீரானது பச்சிலையாகிய கவசம் போர்த்துக்கொண்டு பகைவரோடு பகைத்துத் தானும் சண்டைசெய்ய, அந்தப்பகைவர்கள் பாணங்கள் தைத்த துவாரங்கள்தோறும் ஒளிவிளங்க உண்டாகிய உதிரம் என்று சொல்லும்படி மொய்க்கும் வண்டுகள் அந்த உதிரத்தில் ஈக்களைப்போல் முழங்கவும் மலரும் செந்தாமரைகளால் நிறைந்திருக்கும்; அலங்காரமான செந்தாமரைமலர் அழகு ஒன்றையைநோக்கி (ஆபத்தைநோக்காமல்) அகழியில் இறங்குகின்றவர்களும் தாசிகளுடைய அழகைப்பார்த்து ஆசைகொண்டு அவர்கள் வசத்தில் அகப்பட்டுக்கொண்டவர்களும் தம்மில் ஒப்பாவார்கள்; நீர்நிறைந்திருக்கும் அதன் உள்ளாழத்தைநோக்கித் தூரமாய் விலகிப்போகின்றவர்களும் அந்தத் தாசிகளால்வரும் பிணிகளையும் இவ்வளவு ஆழமுள்ளதென்று ஒருவராலும் அறியப்படாத அவர்கள் உள் எண்ணத்தையும் நோக்கிப்பயந்து அவர்கள் இருக்கும் இடம்விட்டுப் பெயர்ந்துபோகின்றவர்களும் தம்மில் ஒப்பாவார்கள்; கம்பைநதியைத் தடுத்தபின்பு திருவேகம்பர் அழைத்தமாத்திரத்தில் ஏழுகடல்களும் நெருங்கி முழங்கி ஒருமிக்கவந்து சூழ்ந்துகொண்டதை அறிந்து கங்காதேவியானவள் அண்டச்சுவர்வரையிலும் உண்டாக்கிய பெரிய தடைபோல் மணம்வீசும் மலர்களையுடைய அகழியைச் சூழ்ந்திருக்கும் வளமானமதில் ஆகாயத்தை அளாவஓங்கும். செல்வப்பெருக்கினால் செருக்கடைந்திருக்கும் தேவலோகத்தையும் நாகலோகத்தையும்பார்த்துப் பெருங்கோபம்கொண்ட காஞ்சிமாநகரம் ஆனது அவற்றின் ஆண்மையை அழிக்க எண்ணி முந்திச்சென்று வளைத்துக்கொள்ள ஏவி யுத்தத்திற்குப் புறப்பட்டாற்போல் வாசனைவீசும் அகழியும் மதிலும் அதிசயப்படத்தக்க வளமுடையனவாம். அகழியின் அடியைக் காணக்கூடியது பூர்வம் அக்கினிமயமாய்க் கீழும் மேலும் வளர்ந்தோங்கிய சிவபெருமானுடைய திருவடியில் மலராகச் சாத்தப்பட்ட விஷ்ணுவின் கண்ணேயாம்.

விசாலமான மதிலின்பெரிய முடியைக்காணக் கூடியதும் அந்தச்சிவபெருமானுடைய சடைமுடியை இடமாகக் கொண்டிருக்கும் வெண்டலையே அல்லாமல் வேறுகாண வல்லவர்யாவர்? ஒருவருமில்லை ; கச்சித்திருவேகம்பருடைய திருமுடியையும் திருவடிகளையும் காண்பதற்குப் பூர்வம் அன்னமாய் ஆகாயத்திற்பறந்தும் வராகமாய்ப் பூமியைப்பெயர்த்தும் மூர்ச்சையாய்விட்ட பிரமவிஷ்ணுக்கள் அந்தநாள் மேலும் கீழும் சென்ற எல்லைகளை நிச்சயப்படுத்தும்படி அதுவரையில் செல்லவைக்கப்பட்ட நெடியஅடையாளங்களே பார்க்கின்றவர்களுக்கு மதிலும் அகழியுமாகவிளங்கும். சார்ந்திருக்கும் மதிலில் உள்ளயந்திரங்கள் எல்லாம் தங்கள் இருப்பிடமான மதிலை இடித்துப்பெயர்த்து எறிந்து நீர்வளமுள்ள அகழியில் முழுங்கியெழுந்து தாவும்வாளைமீன்களை மறுபடியும் வராதபடி அடுத்துவிக்குள் எடுக்க உண்டுதெவிட்டி ஆகாயத்தில் உள்ளமீன்களையும் (நட்சத்திரங்களையும்) தடுத்துவெற்றியடைய உயர்ந்திருக்கின்றன; தேகத்தைஉண்டாக்கி நடத்துவதற்கு ஓர் நிமித்தகாரணன் உண்டென்று கண்டு தெளியத்தச்சர்களால் மிக்கபலமுடையதாகச் செய்யப்படும் தொடர்ச்சியுள்ள யந்திரங்கள் எல்லாம் கிறு கிறு வென்று சுழன்று எழுந்திருக்கும். விழும் பகைவருடைய பராக்கிரமம் அழியமுழங்கும். ஓடும். திரும்பும். இத்தன்மையுடையனவாம். இந்தமதிலில் உள்ள யந்திரங்கள் எல்லாம்தம்மை எதிர்த்தவர்களைக்கொன்று க்ஷணப்பொழுதில் வெற்றி அடையும். இந்த அறிந்துபகைவர்களே ! இங்கேவாராதேயுங்கள் என்று கை எடுத்து அசைத்துக்காட்டுவதுபோல் அந்த மதிலின்சிகரத்தில் உள்ள செம்பவளக்கொடிகள் அசையும், வளம் என்னும் ஒருபுருஷன் திருநகரம் என்னும் மங்கையினுடைய நிறம்பொருந்திய இளங்கொங்கையின் போகத்தை அனுபவிக்க மேகம் என்னும் கருந்திரைச்சீலையைச் சேர்த்து அசைவற்றிருக்கநாட்டிய கம்பம்போல் விளங்கும் மதிலிடங்கள்தோறும் கொடிச்சீலைகள் அடர்ந்திருக்கும். சக்கரவாளம் என்னும்பெரிய மலைமேல் தழைத்துநீண்டிருக்கும் மூங்கில்களாம் என்றுசொல்லும்படி கொடிமரங்கள் நெருங்கியிருக்கும் செம்பொன்மதிலின்மேல் உள்ள கோபுரங்கள் அதற்கு அப்பாலும் செல்லுவதனால் இனியாம்எடுத்துசொல்வதற்கு உபமானம் ஒன்று இல்லை. மிலேச்சர்கள் மகதநாட்டில்வந்து இடர்செய்வதுபோல் காஞ்சி மாநகரத்திலும்வந்து. ஒப்பில்லா தோங்கவளர்க்கும் முப்பத்திரண்டுதருமங்களுக்கும் இடர்செய்யாதிருக்கும்படி அதிரூபசுந்தரியான பார்வதிதேவியார்வைத்ததடைபோல் விளங்கும்மதிலின் சிறப்பெல்லாம் குற்றமறச் சொல்லப்போனால், எல்லாவற்றையும் சொல்லவல்ல புலவர்களுக்கும் முடியமாட்டாது. புறத்தில் நெருங்கி இருக்கும் ஊர்கள் எல்லாம் விண்

ணவர் நகரமாகிய அமராபதியாகவும் அவ்விடத்தின் அருகிலிருக்கும் நகரங்கள் எல்லாம் பிரமதேவனுடைய நகரமாகவும் நடுவில் உள்ள நகரங்கள் எல்லாம் திருமகள்நாயகனாகிய விஷ்ணுவின் நகரமாகவும் அவைகளுக்கெல்லாம் நடுநாயகமாய்விளங்கும் சிவபுரமாகி ஒழுக்கத்திற்சிறிதும்தவறுதல் இல்லாத கீர்த்திபடைத்தோங்கும் உள் நகரத்தின் சிறப்புச் சொல்லுகின்றோம்.

ஆசையை அதிகரிக்கச்செய்யும் மதனசாஸ்திரமுறையால் ஆண்பாலாரோடு கலந்து களிக்கும் மாளிகைக்குள்ளே தாங்கள்செய்யும் லீலாவினோதங்களை எல்லாம் கண்டுதெளியும்படி அந்தமாளிகைகள் தோறும் சித்திரமாக எழுதிவைத்துக் காண்பித்து வாலிபர்களை மயக்கிக் காமம் தலைக்கேறச்செய்யும் பரத்தையர் வீதிகள் நிறைந்திருக்கும்; வரிகளையுடைய வண்டுகள் முழங்காதவைகளாய், வாடாமாலையுடையவைகளாய் இமைத்தல் இல்லாத கண்களையுடையவைகளாய்ப் பூமியிற்படியாத பாதங்களையுடையவைகளாய்ச் சித்திரங்கள் விளங்கும் காட்சியானது மணம்செய்துகொள்வதற்குரியராகாத இந்தத்தாசிகளுடைய மேலானபோகத்தை விரும்பிவானத்தில் வாசம்செய்யும் தேவர்களும்வந்து உள்ளேபிரவேசிக்கத்தக்க சமயம்பார்த்துக்கொண்டு அங்கே வாசம்செய்வதை நிகர்க்கும் பூத்துநீராடியபின் பன்னிரண்டுநாளும் (கருவயிற்றில் தரிக்கும்காலம் என்று) உரியபத்தினிகளைப்புணர்ந்து, தங்களை நீக்கிவிட்டார்கள் என்னும் கோபத்தால் தங்களைத்துதிசெய்யும் காமுகர்களைத் தங்கள் இளமுலையென்னும் மலைக்கோட்டைமேல்எற்றி, அவர்களுடைய பெருஞ்செல்வங்களை எல்லாம் பகுத்துப்பறித்துக் கொள்ளையடிப்பார்கள்? அழகினாலும் சங்கீதத்தினாலும் புதுமையான ஆட்டத்தினாலும் அபிநயனத்தினாலும் நடத்தையினாலும் சரசசல்லாப லீலைகளினாலும் மற்றும் பலவகையாலும் உலகத்தில் உள்ள வாலிபர்களைமயக்கி உள்ளபொருள்களை எல்லாம் அபகரித்துக்கொண்டு இரசம்பிழிந்து எறியப்பட்ட கரும்பின்சக்கைபோல்கழிந்துபோய்விட நீக்கிவிடுவார்கள், தருமங்கள்எல்லாம் குடிகொண்டிருக்கும் காஞ்சிமாநகரத்தில் பெருஞ்செல்வர்கள்ஆயும் தங்கள் சாதிமுறையின்சார்பினால் கொடியநோயால் வருந்துகிறவர்கள், சாதியில் தாழ்ந்தவர்கள் ஆனாலும் கொடுக்கும் சிலபொருளையும் வாங்கிக்கொண்டு அவர்களைப்புணர்ந்து பொய்வஞ்சனைமுதலிய துர்க்குணங்களையெல்லாம் நிலையாகஅடைத்து வைத்திருக்கும் மனமுடையவர்களாகி வாழ்வார்கள், அலைபோல்பிறழும் கண்களையுடையநாட்டியப்பெண்கள் ஆண்மக்களுக்கு மடித்துக்கொடுக்கும் வெற்றிலைக்குநிகர்என்று சொல்லும்படியான சிற்றின்பத்திற்குச் சமமாகச் சி

ற்றின்பத்தையும் பெற்றுக்கொண்டு அவர்கள் அநுபவித்த சிற்றின்பத்திற்குவிலையாய்அதிகமாகப் பொருளையும் வாங்கிக்கொள்வது ஒருஅதிசயமோ? மலைக்கு ஒப்பான தனங்களை (முலைகளை) க்கொடுத்தவர்கள் அந்த மலைக்கு ஒப்பான தனங்களையும் (செல்வங்களையும்) வாங்குவார்கள்.

தவங்களையெல்லாம் எடுத்துரைக்கும் வேதங்களை யுணர்ந்த பிரமன், விஷ்ணு, உருத்திரன் என்ற இவர்களும் இந்தக் காஞ்சிமாநகரத்தில் கண்டோர்மனதைக்கவர்ந்துகொள்ளும் தாசிகளுடைய கண்வலையில் அகப்பட்டே இந்த நாளிலும் விளங்கும் அலரோன் (பழி தூற்றப் பட்டவன், தாமரைப்பூவில் வசிப்பவன்) மாலோன் ( மயக்கமுள்ளவன், கருநிறமுள்ளவன் ) பித்தன் ( பயித்தியக்காரன், சிவன் ) என்னும் பொருள்அமைந்திருக்கும் இந்தப்பெயர் பெற்றார்கள் என்றால், சிவசிவ இந்தத்தாசிகள் வலையில் சிக்கிக்கொள்ளாதவர்களும் உண்டோ திரிலோகத்திலும் இல்லை, நாடிவந்தவர்களுக்கு விற்றுவிட்ட அல்குலை மறுபடியும் தம்முடையதாக்கிக்கொண்டு மற்றநாளிலும் விலைகொடுப்பவர்களுக்குவிற்கும் பரத்தையர் வீதியானது தான்பற்றிஇருக்கும் முத்துமணிமாலையால், இப்படிவிற்கக்கற்றுக்கொள்ளாதவைசியருடைய கடைஅழகைப்பார்த்துப் பழித்துச்சிரித்துக்கொண்டிருக்கும், பெரியவர்த்தகத்தில் கூர்மையானபுத்தி உடையவர்களும்கண்டு ஆச்சரியம்அடையக் கண்ணுக்குப்புலப்படாமல் அருவமாயிருக்கும் போகத்தை இம்மிஅளவும் ஏறவிடாமல் உருவமாயிருக்கும், பொருள்அளவுக்குத்தக்கபடிநிறுத்துவிற்றுச் சீவனம்செய்யவல்ல தாசிகள் தம்மில் தருக்கடைந்துவாழும்வீதியின் சிறப்பு இதுவாகும் (இருமனம் என்பது (ஒருவனேடு புணர்தலும் புணராமையும் ஒரேகாலத்தில் கொண்டிருக்கும் மனம்.)

## வைசியர்வீதி.

இன்னபொருள் இங்கே உண்டோ? என்று கேட்டமாத்திரத்தில், அவர்களுக்கு அந்தப்பொருள் இங்கே உண்டு இல்லை என்று விடைகொடுத்தலும் அறியப்படாமல் யாரும்தங்களுக்கு வேண்டும் எந்தப்பொருளையும் கொடுங்கள் என்றுவிலைகொடுத்துக்கேட்கக் கொடுப்பதற்கு நிலைத்து எவ்வகைப்பொருளும் எந்நாளும் மலிந்திருக்கும்கடைகள் அனந்தம்; ஆன்மாக்கள் செய்தகர்மங்களை எல்லாம் தன்னிடத்தில் சேர்த்துவைத்துக் கொண்டுபின்புசிவாக்கினையால் அந்தக்கர்மங்களை அந்த ஆன்மாக்களுக்குப்பகுத்துக்கொடுக்கும் மாயையைப்போல் செம்பொன்மாளிகைகள் வரும்பொருள்களையெல்லாம் தம்மிடத்திற் சேர்த்துக்கொண்டு பின்புவைசியர்கள் பகு

ட்மாற்றுச்செய்யக் கடல்சூழ்ந்த உலகத்தில் எல்லாருக்கும்பகிர்ந்துகொடுக்
கும்;தெய்வப்பெண்போல்அழகுவாய்ந்திருக்கும்மாதர்கள் தங்கள்கைமேல்
புர்ப்பி மார்பின்மேல்சாத்திவிற்கும் கோங்குப்பூமாலைகளின் இடைவெளி
யில்அந்தமார்பின்மேல்விளங்கும்தேமலைப்பார்த்து, வேங்கைமலர்என்றுப
யந்துவண்டுகள் அணுகாமலிருப்பதைக்கண்டு, ஆண்பாலார்மதிமயங்கிப் பா
ம்பின்படம்போல்விளங்கும்அல்குலையுடையபாவையர்களே? நீங்கள்விற்
கும்பொன்மலர்வாசனைவீசும்காரணம்என்ன? என்றுகேட்பார்கள், தரைமே
ல்விழுந்தபொருளைக்குனிந்துஎடுக்கமுடியாதபடிமிக்கசனம்நெருங்கியிருக்
கும்கடைத்தெருவில்நீண்டிருக்கும் கூந்தலையுடையமாதர்களும் வாலிபர்க
ளும்தங்களில் இடிபடும்போதுமுத்துமாலையணிந்திருக்கும் முலைகளும்தோ
ள்களும் தம்மில்கலத்தலால் பெருமகிழ்ச்சி அடைந்துவாழ்கின்றவர்களு
ம் சிலர், பலர்வாடிமெலிந்து வருந்துவார்கள்? எள்ளுவிழ இடமில்லாமல்
நெருங்கியிருக்கும் பலசனங்களின் முழக்கம் நீங்கப்பெறாத கடைத்தெரு
வானது திருவேகம்பர்மேல் பேரொலி காட்டிவந்த நீலநிறமுள்ள விஷத்
தைநிகர்க்கும், பெருந்தெருவுகளில் நான்குப்பக்கங்களிலும் இருந்துபெருகி
வந்து சனங்கள் மிகவும்சேர்வது விசாலமாகப்பரவியிருக்கும் அந்தக்கடலி
ல்பலநதிகள்வந்து சேர்வதைஒக்கும், பலதருமங்களால் மிகுந்திருக்கும்கா
ஞ்சிமாநகரத்தில் புவனைசக்கரம்போல் சிறந்தவலிமைபெற்றோங்கும் எழு
சுற்றுமதில்களை உடைத்தாயிருக்கின்ற ஞானமயமான திருவேகம்பர் சிறந்
துவீற்றிருக்கும் திருக்கோயிலின்மேல் தேவர்கள்கண்திருஷ்டி உண்டாகா
தபடிமறைத்துவைத்ததுபோல் அதன்புறத்தில் உள்ளவீதிகள் எங்கும்மே
கமண்டலத்தைத அளாவியபூப்பந்தல்கள் நிறைந்திருக்கும்? செம்பொன்னு
லாகியமகரகுண்டலம் அணிந்திருக்கும் திருவேகம்பருடைய திருமணிக்
கோயிலைச் சூழ்ந்திருக்கும் மதில் குறடும் திருநகரத்தின் மதிலோடு சுற்று
மாளிகைக்கூட்டங்கள் சக்கரத்தின் இலைகளும்விளங்கும்படி சூழ்ந்திருக்கு
ம்தெருக்கள் அந்தஇலைகளின் இடைவெளியுமாய் எம்பெருமானுடைய அ
லங்காரத் தேர்ச்சக்கரத்தின் அழகையுடைய மற்றொரு தேர்ச்சக்கரத்தை
நிகர்க்கும்? (மற்றொருதேர்ச்சக்கரம்பூமித்தேர்ச்சக்கரம் அதாவதுசூரியன்)
சஞ்சரிக்கும் யானைகளின் மதங்களால் ஆகியபெருவெள்ளமும் முல்லைஅ
ரும்பைப்பழிக்கும் பல்லையுடைய மாதர்கள் களைந்தெறிந்த பூமாலைகளில்
பெருகும் தேனும் சேருகப்பரப்பும் வீதியில் கால்சறுக்காதபடி அந்நகர
த்தில் வாழ்கின்றவர்கள் சூரியகாந்திவீசும் மாணிக்கக்கல்லுகளைப் பதித்து
அதன்மேல் நடப்பார்கள். உதாரகுணமுள்ள அரசர்கள் செலுத்தும் தே
ர்ச் சக்கரங்கள் செல்லும் வழிகள் வீதிகளின் பக்கங்களில் வாசனையு
ள்ளநீர்வண்டல் ஆட்டுச்செய்யும் குழம்பான் சேறுகளை உலர்த்தும் பொ

ருட்டு இடைஇடையேபெயர்த்துப் பள்ளத்தோடு பல சிறுகால்வாய்களை
ஏற்படுத்தினாற்போல் விளங்கும்? பலமுள்ளதோள் அழகைத்திருடிக்கொ
ண்டதைஅறிந்து, கொடுமையுள்ள மனிதர்கள் கோபங்கொண்டு பலமு
றைஅடிக்க, ஐயவோஎன்று அலறுவனபோல் அழகுவாய்ந்திருக்கும் மத்
தளங்கள்கருநிறமுள்ள கடலும் வெட்கமடையும்படி இடங்கள்தோறும் மு
ழங்கும்? குதிரைவாய் நுரையும் பொன்னிறமான சந்தனத்தின் வாசனையு
ள்ளசெழுஞ்சேறும் கலந்துகிடக்கும் வீதியில் கால்சறுக்கும் என்றுபயந்
து வளைவாகிய சந்திரபிறையைச் சடைமேல்தரித்திருக்கும் திருவேகம்ப
ருடையதிருவிழாவைக்கண்டுதொழவந்துநெருங்கும் தேவேந்திராதி தேவ
ர்களுடையபாதங்கள் பூமிமேல்படியாதவிதமாய் நடப்பார்கள். இடைய
றாமல் முழங்கும் பேரிகைகளின் பேரொலிஅதிர்ச்சியால் உதிர்ந்த பெரி
யநட்சத்திரங்களைப்போல் சங்கிலியால் கட்டப்படும் பலமுள்ளயானைகள்
உலாவும் செம்பொன் சோதிவீசும் வீதிகளில் சூதர்மாகதர் முதலானவர்
கள் சூழ்ந்து புகழ்ந்து பேசப்போகின்ற அரசர்கள் நெருக்கத்தால் அவர்க
ள்அணிந்திருக்கும் ஆபரணங்களிலும் முடிகளிலும் இருந்து நிரசவஸ்துக
ளாகியபலமணிகள்தெறித்துவிழுந்துவிட்டுவிட்டுப் பிரகாசிக்கும்? அழகிய
இடத்தையுடையவீதிகளின் அலங்காரத்தைக்காணும்ஆசையுடன் எம்பெ
ருமானாகிய திருவேகம்பரும் திருவிழாஎன்னும் ஒருபெயர்வைத்துக்கொ
ண்டு, பார்வதிதேவியாரோடும் விநாயகமூர்த்தி சுப்பிரமண்ணியக்கடவுள்
என்னும் பிள்ளைகளோடும் தேவர்கள் எல்லாம் துதிசெய்ய மாசந்தோறு
ம்எழுந்தருள்வார்என்றால் அந்தவீதிகளின் வளப்பம் சிறியதாகுமோ? ஆகு
மாட்டாது. பாலிநதிமுதலான பலநதிகளின் திவலைகள் பாய்ந்து, அழகு
வாய்ந்திருக்கும் மாளிகைகளின் அடிவாரத்தைப்பார்த்துப் பால்போலும்
வெண்மையான சுண்ணம் தீற்றப்பட்டிருக்கும் அந்தமாளிகைகளின் சிக
ரங்களும் ஆகாயகங்கை நீர்த்திவலைகள் மூடிக்கொள்ள வானத்தில்செல்லு
ம்; பலநிறமுள்ள குதிரைகளும் கருநிறமுள்ள யானைகளும் அலங்கரிக்கப்
பட்டிருக்கும் பலதேர்களும் இவைபோல்வனவும் கீழ்நிலைவாயில் வழியா
ய்ப்போவதைப்பார்த்து, விளங்கும் மேல்நிலைவாயிலும் ஆகாயத்தில் உள்ள
வெள்ளையானை பச்சைக்குதிரைகள்பூண்டு இழுக்கும் சூரியனுடைய தேர்
அவைபோன்றமற்றவைகளும் தன்வழியால் செல்லும்படி வானத்திற்கல
க்கும், அலங்காரமாய் விளங்கும் கீழ்நிலைமாளிகைகளுக்கு அங்குள்ள மாத
ர்கள் அடுப்புகளில் மாட்டும்மணத்தால் விளங்கும் அகிற்புகையால் வாச
னையூட்டுவார்கள், கண்டோர்புலன்களைக்கவர்ந்துகொள்ளும் மேல்நிலைமாளி
கைகளுக்கும் அங்குள்ளமாதர்கள் வாரிமுடிக்கும் கூந்தலுக்கு ஊட்டும்வா
சனையால் விளங்கும் அகிற்புகையால் மணம் அடரச்சேர்ப்பார்கள், சினை

கம் செய்யப்பட்டவருடைய குணங்கள் அந்தச்சினேகம் செய்தவர்களுக்கும் உண்டாவதுஉலகத்தில் சகசம், அதுபோல் சூரியகாந்தம் சந்திரகாந்தம் என்னும் இரண்டுவகையானகல்லுகளால் இயற்றப்பட்டிருக்கும்மாளிகைகளில் சூரியகாந்த மாளிகையானது எப்பொருளையும் உருகச்செய்யும் சூரியகிரணங்கள்படிவதனால் எல்லாவற்றையும் சுட்டெரிக்கும் நெருப்பைஉமிழும். சந்திரகாந்தமாளிகையானது தன்அருகில் சந்திரகிரணங்கள்பாய்தலால் குளிர்ந்த நீரைக்கொடுக்கும். ஒழுங்கானகூந்தலையுடைய மாதர்கள், மேல்நிலைகளின் ஜன்னற் கதவுகளைத் திறந்தமாத்திரத்தில் அங்கே தடைபட்டிருந்த அகிற்புகையெல்லாம் திரண்டு வெளிப்படுவது பூர்வம் உக்கிரபாண்டியனுடைய சிறையில் அகப்பட்டிருந்த மேகங்கள் தங்களை மீளவிட்டநாளில் ஆகாயத்திற்கு விரைந்து போவதை ஒக்கும், ஆராய்ந்தெடுக்கப்பட்டபலரத்தினங்களால் இழைக்கப்பட்டிருக்கும் மாளிகையின்மேல்விளங்கும் செம்பொன் கலசத்தின்மேல் கிரணங்களைப் பரப்பும் சந்திரன்நின்று அசைவது குயவர்கள் சுழற்றிவிட்ட சக்கரம் என்னலாம். அந்தச்சந்திரனிடத்தில் உள்ள களங்கம் அந்தச்சக்கரம் தாங்கும் பச்சைமண்என்னலாம். சமுத்திரத்திலிருந்து மேலேபுறப்படும்வேளையிலும் அஸ்தமிக்கும்வேளையிலும் அல்லாமல் மற்றவேளைகளில் சூரியமண்டலத்தின் செவ்வொளிவிளங்காதஇயல்பானது, நிரவியிருக்கும் முத்துத்தோரணங்களில் உண்டாகும் செழுமையான கிரணங்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து ஆகாயம் எங்கும் வெள் ஒளிபரப்புவதனாலேயாம், சந்திரன் சிவந்தகிரணங்களையுடையவன்என்று சொல்வதேநிச்சயம்,அந்நகரத்தில் கட்டப்பட்டிருக்கும் முத்துத்தோரணங்களில் உண்டாகும் ஒளியில் சூரியனைப்போல்தங்கிவெண்கிரணமுடையவனானான். அதற்குத்தக்கசாட்சிஅந்தச்சந்திரன்பெருமைபொருந்திய காலையிலும் மாலையிலும் சிவந்துதோன்றுவதேயாம். தெய்வப்பெண்கள்போலும் அழகுடையமாதர்கள் நகைக்குந்தோறும் அங்கே அவர்கள் வளர்த்த கூட்டமாகிய முல்லைச்செடிகள் அரும்பெடுக்கும், அந்தமாதர்நகைப்பின் அழகை நாம் அவருடன் சினேகம்செய்து திருடிக்கொண்டு ஒளித்திருப்பதை அவர்கள் அறிந்து கொண்டார்கள் என்று அவர்களோடுதாங்களும் சிரிப்பதுபோல் மலரும். செம்பொன்னாலாகிய உப்பரிகைமேல் தெய்வப்பெண்கள்போலும் அழகுடையமாதர்கள், முறுக்காணிகளைக் கொண்டிருக்கும் ஒப்பில்லாதவீணையாற்பாடும் பாட்டிசைக்குவிண்ணுலகத்திலிருந்து மகிழ்ந்துவரும் வெள்ளையானையை, அந்தமாதர்கள் தங்களுடையசெந்தாமரைமலர்போலும் பாடகம்அணிந்திருக்கும் கால்நடையால் துன்பப்படுத்துவார்கள்.

பளிங்கினலாகிய உப்பரிகையின்மேல் வாசம்செய்யும் அந்தநகரத்துப்பெண்கள் தங்களுடைய பருத்தமுலைகள் அழுந்தமகிழும் புருஷர்களைத்த முவிக்கொண்டுமென்மதயுத்தமாகிய லீலைசெய்யும்திறத்தைக்கண்டு தன்குருவாகியவியாழபகவானுடைய பத்தினியானதாரைஎன்பவளை விரும்பிய சந்திரன்ஒருபக்கத்தில் ஒளித்திருந்து பார்ப்பவனைப் போலும் என்றுசொல்லநுழைவாயில்களில் நுழைவான். உப்பரிகையின்மேல் உலாவும் வெளியில் நித்திரைசெய்யும் மாதருடையமுகத்து அழகைத் திருடிக்கொண்டு போகும்சந்திரனை அவ்விடத்தில் அந்தமாதருடைய மணமலர்க்கூந்தலில் காத்திருக்கும்கருவண்டுகள் பின்தொடர்ந்து உதைக்க, இழிவடைந்த அந்தஉதைத்தழும்பே பெருங்களங்கமாகவிளங்கும், நான்குதலைகளையுடைய பிரமதேவன் இந்தநகரத்தில் உள்ளமாதருடைய முகத்து அழகைப்பார்த்துஒருவடிவம் உண்டாக்கி, அந்தவடிவத்தில் வாய்முதலிய அவயவங்களை உண்டாக்க நினைத்து; முந்திஅழகியகண்களை ஏற்படுத்தும்போது அந்தக் கண்களின்மேல் எழுதியமைகுலைந்துபோனதினுல், பழுதுபட்டதுஎன்று ஒழித்துவிடப்பட்ட அந்தவடிவத்தையே சந்திரன் என்பார்கள், இந்தமாதருடையமுகத்து அழகுக்கும்சமுத்திரம்போல்விசாலமான அல்குலுக்கும் தங்கள்வடிவமும் பெரியதேரும் ஒப்பாகாமல் இருப்பதைக்கண்டுமனதிற் கொண்டிருக்கும் பயத்தினுலேயே இந்தக்காஞ்சிமாநகரத்தில் சந்திரனும்சூரியனும் நேர்வழியிற்செல்லாமல் ஒருபக்கமாய் ஒதுங்கிப்போகின்றனபோலும்; உயர்வாகிய மாளிகைகளின்மேல் மின்னற்கொடிபோல் உலாவும் மாதர்கள் தங்களுடைய ஒளிபொருந்திய முகத்தைச் சந்திரன் என்று தாவிப்பிடிக்கவரும் பாம்புக்குத் தங்கள்முகத்திற்கும் சந்திரனுக்கும் வித்தியாசம்தோன்றும்படி சந்திரனிடத்தில் ஒரு அடையாளம்வைத்தார்கள் அதுவே அழகிய இடத்தையுடைய பூலோகத்தாரால்களங்கம் என்றுசொல்லப்படும்; எதனுலும் மறையாதகளங்கத்தோடுவசிக்கும் சந்திரன் அந்த நகரத்தில்வசிக்கும் மாதருடைய முகத்தழகைப்பெறுமல் அவர்களுடைய வளைவான புருவத்தைப்போல்வளைந்து குறைந்தும்பார்ப்பான். மறுபடியும் அவர்கள்முகத்திற்கு நிகராககிறைந்தும் பார்ப்பான் எப்படிப்பார்த்தும் முடியாமையால் ஒருகரையில் தன் இளங்கன்றுநிற்க மற்றொருகரையில் நின்று பரிதபிக்கும் பசுவைப்போல் இப்படியே கணிதநூற்புலவர்களால் சொல்லப்பட்டமாசந்தோறும் மனங்கலங்குவான்; நவரத்தின ஒளிவீசும் மாளிகைகளின்மேல் மூங்கில்போலும் தோள்களையுடையமாதர்கள் ஊடல்தீர்ந்துபுணரும் புணர்ச்சியின்முடிவில் தங்கள்கணவருடையமார்பின்மேல் முகத்தைப்பதியவைத்துக்கொண்டு தூங்குவார்கள். அப்படித்தூங்குவதுசந்திரன் சமயம்பார்த்திருந்து தங்கள்புதியமுகத்தின் அழகைத்திருடா

மல் இருக்கும்பொருட்டேயாம்; தாங்கள்செய்தகொடியவினைகள் தங்களுக்கேபகையாகும். அதுபோல் மாதர்கள் ஊடல்பெருக்கத்தால் பறித்தெறிந்த செவ்வொளிமிகுந்திருக்கும் பலரத்தினங்கள் அவர்களுடையபாதங்கள் வருந்திநைந்து துன்பமடையக்கவலைப்படுத்தி அவ்விடத்தில் எந்நாளும் பிரகாசித்துக்கொண்டிருக்கும்; எந்நாளும் இடையறாமல்வந்துகொண்டே இருக்கும் விருந்தினர்களை எதிர்கொண்டு உபசரிக்கும்மேன்மையாலும் அரும்பொருள்போலும் சிறுகுமாரர்கள்சூழ்ந்து அணுகும்தன்மையாலும் அவ்வூரில் இறகின்அடிபோன்றதந்தங்களையுடையமாதர்களுக்குத்தங்கள் கணவரிடத்தில்உண்டாகும் அமுதம்போல் சுவைபெருகும் ஊடலும்சற்றுநேரமே அல்லாமல்மெத்தநேரம் இராது, உப்பரிகைகளின்மேல்வந்து உலாவும்தெய்வப்பெண்கள் கீழ்நிலத்தில் உள்ளகேணிகளில் (தங்கள்சாயலைப்பார்த்து) நம்மைப்போல் (உலாவும்படி) நாகலோகக்கன்னிகைகளும்வந்தார்கள். ஆதலின் இந்தக்கேணிகள்கலந்து செல்லும்முறையுடன் நிலைத்திருக்கும் பலபிலங்களாம் என்று ஆச்சரியப்படுவார்கள்; காலம்அல்லாதகாலத்தில் கனியும்படி மாதுளங்காய்களுக்குத் தகுதியாகப் பெரும்புகை ஏற்றுவதுபோல், மின்னற்கொடிபோன்ற மாதர்கள் தங்களுடைய பருத்திருக்கும் பயோதரங்களின்மேல் மிகுதியாகப்பூசிய சந்தனத்தை உலர்த்தும் அகிற்கட்டையின் நீலநிறப்புகைகள் எங்கும் படர்ந்தோங்கும் பெருமைபொருந்திய நெடியகூந்தலுக்கு ஊட்டும் அழகியபுகை அந்த மாதர்களை மறைத்துக்கொள்வது அந்த மாதர்களைத் தன்னிடத்தில் இருந்து நீங்கிய மின்னல்என்றுஎண்ணிக் குளிர்ச்சியான மேகம்வந்து சூழ்ந்துகொள்வதைஒக்கும்; மலர்மாலை யணிந்திருக்கும் கூந்தலையுடைய மாதர்கள் தாங்கள்பராக்கிரமசாலியான மன்மதனுடைய சேனையென்று தெரிவிப்பதுபோல் இரவிக்கைதரிக்கும்படியான பயோதரங்களின்மேல் அழகு கொண்டிருக்கும் சந்தனக்கோலத்தில் மலர்க்கணை தொடுக்கும் கரும்புவில்லை ஏந்திக்கொண்டிருப்பார்கள். வாசனைவீசும் இதழ்களையுடைய இரண்டு செந்தாமரை மலர்களின்மேல் மாறிமாறிவிழும் வண்டின்கூட்டம் என்று சொல்லும்படி யர்வராலும் புகழ்ந்துபேசப்படும் மாதர்கள் கூட்டமாய்க்கூடியிருந்து செங்கையால் மாறிமாறி நீலரத்தினங்களால் இழைக்கப்பட்ட அம்மானைகளை எறிந்து ஆடும்ஆட்டத்தின் பெருமைபொருந்திய பாட்டின் ஓசைஎங்கும்பரவும், தங்களுடைய பண்போன்ற மொழிக்கு நிகராகும் தன்மையை அவ்விடத்தில் பரிட்சைசெய்து பார்ப்பவர்களைப்போல எங்கும் எண்ணிறந்தமாதர்கள் தங்கள் அழகிய மலர்போலும் செங்கையில் உள்ள மெல்லிய விரல்களைச்சேர்த்துத் தந்திகள் யாட்டப்பட்டிருக்கும் வீணைகளை எடுத்து மீட்டிப்பாடுவார்கள்.

தங்கள் ஸ்தனங்களுக்குமுன்னேவர வெட்கம் அடைந்தாற்போல் பெருஞ்சோதிவீசும் தாளங்கள் பின்னின்று சத்திக்க, நாகணவாய்ப் பறவைபோல் நயமாக வசனிக்கும் மாதர்கள் நன்மைமிக்க சதிமுறைதவறாமல் ஆடும் நடனசாலைகளில் எங்கும் அவர்கள்காலில் அணிந்திருக்கும் சிலம்புகளின் ஓசையேயாம். பூர்வம் உக்கிரபாண்டியன் செண்டு எடுத்துச் சுழற்றிஎறிந்தமாத்திரத்தில் அளவிறந்தபொன்னைக்கொடுத்த மேருமலைபோல், வாலிபர்கள் பந்துஎறிந்தமாத்திரத்தில் மாளிகையின் சுவர்கள் பல மணிகளை உதிர்க்கும்; நவமணிகளால் இழைக்கப்பட்ட பொன்னாபரணம் பூண்டிருக்கும் சிறுவர்கள்விடும் பெரிய காற்றாடிகள் அடக்கும் தோறும் அடங்கி, விடுந்தோறும் நீண்டுபோவது, எண்ணுதற்கு அருமையானமகிமை பெற்றோங்கும் ரிஷபநாயகத்தின் நெட்டுயிர்ப்பால் உண்டாகிய காற்றில் அகப்பட்டுக் கருடன்பட்டபாட்டைக் காண்பிக்கும், உப்பரிகைகளின்மேல்நின்று சிறுவர்கள் விடுக்கும்வளமான காற்றாடிகள் கீர்த்தி பெற்றோங்கும் சந்திர சூரியர்களைப் பிடிப்பதற்கு நாடித்திரியும் இராகு கேது என்னும் பாம்புகளைப்போல் ஆகாயத்தில் தேவர்கள் வேடிக்கை பார்க்க ஆடும். சமையல்வீட்டில் பதார்த்தங்களைத் தாளிப்பதினால் உண்டாகும் புகையும் தெய்வப்பெண்போன்ற மாதர்கள் தங்கள் கூந்தலுக்கு ஊட்டும் அகிற்புகையும் யாகாக்கினியில் உண்டாகும் புகையும் ஒன்றாய்ச் சேர்ந்து ஓங்கி எங்கும் படர்ந்து சூழ்ந்துகொண்டிருப்பதைத் தெரிந்துகொள்ளாதவர்கள் வட்டவடிவமான ஆகாயம் செழுமையான புகைநிறம் என்பார்கள், மகிமைபொருந்திய யாகசாலைகள் தேவேந்திரனுக்கு வாகனமாகிய மேகங்கள் இங்கேவந்து யாகாக்கினியாகிய தங்கள் முடிகளின் அழகு குறைந்துபோகும்படி அடர்தலால், அவைகளின்மேல் கோபங்கொண்டு, தங்களிடத்தில் முழங்கும் மந்திரப்புகையினால் தேவேந்திரனுடைய பட்டணத்தின் அழகு கெட்டுப்போகச்செய்யும், ஓதல் ஓதுவித்தல் முதலிய ஆறு தொழில்களையுடைய அந்தணர்கள் ஆகுதி இடும்படியான யாகாக்கினியில் அருமையான மந்திரங்களைச்சொல்லிப் பெருமகிழ்ச்சியுடன்சொரியும் நெய்சிதறி உண்டாகும் திவலைகளையும் சட சடவென்று ஒலிக்கும் நெருப்புப்பொறிகளையும்கொண்டு, மேகமாய்ப் பரவிய்புகையே மின்னி இடித்து மழைபெய்வதுபோலும்; பலவளங்களையும் கொடுக்க வல்ல யாகங்களைச் செய்யாமல்விட்டபோது மழையில்லாமையே இதற்குத்தக்க சாட்சியாம்; பூசுரர் என்னும் பெயரில் பூ என்னும் நிலைமொழியின் பொருளுக்கும் சுரர்என்னும் வருமொழியின் பொருளுக்கும் உரிமைபூண்டு தங்கள் பொருள் நிலைக்குத்தக்கபடி பூலோகத்தில் எந்நாளும் தவறாமல் பரிமளிக்கும் சுவைகளோடு அமைந்த சாதத்தினால் அதிதி பூசை

யும் யாகத்தின் அவியினால் கடவுட்பூசையும் ஒருமிக்கச்செய்யும் கடமைகளைப்பழுதில்லாமல்செய்துவரும் பிராமணவொழுக்கமுள்ள பெரியோர்கள் வாழும், திருமாளிகைகள் பல அவ்விடத்தில் உள்ளன. பெருமை பொருந்தியபலத்தினால் பகைவரைப்போரில் அழித்துக்காத்தல் என்னும் தேரை நடத்தி ஏகச்சக்கரத்தை எங்கும் உருட்டி மனுநீதியின்படி செங்கோல் செலுத்துகிறவர்களாய்; கள்ளர்கள் மிருகங்கள் பகைவர்கள் தாங்கள் தமது சுற்றத்தார் என்ற இவ்விடங்களில் உண்டாகும் பயத்தை நீக்கி, உலகமெல்லாம்காக்கும்பெரும்புகழ்படைத்தஅரசாட்சிசெய்யும்வாழ்க்கையையுடைய வீரர்கள்வாழும் அரண்மனைகள் பல அவ்விடத்தில் உள்ளன.

மேன்மைபொருந்திய பிரமதேவனுடைய அருமையான தொடையைவிரும்பத்தக்கதாயாகப்படைத்தவர்களாய்ப்பிறர்பொருளையும்தம்பொருள்போற்பாவித்து வர்த்தகம்செய்து பொருள்தேடுகின்றவர்களாய் வடதிசைத்தலைவனாகிய குபேரன் முதுகுகாட்டி ஓடும்செல்வமுடையவர்களாய் வேதநெறியையும் ஒழுக்கத்தையும் விரும்பிச்சிறந்திருக்கும் பெருங்குடிகளாகிய வைசியர்கள்அமர்ந்துவாழும் இடங்கள்பல அவ்விடத்தில் உள்ளன; வாசனைவீச மலர்ந்திருக்கும் தாமரைப்பூவில்வாழும் பிரமதேவனுடைய முகம்முதலிய அவயவங்களைத்தாங்கி விளங்குவதான பாதம் என்று சொல்லப்படும் அவயவத்தில்பிறந்து, மேற்சொல்லிய அந்தமுகம் தோள்தொடைகளில் பிறந்த அந்தணர், அரசர், வைசியர் என்னும் மூன்றுசாதியாரைத் தங்கள் மேழிச்செல்வத்தால் நிலைபெறத்தாங்கும் உரிமையுள்ள வேளாண்மைஎன்று புகழ்படைத்தோங்கும்பெயரைத்தங்களுக்கே உரிமையாகக் கொண்டிருக்கும்வேளாளர்கள் அமர்ந்துவாழும்இடங்கள்பலஅவ்விடத்தில் உள்ளன; அந்தணர், அரசர், வைசியர் சூத்திரர்என்னும் நான்குசாதிகளில் உயர்குடியிற்பிறந்தபெரியோர்கள்வசிக்கும் இடங்களை, மேன்மைபொருந்திய அந்த நான்கு சாதியார்களில் உயர்ந்தவர் இழிந்தவர்களுடனும் இழிந்தவர்கள் உயர்ந்தவர்களுடனும் தங்களில் கூடிப் புணர்ந்துபெற்ற பலவகையான மற்ற சாதிபேதங்களையுடையவர்கள் பலரும் தங்கள் தங்கள் சாதி ஆசாரநெறிதப்பாமல் நெருங்கி முறைமையாக நடந்துகொள்ளும் செல்வம்மிகுந்த பலவகைக்குடிகள் சூழ்ந்திருக்கும்; வளர்ந்தோங்கும் இலைகளையுடைய தர்ப்பையின்நுனிபோல் கூர்மையான புத்தியுடையவர்களும் தொன்றுதொட்டுப் பரம்பரையாய் வழங்கிவரும் மாசில்லாத பல நூல்களின் கேள்வியுடையவர்களும் கருத்துரை பதவுரை உதாரணம் என்னும் மூவகை உரைகளாலும் தெளிவித்துத் தங்களிடத்தில்வாசிக்கும் மாணாக்கருக்குப்போதிக்கும் இலக்கண நூல்களை உணர்ந்தவர்களும் ஆசுகவி,

மதுரகவி, சித்திரகவி, விஸ்தாரகவி என்னும் நால்வகைப் புலமையுடை
யவர்களும் ஆய்த் தங்களில் வஞ்சனைபகை முதலிய துர்க்குணங்கள் இல்
லாமல் கூட்டம் கூட்டமாய்க்கூடிப் பல நூல்களை ஆராய்ந்தறியும் பள்ளி
க்கூடங்களும் பலவாம். மன்மதனைப்பகைத்து நெடும் சடையைமுடி
த்து அழகுபொருந்திய காவிவேஷ்டிமேல் போட்டுக்கொண்டு நாம் எல்
லாரும் துதிக்கும்படியான துறவிஎன்றிருந்தும் ஒரு மங்கையின் இளங்
கொங்கைக்குறியை மாசில்லாத்திருமேனியில் மாசுபடக்கொண்டார் என்
று சிறைவைத்ததுபோல், பிரணவப்பொருளாய் விளங்கும் ஏகாம்பரநா
தனைத் தங்களுடைய ஞானப்பிரகாசம்வீசும் மனக்குகையில்அடக்கி ஆன
ந்தம் அடையும் சிவயோகிகள்வாழும் இடங்கள் பலவாம். ஞானவிளக்கம்
உண்டாக்கும் அனுதிசைவர்கள் சிறந்து வீற்றிருக்கும் பெருஞ்சோதிமய
மான மதில்களையுடைய திருவேகம்பமானது ஆணவமலம் முதலிய மும்
மலங்களை அறவீசும் சைவாகம முறைப்படி சரியை கிரியை யோகம்
ஞானம்என்னும் நான்கு பாதங்களை அநுஷ்டித்துத் திருவருளை அடையும்
ஆதிசைவர் முதல் அவாந்தரசைவர் ஈருயுள்ள சைவர்கள் சேர்ந்துவாழும்
வரிசை வரிசையான மாடமாளிகைகளால் சூழ்ந்துஓங்கும் காட்சியுடைய
தாம். அலங்காரம் அமைந்திருக்கும் மதில் களின்மேல் அணி யணியா
யிருக்கும் ரிஷபங்கள் விண்ணுலகம் அழிந்துபோக மேல் ஓங்கும் அந்த
மதில்களின் வீறுப்பை அடக்கும்பொருட்டுத் திருவேகம்பர் கட்டளை
யால் முதுகில் திமிலையுடைய ரிஷப நாயகம் அவ்விடத்தை அடைந்து
எண்ணிறந்த வடிவங்கொண்டு அணிவகுத்து வைத்திருக்கும் தன்மையு
டையன. கோபுரமானது ஒன்பது கிரகங்களும் உலாவி வாசஞ்செய்ய
அவ்விடத்தில் முறை முறையே ஒன்பது மாளிகைகள் செய்தாற்போல்
ஒன்பதுமணிகளால் இழைக்கப்பட்ட சோதியால் விளங்கும் ஒன்பது
நிலைகளைத்தழுவிக்கொண்டு வளர்ந்தோங்கும், கார்மேகமானது ஆடையா
கவும் சூரியபகவான் மார்பில் அணியும் கவுத்துவமணியாகவும் வட்டமாய்
விளங்கும் பூரணசந்திரன் பெருமைபொருந்திய நெற்றியில் அணிந்திரு
க்கும்விபூதியாகவும் ஓங்கிவிளங்கும் செல்வக்கோபுரமானது உலகத்தாரா
ல்புகழப்படும் விராட்டு என்னும் பரமபுருஷனைப்போல் ஓங்கும்தன்மையு
ள்ளது. மேலும் அந்தக்கோபுரம்திருவேகம்பரை விரும்பித்தொழுது எங்
நாளும் காஞ்சிமாநகரத்தில் வாசஞ்செய்கிறவர்கள் ஆயுள் முடிவில் சிவ
லோகத்திற்குப்போக வைக்கப்பட்டதாகிய அழிவில்லாத ஒரு ஏணியை
நிகர்க்கும். எங்கள் பெருமானைக்கண்டு சேவிப்பதற்கு இதுசமயமென்று
தேவர்களைத்தன் அருகில்வர அழைப்பதுபோல்; சூரியகிரணம் வீசவிள
ங்கும் பலமணிகளின் அழகுவாய்ந்திருக்கும் செல்வத் திருக்கோபுரவாயி

லில் பேரிகைகள் காலந்தோறும் தப்பாமல் முழங்கும். ஆன்மாக்களை வாயிற் போட்டுக்கொண்டிருக்கும் ஐந்துமலங்களையும் ஐந்து ஆவரணங்களால் தடுத்தருளும் செல்வக்கோயிலில் சிறந்து வீற்றிருக்கும் திருவேகம்பருடைய சந்நிதானத்தில் நாட்டப்பட்டிருக்கின்ற துவஜ ஸ்தம்பத்தின் மேல் விளங்கும் ரிஷபம் வானத்தில்விளங்கும் இராசிகளில் ஒன்றாகிய ரிஷபத்துடன் கலந்து நேசஞ்செய்யும். தங்கள் குலத்திற்பிறந்த பார்வதிதேவியார் செய்யும் பூசையின் சிறப்பைக்காணவேண்டும் என்னும் ஆசையால் எங்கே இருக்கின்றமலைகளும் பரமசந்தோஷத்துடன் அங்கே வந்து நெருங்கினாற்போல் பேரழகு படைத்திருக்கும் சிகரங்கள் விளங்கித்தோன்றும்; தன்னிடத்தில் நீராடினவர்களுடைய கர்மநோய்கள் எல்லாம் கழிந்து போகச்செய்ய வல்ல பலமலர்கள் நெருங்கியிருக்கும் சிவகங்கையின் பக்கத்தில் செம்பொற்சோதிவீசும் மண்டபம்விளங்கித்தோன்றுவது அழகிய நவரத்தினப் பெட்டியைத் திறந்துவைத்த மேல்மூடியை நிகர்க்கும். செம்பொன்னால் செய்யப்பட்டயாக குண்டத்தில் ஓங்கும் சுவாலையையுடைய யாகாக்கினியினிடமாக எமது பரமபிதாவான ஏகாம்பரநாதரை ஆவாகனஞ்செய்து துதிக்கப்படும் புகைசூழ்ந்த யாகசாலையானது பெருமைபொருந்திய யோகசாஸ்திரவிதிப்படி தன் இதயாரவிந்தத்தில் சுவாலைவிட்டோங்கும் அக்கினியினிடமாக அமர்ந்திருக்கும் சதாசிவமூர்த்தியைக்கண்டு தரிசித்த மாயவனை நிகர்க்கும். வழுவழுப்பான அடிமரம் காம்பு ஆகவும் வட்டமாய்ச்சூழ்ந்திருக்கும் கிளைகள் குடையாகவும் விளங்கும் ஒரு மாமரமானது மேல்நின்று இனிமையான நிழல்தர; அவ்விடத்தில் ஆன்மாக்களுக் கெல்லாம் அவற்றின் ஊழ்முறையாகப் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் பஞ்சகிருத்தியங்களைச் செய்துகொண்டு திருவேகம்பர்வீற்றிருந்து கடல்சூழ்ந்த உலகமெல்லாம் துதிக்கும்படி அரசுசெய்தருள்வார். பல நாடுகளைச்சுற்றுப் பக்கத்தில் கொண்டிருக்கும் தொண்டைவளநாடானது பலசங்குகளின் நடுவில்படரும் வலம்புரிச்சங்காம். அவ்விடத்தில் உள்ள பல நகரங்களையும் வட்டமாகப் படைத்திருக்கும் காஞ்சிமாநகரமானது பல வலம்புரிச்சங்குகளுக்கு நடுவில் விளங்கும் சலஞ்சலம் என்னும்சங்காம். அப்படிப்பட்ட மகிமையுள்ள திருக்காஞ்சிமாநகரத்தில் உள்ள பலதலங்களிலும் வரிசையாகக் கட்டப்பட்டிருக்கும் ஆலங்கார மாளிகைகளையுடைய திருவேகம்பமானது பாஞ்சசன்னியம் என்னும் சங்கில்தோன்றி விளங்கும் விலைமதிக்கப்படாத மேன்மையுள்ள முத்தாம். பல மாணிக்கங்கள் கிரணம்வீசிப் பரவியிருக்கும் இருளை அழிக்கவட்டமாய்விளங்கும் செம்பொன் மதிலால்சூழப்பட்டு, அதன்நடுவில் சதாசிவமூர்த்தி

வாழ்ந்திருக்கும் தன்மையால், காஞ்சிமாநகரமானது ஆன்மாக்கள் பண்ணிய கர்மங்களை அறிந்து அந்தக்கர்மங்களுக்கு ஈடான பலன்களைக்கொடுத்தருளும்படி பூலோகத்தில் இறங்கிய சூரியமண்டலமேயாம். யாவராலும் விலக்கப்படாத தர்மசாஸ்திரங்களைச் சொல்லிய முனிவர்களும் விதிவிலக்குகளாகிய இலக்கியங்களை இதனிடத்திற் கண்டேபின்பு இலக்கண நூல்களை விதித்தார்கள்போலும்; ஆன்மாக்களுடைய துன்பங்களைப்போக்கி முப்பத்திரண்டு தருமங்களையும் பார்வதிதேவியே வளர்க்கும்தன்மையால், காஞ்சிமாநகரமானது மாசில்லாமல் விளங்கும் தருமங்களுக்கெல்லாம் இடமாகும். கடல்சூழ்ந்த உலகத்தில் பொருள் அமைந்திருக்கும் பலநூற் கேள்வியால் நிறைந்த புலவர்கள்என்று சொல்லப்பட்டவர்களில் காஞ்சிமாநகரத்தைப் புகழ்ந்து பாடாதவர்கள் இல்லை. அப்படிப்பட்ட மகாவித்வான்கள் எல்லாம் புகழ்ந்தும் முடிவுபெறாமல் ஓங்கும் அந்தக்காஞ்சிமா நகரத்தின் சிறப்பெல்லாம் அறிவு நிறைந்திருக்கும் கல்வியில்குறைந்த சிறியேனோ சொல்ல வல்லவன்? வல்லவன் அல்லேன். இத்தன்மையான காஞ்சிமாநகரத்தில் உள்ள சிவாலயங்களில் எல்லாம் வீற்றிருந்து திருவேகம்பமுடையவர் அவரவர்களுக்கு அநுக்கிரகம் பண்ணிய உத்தமக்கதைகளை எல்லாம் பூர்வம் சூதமாமுனிவர்சொல்லியபடியே இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ்ப்புலவர்கள் கண்டுதெளிய நான்வடமொழியிலிருந்து தென்மொழியில் பெயர்த்துச்சொல்லிக் கடைத்தேறுவேன்.

திருநகரப்படலம் முற்றிற்று.

திருவேகம்பர் திருவருள் வாழ்க.

உ

## திருச்சிற்றம்பலம்.

# பதிகம்.

சிவபரஞ்சோதியைக் காண்பதற்குத் தகுந்த காரணம்யாது? என்று முனிவர்கள் கேட்ட வரலாறும், மாறுப்புகழ்படைத்தோங்கும் ஸ்ரீநந்திதேவர் சனற்குமார முனிவருக்கு உண்டான கொடிய சாபமாகிய குற்றத்தை நீக்கி உபதேசித்தருளிய நன்மைகளை யெல்லாம் சூதமாமுனிவர் அந்த முனிவர்களுக்குச்சொல்லிச் சகலரும் கதி அடையும் மார்க்கம் இது என்று பூர்வம் எம்பெருமான் பார்வதிதேவியாருக்குத் திருவாய் மலர்ந்தருளியதை எடுத்துப்போதித்ததும், அழகியவீணை ஏந்தி வாசிக்கவல்லநாரதமுனிவர்துதிசெய்து வரம்பெற்ற திருநெறி காரைக்காடு என்னும் தலத்தில் மின் ஒளிவீசும் இரத்தினாபரணங்களை அணியும் சிவி என்னும் இந்திரன் பூசைசெய்து சிவானந்த வீடுபெற்றதும், திருமகள் மார்பனாகிய திருமால் புண்ணிய கோடீசரைப் பூசைசெய்து, அன்னவாகனனாகிய பிரமதேவனோடு உலகமெல்லாவற்றையும் உண்டு மறுப்படியும் சிருஷ்டித்தவாறும், அந்தத்திருமால் வலம்புரி விநாயகக்கடவுள் இணையடிகளைவணங்கித் தன் கையிலிருந்து வழுவிய பகைவர்கள் பயப்படும்படியான முழக்கமும் ஒளியுமுள்ள பாஞ்சசன்னியம் என்னும்சங்கைப்பெற்றுக்கொண்டவாறும், தாமரைப்பூவில்வாழும் பிரமதேவன் மிகுந்த மெய்யன்புடன் யாகம்செய்து, சிறந்துவிளங்கும் சிவாத்தானத்தில் வீற்றிருக்கும் சிவபெருமான் திருவருளால் அந்தத்திருமாலோடு சகல லோகங்களையும் உண்டு மறுபடியும் சிருஷ்டித்தவாறும், காரிருள்போலும் விஷத்தை எம்பெருமான் உண்ணக்காட்டிய பாவம் ஒழியும்படி மகிமைபொருந்திய வேதவிதியால் தேவர்கள் மணிகண்டேசனைத் துதிசெய்தவாறும், ஆணவமலச் செருக்கினால் பொய்வார்த்தை சொல்லிய வல்வினைதீர வியாசமுனிவர் நிகரில்லாதோங்கும் சார்ந்தாசயம் என்னும் தலத்தில் பூசைசெய்த வரலாறும், சத்த ரிஷிகளும் வீட்டின்பத்தை அடையவேண்டித் தனித்தனியே பூசைசெய்தவாறும், குற்றமற்ற கொள்கையையுடைய பராசரமுனிவன்தொழுது தமதுபிதாவாகிய சத்திமுனிவரைக்கொன்ற இராட்சதன்தன்வம்சத்துடன் மாள அழித்ததும், விளக்கொளிப்பெருமாள் முக்கண்மூர்த்தியான சிவபெருமானைப் பூசித்து, வேகவதி நதியைத் தடுத்துப் பிரம

தேவன் யாகத்தைக் காப்பாற்றியவாறும், நிறைபுகழ்பெற்றோங்கும் முத்தீச்சரத்திற் பூசைசெய்து பெற்றதாயைச் சிறையிலிருந்து விடுவித்து ஆண்மைக்குணத்தையுடைய கருடன் விஷம்துளிக்கும் பற்களையுடையபாம்புகளைப் பயமுறுத்தி அலைக்குமாறும், மூன்றுலகங்களையும் ஊடுருவநீண்ட திருமால்கண்டுணராத திருவடிகளைத்துதித்து நெளியும் உடலையுடைய பாம்புகளும் பூசைசெய்து எம்பெருமான் ஆபரணமாகத்தரித்துக்கொள்ளப்பெற்ற மேன்மையால் கருடனை நோக்கி என் கருடா! சுகமா? என்றுகேட்டவாறும், முடிவுகாலத்தில் பிரம விஷ்ணுக்களுடைய தேகங்களைத்தமது திருமேனியில் தாங்கி வியாழபகவானும் இயமனும் வணங்கி வாழ்த்த மாசில்லாதோங்கும் காயாரோகணம் என்னும் தலத்தில் எம்பெருமான் வீற்றிருக்குமாறும், அறுகு அணியும் சடைமுடியையுடைய மஞ்சள்நீர்க்கூத்தர் திருவடிகளைப் பூசைசெய்து ஐம்புலன்களை அடக்கிய சித்தர்கள் மகிமைபெற்றோங்கும் பல சித்திகளைப்பெற்றுக் கடைத்தேறியவாறும்; திருமால்பூசைசெய்து பிருகு முனிவன் இட்ட சாபபயம் தவிரப்பெற்றவாறும், மேன்மைபொருந்திய அதன் ஒருபக்கத்தில் திரிகால ஞானேசம் மதங்கேசம் ஐராவதீச்சரம் என்னும் தலங்களில் முறையே சில முனிவர்களும் மதங்கமாமுனியும் வெள்ளையானையும் பூசித்தவாறும், குற்றமற்ற சுக்கிரன் சொற்படி ததீசிமுனிவர் இஷ்டசித்தீசனைத்தொழுது மாசில்லாதோங்கும் வச்சிரதேகம் பெற்றோங்கிக் குபன் என்னும் அரசனை வென்றவாறும், பிரமதேவன் கச்சபாலயத்தில் வணங்கிப் படைக்கும் பேறுபெற்றதும், பசும்துளசிமாலையணியும் மாயவனாகிய கூர்மம் அந்தக் கச்சபேச்சரத்தில் வந்தனை வழிபாடுசெய்து பாதகம் தவிர்ந்து பிழைத்தவாறும், தபோபலமுடைய மாண்டு கன்னி முனிவன் வந்தனைவழிபாடு செய்து விண்ணுலகத்தில் வசிக்கும் பஞ்சகன்னிகைகளுடைய போகத்தைப் பூலோகத்திலேயே அனுபவித்துவாழ்ந்ததும், அக்கினிபகவான் ஆகுதி செய்து தேவாமிர்தத்தைச்சுமக்கும் திறம்பெற்றதும், குறைவில்லாமல் வணங்கிச் சவுனகமுனிவன்வீட்டின்பம் அடைந்ததும், கெடுதலில்லாத சுராக்கன்என்னும் அசுரனை அழித்தசுரகரம் என்னும் தலத்தைத்தேவர்கள் வாழ்த்தித் தேவாதிதேவனாகிய சிவபெருமானுடையவீரியம் உண்டதனால் உண்டான சுரநோய் போக்கியவாறும், வியாக்கிரபாத முனிவருடைய குமாரன் ஆன உபமன்னியமாமுனி பூசித்துப்பெருகும் திருப்பாற்கடலை உண்ணப்பெற்றுப் பராக்கிரமசாலியான அர்ச்சுனனுக்கு இரதசாரதியாயிருந்த கண்ணன் முடிமேல் தமது மலரடிசூட்டி உபதேசம்செய்து ஆட்கொண்டதும், ஆரவாரம்செய்து போர்செய்யவந்த தேவர்கள் பார்வதிதேவியாருடைய திருவாய்மொழியால் சந்தேகம்அறத் தெளிந்து அருள்

அ

உருவத்திலிருந்து எதற்கும் அஞ்சாத இயக்கவடிவங்கொண்டுவந்த கடவுளைத் தொழுதுபிழைத்தவாறும், குற்றமற்ற உருத்திரர் முதலானநூற்றுப்பதினெட்டுபெயருந்துதிசெய்தவாறும், அழகியதிருமேற்றளியில்திருஞானசம்பந்தருடைய தேவாரப்பதிகத்தால் திருமால் சிவபெருமான்திரு உருவம்பெற்றதும், ஐந்து திருக்கரங்களையுடைய விநாயகக் கடவுள் அன்புமிகுந்து அனேக தம்காவததில் பூசைசெய்து, நல்லோர் செய்யும் காரியங்கள் இடையூறில்லாமல் முடியவும், அவர்கள் எண்ணியபடி வரம்கொடுக்கவும், யாவர்க்கும் தலைவனாகும் தன்மை பெற்றதும், மகதி வீணை ஏந்தி வாசிக்கும் நாரதமுனிவரும், புத்ததேவனும், வளமான பூஞ்சோலைகளால் சூழப்பட்டிருக்கும் திருக்கயிலாய நாதனைத்தொழுது, திரிபுராசுரர்களை மயக்கிய பாவம் தீர்த்துக்கொண்டதும், தன்னைப்பகைத்தவர்களைக் கொல்லும்பொருட்டு, இராமன் வணங்கி வாழ்த்திப் பேராண்மைப் படைத்தவாறும், புகழ்பெற்றோங்கும் கற்கிவடிவம்கொண்ட மாயவன் போற்றுதல் செய்து, யுகமுடிவில் அசுரர்களை அழித்தவாறும், தேன்ஒழுகப் பூத்திருக்கும் பனம்பூமாலை அணியும் முடியையுடையவனாகிய பலபத்திரராமன் வாழ்த்தி நன்மைபொருந்திய வரம்பெற்றவாறும், கலின் கலின் என்று முழங்கும் வீரகண்டை அணிந்திருக்கும் இந்திரன் வணங்கிப் புற்றுருவெடுத்து, மாயவன்தலையை துண்டித்துப் பெருங்கீர்த்தியைக் கவர்ந்து மீண்டு உய்யும்படி பூசைசெய்தவாறும், பிரமதேவனுடைய தலையைக் கொய்து உதிரபலியேற்ற வயிரவக்கடவுள் பூசைசெய்தவாறும், மாயவனுக்கு ஒப்பான விடுவச்சேனன் பூசைசெய்து வீரபத்திரசுவாமி தன்மார்பில் அணிந்திருந்த வெண்டலை விழுங்கிய சக்கராயுதத்தை விகடக்கூத்தாடிப்பெற்றுக்கொண்டவாறும், செருக்கினால் யாகம்செய்த தக்கன் பாவம் தீரும்படிபூசைசெய்தவாறும், மாண்டுபோன அசுரர்களுடைய முப்புரங்களில் மாளாதிருந்த மூன்று அசுரர்கள் தொழுது அழியாவரம் பெற்றவாறும், இரணியன் என்னும் அசுரன் தன் பந்து சனங்களுடன் வந்து பூசைசெய்து அரசாட்சி பெற்றதும், பெருமைபொருந்திய ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமான் கட்டளையின்படி மாயவன் நரசிங்கமாய் அந்தஇரணியனுடைய உயிரை உண்டு அடைந்த செருக்கைச் சரபம் அழித்த பின்பு குற்றம்தீரப்பூசைசெய்தவாறும், பராக்கிரமசாலியானஇரணியாட்சனைக்கொன்ற வராகம் பின்புபூசித்தவாறும், அந்தகாசுரன்பூசைசெய்து உலகமெல்லாம் ஆண்டு கடைசியில் முத்தி அடைந்தவிதமும், மகாபராக்கிரமசாலியான வாணாசுரன் முடிவுநாளில் பூசித்துக்கணங்களுக்குத்தலைவனாகும் பதவிபெற்றதும், வாசனைவீசும் மலர்கொண்டு பாதபூசைசெய்து ஓணனும்,காந்தனும் முத்தி அடைந்தவாறும் வலிமையுண்டாக வாழ்த்திச் சலந்தராசுரன் முடிவுநாளில் முத்தியின்பம் அடைந்தவாறும், மாயவன் திருமால்பேற்றில் பூசைசெய்து, பெருஞ்சோதிவீசும் சக்கராயுதம் பெற்றதும், பழிப்பில்லாதோங்கும் பரசிராமன் பூசைசெய்து பரசு என்னும்

ஆயுதம் பெற்றவாறும், கீர்த்தியுண்டாகப் பூசித்து இரேணுகை என்பவள் தெய்வதம் ஆகியவாறும், மாசில்லாதோங்கும் யோகாசாரியர்கள் தொழுதுவிளங்கும் தங்கள் பதவி பெற்றவாறும், மன்மதன் பூசைசெய்து உயிர்களுக்கெல்லாம் காமம் உண்டாக்கும் தன்மை பூண்டதும், சிவபெருமான் கட்டளையின்படி வந்ததீர்த்தங்கள் எல்லாம் வணங்கிப் பார்வதிதேவியை இடப்பாகத்தில்கொண்டருளும் பரமசிவனிடத்தில் பலவரம் பெற்றதும், வருணபகவான் பூசை செய்து வாழ்ந்திருக்கும் பதவி பெற்றதும், காசியில்வாழும் விசுவநாதக்கடவுளும் காஞ்சிமா நகரத்தை விரும்பிவந்து வாசம்செய்த்தும், வாயுபகவான் பூசைசெய்து கந்தவாகன் என்னும் பதம் பெற்றுவிளங்கும் விதமும், மாசில்லாதோங்கும் கிரகங்கள் ஒன்பதும் வாழ்த்தி வேண்டும் வரம் பெற்றதும், கீர்த்தி பெற்றோங்கும் வாமதேவமுனிவன்தொழுது கொடிய பிறவியை ஒழித்ததும், மனமாரப்பூசித்து மார்க்கண்டேயர் முதலானவர்கள் மரணம்வராமல் காத்துக்கொண்டதும், பிரம விஷ்ணுக்களுடைய பெருஞ்செருக்கினால் உண்டானவினைதீர, அங்கே தோன்றிய மகாலிங்கத்தைப் பூசைசெய்தவாறும், சிவபெருமான் சர்வசம்மாரம்செய்து தங்கிய வீராட்டகாசத்திலே கார்மேக வண்ணனாகிய மாயவன்பூசைசெய்து செம்பவளவண்ணம்பெற்ற முறையும் மாட்சிபொருந்திய காமாட்சி தேவியைவணங்கி இலட்சுமி சாபம் தவிர்த்துக்கொண்டவாறும், தருமன்முதலான பாண்டவர் முதலானவர்கள்தொழுது வேண்டும்வரம்பெற்றதும், ஈசான மூர்த்திவணங்கிக் கீழ்த்திசைக்குக் காவல்பதவிபெற்றதும், மாயவன் மச்சமாய்ப் பூசைசெய்து பகைவரை வதைத்து வேதத்தைக் கொண்டுவந்து வேதியருக்குக் கொடுத்ததும், மேலோங்கிவளர்ந்த வாமனன் மாவலியைச் சிறைப்படுத்தி மீண்டு வணங்கியவாறும், மாயவன்பூசைசெய்து கடல்விஷம்தாக்க உண்டாகிய வெப்பநோய்தீரநின்றதும், பார்வதிதேவியாருடைய திருமேனியிலிருந்து கவுசிகைபிறந்து சிவபெருமானைப் பூசித்தவாறும், பரிசுத்தகுணமுடைய மாகாளன் என்னும் சர்ப்பராஜன் பணிந்து பழமையான பரகதி அடையப் பெற்றவாறும், சிவபெருமானுடைய கட்டளையை மீறியகுற்றத்தை ஒழிக்கக்குமரகோட்டத்தில் சேர்ந்து வீற்றிருந்து வேலாயுதமூர்த்தியான சுப்பிரமணியக்கடவுள் பூசைசெய்தவாறும், உலகமெல்லாம் புகழும்படியான மார்க்கண்டேயரிடத்தில் வஞ்சகம்செய்ய நினைத்த மாயவன் சிவபெருமானை அந்தத்தலத்திலேவணங்கி அந்தப்பாவத்தைப் போக்கியவாறும், மாசாத்தன் துதிசெய்து வேண்டும்வரம் பெற்றதும், பார்வதிதேவியாருடைய தோழியான மங்கலை என்பவள் பூசைசெய்தவாறும், கொடியதுஷ்டர்களான இராவணன் முதலிய இராட்சதர்களைக் கொன்று மீண்டுவந்து இராமன் வந்தனைவழிபாடு செய்ததும், தேவேந்திரனுக்குச் சாரதியான மாதலி என்பவன் துதிசெய்தவாறும், நாராயணன்பூசைசெய்து பாம்பின் உருவத்தைப்போக்கியவாறும், கச்சித்திருமயானத்தில் வீற்றிருக்கும் கடவுள்

எல்லா உலகங்களையும் யாகாக்கினியில் ஒடுக்கிப் பண்டாசுரனைத் தொலைத்தவாறும், ஒடுங்கிய உலகத்தைப் பழையபடி தோற்றுவிக்கும் பொருட்டு எம்பெருமான் ஒரு மாவடியில் முளைத்துக் குற்றமற்ற இலளிதை என்னும் தேவியாரைப் படைத்து, அந்த இலளிதையின் மூன்று கண்களிலிருந்து பிரமா, விஷ்ணு, உருத்திரன் என்னும்மும்மூர்த்திகளைப் படைத்து, அவர்கள் செய்யவேண்டிய தொழில்களைஏற்படுத்திப் புத்திமதி சொல்லி,அந்தத் தேவியும் மும்மூர்த்திகளும் பூசை செய்யச் சிறப்போடு வீற்றிருந்ததும், திருவிளையாட்டால் மந்தரகிரியில் உமையவள் சிவபெருமானுடைய திருக்கண்களை மறைக்கவே காரிருட் கூட்டத்தில் உலகமெல்லாம் முழுகிப் பெருங்கவலை யடைந்ததும், அதனால் உண்டான தோஷம்தீரப் பூசை செய்யும்பொருட்டு ரிஷபநாயகத்தின் செய்கையும் சொல்லிச் சிவபெருமான் காஞ்சிமா நகரத்திற்கு அனுப்பப் பார்வதிதேவி அங்கேவந்தவாறும், அந்தத்தேவி தருமங்கள் எல்லாவற்றையும் வளர்த்தவாறும், விண்டுவீச்சரத்தையும் அகத்தீசத்தையும் மத்தளமாதவீசத்தையும் வணங்கிச் சென்று, ஒருமாவடியில் முளைத்த சச்சிதானந்தத் தனிப் பரம்பொருளைத் தவம் செய்து கண்டு பணிந்து, புதிய அமுதம்போன்ற தேவியார் ஆகம விதி தவறுமல் பூசை செய்தவாறும்; கருணைசுரந்து பெருகும் திருவிளையாட்டால் அழைக்கப்பட்ட கம்பை நதிப்பெருக்கைத் தேவியார்கண்டு மனம் துடித்து ஏகம்பவாணரைத் தழுவிக்கொண்டவாறும், ஏகாம்பரநாதர் தமது திருமேனியில் கொங்கைத் தழும்பும் செங்கைவளைத் தழும்பும் தாங்கித் தேவியார் காணும்படி எதிரில் நின்று வேண்டும் வரமெல்லாம் கொடுத்தவாறும், பார்வதி தேவியார் கவுர நிறம்பெற்று எம்பெருமானைத் திருமணம் செய்துகொள்ள விரும்பியதும், பார்வதிதேவியின் கருநிறமானசட்டையில்பிறந்த கவுசிகி என்பவள் அசுரர்களை நாசம்செய்து சிவபெருமானுடையதிருவருள்பெற்றதும், மேன்மை பொருந்திய அதிசய விதங்களும் அடங்கி ஒழுகும் ஒழுக்கமும்; எம்பெருமான் திருவருளுக்குரிய சிவபுண்ணியப் பிரயோசனங்களும், புராணங்கள் சொல்லும் வேறு ஒருவிதத்தால் கயிலாசகிரியில் உமையவள் சிவபெருமானுடைய திருக்கண்களை மறைத்துக் காஞ்சிமா நகரத்திற்கு வந்து பூசை செய்யும் தன்மையும் அந்தர்வேதியும் கரிகாலச்சோழனுடைய பெருமையும், வினைகளை எல்லாம் தீர்க்கும் தீர்த்த விசேஷம் தல விசேஷம், மூர்த்தி விசேஷம் என்னும் மூவகை விசேஷங்களும் இந்த நூலில் எடுத்துச் சொல்லப்படும்.

பதிகம் முற்றிற்று.

உ

திருச்சிற்றம்பலம்.

# புராணவரலாற்றுப்படலம்.

நைமிசாரணியமானது ஐம்புலன்களை அடக்கும்திறமுள்ள தவமுநி
வர்கள்செய்யும் யாகத்திற்குவேண்டியபொருள்களை வேண்டியபடிகொடு
க்கும்பொருட்டுத் தெய்வத்தன்மையுள்ள காமதேனு வாசம்செய்வதனாலு
ம்: அவி உணவைக் கையில்வாங்கிக்கொள்ள அடர்ந்திருக்கும் தேவர்களா
லும், தொடர்ந்திருக்கும் ஓமப்புகைதழுவி வண்டுகள்மொய்க்கப்பெறுதப
லம்மலர்களையுடைய சோலைகளாலும், நெருங்கி இருக்கும் அலங்காரமான
கற்பகவனமாயுள்ளது. அந்தயாகத்தீயிலிருந்துமேல் உயர்ந்து அண்டகடா
கத்தை உரிஞ்ச ஆகாயத்தினிடமாகப்படரும் நறும்புகைக்கூட்டங்கள் மக
ரந்தத்துடன்மலரும் கொன்றைப்பூமாலை அணிந்திருக்கும் சிவபெருமானு
டைய திருவடிகளையே அல்லாமல்வேறு ஒன்றையும் ஒருபொருளாக மதி
யாத மாதவர்கள்செய்யும் யாகத்தை அழிக்கவருகின்ற அசுரர்கள் அந்தமா
தவர்களுடைய கொடுஞ்சாபத்திற்குப்பயந்து ஓடும்காட்சியை நிகர்க்கும்,
நெடிய அலைகளையுடைய சமுத்திரத்தின்வயிற்றைக் கிழித்துக்கொண்டு
எழுந்து, நிறைந்திருக்கும் இருளை உண்ணும்சூரியன் அந்தமாதவர்களுடை
யயாகத்தில் அவிப்பாகம் ஏற்கவந்து அணுகுபவனைப்போல் சஞ்சீவி என்
றுசொல்லும்படிகிளைத்து வானத்தை அளாவ ஓங்கியவளமான சோலையில்
உள்ளகிளைகளைத் தன்கிரணங்களாகியகைகளால் செவ்வையாக ஒதுக்கிக்
குனிந்து உள்நுழைந்து உலாவி அந்தரத்தில்சென்றுநிமிர்ந்து இருப்பான்.
தேன் ஈக்கள்முழங்க அடர்ந்துதேன் ஊற்றெடுக்கும்படி பெறுதற்கரியமது
வால்நிறைந்திருக்கும் வட்டமான தேன்கூடானது சிறகுகளையுடைய வண்
டுகள் ஒலிக்கும் வட்டமானவாயையுடைய செந்தாமரைப்பூம்பொகுட்டில்
அரசுவீற்றிருக்கும் பிரமதேவன் பூர்வம்முனிவர்கள் நாங்கள் தவம்செய்வ
தற்குத்தக்க இடம்யாது ? தெரிவிக்கவேண்டும் என்றுவேண்டிக்கொண்
டதனால் வட்டமாகவளைத்துவிட்ட தர்ப்பைச்சக்கரம் அழிந்துபோகாமல்
இந்தநாளிலும் அவ்விடத்தில் இருப்பதுபோல் அதன் அழகைக்காண்பிக்
கும், கீர்த்தியால்விளங்கும் நைமிசவனமானது விரும்புமிரிஷபத்தை (ரி
ஷபராசியைத்) தாங்கிக்கொண்டிருக்கும் காட்சியினாலும்விளங்கும் நெரு

ப்பு உருவத்தோடுபூத்திருக்கும் புஷ்பங்களின் அழகைக்கொண்டிருக்கும் காட்சியினாலும் (அருமையான சர்ப்பங்களைக்கொண்டிருக்கும் காட்சியினாலும்) மேருமலையானது அவ்விடத்தில்வசிக்கும் மாதவர்களாகவும் உலகம் உய்யக்கொள்வதனாலும் யாவராலும்துதிக்கப்படும் தன்மையாலும் எப்பொழுதும் அழிவில்லாதோங்கும் பெருமைபெற்றிருக்கின்ற கைலாயபதியை ஒத்திருக்கும்நிகரில்லாதோங்கும் நைமிசவனமானது பிரமதேவன் எறியவளைந்திருக்கும் தர்ப்பைச்சக்கரம் சேர்ந்திருப்பதனாலும் (பிரமதேவன் உந்தியில்தோன்றச் சங்கும் சக்கரமும்சேர்ந்திருப்பதனாலும்) என்றும் அழிவில்லாததேவர்களுக்கு அமுதம்போல் அவி அளிப்பதனாலும், பூவின் மணம்பெறுவதனாலும் (பூமிதேவியைமணந்து இருப்பதனாலும்) மாசில்லாதகாட்சியையுடைய கருநிறத்துடன் இந்திரவில்லையும் குளிர்ச்சியையும் உடைய மேகம் மேனிவண்ணமாகவந்து அழகாய் இசைந்திருப்பதனாலும் சாரங்கம் என்னும்வில்லை ஏந்தியவிஷ்ணுவை ஒத்திருக்கும், நைமிசவனமானது புகழும்படியான யானைகள்சேர்ந்திருப்பதனாலும் (நான்குவாய்கள் சேர்ந்திருப்பதனாலும்) மார்பினிடமாக அணியப்பட்டிருக்கும்முப்புரிநூல்விளங்குவதனாலும் (விரிவானபொருள் அமைந்திருக்கும் மூன்றுவேதங்கள்விளங்குவதனாலும்) அஞ்ஞானம் அகல வேதமந்திரங்களைச்சொல்வதனாலும் (வேதங்களை எடுத்துப்பேசுவதனாலும்) வனத்தில்தாவும்மானைகளின் இருப்பிடங்கள் சேர்ந்திருப்பதனாலும், (தண்ணீரில்மலரும் தாமரைப்பூவை இருப்பிடமாகக் கொண்டிருப்பதனாலும்) பலபுள்ளிகளையுடைய உச்சியையும் படத்தையும் உடைய ஆதிசேஷனால் சுமக்கப்பட்ட கடல்சூழ்ந்த உலகம்முதல் சகலலோகங்களையும் பெற்றளித்த பிரமதேவனை நிகர்க்கும் என்றுபுகழ்ந்து பேசும்படியான இந்தநைமிசாரணியத்தில் வசிட்டன், வேதாரணியன், புலத்தியன், துருவாசன், சுகன், வசுச்சிரவன், ஆணிமாண்டவியன், சுனப்புச்சன், சமுவர்த்தன், மணிமேசகன், சனச்சேபன், இளைக்குவன், சம்புதற்பரன், ஆத்திரேயன்,சௌநகன்,புலகன், ஆசுவலாயனன், சமதக்கினி,சங்கன்,இளைவதன்,குசுருவிந்தன், மாதேசன், இலிகிதன், பராசரன்,கற்கன்,கிருது வக்கினிப்பன், பருப்பதன், நாசிகேதனன், நாரதன், சிகரத்தன், உருரு, விசுவாமித்திரன், குணி, பரத்துவாசன், உத்தாலகன், வாசச்சிரவன், சாண்டிலியன், காசிபன்,வாமதேவன், தாற்பியன், இரசனி, கண்ணுவன், முதலாம் எண்ணிறந்தமுனிவர்கள்பெரும்புகழ்பெற்றவர்கள், மாசுதீர்ந்தமனமுடையவர்கள் சிவன் அடியார்கள் தேகமெல்லாம் திருநீறணிந்திருக்கும் புண்ணியசாலிகள், நெற்றியில் திரிபுண்டரம் அணிந்தவர்கள் உருத்திராட்சமாலைதரித்தவர்கள் போர்செய்வதில் வல்லரிஷபவாகனமுடையவராகிய சிவபெருமான்வாழும் தலங்க

ளில்பற்று உள்ளவர்கள். அந்தச்சிவபூசைசெய்யும் ஆவலுடையவர்கள், ஆறு அங்கங்களும் நான்குவேதங்களும் கசடறக்கற்றுத்தெளிந்தவர்கள், வேதத்தின்முடிவைக்கண்ட ஞானிகள், சிவபெருமான் அமர்ந்தருளும் ஸ்ரீபஞ்சாட்சரங்களையே செபிப்பவர்கள், ஐம்பொறிகளை அடக்கி ஆளவல்லவர்கள், புத்திரரோடும் பத்தினிகளோடும் ஓமாக்கினியோடும்வாசம்செய்பவர்கள்,தம்மைப்போல் எறும்புமுதல் எல்லாவுயிர்களையும்சமமாகப்பார்க்கும்பெருங்கருணைக்கு எல்லையாய் இருப்பவர்கள், இப்படிப்பட்டவர்கள் ஒருங்குடன்விளங்க ஒருமிக்கக்கூடி நீலகண்டப்பெருமானாகிய சிவபெருமானைக்காணும்காட்சி என்னும்கோடாலியால் அல்லாமல் மற்றொன்றினால்பாவம் என்னும்பழங்களால் நிறைந்திருக்கும் உலகவாழ்வு என்னும் நச்சுமாமரத்தைவெட்டிச்சாய்ப்பது அரிது என்றுநிச்சயம்பண்ணி, அந்தச்சிவபெருமானைப் பிரத்தியட்சமாகக்காணும் உபாயம் என்ன ? என்றுதங்கள் அறிவினால் ஆராய்ந்துபார்க்கும்போது அந்தமுனிவர்களில் அருந்ததிக்குக் கணவனாகிய வசிட்டமுனிவர் இதுசொல்லத்தொடங்கினார், தவமே எல்லாவற்றுக்கும் மேலானமார்க்கமாம். தவமேசிவபெருமானைக் காண்பிக்கும்,தவமேசுவர்க்கம்அடையச்செய்யும்,தவமே மனுஷனைத்தெய்வமாக்கும், தவமே இந்திரன் அஷ்டதிக்குப்பாலகர் மாயவன் பிரமதேவனும் ஆகச்செய்யும், தவமானது ஒருவனுக்குக் கிடைக்குமானால் பின்பு அவனுக்கு எல்லாம்சித்தியாகும் என்றுசொல்லினார்.சாதாதவமுனிவர்தருமமேபாவங்களை எல்லாம்பரிகரிக்கும். தருமமேதேவருலகத்திற்சேர்க்கும் ? தருமமே சிவபெருமானுக்கு ஒருவடிவமாகும், சிவபெருமானைவணங்கி வாழ்த்துகின்றவர்களுக்குத்தருமமே சகலபிரயோசனங்களையும்கொடுக்கும், எல்லாருக்கும் எவ்விடத்திலும்தருமமே அச்சத்தைநீக்குவது என்றுசொல்லினார் கவுதமமுனிவர்கொடையேஎவருக்கும்எல்லாச்செல்வமும்கொடுக்கும்,நெறியில்தவறாதகொடையே எல்லாரும்தன்வழியில் நடக்கச்செய்யும்!குறைவில்லாதகொடையே பகைவரைச் சினேகராகச்செய்யும், விளங்கும் உயிர்களை எல்லாம்கொடையே பாதுகாக்கும் என்றுமனதிற்கொள்ளும்படி சொல்லினார். வினைதீர்ந்துவிளங்கும் காசிபமுனிவர்சத்தியமே எல்லாவற்றையும் நிலைபெறச்செய்யும், சத்தியத்தினால் அக்கினி, வாயு, சூரியன், முதலியவைகள் எல்லாம் தங்கள் தங்கள்தொழில்களில் தவறமாட்டா, சத்தியமே எல்லாவற்றுக்கு ம்இருப்பிடமாம், சத்தியமே சத்தியமே சிவம் ஆகும், சத்தியமேபரகதி என்றுசொல்லினார். பரத்துவாசமுனிவர் யாகம் ஒன்றே இம்மையிலும் மறுமையிலும் மேன்மைதருவதாம், யாகம் ஒன்றே தேவர்களுக்கு மகிழ்ச்சியாவது, யாகம் ஒன்றே யாகத்திற்குத் தலைவனாகிய சிவபெருமானால் விரும்பப்படுவதும் யாகம் ஒன்றேமிகவும் சிறந்தசெ

ல்வமும், யாகத்திற்குநிகரானவேறு பெருங்காரியம் இல்லை என்றுசொல்லினர்.கண்ணுவமுனிவர்பிள்ளையே பரகதிக்கு ஆளாக்கும், பிள்ளையால் ஒருவன் உலகத்தைவெல்லுவான்,நல்லபிள்ளையால் அழியாமலிருப்பதை அடைவான், நல்லபிள்ளையைப்பெற்ற மகாத்துமாவானவன் மேலானபதவி பெறுவான். தென் புலத்தார் கடனைத்தீர்ப்பதும் பிள்ளையால் அல்லாமல் மற்றொன்றினால்தீருவதில்லை என்றுதெரிந்துசொன்னார்.சிவபத்தியில் சிறந்த துருவாசமுனிவர் எழுந்துநின்று தறவறமே தருமங்களுக்கெல்லாம் பெரியதாம்,துறவறமேரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளும் சிவபெருமானுக்குச்சந்தோஷம் வரச்செய்யும், துறவறமேபிரமபதவியையும் விஷ்ணுபதவியையுங்கொடுக்கும், துறவறமே சிவலோகத்திற்சேர்க்கும், எப்படிப்பட்டவர்களும் மேலாகச்சொல்லுவதும் துறவறமேயாம் என்று சொல்லினர்.

இந்தப்பிரகாரம் முனிவர்கள் எல்லாருஞ்சொல்லி மாறுபடும்பொழுது இவர்கள்தேடிய மாதவம் உருவங்கொண்டு வந்தாற்போல் ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளும் எம்பெருமானுடையதிருவடிகளை எப்போதும் பற்றிய தியானம் உடையவரும் மெய்த்தபசியான பராசரமுனிவர்பெற்றெடுத்த வியாசமுனிவருடைய மாணாக்கரும் ஆனசூதமாமுனிவர் அவ்விடத்தில்வந்து சேர்ந்தார். அசைவில்லாதோங்கும் புராணங்களை எல்லாம் அளந்தறிந்தவராய்,தேவர்களுக்காக ஆலகாலவிஷம் உண்டு கண்டங்கறுத்திருக்கும் சிவபெருமானுடைய உண்மையை உணர்ந்து உயிர்களுக்கெல்லாம் கருணை மிகுந்து உபதேசித்தருளும் சூதமாமுனிவர் தம்து திருமேனியில் விளங்கும் திருவெண்ணீற்றின் ஒளியானது தடித்திருக்கும் இருளை அறவீசும் சந்திரனைப்போல் விளங்க, உருத்திராட்சமாலை அணிந்து, செழித்திருக்கும் செம்பொன் மேனி யுடையவராய்ப் புண்ணியமே ஒருவடிவங்கொண்டு வந்தாற்போல் வந்துசேர்ந்தார். அப்படியாகவந்த சூதமாமுனிவரை மற்றமாதவர்கள் எல்லாரும்பொங்கிப் பெருகும்பேரன்பினால் உண்டான பரமசந்தோஷத்தோடு எதிர்கொண்டுசென்று விதிதவறாமல் பூசைசெய்து அழைத்துக்கொண்டுபோய்த் தகுந்த ஆசனத்தின்மேல் எழுந்தருளவைத்துக் கேட்கவேண்டியவர்களாய் மெய்ஞ்ஞானவாளால் ஆணவமலம்முதலிய அரட்டர்களை அழித்தவரே! அஞ்சுதல் இல்லாத ஐம்புலன்களின்வாழ்வை ஒருமிக்க ஒழிக்கும்பொருட்டு நாங்கள்முன்னமே அருந்தவஞ்செய்தோம் அதனால் வெற்றியினால் விளங்கும் ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமான் திருவடிகளைக்காண்பதேமுத்தி அடைதவற்குக்காரணம் என்றுதெளிந்தோம். திருவடிகளைக்காண்பதற்

கு உபாயம் இது என்று அறிந்திலோம். ஒன்றுக்கொன்று ஒவ்வாதவெவ் வேறுகாரணங்களைச் சொல்லிவருந்தி மாறுபட்டோமே அல்லாமல்நிச்சய மாகக்கண்டோம் இல்லை, நாங்கள் எங்களுடைய தபோபலன்போல் தே வரீர் இங்கே எழுந்தருளப்பெற்றோம். வாசனைவீசும் துளசிமாலை அணியு ம் திருமாலே வியாசமுனிவர், அந்த வியாசமுனிவர் அருளால் அழகியக ண்போல்விளங்கும் பதினெட்டுபுராணங்களையும் கற்றுணர்ந்தீர் அறம்பொ ருள் இன்பம்வீடு என்னும் நான்குபொருள்களாற்பெருகும் கீர்த்தி உடை யவரே? தேவரீர் அறியாதவிஷயம் திரிலோகங்களிலும் இல்லை. ஆதலால் பலவழிகளாலும் நிச்சயித்தறிந்தபடி சிவபெருமான் திருவடிகளைக்காண்ப தற்குரிய காரணத்தை அடியேங்களுக்கு உபதேசித்தருள்க. தேவரீர்சொ ல்லாமற் சும்மாபோய்விடவேண்டாம். சூதமாதவரே! தேவலோகத்தில் உள்ளகற்பகவிருட்சம்போல் பெரியோர்கள்தரிசனம் பயன்படாமற்போ கமாட்டாது என்றுசொல்லிய மாத்திரத்தில் சூதமாமுனிவர் மனமகிழ்ந்து சொல்லுவார். நீங்கள்சொல்லிய இந்தப்பொருள் பதினெண்புராணங்களு க்குள் காந்தபுராணத்தின் ஆறுசங்கிதைகளில் மாறுப்புகழ்பெற்றோங்கும் சனற்குமாரசங்கிதையில் காளிகாகாண்டத்தில் கலந்திருக்கும்தீர்த்தமான் மியத்தில் உள்ளது. இதைப்பூர்வம் திருநந்திதேவரிடத்தில் சனற்குமார முனிவர்கேட்டுப்பெருங்கருணைகூர்ந்துவியாசமுனிவருக்கு உபதேசிக்க, அந்தவியாசமுனிவர் எனக்கு உபதேசித்தருளினர், நீங்கள் பரமஞானம் உடையவர்களாய் விரதநெறிகளில்தவறாமல் பரிசுத்தமானதபோபலத்தா ல் ஆணவம்முதலிய மலமாசுகளை ஒழித்துப் பார்வதிதேவிபாகராய் விளங் கும் பரமசிவனுடையதிருவருளைப்பெற்றிருக்கின்றீர்கள், ஆதலால்நன்றாக இந்தவிஷயத்தை உங்களுக்குத்தெளியச்சொல்வேன், ஒருமனதாய்க்கே ளுங்கள் என்றமாத்திரத்தில், அண்டர்நாயகனும் ஆனந்தத்தாண்டவநாய கனும் அடியவர் உள்ளத்தைக் கோவிலாகக்கொண்ட நாயகனும் ஆகிய எ ங்கள் நாயகனுடைய திருவடிகளைக்காண்பதற்கு உபாயமாகப் பெருமை பொருந்திய தீர்த்தமான்மியத்தில் தேவரீர்பெற்றுக்கொண்டது எப்படி? என்றுகேட்ட மெய்த்தபசிகளுக்கு இம்மையிலும் மறுமையிலும் சுகம் உ ண்டாகும்படி சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

புராணவரலாற்றுப்படலம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

# சனற்குமாரப்படலம்.

---

சகரரால் தோண்டப்பட்டகடல்சூழ்ந்த உலகத்திலுள்ள மனிதர்கூட்டங்களும் சோழனும்பாண்டியனும் வந்துபடர்ந்திருக்கும்செம்பொன்குவியல்களைக்கவர்ந்துகொண்டு போகாதபடிக்குப்பரிந்து பாதுகாப்பவர்களைப் போல் அசுரர்களும் தேவர்களும் இயக்கர்களும் சித்தர்களும் கந்தருவர்களும் கின்னரர்களும் சாரணர்களும் பிறருங்கூட்டமாய் நெருங்கிக்காவல் செய்ய மேருமலையானது மூன்றுஉலகங்களையும் ஊடுருவி மேலோங்கிஇருக்கும். அந்தப்பொன்மலையானது தன்னிடத்தில்சேர்ந்தபொருள்களையெல்லாம் தன்னிறம்ஆக்கும்செய்கையால், தனக்குஇனமாயிருக்கின்றமாணிக்கவண்ணராகிய திருவேகம்பருக்கு அல்லாமல்மற்றவர்களுக்கு வணங்காததாகி உயர்ந்திருக்கும்பலகிரகங்களும் நட்சத்திரங்களும் எந்நாளும் பிரதட்சிணம்செய்ய இரவையும் பகலையும் விளங்கச்செய்து கலந்திருக்கும்பெருந்திசைகள்எட்டையும் பகுத்துக்காட்டிநின்றது. விரும்பும்படியான இதன்ஒளிபடர்ந்து தேவலோகம்பொன்னிறப்பெற்றதுஎன்று எல்லாரும் அதிசயமடைதற்குரியமலையும் அதில்உள்ளபலமணிகளைவாரிக்கொண்டு மேலேயிருந்து இறங்கும்முழக்கமுள்ள வெள் அருவிகளும் விளங்குங் காட்சியானது பூர்வம்பெருமைபெற்றிருந்த முப்புரங்களைச்சிரித்து எரித்தருளிய சிவபெருமான் நாணியின்பூட்டைக்கழற்றிவைத்தவில்லையும் அதனிடத்தில்சஞ்சரிக்கும் பலபுள்ளிகளையுடையபாம்புகள் அந்தவில்லில் நாணிகளாய் நிறைந்துவிளங்குந் தொடர்ச்சியையும்ஒக்கும். மலைகளின்இறக்கைகளையெல்லாம்அரிந்த இந்திரனுடையபலம் அழியும்படி போர்செய்து அழித்து, அவன்வளைத்தவில்லைப்பறித்து மேலேவைத்தாற்போல் திவலைகள் அழகிய இந்திரவில்லைக்காட்டும். அலைவீசும்நீரையுடைய அருவிகளால் சூழப்பட்டிருக்கும் மேருமலையின்பொன்மாற்றினில் உயர்ந்திருப்பதுஎண்ணிறந்தமுனிவர்கள் நிலையாகக்கூடிச்செய்யும் தவம்என்னும் பெருந்தீப்பற்றுவதனாற்போலும்.

தடுக்கப்படாதோங்கும் பெருஞ்சோதிமயமான செம்பொன் பழுத்திருக்கின்ற சீதளமானசுனைகளோடு உயரும்கொடிமுடிகளையுடைய மேரும

லைக்காந்தியின்விளக்கம்மடங்காமல் பலகிரணங்களைவிரித்துஎழுந்து ஓங்கி யகாட்சிபோல், அந்தமேருமலைமேல் மகிழ்ச்சியடைந்திருக்கும் வண்டின் கூட்டங்கள் பெண்வண்டுகளைத்தழுவிக்கொண்டு உறங்குவதற்குஇடமான பூஞ்சோலைகளால் சூழப்பட்டிருக்கும் சதசிருங்க மலையென்றுஎங்கும் பெய ர்பெற்றஒருமலையுண்டு. அந்தச்சதசிருங்கமலைமேல் குரா,வசந்த மல்லிகை, உழிஞை, மந்தாரம், குருந்து, பாதிரி, பாலை,முந்திரிகை, மருது,அரசு, அசோகு,ஞெமை, ஓமை,வஞ்சி, காஞ்சி, குங்குமம், நமை, ஒடு, வெண்ணி றமுள்ள முல்லை, உதி, செருந்தி, சேரான்கொட்டைமரம், புளியமரம், அகில்முருக்கு, சந்தனமரம், தேற்றாமரம், மாமரம். வில்வம், மூங்கில், பச் சிலைமரம், மாதுளை, வேங்கைமரம், அதிமதுரம், மகிழமரம், இவைபோல் வன வெல்லாம் நெருங்கி ஓங்கும். அந்தமலையானது அசுரருடைய முப் புரங்கள் எரியும்படி நகைத்தருளிய சிவபெருமான் திருவடியில்வைத்தப த்திமாறுத இயல்புடன் நிறைந்திருக்கும் மெய்த்தவமுடைய யோகியர்க் கெல்லாம் பரிசுத்தமான நல்லதவச்சாலையுமாய்த்தென்றல் தவழவும் புஷ்ப வாசனை அடரவும் தெளிந்திருக்கும் நீரையுடைய எண்ணிறந்த சுனைகளு டன்விளங்கி மரணமில்லாத தேவர்கள்முதலானவர்களுக்குப் போகபூமி யும் ஆயிற்று. அவ்விடத்திலேவர்மும் பிரமதேவனுக்கு மனைவியாகிய சர சுவதியானவள் அக்கினியின்நடுவில்நின்று அருந்தவம்செய்வதுபோல் வா சனைவீசும் செந்தாமரைப்பூவில் அன்னப்பட்சியானது இரைதேடும் எண் ணத்துடன் அசைவற்றிருக்கும். பொங்கிப்பெருகும் வெண்மையான அ லைகளையுடைய அந்தத்தடாகத்தின்பக்கத்தில் திரிபுராந்தகனாகிய சிவபெ ருமான் அந்தச்சரசுவதிக்கு வரங்கொடுத்துத் தங்கியகாட்சிபோல் மணம் வீசும் மலர்நிறைந்து அடர்ந்திருக்கும் கொன்றைமரம் பொன்மலர்சொரி வதையுடையதாம். வளமானசுனையில் பூத்திருக்கும்மலர்கள் சந்திரசூரியரு டைய கிரணங்கள் தம்மேல் தலத்தலில்லாமையால் ஒருவேளைமலர்ந்து ஒருவேளை குவியும் செய்கை அவ்விடத்தில் இல்லாமல் கட்டுஅவிழ்ந்து எ ந்நாளும் ஒரேதன்மையாய்க் குற்றமற்ற பல ரத்தினங்களின் ஒளிதடவக் குளிர்ந்து மலர்ந்து சனன மரணங்களைக்கடந்து சந்திரசேகரனாகிய சிவ பெருமானுடைய திருவடிகளைச்சேர்ந்த மெய்யடியார்களை ஒத்துஇருக்கின் றன. ஐம்புலன்களின் ஆசையை ஒழித்த முனிவர்களுடைய தேகத்தில் விளங்கும் விபூதியும் வாசனைவீசும் மதசலத்தையுடைய மலைபோல் உயர் ந்திருக்கும் களிற்றுயானையின் நீண்டதந்தங்களில் விளங்கும் முத்துகளும் மூங்கில்களில் சிந்தியமுத்துகளும் நெருங்கிப் பூரணசந்திரனைப்போன்ற நிலாக்கிரணங்களின் வெண்ணிறமானது பரிசுத்தமான பொன்னிறத்தை விழுங்கிவிட்டதோ? அல்லாமல் அந்தமலையின் பொன்னிறமானது வெ

ண்ணிறத்தை விழுங்கிவிட்டதோ? யாம் அது அறியோம். இத்தன்மையான அலங்காரம் பெற்றிருக்கின்ற சதசிருங்கத்தில் எண்ணிறந்தோங்கும் பெருவளமுடையனவாகி அரும்புகளையும் மலர்களையும் உடையசோலைகளாலும் சண்பகவிருட்சங்களாலும் வரிசை வரிசையாய் வளரும் நாரத்தஞ்செடிகளாலும் தென்னமரங்களாலும் கோங்குமரங்களாலும் வாழைகளாலும் சூழப்பட்டுத் தாமரைமிகுந்திருக்கும் சுனைகள் நிறைந்த பிரமவனம் என்று ஒருவனம் உண்டு. அந்தப்பிரமவனத்தின் நடுவில் பிரமதேவன்வசிக்கும் இடமாகிய பிரமநகரம் தன்னைத்தானே ஒத்துவிளங்கும்.

அழகுபொருந்திய இந்தப் பிரமநகரத்தின் ஒருபக்கத்தில் கீர்த்திபெற்றோங்கும் ஒரு ஆண்சிங்கமானது தன்னை அனந்தம் சிங்கங்கள் சூழவீற்றிருக்கும் தன்மைபோல் வெண்மையான விபூதியின் ஒளிவீசும் அதிசயத் திருமேனியுடைய முனிவர்கள்சூழ்ந்துதுதிக்கக் கருணையோடுவாழ்ந்திருக்குஞ்சனற்குமாரமுனிவர் அஸ்திபூஷணனாகியசிவபெருமானுடையதிருவடிகளை மனதில் பதியவைத்து யோகம்செய்துகொண்டிருக்கும் நாள்களில் ஒருநாள் விடியற்காலையிலெழுந்து கங்கையில் நீராடித் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் பிதிரர்களுக்கும் செலுத்தவேண்டிய கடனை அவர்கள் மகிழும்படி தெண்ணீர் இறைத்து நியாசமும் தியானமும் செய்து, அஞ்ஞானத்தை அகற்றவல்ல விரசாக்கினியின் விதியால் பூத்தவிபூதியை அழகியகையில் எடுத்துப்பேரன்போடு நியாச முறைக்குரிய தியானமுதலாக, அடைதலுற்ற பஞ்சப்பிரம மந்திரத்தாலும் அக்கினிஎன்ற தன் தொடக்கத்தாலும்முடிவில்லாதஜாபால மந்திரங்கள் ஏழாலும் அறுவகையான அதர்வமந்திரத்தாலும் அழகுபொருந்திய இடக்கையில்வைத்து முந்திமூன்றுதரம் மந்திரித்துத் தண்ணீரால் குழைத்துச் சிரசாதி பாதம்வரையில் பஞ்சப்பிரமமந்திரங்களையும் சொல்லித்தேகமெல்லாம் நிறையப் பூசிப் பின்புத் திரியம்பகங்களால்சொல்லப்படும் ஸ்ரீ பஞ்சாட்சரத்தை உச்சரித்துத் தண்ணீரால் ஆசமனம் செய்து பின்னும் மூன்றுதரம் திரியம்பகமந்திரத்தாலும் முறையாக உச்சரிக்கப்படும் அஞ்செழுத்தாலும் திரிபுண்டரங்களையும் மும்மூர்த்திகள் முக்குணங்கள் மூன்றுவேதம் மூன்றுலகங்கள் மூன்றுநிறங்கள் மூன்றுதீ ஆகிய இவற்றின் வடிவமாக மனதில்பாவித்து உச்சிமுதல் எட்டு உறுப்புகளிலும் அழகாகத்தரித்துச்சூரியனுக்கு அர்க்கியம்கொடுத்துக் கீழ்த்திசையைநோக்கி மௌனம் அடைந்து நல்ல ஆசனத்தின்மேல் சுகாசனமுடையவராகிப் பஞ்ச பூதங்களை ஒவ்வொரு பூதத்தில் பொருந்த ஒடுக்கிப் பிராணனைப் பிரமரந்திரத்தில் ஒடுக்கியபின்பு, பாதகங்களுக்கு எல்லாம் பாத்திரமாயிருக்கின்ற அசுத்தமாமிசதேகபந்தத்தை

வாயு பீசத்தால் வாட்டி உலர்த்தி, வன்னிபீசத்தால் வெந்து சாம்பலாகச் செய்து, அதை வருணபீசத்தால் குளிர நனைத்துப் பிருதிவிபீசத்தால் திரட்டி வெவ்வேறான உறுப்புகளை யெல்லாம்பகுத்து மேன்மையாகச் சத்திபீசத்தால் நிறைத்து மேவியபின்பு விதிப்படி உயிரை மாசில்லாத தேகத்தில் பழையபடி நிறுத்தி, அவ்விடத்தில் தோன்றும் ஆதாரபங்கயத்தில் விளங்கும் அட்சரரூபியாய் நிறைந்ததேவியை முறைமையாக எழுந்தருளவைத்து, இருபத்தோராயிரத்து அறுநூறு சுவாசங்களை அஜபாமார்க்கத்தால் பிரித்து மாசில்லாதோங்கும் விநாயகக்கடவுள் முதலானவர்கள் மகிழும்படி அவர்களுக்குக்கொடுத்து ஆவியாகிய இலிங்கத்தில் விதிப்படி அந்தரியாக பூசைசெய்து, முடித்தபின்பு புறத்திலும் சிரசு முகம்முதலாகச் சொல்லப்படும் உறுப்புகளில் எல்லாம், பிராட்டியும் ஐம்பது அட்சரவடிவானவளும் ஆகிய சத்தியை நன்றாக ஆவாகனம் செய்து பிராணாயாமங்கள் முதலியவைகளை முறையாகப் புரிந்து பின்பு சூரியனைக்காணுமளவும் அருமையான வேதகாயத்திரி என்னும் மகாமந்திரத்தை ஆயிரத்தெட்டு உருச்செபித்து, எண்ணிய யோகசித்தியாகும் பொருட்டுக் கணபதியை முன்பு பூசைசெய்து, சூரியமண்டலத்திலும் பச்சரிசியிலும் புகழ்ந்துபேசும்படியான இலிங்கமூர்த்தியினிடத்திலும் வாசம்செய்யும் அங்குட்டரூபியாகிய சிவபெருமானை விதிப்படி பூசைசெய்து, ஆதாரயோகத்தை அடைந்து தன்மனதில் ஈசம் என்று சொல்லப்படும் எட்டு இதழ்களும் குற்றமற்ற வைராக்கியம் என்னும் பொருட்டும் சிறப்பித்துச்சொல்லும்படியான வாமாதிகேசரமும் ஆகிவிளங்கும் கமலம் ஆவியாகி யாமத்தில் மலரக்கண்டு அந்தக்கமலமலர்மேல் ஏகனும்மும் மூர்த்தியும் ஆகி முக்குணங்களுக்குஇறைவன் திரிலோகநாயகன் முக்கணன் புருட்டுவருத்தனன் நீலலோகிதன் நீலகண்டன் ஈசானன்வன்னிரேதா நல்ல சத்தியன் அருவமானவன் உருவமானவன் புகழ்பெற்றோங்கும் புருடன்விச்சுவரூபன் புருட்டுதன்சிவன் புருகூதன் சத்து பராபரம் பரமான்மாமகத்து பரப்பிரமம் என்று எடுத்துச் சொல்லப்படும் பெயர்களின் பொருளாய் யாவராலும் சொல்ல ஒண்ணாத பரவெளியின் நடுவில் பெருஞ்சோதிமயமான சதாசிவமூர்த்தியை இத்தன்மையான சத்தியோடு நேராகக்கண்டு, தன் உயிரை அந்தப்பரம்பொருளோடு கலக்கும்படிசெய்து, தான்வேறு அதுவேறு என்னும் இரண்டு பகுப்பு ஒழிந்து, பிரமதேவனுடைய புத்திரனாகிய சனற்குமாரமுனிவர்யோகத்தில் அசைவற இருந்தார். அந்தச்சனற்குமாரமுனிவர் அவ்விடத்தில் அந்தப்பிரகாரம் செய்தற்கரிய யோகத்தினால் ஆனந்தபரவசம் அடைந்து, மெய்ஞ்ஞானக் கண்ணைத்திறந்துகொண்டு தூங்காமல் தூங்கும்போது தேவாதிதேவனாகிய சிவபெருமான் மாமரத்தில் வாசம்செய்வ

தை விரும்பும் குயில்போல் பேசுகின்ற பார்வதிதேவியாரோடு உயிர்களை க்காத்தருளும் பொருட்டுத் திருவருள்சுரந்து ஊற்றெடுக்கத் தருமதேவ தையான ரிஷபவாகனத்தின்மேல்தங்கி, நாகலோகத்தாரும் கந்தருவரும் இராட்சதர்களும் சித்தர்களும் யோகிகளும் திக்குப்பாலகர்களும் நவரத்தி னமுடிகளால் பாதுகையைத்தடவவும்.

மற்றும் வீணைவாசிப்பதில் வல்லவர்களும் விருதுகளை எடுத்துச்சொ ல்லி வீணைவாசிக்கவும் பெருமைபொருந்திய ஆகாயத்தினிடமாக மகிழ்ந் து எழுந்தருளி உலாவினார். நாயேனை அடிமையாகக் கொண்டருளும் ஆண்டவன் அப்படிஉலாவுகிறதைச் சனற்குமாரமுனிவர் யோகத்தில் பதி யவைத்த சிந்தனையால் அறிந்து கொள்ளாதவராய் விரைவில்தாம் இருக் கும் இடம்விட்டு எழுந்திராமையைக்கண்டு எம்பெருமான்கருணைமிகுந்து பார்வதிதேவியோடு சந்திரசடாதாரியான எம்மையே விரும்பி இதயாரவி ந்தத்தில் எழுந்தருளவைத்து எம்மிடத்தில்சி றப்பு விதியால் ஒடுக்கியமன முடையன் என்று சொல்லும்படி இருக்கின்றான் என்று சந்தோஷத்துட ன் தமது ஆலயத்திற்கு எழுந்தருளினார். எம்பெருமானாகிய ஸ்ரீ நந்திதேவ ர் அதைக்கண்டு கோபங்கொண்டு அழகில்லாத ஒட்டகம்போல் எமது ஆண்டவனை அசட்டை செய்திருந்ததனால் அந்த ஒட்டகவடிவம் உண்டா கக்கடவது என்று சாபங்கொடுக்க இதற்கு என்னசெய்யலாம் ? என்று வியாகுலம் அடைந்த அந்த முனிவர் ஒட்டகம் ஆகிப் பூலோகத்தில் சஞ் சரிக்கும்போது பூர்வம்செய்த புண்ணிய வசத்தால் காஞ்சிமாநகரத்திற்கு வந்து சேர்ந்தார். அந்தக்காஞ்சிமாநகரத்திலே கச்சபேசுவரநாதன் அமர்ந் தருளும் கச்சபாலயத்தின்பக்கத்தில் ஐம்பொறிகளை அடக்கி உலகமெல் லாம் சிருஷ்டிசெய்யும் எண்ணத்தோடு பிரமதேவன் மாதவம்செய்துகொ ண்டிருக்கும் இடத்தை அணுகியமாத்திரத்தில் கொடியபாவத்தினால் ஒட் டகவடிவாயிருக்கும்குமாரனைப் பிதாவாகிய பிரமதேவன்கண்டு எல்லாரும் இகழும்படி பரவியபாதங்களையும் நீண்டகால்களையும் மடிந்து தொங்கும் தோல்வாயையும் பழிக்கும்படியான உடலில் நெளிந்து நீண்டிருக்கும் கழுத்தையும் உடைய ஒட்டகவடிவம் பெற்ற குமாரனைப் பார்த்து நின்று ஐயோ ! ரிஷபக்கொடியேந்தும் சிவபெருமான் திருவடிக்குத் தொண்டு செய்யும் சிவஞானத்திற்கு உரியவனாகிய இவனுக்கு நன்மை தருவனவா க நான் என்னசெய்வேன் ? என் மகனுக்கு இந்தவடிவம் வந்து சம்பவித் தது எப்படி ? என்று எண்ணியோகத்தை அடைந்து முன் நடந்தவைக ளை எல்லாம் அறிந்து, அந்தத்தோஷத்தை நீக்கும்பொருட்டு ஆகமவிதிப் படி கச்சபேசுவரரிடத்தில் சென்று, பூசைசெய்து துதிக்க நினைத்துத்தேவ

ர்கள் போற்றிப் புகழும் இளஞ்சந்திரனை முடிமேல் அணிந்திருக்கும் வள்
ள்லே! உலகங்களைப் படைத்துக்காத்து அழிக்கும் ஒரு முதல்வனே !
ஆமை உருவை நீக்கி மாயவனை ஆட்கொண்டருளிய உன்திருவடிகளே
சரணம். காசிகேதாரம்புட்கரம் குருக்ஷேத்திரம் அழகிய நைமிசாரணியங்
களைப் பார்க்கிலும் புகழ்பெற்றோங்கும் காஞ்சிமாநகரம் உயர்ந்தது என்று
சொல்வது சொல் மாத்திரத்தது அல்ல. சிவபெருமானே ! நீயும் உமைய
வளுமே அல்லாமல் இந்தநகரத்தைப் படைத்தவர்கள் இல்லை. எந்த ஊழி
யிலும் பிரத்தியட்சமாக நானே கண்ணாரக்கண்டு தெளிந்ததாம் காத்தரு
ள்செய்யும் உன் அருளால் உயர்ந்த பதவிபெற்றவர்கள் அநேகர், காத்தரு
ளுந்தொழிலை மேற்கொண்டு அஷ்டமூர்த்தம் ஆனவரோ ! செவ்வரிபர
ந்த கண்களையுடைய பார்வதிதேவியை மணம் புரிந்தருளும் பேரின்ப
வடிவமே! பிறவித் துன்பங்களைப்போக்க வல்ல கருணைக்கடலே! கருணை
செய்க. எங்களுக்கு உன்னையல்லாமல் வேறுதிக்கு இல்லை. என்று இ
ரண்டு கண்களும் தாரை தாரையாய் நீர் சொரியவும் நாவுதடித்துப்போக
வும் நெக்கு நெக்கு உருகித் துதிசெய்தான். பிரமதேவன் வாழ்த்திய ஒலி
யானது அழகிய செவியில் சென்று ஏறிய மாத்திரத்தில் திருவருள் பெ
ருகியதனால் விண்ணுலகத்தில் உள்ள தேவர்களும் பூதகணங்களும் இர
ண்டு பக்கங்களிலும் நெருங்கிவரச் சிவபெருமான் பிரத்தியட்சமாகி மக
னே ! நீ வேண்டிய வரத்தைக் குற்றம்அறக் கொடுப்போம் சொல் என்று
திருவாய் மலர்ந்தருளப் பிரமதேவன் அவர் கீர்த்தியைப் புகழ்ந்து பாடிச்
சந்தோஷம் ததும்ப நின்று இது சொல்லத் தொடங்கினான். உன் திருவ
டித் தொண்டு செய்வதில் தவறாதவனும் என் குமாரனும் ஆய்த் தவத்தில்
மிருந்த சனற்குமாரன்பூர்வம் சதசிருங்கமலையில்தங்கள்இணையடிகளைநினை
த்துச் சிவயோகம் செய்து தவத்தில் இருக்கும்போது நிஷ்டையில் மனம்
அழுந்தி இருந்தபடியால் அங்கே தாங்கள் வந்ததை அறியாமற் போய் வி
ட்டான். அந்த நாள் அவ்விடத்தில் வந்த ஸ்ரீநந்திதேவர் சபித்தபடியால்
ஒட்டகவடிவம் ஆய்விட்டான். இப்பொழுதே இந்தச் சாபத்தைத்தீர்த்த
ருள்க என்று இரந்து புகழ்ந்து தொழுதல்செய்ய எம்பெருமானும் நான்கு
வேதங்களை உணர்ந்தோனே ! எமது அடியவர்கள் நன்மைக்கு ஏதுவாகக்
கொண்டு செய்யும் தண்டனைகள் யாவை ? அவைகள் நம்மால் விலக
மாட்டா. ஆதலால் இந்தச்சாபம் அழியமாட்டாது இதை நமது நந்தி
யேநீக்குவான்என்றுவிரும்பிஅநுக்கிரகம்செய்துமறைந்துபோய் விட்டார்.
அப்பொழுது பிரமதேவனுடைய தபோபலத்தால் அங்கே வந்தருளிய ஸ்ரீ
நந்திதேவரை வேண்டிக்கொண்ட மாத்திரத்தில் அந்த ஸ்ரீநந்திதேவரும்
மகிழ்ந்து மலரவனே ! எங்கள் கச்சபேசுவரர் காட்சி கொடுத்தபடியால்

அப்பொழுதே உன்மகன் பெற்ற சாபம் தீர்ந்துவிட்டது, ஆனாலும் எம் பெருமான் தன் அன்பரிடத்தில் நிலையாகவைக்கும் பெருங் கருணைகரன் என்பதை நிலைபெறச்செய்தாரோ அல்லாமல் வேறல்ல. உன்மகன் மண மலர்ச்சோலை சூழ்ந்து விளங்கும் வடமேருகிரியில் எம்மிடத்திற்கு வரக்க டவன். வந்தால் இத்தவடிவம் நீங்கிவிடும். பழிதீர்ந்தபின்பு எமது அ ருளால் இவன் நமது மாணாக்கனும் ஆகி நாம் விரும்பி அளிக்கும் சிவதீட் சை பெற்று விரிந்திருக்கும் கலைஞானங்களை எல்லாம் உணர்ந்து சிவஞா னம் அடைந்து துன்பங்களை அகற்றுவான் என்று அருள்செய்து போய்வி ட்டமையால் பிரமதேவன் தன் மகனைத் தன் அன்புள்ள கணங்களோடு சேர்த்து வடமேருகிரிக்கு அனுப்பிவிட்டு இப்பால் அருந்தவம் முடிந்த பி ன்பு நகரங்கள் எல்லாவற்றுள்ளும் சிறந்து ஓங்கும் காஞ்சிமாநகரத்தில் முருக்கடியில் வீற்றிருக்கும் கச்சபேசு வரருடைய திருவருளைப் பெற்று முறைமையாகச் சகல லோகங்களையும் முன்போல் விளங்கப் படைத் தான். வடமேருகிரியில் வழக்கப்படி ஸ்ரீ நந்திதேவர் இருக்கும் இடத்தி ற்குச் சனற்குமாரமுனிவரோடு சென்ற பிரமன் கணங்கள் அந்த ஸ்ரீ நந்திதேவருடைய திருவடிகளைத் துதிசெய்து சொல்லுகின்றார்கள். நீங் கள்போய் வடமேருவில் வாழ்ந்திருக்கும் திரு நந்திதேவர் என்னும் முதல் ஆசிரியனுடைய பாதாரவிந்தங்களைவாழ்த்தி இந்தப்பிள்ளையை அவருக்கு மாணாக்கனும் ஆகும்படி சேர்த்துவிட்டு வாருங்கள் என்று பிரமதேவன் எங்களை அனுப்பினார். என்றுசொல்லி அருள் பெற்றுக்கொண்டு அவர் கள் போகத் தன் அருட்பார்வையால் ஒட்டகமாகும் பழி உடலை நீக்கி விளங்கிய சனற்குமார முனிவனைத்தன் மாணாக்கன் என்றுசொல்லும்படி ஆகச்செய்துகொண்டார். அந்தச் சனற்குமார முனிவர் ஸ்ரீ நந்திதேவரி டத்தில் தீக்கைபெற்று வந்தனைவழிபாடு செய்து பதினெண்புராணங்க ளும் நியாயநூலும் கரும முதல்நூலும் தருமநூலும் விளங்குந்தன்மை யுள்ள சிட்சையும் சங்கீதநூலும் அறிவுடையோரால் வழங்கப்படும் நவ வியாகரணமும் தர்க்கசாஸ்திரமும் மூன்று ஸ்கந்தம் என்னும் பிரஸ்தா னத்திரயமும் ஆகிய பலநூல்களையும் முறையாகப் படித்து எல்லாவற் றையும் உணர்ந்துகொண்டார்.

இவைகளோடு பொருந்தியகல்ப சூத்திரங்களும் இருக்குவேதம் முத லான நான்கு வேதங்களும் ஆயுள் வேதமும் வில்வேதமும் காந்தர்வ வேத மும் அருத்தநூலும் ஆகப்படர்ந்திருக்கும் பல நூல்களையும் விதிமுறையா கக் கற்றுத் திருநந்திதேவருடைய திருவருளைப்பெற்ற சனற்குமார முனி வர் பின்னும் ஒன்றை இரந்து வேண்டித்தொழுது சொல்லுகின்றார்.

எம்பெருமானே! அடியேன் தேவரீரிடத்தில் சகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்தேன். அந்த நூல்கள் எங்கும் இன்பமயமான சிவபெருமானை அடைவது ஒன்றே முத்தி என்று சொல்லுகின்றன. அசுத்தமாமிச தேகாபிமானத்தைவிட்டுப் பரவெளிப் பொருளை அடைதற்குரிய அன்புள்ள ஆன்மா அல்லவோ சிவபெருமானுடைய ஐசுவரிய குணத்தை அடையும்? மனிதன் ஆகாயத்தைத் தோல்போல் சுருட்ட வல்லவன் ஆனால் நிர்மலமான சிவபெருமானைக் காணாமல் இன்பவீடு பெறுவான். மகிமைபொருந்திய சுருதிகள்சொல்லும் நெறிகளும் இவைகளே! ஆதலால் அந்தச்சிவபெருமானைக் காண்பதற்குரிய காரணமே அறியவேண்டும். அதை அறியும் உபாயத்தைப்பல விதங்களாலும் உபதேசித்தருளினீர் அவைகளிலும் வருத்தமில்லாமல் எளிதில் கண்டுகொள்ளும் உபாயமும் சொல்லுக. என்று பெரும்புகழ் படைத்தோங்கும் சனற்குமார முனிவர்சொன்னமாத்திரத்தில் எம்பெருமானாகிய ஸ்ரீ நந்திதேவர் செவிகொடுத்துக் கேட்டுப் பரம சந்தோஷம் உண்டாகச் சொல்லுகின்றார். எமது அருளுக்குரிய சனற்குமாரனே! உன்னைச்சுப்பிரமணிய சுவாமியின் அம்சம் என்று சுருதிகள் சொல்லியபடியால் மாசில்லாத அறிவுடையவனாகி எல்லா நூல்களையும் ஐயம் அறக் கற்றுணர்ந்தாய். நீயே அருந்தவத்திற்கு அரசன். உலகம் எல்லாம் மருள்தீர்ந்து உய்யும்பொருட்டாக நீ கேட்டதை வகுத்துச் சொல்லுவோம் கேள்.

அந்தணர் அரசர் வைசியர் ஆகிய இருபிறப்பாளர்கள் வேதமந்திரத்திற்கு உரியவர் ஆவார்கள். இவர்களுக்குநிலை நான்குஎன்று அறிவுடையோர் சொல்லுவர் - அந்தநான்குநிலைகளாவன பிரமசாரி நிலைஇல்வாழ்க்கைநிலை துறவறநிலை அழகிய வனவாசநிலை என்பனவாம் - முனிவர்கடன் தீர்ப்பதற்குவேதங்களையும் அங்கங்களையும் ஓதும்பொருட்டுக் குருவானவர்வேதவிதிப்படி எட்டாம்வயசில் அந்தணர்களுக்கும் பதினோராம்வயசில் அரசர்களுக்கும் பன்னிரண்டாம்வயசில்வைசியர்களுக்கும் உபநயனம்செய்விப்பார் அதன்பின்பு அறம்பொருள் இன்பமாகிய பயன்களோடுபிதிரர்தேவர் இவர்களுடையகடன்களும்ஒழிவதைநாடிக்குயில்போல்இனிமையாகச்சொல்லும் சொல்லையும் மெல்லியதோள்களையும் உடையமனைவியைக்கலியாணம் செய்துகொள்வார்கள். பின்புஅருந்தவம்அடையவேண்டிவனவாசம் செய்யப்போவார்கள். முனிவர்கடன் முதலியகடன் எல்லாந்தீர்ந்தபின்பு மகிமைபொருந்திய துறவறத்திற்செல்வார்கள். பொய்யர்ன உலகவாழ்வைவெறுத்து நல்லறிவுடையவர்களாய்த் துறவறத்திற்குச்சென்று, இருவகை நியாயநூல்களோடு ஞானநூல்களையும்வேதமுடி-

வையும் கசடறக்கற்று உணர்தல்வேண்டும், இருவகைநியாயநூல்கள் தேவகாண்டம் ஆகிய பூர்வநியாயநூல், ஞானகாண்டம் ஆகிய உத்தரநியாய நூல்என்று பெயர்பெறும். தேவகாண்டம் ஆகிய பூர்வநியாயநூலானது சிவபூசை செய்வதற்கு உரியதாம். ஞானகாண்டமாகிய உத்தரநியாயநூலானதுசிவஞானத்தால் சிவபெருமானை அடைதற்கு உரியதாம். சுருதிப்பொருளை நிச்சயப்படுத்துவதாகிய அறுவகைலிங்கங்கள் அந்தலிங்கங்களின்சொல்முறையால் யூகித்துஎடுத்துக்கொள்ளப்பட்ட இடம்சொல்லுமிடத்தில் இந்தப்பெயர்களால் உண்டாகும் மென்மைவன்மை என்றஇவ்விரண்டையும் ஆராய்ந்தறிதல் வேண்டும். ஆன்மாவுக்கு இன்றியமையாதசிவபூசையானது பூர்வகருமநூலைச் சேர்ந்ததாம் - உபக்கிரமம், உபசங்காரம் அப்பியாசம் அபூர்வத்வம்பலம் அறிவுடையோரால் எடுத்துச்சொல்லப்படும் அருத்தவாதம் ஆகிய இவைகள் சிவபெருமானை அடைவது இப்படிஎன்று சொல்வதற்கு அடுத்தஉத்தரநியாயநூல் உண்மையை நிச்சயம் செய்வதற்கு உரியலிங்கங்களாம்.

(லிங்கங்கள், குறிகள்.)

அர்த்தசாமத்தில் மழுவேந்தி ஆனந்தகூத்தாடும் சிவபெருமானை இந்தப்பிரகாரம் கண்டுதெளிந்தஞானிபிரணவமந்திரத்தால் போற்றிமனஞ்சலிக்காமல் தேகம்மாய்ந்துபோகிறவரையில் பூசைசெய்தால் முக்கண்மூர்த்தியாகிய சிவபெருமான் பிரத்திட்சம்ஆவர், பிரத்தியட்சமானால் உண்டாகும் பேரின்பத்தை அநுபவித்து அந்தக்கடவுள் போல்வாழலாம். பின்பு அந்தஞானியானவன் மாயவாழ்க்கையில்பிறந்து இறந்துபோகாமல் சிவபெருமானோடுகலந்துகொள்வான். மனதிற்கு எட்டாதசிவபெருமானைப்பெறுவதற்கு முறையாகவரும் உபாயம் இதுவாகும். இந்தமார்க்கம் அறிவில்லாதவர்களுக்கு அசாத்தியமாம். சாத்தியப்படுவதாய் நேராகுமார்க்கம் சிவபெருமான் சிறந்துவீற்றிருக்கும் தலங்களில் வாசம்பண்ணுவதாம்- சிவஸ்தலங்களில் மரணம் அடைந்தால் அடைந்தவைகள் மிருகங்கள் நாய்கள்மாமிச பட்சணப்பறவைகள் புல்மரங்கள் ஆனாலும் முத்திஅடைவது நிச்சயம். நீஇதற்குக் கொஞ்சமேனும் சந்தேகப்படாதே என்றமாத்திரத்தில்பரமசந்தோஷம் அடைந்து, மாசில்லாதமகிமையையுடைய திருநந்திதேவருடைய பாதங்களைத்தொழுது சனற்குமாரமுனிவர் பதில்சொல்லுகிறார் - ஐயனே! சிவஸ்தலங்களிலே வாசம்செய்வதே நன்மார்க்கம் என்றுஅருளிச்செய்தீர் - பூலோகத்திலே சிவபெருமான் வாழ்ந்தருளும் ஸ்தலங்கள் எண்ணிறந்தனவாம் மிக்கமேன்மை பொருந்திய அந்தத்தல

ங்களில் மேலானதாய், விளங்கும் சிவபெருமானைப் பெறுவதாய் மோட்சதாகம் தருவதானஸ்தலம்யாது? அதைஇப்போது அடியேனுக்குத்தேவரீர்அநுக்கிரகம் செய்கஎன்றார், என்றமாத்திரத்தில் ஸ்ரீநந்திதேவர் க்ஷணநேரம் எண்ணிரிஷப வாகனத்தையுடைய சிவபெருமான்ஆதியிலே பார்வதி தேவியாருக்கு உபதேசித்ததை மனதிற்கொண்டு அந்தச்சிவபெருமானைத்தொழுது ரிஷபுத்திரனே! பூர்வம் சிவபொருமான் பார்வதிதேவியாருக்கு உபதேசம்செய்ததை நீநன்றாகக் கேள்என்று வரன்முறையாகச்சொல்லத்தொடங்கினார்.

சனற்குமாரப்படலம் முற்றிற்று.

---

உ

திருச்சிற்றம்பலம்.

# தலவிசேடப்படலம்.

இழைக்கப்பட்டிருக்கும் பலரத்தினங்கள் காந்திவிட்டுப்பிரகாசிக்கி
ன்ற பெருந்தீயைப்போல் பரவச்செய்யும் பெருஞ்சோதியானது நீலகண்
டப்பெருமானைக்கண்டு சேவிக்கவரும் தேவர்கள்பார்க்கமுடியாமல் இர
ண்டுகண்களையும் இமைக்கச்செய்யுந்தோறும் அந்தந்தத் தேவர்கள் அதன்
காரணம் அறியாமல் எங்களுக்குமுடிவுகாலம் கிட்டியதோயாதோ என்று
வருந்தும்படியானது ஆகிய ஒருபொன்மண்டபத்தில் மிக்கபலம்பொரு
ந்திய தோள்களையுடைய இரணியன்மார்பில் உள்ள இரத்தத்தைவாயால்
உண்டு எழுந்தமதச்செருக்கைச் சரபமாய் அகற்றிய பேராண்மையைப்
பார்த்து, எதனாலும் விலக்கப்படாத ஆணவம்முதலிய மும்மலச்செருக்
கையும் அழித்தருள்க என்று நரசிங்கமானதுபார்த்த இடம் எங்கும்சிங்க
மாய்த்திருவடியைத் தாங்கிக்கொண்டிருப்பதை நிகர்க்கும் ஆண்சிங்கத்தி
ன் பிடரிமேல் காந்திவீசும் செம்பொன்மணிப்பீடத்தில் அக்கினிசொலிப்
பதுபோன்ற செம்பவளச்சடைமேல்வீசும் அலைகளையுடைய கங்கையில்
அலைந்துவருந்தும் இளஞ்சந்திரனுக்கு இரங்கி, அதன்மேல்வைத்த நேசத்
தால் எடுத்துத் தன் இருப்பிடத்தில் கொண்டுபோய்க்கவலை இல்லாமல்கா
க்கும்பொருட்டுப் பூரணசந்திரன்வந்து சமயம்பார்த்துக் கொண்டிருப்ப
தை ஒத்த ஒளிவீசும் முத்துமாலைகள் அணியப்பட்டிருக்கும் சந்திரவட்ட
க்குடைமேல்நின்று நிழல்செய்யவும், முற்காலத்தில் புகழ்கள் எங்கும்நெ
ருங்க அடர்ந்து வெற்றிடம் இல்லாமையால் அந்நாள் நீலகண்டப்பெரு
மானிடத்தில் பிறந்தகீர்த்திகள் இரண்டுபக்கங்களிலும் செல்லும் இடம்
தேடிச்சுழல்வதுபோல் சிங்காதனத்தோடு சந்திரவட்டக்குடையின்கீழும்
மேலும் வெண்சோதிவிரிக்கும் இடங்களிலும்வெண்சாமரைவீசவும், வே
ண்டியவரங்களை வேண்டியபடியே பெற்றுமீண்டுபோகும் தேவர்கள் அந்
தவரங்களால் செருக்கடைந்து நீதிதப்பி அழியாதபடி புத்திசொல்லுகிற
வர்களைப்போல் மாறுபட்டு அழிந்துபோன கஜமுகாசுரன் வாள் எடுத்துப்
போர்செய்வதில் வல்லவனான சூரன்முதலானவர்களை வதைத்த தந்தத்
தோடு பெருஞ்சோதிவீசும் வேலாயுதத்தையும் காட்டிக்கொண்டிருக்கும்
கைகளையுடைய விநாயகரும், சுப்பிரமணியக்கடவுளும், இரண்டுபக்கங்க
ளில்விளங்கவும், உருவத்தால் பெருமைபாராட்டுவது பெருமை அல்ல,

உருவத்தால்சிறியவர் ஆனாலும் பார்வதிசமேதருடையஅருளிற்பெரியவராய் இருப்பதேபெருமை என்று சகலலோகத்தாரும்கண்டு தெளியக்காட்டிப் பிரமதேவன்முதலானவர்கள் வெளியில்நிற்கச் சிரிக்கும்படியான நடையையும் சிறியகால்களையும் பெரியவயிற்றையும் நெருப்புப்பொறிவீசும்குழிந்து ஆழ்ந்த கண்களையும் உடைய மகாபூதகணங்கள் அருகில்நின்று துதிசெய்யவும் இரண்டுகண்களுக்கும் அடங்காததிருமேனி அழகைப்பார்க்கும்தோறும் பூர்வம் தான்கொண்டமோகினி வடிவம்எடுக்க எண்ணி மாயவன் இடப்பாகத்தை விட்டுப்பிரியாமல் இருக்கும் பார்வதிதேவியாருடைய அழகையும் எம்பெருமான் அந்தப்பார்வதிதேவியார்மேல் வைத்திருக்கும் பார்வையையும்பார்த்து எண்ணிய எண்ணம் நமக்கு இனிமுடியமாட்டாது என்று அந்த எண்ணத்தை ஒழிக்கவும், நாட்டியம் செய்ய ஆரம்பிக்குந்தோறும் திருமேனி அழகைக் கண்ணாரக்கண்டு அதிகமோகம்கொண்டு தங்களைமறந்துதாள ஒத்தின்வழியில் பாதங்கள் பெயராமல் இருக்கும் தன்மையை நடராஜனுக்கு எதிரில் நாங்கள் நடனம் செய்யப்பயப்படுகிறோம் என்று இளமையும் பேரழகையும் உடைய ஊர்வசிமுதலானவர்கள் அபிநயச்செய்கையால் மறைக்கவும் செழுமையான தாமரைமலர்போலும் திருவடிகள் நோவ மேன்மேலும் ஓடி நவரத்தின ஒளிவீசும் முடிகளால் அழுத்துகின்ற தேவர் கூட்டங்களை விலக்கும்படியான திருப்பணியை நான்பெறும்படிகொடுத்து அவரவர்களுக்கு அநுக்கிரகம் செய்து அனுப்பிவிட்டு, அளவுபடாத பெருங்கருணை மலைபோல் அந்தச்சபாமண்டபத்திலே வீற்றிருந்தார். என்னை யடிமையாகக்கொண்டிருக்கும் சிவபெருமான் வீற்றிருந்தருளும்போது இமயமலை அரசன்பெற்றெடுத்த இறகின் அடிபோலும் தந்தங்களையும் சிவந்திருக்கும் வாயையும் அரும்புபோலும் தனங்களையும் தெய்வத்தன்மையுள்ள கற்பையும் உடைய உலகமாதாவான பார்வதிதேவியார் மும்மூர்த்திகளும் கண்டுதெளியாத கடவுள் நாயகன் திருவடிகளைவணங்கி இது ஒன்றுசொல்லத்தொடங்கினாள். வானத்திற்பொருந்தும் வீட்டின்பம் உன்சீர்பாததரிசனத்தால் கிடைப்பதாகும். வேதமுடிவை ஆராய்ந்து அறிந்து விளங்கும் தவம் தியானம் நிஷ்டைகளின் முறைப்படி முதிர்ந்துவாய்ந்த ஞானிகளுக்கே அல்லாமல் மற்றவர்களுக்கு உன் சீர்பாதகமலங்களைக்கண்டுகொள்வது மிகவும் அரிதாகும். அஞ்ஞானிகளும் மிருகங்களும் பறவைகளும் இவ்வுலகத்தில் உன்னைக்கண்டு வானத்தில் உள்ள முத்தியின்பம் அடைவது எப்படி? என்று கேட்டமாத்திரத்தில், மான் ஏந்தும் கையையுடைய சிவபெருமான் மாமிசதேகம்படைத்த உயிர்கள் எல்லாம் பிழைக்கும்படி கருணைமிகுந்து திருவாய் மலர்ந்தருளுகின்றார். செவ்வரிபடர்ந்து விசாலமான மை உண்

ட கண்களையும் அடிபரந்த பயோதரங்களையும் உடையாளே! கேள் யாம் பரவெளிப்பரப்பில் வசிக்கும் தன்மை உடையோம். உலகம் எங்கும்க லந்து நிறைந்து இருப்போம். இவ்வாறு விளங்கும் எமது நாலாம் பாதம் மண்ணுலகம் முதல்கீழேழுலோகங்களாம்.மற்ற மூன்று பாதங்கள்மேலே ழு லோகங்களில் இருக்கும். அவ்விதமாக விளங்கும் எம்மை ஒருவரும் அறியமாட்டார். மாறுப்புகழ்பெற்றோங்கும் உத்தம தலங்களில் எல்லா ரும் காணவாழ்வோம் என்று சொன்னமாத்திரத்தில் பரமசந்தோஷம்அ டைந்து அந்தத்தலங்கள் எவை? என்று கேட்டதேவிக்கு எம்பெருமா ன் சொல்லுகின்றார். வாசனைவீசும் கூந்தலையுடைய பார்வதியே! யாம் உன்னோடு மகிழ்ந்து வாசம்செய்யும் சேது மதுரை சிராப்பள்ளி திருவழு வூர் திருவையாறு திருவிடைமருதூர் யாம் என்றும் நடனம்செய்யச் சலி ப்படையாத தில்லை விருத்தாசலம் அண்ணாமலை திருவிரிஞ்சை திருஒத் தூர் காஞ்சி திருவாலங்காடு காளத்தி ஸ்ரீசைலம் சித்தவடம் அடியாரது சைவவேடம் நிறைந்திருக்கும் விரூபாக்கம் திரியம்பகம் திருக்கோகரணம் உச்சயினி மாகாளம் காசிகேதாரம் பிரபாசம் இமயமலை மந்தரம் கயிலை முதல் எண்ணிறந்தனவாம். யாம் வாசம்செய்யும் இடங்கள் என்று சொல் லத் தேவி கேள்விப்பட்டுப் பெருமானே! இந்தத்தலங்களிலும் சிறந்த தலம் யாது? என்று கேட்கச் சொல்லுகிறார். புண்ணியத்தலமான கா ஞ்சிமா நகரம் தலங்கள் எல்லாவற்றுள்ளும் சிறந்த நகரமாம். அந்தக் காஞ்சிமா நகரத்தை நினைத்தாலும் அதன் பெயரைப் பிறர் சொல்லக்கே ட்டாலும் சொன்னாலும் அது இருக்கும் திசையைநோக்கி வணங்கினாலும் யாவர்க்கும் பேரின்ப வீடு கொடுக்கும். அந்தத்தலத்தில் என்றும் மிக மகிழ்ந்து நாம் உன்னோடு வாழ்ந்திருப்போம். அந்த நகரம் பலர்கூடி வாழ்வதான காசியைப்பாக்கிலும் மேலானதாம். அந்தக்காசியில் இவ்வு லகத்தைக் காப்பதற்கு யாம் விசுவநாதன் என்னும்பெயரால் இலிங்கப்பி ரதிஷ்டை செய்து மாறுப்புகழ்படைத்து ஓங்கவைத்தோம். காஞ்சிமா நகரத்தில் ஒரு மாவடியில் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அ ருளல் என்னும் பஞ்ச கிர்த்தியங்களையும் நடத்தயாமே மகிமைபொருந்தி ய ஏகம்பநாதன் என்னும் திருப்பெயர்பூண்டு இலிங்கமானோம். இந்தக்கா ரணத்தால் காஞ்சிமாநகரம் எல்லாவற்றுக்கும் மேலானது என்று கண்டு தெளி அவ்விடத்தில் வந்தனைவழிபாடுசெய்து ஒரு நாளைக்கு ஆயினும் தங்கியிருந்தால்முத்திநிலை அடையலாம். ஊர்ப்பிரயாணம்போகும்போது வந்து ஆயினும் மறந்து ஆயினும் பொருள் ஆசைகொண்டு ஆயினும் மாறு ப்புகழ்படைத்தோங்கும் காஞ்சிமாநகரத்தில் ஒரு க்ஷணப்பொழுது வாச

ம் செய்தவர்களும் முத்தி அடைவார்கள். காஞ்சி என்று தன்சுபாவத்தால்தானே ஒருதரம்சொன்னால் பஞ்சமாபாதகங்கள் நீங்கிப் பரகதி அடைவது உண்மை. அந்தக்காஞ்சிமாநகரம் கலிநாசம் ஆகும்படி நாம் படைந்து வைத்தது. எந்தக் காலத்திலும் அந்த நகரத்தில் மனவருத்தமும் தீவினைவருத்தமும் அணுகமாட்டா. ஆலகாலவிஷம் அமுதத்தோடு அளாவியதுபோல் கறுத்தும் வெளுத்தும் அச்சத்தையும் ஆனந்தத்தையும் ஊட்டவல்ல கண்களையும் மேகலாபரணம் அணிந்திருக்கும் இடையையும் உடையாளே! அஷ்டதிக்குப்பாலகரைச் சூழ்ந்துகொண்டிருக்கும் பெருங்கீர்த்திஉடைய அந்த நகரத்தின் சிறப்புக்கொஞ்சம்கேள். நீர்வளமுள்ள காஞ்சிமாநகரமானது கலிமுதலான தீங்குகள் அணுகுவதற்கு அசாத்தியமானவேலிபோல் சூழ்ந்திருக்கும் சோலைகளையும் அந்தப்புரத்தில்நிலைத்திருகின்றசேனையைப்போல் குவளைமலர்விழித்திருக்கும் நந்தனவனங்களையும் தேவர்கூட்டம்போல் நிறைந்திருக்கும் பல தீபங்களுக்கு நிகரான செந்தாமரைமலர்த்தடாகங்களையும் கயிலையில்விளங்கும் பல சிங்காரங்களைப்போல் பல கோயில்களையும் உடையதாம். வாசனைவீசும் பூஞ்சோலைகளுக்குள் மேகத்தால் மறைக்கப்பட்டசூரியனைப்போல்விளங்கும்பழைய நகரத்தில் பம்பைநதி கம்பைநதி புண்ணியநதி மஞ்சள்நதி வேகவதி பாலிசேயாறு என்னும் ஏழுநதிகள் ஏழுலகங்களுக்கும் இட்டமுத்துமாலைகள்போல் ஒழுகும். வருகின்றவர்களைச் செந்தாமரை மலர்போலும் கைகளை எடுத்து விரைந்துவர நகரம் அழைப்பதுபோல் அசைக்கும் தென்னமரம் நீண்டிருக்கும். ஆயிரம் சாகைகளைச்சாகைகளாகப் படைத்து இவ்விடத்தில் அமர்ந்துவாழும் ஏகாம்பரநாதரோ எனக்குத் தலைவர் என்று எழுகோடி மந்திரங்களாலும் உபமந்திரங்களாலும் யாவர்க்கும் சந்தேகம் அறத்தெளிவிக்கின்ற வேதமாமரத்தின் சாரூப பதவியை அடைந்தனபோல் அழகிய மாஞ்சோலைகள் எந்நாளிலும் கனிகளைக்கொடுத்துக்கொண்டு அவ்விடத்தில்தங்கியிருக்கும். அந்தணர் அரசர் வைசியர் சூத்திரர் என்னும் முதல் நான்குசாதியார் சங்கரசாதியார் கைக்கோளர் நாவிதர் வாணியர் இடையர் தச்சர் கருமார் கம்மாளர் தேவதாசிகள் கூத்தாடிகள் வில்போல் வளைவான புருவங்களையுடைய வேசிகள்முதலானவர்களுடைய தெருவுகள் ஒன்றோடு ஒன்று கலப்பது இல்லாமல் வெவ்வேறாக நீண்டு அகன்று ஒழுங்காய்ச்சந்திரனை அலங்கரிக்கும்கிரணங்களைப்போல் அவ்விடத்தில் விளங்கும். தாய் தந்தையர்தவிர மற்றெல்லாப்பொருளும் கொள்ளத் தகுந்த கடைத்தெருவுகள் மலிந்திருக்கும். இளமயில் போன்றவளே? எந்தவூரை மேலானதென்று வேத வேதாந்தங்களும் மூன்று உலகங்களும் எடுத்துச்சொல்லுமோ? அந்த ஊரோ அந்த ஊர் என்று

அறிந்துகொள், முதல்வேதமான இருக்குவேதமானது கா என்னும் பதத்திற்குப் பொருள் பிரமதேவன்என்றும் அஞ்சு என்னும் வினைப்பகுதிக்கு அடைதல் பூசையென்றும் சொல்லும், பிரமதேவனால் பூசை செய்யப்பட்டதனால் காஞ்சி என்று எட்டுதிசைகளிலும் பரவும் புகழையுடைய இந்தநகரம் இந்தக்காரணத்தால் பிரமலோகம் என்று பெயர்பெறும் - நல்லொழுக்கத்தில் அங்கேவாசம் செய்கிறவர்களுக்கு எல்லாம் வீட்டின்பம்கொடுக்கும் அப்படிப்பட்ட ஊர்நடுவில் மாசில்லாமல் தெய்வத்தன்மையுள்ளதாய்ச் செந்தாமரைமலர்போல் எமதுகோயில் விளங்கும். அவ்விடத்தில் உள்ளஅந்தக்கோவிலிலேயாம் சோதிலிங்கவடிவாஎந்நாளும் வீற்றிருப்போம். இந்தப்பிரகாரம் இரண்டாம்வேதமான யசுர்வேதம்சொல்லும். சாமவேதமானது எம்மைச்சிதாகாசம் என்றுசொல்லும். பரிசுத்தமான நகரத்தைப்பிரமபுரம்என்று சொல்லும், நான்காம்வேதமானது சுவர்க்கம்என்று சொல்லும் - இரண்டாம்வேதமானது சோதிசூழ்சுவர்க்கம் என்றுசொல்லும். செல்வநாயகியே! அந்தப்பிரமபுரம் காஞ்சிமாநகரமே அல்லாமல் வேறில்லை என்றே உபநிடதங்களும் சிவாகமங்களும் முழக்கமிடும். இப்படிப்பட்டமகிமைபொருந்திய காஞ்சிமாநகரத்தைத்தூரத்திலாயினும் அவ்விடத்திலாயினும் இருந்துஒருவர்வணங்கினாலும் நினைத்தாலும் எல்லாப்பெரும்பாவமும் தொலைந்து இன்பவீடுஅடைவர் - உனக்குஉண்மையாகச்சொன்னோம் - என்று எப்பொருட்கும் இறைவனாகிய சிவபெருமான் எல்லாஉயிர்களும் பிழைக்கும்படி கேட்டருளிய பார்வதிதேவியாருக்குத் திருவாய்மலர்ந்தருளியதை அந்தநாள் கேட்டசனற்குமாரமுனிவருக்குத்திருநந்திதேவர் உபதேசித்தார் - அந்தச்சனற்குமாரமுனிவர் ஐம்பொறிகளைஅடக்கிய வியாசமுனிவருக்குச் சொல்ல, அந்தவியாசமுனிவர் எனக்குச்சொன்னார் - மலைபோலும் மாதவம்உடையவர்களே! சிவபெருமானைக்காண்பதற்கு இதுவேஉபாயம் அறிந்துகொள்ளுங்கள். சொல்லஒண்ணாத ரகசியமானஇந்தக்கதையை மெய்யன்போடு படிப்பவர்களும்படித்தவர்கள்சொல்லக்கேட்டவர்களும்மடநோய்தீர்ந்துநெடுங்காலம் பூலோகத்தில் மனைவிமக்களுடன் மகிழ்ந்துவாழ்ந்து மேலான குணமுடையவர்களாய் மறுமையிலும் பெரும்போகத்தை மகிழ்ந்துஅனுபவித்து அழியாப்பதவிபெறுவார்கள் என்றுமனதிற்கொள்ளும்படி சூதமாமுனிவர்மற்றமாதவர்களுக்குச் சொன்னார்.

தலவிசேடப்படலம் - முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

# காஞ்சிப்புராணவசனம்.

---

## விநாயகர்வணக்கம்.

நேரிசைவெண்பா.

காரார்மலர்ப்பொழில்சூழ்காஞ்சிப்புராணத்தின்
சீரார்தமிழ்வசனஞ்செய்வதற்கு—நேராக
வந்தாவளமுதவுமால்விகடசக்கரனுந்
தந்தாவளமெமக்கோர் சார்பு.

## முருகக்கடவுள்வணக்கம்.

கலிவிருத்தம்.

உருகன்புடையுத்தமருள்ளமதிற்
பெருகன்பொடுமேவுறுபெற்றிமைசால்
முருகன்முளரிக்கணனுகியமால்
மருகன்வடிவேல்மயில் வாழ்த்திடுவாம்.

## அடியவர்வணக்கம்.

நேரிசைவெண்பா.

அண்ண லடியா ரறுபத்து மூவரையும்
எண்ண விறைஞ்ச வினிதேத்திப்—பண்ணியசீர்
பாடிப் பரவிப் பணிசெய்வார் பொற்பாதந்
தேடிப் பிடித்தேன் றெளிந்து.

கடவுள் துணை.

# காஞ்சிப்புராணவசனம்.

முதலாவது

## திருநெறிக்காரைக் காட்டுப் படலம்.

உலகத்தில் உத்தமம் ஆனதவம் செய்வதற்குத் தகுந்த நைமி சாரணியத்தில் கூட்டங்கூடி யிருந்த வசிஷ்டர் முதலான முனிவர்கள் எல்லாரும் காஞ்சித்தலமகிமையைக் கேட்டு உள்ளம் குளிர்ந்து உடல் பூரித்து உரோமம் சிலிர்த்து ஆனந்தக்கண்ணீர் ததும்ப இருகரங்களையும் சிரசின்மேற் குவித்துத் துதிசெய்து, போதசாகரம் ஆகிய சூதமாமுனிவரே! அடியேங்கள் மோட்சம் அடைவதற்குக் காரணமாக இன்று தாங்கள் தொகுத்துச் சொல்லிய காஞ்சி மான்மியத்தை விரித்து விளங்கச் சொல்லவேண்டும் என்று பிரார்த்திக்கையில், அந்தச் சூதமாமுனிவர் கேளீர் முனிவர்களே! ஆன்மகோடிகளுக்கு இம்மை மறுமை இன்பங்களை எளிதில் தரும்பொருட்டுக் காஞ்சிக்ஷேத்திரத்தில் எண்ணிறந்த தீர்த்தங்களும் சிவாலயங்களும் உண்டு. அவற்றின் பெருமைகளை எமது அருட்குருவாகிய வேதவியாசமுனிவர் திருவாய் மலர்ந்தருளியபடிநாமும் உங்களுக்குச் சொல்லுகிறோம். அலைகடலில் அலையும் சிறு துரும்புபோல் மனதை அலையவிடாமல் நிலைநிறுத்திக்கேளுங்கள் என்று சொல்லத் தொடங்கினர்.

காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களையும் முனிந்தொழித்த முனிவர்களே! காஞ்சித்தலத்தின் மேழ்த்திசையில் சத்திய விரதம் என்று ஒருஸ்தலம் உண்டு. அந்தஸ்தலத்தில் என்னையும் அடிமையாகக் கொண்டருளும் சிவபெருமான் சத்தியவிரதீசன் என்னும் திருநாமம் பூண்டு உலகமாதாவாகிய உமையவள், விநாயகமூர்த்தி, சுப்பிரமணிய

சுவாமி முதலானவர்களுடன் ஆன்மாக்களுக்கு நுக்கிரகம் செய்யும் பொருட்டு வீற்றிருக்கிறபடியால் அதன்பெருமை சொல்ல யாரால் முடியும் ?

சத்திய சத்தியர், சத்திய சோதகர், சத்திய சங்கற்பர், சத்திய காமர்ஆகிய சிவபெருமான் அங்கு வீற்றிருக்கிறபடியால் அந்தஸ்தலம் சத்தியவிரதம் என்று சொல்லப்படும். அந்தச் சத்திய விரதஸ்தலத்தில் சத்திய விரதம் என்று ஒரு தீர்த்தம் உண்டு. அத்தீர்த்தத்தில் புதவாரம் விதிப்படி ஸ்நாநம் நீர்க்கடன் முதலியவைகளை முடித்துச் சத்திய விரதீசரை வணங்கி வாழ்த்துகிறவர்கள் பாசங்கழிந்து பதிலட்சணம் உணர்ந்து பரகதியும் அடைவார்கள். மேலும் அந்தத் தீர்த்தமானது நற்குண நற்செய்கையையுடைய மனைவியையும் நல்லறிவும் நல்லொழுக்கமும் உள்ள புத்திரரையும் எப்போதும் முப்போகம் விளைநிலங்களையும் சகல கலைக்கியானங்களையும் சதாநந்த முத்தியையும் வேண்டினவர்களுக்கு வேண்டியபடியே விரைந்துகொடுக்கும்.

இப்படிப்பட்ட தீர்த்தமும் ஸ்தலமும் இந்திரதீர்த்தம் என்றும் இந்திரபுரம் என்றும் சொல்லப்படும். இப்பெயர்கள் வந்தகாரணம் யாதெனில்:—வராக கற்பம் என்னும் ஒரு பிரமகற்பத்தில் மனு அந்தரத்திலே அரிவையர் மகிழும் அழகிலும், அமரரை வாழ்விக்கும் அன்பிலும், அசுரரை அடக்கும் ஆண்மையிலும் சிறந்தவனாகிய சிவி என்னும் இந்திரன் மேனகை முதலியோர் இரு பக்கங்களிலும் நின்று வெண்சாமரைவீசவும், சந்திர வட்டக் குடைநிழல்செய்யவும், சூதர் மாகதர் முதலானவர்கள் வீரப் பிரதாபங்களை எடுத்துப் புகழ்ந்துபேசவும், சங்கநிதி பத்மநிதி சிந்தாமணிமுதலிய நிதிகளும், சந்தானம் கற்பகம் முதலிய பஞ்சதருக்களும், காமதேனுவும் அவன் கடைக்கண்பார்வையை இமையாமல் நோக்கிக்காத்துக்கொண்டிருக்கவும், கின்னரர் முதலானவர்கள்கீதம்பாடவும், மலைபோலும் தோள்களின்மேல் அணிந்த கற்பகப் பூமாலையிலிருந்து பெருகும் தேன்பெருக்கானது ஆனந்த பாஷ்பம் பெருகும் கண்களில் பாய்ந்து உண்டாக்கும் எரிச்சலைத் தணிப்பவர்கள்போல் அரம்பையர்கள் ஆலவட்டம் எடுத்து அடுத்துவீசவும் மேனகை அரம்பை ஊர்வசி திலோத்தமை முதலிய நாட்டியப்பெண்கள் பரதசாஸ்திர விதி பிசகாமல் நாட்டியம்ஆடவும், கருடகாந்தர்வ சித்தவித்தியாதரர்கள் சிரமேற்குவித்த கையுடன் பணிந்து அணி அணியாய் நெருங்கி நிற்கவும், அசுரர்கள் எல்லாம் சபாமண்டபத்தில் பிரவேசிக்கப் பெறுமல் தலைவாயிலில் தடுமாறி

நிற்கவும், மற்றை யவர்கள் தங்கள் தங்கள் குறை நிறைவேறிச் சந்தோஷம் அடையவும் சர் வாபரண அலங்கார அதிரூப சவுந்தரியவதியாய் விளங்கும் இந்திராணி சமேதனுய்ச் சிங்காதனத்தின்மேல் வீற்றிருக்கையில் இருவினை ஒப்பு, மலபரிபாகம் வாய்க்கும் சமயம் நேரிட்டதனுல் மோட்சதாகம் உடையவன் ஆகிப் பொன்னுலகத்தை ஆளும் ஆசையையும் போக போக்கியங்களையும் சீ என்று வெறுத்துச் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டவன்போல் தியங்கித் திகைத்து, வெயிலில் துடிக்கும்புழுப்போல் துடித்துப் பெருமூச்சுவிட்டு ஐயோ! மின்னல்போல் ஒருக்ஷணத்தில் தோன்றி அழிந்துபோகும் விஷயாநந்தத்தை விரும்பி விருதாவில் கெட்டுப்போனேன். நீர்க்குமிழிபோல் நிலையில்லாததேகத்தைநம்பி மோசம்போய்விட்டேன். பிறப்பென்னும் பெரியகடலில் காலம் என்னும் பாம்பின்வாயில் ஒருசிறுதவளைபோல் அகப்பட்டிருந்தும் அறியாமல் ஆடி அலுத்துப்போனேன், சேற்றிலேபுரளும் பன்றிபோல் சுத்த சூன்யமாகிய மாயையிலே மயங்கிச்சுழல்கின்றேன். இது மடமையோ? அல்லது மடமையின் கொடுமையோ? விதியோ? அல்லது துர்மதியோ? யாதென்று சொல்லுவேன்? எப்படி வெல்லுவேன்? எந்தநாள் பிறவியை வேரோடு கல்லுவேன்? எக்காலும் என்னைக்கொல்லும் எமனைஎப்போது கொல்லுவேன்? இது என்னகாலமோ? ஆ! ஆ! காலமென்பதுஒன்றே வினைகளையும் வினைக்கீடாகஉயிர்களையும் படைத்துக்காத்து அழிக்கவல்லது. அக்காலத்தில் தோன்றும்பொருள்கள் அதற்குவசப்பட்டு அழிவதுபோல் காலமானதுஎதற்கும் வசப்பட்டு அழிவதாய்க்காணேமே! ஒருகற்பகாலம் கழிவதற்குள் பதினன்கு இந்திரர் பிறந்து இறந்துபோவார்கள். மனுக்களும் மாண்டுபோவார்கள். இப்படிப்பட்ட ஒருகற்பகாலம் ஆனது பிரமனுக்கு ஒரு தினம். இந்தத்தினம் முப்பது ஒரு மாசம். இந்தமாசம் பன்னிரண்டு ஒரு வருஷம். இந்தவருஷம் நூறு அவனுக்கு முடிவுகாலம். இந்தப் பிரமகற்பம் ஒன்று விஷ்ணுவுக்கு ஒரு நாள். இந்த நாள் முப்பதுகொண்டது ஒருமாசம். இந்த மாசம் பன்னிரண்டுகொண்டது ஒரு வருஷம். இந்தவருஷம் நூறு கொண்டது விஷ்ணுவுக்குலயகாலம். சீ! சீ! இதென்னவாழ்வு?

"வந்த பிறவியும் வானுதிபூதமும் இந்திரசால மென்றிம்பிலடி"

என்று அறிவுடையோர் சொல்லுகிறபடி இதுஅநித்தியமான வாழ்வு இதை நம்பினேர்க்கு ஒழியுமோ தாழ்வு? ஆதலின் இந்தத்தேகம் இடிகரைபோல் இடிந்து விழுந்து கரைந்து மறைந்துபோவதற்கு முன்விரைந்து நித்தியமான வீடு ஒன்றே தேடற்பாலது. அந்த நித்திய நிரதிசயான

ந்தவீடு பெறுவதற்கு உபாயம் தானமோ ? தருமமோ ? தவமோ ? தானே அழிந்துபோகும் உடம்பைப்பட்டினியிருந்து அழிப்பதோ ? ஐம்புலன்களை அடக்குவதோ ? இவற்றுள் யாதோ அறிகிலேனே ! என்று தனக்குள் தத்தளித்துத் தடுமாறி நமது குருமூர்த்தியாகிய வியாழபகவானைக்கேட்டுத் தெளியவேண்டும். என்று துணிந்து, அந்தச்சபைக்கு வந்தவர்களுக்கெல்லாம் விடை கொடுத்து அனுப்பிவிட்டு, விரைவுடன் அந்தப்புரத்திற் சென்று, வியாழபகவானைத் தருவித்து, ஓர் ஆசனத்தின்மீது எழுந்தருளச்செய்து, வந்தனை வழிபாடுபுரிந்து, கைகூப்பித்தொழுது அழுதகண்ணீருடன் நின்று சுவாமி ! துன்பத்திற்கே ஏதுவாகிய இந்த அரசாட்சியில் அடியேனுக்கு அணுவளவாயினும் ஆசையில்லை. பிரம விஷ்ணுக்கள் முதலிய பெரிய தேவர்கள் பதவியிலும் பிரியம் இல்லை. தத்துவ நிலைஉணர்ந்து சதானந்த முத்தி அடைவதற்கே அதிக ஆவல்கொண்ட அடியேன் அந்தப் பரமுத்திஅடைவதற்கு ஓர் உபாயம் கூறவேண்டும் என்று நெருப்பில் இட்ட அரக்குப்போல் உருகிக் கண்ணீர்பெருகிக் கதறிப்பதறும் அந்தச் சிவிஎன்னும் இந்திரனுடைய பக்குவத்தைப் பார்த்து வியாழபகவான் :—கேளாய், சிஷபுத்திர சிரோமணியாகிய சிவியே ! நீகேட்டகேள்வி உனக்கே யன்றி உலகத்தில் யாவருக்கும் உயிர் பிழைப்பூட்டும் மருந்துபோலும். அந்த முத்தியானது தானம் செய்வதனாலும் தருமம் செய்வதனாலும் தவம் செய்வதனாலும் பட்டினி யிருப்பதனாலும் கிடைக்கமாட்டாது. அவைகள் எல்லாம் மேன்மேலும் போக போக்கியங்களைக்கொடுத்து அவற்றுடன் அழிந்துபோகுந் தன்மையுடையவைகளேயாம்.

மாயவாழ்வை ஒழித்து ஆன்மாக்களை ஆட்கொண்டருள்வதற்கு எம்பெருமானாகிய சிவபெருமான் இருக்கின்றான். அவனது அளவிறந்த குணாதிசயங்களில் சிலவற்றைச் சொல்லுகிறேன். மங்கலகரம் ஆனவன் ஆனதினாலும் அநாதிமலமுத்தன். ஆனதினாலும் அவனைப் பரசிவம் என்று அறிவுடையோர் சொல்லுவர். அந்தப் பரசிவத்தின் பெருமை சொல்ல ஆதிசேஷனாலும் முடியாது. அவன் மேலான பொருள்களுக்கெல்லாம் மேலானவன். மோகமயக்கங்களை முடிக்க வல்லவன், வேதாகமங்களை விரும்பிச்சொன்னவன், பார்வதி சமேதன், பிரமனையும் அவனால் சகல தேவர்களையும் சகலலோகங்களையும் படைப்பித்தவன். அந்தப்பரசிவம் ஆகிய பரஞ்சோதியினாலேதான் இவ்வுலகம் எல்லாம் விளங்குவது.

அவன் இல்லாவிடில் உலகம் எல்லாம் இருள் மூடிப்பாழாய் விடும். பகல் இரவு என்னும் காலபேதங்கடந்தவன். எங்கும் இருள்

மூடியிருந்த அநாதிகாலத்தில் அவன் ஒருவனே உளன். அவனே ஞானத்திற்குத் தாயகம். எக்காலத்தும் எவ்விடத்தும் உள்ள பொருள்கள் எல்லாம் அவனுக்குச் சுதந்தரம் ஆனவைகள். அவன் அப்பொருள்களுக்கு வசப்பட்டவன் அல்லன். அவனுக்கு எங்கும் கண், எங்கும் முகம், எங்கும் கை, எங்கும் கால், எங்கும் திருமேனி. அவனையன்றி வேறு பதார்த்தமும் இல்லை. அவன் அசையாமல் அணு அசையாது, என்று அறிஞர் சொல்லுவர். பிரம விஷ்ணு தேவேந்திராதி தேவர்களும் யோகிகளும் வேத வேதாந்தங்களும் அசுரர்களும் மற்றையவர்களும் அவன் பாதாரவிந்தங்களைக் காணவேண்டுமென்று கண்டு தெளியாமல் தம்மில் மாறுகொண்டு இன்னமும் தேடித் திகைக்கிறார்கள். அவன் அவள் அது என்னும் பிரபஞ்சத்தில் கலந்தும் கலவாதவனாகிய சிவபெருமானை அன்றி ஆன்மாக்களை முத்தியில் சேர்ப்பவர்கள் இல்லை. இவ்வண்ணம் சுருதிகள் முறையிடுகிறபடியால், சிவியே! நீயும் அந்தச் சிவபெருமானை வந்தனை வழிபாடுசெய்யின், முத்தி அடைவது திண்ணம். ஆதலின் நாம் பலவாறு பன்னிப்பேசுவதில் பயன் என்னை? இனி வேறு தெய்வத்தைச் சிந்தை செய்யாமல் தேவாதி தேவன் ஆகிய சிவபெருமானைத் துதிசெய். இதுவேமுத்தி அடைவதற்கு மூலம், என்று கூறிய வியாழபகவான் வார்த்தையை மனதிற்கொண்டு, சிவி என்பவன் சொல்லுகிறான். சுவாமி! வேதாகம புராணங்கள் எல்லாம் குருவே பிரமன், குருவே விஷ்ணு, குருவே சிவன், குருவே தாய்தந்தை, குருவே மற்றெல்லாப்பொருளும் குருவே என்று முறை யிடுகின்றமையால் எமது பரம குருவே! நீர் மனமகிழ்ந்து அடியேனுக்கு வேதாகம உண்மையை விளங்க உபதேசஞ் செய்தருளினீர். தேவரீர் கருணையால் அடியேன் ஆன்மலாபம் அடைந்தேன். பொன் போல் விளங்கும் சடைமுடியுடைய சிவபெருமானை அடியேன் அகமகிழ்ந்து எவ்விடத்தில் எந்த விதிப்படி பூசித்தல் வேண்டும் ? அதையும் அநுக்கிரகம் செய்தருள்க என்று மீண்டும் பிரார்த்திக்க, வியாழபகவான் கடல் சூழ்ந்த உலகத்தில் சத்தபுரிகளில் ஒன்றாய்ச் சிறந்துவிளங்கும் காஞ்சிமாநகரத்தின் கீழ்த்திசையில் தஞ்சம் என்று அடுத்தபத்தர்கள் கொஞ்சம். ஆயினும் விட்டுவிலகப்பெறாத சத்திய விரதஸ்தலத்தில் பசுபதி விரதம் பூண்டு சத்திய விரதீசர் சந்நிதானத்திற்கு மேற்கே மிகவும் மேன்மை பெற்றிருக்கும் சத்திய விரத தீர்த்தத்தில் நித்திய ஸ்நானம் செய்து, அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, தேகமெல்லாம் திருநீறணிந்துநெற்றியில் விபூதி திரிபுண்டரமாக விளங்கக் கண்டம் முதலிய உறுப்புகளில் உருத்திராட்சமாலை தரித்து ஒழுக்கத்தில் சிறிதும்

தவருமல் பளிங்குபோல் விளங்கும் சத்தியவிரதீசரை இதயாரவிந்தத்தில் ஆவாகனம் செய்து வந்தனை வழிபாடுசெய்யும் சத்தியபத்தியால் நித்திய முத்திபெறுக என்று சொல்லக்கேட்ட சிவி, அந்தக்குருபரனைவணங்கிச் சுவாமி! தேவரீர் திருவாய்மொழி அடியேன் செவித்துளையில் நுழைவத ன்முன் என்மனம் பள்ளங்கண்டு ஓடும் வெள்ளம்போல் பரந்து விரை ந்தோடி அந்தச்சத்திய விரதீசர் சரணரவிந்தத்தில் நெடுநாள் நேசமுடை யதுபோல் இரும்புண்ட நீராக ஒடுங்கும் காரணம்யாது? திருவுளம்பற்ற வேண்டும் எனச்சிவியே! நீசொல்லியதுமெய்தான் பூர்வம் நீ புதவாரம் அந்தச் சத்திய விரத தீர்த்தத்தில் ஸ்நானம் செய்த புண்ணிய வசத்தால் இந்த இந்திரபட்டம் பெற்றனை. ஒருபொழுது அந்தத்தீர்த்த நீரா டினவர்கள் இந்திரபட்டம் பெறுவர். இரண்டுநாள் நீராடப்பெற்றவ ர்கள் பிரமலோகத்தை அடைவர். மூன்று தினம் மூழ்கினவர்கள்வை குண்டம் பெறுவர். நான்குநாள் நீர் ஆடினவர்கள் முத்தி பெறுவர். என்றுல் அத்தீர்த்தத்தின் பெருமை சொல்ல நம்மால் ஆகுமோ? நீயும் பூர்வம் புதவாரம் அந்தத்தீர்த்த நீராடினதனுல் மோட்சத்திற்கு அருகன் ஆனுய். இது தான் உன்மனம் அங்கேசென்றதற்குக் காரணம் அறிந்துகொள் என்று அறிவிக்கச் சுவாமி! இந்தத் தீர்த்தம் மற்றைவா ரங்களினும் புதவாரம் சிறந்து விளங்கும் காரணம் யாதோஎனச்சிவியே! சந்திரன் தாரை என்பவளை மணம்புரிந்து பெற்றமகன் ஆகிய புதன் என்பவன் தன் பிதாவின் சொற்படி கிரகநிலையில்தானும் நிலைபெற்றிரு க்கச் சத்தியவிரத தீர்த்தத்தில் நீராடி அருந்தவம் செய்கையில், சத்திய விரதீசர் ரிஷபவாகனத்தின்மேல் பார்வதி சமேதராய் விநாயகமூர்த்தி சுப்பிரமணிய சுவாமி திருநந்திதேவர், ரிஷிகள் முதலானவர்கள் புடை சூழ்ந்து வரக்காட்சி கொடுத்தருளக்கண்டு அந்தப் புதன் ஆனவன் ஆன ந்தபரவசன் ஆகி, மனங்குழைந்து, கூப்பியகையுடன் வேரற்று விழுந்த மரம்போல் பூமியில்விழுந்து பின்பு எழுந்து நின்று ஆனந்தக் கண்ணீர் ததும்ப அடியேன் உய்ந்தேன் உய்ந்தேன் என்று அங்கும் இங்கும் ஓடிப் பாடி ஆடி அடங்கி ஆராமையுடன் துதிசெய்கின்றுன்:—

பிரம விஷ்ணுக்கள் தேடிக் காண்பதற்கு அருமையான உமது அ ருமந்தபாதங்களை அடியேன் கண்டு தொழுவதற்குக் காட்சி கொடுக்கவ ந்த திருவருளை நமஸ்கரிக்கிறேன். தன் வயத்தவன் ஆதல் தூய உடம் பினன் ஆதல் இயற்கை உணர்வினன் ஆதல் முற்றும் உணர்தல், இய ல்பாகவே பாசங்களில் நீங்குதல் பேரருள் உடைமை வரம்பில் ஆற்ற ல்வரம்பிலா இன்பம் என்னும் எட்டுக்குணம் உடையானே!

நாயிலும் கடையவன் ஆகிய என்னையும் அடிமையாகப் படைத்த வனே! சத்தியவிரதநாதா! உன்சரணமே சரணம் என்று பலவண்ணம் பரவி, எம்பெருமானே! என் பிதாவாகிய சந்திரனைப்போல் அடியே னும் கிரக நிலைபெற்று வாழவும், என்ன வாழ்வுவந்தாலும் உன் திரு வடியை மறவாத பத்தியையும், இந்த நாள்முதல் என்வாரம் ஆகிய புத வாரம் இந்தத் தீர்த்தநீராடி ஐம்புலன்களை அடக்கும் அன்பர் எல்லாரும் மேன்மேலும் செல்வம் பெருகிப்போகபோக்கியங்களில் வெறுப்பு உ ண்டானபின் மேலான முத்திச்செல்வம் அடையவும், அநுக்கிரகம் செய் தருளவேண்டும் என்று பிரார்த்திக்க, அவ்வண்ணமே ஆகுக என்று அ ருள்சுரந்து அந்தர்த்தானம் ஆயினர். அந்த நாள்முதல் அந்தத் தீர்த்த ம் புதவார தீர்த்தம் என்று சிறந்து விளங்கா நின்றது எனச்சிவி உடனே தன் அரசாட்சியை வியாழ பகவானிடத்து ஒப்புவித்துத் தலைமேல் இரு ந்த பாரத்தை இறக்கிவிட்டவன் போன்று, சந்தோஷித்துச் சத்தியவிரத புரத்திற்கு விரைந்து வந்து திரிகாலமும் அந்தத்தீர்த்த நீராடித்தேகம் எ ல்லாம் திருநீறுபூசி, நெற்றியில் விபூதி திரிபுண்டரமாக அணிந்து, கண் டத்தில் தாழ்வடம் பூண்டு, கருத்தில் சிறிதும் கரவடம் இன்றி உருத்திர மந்திரத்தை உச்சரித்து இதயாரவிந்தத்தில் சிவபெருமான் சீர்பாதகமல ங்களைத் தியானித்து, ஆலயத்துள் பிரவேசித்து, ஆகமவிதிப்படி அருச் சனைசெய்து, ஆராமையிருந்து பேரன்புடன் பெருமானைத் துதிக்கலா னன். வேத வேதாந்தங்கள் இன்னும் கண்டுதெளியாத சிலம்பணிந்த சேவடி உடையானே! சரணம். சமுத்திரம் சூழ்ந்த உலகம் எல்லாம்ப டைத்துக்காத்து அழிப்பவனே! சரணம். சீதளவாசத் தெண்ணீர் நிறைந் த சத்தியவிரத தீர்த்தக்கரையில்வீற்றிருக்கும் அழகனே! சரணம். அங்க ணு! சரணம். அப்பனே! சரணம். அண்ணலே! சரணம். அண்ணுவே சரணம். அரசே! சரணம். ஐயனே! சரணம். மழுவேந்துகையனே! சரணம். மெய்யனே! சரணம். பொய்யர்க்குப்பொய்யனே! சரணம். தூயனே! சரணம். நேயனே! சரணம். நின்மலா! சரணம். நித்தியா! சரணம். நிரஞ்சனா! சரணம். அத்தனே! சரணம். சித்தனே! சரணம். சத்தனே! சரணம். சதானந்தா! சரணம். முத்தனே! சரணம் முதல் வனே! சரணம். வேதனே! சரணம். நாதனே! சரணம், நீதனே! சர ணம். போதனே! சரணம். புண்ணியா! சரணம் சரணம் சுவாமி! அடி யேன் ஐம்புலன்களில் செல்லும் ஆசையால் அலுத்துப்போனேன். எனக்கு இனி விஷய சுகம் எல்லாம் விஷம்போலும். நால்வகையோனி எழுவகைப் பிறப்பில் நான் இதுவரையிலும் பட்டபாடு போதும் போ

தும். இனி இமைப்பொழுது ஆயினும் என்னால் சகிக்கமுடியாது. என்கண்மணியே! உன்னையன்றி வேறு ஆதாரம் உண்டோ? அமுதசாகரமே! அருட்பெருங்கடலே! அகண்டபரிபூரணானந்தமே ஐயோ! சண்டாளன் ஆகிய நான் புழுமலிந்து அசுத்த நீர்பெருகும் அற்பமாமிச தேகத்தைப் பாதுகாப்பதில்வாணாளை வீணாள் ஆக்கிவிட்டேன். ஐம்புலன்கள் அங்கும் இங்கும் இழுத்து அலைவுசெய்தலால் புலிக்கூட்டத்தில் அகப்பட்ட ஒரு சிறுமான் கன்றுபோல் தியங்குற்றேன். ஆணவத்தால் அழிந்தேன். காமத்தால் கலங்கினேன். மாயையால் மயங்கினேன். மகாதேவா! மகாதேவா! இனிஉன்பாதமேகதி. என் பாவங்களைப் பரிகரித்தருள வேண்டும். பரமனே! பரமசிவனே! பரம்பொருளே! பரஞ்சுடரே! பரஞ்சோதியே! பசுபதியே! என்று அழுது தொழுது சோர்ந்து போவதை அறிந்து, சிவபெருமான் ரிஷபவாகனத்தின்மேல் பார்வதி சமேதராய்ப் பிரசன்னம்ஆகி வாராய்சிவியே! உன் அன்பிற்கும் பண்ணியபூசைக்கும் தோத்திரத்திற்கும்யாம் சந்தோஷம் ஆனேம். இனிஉனக்கு வேண்டும் வரம்கேள். எனத்தெளிந்து ஆனந்த பூரிதனாகி மீண்டும் பணிந்து கேட்கின்றான். சுவாமி! அடியேன் வினைக்கீடாகப் பிறந்து இறந்து ஒழிந்த காலத்திற்கு ஓர்அளவு இல்லை. அதை நினைக்க என் நெஞ்சம் பகிரிடுகின்றது. கைகால்கள் நடுங்குகின்றன. பூர்வஜனனங்களில் எந்த ஜனனத்தில் ஆவது உமது சீர்பாத தரிசனம் செய்யாதவன் ஆனாலும் உமது அருளால் இந்த ஜன்மத்தில் இந்தநாள் உமது திருவடிக்கு அருகன் ஆனேன். இனி எக்காலத்தும் பிறவா வரமும், இந்தத் தீர்த்தமும் ஸ்தலமும் என்பெயரால் வழங்கி வரவும், கிருபை செய்தருள வேண்டும் என்று பிரார்த்திக்க, அவ்வரங்களுடன் சிவகணங்களுக்குத் தலைவன் ஆகும் பதவியையும் கொடுத்தருளி அந்தர்த்தானம் ஆனார்.

கேளீர் முனிவர்களே! சிவி என்னும் இந்திரன் சிவபெருமானிடத்தில் வரம்பெற்றுக் கொண்ட காரணத்தால் அந்தத் தீர்த்தமும் ஸ்தலமும் இந்திரதீர்த்தம் என்றும் இந்திரபுரம் என்றும் சொல்லப்படுகின்றன. மேலும் அந்தஸ்தலம் காரைவனமாக அடர்ந்து இருந்ததனால் அறிவுடையோர் அதனைத்திருநெறிக் காரைக்காடு என்பர்.

சத்தியவிர்தீசர்சரணமேசரணம்.

———

## இரண்டாவது.

# புண்ணியகோடீசப்படலம்.

அந்தணர்களே! செந்தாமரை மலர்த்தடம் சூழ்ந்த சத்திய விரத புரத்தின் மகிமை சொன்னேம். இப்பால் புண்ணியகோடீசம் என்னும் ஸ்தலமகிமை சொல்லுகிறேம். நன்ருக மதித்துக் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

புண்ணியகோடீசம் என்னும் ஸ்தலம் மேகமண்டலத்தை அளாவிய பூஞ்சோலையால் சூழப்பட்ட சத்தியவிரத புரத்திற்குத் தெற்கே இருக்கின்றது. பாவிகள் அணுகுவதற்கு அருமையான புண்ணிய தீர்த்தம் என்று ஒரு தீர்த்தமும் உண்டு. அந்த ஸ்தலம் என்போலிகளுக்கும் சிவானந்த போகம் எளிதில் கொடுக்கத்தக்கது. அதன் வரலாறு:—

மேகவாகன பிரமகற்பத்தில் நாராயணன் பிரமதேவன்முதல் சகல தேவர்களையும் சகலலோகங்களையும் சிருட்டிக்க ஆவல்கொண்டு மேகவாகனம் ஆகிச் சிவபெருமானை நெடுங்காலம் சுமந்து திரிந்ததனுல் அக்கடவுள் திருவுளம்இரங்கிக் கடாட்சம்வைத்து, வாராய் திருமாலே! நீ தேவவருஷத்தில்ஆயிரம் வருஷம் மேகவாகனமாய் எம்மைத் தாங்கித்திரிந்தனை, வேண்டும் வரம்கேள். தருகின்றேம் எனத் திருமால்—என்பரமபிதாவே உமது இடப்பாகத்தில் பிறந்த அடியேன் உமது திருவருளால் வாகனமாகி உம்மைத்தாங்கும் பாக்கியம் பெற்றேன். இனிப் பிரமன் முதல் சகலலோகங்களையும் படைக்குந் திறம் அளித்தருள வேண்டும் என்று பிரார்த்திக்க, அரியே! நீ காஞ்சித்தலத்துக்குச் சென்று சிவலிங்கப்பிரதிஷ்டை பண்ணி எம்மைத் தியானித்துத் தாமரைமலர்களால் அருச்சனை செய்தால் விரும்பியபடி பெறுவாய் என்று திருவுளம் பற்றுதலும் வணங்கி விடைபெற்றுக் கொண்டு மீண்டு காஞ்சிமண்டலத்திற்கு வந்து, புண்ணிய தீர்த்தங்களிலே நீராடி இந்திரபுரத்தின் தெற்காகச் சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணி மெய்யன்பு உடையனுகிப் புண்ணிய தீர்த்தம் உண்டாக்கி அதில் நீராடித்தேகமெல்லாம் திருநீறுபூசி நெற்றியில் விபூதியைத் திரிபுண்டரமாக அணிந்து உருத்திராட்சமாலை தரி

த்துப் பல தாமரைமலர் பறித்து மனம் குவியச்செய்து சிவபூசை செய்து வருகையில் சிவநேசம்மிகுந்த திருமாலுக்கு அடிமையாகித் தொண்டு செய்து நாமும் கடைத்தேறுவோம் என்று கஜேந்திரன் என்னும் ஒருயானை அத்திருமாலிடத்து அன்புகூர்ந்து எம்பெருமானே! அடியேன் உமக்குத் தொண்டுசெய்து உய்யவேண்டியபடி ஆட்கொண்டருளும் என்று அநுக்கிரகம்பெற்றுச் சூரியோதயம் ஆகுமுன்பு துயில் ஒழிந்து புண்ணிய தீர்த்தஸ்நானம் செய்து மது ஒழுகப்பூத்த புதிய தாமரை பாதிரி வில்வம் புன்னாகம் சண்பகம் மல்லிகை முல்லை கோங்கு முதலிய புஷ்பம் கொய்து பாங்குடன் கொடுத்து அத்திருமால் மனம் மகிழச்செய்வித்துத் தானும் களிப்புடன் வாழ்ந்திருக்கும் காலத்தில் ஒருநாள் சிவபூசைக்கு உரியபுஷ்பம் கொணரும்பொருட்டுச் சென்று ஒரு பொய்கையில் தாமரைப் பூக்கொய்யும் போது ஒருமுதலை தண்ணீரிலிருந்து தன்னைப்பிடித்து இழுக்கத் தானும் கரைமீதிருந்து அந்த முதலையைப் பிடித்து இழுக்கத் தலைப்பட்டது. இவ்வண்ணம் யானையும் முதலையும் கரையிலும் தண்ணீரிலும் இருந்து இழுத்து இழுத்து நெடுங்காலம் சென்றபின்பு யானையானது துயர் சகிக்கமாட்டாமல் தேவர்களை நினைந்து ஆதிமூலமே! ஆதிமூலமே!! அடியேனை ஆதரிக்கவேண்டும் என்று அலறுதலும் தேவர்களெல்லாம் யாம் ஆதிமூலம் அல்லேம். எம்மால் உன்னைக்காக்க முடியாது என்று நீங்குதலும் திருமால் கருடவாகனத்தின் மேல் ஏறிப் பிரத்தியட்சம் ஆகி யானைபடும் பாடுகண்டு பரிந்து கஜேந்திரனே! நீ அஞ்சாதே அஞ்சாதே என்று அபயாஸ்தம் அளித்துத் தன்கையில் சூரியப்பிரகாசமாய் விளங்கும் சக்கராயுதத்தை விடுத்து முதலையைக்கொன்று யானையைக்காத்து அந்த யானையுடன் காஞ்சித்தலத்திற்கு வந்து அது கொய்து கொண்டு வந்து கொடுக்கும் பள்ளித்தாமங்களைக்கொண்டு ஆகமவிதிப்படி சிவபூசை பண்ணித் தேவர்களும் முனிவர்களும் மற்றயாவர்களும் இன்னமும் காண்பதற்கு அருமையான பரசிவதரிசனம் செய்து பரமானந்தம் அடையப் பத்தியுடன்:—நிலம் நீர் தீ காற்று ஆகாயம் இந்து இரவி இயமானன் என்னும் அஷ்டமூர்த்தங்களாய் அவைகளுக்கு மூலமாய் வித்தாகி விளைவாகி எப்பொருளும் தானே ஆய் விளங்கும் பெருங்கருணையாளனே! எங்கள் பெருமானே சரணம், சரணம். அண்டரண்ட சராசரங்களை யெல்லாம் திருவுளத்திற்கொண்டு எள்ளுக்குள் எண்ணெய் போல் எங்கும் வியாபித்திருக்கும் அகண்ட பரிபூரண ஆனந்த சாகரமே! மெய்யன்பர்கள் எல்லாரும் கூட்டம் கூட்டமாய்க் கூடி உண்டு தெவிட்டுதல் இல்லாத

தேவாமிர்தமே! பூம்பொழில் சூழ்ந்த காஞ்சிநாயகா! சரணம், சரணம். தருமக்கடவுள் தவம் செய்து ரிஷபவாகனமாகி உம்மைச் சுமக்கும்படி அடியேனும் ரிஷபமாகிச் சுமத்தற்கு அருள்புரிந்த அம்மானே! உமையவள் கண்டு கோபிக்காமல் என்னையும் பத்தினியாகக்கொண்டு இடப்பாகத்தில் கலக்கவைத்தருளிய குணமலையே! சரணம், சரணம். திகம்பரம் முதலிய ஆடை, ஆபரணங்களுடன் அடியேனுடைய தந்தம், கண், ஆமை ஓடு, சிங்கத்தோல், அஸ்தி, முதலியவைகளை அலங்கார பூஷணமாக அணிந்தவனே! பரசு முதலிய ஆயுதங்களுடன் என்னையும் பாணம் ஆகப்படைத்தவனே! சரணம், சரணம். மெய்யடியவர்கள் அணியும் பூமாலைபோலப் பொய்யடியேன் கண்மலரையும் புனைந்தருளும் பொற்பாதனே! குணநிதியே! தேவரீர் ஆனந்தத் தாண்டவம் புரிந்தருளும் அற்புத சபையில் நந்தி தேவர்முதலிய கணநிபர்போல் அடியேனும் தணதண என்று மத்தளம் அடிப்பதற்கு அருள்புரிந்தவனே! சரணம், சரணம். திருப்பாற்கடல் கடைந்தநாள் தோன்றிய ஆலகால விஷத்திற்கு அஞ்சி அடைக்கலம் அடைந்த அடியேங்களுக்கு ஆருயிர் அளித்தருளிய சீராளா! காலமே! காலங் கடந்த கருணாநிதியே! ஆனந்த மலையே! சரணம், சரணம். என்று இவ்வண்ணம் இலட்சுமிபதி துதிசெய்து சோர்வுறுங்காலம் சிவபெருமான் பார்வதி சமேதராய் ரிஷபவாகனத்தின்மேல் காக்ஷி கொடுத்தருளக்கண்டு கண்கள் களிகூர்ந்து பசியால் மெலிந்த ஒரு தரித்திரன் பரமான்னத்துடன் உண்டு மகிழ்ந்ததுபோல் பரமானந்தம் அடைந்து ஆடிப்பாடி அழுது தொழுது மனம் உருகி அன்புபெருகி ஆராமையுடன் நிற்கையில் சந்திரசேகரனாகிய சிவபெருமான் பார்வதிதேவிக்குக் கடைக் கண் சாத்திப் புன்னகைசெய்து மதுசூதனனே! நீ பண்ணிய பூசைக்கும் தோத்திரத்திற்கும் யாம் பரம சந்தோஷம் ஆனோம்.' நீ சுரர்களிலும் நரர்களிலும் அதிக பராக்கிரமசாலி எம்மையும் வெற்றிகொள்ளும் வீரம் உனக்குக் கொடுத்தோம். இன்னம் வேண்டும் வரம் கேள் தருகின்றோம். எனத் திருமால்—வரதா! உன் அருள்வாழ்க, வரதா! உன்மகிமை வாழ்க. வரதா! உன்மலரடிகளை மறவாவரம் தருக. வரதா! மலரவனையும் மற்றும் உலகங்களையும் படைக்கும் ஆவல் கொண்டுளேன். வரதா! வரதா! அடியேனுக்கு இவ்வரம் கொடுத்தருள வேண்டும் என்று வாழ்த்த நீ வேண்டியவரம் கொடுத்தோம். எம்மை வரதா! வரதா!! என்று பலமுறை பரிந்து அழைத்ததனால் இனி உனக்கு வரதராஜன் என்னும் பெயரும் செந்தாமரை மலர்கொண்டு பூசைசெய்ததனால் செ

ந்தாமரைக்கண்ணன் என்னும் பெயரும் உண்டாகுக என்று அநுக்கிரகம் செய்த சிவபெருமான் சேவடிகளை வணங்கிச் சுவாமி ! அடியேன் தேவரீரைப் பூசை செய்வதற்கு வேண்டும் புஷ்பம் முதலியவைகளை இந்த யானை தினந்தோறும் குறைவறக்கொண்டுவந்து கொடுத்தது. என்னிடத்தில் அன்புள்ளது. ஆதலின் தேவரீர் சந்நிதானத்துக்கு முன் அடியேன் வசிக்கும் இந்தஸ்தலம் அந்தயானையின் பெயரால் அத்திகிரி என்று வழங்கல் வேண்டும். மேலும் கரும்புவில் எந்திய காமனைக் காய்ந்தருளிய கண்ணுளா ! இந்தப் புண்ணிய தீர்த்த நீராடி ஒருவர் செய்யும் புண்ணியம் ஒன்று கோடியாகவும் ஆன்மாக்கள் கண்டு கடைத்தேறும்பொருட்டுப் புண்ணிய கோடீசத்தில் பொலிந்து விளங்கும் சிவலிங்கத்தில் எக்காலமும் வீற்றிருந்தருளவும் அநுக்கிரகம்செய்க. யமனை உதைத்தருளிய சீர்பாதம் உடையானே ! அடியேனும் உமது சந்நிதானத்திற்கு எதிரில் இருந்து போற்றும்படி தேவர், மாதவர், முதலிய யாவர்க்கும் வேண்டியவரம் அளித்து, பல்லாண்டு பல்லாண்டாக இந்தப் புண்ணிய கோடீசத்தில் வாழ்ந்திருக்கவேண்டும் என்று பிரார்த்திக்க அவ்வண்ணமே ஆகுக என்று அந்த இலிங்கத்தின் இடமாக மறைந்தருளினர். திருமால் மேகவாகனமாகிச் சிவபெருமானைத் தாங்கித் திரிந்தமையால் அந்தக்கற்பம் மேகவாகன கற்பம் என்று சொல்லப்பட்டது.

புண்ணிய கோடீசன் பொன்னடி போற்றி

வரதராஜன்மலரடி போற்றி.

---

மூன்றுவது

## வலம்புரி விநாயகப் படலம்.

தபோநிதிகளே ! ஆன்மாக்களுக்கு இதம்புரிந்தருளும் புண்ணிய கோடி நாதருடைய மகிமைசொன்னோம். இப்பால் வலம்புரி விநாயகக் கடவுள்மகிமை சொல்லுகிறோம். மதித்துக்கேளுங்கள் என்று சூதமாமுனிவர்சொல்லத்தொடங்கினர்:—

முன்னொருகாலம் பிரம விஷ்ணு தேவேந்திராதி தேவர்களும் ஒருங்கு கூடகாந்தர்வ சித்தவித்தியாதரர்களும் ஓர் இடத்தில் கூட்டங்கூடி வஞ்சகராகிய அசுரர்கள் செய்காரியங்கள் இடையூறு இன்றி நிறைவேறும்

ன்றன. ஆதலின் நமக்குச்சத்துருக்கள் ஆகிய அந்த அசுரர்கள் செய் காரியங்களுக்கு இடையூறு உண்டாக்கவும் நாம் எடுத்தகாரியங்களைஇனி துமுடிக்கவும் ஓர் கடவுளைத் தந்தருளும்பொருட்டுச் சிவபெருமான் சீர் பாத கமலங்களைப் போற்றுவோம் என்று புறப்பட்டு மந்தரகிரியில் திரு க்கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானைத் தொழுது சுவாமி! கை லாசபதி! அடியேம் விண்ணப்பத்தைச் சிறிது திருச்செவிசாத்தி யரு ளவேண்டும் என்று தாழ்ந்து நாங்கள் ஆரம்பிக்கும் காரியங்கள் அநுகூ லமாகவும் அசுரர்கள் தொடங்கும் கருமங்கள் பிரதிகூலமாகவும் கருணை செய்யவேண்டும் என்பதைச் சிவபெருமான் திருவுளத்திற்கொண்டு அவ் வாறேயாவரும் உய்யும்படி அநுக்கிரகம் செய்வோம் என்று அவ்விடம் விட்டுப் பார்வதிதேவியாருடன் பலவகை விசித்திரமான சித்திரச்சாலை யுள் பிரவேசித்து அங்கே தெய்வத்தச்சனால் அதி விநோதமாகச் சித்தி ரிக்கப்பட்டிருக்கும் மகா மந்திரங்களுடன் உபமந்திரங்களையும் பார்வதி தேவியாருக்கு இன்னது இது என்று சுட்டிக்காட்டிக்கொண்டு வருகை யில் எம் பெருமாட்டியாகிய மலைவளர் காதலி அந்தச்சித்திரச்சாலை முக ப்பில் இரண்டுவிதமாகச் சிறந்துவிளங்கும் பிரணவமந்திரங்களைப் பல முறை பார்த்துப் பரமசந்தோஷம் அடைந்து பிராண நாயகா! இங்கே சித்திரிக்கப்பட்டு விளங்கும் பல சித்திரங்களில் மிக விசித்திரமாகச் சிற ந்துவிளங்கும் இந்த இரண்டும் எவை? அடியேனுக்கு விளங்கச்சொல் லவேண்டும் எனப் பெண்ணரசியே! இவ்விரண்டும் பிரணவ மந்திரம் என்று சொல்லப்படும். இவற்றுள் இது எமக்கு உரியதாம். எமக்குஉரிய இதுவே மும்மூர்த்திகளைத் தருவதற்கு மூலம். அது உனக்குரியதாம். அதுவே முச்சத்திகளைத் தருவதற்கு மூலகாரண மாம். வேதாகமங்களு க்கெல்லாம் தாய் தந்தை யான இந்தப் பிரணவமந்திரங்கள் களிறு (ஆண் யானை) ஆகவும், பிடி, (பெண்யானை) ஆகவும், நமக்கு நேரேதோன்றுகி ன்றமையால் நாம் இருவரும் அவ்வுருவம் கொண்டு ஆடுவோம் என்று அவ்வுருக்கொண்டு ஆடுங்காலையில் கடல்சூழ்ந்த வுலகமெ ல்லாம் கடைத்தேறும்படி யானை முகமுடைய விநாயகமூர் த்தி திருஅவதாரம் செய்தவுடன் அவ்விருவரும் கண்டுகளி த்துக் காதலோடு எடுத்து மடிமேல் இருத்தி மார்போடணைத்துப் பல அணி அணிந்து ஆசீர்வதிக்கையில் அவ்விநாயகமூர்த்தி எழுந்து எதிரி ல்நின்று கைகொட்டி அற்புதக்கூத்தாடுவதை உலகமாதாவாகிய உமை யவள் கண்டு களிப்புற்று, சுவாமி துணையடிகளைப் பணிந்து பிராண நாய கா! நீ மகிழ்ந்தளித்த மைந்தனைக் கணங்களும் கணதிபர்களும் மற்றும் யாவரும் துதிசெய்யும்படி கணபதிபட்டம் கொடுத்தருளவேண்டும் என்

று அன்பு முதிர்ந்து அமுதம் ஒழுகப்பேசும் எம்பெருமாட்டி இஷ்டப்படி எம்பெருமான் தேவர் முனிவர் கருட காந்தருவர் முதலானகணங்கள் எல்லாம் கணத்தில் வந்துசேரத் திருவுளம்புரிந்து அந்தக் கணங்களுக்கெல்லாம் தன் மடிமீதிருந்த சிறு பெருங்கடவுளைச் சுட்டிக்காட்டி இச்சிறுவன் மயில்போலும் சாயலையுடைய மலைவ்ளர் காதலிக்குப் பிரியமானவன். எமக்கு மூத்தகுமாரன். இவனை எல்லா வுலகுக்கும் இறைவன் ஆக்க முடிசூட்டுவதற்கு வேண்டும் உபகரணங்களைக் கொண்டு வாருங்கள் என்று ஏவி, கொண்டுவந்த பின்பு குமாரனைச் சிங்காதனத்தின்மேல் உட்காருவித்துப் பட்டாபிஷேகம்செய்து தமது அருமைந் திருக்கரத்தால் செம்பொன் முடிசூட்டி அரசாட்சிக்குரிய ஆபரணங்களை அணிந்து பிரம விஷ்ணு தேவேந்திராதி தேவர்களைநோக்கிக் கேளீர் தேவர்களே! இவன் உங்களுக்கு வரும் இடையூறுகளை நீக்கி இரட்சிக்கும் இறைவன் அசுரர்செய் காரியங்களுக்குத் தடைசெய்து அவர்களை அழிப்பவன். அறிந்துகொள்ளுங்கள் எனத் திருவாய்மலர்ந்தருளியதைச் சிரசின்மேற் கொண்டு தேவேந்திராதி தேவர்கள் எல்லாரும் கணேசனை வணங்கி வாழ்த்திக் கையுறை (நதிர்) கொடுத்து விநயமாக விடைபெற்றுக் கொண்டு தங்கள் தங்கள் இருப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள்.

இப்பால் கணபதி அம்மை அப்பருடைய பாதாரவிந்தங்களைப் பணிந்து விடைபெற்றுக்கொண்டு தன்புடைசூழ்ந்திருக்கும் கணங்களுடன் எங்கும் உலாவித் திருவிளையாடல் செய்யக்கருதித் தன்னுடன் விளையாடும் சிறுவர் கண்களுக்குத்தோன்றாமல் ஓர் இடத்தில் ஒளித்திருந்து தும்பிக்கையால் ஜலத்தைத் துளித்து மழைபெய்தது அதோ பாருங்கள் என்று அவர்களுக்கு ஆகாயத்தில் உள்ள கருநிறத்தைக்காட்டி மனமகிழ்ந்தும், தும்பிக்கையால் மோந்து பெருமூச்சுவிட்டுப் பூமியைப்பிளந்து பாதலத்தில் உள்ள சர்ப்பங்களைச்சுழற்றி யெடுத்துத் தாம் அணிந்திருக்கும் சர்ப்பா பரணங்கள் பழமையானவைகள் என்று ஒதுக்கிவிட்டுப் புதியபூஷணமாகத் தோள்மீது புனைந்தும், நவக்கிரகங்களையும் நட்சத்திரங்களையும் பற்றி இடையறாமல் சுழற்றுகின்ற துருவசூத்திரத்தைத் தும்பிக்கையால் எடுத்துத் தமது திருமார்பில் நவரத்ன மாலையாக வனைந்தும், மலைகளைநோக்கி மலைகளே! நீங்கள் நம்மைக்கண்டு எதிர்கொண்டு வராத காரணம் என்ன? என்று அம்மலைகளை எடுத்து ஆகாயத்தில் எறிய அதனால் சிதைவுற்ற அண்டகடாகத்தில் இருந்து அபரிமிதமாகப் பெருகி ஆரவாரத்துடன் ஓடிவருகின்ற ஆகாயகங்கையைப் பூர்வம் தன் பிதா ஜடாமுடிமேல் ஒரு சிறு திவலையாக ஏற்றுக்கொண்டதுபோல் தமது

சடைமுடிமேல் தாங்கியும் இவ்வண்ணம் பல சிறு குறும்புசெய்து நீர்விளையாடநினைந்து திருப்பாற்கடலுக்குச் சென்று அக்கடலிலுள்ள நீரெல்லாம்தன்னொருதும்பிக்கையால்உறிஞ்சுதலும்அத்தும்பிக்கையின்உள்ளாக அந்த வெள்ளநீருடன் நவரத்நங்களும் ஜலசரங்களும் ஆதிசேஷனும்அனந்தசயனனும் திருமகளும் அந்த அனந்தசயனன் நாபிக்கமலத்தில் வசிக்கும் பிரமதேவனும் கருடனும் பிரவேசம் ஆனார்கள்.

அப்பொழுது பூர்வம் விஷ்ணுமூர்த்தி கூர்மாவதாரம் பண்ணிய நாள் அதை அடக்கும்பொருட்டுச் சிவபெருமான் எழுந்தருளியதுபோல் இந்தக்கணேச மூர்த்தி எழுந்தருளிற்றோ என்று அச்சங்கொண்டவைகளாய் அங்கிருந்த ஆமைகள் எல்லாம் பசையறவற்றிய பாற்கடலில் உள்ளகுழை சேற்றினிடமாக மறைந்துபோயின. மச்சாவதாரம் எடுத்தபோது அதன்கண்ணைப் பறித்தணிந்த கண்ணுதல் மூர்த்தியின் கால்முளையன்றோ என்று சில மீன்கள் துடித்தன. வருணன் கணேசமூர்த்திக்கு வாரிக்குவித்தளித்த வரியிறைபோல் பலமணிகள் அங்கங்கே குவியல் குவியலாய்ப் பிரகாசித்துக் கொண்டிருந்தன. கணேச மூர்த்தியின் விசாலமான செவிகள் அசைதலால் உண்டாகிய பெருங்காற்றினால் மற்றையகடல்கள் எல்லாம் அலைமோதிக் கொந்தளித்து ஆர்ப்பொலி செய்வது ஐயோ நமது இனமாகிய திருப்பாற்கடல் வறுமை அடைந்துவிட்டதே என்று இரங்கி அலறிப்புரண்டு விழுந்து புலம்புவதுபோலும்.

இந்தப்பிரகாரம் திருப்பாற் கடலானது வற்றிவறண்டு வறுமைஅடைந்து போகையில் கணேசமூர்த்தி புழைக்கையால் உறிஞ்சிய வெள்ள நீரை மீளவும் பூமியின்மேல் விடுதலும் அவ்வெள்ளநீரில் சிதறுண்ட சிறு துரும்புகள் போல் அயன் அரி முதலானவர்கள் எங்கும் சிதறிவிழுந்து மெள்ளமெள்ள ஓர் இடத்தில் ஒன்றுசேர்ந்து, தாங்கள் பட்டபாடுகளை எல்லாம் தமக்குள் பேசி முன்பிறப்பில் செய்த புண்ணியவசத்தால் இப்பொழுது புனர்ஜன்மம் பெற்றோம். என்று மயக்கந்தெளிந்து மகிழ்ந்திருக்கையில் திருமால் தன் இடதுகையில் ஏந்தியபாஞ்சசன்னியம் என்னும் சங்கு வழுவிப்போனதை உணர்ந்து வருத்தத்துடன் எங்கும் தேடியும் காணாமல் தேங்கித்திகைத்து ஏங்கி இளைத்து இனி என்ன செய்யலாம் என்று மனந்தடுமாறி மருண்டு நிற்கையில், ஒரு திசைக்கோடியில் அந்தச் சங்கு முழங்குவதைக் கேட்டு முழக்கத்தால் தன்னுடையது என்று உணர்ந்து தன் பரிவாரத்தில் சிலரைக் கண்டுதெளிந்து வரும்படி அனுப்ப அவர்கள் காற்றினுங்கடிதுசென்று கணேசமூர்த்தியின் கணங்களில் ஒருகணநாதன் கையிற்பிடித்து முழக்குவதைக்கண்டு திரும்பித் தாம்கண்

டவர்று சொல்லக்கேட்டுத் திருமால் திகிற்பட்டு இதற்கு என்னசெய்யலாம் என்று தன்புடைசூழ்ந்தவர்களை வினவி, அவர்களுடன் கயிலாசத்திற்குச்சென்று அங்கு நந்திதேவர் அநுமதிபெற்று உள்ளே பிரவேசித்துப் பார்வதிசமேதராய் வீற்றிருக்கும் சிவபெருமான் சன்னிதானத்தில் விழுந்து பணிந்து கைகூப்பித் தொழுது கைலாசபதி! உமது கட்டளையால் அடியேன் பாற்கடலில் பள்ளிகொண்டிருந்தேன். அவ்விடத்தில் கணேசமூர்த்தி நீர்விளையாடக் கருதித்தமது கணங்களுடன் வந்து புழைக்கையால் வெள்ளநீருடன் என்னையும் உறிஞ்சி மீளவும் விடுத்தனர். அம்பலத்தில் ஆனந்தக்கூத்தாடும் ஐயனே ! உமது அருளால் அடியேனும்மறுபிறப்படைந்து பிழைத்தேன். தேவரீர் திருவடியண்டை வரலானேன். அதுசமயம் என்கையிலிருந்து வழுவிய வலம்புரிச் சங்கானது கணேசமூர்த்தியின் கணங்களில் ஒருகணநாதன் கையில் சிக்கிக்கொண்டது எம்பெருமானே! அந்தச்சங்கு மீளவும் என்கைக்கு வரக் கருணைசெய்யவேண்டும் என்று பரிதபிக்கும் நிலைமையைச் சிவபெருமான் உமாதேவிக்குக் கடைக்கண்ணால் காட்டி வாராய் படியுண்ட நெடுமாலே! பேராண்மை உடையானே! இது நம்மால் ஏலாது. உனக்கு அந்தச்சங்கு வேண்டுமானால் உபாயம் சொல்லுகிறோம்கேள். நீ விரைந்து நமது நேசவாசஸ்தலமாகிய காஞ்சிக்ஷேத்திரத்துக்குச் சென்று உன் இருப்பிடமான அத்திகிரியில் வலம்புரி விநாயகனை ஸ்தாபித்து ஆகமவிதிப்படி பூசைசெய்து பெற்றுக்கொள் என்னும், அக்கடவுள் அருளைச் சிரசின்மேற் கொண்டு விடைபெற்று விரைந்து மீண்டு காஞ்சிமாநகரத்திற்கு வந்து அத்திகிரியின் மேற்கு வாயிற் புறத்தில் உள்ள ஒரு குகையில் வலம்புரி விநாயகமூர்த்தியை ஸ்தாபித்து, ஆசை, கோபம், அகந்தை ஒன்றும் அணுகாமல் விளங்கும் சித்த சுத்தியுடன் ஆவாகனம் பாத்தியாசமனம், அர்க்கியம், திருமஞ்சனம், ஆடை ஆபரணம், பூணூல், கந்தபுஷ்பதாம்பூலம், தூபதீபம், கனிவர்க்கம், மற்றும் பக்ஷணம், நைவேத்தியம் முதலானவைகளைக்கொண்டு மந்திரங்களில் சிறந்த தந்திகாயத்திரி என்னும் மந்திரத்தை முறைமையாக உச்சரித்துப் பிரதட்சிணஞ்செய்து பூமியில்விழுந்து பணிந்து எழுந்து கைகொட்டி ஆடிப்பாடி அழுது தொழுது சுருதி முறையாக ஐயனே ! வேதாந்தத்தாலும் அறியப்படாத ஆனந்தரூபியே ! பிரணவ மந்திரப்பொருளே ! யானைமுகம் உடையானே ! வெண்மை, கருமை, செம்மை, பசுமை, பொன்மை, முதலிய பஞ்சவண்ணப் பரம்பொருளே ! கருணாகர மூர்த்தியே ! அன்பர்களும் அமரர்களும் ஆரம்பிக்கும் காரியங்களைத் தடையின்றி முடிப்பதற்குத் திரு அவதாரம் செய்தருளிய மூலாதாரப்பொருளே ! மலைமகள் மகிழ்ந்தளித்த மத குஞ்சரமே !

துஷ்டர்களும், அசுரர்களும் செய்யத் தொடங்கும் காரியங்களைக் கெடுக்க வந்த துளைசிங்கமே! சூரன் முதலானோரைக் கொன்று சுரர் முனிவர்களைக் காத்தருளிய சுப்பிரமணிய சுவாமிக்கு முன் பிறந்த வீராதிவீரனே! திரிபுரதகனம் செய்தருளிய சிவபெருமான் மகிழ்ந்தளித்த செல்வமே! வலம்புரிவிநாயகா! பக்ஷணமும் ஒற்றைக்கொம்பும், பாசாங்குசமும், பதுமமலர்க்கையில் ஏந்திய பரமகருணை நிதியே! சந்திரஜடாதாரியே! கபடம் இல்லாத அடியவர்கள் கருதியபடி கனிந்தருளும் கற்பகமே! ஆதரித்து அருச்சனை செய்கிறவர்களுக்கு ஆபத்துவேளையில் உதவும் அருஞ் செல்வமே! உலகமாதாவாகிய உமையவள்கண்டு களிக்கத் தேவரீர் திருவிளையாடல்செய்து திருப்பாற்கடலில் நீராடவந்து தும்பிக்கையால் உறிஞ்ச அதனோடு பிரவேசித்து மீண்டு வெளிப்பட்டதனுல் அடியேன் தேகமும் புனிதம் ஆகப்பெற்றேன். அவ்வேளையில் அடியேன் கையில் இருந்து வழுவிப்போன சங்கு உமது கணங்களில் ஒரு கணநாதன்கையில் சிக்கிக்கொண்டது. கருணைவைத்து அதை அடியேனுக்குக் கொடுத்தருள வேண்டும் என்று பிரார்த்திக்கும்போது வலம்புரிவிநாயகர் பிரத்தியக்ஷமாகிப் பாஞ்சசன்னியத்தைக் கொடுப்பித்து வாராய் திருமாலே! இன்னும் உனக்கு வேண்டியவரம் கேளாய் என மஹாப்பிரபு! புண்ணிய கோடீசர் சந்நிதானத்திற்கு எதிரில் அடியேனுடன் இந்த அத்திகிரியில் எந்நாளும் வீற்றிருந்து இங்கு வந்து தொழுகின்ற எல்லாருக்கும் வேண்டும் வரம் கொடுத்தருள வேண்டும் என்று துதிக்கத் திருவுள மகிழ்ந்து அவ்வண்ணமே அவ்விடத்தில் அமர்ந்தருளினர். பகைவரை அழிக்கும் ஏகதந்தப்படை ஏந்திய வலம்புரி விநாயகக்கடவுளும் சேஷசயன சக்கரபாணியாகிய வரதராஜப்பெருமாளும் அந்த அத்திகிரியில்வந்து வந்தனை வழிபாடுசெய்யும் மானிடர்களுக்கு வேண்டும் வரம் கொடுத்துச் சிறந்துவீற்றிருக்கின்றனர்.

முனிவர்களே! வலம்புரிவிநாயகர் சரித்திரத்தை வாசித்தவர்களும், கேட்டவர்களும், நல்லமனமுடையவர்களுக்குச் சொன்னவர்களும் இவ்வுலகத்தில் யாதொரு இடையூறும் இல்லாமல் புத்திரபாக்கியம் முதலான சகலபாக்கிய சம்பூரணராய் மகிழ்ந்து வாழ்ந்து வெறுப்பு உண்டானபின்பு யான் எனது என்னும் இரண்டுபற்றுகளையும் அறுத்துப் பரமானந்தமுத்திபெற்றுப் பல்லாண்டு பல்லாண்டாக வாழ்ந்திருப்பார்கள்.

வலம்புரிவிநாயகர் மலரடிபோற்றி.

---

வரதராஜப்பெருமாள் மலரடிபோற்றி.

நான்காவது.

## சிவாத்தானப்படலம்.

பெருமைக்குரிய பெரியோர்களே ! அத்திகிரியில் வலம்புரிவிநாயக க்கடவுள் வாழ்ந்தருளும் வண்ணம் வகுத்துச்சொன்னோம். இப்பால் பிர மதேவன் பூசைசெய்து பேறுபெற்ற சிவாத்தானத்தின் பெருமைசொ ல்லுகிறோம். செவிக்கு விருந்தாகச் சிந்தனையுடன் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

ஆதிகாலத்தில் திருமால் சிவபெருமானுடைய இடப்பாகத்தில் தோ ன்றி, அக்கடவுள் அருளால் பிரமதேவன் முதல் அண்டரண்டசராசர ங்களைப் படைக்கக் கண்டு, பிரமதேவன் பொறாமை அடைந்து மனம் புழுங்கிச் சந்திரசடாதாரியாகிய கைலாசபதியின் சந்நிதானத்தில் செ ன்று சாஷ்டாங்கமாகப் பணிந்து, சுவாமி ! கைலாசபதி ! நாராயணனை இடப்புறத்திலும் அடியேனை வலப்புறத்திலும் பெற்றளித்தீர். அடியே னுக்குச் சத்தியலோகத்தையும் அந்த நாராயணனுக்கு வைகுண்டத்தை யும் வசிக்கும் இடமாக ஏற்படுத்தினீர். படைத்தல் காத்தல் என்னும் இரண்டு தொழிலை எங்களுக்குப் பிரித்தருளினீர். பொன்போல் விள ங்கும் சடை முடி யுடையவரே !. விருப்பு வெறுப்பு இல்லாத உமக்குநா ங்கள் இருவரும் சமம் ஆனவர்களே யல்லாமல் வேறு இல்லை, என்று னும் அந்தநாராயணன் பத்திசெய்து உமது அருளைப்பெற்று அடியேனை யும் மற்றும் அகிலலோகங்களையும் படைத்து அகமகிழ்ந்திருக்கின்றனன். அப்படியே அடியேன் அவனையும் அகிலலோகங்களையும் படைக்கும் தி றம் கொடுத்தருளவேண்டும் என்று வேண்டுதலும், எம்பெருமான்:—வா ராய் மகனே ! இவ்வரம் உனக்கு வேண்டுமானால், நீ காஞ்சிமாநகரத்தி ற்கு போய் எம்மைப் பூசைசெய்துகொண்டு இரு. அங்கே நாம் வந்தளி க்கின்றோம், இதற்கு நீ சந்தேகப்படவேண்டாம், என்று அநுக்கிரகம் செய்யப்பணிந்து எழுந்து விடைபெற்றுக்கொண்டு, மலரவன் மீண்டு விரைந்துவந்து, காஞ்சிமாநகரத்தில் பூஞ்சோலையால் சூழப்பட்ட புண் ணிய கோடீசத்தின் கிழக்கில் தன் பெயரால் பிரமீசன் என்னும் சிவ லிங்கப்பிரதிஷ்டை பண்ணிப் பிரமதீர்த்தம் என்று ஒரு தீர்த்தமும் உண்டாக்கி, அத்தீர்த்தநீராடி நித்தியாநுஷ்டானங்களை முடித்துக்கொண்

டு மெய் யன்புடையனுகிப் பூசைக்குரிய புஷ்பம் கொய்து வந்து எவ்வுயிர்க்கும் இறைவனுகிய சிவபெருமானுடைய சீர்பாத கமலங்களைப்பூசித்து மகிழ்ந்து பின்பு சோமயாகம் செய்யக்கருதினன். அதை உணர்ந்து தேவேந்திரன்முதலான தேவர்களும் முனிவர்களும் மற்றயாவரும் அங்கே வந்து சேர்ந்தார்கள். அத்தருணம் பிரமதேவனுடைய பத்தினிமார்மூவரில் சரஸ்வதிஎன்பவள் வராமல் சிலநாள் சலத்திலும் சிலநாள் மரங்களிலும் மறைந்திருந்தனள், அந்தச் சரஸ்வதி வாத்தியங்களின் ஓசையிலும் வீணை ஓசையிலும் குழல் ஓசையிலும் இசைமயமாக வியாபித்திருப்பாள் என்று வேதங்கள் எல்லாம் விளம்பும். ஆதலின் பிரமதேவன் அந்தச்சரஸ்வதியை எங்கும் தேடிக்காணுமையால் சாவித்திரி வேதகாயத்திரிஎன்னும் மற்றிரண்டு மனைவியருடன் தீக்ஷைபெற்று யாகசாலைக்குட்பிரவேசித்தான். அதை அகிலலோக காரணியாகிய சரசுவதிகேட்டு மனம் புழுங்கி அந்த யாகசாலையை அழித்துப் பாழாக்குவேன் என்று துணிந்து ஒரு நதி வடிவங்கொண்டு பெருங் கோபத்துடன் வருகின்ருள். எங்ஙனமெனில்:—

பிரமதேவன் யாகம்செய்யும் இடத்தையே அன்றி அவன் உலகமாகிய சத்தியலோகத்தையும் அழிக்க நினைத்ததுபோல் அந்நதி சுழித்துக் குமிழி இட்டு நுரைத்து அலைவீசி அடித்து அண்டகடாகம்வரையிலும் ஓங்கி அளாவி அதிவேகங்கொண்டு, வரிகளையுடைய வண்டின் கூட்டங்கள் சிறகு உலர்த்தும்படி தேன் பெருகும் தாமரைப்பூவில் வசிக்கும் பிரமதேவன் யாகம்செய்வதற்கு இந்தப்பூமி இடங்கொடுத்ததல்லவா? என்று வெகுண்டு ஆயிரம் பணமுடியுடைய ஆதிசேஷன் அஞ்சிப் பயந்து உடல் நெளிய உலகத்தை அடியோடு பெயர்க்கலாயிற்று. அது அன்றியும் வேதாகமவிதிப்படி யாகஞ்செய்வதற்கு வேண்டும் பொருள்களை வேண்டியமட்டும் கொடுத்தபடியால் நீர்வளம் பொருந்தி நிலவளம் மிகுந்த வயல்களையும் வாவிகளையும் மலர்ப் பூஞ்சோலைகளையும் அழித்து அந்தயாகத்தில் அவிவாங்கி உண்ண ஆவலுடன் வருகின்ற சந்திரசூரியர்களை நடுவழியில்கண்டு வெகுண்டு தன் கையால் பிடித்துக்கொண்டு அதிவேகமாய்ப் போவதுபோல் வெண்டாமரை மலர்களையும் செந்தாமரை மலர்களையும் அலைமேல் ஏந்திக்கொண்டு அதிவேகமாய் ஓடியும், பிரமதேவனிடத்தில் உண்டானகோபத்தால் இரண்டு கண்ணும் சிவந்ததுபோல் செங்கழுநீர்மலர்கள் சிவந்து காட்டவும், உடம்பெல்லாம் வெயர்த்துத் துளித்ததுபோல் சிறுதிவலை வீசவும், பயோதரத்தின்மேல் தரித்த பட்டாடையானது அவசரத்தில் சரிந்து அசைவதுபோல் மலைகளுடன்

அலைகள் அலையவும், அந்தயாகத்தில் அவிவாங்கி உண்ண அடர்ந்திருக்கும் அமரர்களையும் அடித்து அலைவுசெய்யும்படி மலைகளையும் மூங்கிற் புதர்களையும் வாரிக்கொண்டு யுகாந்தகால வெள்ளம்போற் பெருகி அதிமுழக்கத்துடன் வருவதைக்கண்ட கண்கள் கூசவும், காதுகள் செவிடுபடவும், அல்லோலகல்லோலமாகி யாகத்தை அழித்தபின்பு அந்த யாகஞ் செய்தவிடத்தில் நடவேண்டும் என்ற நோக்கத்துடன் கள்ளிச்செடிகளையும் முள்ளுச்செடிகளையும் வாரிக்கொண்டு வந்தது.

இந்தப்பிரகாரம் சரசுவதி நதிவடிவங்கொண்டதற்குத் தகுதியாக அவள் அவயவங்களில் கூந்தல் கருமணலாகவும் முகம் செந்தாமரைமலராகவும் வாய் செவ்வல்லிமலராகவும் இடை பூங்கொடியாகவும் உருமாறிவந்தாற் போல் உருமாறி அழகுமிகுந்து வரும் வழியில் எதிர்ப்படும் மதில்களையும் மாடமாளிகைகளையும் பெயர்த்தெறிந்து பேரிடி முழக்கம் போல் முழங்கிவருவதை மகதியாழ்பிடித்து மதுரகீதம்பாடும் நாரத முனிவன்கண்டு கட்டிய சடை முடி கலைந்து குலைந்து காற்றைப்பார்க்கிலும் கடிது சென்று பிரமதேவனைப்பணிந்து தேவதேவனே ! உன்யாகத்தை அழிக்கச் சரசுவதி சினங்கொண்டு ஒரு நதி வடிவமாய் வருகின்றாள். வெள்ளம் வருவதற்குமுன் அணைபோட்டுக்கொள்க என்று சொல்லுதலும் பிரமதேவன் பார்வதி சமேதராகிய பரமேஸ்வர மூர்த்தியின் பாதாரவிந்தங்களைத் தியானஞ்செய்வதைத்திருவுளங்கொண்டு சிவபெருமான் வரதராஜனை அழைத்துவாராய் வரதராஜனே ! நீ வேள்வியாம் வேள்விக்கு அதிபதி. அந்தவேள்வியை அழிப்பதற்குச் சரசுவதி நதிவடிவமாகி வருகின்றமையால், வராதபடி விரைந்து சென்று தடைசெய் என்று திருவாய் மலர்ந்தருளலும் உடனே மலரவன் தந்தையாகிய அந்த வரதராஜன் மனவூக்கங்கொண்டு எதிர் சென்று ஐந்துயோசனைதூரமாகச் சேஷசயனத்தின்மேல் நீலகிரிபோல் கண்வளர்வதைச் சரசுவதி கண்டு நெடுந்தூரம் விலகி வேறு ஒரு நெறியில்சென்று வடதுபாரிசமாய் வருவதை அறிந்து பாதிவழியிற்போய் முன்போல் பள்ளிகொண்டிருப்பதைப் பார்த்து அவ்விடம் விட்டுத் தென்புறமாக ஓடிவர அங்கும்சென்று தடுத்து எந்தபக்கத்திலும் வரவொட்டாமல் காஞ்சிமாநகரத்துக்கு ஒரு அணைபோல் அணுகி இருப்பதை அறிந்து சரசுவதி அந்த யாகசாலையின் கீழ்த்திசையாகச் சென்று சமுத்திரத்திலே சங்கமம் ஆயினள். அதனால் பிரமதேவன் ஆயாசம்தீர்ந்து அகமகிழ்ந்திருந்தனன்.

இப்பால் சிவபெருமான் பூதகணங்களுடன் திருமாலுக்குக் காட்சி கொடுத்தருளி வாராய் வரதராஜா ! யாம்சொன்னவண்ணம் செய்தமை

யால் இனி நீ சொன்னவண்ணம் செய்தவன் என்று சொல்லப்படுவாய். பாபங்களைப்போக்கும் இந்த நதியானது வேகவதி என்று சிறந்து காஞ்சிமாநகரத்தில் எல்லாவுயிர்களுக்கும் இதம் செய்யக்கடவது. மேலுமிந்நாதி இந்நகரத்தில் நடு இராத்திரியில் வருவதைக் காண்பதற்குநீ தீபப்பிரகாசமாய்ச் சென்றதனால் விளக்கொளிப்பெருமாள் என்னும் ஒருநாமத்தையும் பெறுவாயாக என்று அநுக்கிரகம் செய்து இந்தப்பிரகாரம்அந்த யாகத்தைக் காத்தருளியபின்பு பிரமதேவன் நதிவடிவமாய்வந்த சரஸ்வதியானவள்மரத்தில்மறைந்திருப்பதை யுணர்ந்து அந்தமரத்தைச்சேதித்து ஒருதண்டமாகக்கொணர்ந்து தண்டமயமாயிருக்கும் சரஸ்வதியுடன் தீட்சைபெற்றுச் சோமயாகம் செய்யத்தொடங்கும் போது அந்தயாகத்தை நடத்தும் ருத்துவிக்குகளில் மயித்திராவருணன் கையில் அந்தத் தண்டத்தைக் கொடுத்து இதில் மறைந்திருக்கும் சரஸ்வதியை பிரித்துக்கொடுக்கவேண்டும் என்று வேண்டியபடி அந்த மயித்திராவருணன் வெளிப்படுத்தினன். வெளிப்படுத்தலும் சரஸ்வதிதன் நாயகனுடன் சேர்ந்துயாக பத்தினியாகி அவன் பக்கத்தில் இருக்க அவனும் மனமகிழ்ந்து வேள்வியை முடித்து விதிப்படி ஸ்நாநாதி வினைமாசுதீர்ந்து அவ்விடம் விட்டுச், சிவலிங்கத்தின் முன்பாக வந்து சரஸ்வதி, சாவித்திரி, வேதகாயத்திரி என்னும் மனைவியர் மூவரும் வசிஷ்டர் முதலான மகாரிஷிகளும் தேவர்களும் அசுரர்களும் புடைசூழ்ந்து துதிசெய்து கொண்டுதங்கி இருக்கும் சபைக்கு நாயகமாய் இருந்து சிவபெருமானை இருதயகமலத்தில் எழுந்தருளச்செய்து மிக்க அன்புடன் தியானம்பண்ணி உபசரிக்கும்போது அந்தர துந்துபி மூழங்கவும், அமரர்கள் புஷ்பமாரிபொழியவும், உருத்திர கணிகையர் வெண்சாமரை வீசவும், கந்தருவர்பாடி வீரப்பிரதாபங்களை எடுத்துச்சொல்லவும், ஞானசனந்தர் முதலான பெரியோர்கள் இருபக்கத்திலும் இருந்து துதிசெய்யவும் அஷ்டதிக்குப்பாலகர் எமது ஐயன் திருவடிகளை முடிமீது தாங்கிவரவும் பார்வதி சமேதராய்ச் சிவபெருமான் அந்தரத்திற்கு ஒரு அலங்காரமாகக் காட்சிகொடுத்தருளக்கண்டு பேரன்புடையவனாகித் தேகமெல்லாம் உரோமம் சிலிர்க்கச் சிரசின்மேல் கைகளைக் குவித்துக்கொண்டு நாவுகுழறிச் சொற்கள்தடுமாற ஆனந்தக்கடலில் விழுந்து ஆடிப் பூமியில் விழுந்து பணிந்து சுருதிமுறையாகத்துதி செய்கின்றான். அடியார்கள் செய்யும் குற்றங்கள் அனைத்தையும் பொறுப்பவனே! சரணம். கொடியவர்கள் செய்யும் குற்றத்தைக்கண்டு தண்டனை செய்பவனே! சரணம். நல்லோர்செய்யும் வந்தனைவழிபாடுகளைக்கொண்டருள்பவனே! சரணம். அளவில்லாத சொல்லின் பொருள் ஆனவனே! சரணம். உலகம் காக்கும் தேவ தேவனே! சரணம். உண்மை

நெறியை உணர்த்தும் உயர்குருபரனே! சரணம். பூதநாயகா! சரணம். இராஜராஜேஸ்வரா! சரணம். பார்வதிபாகா! சரணம். பசுபதி! சரணம். பரமேட்டீ! சரணம். ஒருமுறை பத்துலட்சமுறை சரணம் சரணம். மனம் வாக்கு காயங்களால் அறிய ஒண்ணுத மகாதேவா! சரணம். மறுபடியும் சரணம் சரணம். நீலகண்டா! சரணம், என்று நாவுதடிப்பேற த்துதிசெய்து போற்றிபோற்றி என்று புகழ்தலும் சிவபெருமான் வாராய் மறையவனே! உன்பத்தியின் உறுதியைப்பார்த்துயாம்சந்தோஷமானேம் முன்பு நீ எம்மிடத்தில் வரம்வேண்டியபடி திருமாலுடன் சகலலோகங்களேயும் சிருஷ்டிசெய் என்று அநுக்கிரகம் செய்யத் திசைமுகன் தாழ்ந்து பணிந்து சுவாமி! எனது ஆஸ்தானமாக யான்வசிக்கும் இந்த இடத்தை உமது ஆஸ்தானமாகக் கொண்டருளியபடியால் இந்த ஆஸ்தானம் சிவாஸ்தானமென்னும் திருநாமத்துடன் விளங்கும்பொருட்டுத் தேவரீர் இவ்விடத்திலே எந்நாளும் வீற்றிருந்தருள்க. அடியேன் உமது திருவருளுக்கு உரியவனுகி உமது கட்டளையில் தவருமல் நின்று உமது திருவடிமேல்வைத்த பக்தி மாருமல் எந்நாளும் சன்மார்க்கநெறியில் ஒழுகும்படி அநுக்கிரகம் செய்து இந்தச்சிவாஸ்தானத்தை வந்தடைந்து உம்மைப் பணிந்து துதிசெய்கிறவர்கள் யாவரோ ஆயினும் அவர்களை உய்யக்கொண்டருள்க. பர்வகாலம் முதலான புண்ணியகாலங்களில் இந்தப் பிரமதீர்த்தத்தில் நீராடி நீர்க்கடன் முதலியவைகளை முடித்து இந்தச் சிவாஸ்தானத்தில் வந்தனை வழிபாடுசெய்கிறவர்கள் சகலபாக்கியமும் பெற்றுச் சந்தோஷத்துடன் வாழ்ந்து மறுமையில் சதானந்த முத்தி யடையும்படி தண்ணருள்புரிக, என்று வேண்டிய வரமெல்லாம் விரைந்து கொடுத்தருளி அந்த இலிங்கத்தி னிடமாக மறைந்தருளுதலும் அந்தப்பிரமதேவன் சிவாநுக்கிரகத்தால் திருமாலுடன் சகலலோகங்களையும் ஒருகவளமாகத் திரட்டி விழுங்கிப் பழையபடி எல்லாவற்றையும் சிருஷ்டிக்கச்சிந்தனை செய்து சிவாத்தானத்தின் சந்நிதியில் சந்தோஷத்துடன் தங்கியிருந்து முதலில் மனதை உண்டாக்கினன். அந்தமனத்திலிருந்து காயத்திரியையும் அந்தக் காயத்திரியிலிருந்து சந்தைகளையும் அந்தச்சந்தைகளிலிருந்து சாமவேதத்தையும் அந்தச்சாமவேதத்திலிருந்து எசுர்முதலான வேதங்களையும் அந்த எசுர்முதலான வேதங்களிலிருந்து விஷ்ணுவையும் அந்த விஷ்ணுவிடத்திலிருந்து பயிர்களையும் அந்தப்பயிர்களிலிருந்து சந்திரனையும் அந்தச்சந்திரனிலிருந்து ஆன்மாக்களையும் அந்த ஆன்மாக்களிலிருந்து இந்திரனையும் அந்த இந்திரனிடத்திலிருந்து சகலலோகங்களையும் படைத்தனன்.

முனிவர்களே! இந்தப்பிரகாரம் ஒருவரை ஒருவர் படைத்தும் அழித்தும் அகங்காரம் அடைந்திருக்கும் இந்தப்பிரம விஷ்ணுக்களை உயர்பரம்பொருள் என்று முற்பிறப்பிற் செய்த பாவவசத்தால் மருள் கொள்ளுகிறவர்கள் மருள் கொள்ளக்கடவர். தத்துவசாஸ்திர விசாரணைசெய்து சிவாநுக்கிரகம் பெற்று விளங்கும் பெரியோர் எல்லாரும் ஆலகாலவிஷத்தைக் கண்டத்தினிடமாக அடக்கி அமரர்களை ஆதரித்து முக்குணங்களையும் கடந்திருக்கும் முக்கண்மூர்த்தியே எல்லாருக்கும் மூலகாரணன் என்று தெளிந்து சிறப்புடன் வாழ்ந்திருப்பார்கள்.

சிவாஸ்தானப்பெருமான்றிருவடிபோற்றி.

---

ஐந்தாவது.

## மணிகண்டீச்சரப் படலம்.

நிமல நித்தியானந்த ரிஷிகளே! வண்டுகள் கால்கொண்டு வருத்தஅரும்பு அவிழ்ந்து இதழ்கள் தோறும் தேன் ஒழுகப்பூத்திருக்கும் செந்தாமரை மலர்த்தடஞ் சூழ்ந்த சிவாஸ்தானத்தின் வரலாறு சொன்னேம். இப்பால் கல்வி கேள்விகளிற் சிறந்த புலவர்கள் கூட்டம் கூட்டமாகக் கூடித் தேவாமிர்தத்திலுஞ் சிறந்து நவரசம் பொழியும் செந்தமிழ்பயில்கின்ற அவைக்களம் மிகுந்த காஞ்சிமாநகரத்தில் அந்தப் புண்ணிய கோடீசத்தின் மேற்றிசையில் மாட்சிமை பெறிருக்கும் மணிகண்டீச்சரத்தின்மகிமையை அன்புடன் சொல்லுகிறோம். அமைவுடன் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

முன்னொருகாலத்தில் வண்டுகள்மொய்த்துக் கீதம்பாடும் கற்பகப் பூமாலைகளை முடிமீதணிந்து முப்பத்துமுக்கோடி தேவர்களும் வாள்ஏந்திப் போர்செய்யும் திறம்பெற்ற அசுரர்களும் வினைவலியால் மரணம் அடைவதற்குப் பயந்து சாவாமருந்தை நாடிப்பெறும் பொருட்டுத் தாமரைமலர்மேல் வீற்றிருக்கும் சதுமுகக்கடவுளை அடைந்து பாதபங்கயங்களைப் பணிந்து துதிசெய்து இராசதம் தாமதம் சாத்துவிகம்என்னும் முக்குணங்களிலிருந்து மும்மூர்த்திகளைப் படைத்து முத்தொழிலையும் நடத்திவரும் முதல்வனே சர்வவியாபகனாகிய உனது கண் இமைப்பொழுதில் அடியேங்களுக்குச் சனனமரணங்கள் சம்பவிக்கின்றன, ஆதலின்

அடியேங்கள் மரணத்திற்குப் பயந்து தங்களை அடைக்கலமாக வந்தடைந்தோம். இனி நாங்கள் மாளாதிருந்து மதங்கொண்டு வாட்போர் புரிந்து மனமகிழ்ந்து வாழ்வதற்கு ஓர் உபாயம் கூற வேண்டுமென்று வருந்திக் கேட்கையில் பிரமதேவன் அவர்களுடன் வைகுண்டத்திற்குப்போய் முனிவர்கள் துதிக்க மகாலட்சுமி மலரடிவருடக் கருடன் முதலானோர் கைகூப்பித் தொழுதுநிற்கச் சேஷசயனத்தின்மேல் அறிதுயில் செய்கின்ற நாராயண மூர்த்தியைக்கண்டு நாத்தழும்பேறத் துதிசெய்து திருப்பள்ளியிலிருந்து எழுந்தருளும்போது விநயமாகப்பணிந்து அடியேங்கள் மரணத்திற்குப் பயந்து உமதுசரணமே சரணகவந்தடைந்தோம். சீதளவாசத் திருத்துழாய் அணிந்த திருவருட்கடலே! எங்களுக்கு மரணம்வந்து அணுகாத மார்க்கம் திருவாய்மலர்ந்தருள வேண்டும் என்று பிரார்த்திக்க அந்தத்திருமால் நெடுநேரம் யோசித்துத் தேவாசுரர்களே ! நீங்கள் இனி மரணத்திற்கு அஞ்சவேண்டாம் ; நாம்மரணம் அடையாதிருக்கும் பொருட்டுத் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதம் அருந்துவோம் ; அந்த அமுதம் அருந்தினால் மரணம் ஒருபோதும் அணுகமாட்டாது என்று சொல்ல, யாவரும் கேட்டுக் களித்துச் சுவாமி! கடலைக்கடைந்து அமுதங்கண்டெடுப்பது எப்படி ? கருணைசெய்ய வேண்டுமென்த் திருமால் தன்திருவுளத்தில் எண்ணி முத்துமாலைபோற் புரளும் அருவிகளையுடைய மந்தரகிரியை மத்தாகநாட்டி வாசுகிஎன்னும் பாம்பை வடமாகப் பூட்டித் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதம் எடுக்கலாமென்று சொல்லக்கேட்ட சுராசுரர்கள் அடைந்த சந்தோஷத்தை அளவிட்டுச் சொல்ல யாரால்முடியும் ?

இதுநிற்க, இப்பால் சுரர்களும் அசுரர்களும் ஆகிய இருதிறத்தாரும் திருப்பாற்கடலைச் சேர்ந்து மந்தரமலையை மத்தாக நாட்டி வாசுகி என்னும்பாம்பை வடமாகப்பூட்டித் திடங்கொண்டு கடையும்போது திருமால் அவர்களை நோக்கிச் சுராசுரர்களே! உங்களில் அமுதங் கடைந்தெடுத்தவர்களே உண்ணுதற்கு உரியராவர் ; மற்றவர்களுக்குக் கிடைக்க மாட்டாதென்று சொல்லக்கேட்ட அசுரர்கள் மிகவும் உற்சாகத்துடன் ஊக்கங்கொண்டு இரண்டு பக்கங்களிலும் நின்று கடையும்போது அந்தமலையானது அசைவறநின்று அசலம் என்னும் அதன்பொருளை வெளிப்படையாக உணர்த்தியது. அதனால் இளைத்து நின்ற அசுரர்களைத் தேவர்கள்பார்த்து அசுரர்களே! நில்லுங்கள், நில்லுங்கள் ; வடத்தை விட்டு விடுங்கள், விட்டுவிடுங்கள், என்று விரைந்துவந்து வீரத்துடன் அந்தவட

த்தைப் பிடித்திழுத்து உள்ளவலியையும் இழந்து வெட்கப்பட்டு இனி என்னசெய்யலாம் என்று சஞ்சலப் படுகையில் வலன் என்னும் அசுரனைக்கொன்ற வச்சிரபாணியாகிய இந்திரன் பெற்றெடுத்த வாலி என்னும் வானரத்தலைவன் எழுகடலையுந் தாண்டி அங்கங்கே வீற்றிருக்கின்ற பரமேஸ்வர மூர்த்தியின் பாதாரவிந்தங்களைப் பணிந்து அத்திருப்பாற்கடலின் அருகே வரக்கண்ட பிரம விஷ்ணு தேவேந்திராதி தேவாசுரர்கள் எல்லாரும் பேரானந்தமடைந்து அவன் வருகையை எதிர்கொண்டேற்று நிற்கையில் அந்தவாலியானவன் பிரமதேவனையும் விஷ்ணு மூர்த்தியையும் வணங்கி மற்றையதேவர்களுக்கு அபயாஸ்தம் அளித்து நீங்கள் எல்லாரும் ஒருமைப்பட்டு இங்கே என்னசெய்கிறீர்கள், என்றுவினவப், பிரமதேவன் உள்ளபடிசொல்லி அப்பா! உன்னை எங்கள் இஷ்டதெய்வந்தான் இங்கே கொண்டுவந்து விட்டது. எங்களுக்கு நீயேதுணைசெய்யவேண்டும் என்று கூறக்கேட்டு ஆ! இதுஎன்ன அதிசயம்-மகாபராக்கிரம சாலிகளாக விளங்கும் சுராசுரர்கள் ஆகிய உங்களால் ஆகாத காரியம் மிகவும் அற்பனும் என்னால் ஆகுமோ? ஆகாதே என்றாலும், நாம் எல்லாரும் ஒருமித்துக் கடலைக்கடைவோம். தெய்வச்செயலின்படி ஆகிறது என்று அந்தப்பாம்பின் வாலைத் தான்ஒருவனே வலிகொண்டுபிடித்து வலித்திழுத்தான். தேவர்களும் அசுரர்களும் அந்தப்பாம்பின் படத்தைப்பிடித்து ஒருபக்கத்தில் நின்று இழுத்தும் இழுக்க முடியாமையால் மனந்தளர்ந்து தன்பக்கமாகச் சாய்ந்து வருவதைக்கண்டு அந்தவாலியானவன் தேவாசுரர்களே! நீங்கள்பிடித்தபிடியை விட்டுவிடுங்கள், என்று தானே அந்தப்பாம்பின் தலையையும் வாலையும்பிடித்து ஒருகையைமடக்கி மற்றொருகையை நீட்டி மிகவும் ஊக்கத்துடன் கடையும்போது அந்த மந்தரகிரியானது அந்தக்கடலில் ஆழ்ந்து போவதைக் கண்டு திருமகள் மார்பனாகிய திருமால் உடனே ஆமைவடிவமாகி முதுகுகொடுத்துத் தாங்கியதனால் அந்தமலை ஒரு தோணிபோல் சமுத்திரத்தின்மேல் மிதக்கலுற்றது. அவ்வாறு மிதக்கலுற்ற மலையை மேகவண்ணனாகிய கண்ணபிரான் தன்கைத்தலங்களால் நிமிர்த்துப் பழையபடி நாட்டிவைத்தபோது வாலியானவன் அந்தமலை வலம் இடமாகச் சுழலவும் அந்தக்கடலானது அல்லோல கல்லோலப்பட்டுச் சுருண்டு மடிந்து விரிந்து பரந்து துள்ளிக்கொதிக்கவும் பாம்பைப்பிடித்துக் கடையுங்காலத்தில் அந்தப்பாம்பு சகிக்கமுடியாமல் வாடி வருந்தி வாய்நுரைதள்ளிப் பெருமூச்சுவிடுதலும் அந்தக் கடலிலிருந்து கொடிய யமன்போலும்

ஆலகாலவிஷம் புறப்பட்டது. அதனால் அக்கடல்முழுவதும் வற்றிவ றண்டு அண்டகடாகம் எல்லாம் தபிக்கப்படுதலால் வாவியானவன் வெம்பி வெதும்பித் தன் உடல்பொரிந்து கரிந்து சாம்பலாய்ப் போம் என்றுபயந்து பெரு ஓட்டம்பிடித்தான். வெள்ளைமேனியுடைய விஷ்ணு உடல்கறுத்து அன்றுதொட்டுக் கரியன் ஆயினான். பிரமதேவன் பொன்னிறமாறிப் புகைநிறம்பெற்றான். திக்குப்பாலகர் எல்லாரும் உரு வமாறி வெருவி அலறினார்கள். பின்பு எல்லாரும் ஒன்றுசேர்ந்து வேறுபுகலிடம் இல்லாமையால் அடுத்தவர்களைக் காத்து இன்பங்கொடுத்தருளும் ஸ்ரீகைலாசகிரியை நோக்கிக் கால்கள் ஓய்ந்து பின்னலிடும் படிதளர்ந்து நடந்து வெயிலில்நடந்து மெலிவுற்றவர்கள் விருட்சத்தை நாடி வருவதுபோல் வந்துசேர்ந்து அந்தக்கைலாசகிரியை அடைந்து கொடியவிஷவேகம் தணிந்து அந்தமலையைப் பணிந்து அன்புடன்சென்றுபோக புரமாகிய சிவபுரத்தில் தென்றல் உலாவும் இளமரச்சோலையில் தங்கி இளைப்பாறித் துயரம்நீங்கி நான்குதிசைகளையும் கண்களை ஏறவெடுத்துப் பார்க்கையில் என்னிடத்தில் அடைக்கலமாக வந்தடுத்த உங்களைத் தொடர்ந்து வருகின்ற அந்தக்கொடிய விஷம் இங்கே அணுகாதபடி நான் அடித்துத் தள்ளுகிறேன் என்று தன்கைகளைநீட்டிக் காட்டுவதுபோல் அந்தவெள்ளியங்கிரி வெண்பெருஞ் சோதியுடன் விளங்குவதையும் ஐயோ! இவர்கள் ஆலகாலவிஷத்தால் அலைந்து குலைந்து வெந்து விரிந்து நொந்துவந்த நல்லோர்கள் என்று இரங்கினவைபோல் அந்த மலைமேற்புரளும் அருவிகள் இரங்கி அவர்கள்முகத்தில் ஆயாசம் தீரும்படி அதிசீதளமான நீர்த்திவலைகளை வீசுவதையும் நீங்கள் எல்லாரும் அஞ்சும்படி உண்டாகிய ஆலகாலவிஷத்தை யான் உண்டுவிடுகிறேன் என்று அந்தமலைவாய்திறந்தாற்போல் விரிந்துவிளங்கும் குகைகள்தோறும் மனமாசில்லாத முனிவர்கள் அணி அணியாய் அமர்ந்திருப்பதையும் கண்டு மகிழ்ந்து கடலில் மறைந்திருக்கும் வடவாமுகாக்கினியும் அந்த விஷச்சுவாலை சகிக்கமாட்டாமல் அந்தக்கடலைவிட்டு ஓடிப்போய்க் கைலாசகிரியை அடைந்து பூமியிற்படிந்து பிழைக்கும்வரம் வேண்டி வழியில்மிகவும் சிவந்து படிந்து கிடப்பதுபோல் மிகச்சிவந்து பிரகாசிக்கும் மாணிக்கங்களால் பதிப்பிக்கப்பட்ட ஒரு மார்க்கத்தைக்கண்டு அந்தமார்க்கமாகச் செல்லும்பொழுது தேவேந்திரன் பட்டபாட்டிற்குப் பரிதாபங்கொண்டு அவன்வாகனமாகிய மேகங்கள் முந்திச்சென்று எம்பெருமானாகிய சிவபெருமான் சந்நிதானத்தில் நின்று முறையிட்டுக் கொள்ளுவதுபோல் பேரிகை மத்தளம் முதலிய பலவாத்தியங்கள் முழங்கும்

முழக்கத்தையும் நாம் எல்லாரும் நமதுகுறைகூறி முறையிடும்போது பரமசிவம் திருவருள்புரியுமோ திருவுளத்தில் முனிவுகொள்ளுமோ என்று ஐயப்பட்டு அச்சம் அடையுந்தருணத்தில் அங்கங்கே கூட்டங் கூட்டமாய் அதி உற்சாகத்துடன் உல்லாசமாய் உலாவிவருகின்ற பூதகணங்கள் நம்பெருமானாகிய சிவபெருமானைத் தஞ்சம் என்று அடுத்தவர்கள் என்ன அபசாரம் செய்தவர்களானாலும் அவர்களுக்கு அநுக்கிரகம் செய்யாமற் போகமாட்டார் என்று தம்மில்சொல்லிக் கொள்வதையும் கேட்டுச் சிந்தாகுலம்தீர்ந்து, தமது சுற்றத்தார் வருவதைக்கண்டு மகிழ்ந்தவர்கள் முந்திச்சென்று மாளிகையின் உள்ளிருப்பவர்களுக்குத் தெரிவிக்குந் தன்மைபோல் முந்திக் கைலாசபதவி பெற்றிருக்கும் பிரம விஷ்ணுக்கள் காலம்பார்த்துக் கண்ணுதல் மூர்த்தியைக்கண்டு சேவிக்கப்போவதை வியந்து நோக்கி, இந்தப் பிரம விஷ்ணுக்கள் முதலானவர்களும் விரைந்து பின்தொடர்ந்து சென்று அங்கே எம்பெருமானுடைய சாரூபத்தைப்பெற்று வசிக்கின்றவர்களை அணுகி இடப்பாகத்தில் உமையவள் இல்லாமையால் சிவபெருமான் இவர் அல்லர் எனத்தெளிந்து அப்பாற்சென்று விஷ்ணு முதலியதேவர்கள் எல்லாரும் ஒன்றுசேர்ந்து சிவபெருமான் திருவோலக்கமாக வீற்றிருக்கும் சபாமண்டபத்தின் கடைவாசலில்வந்து திரண்டு கஷ்டத்துடன் உள்ளேபிரவேசித்துக் கணநாதர் காவலில் உள்ளதலைவாசலில் பிரம விஷ்ணுக்களும், இரண்டாம்வாசலில் அசுரர்களும், மூன்றாம்வாசலில் தேவர்களும், நான்காம்வாசலில் மருத்துக்களும்;ஐந்தாம்வாசலில் முனிவர்களும்,ஆறாம்வாசலில் அஷ்டதிக்குப் பாலகர்களும்,தடுக்கப்பட்டிருந்தார்கள்.அப்பொழுதுபிரமவிஷ்ணுக்கள்முன்னிட்டுச்சென்று தலைவாசலில் நந்திதேவரைப்பணிந்து அவர்அநுமதியில் உள்ளேநுழைந்து அற்புதக்கொடிபோல் அரம்பையர் ஆடலும்அமுதம்போல் பாடலும் ஒழியாதுவிளங்கும்சபாமண்டபத்தின்நடுவில்வீற்றிருக்கும்நமது பெருஞ்செல்வமாகியசிவபெருமானைக்கண்டுபெருங்களிப்புற்றுக்கணநாதர்கள்கையில் ஏந்தியபிரம்படிக்குக்கலங்கி ஏக்கமுற்றுப் பெரும்பயமும்பேரன்பும்பின்னும்முன்னும் இழுக்கவணங்கித்தண்டனிட்டுச் சந்நிதானத்தில் நெடுந்தூரமாகநின்று அஞ்சலியஸ்தராய்ஆனந்தக்கண்ணீர்சொரிந்து உள்ளங்குழைந்துஉடல்பூரித்து உரோமம்சிலிர்த்துப்பலமுறையாகப் பணிந்து விநயத்துடன் நின்றார்கள். இவ்வண்ணம் இவர்கள் தூரமாக நின்று ஆடிப்பாடி அழுதுதொழுவதைக் கண்டு நந்திதேவர் சிவபெருமானுக்குச் சமீபமாகச்சென்று கைகூப்பித் தொழுது திருமாலும் திசைமுகனும் வந்திருக்கிறசெய்தியை விண்ணப்பஞ்செய்யத் திருவுளத்திற்கொண்டு அவர்

களை இவ்விடத்தில் தருவி என்று திருவாய்மலர்ந்தருளலும் நந்திதே வர் தன்கையில் ஏந்திய பிரம்பை அசைத்து வாருங்கள், என்று குறி ப்பிக்க அவ்விருவரும் சிரசின்மேற் குவித்த கையுடன் சமீபத்தில் வந்து பணிந்து நிற்கையில் பார்வதி சமேதராய் வீற்றிருக்கும் சிவபெருமான் புன்னகைசெய்து திருமாலே! நீ கருநிறம்பெற்ற காரணம் என்னை? திசை முகனே! நீ எவ்வாறு புகைநிறம் பெற்றனை? என்று வினவுகையில் அங் கங்கே கணநாதர்களால் அலைப்புண்ட தேவாசுரர்கள் எல்லாரும்முறையிட த்தொடங்கினர்கள். அவர்கள் ஹர ஹர வென்று பெருங்கூச்சலிடுவதை க்கேட்டு இஃது என்னவெனப்பிரமதேவன்பணிந்து சுவாமி! தங்கள் தரிச னத்திற்குவந்த சுராசுரர்கள் எல்லாம் பூதகணங்களால் தடைபட்டுப் புறம் பேநிற்கின்றார்கள்; அவர்களை உள்ளே விடும்படி கருணைசெய்ய வேண்டு மெனத் திருவருள் சுரந்து நந்திதேவருக்குக் கடைக்கண் பார்வையாய்க் குறிப்பிக்க அவரும் அங்கேவந்து பூதகணங்களைத் தடுத்துச் சுராசுரர்களை நெருக்கத்தில் சிதைவுறாதபடி பிரம்பால்விலக்கி உள்ளே பிரவேசிக்கச் செய்தனர். அப்பொழுது தேவர்களும் அசுரர்களும் பரமசந்தோஷம் அடைந்து நாங்கள் உய்ந்தோம் உய்ந்தோம் என்று துள்ளிக்குதித்துத் தலைவாசலில் தங்கள்தலைமீதணிந்த முடிகள் ஒன்றோடொன்று தாக்கு ம்படி நெருங்கி உள்ளேநுழைந்து எமதுபரமபிதாவும் யாவருக்கும் பெ ருமானும் ஆகிய சிவபெருமானைக்கண்டு களித்துக் கைகூப்பித் தொ ழுது மனங்கரைந்து துதிசெய்தார்கள். தொழுது துதிசெய்கின்ற அந்த த்தேவர்களையும் அசுரர்களையும்நோக்கிப் புன்னகைசெய்து பிரமதேவனைப் பார்த்துப் பிரமனே! இவர்கள்எல்லாரும் வடிவம்மாறி முகம்வாடிச் சரீ ரம்நடுங்கி இருக்கிறகாரணம் என்னவெனப் பிரமதேவன் அஞ்சலி அஸ் தனாய்ப்பணிந்து விண்ணப்பஞ்செய்கின்றான். ஐயனே! அடியேங்கள்அஞ் ஞானத்தால் கட்டப்பட்டவர்கள் ஆதலின் உமது திருவருளைநாடாமல் அமுதம்புசிக்கும்பொருட்டு வாசுகியைப்பிணித்து மந்தரகிரியை நாட் டித் திருப்பாற்கடல் கடைந்தோம். நாங்கள் எண்ணியபடி அமுதம் தோன்றாமல் ஆலகாலவிஷம் தோன்றிச் சராசரப் பொருள்களை எல் லாம் தகித்துச் சாம்பலாக்கி விட்டது. திரிபுரதகனம் செய்தருளிய சிவபெருமானே! உமது அருள் இல்லாமல் ஒரு காரியம்செய்யத் தொட ங்கினால் அது ஒழிந்து மற்றொன்றாய்விடும் என்னும் பழமொழி பொய் க்குமோ? எங்கள் பரமபிதாவே! அந்த விஷவேகத்தினால் மாண்டவர்கள் மாண்டுபோகத்தப்பிப்பிழைத்திருக்கும் நாங்கள் எல்லாரும் தடுமாறி உரு

மாறி வாடி வருந்தி இங்கே வந்து சேர்ந்தனம் ; எம்பெருமானே! உம்மையன்றி அடியேங்களுக்கு வேறு திக்கில்லை ; இந்நேரம் அந்தவிஷம் எல்லா உலகங்களையும் பாழாக்கிவிடும் ; இனி இமைப்பொழுதாயினும் தாமதம் செய்யாமல் கருணைவைத்துக் காத்தருளவேண்டும் ; இந்தவேளை நீர் எங்களைக் காத்தருள் செய்யாவிட்டால் இப்பொழுதே நாங்களும் முன் மாண்டவர்கள்போல் மாண்டுபோவது திண்ணம் ; பிறை அணிந்த பெருங்கருணைக் கடலே! என்று பிரார்த்திக்கையில் கற்பகப்பூமாலை சூடிய கடவுளரும் கலங்கி முறையிட்டார்கள். முறையிடலும் திருவுளம் இரங்கித் தேவர்களே ! நீங்கள் அஞ்சவேண்டாம் என்று அநுக்கிரகஞ் செய்து தாம் வீற்றிருந்தபடியே திருவுளத்திற் சிந்தைசெய்து தமது அருமந்த மலர்க்கையை நீட்ட உடனே அக்கினிச்சுவாலை வீசும் அந்தவிஷம் செந்தாமரைப் பூவின்மேல் ஒரு கருவண்டு வந்து தங்கியதுபோல் வந்து தங்கி அக்கடவுள் அருட்பார்வையால் கடுகளவாய் உருண்டு திரண்டு இருந்தது. முப்பத்து முக்கோடி தேவர்களும் பிரம விஷ்ணு முதலிய பெரியதேவர்களும் எண்ணிறந்த அசுரர்களும் மற்றும் சராசரப்பொருள்களும் நடுங்கும்படி எங்கும் பரவிவந்த அந்த விஷத்தின் உக்கிரம் தணிந்து தமது சீர்பாத கமலங்களில் அடங்கி ஒடுங்கும் மெய்யன்பருடைய மனம்போல் செந்தாமரை மலர்க்கையில் அடங்கி ஒடுங்கச்செய்தருளிய எம்பெருமான் மகிமையை எடுத்துச்சொல்ல எவரால்முடியும்? தமது திருவடித் தொண்டுசெய்யும் செந்தமிழ் முனிவராகிய அகஸ்திய முனிவர் நினைப்பதற்குமுன் கடல்நீரெல்லாம் அவர் உள்ளங்கையிலே ஒரு உளுந்து அளவாக உருண்டு திரண்டு ஒடுங்கியது என்றால் அந்தக்கடலில்தோன்றிய பெருவிஷம் எம்பெருமான் பொன்மலர்க் கரத்தில் அடங்கி ஒடுங்கிற்று என்று சொல்வது அவன் பெருமைக்கு ஒரு பெருமையாமோ ! அணுவளவேனும் ஆகமாட்டாது. இவ்வாறு சிவபெருமானுடைய செந்தாமரை மலர்க்கைமேல் திரண்டு உருண்டு விளங்கும் விஷத்தைக்காணுந்தோறும் துடிதுடிக்கும் தேவர்களை அந்தச்சிவபெருமான் பரிந்துநோக்கிப் புன்னகைசெய்து தேவர்களே! எமது கைமேல் இருக்கும் இந்த விஷத்தை யாம் உண்ணலாமோ? அல்லது தூரமாக எறிந்துவிடலாமோ? உங்கள் கருத்து என்ன ? சொல்லுங்கள், என்று திருவாய்மலர்ந்தருளக்கேட்டு அந்தத் தேவர்கள் எல்லாரும் ஊமைபோல ஒன்றுஞ்சொல்லாமல் மௌனமாய் இருந்ததனால் தமது இடப்பக்கத்தில் வீற்றிருக்கின்ற உமையவளைநோக்கிப் பெண்மணியே ! இந்தக்கொடியவிஷமானது சகல லோகங்களையும் சாம்பலாக்கிவிட்டது. இனி உன்

அருட்பார்வையால் அமுதம் ஆய்விடும். யாம் உட்கொண்டால் எம்மை ஒன்றுஞ் செய்யமாட்டாது. உன் கருத்தென்ன வென எல்லா உயிர்களையும் பெறுது பெற்றெடுத்த உலகமாதாவாகிய அந்த உமையவள் அந்த உயிர்கள்மேல் வைத்திருக்கும் பெருங் கருணைத்திறத்தினாலும் எண்குணனாகிய தன்மணாளன்மேல் வைத்திருக்கும் அன்பினாலும் செந்தாமரை மலர்போல் விளங்கும் திருமுகத்தை ஒருபக்கம் சாயவைத்துச் செம்பவளக்கைமேல் விளங்கும் அந்த ஆலகாலவிஷத்தை உற்றுப்பார்த்தனள். பார்த்தவுடன் அந்த விஷத்தை எம்பெருமானாகிய சிவபெருமான் அங்கு அலறிநின்ற எளிய தேவர்கள்மேல் கடாக்ஷம்வைத்துச் சகலலோகமும் பிழைக்கும்படி திருவமுது செய்தருளினர்.

அப்போது பிரமதேவன் சிவபெருமானுடைய அருமந்தகண்டத்தினிடமாக அந்தவிஷம் இறங்குவதைக்கண்டு திருமாலைநோக்கித் திருமாலே! இந்தவிஷம் நம்பெருமானுடைய ஸ்ரீகண்டத்திற்கு ஓர் அற்புத பூஷணம்போல் அழகுசெய்து தேவர்களுடைய பத்தினிமார்கள் கழுத்தில்விளங்கும் மங்கல சூத்திரத்தைக் காப்பாற்றியது பாராய் என்று சொல்லினன். தேவாசுரர்கள் எல்லாரும் சிவபெருமானுடைய ஸ்ரீகண்டமாகிய செவ்வானத்தில் காளகூடம் என்னும் கார்மேகம் தோன்றக்கண்டு வாட்டம்நீங்கித் தழைக்கும் பயிர்போல் தழைத்துக் கடலில் மடைபெருகினாற்போல் பேரன்புகொண்டு மழுப்படையானே! ஜய ஜய போற்றி என்று ஆரவாரஞ் செய்தார்கள். நாராயணன் முதலானவர்களும் களிப்புறுவதைக்கண்டு சிவபெருமான் அவ்விஷத்தைக் கண்டத்தினிடமாக நிலைபெற்றுவிளங்க நிறுத்தினர். எவராலும் தாம் உண்பது அமுதமே ஆயினும் வாயிலேயாவது அல்லது வயிற்றிலேயாவது அடக்கக்கூடுமே யன்றிக் கண்டத்தினிடமாக அடக்கக்கூடுமோ, கூடாதே. திரிபுரங்களைச் சிரித்து எரித்தருளிய சிவபெருமான் இவ்வண்ணம் சகலலோகங்களையும் தகித்துச் சாம்பலாக்கிய ஆலகால விஷத்தைக் கண்டத்தினிடமாக நிலைபெற நிறுத்தினர், எனின் எண்குணங்களை யுடைய அந்தக்கடவுள் மகிமை என்போலிகளால் எடுத்துச்சொல்லுந் தன்மையதோ? சொல்லில் அடங்காது. ஸ்ரீகண்டத்தினிடமாக நிறுத்தப்பட்ட காளகூட விஷத்தைக் கண்டு பிரமவிஷ்ணுக்களும், சுராசுரர்களும், முனிவர்களும், மனக்கவலை தீர்ந்து மகிழ்ச்சி அடைந்து அஞ்சலிசெய்து அந்தக்கரண சுத்தியுடன் நீலகண்டனே ! சரணம். எண்குண முடையவனே ! சரணம். மூலகாரணனே ! சரணம். மார்க்கண்டேயர் பொருட்டு யமனை

யுதைத்தருளிய மலரடி யுடையானே ! சரணம். இந்த நாள் அடியேங் கள் ஆலகால விஷத்திற்கு இரையாகாதபடி பாதுகாத்தருளியவனே ! சரணம். பார்வதிபாகனே ! சரணம், என்று துதிசெய்யச் சிவபெருமா ன் திருவருள்சுரந்து உங்களுக்குவேண்டும் திடம் அளித்தோம். இனித் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதுண்டு மரணபயமில்லாமல் வாழ்ந்தி ருங்கள் என்று திருவுளம் பற்றுதலும் திருமால் முதலானவர்கள் பின் னும் வேண்டுகின்றார்கள். சந்திரசேகரனே ! உமது திருவடியில் இடை யறாதொழுகும் பத்தியை அடியேங்களுக்குப் பாலித்தருளவேண்டும் என் று வேண்டுகையில் அங்ஙனம் ஆருக என்று விடைகொடுத்தருளப்பணிந் து விடைபெற்றுக் கொண்டு மீண்டு யாவரும் ஒன்றுசேர்ந்து நம்மை இரட்சிக்கும்பொருட்டு நமதுவேண்டுகோளால் நம்பெருமான் ஆலகா லவிஷத்தை அமுதுகொண் டருளினன். இந்தப்பழிதீரும்படி பூலோ கத்தில் எவ்விடத்திலே சிவபூசை செய்யலாம் என்று சிந்தித்துத் தீர்த்தவிசேஷம் தலவிசேஷம் மூர்த்திவிசேஷங்களில் மிகச் சிறந்துவி ளங்கும் காஞ்சிமாநகரத்தில் செய்வோமானல் அந்த நகரம் நமது அளவில்லாத பாவங்களைச் சூரியன்முன் பனிபோல்போக்கிவிடும், என்று துணிந்து காஞ்சிமாநகரத்தை அடைந்து தங்கள் உயிரை க்காத்தருளிய மணிகண்டத்தினிடத்து மாறாதுவைத்த விசுவாச த்தினல் மணிகண்டீசன் என்னும் திருநாமம் பூண்டுவிளங்கும் சிவலி ங்கமூர்த்தியைப் புண்ணியகோடீசத்தின் மேற்றிசையில் பிரதிஷ்டை செய்து நேசித்துப் பூசித்து மாசுதீர்ந்து திடம்பெற்று மந்தரகிரியை நாட்டி வாசுகியைப்பூட்டித் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதம் எடு த்துக் கூட்டங்கூடி மகிழ்ந்துண்டு அசுரர்களை அடித்துத் துரத்திவிட்டுச் சாவாதிருக்கப்பெற்றார்கள்.

இப்பால் அந்த மணிகண்டீசம் என்னும் தலத்தில் வாசுகி தன் குற் றம்தீரும்படி அனந்த தீர்த்தம் என்னும் ஒரு தீர்த்தம் உண்டாக்கி அதில் முழுகி அத்தீர்த்தக்கரையில் பணாமணீசனைப் பதிஷ்டைசெய்து தன் பணாமுடிகளில் விளங்கும் மாணிக்கங்களால் அருச்சனைசெய்து இதயா ரவிந்தத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானே ! அண்டரண்ட சரா சரங்களை அழிக்கவந்த ஆலகாலவிஷத்தை அமுதுசெய்தவனே ! அடியே ன்செய்த அபசாரங்களைப் பொறுத்தருளாய் என்று தனக்குவேண்டும் வரங்களையும் பெற்றுச்சென்றனன். மேலும் அந்தமணிகண்டீசனை வண ங்கி வாழ்த்தி எண்ணிறந்தவர்கள் இகபரசுகம் அடைந்தார்கள்.

மணிகண்டீசன் மலரடிபோற்றி.

பணாமணீசன் பதமலர்போற்றி.

## ஆறுவது.

## சார்ந்தாசயப்படலம்.

சதானந்தச் செல்வராகிய தபசிகளே! மணிகண்டீச்சரத்தின் மகிமைசொன்னோம். இப்பால் பிரமாணிக்கம் செய்து பெருந்துன்பப்பட்டு வந்தடைந்த வியாசமுனிவன் அந்த மணிகண்டீச்சரத்தின் தென்மேற்குத்திசையில் பூசைசெய்து பேறுபெற்ற சார்ந்தாசயப்பெருமான் சரித்திரம் சொல்வோம், சாந்தமாய்க் கேளுங்கள் என்று சூதமாமுனிவர்சொல்லத்தொடங்கினர்.

பராசரரிஷி தவஞ்செய்து பெற்ற வரத்தால் பூமியில் தோன்றி நான்குவேதங்களையும், பதினெண் புராணங்களையும், மற்றும் நூல்களையும் வகுத்தல் செய்து மாட்சிமை பெற்று விளங்கும் எமது குருமூர்த்தியாகிய வியாசமுனிவர் பூர்வம் பாவத்திற்கேதுவாகிய கலியுகம் வருவதற்குப்பயந்து, நடுநடுங்கி, இந்தப்பூமண்டலத்தில் எங்கேபோய் வசிக்கலாம், என்று எண்ணித்துணிந்து, கங்கைநதி சூழ்ந்த காசிப்பட்டணத்திற்குப் போய் அருந்தவஞ் செய்துகொண்டிருந்தார். அவ்விடத்தில் வசிக்கும் முனிவர்கள் எல்லாரும் அவர் பாதத்தைப்பணிந்து, அடியேங்களுக்கு வேதாந்தப்பொருளை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்க உரைத்தருள வேண்டும் என்று வேண்டுகையில், இருவினையாகிய கொடிய பகைவரைக் கீழ்ப்படுத்தி, மேற்பட்டிருக்கும் அந்த வியாசமுனிவர் தம்மை வினவிய முனிவர்களுக்கு மனு, அத்திரி, அவிரிதம், விட்டுணு, யாஞ்ஞுயவற்கியம், உசனம், ஆங்கீரசம், யமம், ஆபத்தம்பம், சமவர்த்தம், காத்தியாயனம், பிரகற்பதி, பராசரம், வியாசம், சங்கலிதம், கௌதமம், சாதான்மம், வசிட்டம் என்னும் பதினெட்டு ஸ்மிருதிகளும், மச்சியம், கூர்மம், வராகம், வாமனம், பிரமம், வைணவம், பாகவதம், சைவம், இலிங்கம், பௌடிகம், நாரதீயம், காருடம், பிரமகைவர்த்தம், காந்தம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம் பிரமாண்டம், பதுமம் என்னும் பதினெண் புராணங்களும், இருக்கு,யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்குவேதங்களும், மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் என்னும் ஆறு அங்கங்களும், சிவபூசைக்குரிய பூர்வ நியாயநூல் சிவானந்தமுத்திக்குரிய உத்தரநியாயநூல் என்னும் இருவகை நியாயநூல்களும், ஆயுள்வேதம், கந்தருவவேதம், தனுர்வேதங்களுடன் அருத்தநூல்களும் ஆகிய இவைகளால் கூறப்படும் பரம்பொருளின் உண்மை இது இது என்று தனித்தனியேவிளங்க, விரித்துச்சொல்லக்கேட்டு அந்தமுனி

வர்கள் வியாசமுனிவரோ! எங்கள் மனம் நிலைபெறும்படி ஒருவார்த்தை யினலே சுருதியின் முடிபு இதுதான் என்று தொகுத்துச்சொல்லவே ண்டுமென்று பிரார்த்திக்க, அப்போது மருள்கொண்டு மயங்கிய மனத் துடன் வியாசமுனிவன் முன்சொன்னதற்கு நேர்விரோதமாகச் சிறிதும் அஞ்சாமல் தபசிகாள்! வேதாகமபுராணங்களைப் பலமுறை பாராயணம் செய்தாலும், நாராயணனே பரப்பிரமம் என்றுதெளியப்படும். வேதத்தி ற்கு மேற்பட்ட நூலும் இல்லை. ஞானிகள் தியானம் செய்யும் அந்த நாராயணனுக்கு மேற்பட்ட தெய்வமுமில்லை. இதுவே சகலவேதாகம புராண சாஸ்திர சம்மதம் என்று அறிக. இது "சத்தியம் சத்தியம்" என்று கை எடுத்து நின்று கூறினன். இதைக் கேட்ட முனிவர்கள் திடுக்கிட்டுப் பயந்து, இந்த வசனம் வேதவசனத்திற்கு நேர்விரோதம். நம்போலிகள் ஒத்துக்கொள்ளத் தக்கதன்று. என்ன காரணத்தால் இவர் இப்படிச் சொல்லுகிறார் என்று தமக்குள் நினைத்து, வியாசமுனிவ ரைப்பார்த்து, வியாசமுனிவரோ! நீர் இப்போது சொல்லியது வேதாகம புராண சாஸ்திர சம்மதமென்பது சத்தியமானல், இந்தக் காசிவிஸ்வ நாதர் சந்நிதானத்தில் கையெடுத்துச் சொல்லவேண்டுமென ஆ! ஆ! அப்படியே சொல்லுகிறேன் என்று அந்தமுனிவருடன் விஸ்வநாதர் சந்நி தானத்திற்சென்று எதிர்நின்று சிறிதும்பயப்படாமல் கைதூக்கி "நாராய ணனே பரப்பிரமம் நாராயணனே பரப்பிரமம் நாராயணனே பரப்பிர மம்" என்று முக்காலும் மொழிந்தனன். ஐயோ! பல ஞானநூல்களைநிர ம்பக்கற்றுணர்ந்தாலும், சிவபெருமான் திருவருளில் தினை அளவும்பெறு தழலும் அசடர்களுக்கு ஆணவம்அழியுமோ? போலிஅறிவாகத் தோ ன்றி அறியாமையாய் முடியும் அஞ்ஞானத்தினல் அந்த வியாசமுனிவன் அவ்வாறு சொல்லக்கேட்டும், மாசில்லாத எந்தநாமமும் "சிவநாமமே" என்றுவேதங்கள் முறையிடுவதினல், எம்பெருமான்திருவுளத்தில்முனிவு கொள்ளாமல்சுகந்த பரிமளபுஷ்பம் சூடியகூந்தலையுடைய பார்வதிதேவி யாருடன் மகிழ்வுற்றிருந்தனர். இப்பால் வியாசமுனிவனுடைய அநுசித மானசெய்கையைக்கண்டு, நந்திதேவர் வெகுண்டு, அவ்வியாசன் எடுத்த கைகள் கம்பிக்காமல் ஸ்தம்பிக்கும்படி சபிக்க, அதனல் நீட்டியகைகளை மடக்கமுடியாமல் கருங்கற்றூண்போல் அசைவறநின்றுவிட்டான். சிவ பெருமான்சந்நிதானத்தில் விளங்கும்துவஜஸ்தம்பம்போல் நின்றநிலையில், வியாசமுனிவன் மனவருத்தமடைந்து, நாராயணமூர்த்தியின் பாதாரவி ந்தங்களைத் தியானிக்கையில், அந்த நாராயணமூர்த்தி பிரசன்னமாகி, வியாசமுனியே! நீயென்னகாரியம்செய்துவிட்டாய்? என்னையும் கெடு த்தாய். வேதங்களையெல்லாம் சிக்கறுத்துச் சீர்ப்படுத்தி அவற்றின் உண்

மைப்பொருளை உணர்ந்த நீ ஐயோ! இந்தப் பிராந்தி எங்கே பெற்ற னை சொல்லாய்? மக்களை, மனைவியனை, மற்றையாைச் சிறுதுரும்பிலும் கடையாகத் துறந்தவர்களாகிய பெரியோர்கள், எந்நாளும் தியானிக்கும் பரம்பொருள் சிவபெருமான் என்று வேதாகமங்கள் எல்லாம் முறையி டும். யாங்கள் எல்லாம் அவன் பாததியானம் செய்யும்பசுக்கள்.

நரர்களைக் காத்தலால் அரசன் நரபதி என்று சொல்லப்படுவது போல், பசுக்களாகிய எம்மைப்பாதுகாத்தலால் அப்பரமன் **பசுபதி** என் றுசொல்லப்படுவன். அந்தப் பசுபதி அருளைப் பெற்றிருத்தலால் பசுக்க ளும் பூசிக்கப்படும் பொருளாம் என்று சிலநூல்கள் சொல்லும் உண்மை யால் அவன் அருள் பெற்றுப் பசுக்களாகிய நாங்களும் பூசிக்கப் படுகி ரேம். இதனை நன்ருகத் தெரிந்துகொள். **பசுபதியே பரப்பிரமம்** என்று பரமசாதுக்கள் கொண்டகருத்தை நீ அறிந்திலைபோலும். ஆண வத்தால் அகங்காரம் அடைந்த அறிவிலி! பயித்தியக்காரா! நீ பிழைக்க வேண்டிஞல் என் வார்த்தையை உண்மையாக உன் உள்ளத்தில் வை. இந்திரன் யாகாதிபதி, பிரமதேவன் வேதத்திற்கு அதிபதி, நான் தேவே ந்திரலோக முதலிய சகல லோகங்களுக்கும் அதிபதி. எனக்கோ அந்த ச் சதிபதியாகிய பசுபதியே **அதிபதி**, அகில லோக நாயகஞகிய அவனு க்கு மேலான அதிபதி இல்லை. அகிலலோகமும் அவன் ஆணைவழி நடக் கும். அவனே எல்லாவற்றையும் படைத்துக் காத்து அழிப்பவன். சகல சாஸ்திர சம்மதமும் இதுவேயாம்.

வானவர் வாழ்த்தும்படி நான் வைகுண்டப் பதவி பெற்றதும், நான் முகன் சத்திய லோகம் பெற்றதும், மற்றைய தேவர்கள் தங்கள் தங்கள் பதவிகளில் மாருது வாழ்ந்திருப்பதும், இடக்கரத்தில் ஒரு மானை ஏந்திய சிவபெருமானைப் பூசித்ததனுல் உண்டாகிய பேறுகளேயாம். அந்தச்சிவ பெருமானுடையசரணமே சரணுக அடை. இப்படிப்பட்ட மதிமயக்கத் தை விட்டுவிடு, வேணிமுடியுடைய வியாசனே! "தான்கெட்டதும் அல் லாமல் சந்திரபுஷ்கரிணியையும் கெடுத்தான்" என்பதுபோல, நீகெட்டுப் போனதல்லாமல் பிறரையும்கெடுக்கின்ருய், என்று சீறிச்சினந்து உரை த்தலும், அவ்விஷம்போலும் கடுஞ்சொற்களைக் கேட்டு, வியாசமுனிவன் மற்றையதேவர்களை எல்லாம்சிறுதுரும்பாகமதித்து, ஒழித்துச், சிவானுக் கிரகத்தால் ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமானே பரம் பொருள் என்று தனக்குள் ஐயம் திரிபு அறத்தெளிவுற்றனன். தெளிவுற்ற பின்பு நித்தியமான தபசிகளைப்பார்த்துப் பிரமக்கியானிகளே! எனக்கு உண் டான மதிமயக்கம் உங்களுக்கும் உண்டாயிற்ருே? நான்கு வேதங்களை

யும் கசடறக் கற்றுணர்ந்தவர்களே! நீங்கள் ஒன்றும் தெரியாதவர்கள் போல் என்னைக் கேட்ட காரணம் யாது? சொல்லுங்கள். கருடவாகனனாகிய கண்ணன் சகல லோக சொரூபி, ரிஷபவாகனனாகிய சிவபெருமானோ சகலலோக நாயகன், துளசிமாலை அணிந்த நாராயணன் யாகமாயிருப்பவன். பொன்போல் மலரும் கொன்றைமாலை அணியும் பரமசிவனோ, அந்த யாகத்திற்குத் தலைவன். முரன் என்னும் அசுரனைக் கொன்ற திருமால் மாயை ஆய் எங்கும் வியாபித்திருப்பவன். திரிபுரதகனஞ் செய்தருளிய சிவபெருமானோ, அந்த மாயையை அடக்கி ஆளவல்லவன். நாராயணன் மயில் போலும் சாயலையுடைய மடமகள் போலும். சத்துரு சம்மாரம் செய்தருளும் கண்ணுதல் மூர்த்தியோ, அந்த மடமகளுக்குத் தக்க மணாளன் போலும் என்று சுருதி, ஸ்மிருதி, புராணங்கள் எல்லாம் பலமுறையும் முறையிடும். இவ்வண்ணம் முறையிடுவதை எடுத்துக்காட்டி, மருள்கொண்டு மயங்கிய என்புத்தியைத் தெளிவிக்காமல் இவ்வாறு திகைப்புறச் செய்தது உங்களுக்கு அழகோ? சிவபெருமானைப்பூசித்துப் பேறு பெறாதவர்களுமுண்டோ? அந்தச் சிவபெருமான் எக்காலத்திலாயினும் எவ்விடத்திலாயினும் பிறரைப் பூசித்ததாகச் சொல்லக்கேள்விப்பட்டதுண்டோ? ஆதலின் நாம் எல்லாரும் மருள் தீர்ந்து கவலை நீங்கி, அந்தப்பகவானுடைய பாதாரவிந்தங்களையே ஆதாரமாக நம்பி, அடைக்கலம் அடைவோமென்று துணிந்து, விஸ்வநாதனைப் பணிந்து, செந்தாமரைப்பூவில் வீற்றிருக்கும் சீதாபதியின் திருமேனியில் உள்ள வெள்ளை நிறத்தைமாற்றிக் கருநிறம் கொடுக்கத்திருப்பாற் கடலில் கறுத்து எழுந்து வந்த ஆலகாலவிஷத்தைக் கண்டத்தினிடமாக விளங்க உட்கொண்டருளியவரே! உமது மகிமையை மதிக்கவல்லவர்யாவர்? திரிபுரங்களைப் புன்னகை செய்து எரித்தருளினீர்! எமனை உதைத்து அழித்தருளினீர்! இலங்காதிபதியாகிய இராவணனை ஒருவிரல் நுனியால் நெறு நெறு நெறு என்று நெரிய மிதித்தருளினீர்! மன்மதனை நெற்றிக்கண்ணால் நீறாக்கினீர்! பிரம தேவனுடைய ஐந்துதலைகளில் ஒரு தலையை நகத்தால் கிள்ளி எறிந்தருளினீர்! தக்கன் செய்த யாகத்தில் சூழ்ந்திருந்த தேவர்களை எல்லாம் சின்ன பின்னப்படுத்தினீர்! நரசிங்கத்தின் தோலை உரித்துப் போர்வையாகப் போர்த்தருளினீர்! மீன் கண்ணைப் பறித்து அணிந்தருளினீர். வாமனன் வலியை மாய்த்தருளினீர்! ஆமை ஓட்டையும், வராகதந்தத்தையும் அணிகலமாகப் பூண்டருளினீர்! அந்தகாசுரனையும், மாயாசுரனையும் சூலாயுதத்தில் கோத்தருளிய உமது பிரபாவங்களை நாயினுங் கடையேனாகிய நான் என்ன வென்று சொல்லுவேன். அடியேன் அறியாமையால் செய்த அபசாரத்தை உபசாரமாகக் கொண்டு பிழைக்கச்

செய்தருளுவாய் பெருங்கருணைப்பேராளா ! என்று கண்ணீர் பெருக நாத்தழும் பேறத்துதி செய்து, மெய்யன்பு மிகுந்து, தனக்குள் நெக்குற்று, இடிந்து, பசுவைவிட்டுப் பிரிந்த கன்றுபோல் பதறிக் கதறித் தியங்கி, மயங்குகையில் கொன்றைசூடியாகிய சிவபெருமான் கருணை கூர்ந்து, வெள்ளிமலை நடந்து வருவதுபோல் விளங்கி நடந்து வரும் ரிஷபவாகனத்தின் மேல் பார்வதியுடன் மகிழ்ந்தேறி, யானை முகமுடைய விநாயகக் கடவுளும், வடிவேல் முருகையனும், இரு பக்கங்களில் அணுகிவரவும், சக்கரபாணியாகிய திருமாலும் பிரமதேவனும், புண்ணிய ரூபமாக விளங்கும் திருவடிகளைத் தாங்கிக் கொண்டு இருபுடையும் நடந்து வரவும், தேவர்களெல்லாம் ஆகாயத்தில் திரண்டு கற்பகப் பூமாரி பெய்யவும், உருத்திர கன்னியர்கள் வெண்சாமரை எடுத்து வீசவும், சூதர் மாகதர்கள் வீரப்பிரதாபங்களைப் புகழ்ந்து வாழ்த்தவும், சடைமுடிமேல் இளஞ் சந்திரன் பிரகாசிக்கவும், பூதகணங்களுடன் பிரசன்னமாகித் திருவருள் சுரந்து, புன்னகை செய்து, வியாச முனிவனை நோக்கித் திருவாய் மலர்ந்தருளுவார், கேளாய் வியாசமுனியே ! இதோ பார், நமது சந்நிதானத்தில் பரப்பிரம்மம் என்று எவனை மதித்துப் பிரமாணிக்கம் செய்தாயோ, அவன் நமது பாதங்களைத் தாங்கி நிற்கின்றான். இதை அறியாமல் மடமையால் அப்படிச் சொல்லிவிட்டாய். எமதுநிலையை உணராமல் மதாபிமானிகளாய் வாய்ப்பறை அடிக்கிறவர்கள் துன்பத்திற்கே ஆளாவார்கள். இடி நிந்தை செய்த வியாசமுனியே ! அந்த நாராயணன் எமது இடப்பாகத்தில் தோன்றினவன். பிரமன் வலப்பாகத்தில் வளர்ந்தவன். இவ்விருவரும் எம் அடியவர்களுக்கு அடியவராகிய புண்ணியவசத்தால் எம்பால்வீற்றிருக்கின்றார்கள். அதன்றியும் கற்பாந்தங்களில் இலயமாகும் பிரமவிஷ்ணுக்கள் தலைகளை மாலையாகக்கோத்து எமது தலை, தோள், இடை, பாதங்களில் அணிந்துகொண்டிருப்பதைப் பார். மாண்டுபோன பலதேவர்கள் அஸ்திமாலைகளையும் பூண்டிருக்கின்றோம். இவ்வாறு அவர்கள் தலைகளையும் எலும்புகளையும், மாலையாகவும் பூஷணமாகவும் பூண்டிருக்கும் காரணம் யாது ? எனில், உன்னைப்போல் மதிகெட்டவர்களுக்கு மதி மயக்கம் போக்கவும், அத்தேவர்களுடைய அநித்தியத்தையும் எமது நித்தியத்துவத்தையும் பிரத்தியட்சமாகக் காண்பிக்கவுமேயாம். வேத ரகசியத்தைத் தேர்ந்து தெளியும் பெரியோர்களில் மிகப்பெரியோனே ! நீ பலகாலும் சகலலோகங்களையும் படைத்துக் காத்து அழித்தருளும் எம்மை வந்தனை வழிபாடுசெய்து முத்தி அடை என்று அவ்வியாசமுனிவனுடைய மருள் தீரப்போதித்து மறைந்தருளினர்.

ஏகநாயகனாகிய சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளியதைக்கேட்டு வியாசமுனிவன் திடுக்கிட்டுப் பயந்து, ஐயோ! நான் பாவியானேன், அநியாயமாய்க் கெட்டுப்போனேன், என்னகாரியஞ் செய்துவிட்டேன். இப்போது எனக்கு இந்த மடமை வந்தகாரணம் ஏதென்று சிந்தனைபண்ணிச் சிவபெருமானுடைய சீர்பாதகமலங்களை ஒரு முகூர்த்தகாலம் தியானம்செய்து புகழ்பெற்று விளங்கும் இந்தக் காசிப்பட்டணத்தில் வீற்றிருக்கும் விசுவநாதசுவாமி எப்படிப்பட்ட பாவிகளுக்கும் அநுக்கிரகம்செய்து ஆட் கொண்டருளுவது சத்தியமே ஆயினும் தேவர்கள்கூடி இங்கு வாழ்கிறவர்கள் மதிமயங்கும்படி அடிக்கடி இடையூறு செய்வார்கள் என்று பெரியோர் சொல்லக் கேட்டிருக்கிறோம். ஆதலின் இவ்விடத்தில் வாசம்பண்ணுவது சரிஅன்று. கற்பமுடிவில் காணாமற்கழியும் காசிப்பட்டணத்தைப்பார்க்கிலும் சிதையாமல் சிறப்புற்றோங்கும் காஞ்சிமாநகரம் எம்பெருமானுக்கு மிகவும் பிரியமானது. அந்த நகரத்தில் வசிப்பவர்களுக்குக் காமாட்சிதேவி சமேதராகிய ஏகாம்பரநாதர் அருளால் யாதொரு இடையூறும் இல்லாமல், பரமானந்தபோகவீடும் எளிதில் கிடைக்கும். இதன்றியும் காசியில் இறக்க முத்தி; காஞ்சியை நினைக்கமுத்தி; என்னும் கட்டளையை எண்ணித்துணிந்து, மனமாசுதீர்ந்தவியாசமுனிவன் தன் மாணாக்கருடன் விரைந்து எங்கும் பெயர்பெற்றுவிளங்கும் காஞ்சிமாநகரத்தை அடைந்து, சிவகங்கையிலே ஸ்நானம் செய்து, வேத உருவாய் விளங்கும் ஒருமாவடியில் வீற்றிருக்கும் ஏகாம்பரநாதரைப் பூசித்து, மஞ்சள் நீர் நதிக்கு அருகே உள்ள மணிகண்டீச்சரத்திற்கு மேற்றிசையில் அல்லற்பட்டு அடுத்தவர்களுக்கு அடைக்கலம் அளித்தருளும் சார்ந்தாசயப்பெருமானை ஸ்தாபித்து, ஆகமவிதிப்படி அருச்சனைசெய்து, மனம் குழைந்து துதிசெய்கையில், சந்திரசேகரனாகிய சிவபெருமான் திருவுளமகிழ்ந்து காட்சிகொடுத்தருளி, உனக்கு வேண்டும் வரம் யாது? சொல், எனலும், வியாசமுனிவன் பேரன்பு கொண்டு பேசுகின்றான்: ஐயனே! அல்லற்பட்டு அலுத்துவந்து அடுத்த அடியேனுக்கு அடைக்கலம் அளித்தருளிய இந்தத் தெய்வீகலிங்கத்தை உலகத்தார் யாவரும் தரிசித்து உய்யவும், அவரவர்களுக்கு வேண்டும் வரம் அளித்தருளவும், கிருபைவைத்து அடியேனுக்கு உமதுதிருவடியில் மாறாதபத்தியைக் கொடுத்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, அவ்வரங்களை எல்லாம் மகிழ்வுடன் கொடுத்தருளிப் பின்பு, சிவபெருமான் கடல்சூழ்ந்த உலகத்தார் கண்டு தொழுது கடைத்தேறும்பொருட்டுப் பார்வதிதேவியுடன் அந்தவியாச சார்ந்தாசய தெய்வீகலிங்கத்தில் அந்தர்த்தானம் ஆனார்.

வேதாகமபுராண சாஸ்திரகலை ஞானக்கடலைக்கடந்து விளங்கும் கப்பல்போலும் அந்த வியாசமுனிவனே நீதி நெறிதப்பி இவ்வண்ணம் யாவராலும், இகழப்பட்டான் எனில் ஐயோ! பலசாஸ்திரபுராணங்களில் சொல்லும் பதார்த்த லட்சணம் இன்னதென்று எள்ளளவேனும் உணரும் திறம் இல்லாதவர்கள் பிரமவிஷ்ணுக்கள் காண்பதற்கரிய கண்ணுதல்மூர்த்தியின் யதார்த்த சொரூபம் இப்படிப்பட்டதென்று கண்டு தெளிவார்களோ? இனை அளவேனும் கண்டு தெளியமாட்டார்கள். ஆதலின், காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளவேண்டும் என்பதுபோல், மூச்சுள்ளபோதே மும்மலங்களையும் தூற்றி, முத்தி அடையும் உபாயத்தை முயன்று தேடிக்கொள்வதே பெறுதற்கரியமானிட தேகத்தைப் பெற்றதனாற் பெறும் பெரும்பேறுஎன்க.

சார்ந்தாசயப்பெருமான் சரணமே சரணம்.

---

ஏழாவது.

## சந்ததானப்படலம்.

அமல போதானந்த அருந்தவசிகளே! சகல சாஸ்திர சம்பூர்ணரான வியாசமுனிவரை ஆட்கொண்டருளிய சார்ந்தாசயப்பெருமான் சரித்திரம் சொன்னோம். இனியாவராலும்புகழப்படும் மஞ்சள் நீர் நதிக்கரையில் சத்தரிஷிகள் தவஞ் செய்து எமதுபரமபிதாவே! உமக்கு நாங்கள் அஞ்சலி செய்கின்றோம், என்று வந்தனைவழிபாடு செய்து வரம்பெற்ற சத்ததானத்தின் மகிமையைச் சொல்வோம், மனம் வைத்துக் கேண்மின் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

முன் ஒருகாலத்தில் அத்திரிரிஷி, குச்சரிஷி, வசிஷ்டரிஷி, பிருகுரிஷி, கௌதம ரிஷி, காசிப ரிஷி, அங்கிரா ரிஷி, என்னும் ரிஷிகள் எழுவரும், இமயமலைச் சாரலில் அருந்தவம் செய்யும் போது, பிரம தேவன் பிரசன்னமாகி, ரிஷிகளே! நீங்கள்வேண்டும்வரம் என்னசொல்லுங்கள்? எனவும், கிரணங்களால் இருளை வாரி. உண்டு பிரகாசிக்கின்ற சூரியனைப்போல் விளங்கும் அந்த மகா ரிஷிகள் எதிர் நின்று துதிசெய்து சொல்லுகின்றார்கள், சுவாமி! பேரறி வுடையோர் பெறுதற்குரிய மோட்சானந்த பாக்கியத்தைப் பெருது உழலும் சிற்றறி வுடையோர்களும் எளிதில் அடையும்படி போதிக்கும் உபாயத்தை அடியேங்களுக்கு உபதேசித்தருளவேண்டும் என்று பிரார்த்திக்க, மலரவன் சந்திர சடாதாரியாகிய சிவபெரு

மானுடைய சீர்பாத கமலங்களைத் தியானித்து, அகப்பற்று புறப்பற்று என்னும் இருவகைப் பற்றுகளாகிய பகைவரை வென்று, மனமாசில்லாமல் விளங்கும் மாதவர்களே! பலநூல்களையும் கசடறக்கற்றுத் தெளியாதவர்களும் பிறவிப் பெரும்பிணி தீர்ந்து பரகதி அடைவதற்கு உபாயம் சொல்லுகிறேன் கேளுங்கள். புண்ணியம் என்பது ஒன்றே ஆலகால விஷத்தை அமுதாகக்கொண்டருளிய சிவபெருமான்திருவருளைக்கூட்டுவிக்கும், அந்தத் திருவருளால் யார்க்கும் முத்திச் செல்வங்கிடைக்கும். மேற்சொல்லிய புண்ணியமானது பதிபுண்ணியம் என்றும் பசுபுண்ணியம் என்றும் இருவகைப்படும். அவற்றுள், இஷ்டி முதலான பசுபுண்ணியங்கள் காலாந்தரங்களில் கழிந்துபோகும். பதி புண்ணியமாகிய 'சிவபுண்ணியமோ எவ்வளவு காலஞ் சென்றாலும், வயிரமணிபோல் அழியாமல் விளங்கும். அப்படிப்பட்ட சிவபுண்ணியமானது சிவலிங்கப்பிரதிஷ்டை, சிவார்ச்சனை, சிவத்தியானம், சிவதோத்திரம், சிவபுராண காலக்ஷேபம் எனப் பலவகைப்படும். பலவகையுள், சிவலிங்கப்பிரதிஷ்டை செய்வது . எதற்கும் ஏற்றமாம். சிவபத்தப்பிரதிஷ்டை செய்வதும் அப்படியே சிறப்புள்ளதாம். இந்தச் சிவலிங்கப் பிரதிஷ்டை சிவபத்தப் பிரதிஷ்டை முதலியவைகளைச் சிவஸ்தலங்களில் செய்தால் வரும் பிரயோசனம் கோடிக்கு மேற்பட்டதாம். அந்தச்சிவஸ்தலங்களிலும் காஞ்சித்தலத்தில் செய்தால் அனந்தங்கோடி பலனாம். காஞ்சியை நினைத்தால் காசியில்வாசம்பண்ணிய பலன் உண்டாம். காஞ்சிபுரியே சத்தபுரியினும் சிறந்தது, கண்டுகொள்ளுங்கள், என்று கலைவாணி நாயகன் சொல்லியதைக் கருத்திற் கொண்டு, அந்த ரிஷிகள் எழுவரும் காஞ்சி க்ஷேத்திரத்தை அடைந்து, அருள்மயமாகவிளங்கும் சிவகங்கையில் தீர்த்தமாடி, ஏகாம்பர நாதர் திருவடிகளைத்தொழுது, மஞ்சள் நீர்நதிக்கரையில் தங்கி, வியாசமுனிவன் ஸ்தாபித்த சார்ந்தாசயத்திற்குச் சமீபமாகத் தங்கள் தங்கள் பெயரால் சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணி, அன்புடன் பூசைசெய்து, பச்சிலை ஆனாலும் பழம்பூ ஆனாலும் பறித்துப், பத்தியுடன் அருச்சனை செய்வோர்க்கு, இகபர சுகம் கொடுத்தருளும் இறைவனே சரணம்! மூன்று உலகத்திற்கும் ஒரு முதல்வனே சரணம்! காமாக்ஷிதேவியின் திருமுலைத்தழும்புடையானே சரணம்! அன்பர்க்கு அன்பனே சரணம்! என்று துதிசெய்கையில், சிவபெருமான் பிரசன்னமாகி அந்த ரிஷிகள் எழுவரையும் பார்த்து ரிஷிகளே! நீங்கள் எழுவரும் எமது கட்டளையின்படி வைவச்சுதமனு அந்தரத்தில் ஏழுமுனிவராய் இருங்கள். அந்த வைவச்சுதமனு அந்தரத்தின் முடிவில் அழிவில்லாத முத்திச்செல்வத்தை உங்களுக்குக் கொடுத்தருள்கின்றோம். மேலும் நீங்கள் பூசித்த இந்த ஏழுலிங்கதரிசனம் செய்

பவர்களுக்கு இம்மை மறுமை இன்பங்களைக்கொடுக்கின்றோம் என்று வரங்கொடுத்தருளி, அந்தலிங்கங்களின் இடமாக அந்தர்த்தானம் ஆனார். இருவினைதீர்த்து ஒரு சுகம்அளிக்கும் சத்ததானத்தில் வணங்கப்பெற்ற வர்கள் ஊழ்வினைதீர்ந்து, தேவாதிதேவனாகிய சிவபெருமான் திருவடி நிழலிற்சேர்ந்து இறுமாந்து, எப்பொழுதும் ஒருதன்மையராய் வாழ்ந் திருப்பார்கள்.

சத்ததானேசர்தாண்மலர்போற்றி.

---

எட்டாவது.

## பராசரேசப்படலம்.

ஐம்புலன்களை அடக்கி ஆளும் திறம் உள்ள அந்தணர்களே! தரும மெல்லாம் தங்குவதற்கு இடமாகிய சத்ததானத்தின் பெருமைசொன் னோம். இப்பால் சத்திமகாரிஷி புத்திரராய் அசுரர்களை அழிவுசெய்த பராசரரிஷி பூசைபண்ணிய பராசரேசத்தின் மகிமைசொல்லுவோம். பரி ந்து கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

ஐம்புலன்களின் வழிசெல்லும் அவாவை அறுத்தவராகிய வசிஷ் டமகாரிஷிக்குச் சத்திரிஷிமுதலான நூறுபுத்திரர் பிறந்து, வேதசாஸ்திர விசாரணையில் பிரமதேவனுக்கு ஒப்பாகி வாழ்ந்திருக்குங்காலத்திலே, விசு வாமித்திர முனிவன் திரிபுரங்களைச்சிரித்து எரித்தவராகிய சிவபெருமா னைப்பூசித்துத் திருவருள்பெற்றுச் சிறப்படைந்து, வசிஷ்டமுனிவருடன் பகைத்து, அவர்வமிசத்தை நாசமாக்க நினைத்து, இராஜகுலத்திற்பிறந்து வசிஷ்டர்சாபத்தால் அசுரனாகி, ஆன்மகோடிகளை அலைவுசெய்து உண்ணு ம் சுதாசனன் என்னும் அசுரனை அழைத்து அனுப்ப ,மகா பாவியா கிய அந்தச் சுதாசனன் என்பவன் விரைந்து சென்று சத்திமுதல்ான வசிஷ்ட குமாரர் நூறுபெயரையும் வாரிச் சுருட்டி வாயிற் போட்டுக் கொண்டான். வசிஷ்டரும் அவர் பத்தினியாகிய அருந்ததியும் அதைக் கேள்விப் பட்டுத் துயரம் அடைந்து அழுது புலம்பி ஆற்றாமையால் மலைமேல் ஏறிப் பூமியில் விழுந்து இறந்துபோக எண்ணித் துணிந்து பூமியில் விழவே, பூமிதேவி மனந் தளர்ந்து அவ்விருவரும் மாண்டுபோ காதபடி மலர்போல் தாங்கிப் பிழைத்திருக்கச் செய்தனள். அதனால் அவ்விருவரும் மலைமேல் ஏறி மண்மேல் விழுந்தும் மாய்ந்து போகா மல் ஆயாசந்தீர்ந்து ஏக்கம் அடைந்து அருமந்த புத்திரசோகத்தால் துன்

பக்கடவின் கரைகாணமல் சோர்வடையும்போது மாண்டுபோன நூறு மைந்தர்களில் மூத்தவனுகிய சத்திமுனி பத்தினியாகிய அதிர்சந்தி என்பவள் தன் மணவாளன் மாண்டுபோனதைக் கேள்விப்பட்டுப் பிரலாபித்துக் கருப்பங்கொண்டிருக்கும் தன் வயிற்றின்மேல் கைகள் சிவந்துபோக அடித்துக்கொண்டு பூமியில்விழுந்து கட கடவென்று புரண்டு புலம்புவதை வசிஷ்டர்கண்டு அடீ பாவாய்! ஆ ஆ! என்னகாரியம் செய்கின்ருய்? ஐயோ! கெட்டேன். என் சந்ததி விருத்திக்கு இடமாகிய வயிற்றின்மேல் அடித்துக்கொண்டு என் வம்சத்தைக் கருவறுக்கப் பார்க்கின்ருய். என்று அலறும் மாமனுர் சொல்லுக்குப்பயந்து சும்மா இருந்தனள். அவள் கையால் மோதி அடித்துக்கொண்டபோது கர்ப்பம் கலங்கியபடியால் கருப்பையில் உள்ள சிசுவானது வருந்திக்கனிவாய் திறந்து அழுகுரல் ஓசையை அந்தமுனிவர் கேள்விப்பட்டு, இந்த அழுகுரல் ஓசை யாருடையது? என்று தமக்குள் நினைத்துக்கொண்டிருக்கும்போது அவ்விடத்தில் சேஷசயனன் ஆகிய திருமால் பிரத்தியட்சமாகிக் கேளீர் வசிஷ்டரே! உமது வமிசம் பெருகவும் வானவர் வாழவும் அசுரர்குலம் அழியவும் உமது குமாரனுகிய சத்திக்கு ஒரு புத்திரன் பிறப்பான். அவன் பார்வதி பாகனுகிய சிவபெருமானுக்குச் சிறந்த பத்தன் ஆவான். மேலும் அவன் பல நூல்களையும் கசடறக்கற்றுத் தெளிந்து எம்மைப்போல் பிரக்கியாதியுடன் வாழ்ந்திருப்பான். அவன் காலதாமதம் இல்லாமல் இப்பொழுதே அவதாரம் செய்வதைக் காண்பீர் என்று மறைந்துபோதலும், வசிஷ்டமுனிவர் மனக்கவலை தீர்ந்து அருந்ததியுடன் ஆனந்தம் அடைந்திருக்கும்போது, தருமங்கள் தழைக்கவும் உலகமெல்லாம் உய்யவும் அந்தச் சத்திமுனி பத்தினியாகிய அதிர்சந்தி வயிற்றில் பராசரமுனிவர் அவதாரம் ஆயினர். உடனே இராக்ஷதர் வசிக்கும் இடமெல்லாம் இரத்தமழை பெய்தது. வசிஷ்டமுனிவர் பரமசந்தோஷம் அடைந்து தமது பேரனுக்குச் சாதகர்மம், நாமகரணம், சௌளம், அன்னப்பிராசனம், முதலிய சடங்குகள் அனைத்தும் விதிப்படி செய்தனர். இப்பால் பராசரமுனிவன் வளர்பிறைபோல் அறிவுடன் வளரும் நாளில் ஒருநாள் தன் தாய்மடிமேல் தங்கியிருந்து தாயைப்பார்த்து, என்னைப் பெற்றெடுத்த தாயே! நீ மங்கலசூத்திரம் இல்லாமல் இருக்கின்ருய், என் பிதா எங்கே? என, மகனே! உன் பிதாவைச் சுதாசனன் என்னும் அசுரன் ஒருவன் கொன்று தின்றுவிட்டான். என்று மனங்கசிந்து வாய்விட்டழுது அழுத கண்ணீரால் தன் மடிமீதிருக்கும் பிள்ளைத்திருமேனியைக் குளிப்பாட்டும்போது அந்த அழுகுரல் ஓசையைக்கேட்டு, ஆசிரமத்தின் அருகே உள்ள ரிஷிபத்தினிகளும் ரிஷிகளும் அருந்ததியுடன் வசிஷ்டரும் கூட்டமாகச் சூழ்ந்து புலம்பிப் பிரலாபிக்கிற

ஷைதக்கண்டு, முனிவருக்குள் சிங்கக்குட்டிபோன்ற பராசர முனிவன், பெரியோர்களே! நீங்கள் அழவேண்டாம், சூலபாணியாகிய சிவபெருமான் திருவருளால் நான் இப்பொழுதே உலகங்களை எல்லாம் உண்டு விடுகிறேன். என்று கோபங்கொண்டு சொன்னதைக்கேட்டு, வசிஷ்டர் அப்பனே! உலகம் என்னசெய்தது ? உன் பிதாவைக்கொன்ற கொடிய அரக்கர்குலத்தை நாசமாக்கும்பொருட்டுச் சிவபூசை செய். என்று சொல்லப் பராசரமுனிவன் அந்த வசிஷ்டரைநோக்கிப் பூலோகத்தில் சிவபூசை செய்வதற்கு யோக்கியமான ஸ்தலம் இது என்று சாஸ்திரசம்மதமாகச் சொல்லவேண்டும் எனச் சொல்லுகிறார்.

அப்பா! பராசரா! நீ கேட்டகேள்வி மிகவும் உசிதமானது. சிவபூசைசெய்து வேண்டும் வரம் பெறுவதற்கு உரியஸ்தலம் யாது ? எனில் தேவர்கள் திரண்டுபோற்றும் முற்றங்களிலும், நடன சாலைகளிலும் சபா மண்டபங்களிலும், எக்காலத்தும் மங்கலவாத்திய ஓசைகள் இடையறாமல் முழங்கும் காஞ்சிமாநகரமேயாம். அந்தக் காஞ்சிமாநகரம் தேவர்களும், மனிதர்களும், மற்றையவர்களும், முனிவர்களும், என் உள்ளிட்டாரும், பெறுதற்கரிய பேறுபெற்று நேசிக்குந் தன்மை உள்ளது. அது அல்லாமல் எவரானாலும் இறந்துபோகும் வேளையில் தன்னை நினைப்பார்களானால், அவர்களுக்கு உடனே முத்தி இன்பம் தருவதும் ஆகும். எண்ணித்தொலையாத பாவம் செய்தவர்கள் ஆனாலும் அந்தக் காஞ்சி மண்டலத்தில் ஒருநாள் வாசஞ்செய்யப் பெறுவார்களானால், அவர்களுக்கு மனம் வாக்குக் காயங்களுக்கு எட்டாத சிவபெருமான் திருவருளைக்கிடைப்பிக்கும் என்றால்,உன்னைப்போன்ற உத்தமர்களுக்கு உண்டாகும் பலன்சொல்ல வேண்டுமோ? அந்த அற்புதத் தலத்திற்குப் போய்வருக என்றுசொல்லிய வசிஷ்ட முனிவருடைய பாதங்களைப்பணிந்து, தன்தாயாரை வணங்கி விடைபெற்றுக்கொண்டு, காஞ்சிமாநகரத்திற்கு வந்து கம்பைநதியில் நீராடி, ஏகாம்பரநாதருடைய சீர்பாத கமலங்களைப் பணிந்து ,மஞ்சள் நீர்நதிக்கரையில் விளங்கும் மணிகண்டீச்சரத்தின் வடமேற்குத் திசையில் வந்துசேர்ந்து, தன் பெயரால் பராசரலிங்கப் பிரதிஷ்டைசெய்து, பத்தியுடன் மலர்கொய்து, பூசைபண்ணி, நேசித்துத் துதிசெய்யும்போது, பொன்போல் விளங்கும் ஜடாமுடியையுடைய சிவபெருமான் ரிஷபவாகனத்தின்மேல் காட்சிகொடுத்தருளித் திருவருள்சுரந்து கேளாய் பராசரமுனியே ! நீ அன்புடன் எம்மிடத்தில் வேண்டும் வரம் யாது? எனத் தாழ்ந்து பணிந்து சுருதிமுறையாகத் துதிசெய்து வேண்டுகிறார். ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளிய எமது பரமபிதாவே! என் தந்தையாகிய சத்திமுனிவனைத் தட்டாமல் வாயில்போட்டுக்கொ

ண்ட சண்டாளனாகிய அசுரனையும் அவன் குலத்தையும் அழிக்குந்திறம் கொடுத்தருளவேண்டும். அன்றியும் இந்த இலிங்கத்தினிடமாக வீற்றிருந்து தரிசனஞ்செய்கின்ற யாவருக்கும் கருணைசெய்யவேண்டும் என்று பிரார்த்திக்கையில் அன்பனே! நீ எம்மைப்பூசித்த புண்ணியவசத்தால் முன் மாண்டுபோன உன் தந்தை, தன் தம்பிமார்களுடன் எம்மை அடையப்பெற்று, இப்போது உன்னைப்பார்க்க ஆவல்கொண்டு எம்முடன் இதோ வந்திருக்கின்றான். இனி நீ அசுரர்களைக் கொல்வதற்கு ஒரு யாகஞ்செய்து அந்த யாகத்தீயால் அந்த அசுரர்களை நீறாக்கிவிடு. நாம் உன் கோரிக்கையின்படி இந்தத் தலத்தில் எப்போதும் வீற்றிருக்கின்றோம். என்று திருவாய் மலர்ந்தருளி வேதத்தின் உச்சியில் மறைந்தருளினார்.

இப்பால் பராசரரிஷி பரமேஸ்வர மூர்த்தியின் திருவருளால் ஒரு யாகம் செய்து, அந்த யாகத்தீயினால் அந்த அசுரர்களைச் சாம்பலாக்கிவிட்டுப்பின்பு அவ்விடத்தில் வசிக்கும் மகாரிஷிகள் கோபந்தணிக என்று கூறிய இன் சொல்லாற் கோபந்தணிந்து அவர்களுடன்கூடி மகிழ்ந்திருந்தார்.

கேளீர் சவுன காதி முனிவர்களே! நீர் ஆடப்பெற்றவர்களுக்கும், உட்கொண்டவர்களுக்கும், கையால் தீண்டப் பெற்றவர்களுக்கும், சிவானந்தபோக வீடுகொடுக்குந் தன்மையுடன் விளங்கும் மஞ்சள் நீர் நதிக்கரையில் மாதவர்கள் வாழ்த்தி வணங்கும்படியான சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கின்ற தலங்களின்மகிமை இவ்வளவு என்று சொல்ல எவரால் முடியும்? சொல்லில் அடங்காதென்று அறிக.

பராசரேசன் பதமலர் போற்றி.

---

ஒன்பதாவது

## ஆதிபதீசப்படலம்.

தபோநிதிகளே! அடி பருத்திருக்கின்ற ஒரு மாமரத்தின் நிழலில் இனிது வீற்றிருக்கும் ஏகாம்பர நாதர் அமர்ந்தருள் செய்கின்ற பராசரேசத்தின் பெருமை சொன்னோம். இனி இருவினைப் பற்றற்று ஈடேறும் பொருட்டுப் பூர்வம் விஷ்ணு மூர்த்தியால் பூசிக்கப்பட்ட பூஞ்சோலை சூழ்ந்த ஆதிபதீச்சரத்தின் மகிமை சொல்வோம். கேளுங்கள், என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

சரசுவதியானவள் பிரம தேவன் செய்யும் யாகத்தை அழிப்பேன் என்று எண்ணி ஒரு நதிரூபங் கொண்டு வந்தபோது சிவபெருமான்

கட்டளை யிட்டபடி திருமால் விரைந்து சென்று அந்த நதியைத்தடுக்க, அது திசைமாறி ஓடிய இடங்களில் எல்லாம் தானும் ஓடித்தடுத்தும் அடங்காமற் பெருகி அதி வேகத்துடன் அர்த்த ராத்திரியிலே யாவரும் அச்சப்படக் காஞ்சிமா நகரத்தின்மேற் கடுகிவருதலும், சங்கபாணியாகிய அந்தத் திருமால் மனங்கலங்கி, ஒரு பெரிய விளக்கொளியாகி, ஆதிமூலமே! என்று ஓலமிட்டழைத்த கஜேந்திரன் என்னும் யானையைக் காத்தருளிய வரதராஜப்பெருமாள் சந்நிதானத்திற்குச் சற்று மேற்கே ஆதிபதீசன் என்னும் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து, விதிப்படி பூசித்து வேண்டும் வரம் பெற்று, அந்த வெள்ளத்தைத் தடுத்து, பிரமா செய்த யாகத்தைக் காத்துச் சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளியபடி விளக்கொளிப் பெருமாள் என்னும் திருநாமமும் பெற்று, அவ்விடத்தே வீற்றிருந்தனன். இவ்வாறு செங்கண்மால் தொழுது போற்றிய ஆதிபதீச்சரத்தை அன்புடன் துதி செய்யப் பெற்றவர்கள் இம்மைக்கு வேண்டிய போகபோக்கியங்களையும், மறுமைக்குரிய மோட்சானந்தத்தையும், தப்பாமற் பெறுவார்கள்.

ஆதிபதீசன் அடியிணை போற்றி.

---

பத்தாவது

## முத்தீசப் படலம்.

சடாமுடியுடைய தபசிகளே! துன்பந்தீர்த்து இன்பங் கொடுத்தருளும் ஆதிபதீசத்தின் பெருமை சொன்னோம். இனிப் பறவைகளுக்கெல்லாம் அரசனாகிய கருடன் பரவிப்பணிந்து பராக்கிரமம் படைத்த முத்தீசத்தின் மகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

காசிபரிஷிபத்தினிகளாகிய கத்துரு, சுபருணை என்னும் இருவரும் தங்கள் அழகை வியந்து நயந்து கொண்டாடினார்கள். தங்கள் அழகைப்பற்றித் தங்களைத் தாங்களே நெடுநேரம் புகழ்ந்து பேசி வாதுசெய்து, நம் இருவருள் அழகில் தோற்பவர் வெற்றிபெற்றவருக்கு அடிமையாய்ப் போகவேண்டும் என்று சபதம் பண்ணிக்கொண்டு, அந்த முனிவரிடத்திற் போய் எங்களில் கட்டழகியார்? என்று கேட்கக் கத்துருவே! நீதான் கட்டழகி என்று சொல்லுதலும் தலைசாய்ந்து நின்ற சுபருணையைச் சிறைப் படுத்தினள். சிறைப்படுத்தவே சுபருணை அக்

காளே! என் குற்றத்தை மன்னித்து என்னைச்சிறையிலிருந்து விடுவிக்க வேண்டும் என்று வேண்டுதல் செய்ய, அடீ சுபருணே! சுவர்க்கலோக த்திலே தேவர்கள் காவலிலே இருக்கின்ற அமுதத்தைக் கொண்டுவந்து கொடுப்பாயாகில் உன் சிறை விடுவிக்கப்படும். என்று சொல்லக்கேட்டு மதிமயங்கி மருண்டு தெளிந்து பின்பு அருந்தவம் செய்து, காசிபரிஷியின் கருணையால் கருடனைப் பெற்றெடுத்துக் கண்குளிரப் பார்த்து, நடந்த விருத்தாந்தங்களைச் சொல்லக்கேட்ட கருடன் உடனே உக்கிரம் கொண் டு எழுந்து தன்தாயாரிடத்தில் விடைபெற்றுத் திரும்பி, அவள் வருத் தத்தை ஒழிக்கும் பொருட்டு விரைந்து பறந்து சுவர்க்க லோகத்தில் அமுதம் இருக்கும் இடத்தை அணுகினன். அணுகவே அவ்விடத்தில் அமுதத்தைக் காத்துக் கொண்டிருந்த தேவர்கள் எதிர்த்துப் போர்செய் ய அவர்களை அடித்துத் துரத்துதலும், அவர்களுக்கு உடந்தையாய் வந் தெதிர்த்த இந்திரனையும் தன் சிறகுகளிலிருந்து உண்டாகும் சண்டமா ருதத்தினுல் பஞ்சு படும் பாடு படுத்தி, அமுதம் எடுத்துக் கொண்டு அதிவேகமாய் வருகையில் வழிமடக்கிப் போர்செய்த திருமாலுடன் இருபத்தொரு நாள் வரையில் சற்றுமிளைக்காமல் தான் ஒருவனே எதிர் நின்று சண்டை செய்வதைக் கண்டு, திருமால் மனமகிழ்ந்து கரு டனைப்பார்த்துக் கருடா! உன் வீரத்திற்கு யான் மகிழ்ந்தேன். என் னிடம் உனக்கு வேண்டும் வரம் கேள் தருகின்றேன் என்று சொல்லக் கேட்டு, அந்தக் கருடனும் கேளாய் திருமாலே! உன் தீரத்திற்கு நானும் மகிழ்ச்சி யடைந்தேன். உனக்கு வேண்டும் வரம் கேள் யான் கொடு க்கின்றேன் எனக்கேட்டு, மாயவன் மனமகிழ்ந்து புள்ளரசே! நீ புனித னும் சொன்னசொல் தவறுதவனும் ஆனுல் எனக்கு வாகனம் ஆகவே ண்டும். அந்த வரத்தைக் கொடு எனக் கருடன் அன்புடன் அந்தவார் த்தையைக் கேட்டு, ஒரு முகூர்த்தகாலம் எண்ணிப் பெருமூச்சுவிட்டு ச் சொன்ன சொல் தவறல் ஆகாது என்று தனக்குள் தீர்மானித்து அப் படியே ஆகட்டும் என்று அந்தத் திருமாலிடத்தில் விடை பெற்றுத் திரும்பிக் கத்துரு என்பவளிடத்தில் அந்த அமுத கலசத்தைக் கொடு த்துப் பின்பு தன்னை அலட்சியம் பண்ணிய கத்துரு புத்திரராகிய சர்ப் பங்களின் மேல் கோபங் கொண்டு, அவைகளைக் கொல்லநினைத்துக் காஞ் சிமா நகரத்தை அடைந்து ஆதிபதீசத்திற்கு வடகிழக்கில் தன் தாயை ச் சிறையிலிருந்து விடுவிக்க முந்தி அநுக்கிரகம் செய்த முத்தீசனை விரு ம்பித் துதி செய்து வேண்டும் வரம் பெற்றுத் தன்னைக் கண்டவுடன் பாம்புகளெல்லாம் பயந்து படம் எடுத்தாடாமல் அடங்கி ஒடுங்கிச் சுருண்டு போகும்படி எங்கும் உலாவிச் சுகித்து வாழ்ந்திருந்தான் சந்திரனைத் தரித்திருக்கும் சடைமுடி யுடைய அகண்டபரி பூரணன்

ஆகிய சிவபெருமான் சீர்பாத கமலங்களை இடையறாமல் தியானிக்குந் தன்மையால் காமம் வெகுளிமயக்கம் என்னும் மூன்று பகைவரையும் வெட்டி எறிந்து மகிமைபெற்று விளங்கும் மாதவர்களே! அது அன்றியும் மன மாசுதீர்ந்து விளங்கும் ஏகாலியர் குலத்தில் திரு அவதாரம் செய்தரு ளிய திருக்குறிப்புத்தொண்டநாயனர் அவ்விடத்தில் திருத்தொண்டுசெ ய்து முத்திப்பேறுபெற்றார். மேலும் அந்த முத்தீசனை வந்தனைவழிபா டுசெய்து முத்திபெற்றவர்களின் தொகை சொல்ல யாரால் முடியும்?

முத்தீசன் முளரித்தாள்போற்றி.

---

திருக்குறிப்புத்தொண்டநாயனர் செய்த திருத்தொண்டினை அரிய புராணங்களிற்சிறந்த பெரியபுராணத்திற் காண்க.

---

பதினேராவது

## பணதரீச்சரப் படலம்.

மனமாசில்லாத மாதவர்களே! காரெருமைகள் விழுந்து கலக்கப் பா ல்மணம்வீசும் தடாகத்தில் உள்ள வாளைமீன்கள் அந்த எருமைகள்மேல் துள்ளிப்பாயும்படியான முத்தீச்சரத்தின் பெருமை சொன்னேம். இனி ப்பூஞ்சோலையிற் பெருகும் மதுவை உண்டுகளிக்கும் வண்டுகள் இந்தி ரனுடைய சபையில் உள்ள தேவர்கள் கேட்டு அதிசயிக்கும்படி கீதம் பாடும் பணதரீச்சரத்தின் மகிமைசொல்வோம். கேளுங்கள் என்று சூத மாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

சிவக்கக்காய்ச்சி உருக்கிய செம்பொன் குழம்பை எடுத்துப் பூசி ஞற்போல் பொலிந்து விளங்கும் திருமேனியை யுடைய முத்தீசனை வந் தனைவழிபாடுசெய்து பெற்றுக்கொண்ட வரத்தினுல் கருடனனவன் பா ம்புக்கூட்டங்களை யெல்லாம் அவமதித்து அழிக்கும் ஆண்மையைக்க ண்டு, அந்தப் பாம்பின் கூட்டங்களும் சிவபெருமானை வந்தனை வழிபாடு செய்ய நினைத்து, மங்கல கீதவாத்தியங்கள் எப்போதும் தப்பாமல் முழ ங்கும் காஞ்சிமாநகரத்தை அடைந்து, முழங்கும் அலைகளுடன் சுழித்து ஆகாயத்தை அளாவிப் பிரமதேவன்செய்த யாகத்தையழிக்கப் பெரு ங்கோபங் கொண்டு அதிவேகமாய் ஓடிவந்த வேகவதிநதிக்கு வடதிசை யில் உள்ள ஆதிபதீசத்திற்குத் தெற்கே துன்பநோய்கள் எல்லாம் தொ

லேயும்பொருட்டுப் பணதரீச்சரனைப் பத்தியுடன் பிரதிஷ்டைசெய்து, ஆகமவிதிப்படி அருச்சனைபண்ணி ரிஷபக்கொடியுடைய எம்பெருமானே! உமது சீர்பாத கமலங்களைப்பூசித்த புண்ணியத்தினால் கருடன் அதி பராக்கிரமசாலியாகி அட்டகாசத் துடன் எங்களை வருத்தப் படுத்துகின்றான். அதனால் நாங்கள் பயந்து உம்மை அடைக்கலமாகவந்து அடைந்தோம். அடியேங்களுக்கு உம்மையன்றிவேறுதிக்கு இல்லை. ஆதலின் அடியேங்களைக்காத்தருளவேண்டும் என்று பிரார்த்திக்கையில் கண்ணுதற்கடவுள் கருணைகூர்ந்து அந்தச்சர்ப்பங்கள் எல்லாவற்றையும் தமக்குரிய ஆபரணமாக அணிந்துகொண்டார். அணிகலமாக அணிந்துகொண்டமையால் அரவங்கள் எல்லாம் ஆண்மைமிகுந்து அங்கே சிவதரிசனம் செய்யவந்த திருமாலைத் தாங்கிக்கொண்டுவந்த கருடனைப்பார்த்துச் சற்றும் அஞ்சாமல் ஏன்கருடா ! சுகமா? என்று கேட்கத்துணிந்தன. அன்றுதொட்டு ஏன்கருடா! சுகமா? என, இருக்குமிடத்தில் இருந்தாற்சுகமேயாம் என்னும் பழமொழி உலகத்தில் வழங்கத்தலைப்பட்டது. கொன்றைப் பூமாலைசூடிய எம்பெருமானைத் தஞ்சம் என்று அடுத்தமையால் சர்ப்பங்கள் கொஞ்சமாயினும் அஞ்சாமல் கருடனை நோக்கி ஏன் கருடா ! சுகமாயிருக்கின்றாயோ? என்று கேட்கத்துணிந்தன. ஆதலின் அன்பர்களே! நீங்கள் அற்பசகவாசம் பண்ணாமல் அறிவிற்சிறந்த பெரியோரைத் துணையாகவிரும்பிப் பெற்றுக்கொள்ளுங்கள். “பெரியாரைத் துணைக்கொள்” “பெரியாரைத் துணைக்கொள்” “பெரியாரைத் துணைக்கொள்”.

திருவெண்ணீறுபூசிய திருமேனியுடைய தபசிகளே! மலைபோலும் மதயானையை யுரித்துப் போர்த்தவராகிய சிவபெருமான் செம்பவளம் போற் சிவந்திருக்கும் தளிருடன் ஓங்கிய பூஞ்சோலைசூழ்ந்த பணதரீச்சரத்திலே பார்வதிதேவியாருடன் ஆன்மாக்களுக்கு இன்னருள்சுரந்து இனிது வீற்றிருக்கின்றார்.

இந்தப் பணதரீச்சரத்தின் சரித்திரத்தைக் கற்றவர்களுக்குங்கற்றோர்சொல்லக் கேட்டவர்களுக்கும் பாம்புமுதலியவைகளால் நேரிடும் விஷநோய் ஒருபோதும் அணுகமாட்டாது.

பணதரீசன் பதமலர்போற்றி.

பன்னிரண்டாவது

## காயாரோகணப் படலம்.

பிரமக்கியானிகளாகிய பெரியோர்களே! சங்குகள் வயிறு நொந்துவருந்தி அலறி யீன்ற முத்துகள் சந்திரகாந்தி வீசி இருளை அழித்துத் தங்குவதற்கு இடம் ஆகிய செந்தாமரைத்தடஞ்சூழ்ந்த பணாதீச்சரத்தின் பெருமை சொன்னேம். இனிப் பலவாத்தியங்கள் இடையறாமல் முழங்கும் மணிமாட வீதிகளால் சூழப்பட்ட காஞ்சிமாநகரத்திற்கு உயிர் போற்சிறந்து விளங்கும் காயாரோகணத்தின் மகிமைசொல்வோம்கேளுங்கள். என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

ஐம்புலன்களை அடக்கி ஆளுந்திறமுள்ள அறிஞர்களே! காலமானது காட்டை, கலை, முகூர்த்தம், பகல், இரவு, பட்சம், மாசம், ருது, வருஷம், யுகங்களாய்ப்பிரிந்து கழிந்துபோய்விடும். காலத்தின்முடிவில் எல்லாரும் இறந்துபோவார்கள். உலகத்தில்நிலைபெற்றிருக்கும்பொருள் ஒன்றாயினும் இல்லை. கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய சதுர்யுகங்களுக்கு வருஷம் நாற்பத்துமூன்று லட்சத்து இருபதினாயிரம். இந்தச்சதுர்யுகம் ஆயிரம் பிரமதேவனுக்கு ஒரு பகல், ஆயிரம் சதுர்யுகங்கள் பிரமகற்பம் என்றும் சொல்லப்படும். ஆயிரம் சதுர்யுகங்களே அந்த மூர்த்திக்கு ஒரு இராத்திரியாம். இப்படிப்பட்ட பகலும் இரவுங்கூடியது ஒருநாள். அந்நாள் முப்பதுகொண்டது ஒரு மாசம். அந்தமாசம் பன்னிரண்டுகொண்டது ஒரு வருஷம். பகல் வருஷம் ஐம்பது ஒரு பரார்த்தம். இராத்திரி வருஷம் ஐம்பது ஒரு பரார்த்தம். ஆக இரண்டுபரார்த்தமாய் முடியும் நூறுவருஷம் ஆய்விட்டால், வெள்ளிபோல்விளங்கும் இதழ்களை விரிய உடைத்து முடங்கிய கால்களையுடைய ஆண்வண்டுகள் இசைபாடும் பெண்வண்டுகளுடன் கூடி மதுபானஞ்செய்து மதுரகீதம்பாடுதற்கு இடமாகிய வெள்ளைத்தாமரைப்பூவில் வீற்றிருக்கும் சரசுவதிக்கு நடனசாலைபோலும் நாவினிடமாக நான்குவேதங்களையும் இடையறாமல் பாராயணம் செய்துவரும் பிரமதேவனுக்கு அந்தியகாலமாம். அந்தப் பிரமகற்பாந்தகாலம் விஷ்ணுமூர்த்திக்கு ஒருநாளாம். அந்தப்படி நூறுவருஷம் ஆய்விடுமானால், சூரியனுடைய பிரகாசம் குறைந்துபோகப் பெருஞ்சோதி வீசும் மிக்கவிலையும் தெய்வத்தன்மையும் உள்ள கவுத்துவம் என்னும் மாணிக்கம் விளங்கத் துளசிமாலை புரளும் திருமார்பினிடமாகத் திருமகள் விளையாடப் பெற்றிருக்கும் திருமாலுக்கும் ஒடுக்கமாம். பிரம விஷ்ணுக்கள் இருவரும் லயமாக வருங்காலத்தில்

எம்பெருமானாகிய சிவபெருமான் அவ்விருவரையும் உற்பத்தி யாக்கிய படியே ஒடுங்கச்செய்து, தமது திருமேனிமேல் ஏற்றிக்கொள்ளுவதனால் அந்தத்தலம் காயாரோகணம் என்று சொல்லப்படும். காலம் ஆகியும் அந்தக்காலத்தைக் கடந்தவராகியும் இருக்கின்ற சிவபெருமான் இவ்வ ண்ணம் எண்ணிறந்த பிரமவிஷ்ணுக்களுடைய காயத்தைத் தமதுதிரு மேனியில் தாங்கிக்கொண்டு, அவ்விடத்தில் ஆன்மாக்களுக்கு அருள்செய் யும்பொருட்டு ஆனந்தக்கூத்து ஆடிக்கொண் டிருக்கின்றார். ஆதலால் நக ரங்களில் சிறந்துவிளங்கும் காஞ்சிமாநகரத்தில் அந்தக் காயாரோகணம் என்னும் தலத்தை அடைந்தவர்கள் இகபரசுகம் அடைந்து பின்பு துரி யாதீதமான பேரின்பவீடு பெறுவார்கள். செந்தாமரைப்பூவில் வீற்றிரு க்கும் திருமகள் அவ்விடத்தில் அமர்ந்திருக்கின்ற சிவபெருமானை வில் வத்தால் அருச்சனைபண்ணித் திருமாலைத் தனக்கு மணவாளனாகப் பெ ற்றுக்கொண்டாள். மேலும் தேவகுருவாகிய வியாழபகவான் அங்கே வந்துசேர்ந்து, விளரி என்னும் இசைபாடும் வண்டுகள் முழங்கி மதுஉண்டு உமிழ்ந்து மயங்கிக்கிடக்கும் கொன்றைப்பூமாலைசூடிய சிவபெருமானைப் பூசித்துப் பல தருமங்களை எடுத்து ஓதும் தன் நாவானது தடித்துப்போம் படி சுருதிமொழியால் துதிசெய்கின்றான்.

எம்பெருமானே! தேவர்களுக்குள் நீயே பிராமணன். மற்றவர்க ளில் நான் பிராமணன். பிராமணனுக்குப் பிராமணனேகதி. உன்னை அவமதிக்கிறவன் ஒருபோதும் பிராமணன் ஆகமாட்டான். தன் குல தெய்வத்தைத் தொழாமல் வேறுதெய்வத்தைத் தொழுதல் செய்யும் பிராமணன் இம்மை மறுமை இன்பங்களை இழந்து நரகத்திற்கே ஆளா வான், என்று நான்கு வேதங்களும் எடுத்துரைக்கின்றன.

ஆதலின் அடியேன் உனது அடைக்கலம். நீயே எனக்கு மாதா வும் பிதாவும் குருவும். பிரம விஷ்ணுக்கள் தேடித்திகைக்க வரும் பெருஞ் சோதியே! ரிஷபக் கொடிதாங்கிய திருவருட் குன்றே! கருணைக் கடலே! உலகத்தார் புகழ்ந்து பேசும் நான்கு வேதங்களும் வடித்தெடு த்த அமுதசாரமே! பகவனே! உன்பாதமேகதி, என்றுதுதிக்கும்போது சிவபெருமான் பிரசன்னமாகி நீவேண்டும் வரம் யாது சொல்? எனலும் மேன்மேலும் விழுந்து பணிந்து மேருமலையை வில்லாக வளைத்து முப் புரங்களையும் அழிப்பதற்குப் புன்னகை செய்தருளியவரோ! அடியே னுக்கு உமது திருவடிமேல் மாறுதல் நிலைபெற்றிருக்கும் பத்திகொடு த்தருளவேண்டும். வேகவதி நதிக்குத் தெற்கே விளங்கும் இந்தக்கா யாரோகண தீர்த்த நீராடி, என் வாரமாகிய குருவாரத்தில் உமது சீர் பாத தரிசனம் செய்கின்றவர்களுடைய கோரிக்கைகளை நிறைவேற்றி

முத்தி இன்பத்தையும் கொடுத்து, இவ்விடத்திலேயே எந்நாளும் எம் பெருமாட்டியாகிய பார்வதிதேவியாருடன் இனிதுவீற்றிருத்தருளும் வரமும் தரல்வேண்டு மென்று வேண்டுதலும், அந்த வரங்கள் எல்லாவற்றையும் கொடுத்தருளித் தேவர்களுக்குக் குருவாகும் பதவியையும் அளித்து அந்த இலிங்கத்தினிடமாக மறைந்தருளினர்.

மேலும் யமதரும ராஜன் அங்கே வந்து பூசைபண்ணித் துதிக்கும் போது, சிவ பெருமான் காட்சி கொடுத்தருளித் தென்திசைக் கோமான் என்னும் பதவியும் அளித்து நீ என் அடியார்களுக்கு இடர் செய்வாயானல் இந்தப் பதவி ஒழிந்து போய் விடும், என்று விடைகொடுத்தருளினர். மின்னல் பழுத்து நெறித்திருந்தாற்போல் நீண்டிருக்கும் சடைகள் ஆலம் விழுது போல முதுகின் புறத்தில் சூழ்ந்திருக்கப் பொன் பழுத்தாற்போல் பொலிந்து விளங்கும் பஞ்சாக்கினி நடுவில் நின்று தவம் செய்யுந் தன்மை உடையவர்களே! அந்தக் காயாரோகணத்தில் தென்புலத்தார் கடனைக் கழித்தால், அவர்கள் நரக வேதனை நீங்கு முத்தியடைந்து சுகித்து வாழ்வார்கள். இதன்றியும் அந்தத்தலத்தில் அன்புவைத்துப் பேறு பெற்றவர்கள் அநேகர். ஆதலின் அதன் மகிமை சொல்ல யாவரால் முடியும்?

காயாரோகணப் பெருமான் கனகழல் போற்றி.

---

பதின்மூன்றுவது

## சித்தீசப் படலம்.

பெரியோர்களே! வண்டுகள் ஊதுவதனால் வாசனைவீசும் செங்கழுநீர்மலர்த்தேன்பெருகும் தடாகம் சூழ்ந்துவிளங்கும் காயாரோகணத்தின் பெருமை சொன்னோம். இனிப் பிறவியைப்போக்கும் அந்தக்காயாரோகணத்திற்கு வடகீழ்த்திசையில் வந்து தரிசனம் செய்வோருடைய மும்மலச் செருக்கை அகற்றி ஆட்கொண்டருளும் சித்தீசத்தின் மகிமைசொல்வோம். கேளுங்கள் என்று சூதமா முனிவர் சொல்லத் தொடங்கினர்.

கம்பை நதிக் கரையிலே அன்பு முதிர்ந்து அருந்தவம் செய்த காமாட்சி தேவி மஞ்சட் காப்பு அணிந்து திருமஞ்சனம் செய்யப் பெருகிய நீரானது நறுமணம் வீசி மஞ்சள் நீர் நதியாய் வருவதை நாடிச் சிவ

பெருமான் அதிக சந்தோஷத்துடன் அவ்விடத்தில் இலிங்க மூர்த்தியா ய்த் தோன்றி, அந்த நதியில் ஆடினமையால் மஞ்சள் நீர்க்கூத்தன் என் னும் திருநாமம் பூண்டு அவ்விடத்திலே அமர்ந்தருளினார். அந்தத்தல த்தில் அநேக சித்தர்கள் வந்து பத்தர்களாகிப் பரவிப் பணிந்து அணிமா, மகிமா முதலிய பல சித்திகளைப் பெற்றுக் கொண்டமையால், சித்தீசன் என்னும் திருநாமம் இந்த வுலகத்தில் வழங்கலாயிற்று. அந்தச் சித்தீசரு டைய சந்நிதானத்தில் சித்த தீர்த்த மென்னும் பெயருடன் ஒரு கேணி இருக்கின்றது. சித்திகளைக் கொடுக்கும் அந்தச் சித்த தீர்த்தத்திலே ஆதிவாரத்திலும் சனிவாரத்திலும் நீராடி, அங்கு வீற்றிருக்கும் சித்தீச ருடைய சீர்பாத கமலங்களைக் கண்டு சேவிக்கின்றவர்களுக்குப் பிறவித் துன்பங்கள் அணுகாமல் அகன்று போய்விடும்.

சித்தீசர் திருவடி போற்றி.

---

பதினான்காவது,

## அரிசாபபயந்தீர்த்ததானப்படலம்.

அறிவானந்தத்தில் அழுந்தும் அந்தணர்களே! ஆறுகால்களையுடைய வண்டுகள் மதுஉண்டு மகிழும்படி பூத்துத் தேன் பொழியும் பூந்தடஞ் சூழ்ந்த சித்தீச்சரத்தின் சிறப்புச் சொன்னோம். இனி அதன் வடக்கே உலகளந்த பெருமாள் ஆசிரமத்தில் அரிசாப பயந்தீர்த்தருளிய சிவ பெரு மான் மகிமை சொல்வோம். சிந்தைவைத்துக்கேளுங்கள் என்று சூதமா முனிவர் சொல்லத் தொடங்கினார்.

முற்காலத்தில் அதிதி புத்திரராகிய சுரர்களும் திதி புத்திரராகிய அசுரர்களும் பொறாமை கொண்டு, இடையறாமல் பாணங்களைப் புங்கா நுபுங்கமாய்த் தொடுத்து, நெடுங்காலம் போர் செய்கையில், அரம்பை யர் போகத்தில் அழுந்தும் அமரர்கள் எல்லாரும் பின்வாங்கக் கண்டு செந்தாமரைக்கண்ணனாகிய திருமால் அந்தப் போர்க்களத்தை அடைந்து தன் கையிலுள்ள சக்கராயுதத்தைக் கிறு கிறு வென்று சுழற்றி எறிந்த தனால், அசுரர்களில் மாண்டவர்கள் மாண்டுபோக,மாளாதொழிந்தவர்கள் எல்லாரும் பயந்து ஓட்டமாய் ஓடிப் பிருகு முனி பத்தினியும் திருமகளு க்குத் தாயும் ஆகிய கியாதி என்பவளிடத்தில் 'அபயம் அபயம்' என்று அலறி அடைக்கலமடைந்தார்கள். அது கண்டு கியாதி அசுரர்களே!

'நீங்கள் அஞ்சவேண்டாம் அஞ்சவேண்டாம்' என்று அபயாஸ்தம் அளித்து, அவர்களைத் தன் ஆசிரமத்திற்கு உள்ளேயே வைத்து ஆதரித்து வந்தனள். அதிக கோபத்துடன் அந்த அசுரர்களைத் துரத்திக் கொண்டு அங்கே வந்து சேர்ந்த திருமால் அந்த ஆசிரமத்தின் தலைவாயிலில் நின்று தடுக்கும் தன் மாமியாகிய கியாதியின் தலையை வெட்டித்தள்ளுதலும் ஐயோ! கூ! என்று எழுந்த ஓசையைக்கேட்டுப் பிருகுமாமுனி யோகத்தை விட்டுத் தன்மனைவி மாண்டு போனதையும் மற்றும் காரியங்களையும் பார்த்து, மனவருத்தப்பட்டுத் துன்பக்கடலில் அழுந்திக் கண்கள் சிவந்து உதடு துடிக்க நெருப்புப் பொறி பறக்கும்படி அந்த மாயவனை வெகுண்டு நோக்கி, எனக்குப் பத்தினியும் உனக்கு மாமியும் ஆனவளைச் சற்றேனும் அஞ்சாமற்கொலை செய்தாய். அடாபாவி! நீ எப்படி பிழைப்பாய். இந்த உலகத்திலே ஒன்று சொல்லியபடி ஒன்று சொல்லாமலும் ஒன்று மற்றொன்றை வெல்லாமலும் தம்மில் பகைத்துச் சண்டையிட்டு மண்டைஉடைத்து மதிமயங்கச் செய்யும் பொய்ச் சமயங்களாகிய புறச்சமயங்கள்போல் பிதற்றாமல், பதிபசுபாசம் என்னும் முப் பொருளின் இலக்கணங்களை உள்ளங் கை நெல்லிக் கனிபோல் உள்ளபடி உணர்த்தும் மெய்ச்சமயமாகிய சைவசமயமே சமயம். அதிற் சொல்லிய பசுபதியே பதி. அந்தப்பசுபதி பாதாரவிந்தங்களில் நாங்கள்வைத்த பத்தியே பத்தி என்பது சத்திய மானால், பாவத்திற்குப் பாத்திரமானவனே! நீ இப்பொழுதே நரகவேதனைக்குரிய பிறப்புப் பத்தெடுக்கக்கடவாய். உனக்கு அடிமையானவர்கள் வேத நெறி தப்பிய புறச்சமயத்தார் புரட்டாகக்கட்டிய சாஸ்திர விதிப்படி தீட்சை பெற்றுத் திரிபுரதகனம் செய்தருளிய எம்பெருமான் திருவடிக்கு அருகராகாமல், திரிதண்டம் ஏந்தியாவரினும் கடையராகி மீளா நரகத்திற்கே ஆளாகக்கடவர். உனக்குத் தொண்டர் ஆம் அவர்களைக் கண்ணால் கண்டவர்களும் யமலோகத்தை யடைத்து மாய்ந்துபோகக் கடவர். துன்பமே மிகுந்த தாமத குணத்துடன் இழிவாகிய பிறவிகளில் மச்சம், கூர்மம், வராகம் முதலிய பிறவிகளை எடுக்குந்தோறும் பெருந்துன்பத்தையே அடையக்கடவாய். என்று கொடிய சாபம் இட்டுக் காமக்குரோதம் முதலியவைகளை அணுகாதபடி அகற்றிய அந்தப் பிருகுமாமுனிவன் சுக்கிரனால் உயிர் பெற்றெழுந்த தன் பத்தினியாகிய கியாதியுடன் சிவபெருமானைத்துதித்து மகிழ்ந்து வாழ்ந்திருந்தனன்.

இப்பால் துளசிமாலை யணிந்த திருமால் பயன் நிறைந்தசொல்லைச் சொல்லும் அந்தப் பிருகு முனியிட்ட சாபத்தை ஏற்று மனம் வருந்தி ஏக்கமடைந்து இந்தச் சாபம் தீர்வது எப்படி? என்று கலங்கித் தெளி

ந்து, புண்ணிய பாவம் தொலைத்தருளப் பரமசிவம் இருக்கின்றது ஸ்ரீபஞ்சாட்சரம் இருக்கின்றது. யாம் இருக்கின்றோம். நமக்கு என்ன குறை? நாம் ஏன் கவலைப்படவேண்டும்? என்று துணிந்து நீர்வளம் பொருந்திய காஞ்சிமாநகரத்தை அடைந்து, சிவகங்கையிலே படிந்தெழுந்து, ஒருமாவடி நிழலில் வீற்றிருந்தருளும் ஏகாம்பரநாதரைத் துதித்து, அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, அதன் பக்கத்தில் தான்வாசம் செய்வதற்கு ஓர் ஆசிரமம் அமைத்து, அந்த ஆசிரமத்தில் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து, அன்பு மிகுந்து அருச்சனை பண்ணித் துதித்து, அந்த மூர்த்தியின் அநுக்கிரகம் பெற்று, அருந்தவம் செய்யச் சங்கற்பித்துத் தேகமெல்லாம் திரு நீறு பூசி, நெற்றியிலே விபூதியைத் திரிபுண்டரமாக அணிந்து, உருத்திராட்சமாலை தரித்துச் சீதளமான சடைமுடி யுடைய சிவபெருமானுக்குரிய சத வுருத்திர மந்திரத்தைச் செபித்துச் சருகு பட்சணம் சலபட்சணம் கனிபட்சணம் வாயுபட்சணம் செய்பவனுகித் தெய்வத்தன்மையுள்ள ஸ்ரீபஞ்சாட்சரங்களைக் கணித்து இதயார விந்தத்தின் நடுவிலேபார்வதி சமேதனை எழுந்தருளவைத்துப் பஞ்சாக்கினிமத்தியில் நின்று அகோரமான தவம் செய்தனன்.

இந்தப்பிரகாரம் நெடுங்காலம் மாதவன் மாதவம் செய்துகொண்டிருக்கையில், சோமசூரியாக்கினி என்னும் திரிநேத்திர தாரியாகிய சிவபெருமான் பார்வதி சமேதராய்ப் பல பூதகணங்கள் இருபக்கத்திலும் நின்று துதித்துவர, அந்த இலிங்கத்திலிருந்து தோன்றி ரிஷபவாகனத்தின்மேல் இருந்து காட்சிகொடுத்து, மாதவனே! நீ வேண்டும் வரம்யாது சொல்? எனலும், அந்த மாதவன் அஷ்டாங்க பஞ்சாங்கமாக அடிக்கடி பூமிமேல் விழுந்துபணிந்து அஷ்டமூர்த்தியே! சரணம். அடியேனை ஆட்கொள்ளவந்த அரசே! சரணம். என்இருவினைக்கட்டு அறுத்தவனே! சரணம். மாறிலாக் கருணை வெள்ளமே! சரணம். சரணம். என்று மனதிற்பூரித்தோங்கும் அன்புடன் அழுதுதொழுது உருகி ஆனந்தக் கண்ணீர் சொரிந்து ஐயனே! உன்னைஅடைக்கலமாக அடைந்தேன். உன்னை அன்றி எனக்கு வேறு திக்கில்லை. ஞானநூற் கேள்வியால் விளங்கும் பிருகுமாமுனி இட்ட சாபத்திற்குப் பயந்து நொந்திருக்கின்ற நான் பிழைக்கும்படி கிருபைசெய்ய வேண்டுமென்று முறையிட்டுச் சோர்வுடன் நின்று வேண்டுதலும் கேளாய் திருமகள் மார்பா! என்று திருவாய்மலர்ந் தருளுவார். நடுவில் விண்டுபோகாமல் தொண்டு செய்யும் எமது அடியவர்களால் சொல்லப்பட்டது எதுவோ அது தப்பாமல் பலிக்கும். ஒருபோதும் பழுதாகமாட்டாது. இப்பொழுது நீ வருந்த வதைக்கும் இந்தச்சாபமும் அநுபவித்தால் அல்லாமல் உன்னைவிட் டகலமாட்டாது. கொண்டவிரதத்தில் சிறந்த

எமது அடியவர்களுக்குத் தீங்கு செய்யும் கொடியவர்களைத் தண்டிப்ப தே தருமமாம். எமது அன்பருக்கு இடர்செய்தவர்கள் மறுமையிலும் மீளா நரகத்தில் விழுந்து வருத்தப்படுவோர்கள். ஐயோ! அந்தப் பாவி கள் எப்படிப் பிழைப்பார்களோ? எம்மை நீ பேரன்புகொண்டு வந்தனை வழிபாடுசெய்த புண்ணியத்தினால், பெருமைபொருந்திய பிருகுமாமுனி வன் சாபங்கொடுத்த பத்துப்பிறப்பும் லோகோபகாரமாம் என்று உன க்குள் தெளிந்துகொள். அந்தத்தசாவதாரங்களில் ஐந்து அவதாரங்களு க்கு அநுக்கிரகமும் மற்று ஐந்து அவதாரங்களுக்கு நிக்கிரகமும் யாம் செய்வோம் என்று திருவாய்மலர்ந்தருளுதலும், அந்தத் திருமால் மறுப டியும் பணிந்து அடியேன் உய்ந்தேன் உய்ந்தேன் என்று மகிழ்ந்துரை த்துச் சுவாமி! தேவரீரே இந்த உலகத்தில் வந்து அடியேனுக்குத் தன் டனையும் அநுக்கிரகமும் செய்வீரானால், இந்தப் பெருஞ்செல்வத்தைப் பார்க்கிலும் அடியேன் பெறும்பேறும் உண்டோ? மஹாப்பிரபு! அடி யேன் இன்னமும் ஒருவரம்வேண்டுவேன். உம்மிடத்தில் மாறுமல் நிலை பெற்றிருக்கும் பூரணபத்தி தந்தருளும். புகழ்ந்துபேசும் இந்த அரிசாப பயந்தீர்த்தருளிய இலிங்கத்தில் எந்நாளும் வீற்றிருந்தருள்க என்றுசொ ல்லுதலும் எம்பெருமான் அந்த வரங்களையெல்லாம் கொடுத்தருளினர். அ தனால்பாடல்பாடும் வண்டின்கூட்டங்கள் கூடி மதுவிருந்து செய்யும் து ளசிமாலை யணிந்த மார்பையுடைய திருமால் பரம சந்தோஷம் அடைந்து செந்தாமரை மலர்போலும் கைகளைக் கூப்பிக்கொண்டு, சந்நிதானத்தில் நின்றுகொண்டிருக்கச் சிவபெருமான் அந்த இலிங்கத்தினிடமாக மறை ந்தருளினர்.

---

(திரிகாலஞானேசம்.)

கேளீர் முனிவர்களே! பூர்வம் சிலமுனிவர்கள் திரிகாலக்கியானம் அடையும்பொருட்டு, அந்த அரிசாப பயந்தீர்த்த தானத்தின் கிழக்கில் திரிகாலஞானேசனை ஸ்தாபித்துச் சிவபெருமானுக்கு இனிமையான பூ சைசெய்து இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் மூன்று காலங்களிலும் நடக்கும் காரியங்களை உணர்த்தும்படியான திரிகாலக் கியானத்தைப் பெற்றுக்கொண்டார்கள். அந்தத்தலம் திரிகாலஞானே சம் என்றுசொல்லப்படும்.

திரிகாலஞானேசர் திருவடிபோற்றி.

(மதங்கேசம்.)

மதங்கமாமுனி ஐம்புலன்களையும் அகத்துள் அடங்கச்செய்து அருச்சனைபண்ணிப் பேறுபெற்ற மதங்கேசம் என்னும் தலம் இப்பொழுது யாம் எடுத்துச்சொல்லிய திரிகால ஞானேசம் என்னும் தலத்திற்கு வடக்கே உள்ளது.

மதங்கேசன் மலரடிபோற்றி.

(அபிராமீச்சரம்.)

நெடியோன் மிகக்குறியன் ஆகி மாவலி என்பவனை அடக்குவது எப்படி? என்று மனங்கலங்கித் தனக்குள் தெளிந்து பூசித்து வேண்டும் வரம்பெற்ற அபிராமீசம் என்னும் தலம் அந்தமதங்கேசம் என்னும் தலத்திற்கு மேற்கே உள்ளது.

அபிராமீசன் அடியிணை போற்றி.

(ஐராவதீச்சரம்.)

பூர்வம் தேவர்களும் அசுரர்களும் ஒன்றுசேர்ந்து கும்புகூடிக் கடையும்போது, திருப்பாற்கடலில் தோன்றிய அயிராவதம் என்னும் வெள்ளையானை அருச்சனைசெய்து, யானைகளுக்கெல்லாம் அரசாகித் தேவேந்திரனைச்சுமக்கும் பேறுபெற்ற ஐராவதீச்சரம் என்னும் தலம் அந்த அபிராமீசம் என்னும் தலத்திற்கு மேற்கே உள்ளது.

ஐராவதீசன் அடியிணைபோற்றி.

தேன்துளி துளிக்கும் நிறைமலர்ச்சோலை சூழ்ந்திருக்கும் திரிகால ஞானேசம், மதங்கேசம், அபிராமீசம், ஐராவதீசம் என்னும் இந்த ஸ்தலங்களில் எந்தத் தலத்திலாவது எமது பரம பிதாவாகிய சிவபெருமானுடைய சீர்பாத கமலங்களை வந்தனை வழிபாடு செய்யும் புண்ணியம்பெற்றவர்கள் இடையறுமல் சஞ்சலப்படுத்துகின்ற கொடிய வினையால் உண்டாகும் பிறவிக்குக் காரணம் ஆகிய காமக்குரோத லோப மோக மத மாற்சரியங்களைக் கடந்து கழிந்து, எம்பெருமான் இணையடி நீழலைச் சேர்ந்து இறுமாப்புடன் இனிது வாழ்ந்திருப்பார்கள்.

அரிசாப பயந்தீர்த்தார் அடியிணை போற்றி.

## பதினைந்தாவது

## இட்டசித்தீச்சரப்படலம்.

விஷய சுகத்தை விஷம்போல் நினைக்கும் வேதியர்களே! அரிசர்ப பயந்தீர்த்த தானம் முதல் ஐராவதீசம் வரையிலும் சொன்னோம். இனி அந்த ஐராவதீசத்திற்குத் தென்பக்கத்தில் இருக்கின்ற இட்ட சித்தீசத்தின்பெருமைசொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

எவரும் கைகூப்பித் தொழும் பெருமை பெற்ற சுக்கிரன் அந்த இஷ்டசித்தீச்சரத்தை அடைந்து பூரணபத்தியுடன் பூசைசெய்து சகல சித்திகளையும் பெற்றனன். அந்தச் சுக்கிரன் சொல்லியபடி ததீசிமுனிவன் வந்து வந்தனை வழிபாடுசெய்து வச்சிரதேகம்பெற்றான் என்று சொல்லுதலும், சவுனகாதி முனிவர்கள் எல்லாரும் சூதமாமுனிவரை நோக்கிப் போதசாகரமாகிய சூதமாமுனிவரே! அந்தத் ததீசி முனிவன் வச்சிரதேகம் பெற்றவரலாற்றைவிரித்துச்சொல்லவேண்டும் என்று வேண்டுதல்செய்யச்சூதமாமுனிவர் அகமகிழ்ந்து முகமலர்ந்து அந்தமுனிவர்களை நோக்கி முனிவர்களே! வடதிசையில் உள்ள மாமேருவை வில்லாக்வளைத்து முப்புரங்களை அழித்தருளிய அயிராவதீசனுக்குச் சற்றுத் தென்பாரிசத்திலே வீற்றிருக்கின்ற அறிவுக்கெட்டாத இஷ்டசித்தீசனைப் பூசித்து வச்சிரதேகம்பெற்ற ததீசிமுனிவன் செய்கைகளை விரித்துச் சொல்லுகிறோம் கேளுங்கள் என்று சொல்லுகிறார்.

பிருகு முனிவன் சந்ததியிலே தோன்றிய ததீசிமுனிவன் மலைமேல் அருவிபோல் ஒழுகும் மதயானைச் சேனையுடைய குபன் என்னும் அரசனுக்குப் பிரியாத் தோழனாகி மனங்கலந்து வாழும் நாளில் ஒருநாள் இருவரும் கூடிக்குலாவிப் பேசிச் சிரித்துக்கொண்டிருக்கும்போது குபன் ததீசி முனிவனைப் பார்த்துத் ததீசியே! விப்பிராகிய பிராமணர்கள் மேலானவர்களோ? வேந்தராகிய அரசர்கள் மேலானவர்களோ? சொல் என்று கேட்க, அந்த முனிவன் அரசர்களைப்பார்க்கிலும் அந்தணர்களே மேலானவர்கள் என்று சொல்லக் குபன் அந்தணரைப் பார்க்கிலும் அரசரே மேலானவர்கள் என்று சொல்லினான். இந்தப் பிரகாரம் சொல்லச் சொல்ல அவ்விருவருக்கும் பகை உண்டாயிற்று அதனால் அந்த முனிவன் நெருப்புப் போல் சீறி அரசனை அடித்தான். அரசனும் அதிக கோபங்கொண்டு வச்சிராயுதத்தைச் சுழற்றி எறிந்து

அந்த முனிவனுடையதேகத்தை இரண்டு துண்டாக வெட்டினன். ததீசி முனிவன் வெட்டுண்டு பூமியில் விழும்போது சுக்கிரனை நினைந்ததனல், அந்தச் சுக்கிரன் அவ்விடத்தில் வந்து உடலின் இரண்டு துண்டுகளையும் ஒன்றுபடப் பொருத்தி உடனே எழுப்பித் ததீசிமுனிவனுக்குத் தேறுதல் சொல்லித் ததீசி முனிவனே! நீ விரைந்து போய்க் காஞ்சிமா நகரத்தை அடைந்து சிவபெருமானைப் பூசித்து மார்க்கண்டேயர்போல் சிரஞ்சீவியாக வாழ்ந்திருக்கும் வரம் பெற்றுக்கொள்.

நவரத்தினமயமாய் விளங்கும் காஞ்சிமா நகரத்தில் இட்டசித்தீசத்தில் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமான் சீர்பாத கமலங்களை வணங்கி வாழ்த்தி நான் பெற்றுக் கொண்ட மிருத சஞ்சீவினி இதோ இருக்கின்றது பார். அந்த இஷ்டசித்தீசத்தின் தென் பக்கத்தில் இட்டசித்தி தீர்த்தம் என்று ஒரு தீர்த்தம் உண்டு. அந்த இட்டசித்திதீர்த்தத்திலே நீராடப் பெற்றவர்களுக்குச் சிவானுக்கிரகம் உண்டாகும் பத்தியுடன் அந்தத் தீர்த்தத்தைத் தரிசித்தவர்களுக்கும் பரிசித்தவர்களுக்கும் உட்கொண்டவர்களுக்கும் அறிவுடன் ஆடப்பெற்றவர்களுக்கும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தங்கள் நான்கும் உண்டாகும். மேலும் அணிமா, மகிமா முதலிய அஷ்டமாசித்திகளையும்பெறுவார்கள் என்ருல், அந்த இஷ்டசித்தி தீர்த்தத்தின் மகிமை சொல்லப்படுமோ? புத்திரபாக்கியம் இல்லாதவன் ஆதிவாரத்திலே அந்தத் தீர்த்த நீராடுவானுனல் புத்திரபாக்கியம் பெறுவன். கலியாணம் இல்லாதவன் கலியாணம் பெறுவன். ஆயுள் இல்லாதவன் தீர்க்காயுள் பெறுவன். கல்வி யறிவில்லாதவன் கல்வியறிவைப் பெறுவன். கண்ணில்லாதவன் கண்பெறுவன். செல்வமில்லாதவன் செல்வம் பெறுவன். அரசாட்சியை இழந்தவன் அரசாளப் பெறுவன். பேய் பிசாசு பூதவேதாளங்கள் பிடித்து ஆட்ட வருந்துகின்றவர்கள் ஆதிவாரத்தில் அந்தத் தீர்த் நீராடினல் அந்தப் பேய் பிசாசு முதலியவைகள் அவர்களை விட்டு நீங்கி நெடுந்தூரம் போய்விடும். குஷ்டரோகம், முயல்கன்முதலிய கொடிய நோய்கள் எல்லாம் அந்த நீரில் மூழ்கிய வுடன் சூரியனைக்கண்ட பனி போல் விலகிப் போய்விடும். இது சத்தியம். வந்து நீராடினவர்கள் காதுகளுடன் கலந்திருக்கும் குழை என்னும் ஆபரணத்தைப் பிளந்து விஷம்மிகுந்து குமிழம்பூப்போன்ற நாசிமேல் மோதும்வாளாயுதம்போற் செவ்வரிபடர்ந்த கண்களையும் தாமரை அரும்புபோன்ற தனங்களையும் சிறுத்த இடையையுமுடைய மாதர் ஆனுலும் புருஷரானுலும் அவர்கள் வேண்டும் எல்லாவற்றையும் அந்த இஷ்டசித்தி தீர்த்தம் விரைந்து கொடுக்கும்.

பராக்கிரமசாலியாகிய ததீசிமுனிவனே! கிருதயுகத்தில் பிரமதேவன் சரசுவதியுடன் வந்து அந்த இஷ்டசித்தி தீர்த்தம் ஆடிச்சந்திரசேகரனாகிய இஷ்டசித்தீசனைப் பூசித்துச் சத்தியலோகவாழ்க்கையையும் சகலலோகங்களைப் படைக்கும் திறத்தையும்பெற்றான். திரேதா யுகத்திலே சூரியபகவான்வந்து நீராடி வேதத்திருமேனி பெற்று, ஆயிரங்கிரணனாகி, த் தன் வாரமாகிய பானுவாரத்திலே அந்தத் தீர்த்தத்தில் முழுகினவர்களுக்கு வேண்டும்சித்திகளைச் சிவபெருமான் விரைந்து கொடுக்கவும், கார்த்திகைமாசம் ஞாயிற்றுக்கிழமையில் நீராடப் பெற்றவர்கள் வேண்டும் போக போக்கியங்களைமிகவும் விரைந்து கொடுக்கவும் வரம்பெற்றான். துவாபரயுகத்திலே திருமால் இலட்சுமி தேவியுடன்வந்து அந்தத்தீர்த்தநீராடி உலகங்காக்கும் தொழிலையும் வைகுண்டப் பதவியையும் பெற்றான். பூரணசந்திரனைப்போல்விளங்கும் முகத்தையுடைய காமாட்சி தேவி கலியுகத்திலே அந்தத்தீர்த்த நீராடித் திருவேகம்பமுடையவரது திருமேனியில் ஒருபாதி அடையப்பெற்றனள். பிரமா, சூரியன், விஷ்ணு, பார்வதி என்னும் இவர்கள் நான்குபெயரும் முறையே கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்னும் நான்குயுகங்களுக்குத் தலைவர் ஆனார்கள்.

மேலும் பூர்வம் இந்தப்புண்ணிய தீர்த்த நீராடிச்சூரியன் தக்கன் செய்தயாகத்தில் வீரபத்திரமூர்த்தியால் இழந்துபோன பல்லுகளைப்பெற்று வெண் குஷ்டரோகமும்நீங்கப்பெற்றான். பகன் என்னும் சூரியன் வீரபத்திரசுவாமியால் இழந்துபோன கண்களைப்பழையபடிவிளங்கப்பெற்றான். குபேரன் பார்வதிதேவியினுடைய திருமேனியை உற்றுப்பார்த்து இழந்த கண்களையும் சிவபெருமானுக்குப் பிரியாத்தோழன் ஆகும்பதவியையும்பெற்றான். துச்சருமேளன் என்பவன் அம்பிலுங்கொடிய கண்களை யுடைய அரம்பையரில் ஊர்வசி போகம்பெற்றான். பராக்கிரமத்தால் விளங்கும் கண்ணன் பெற்றெடுத்த சாம்பன் என்பவனும் குஷ்டரோகம் நீங்கப்பெற்றான்.

ஐம்புலன்களை அடக்கி ஆளவல்ல ததீசிமுனிவனே!

மலர் மணம் வீசும் இஷ்டசித்தி தீர்த்தத்தில் நீராடப்பெற்ற புண்ணியத்தினால் நிடத தேசாதிபதியாகிய நளச்சக்கரவர்த்தி, அயோத்திக்கு அரசனாகிய ஸ்ரீராமன், நெடிய புகழ்பெற்றோங்கும் பாண்டவர்கள் என்னும் முத்திறத்தாரும் தங்கள் சத்துருக்களை வென்று, தாங்கள் இழந்துபோன நாடுநகரங்களை அடைந்து அரசாட்சிசெய்து அகமகிழ்ந்திருக்கப் பெற்றார்கள்.

அந்த இஷ்டசித்தி தீர்த்தத்தின் வடபாகத்தில் கொடியநோய் தீர்க்கும் தருமதீர்த்தமும், கிழக்கில்தேவர்கள் புகழும் அருந்ததீர்த்தமும், தென்றிசையில் காமதீர்த்தமும்; மேற்குப்பக்கத்தில் மோட்சதீர்த்தமும் விளங்கும். அறம் பொருள் இன்பம் வீடு என்னும நான்குப்பயனைக் கொடுக்கும்படியான நால்வகைத்தீர்த்தங்களையுடைய இந்த இஷ்டசித்தி தீர்த்தம் எந்தமாசமும் சிறப்புள்ளது. ஆயினும் ஆடிமாசத்தைப் பார்க்கிலும் வைகாசி, மாசி, கார்த்திகை, என்னும்மூன்றுமாசங்கள் மிகவும்சிறந்தவைகள். அந்த மூன்றுமாதங்களில் கார்த்திகைமாசம் பானுவாரம் விடியற்காலத்திலே அந்தத்தீர்த்த ஸ்நாநமாடினவர்கள் எவர்கள் ஆனாலும் அவர்கள் அடையும்பலன் இவ்வளவு என்று ஒருவராலும் சொல்ல ஒண்ணாது. செந்தாமரைத்தேன் பெருகும் இட்டசித்தி தீர்த்தத்தில் தானம்செய்தல், நீராடல், ஓமம்வளர்த்தல் முதலியவைகள் ஒன்றுக்கு ஒன்று அனந்தமாம். ஆதலால், அந்தத்தீர்த்த நீராடி எவராலும் கொல்லப்படாத மேன்மையைப்பெற்றுக்கொள் என்றுசொல்லி மிருதசஞ்சீவினி என்னும் மந்திரத்தையும் உபதேசித்துச் சுக்கிரன் விடைகொடுத்தலும், அந்தத்ததீசிமுனிவன் பரமசந்தோஷம் அடைந்து காஞ்சிமாநகரத்தைச்சேர்ந்து இஷ்டசித்தி தீர்த்த நீராடி, ஆனந்தக் கண்ணீர் பெருக இஷ்டசித்தீசனைப் பூசைசெய்து பேரன்புபூண்டுவாழ்ந்திருக்கையில், சந்திரசேகரனாகிய சிவபெருமான் பிரத்தியட்சமாகி இனி ஒருவராலும் கொல்லப்படாத வச்சிரதேகமும் கொடுத்தருளினார். அந்தப்பிரகாரம் சிவபெருமானிடத்தில் பலவரம் பெற்றுக்கொண்டபின்பு அந்தத் ததீசிமுனிவன் இராஜசபையிற்சென்று, தன் இடது காலைத்தூக்கிக் க்ஷுபன் என்னும் அரசன் தலைமேல் உதைத்தான். இந்த அரசனுக்குத்துணையாய் வந்து போர்செய்த மாயனையும் வென்று மகிழ்ந்துவாழ்ந்திருந்தான். "நெடிய மதிலாற் சூழப்பட்ட இட்ட சித்தீசத்திலே மேற்குமுகமாய் வீற்றிருக்கும் சிவபெருமானை வணங்கிவாழ்த்தி மாசுதீர்ந்து இட்டசித்திபெற்றவர்கள் இன்னும் அநேகர்.

பூலோகத்தில் அந்த இட்ட சித்தீசத்தின் மகிமைசொல்ல வல்லவர் யாவர்?

இட்டசித்தீசன் இணையடி போற்றி.

பதினாறுவது.

## கச்சபேசப்படலம்.

ஒடுங்கும் மனம்பெற்ற உத்தமர்களே! செவ்வரி பரந்த கண்களையு டைய மாதர் ஆடலும் பாடலும் ஒழிவில்லா தோங்கும் இட்டசித்தீச த்தின் பெருமைசொன்னோம்.

இனிப்பார்வதி சமேதராகிய சிவபெருமான் மகிழ்ந்து வீற்றிருக் கின்ற அந்த இஷ்டசித்தீசத்தின் தெற்கில் இதழ்விரிந்த பூஞ்சோலை யால் சூழப்பட்ட கச்சபேசத்தின் மகிமை சொல்வோம் கவனித்துக் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

முன்னொரு கற்பகாலமுடிவில் ஞானமூர்த்தியாகிய சிவபெருமான் அண்டரண்டசராசரங்கள் அனைத்தையும் அழித்து அந்த ராத்திரியில் மயில்போலும் சாயலையுடைய மலைமகளுடன் ஆனந்தக்கூத்தாடிப்பழை யபடி பஞ்சபூதங்களையும் பிரமா, விஷ்ணுமுதலானவர்களையும் உண்டா க்கத்திருவுளம்செய்து, சகலலோகமும் ஒடுங்கியகாலத்திலும் தன்காவலில் சற்றுந் தளராதோங்கும் காஞ்சிமாநகரத்தில் சோதிலிங்கத் திருமேனி கொண்டெழுந்தருளித்தன்சத்தியினால்சகலலோகங்களையும் சராசரப்பொ ருள்களையும் படைப்பித்தார். அந்தச்சோதிலிங்கதரிசனம் செய்தவர்கள் பரமானந்தபோக வீடு பெறுவார்கள். பிரமதேவன் சரசுவதியுடன் அந்த இடத்தில் அகோரமானதவம்செய்து அந்தக்கடவுள் அருளால் அகி லலோகங்களையும் படைக்கும் திறம்படைத்தோங்கினான். பூர்வம் ஒரு பிரமகற்பத்திலே நாரயணன் திருப்பாற்கடலில் அழுந்தும் மந்தரமலை யை ஆமையாகிமுதுகுகொடுத்துத்தாங்கி, அந்தக்கடலைக்கடைந்து அமுத ம் எடுத்துத் தேவர்களுக்குக்கொடுத்து இறுமாப்படைந்து, அகிலலோக மும் அதல சுதலமாகும்படி அந்தக் கடலைக் கலக்கும்போது உயிர்க ளெல்லாம் பயமில்லாமல் வாழும்பொருட்டுப் பைங்கிளிபோலும் பார் வதிபாகனாகிய சிவபெருமான் அந்தக்கடலை அணுகி அந்தக் கச்சபத் தின் (ஆமையின்) உயிரைப்போக்கி அதன்மேல் ஓட்டைக்கழற்றிவிரை ந்தெடுத்துத்தான் அணிந்திருக்கும் தலை மாலையின் நடுவில் அறிகுறியா கக்கோத்து அணிந்துகொண்டார். இப்பால் அந்தநாராயணன் இந்தக் குற்றந்தீர்ந்து ஈடேறும் பொருட்டுப் பூலோகத்திலே சிவபுரம் என்று சொல்லும்படியான காஞ்சிமாநகரத்தில் விளங்கும் சோதிலிங்கத்தை வழிபட்டு மெய்யன்புடன் மேன் மேலும் பிரார்த்திக்கையில், செம்ப

வளம்போற் சிவந்துவிளங்கும் சடாமுடியுடைய சிவபெருமான் ரிஷப வாகனத்தின்மேல் காட்சிகொடுத்தருளக்கண்டு, கண்ணீர் சொரிந்து கதறிப்பதறிக் கங்குகரைகாணுத காதலுடன் அடிக்கடி விழுந்து பணிந்து புகழ்ந்து போற்றி ஆண்மையனே! ஆருயிர்த்தலைவனே! அழகியகண்ணுளா! உன்திருவடியில் நிலையாகவைக்கும் பத்தியும்வைகுண்டத்தில்மாருமல்வாழும் வாழ்வும் இன்றுதொட்டு இந்தச் சோதிலிங்கத்திற்குக் கச்சபேசம் என்னும் திருநாமமும் தேவர்கள் எல்லாம் தொழுது செல்லும்படி தேவரீர் பார்வதி தேவியாருடன் இந்த இலிங்கத்தில் எந்நாளும் இனிதுவாழ்ந்திருத்தலும் இந்தத்தலம் அந்தக்காசியில் உள்ள அவிமுத்தேசத்தைப்பார்க்கிலும் அதிகசிறப்படைந்திருப்பதும் ஆகிய இவ்வரங்களை அடியேனுக்குக் கொடுத் தருள வேண்டுமென்று வேண்டுதலும் வேண்டியதை வேண்டினோர்க்கு வேண்டியபடி விரைந்து கொடுக்கும் சிவபெருமான் மனமகிழ்ந்து அவ்வரமெல்லாம் கொடுத்தருளி அந்தச் சோதிலிங்கத்தினிடமாக மறைந்தருளினுர்.

அன்றுதொட்டு எந்நாளும் அந்தக்காஞ்சிமாநகரத்தைவிட்டு நீங்காமல்வீற்றிருக்கும் கொன்றைப்பூமாலை அணிந்தவராகிய கச்சபேசனைக்கும்பிடுவதற்குச் சென்றவர்களும், தரிசனம் செய்தவர்களும், தியானம்செய்தவர்களும் ஆகிய எல்லாரும் பாசங்கழிந்து பதியுடன் இரண்டறக் கலந்து பரமானந்தபோகம் பெறுவர்.

துர்க்கையும் சாத்தனும் சூரியனும் வயிரவமூர்த்தியும் விநாயகமூர்த்தியும் ஆகிய ஐவரும் கச்சபேசனுடைய சீர்பாத கமலங்களைப் பூசித்து அவர்சந்நிதானத்திலேயே வீற்றிருந்து எதற்கும் அஞ்சாத கணங்களுடன் அந்தக்காஞ்சிமாநகரத்தைக்காக்குந்தொழிலை மேற்கொண்டிருக்கிறுர்கள்.

அந்தணர்களே! கச்சபேசத்தின் மேற்கில் செந்தாமரைப் பூவில் வாழ்ந்தருளும் திருமகள் மணுளனுகிய திருமால் துதிசெய்து பேறுபெற்ற சத்தியவசன விநாயகக்கடவுள் இருக்கின்றுர். அந்தச்சத்தியவசன விநாயகக்கடவுளை வணங்கி வாழ்த்துகிறவர்கள் யாதொரு இடையூறும் இல்லாமல் இம்மையிலேயே வேண்டும்போக போக்கியங்களைப்பெற்று இனிது வாழ்வார்கள்.

சத்தியவசன விநாயகர் தாண்மலர்போற்றி.

கச்சபேசன் கனைகழல்போற்றி.

பதினேழாவது.

## சகோதர தீர்த்தப்படலம்.

வெள்ளிப்போர்வை போர்த்தாற்போல் விளங்கும் விபூதியின் வெள்ளொளிக்கிரணம்வீசும் திருமேனியுடையவர்களே! கச்சபாலயத்தின் மகிமை சொன்னோம். இப்பால் ஆணவமலம் காமியமலம் மாயாமலம் என்னும் மும்மலங்களையும் போக்கி முத்திச் செல்வங் கொடுத்தருளும் அந்தக்கச்சபேசத்திற்கு மேற்கில் உள்ள சகோதர தீர்த்தக்கரையில்சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் ஸ்தலங்களின் பெருமைசொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

சத்திய விநாயகர் சந்நிதானத்திற்குத் தெற்கில் மாண்டகன்னிமுனிவன் மாண்டகன்னீசனை ஆகமவிதிப்படி பூசித்து வணங்கி வாழ்த்திவருகையில், சிவபெருமான் காட்சிகொடுத்தருளி, மாண்டகன்னிமுனிவனே! உனக்குவேண்டும் வரம் யாது? என, ஐயனே! மறுமையில் அநுபவிக்கும் அரம்பையர் போகத்தை இம்மையிலேயே அடியேன் அநுபவிக்கக்கருணை செய்யவேண்டும் என்றுவேண்டுதலும், அந்த வரங்கொடுத்து அந்த இலிங்கத்தினிடமாக மறைந்தருளினர்.

இப்பால் அந்தமாண்டகன்னி முனிவன் சிவாநுக்கிரகத்தால் அரம்பையர்களில் ஐந்து பெயரை அடைந்து சகோதர தீர்த்தக்கரையில் ஒரு அலங்காரமாளிகை கட்டி, அந்த அலங்கார மாளிகையில் தங்கித் தேவேந்திரனும் வெட்கிப்போம்படி நெடுங்காலம் அந்த மாதர்போகத்தை அநுபவித்து, வெறுத்து, எக்காலத்திலும் எவராலும் வெறுக்கப்படாத அகண்ட பரிபூரணனந்த முத்தியில் ஐக்கியமானன். அந்தத்தீர்த்தம் பஞ்ச கன்னியரால் நீராடப் பெற்றமையால் பஞ்சகன்னியர் தீர்த்தம் என்று சொல்லப்படும். வண்டுகள் முழங்கும் மாலைசூடிய கூந்தலையுடைய மாதர்கள் செவ்வரிபடர்ந்த கண்கள் சிவக்கவும், குடம்போல் பருத்திருக்கின்ற பயோதரங்கள் செழிக்கவும், வளையல்கள் ஒலிக்கவும், ஆடப்பெற்ற அந்தத்தீர்த்தத்தின் கரைமேல் மழுவேந்து கையனுகிய மாண்டகன்னீசன் வீற்றிருக்கும் ஆலயத்திற்கு மேற்கிலே வன்னீசம்என்று ஒரு ஸ்தலமிருக்கின்றது. அதன்வரலாறு சொல்லுகிறோம் கேளுங்கள். அக்கினிபகவானுக்கு முத்த சகோதரர்கள் மூவர் இருந்தார்கள். எதற்கும் அஞ்சாத ஆண்மை யுள்ளவர்களாகிய அந்த மூன்று பெயரும் அமுதம் சுமக்கமாட்டாமல் மாண்டுபோனர்கள். அக்கினிபகவான் அவர்கள்

மாண்டுபோனதைப் பார்த்து இனி நான் என்ன செய்வேன். எனக்கும் இந்த இடர்வருமே என்று ஏக்கமடைந்து, மகா சமுத்திரம் போன்ற பஞ்சகன்னியர் தடாகத்தின் உள்ளாகமறைந்து, அதைநோக்கித் தடாகமே! சகோதரர்களைப் பறிகொடுத்த எனக்கு நீயே சகோதரம். என்னைக் கைசோரவிடாமற் காப்பாற்று. என்றுசொல்லி அவ்விடத்திலேயே மறைந்தபடி வாசஞ்செய்துகொண்டிருந்தான். அன்றுதொட்டு வண்டுகள் முகேர் என்று பாயும் அந்தத்தடாகம் சகோதர தீர்த்தம் (ஒக்கப் பிறந்தான் குளம்) என்று சொல்லப்பட்டது. அக்கினிபகவான் அப்படி வாசம்செய்துகொண்டிருக்கையில், தேவர்கள் அந்த அக்கினிபகவானை எங்கும் தேடிக்காணுமல் திகைத்து, அங்கேவந்து சேர்தலும், அந்தத்தடாகத்தில் இருக்கின்ற மீன்கள் அக்கினிபகவான் அங்கே மறைந்திருக்கிறதை அவர்கள் அறிந்துகொள்ளத் தெரிவித்தன. ஆகவே அக்கினிபகவான் அதிக கோபங்கொண்டு அந்த மீன்களைப்பார்த்து மீன்களே! அடைக்கலமாக வந்து அடுத்த என்னைக் காட்டிக்கொடுத்தபாவத்தினுல் நீங்கள் தூண்டில்முள்ளினுல் மாண்டுபோகக்கடவீர்கள், என்று சாபங்கொடுத்துக்கார்மேகத்திலிருந்து தோன்றும் மின்னல்போல் வெளிப்பட்டுத் தன்னைவேண்டி அழைக்கின்ற தேவர்களைப்பார்த்துத் தேவர்களே! நீங்கள் முந்தி நடவுங்கள். இதோ உங்கள் பின்னுலேயே நான்வருகின்றேன் என்று சொல்லிச் செந்தாமரை மலர்மணம் வீசும் அந்தச்சகோதர தீர்த்தக்கரைமேல்வன்னீசனைஸ்தாபித்து, ஆகமவிதிப்படி அருச்சனைசெய்து, அந்தவன்னீசனுடையஅநுக்கிரகத்தால் தேவாமிர்தமெல்லாம் சுமக்கும் திறம்பெற்ருன். இந்தப்பிரகாரம் அக்கினி பகவான் தன் தமையன்மார் மூவர் சுமக்கமாட்டாமல் தளரும்படியான அமுத மெல்லாவற்றையும் தான் ஒருவனே சுமக்கும் திறம்பெற்றுத் தேவர்கூட்டத்துடன் கலந்து சென்ருன். மேருவை வில்லாகவளைத்துமுப்புரங்களைச்சுட்டெரித்த எமது பரமவிதாவாகிய வன்னீசனைத் தஞ்சமாக அடைந்து அன்புமிகுந்து வந்தனை வழிபாடு செய்யப் பெற்றவர்கள் ஆண்மையுள்ளவர்களாகி ஆனந்தவீடு பெறுவார்கள்,

வன்னீசன் மலரடிபோற்றி.

(சவுனகீசம்.)

யாம் இப்பொழுது சொல்லிய வன்னீசத்திற்கு மேற்கில் சவுனக முனிவன் சவுனகீச்சரம் என்னுந்தலத்தில் நீலகண்டனுகிய சிவ பெருமானை ஆவாகனம் செய்து ஆகமவிதிப்படி அருச்சனைபண்ணி ஆணவாதி மலங்களை அகற்றிப் பேரின்பவீடு பெற்ருன்.

அந்தத் தலம் சவுன கீச்சரம் என்று சொல்லப்படும்.

சவுன்கீசன் தாண்மலர் போற்றி. மாண்டுகன்னீசன் மலரடி போற்றி.

## பதினெட்டாவது.

## சுரகரீசப் படலம்.

சிவஞானச் செல்வர்களே! ஆனந்தத்தாண்டவம் புரிந்தருளும் சிவபெருமான் சகோதர தீர்த்தக்கரையில் வீற்றிருக்கும் மாண்டுகன்னீசம், வன்னீசம், சவுனகேசம் என்னும் ஸ்தலங்களின் மகிமை சொன்னோம். இனி அந்தச் சவுனகேசத்தின் வடக்கில் சிறந்து விளங்கும் சுரகரீசத்தின் பெருமை சொல்வோம். கேளுங்கள், என்று சூதமா முனிவர் சொல்லத் தொடங்கினர்.

அதிரூப சுந்தரியாகிய திருமகள் மார்பன் முதல் சகல தேவர்களுக்கும் அமுதம் அளித்ததாய்க் குகைகள்தோறும் முனிவர்கள் தங்கி யோகஞ்செய்யப்பெற்ற மந்தரமலை என்று ஒருமலையுண்டு. அந்த மலையைச் சூழ்ந்திருக்கும் குகைகளில் யாளிகள் படுத்துத் தூங்குவது, தேவர்கள் கூடி அந்தமலையை மத்தாக நாட்டிக் கடலைக் கடைந்தபோது உண்டாகிய அமுதம், அந்த மத்தின் இடையிடையே தொத்திநிற்குந் தன்மைபோலும். தேவர்களால் அமுதம் பெறுமல் வஞ்சனை செய்யப்பட்ட அசுரர்கள் வேறுபட்டுத் திருப்பாற்கடலைக்கடைந்து அமுதங் கண்டெடுப்பதற்கு அந்தத்தேவர்களுக்குத் தெரியாமல் அந்த மலையைப்பெயர்த்தெடுப்பதுபோல் கரடிகள் கண்டோர் அஞ்சும்படி அங்குள்ள புற்றுகளைப் பறித்துத்தோண்டுதல் செய்யும். அசுரர்கள் அந்த மலையைப்பெயர்த் தெடுக்க வந்ததை அறிந்து, அவர்கள் பெயர்த்தெடுப்பதற்கு அசாத்தியம் ஆகும்படி திருமால் அந்த மலைமேல் பள்ளிகொண்டிருப்பதுபோல், கார்மேகங்கள் படிந்துகிடக்கும். இப்படிப்பட்ட அபூர்வமான அலங்காரத்துடன்பல வளம்பெற்று, மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் புகழ்ந்து பேச, ஓங்கி உயர்ந்து, மணமலர்ச்சோலை சூழ்ந்து மேகத்தை மேலே போர்த்த போர்வைபோல் போர்த்துக் கொண்டு, நவரத்தின வொளி வீசும் சிகரத்தின் மேல் வெள்ளைவஸ்திரம் தரித்தாற்போல் ஆகாயகங்கை சூழ்ந்து விளங்கவும், தன் கீர்த்தி எங்கும் பரவவும், மலை அரசாய் வசிக்கும் அந்த மந்தர மலையிலே ஆன்மகோடிகள் அனைத்தும் உய்யும்பொருட்டு அற்புதத் திருமேனிகொண்டு, படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து தொழில்களையும் திருவிளையாட்டாகக் கொண்டு மகிழ்ந்தருளும் சிவபெருமான், சுப்பிரமணியக் கடவுளைத் தந்தருளும் பொருட்டு, மலையரசன் மகளைத் திருமணம் புரிந்தபின்பு, அந்த மலைமகளுடன் எழுந்தருளி அந்த மலையினிடத்து அதிகவிசித்திரமாய் விளங்கும் அந்தப்புரத்தில் தங்கி, ஆனந்தக் கலவி நடத்தத் திருவுளம்

செய்து வண்டுகள் முழங்கும் கூந்தலையுடைய மலைமகளை மகிழ்ந்து, திருமார்புறத் தழுவிக், கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறிந்து, நெடுங்காலம் போகமூர்த்தியாய்ப்போகம் அநுபவிக்கும்போது, தேவர்கள் அறிந்து அஞ்சிப்பயந்து அந்த மலைமகள் வயிற்றில் கர்ப்பம் உண்டாவதற்குமுன் சின்னமாக்கும்படி அக்கினிபகவானுக்குக் கட்டளை யிட்டார்கள். கட்டளையிட்டவுடன், அக்கினிபகவான் அவ்விடத்திற் போய், எம்பெருமான் கோவிலுக்குமுன் எம் பெருமாட்டிக்கு வாகனமாகிய சிங்கம் வாசம் செய்வதைப்பார்த்துப் பயந்து மீண்டு வந்து, தேவர் கூட்டத்தை அடைந்து, கர்ப்பசின்ன மாக்கிவிட்டு வந்தாயோ? என்று கேட்ட தேவர்களுக்கு நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லி, எனக்குப் பயமாயிருக்கிறது. என்னால் இலவலேசமும் முடியாது. நீங்களே அங்கே போய் அழித்தல் செய்யுங்கள் என்று சொல்லிவிட்டான். பிரம விஷ்ணு முதலான தேவர்கள் எல்லாரும் அந்த வார்த்தையைக் கேட்டு மனம் நொந்து வருந்தி, மந்த்ரமலைச்சாரலை அடைந்து, பூமியில் விழுந்து பணிந்து, சுருதி முறையாகத் துதித்து நின்று, ஓலமிடுவதை உணர்ந்து, எம்பெருமான் இன்பக் கலவியை இடையில் விட்டுத் திகம்பரனாய் அந்தத் தேவர்கள் இருக்குமிடத்திற்கு எழுந்தருளினான். எழுந்தருளிய காமதகனனாகிய சிவபெருமானைக் கண்டு, கடலில் மடைவிண்டதுபோல் காதல் பெருக, அரி அயன் உருத்திரர்கள் தேவர்கள் மருத்துவர் சாத்தியர் முதலியயாவரும் அன்புகூர்ந்து, ஆநந்த பரவசராகிக், கைகூப்பித் தொழுது, ரிஷபக் கொடிதாங்கி, மழுவாயுதம் ஏந்தி, மாயையால் மயங்கும் வஞ்சகருடைய மனதிற்கு எட்டாத மகாதேவா! உன் பாதாரவிந்தங்களை அமிர்தத்தால் பூசைசெய்து நாங்கள் அமிர்தர் ஆனோம். நல்ல மலர்கொண்டு பூசித்துச் சுமனர் என்னும் பெயர்பெற்றோம். கடல் சூழ்ந்த உலகத்திலே ஒரு கிராமாதிபதியை அடுத்தவர்களும் குறைவில்லாமல் மகிழ்ந்து வாழ்கின்றார்கள் என்றால், அகிலலோக நாயகனாகிய தேவரீரைத் தஞ்சம் என்றடுத்த அடியேங்களுக்குக் கொஞ்சம் ஆயினும் குறை உண்டாகுமோ? அகப்பற்று புறப்பற்று என்னும் இருவகைப் பற்றுகளையும் பற்றறத்துறந்த பெரியோர்களுடைய இதயார விந்தத்தில் இனிது வீற்றிருக்கும் தேசோமயானந்தனே! சரணம் சரணம் துஷ்டநிக்கிரகம் செய்தருளும் சூலபாணியே சரணம்! உன் மலரடிகளே சரணம்! நாங்கள் எல்லாரும் உனக்கே அடைக்கலமானோம். கண்டுகொள்க, என்றுதாழ்ந்து துதித்தலும், எம்பெருமான் அவர்கள் எல்லாரையும் அருள் சுரந்து இனிது நோக்கித் தேவர்களே! உங்களுக்கு வேண்டுவனவற்றைக் கேளுங்கள், உடனேயாம் தருகின்றோம், என்று திருவாய்மலர்ந் தருளுதலும், திருமால் முதலானோர் கட்டளையின்படி பிரமதேவன் தொழுது துதிசெய்து எம்

பெருமானே! மலையரசன் மகள் வயிற்றில் கர்ப்பம் வாய்ப்பது வேண்டாதவர்களாய் இந்தத் திருமால் முதலிய தேவர்கள் எல்லாரும் தங்களைத் தரிசிக்க வந்தார்கள். நாங்கள் இனிச்செய்வ தறியோம், ஆதலின் தங்கள் சித்தம் எங்கள் பாக்கியம் என்று விண்ணப்பம் செய்தலும், தனக்கென்று ஒரு பிரயோசனத்தை இலவலேசமும் விரும்புதல் இல்லாதவனும் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு ஆனந்தக் கூத்தாடுபவனும் ஆகிய சிவபெருமான் அந்தத் தேவர்களைப் பார்த்துத் தேவர்களே! உங்கள் கருத்து இது ஆயின் உருக்கிய முத்துப்போல் விளங்கும் இந்தச்சுக்கிலத்தை உட்கொண்டு விடுங்கள் என்று சொல்லியவுடன் அக்கினிபகவான் அங்கையால் ஏற்றுப் பல்லாயிரம் வருஷம் பல்லாயிரம் சூரியர் போல் தோன்றி விழுகின்ற அந்தச் சுக்கிலம் எல்லாவற்றையும் உண்ணவே, தேவர்கள் எல்லாரும் கருப்பம் அடைந்து, பயந்து நடுங்கிச் சுரத்தினாற் பீடிக்கப்பட்டார்கள். வாளாயுதம்போல் பிறழ்ந்து, நீண்டு மதர்த்துச் செவ்வரி பரந்து யமனைக் கீழ்ப்படுத்தி மை அணிந்து குடங்கை போல் அகன்றிருக்கும் கண்களையுடைய மாதர்களைச் சேனையாகக்கொண்ட மதவேடனை நீறாக்கிய வீராதி வீரனாகிய சிவபெருமான் கருணைகூர்ந்து, தன்னை மறுபடியும் தாழ்ந்து வேண்டும் தேவர்களைநோக்கி, முதலையைக் கொன்று யானையைக் காத்த திருமால் முதலிய தேவர்களே! நீங்கள் தொன்றுதொட்டுத் தொழுது துதிசெய்துவருங் காஞ்சிமாநகரத்திலே சுராக்கன் என்னும் அசுரனைத் தொலைக்கும்பொருட்டு நாம் ஏற்படுத்திய சுரகரீசம் என்னும் தலம் நமக்கு மிகவும் பிரியமானது. அந்தச் சுரகரீசத்தின் பக்கத்தில் சுரகரதீர்த்தம் என்று ஒரு தீர்த்தம் உண்டு. அந்த நீரிற் கலந்து ஆடப்பெற்றவர்கள் பாவமெல்லாம் பறந்தோடிப் போய்விடும். அந்தத் தீர்த்தம் ஆடுவதற்குப் பானுவாரம் மிகச் சிறந்ததாம். நீங்கள் எல்லாரும் அந்தச் சுரகரீசத்தை அடைந்து அந்தச் சுரகரதீர்த்த நீராடி எம்மைத் தொழுது துதிப்பீர்களானால், இந்தச்சுரநோய் உங்களைவிட் டொழிந்துபோம். சுரம் தீர்ந்தபின்பு அவ்விடம்விட்டு நீங்கி மேருமலையையடைந்து, அந்த மலைச்சாரலிலே நீங்கள் கொண்டிருக்கும் கர்ப்பத்தை வெளிப்படவிட்டு விடுங்கள், என்று விடைகொடுத்தலும், மாயவன் முதலான தேவர்கள் எல்லாரும் மனமகிழ்ந்து, மகிமைபெற்றோங்கும் காஞ்சிமாநகரத்தைச்சேர்ந்து, சுரகரீசத்தைக் கண்டவுடன் மகிழ்ந்து, தெண்டனிட்டு, நித்தியாநுஷ்டானங்களை முடித்துத் தீண்டினோர் பிறவிபோக்கும் சுரகர தீர்த்தநீராடிச், சுரகரீசனைப் பூசித்துத் தொழுது துதிசெய்து, சுரநோய் தீரப்பெற்றார்கள். சுரநோய் தீர்ந்தபின்பு, அவ்விடம் விட்டு மேருமலையைச்சேர்ந்த வுடன் அவர்கள் கர்ப்பநோயும் கழிந்தது. அந்தக்கர்ப்பமானது அந்தத் தேவர்கள் வயிற்றிலிருந்து தோடி

சூரியப் பிரகாசத்துடன் பரவித்தோன்றி, மேருமலை முழுமையும் செம்பொன்னிறமாக்கிக், கங்கை நதி யூடு தவழ்ந்து சென்று சரவணப் பொய்கையிலே தங்கித் தேவர் மாதவர் எல்லாரும் உய்யும்படி திருவருள் சுரந்து, சோதிமயமான வேலாயுதமேந்திய ஆறுமுகக் கடவுளாக அவதாரம் செய்தது.

சுரநோய் தீர்த்துத் தேவர்களைக் காத்தருளிய சுரகர தீர்த்தமாடி வேண்டும் வரங்களைவிரைந்துகொடுக்கும் சுரகரீசனைவணங்கி, வாழ்த்தும், மெய்யன்புடையவர்கள் எல்லாரும் கடல்சூழ்ந்த இந்த உலகத்திலே நோயற்ற வாழ்வினராகி மறுமையில் நித்தியானந்த முத்தி பெறுவர்கள்.

☞ இந்தப் படலத்தில் சில கவிகள் சித்திரக்கவிகளாய் உரையிடப்பட்டிருக்கின்றமையால், விருப்பமுடையவர்கள் அவைகளைப் புராணத்திற் கண்டுகொள்ளக்கடவர்.

சுரகரீசன் துணையடியே துணை.

---

பதிற்றென்பதாவது

## தான்றோன்றீச்சரப்படலம்.

மனேலயச் செல்வராகிய மாதவர்களே! சந்திர சேகரரும் வளைத் தழும்புடையவருமாகிய சிவபெருமான் வீற்றிருக்கும் சுரகரீசத்தின் மகிமை சொன்னேம். இனி நீராடினோர் பிறவியைப் போக்கும் சுரகர தீர்த்தத்தின் தென்பக்கத்தில் ஏழைகளுக்கு இரங்கும் தான்றோன்றீச்சரத்தின் பெருமை சொல்வோம். கேளுங்கள், என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

ஆன்மாக்கள் தரிசித்து ஆணவம் முதலான பாசத்தை அற்றுப் பரகதிகாணும் பொருட்டுப் பரமசிவம் தானே தோன்றினபடியால், அந்தத்தலம் தான்தோன்றீச்சரம் என்று சொல்லப்படும். ஒரு சிறுவன் அந்தத் தான்தோன்றீச லிங்கத்தைத் தொழுது தீம்பால் உண்ணப்பெற்றான். அதையும் சொல்லுகிறோம் கேளுங்கள். ஞான சிரோமணியாகிய வியாக்கிரபாத முனிவர் மேன்மேலும் இன்பந்தரும் தவத்தையே பொருளாக நாடிய வசிட்ட முனிவர் தங்கையைத் திருமணம் புரிந்து பெற்றெடுத்த சிறுசதங்கைக் கால்களை யுடைய உபமன்னிய முனிவன், தன் மாமனாகிய வசிட்ட முனிவர் ஆசிரமத்தில் தங்கிக், காமதேனுவின் பாலுண்டு, களித்து வாழும் நாட்களில், ஒருநாள் தன் பிதாவாகிய வியாக்

கிரபாத முனிவரும் தாயாரும் வந்து, புத்திரனை அழைத்துக் கொண்டு, தங்கள் இருப்பிடத்திற் போய் இருக்கும் போது, அந்தச் சிறுமுனி தீம் பாலுக்கு ஆசைப் பட்டுத் தாயாருடைய பாதங்களைப் பணிந்து வேண்டியதனால், அவள் அரிசி மாவைத் தண்ணீரில் குழைத்து இந்தப் பாலைக் குடி என்று கொடுத்தாள். அம்முனிவன் அதை வாங்கிக் குடித்து இது பால் அன்று. தண்ணீரொன்று தள்ளிவிட்டுத் தன்மாமனாகிய வசிட்ட முனிவர் மாளிகையில் தான் உண்டபாலை நினைத்து நினைத்துத் தேம்பித் தேம்பி, அழுதழுது, வருந்துவதைப் பார்த்துப், பெற்றதாய் ஆனவள் மனம் வருந்திச் சொல்ல லானாள். அப்பா! நாங்கள் தவசிகள்; அதல்லாமல் முன் பிறப்பில் சிவபெருமான் சீர்பாத கமலங்களைச் சிந்தை செய்யாத பாவத்தால் தரித்திரரா யிருக்கின்றோம். உன் ஆசையைப் போக்கும் பசுவின் பால் எவ்விடத்தில் பெறுவோம். ஆதலின் உனக்குப் பால் வேண்டு மானால் முக்கண் மூர்த்தியாகிய சிவபெருமானை வந்தனை வழிபாடு செய்து பெற்றுக் கொள். எவ்விடத்தில் பூசைசெய்யலாம் என்னில், காஞ்சிமா நகரத்தைச் சேர்ந்து, கடவுள் நாயகனாகிய கண்ணுதல் மூர்த்தியைப் பூசைசெய்து, உன் ஆசையினும் அதிகமாகப் பெற்றுக் கொள், என்று சொல்லிய தாயைப் பணிந்து, விடை பெற்று மீண்டு, காஞ்சிமாநகரத்தை அடைந்து, சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூன்றுலகமும் புகழ்ந்து பேசும் தான்றோன்றீச்சரத்தில் அமர்ந்தருளும் சுயம்பு லிங்கத்தைக் கண்டு, மனங் குழைந்து நெக்குருகி, அணைகடந்து அன்பு பெருக; "அடியேன் உய்ந்தேன்" என்று தாழ்ந்து, பணிந்து, எழுந்து ஆடிப்பாடிச் சிவபெருமானைப்பூசித்து, அவ்விடத்தில் தங்கி அமரர்களும் அதிசயிக்கும்படி அருந்தவம்செய்துகொண்டிருக்கும்போது, அந்தச் சுயம்பு லிங்கத்தில் வீற்றிருக்கும் சிவபெருமான் மேக வாகனனாகிய தேவேந்திரனைப் போல் வடிவங் கொண்டு வந்து, அந்த முனிவனுடையபத்தியைச் சோதித்துப், பின்பு தேவேந்திரனைப்போல் வந்தவர் தானே என்பதை விளங்கக் காட்டித் திருமுகமலர்ந்து, திருப்பாற்கடலை அழைத்து, உண்ணக் கொடுத்துக் கற்பக விருட்சம், காமதேனு, சிந்தாமணி, சங்க நிதி, பதுமநிதி, முதலியன வெல்லாம் தன்னிடத்தில் அன்பு வைத் தொழுகும் அடியவர் ஏவலின்படி தொண்டு செய்யக் கட்டளை கொடுத்தருளும் அந்தக் கடவுள் அந்தமுனிவனுக்குப்பரி பூரணஞானமும் என்றும் இளமையாகவே இருத்தலும், மரணமில்லாமையும் வரமாகத் தந்து இன்னும் உனக்கு வேண்டுவதைக் கேள் எனலும், அந்த முனிவன் தாழ்ந்து பணிந்து எம்பெருமானே! அடியேனுக்கு உன்திருவடியில் மாறாத பத்தி வேண்டும். மேலும் தேவரீர் இந்தச் சுயம்பு லிங்கத்தில் எந்நாளும் வீற்றிருந்து தரிசித்தோர் பாவங்களைப் போக்கிப் பரகதி

கொடுத்தருள வேண்டும், என்று நின்று வேண்டுதல் செய்ய, அந்தவரங்களையும் கொடுத்தருளிப் பார்வதி தேவியாருடன் அந்த இலிங்கத்தினிடமாக மறைந்தருளினர். இப்பால் அந்த முனிவன் அந்தநாள் முதல் அறிவுடையோர் யாவர்க்கும் ஆசானாகி, வெற்றி அடைந்தோங்கும் ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமானுக்குப் பிரியமான சைவசமயத்தை உலகத்தில் உள்ள எல்லாருக்கும் விளங்க உபதேசித்துக் கொண்டு மேம்பட்டிருந்தான். பிருகு மாமுனிவன் இட்ட சாபத்தால் பிறந்து இறந்துபோகும் திருமால் கண்ணனாய் அவதரித்தபோது, மானிடதேகம் மிகவும் அசுத்தமானதென்று அவ்விடத்தில் வந்து சேர்ந்து, அந்த உபமன்னிய முனிவரிடத்தில் சிவதீக்ஷை பண்ணிக்கொண்டு தேகசுத்தி பெற்று, பாண்டவர் தூதன் என்னும் பெயருடன் அவ்விடத்திலேயே அந்தக் குருமூர்த்தியை வந்தனை வழிபாடுசெய்து வாசம் பண்ணிக் கொண்டிருந்தான். அன்று தொட்டு உலகளந்த பெருமாளை "நிறை திருநீற்றுக் கோலம் பூண்டு உயர்ந்த சைவன்" என்று உயர்ந்தோர் எல்லாரும் வியந்து கொண்டாடுவார்கள்.

தான்றோன்றீசன் தாண்மலர் போற்றி.

---

இருபதாவது

## அமரீசப்படலம்.

உலக ஆசையை ஒழித்த உத்தமர்களே! வரிகளையுடைய வண்டுகள் தெத்தே என்று பண் பாடத் தேன்சொரியும் மணமலர்ச் சோலை சூழ்ந்த தான்றோன்றீசரத்தின் மகிமை சொன்னோம். இனி முத்துப்போல் விளங்குந்தண்ணீர்த்துறையை யுடைய அந்தத்தான்றோன்றீச்சரத்தின் கீழ்த்திசையில் முப்பத்து முக்கோடி தேவர்களும் பூசித்துப் பேறுபெற்ற அமரீச்சரத்தின் பெருமை சொல்வோம். கேளுங்கள், என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

முன்னொரு காலத்திலே வண்டின் கூட்டங்கள் முழங்கப் பெருத மணமாலை சூடிய தேவர்களும், திதி புத்திரராகிய அசுரர்களும், அக்கினிபோல் சீறி எதிர்த்து, நரிகளும், பேய்களும், காகங்களும், பருந்துகளும், கழுகுகளும் சூழும்படியான போர்க்களத்தில் நின்று போர் செய்ய லானார்கள். அவர்கள் பலயுகம் கழிந்தும் விடாமல் சண்டை செய்தமையால், அவர்கள் செய்யும் சண்டைத் திறத்தைப் பார்க்கும் பொருட்டுச் சிவபெருமான் பார்வதிசமேதனாய் உயர்ந்த ஆகாயத்தினிடமாகத் தங்கியிருந்தார். இருதிறத்தாருக்கும் வெற்றியும் தோல்வியும் உண்டாகாதபடி

மேன்மேலும் சண்டை வளர்ந்தது. அதைக்கண்டு அமுதம் போன்றவளாகிய பார்வதி தேவி, என்னையும் அடிமையாகக் கொண்டருளும் சிவபெருமான் திருமுகத்தைப் பார்த்துப், பதி ஞானத்திற்கே அன்றிப் பாச ஞானத்தால் அறிய வொண்ணாத பரஞ்சோதியே! இரண்டு கட்சியராகிய இவர்களில் ஒருகட்சிக் காரர்கள் வெற்றிமாலை அணியக்கடவர் என்று திருவாய் மலர்ந்தருளுதலும், சிவானுக்கிரகத்தால் அசுரர்கள் ஆண்மையுள்ளவர்களாகித் தேவர்களை வென்று கீழ்ப்படுத்தினார்கள். அது கண்டு உமையவள் ஐயோ! என்று இரங்கி எம்பெருமானே! தேவர்கள், வெற்றிமாலை அணியக் கடவர் எனலும், சந்திரசேகரனாகிய சிவபெருமான் தேவர்கள்மேல் கருணை வைக்க, உடனே தேவர்கள் திடங்கொண்டு, அந்த அசுரர்களை அழித்து, ஜயபேரிகை அடித்துப் படைகளத்தை விட்டு மீண்டு, தேவசபையைச் சேர்ந்து, அசுரரைப் பகைத்து அழித்தோங்கிய ஆண்மையுடன் அகமகிழ்ந்திருந்தார்கள். அப்பொழுது தேவேந்திரன் அகங்காரங் கொண்டு ஆ! எனது ஆண்மையை எடுத்துச் சொல்பவர் யார்? என்று தன்னைத் தானே புகழ்ந்து பேசினான். அப்படிப் புகழ்ந்து பேசிய இந்திரனை அக்கினி பகவானும், அந்த அக்கினி பகவானை யமனும், அந்த யமனை நிருதியும், அந்த நிருதியை வருணனும், அந்த வருணனை வாயுவும், அந்த வாயுவைக் குபேரனும், அந்தக் குபேரனை ஈசானனும், அந்த ஈசானனைப் பிரமதேவனும், அந்தப் பிரமதேவனை நாராயணனும், பகைத்துத் தங்கள் தங்கள் பேராண்மையைப் புகழ்ந்து பேசிப் பிணங்கிப் போராடுவதை நோக்கி, எம்பெருமாட்டி, எம்பெருமானைத்தொழுது, எம்பெருமானே! இந்தத் தேவர்கள் கொண்ட செருக்கு ஒழியும்படி திருவுளம் செய்க என்று வேண்டுதலும், பகைவருடைய நிணத்துடன் கலந்திருக்கும் சூலாயுதத்தை வலமாக ஏந்திப் பிரம விஷ்ணுக்கள் முதலான தேவர்களுடைய பிரேதம் அடர்ந்திருக்கும் இடுகாட்டிலே நடுராத்திரியிலே ஆனந்தக் கூத்தாடிச் சந்திரனைச் சடைமுடிமேல் தரித்திருக்கும் சிவபெருமான் கூட்டமாகக் கூடியிருக்கின்ற தேவர்கள் செய்யுங்கலகத்தைத் தவிர்க்கும் பொருட்டு, அந்தத் தேவர்களுக்குமுன் அழகிய வண்டுகள் விரும்பும்படியான மணமாலை சூடிய தோள்களையுடைய ஓர் இயக்க வடிவம் கொண்டுவந்து, ஒரு சிறு துரும்பை நட்டு, அவர்களுக்கு முன் இறுமாப் படைந்திருக்க, அப்படி இறுமாப்படைந்திருக்கும் அந்தக் கடவுள் நாயகனைத் திருமால் முதலிய தேவர்கள் எல்லாரும் பார்த்து, இவ்விடத்திலே நீ நாட்டிய இது என்ன? எங்களுக்கு முன் எவ்வளவும் அஞ்சாமல் தைரியங் கொண்டு நிற்கின்ற நீ யார்? சொல் என்று சொல்லிய சொல்லைக் கேட்டு, ஞானத்திற் சிறந்த தவசிகள் தங்கள் இதயார விந்தத்தினிடமாகக்கண்டு கொள்ளும்படியான

அந்தக் கடவுள் நாயகன் சொல்லலானன். உங்கள் ஆண்மையை அளக்க இங்கேவந்த நான் எவன் ஆனாலும் ஆகட்டும். உங்களுக்கு முன் அசையாமல் நாட்டிய இந்தச் சிறு துரும்பை இரண்டு துண்டாக்க வல்லவன் எவனே அவனே அசுரர்களை வென்ற வீரன் அறிந்து கொள்ளுங்கள் என்று சொல்லுதலும், தேவேந்திரன் திடீரென்றெழுந்து தன்கையில் ஏந்திய வச்சிராயுதத்தைச் சுழற்றி வீசி வீணே எறிந்து அந்தச் சிறு துரும்பை வெட்ட மாட்டாமல் அலுத்துப் போனன்.

மற்றும் அக்கினி பகவான் யமன் நிருதி முதலிய திக்குப்பாலகர் எழுவரும் தங்கள் பலம் முழுமையும் செலுத்தி, ஒரு சிறு துரும்பை அசைவிக்கும் திறம் இல்லாதவர்களாய் மனந்தளர்ந்து விடுதலும், உக்கிரங்கொண் டெழுந்த பிரமதேவன் வீசிய பிரமாஸ்திரமும் சக்கரபாணி வீசிய சக்கராயுதமும் கூர் மழுங்கிப்போய்விட்டன. இவ்வண்ணம் ஒரு சிறு துரும்பினல் வலி இழந்துபோன தேவர்கள் எல்லாரும் பயந்து ஆச்சரியம் அடைந்து நீர் யார் சொல்லும் என்று நயந்து கேட்டவுடன், இயக்க வடிவத்துடன் வந்த கடவுள் நாயகன் சடுதியில் மறைந்துபோனதினல் மனங்கலங்கித் திகைக்கும் அந்தத் தேவர்களுக்குமுன் பூர்வ திதேவி காட்சிகொடுத்தருளினள். காட்சிகொடுத் தருளிய கருணைப் பிராட்டியின் சீர்பாத கமலங்களைச் சேவித்துத் தேவர்கள் எல்லாரும் பேரன்புகொண்டு வந்தனை வழிபாடுசெய்து, தலைமேற்கூப்பிய கையுடன் நின்று, சகல லோகங்களையும் பெற்றெடுத்த தாயே! இயக்கவடிவங் கொண்டு வந்தவர்யார்? அறியாமையால் அவரை அவமதித்தோம். அவரை இன்னர் என்று தெரியச்சொல்லவேண்டும் என்று வேண்டுதலும், மலைமகள்சொல்லுகின்றள். தேவர்களே ! சரஸ்வதிக்கு நாயகனுகிய பிரமதேவன்முதல் சகல தேவர்களுடைய பதவிகளை நிலைபெறச்செய்பவன் எவன்? எப்பொருட்கும் ஆதாரமாகி எவராலும் தொழப்படுகிறவன் எவன்? எல்லாவற்றையும் படைத்துக்காத்து ஞானிகளுக்கு இன்பந் தருபவன் எவன்? அவனே இயக்கவடிவாகி வந்த அழகன் என்று அறிந்துகொள்ளுங்கள். சகலமும் தானய் விளங்குகிறவன் எவன்? ஒருவராலும் தன் உண்மை அறியப்படாதவன் எவன்? எவ்விடத்திலும் இருந்து எல்லாவற்றையும் அறிபவன் எவன்? உலகவியாபாரத்தை ஓயாமல் நடத்துகிறவன் எவன்? வேதாகம புராண சாஸ்திரங்களால் துதிசெய்யப்படுகிறவன் எவன்? அவ்வேதங்களாலும் அறியப்படாதவன் எவன் ? அவனே இயக்க வடிவாகி வந்த அழகன் என்று அறிந்துகொள்ளுங்கள்.

எவனுடைய திருநாமத்தை எண்ணினல்? எவன்பாதத்தைத் துதிசெய்தால்? எவனைத் தியானம் பண்ணினல்? எவன் அன்பர்களைச் சேவி

த்தால்? பாவங்கள் எல்லாம் பறந்தோடப் பரகதி கிடைக்கும். சச்சிதானந்தசொரூபி என்னும் உண்மை அறிவானந்த உருவாகி விளங்குகிறவன் எவன்? அவனே இயக்கர் பதியாகிவந்த அழகன் என்று அறிந்துகொள்ளுங்கள். ஒரு சிறு துரும்பினால் உங்கள் வலியை ஒழித்து மறைந்து போன அந்தக் கடவுள் நாயகனை நீங்கள் பற்றற்றுக் கண்டு தெளியாமற் போனீர்கள். தமக்கு மூலமாகிய மண்ணின் பலம் எவ்வளவோ அவ்வளவே அந்த மண்ணாலாகிய பாத்திரம் முதலியவைகளின் பலமாம். அது போல் எதற்கும் மூலகாரணன் ஆகிய அந்தக்கடவுள்சத்தியே அவனிடத்துண்டாகும் அனைத்திற்கும் உள்ள சத்தியாம். ஆதலின் அந்தச் சிறுதுரும்பை வெட்டாமற் போனீர்கள்.

தேவர்களே! இனி நீங்கள் பிழைப்பதற்கு உபாயம் சொல்வேன் கேளுங்கள்; நீங்கள் எல்லாரும் சோமசூரியாக்கினி என்னும்திரிநேத்திரதாரியாகிய சிவபெருமான், கம்பாநதியின் அதி சீதளமான திவலை வீசப்பெற்ற ஒரு மாவடியில் என்னை ஆட்கொண்டு மகிழ்ந்தருளும் காஞ்சிமாநகரத்தைச்சேர்ந்து, அவனது சரணமே சரணம் என்றுசரணமடைந்து தொழுதல்செய்யுங்கள் என்று உலகமாதாவாகிய உமையவள் மறைதலும், அப்பொழுது பிரமவிஷ்ணுக்கள்முதலிய தேவர்கள் எல்லாம் நமது அறிவு நன்றாயிருந்தது! என்று தங்களுக்குள் நாணம் அடைந்துஅவ்விடம் விட்டுப் புறப்பட்டுக் காஞ்சிமாநகரம் வந்து சேர்ந்து, திரிதசிச்சரன் என்னும் பெயரால் சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து, சிவபெருமானைப் பூசித்துப் பேராண்மையும் மற்றும் வேண்டிய வரங்களும் பெற்றுக்கொண்டார்கள். அந்தத் திரிதசிச்சரம் என்னும் திருக்கோயிலானது பார்வதி சமேதனாகிய சிவபெருமானுக்கு மிகவும் பிரீதியானதாம்.

திரிதசிச்சரன் திருவடிபோற்றி.

---

இருபத்தோராவது

## திருமேற்றளிப் படலம்.

நல்லொழுக்க முடையவர்களே! தேன் துளிக்கும் கற்பகப் பூமாலை சூடிய தேவர்கள் தொழுது பேறுபெற்ற அமரீசத்தின் பெருமை சொன்னோம். இனி உருத்திரர் முதலானவர்கள் அன்பு மிகுந்து தொழுது துதிசெய்த நூற்றுப் பதினெட்டுத் தலங்களின் மகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

மலவலி தீர்த்தருளும் அமரீசத்திற்குத் தெற்கே நெடுந்தூரத்தில் ஆகாயத்தை அளாவிய மதிலாற் சூழப்பட்ட காயாரோகணத்திற்கு மேற்கில் நூற்றுப் பதினெட்டுத் தேவர்கள் வந்தனை வழிபாடு செய்ய விளங்கும் நூற்றுப் பதினெட்டுத் தலங்கள் உண்டு. அந்தத்தலங்கள் பூர்வம் அண்டங்களைக் காக்கும் நூறு உருத்திரர்களாலும் சீகண்டன், வீரன், குரோதன் முதலான எண்மராலும் பூமியை ஆளும் அரசர் எண்மராலும் துதிக்கப்பட்டன. இகபர சுகங்களைக் கொடுக்கும் மேன்மையுள்ள அந்தத் தலங்களை எந்நாளும் தபசிகள் யாவரும் நேசித்துப் பூசிப்பார்கள். பெரும் புகழ் படைத்திருக்கும் அந்தத் தலங்களின் நடுவில் காணப் பெற்றவருடைய பிறவித் துன்பத்தைப் போக்கி முத்தியின்பம் கொடுக்கும் திருமேற்றளி என்று ஒரு தலம் உண்டு. பூர்வம் சேஷசயனனாகிய திருமால் இப்பொழுது யாம் சொல்லிய அந்தத் திருமேற்றளியை அடைந்து முருக்கம் பூப்போல் சிவந்திருக்கும் இதழையும் சிற்றிடையையுமுடைய காமாட்சி தேவியின் களப முலைச் சுவடு தோய்ந்திருக்கும் சிவபெருமானுடைய சாரூப பதவியை இந்தப் பூமியிற் பெற விரும்பித் தவம் செய்யத் தொடங்கினான். ஐம்புலன்களை அடக்கி அருள் வழியில் நின்று காமம், குரோதம், லோபம், மோகம் மதம், மாற்சரியம் என்னும் ஆறு பகையை அகற்றி விபூதி உருத்திராட்ச மாலைதரித்து, அசையாமல் உருத்திர மந்திரத்தை உருவேற்றி, இதயார விந்தத்தில் எம்பெருமான் திரு உருவை இடையறாது வைத்துச் செய்வதற்கு அருமையான தவம் செய்யும்போது, யமனை உதைத்தருளிய சிவபெருமான் கருணை கூர்ந்து, ரிஷப வாகனத்தின்மேல் எழுந்தருளி, எமது அடியவர்களில் மிகச் சிறந்தவனே! நீ தவம் செய்து வருந்தினாய், வேண்டியதைச் சொல் என்று திருவாய் மலர்ந்தருளவே அந்தத் திருமால் அளவில்லாத சந்தோஷம் அடைந்து, சீர்பாத கமலங்களின்மேல் விழுந்து, பணிந்து, எழுந்து என் பிதாவே! நீ கொடுக்க நான் சகல பாக்கியமும் பெற்றிருக்கின்றேன் ஐயனே! இப்பொழுது அடியேனுக்கு உன் வடிவமாகிய சாரூப பதவி கொடுத்தருளவேண்டும் என்றுவேண்டுதலும், எம்பெருமான் அந்தத் திருமாலை நோக்கிக் கருடக் கொடியுடையவனே! யாம் சொல்வதை நன்றாகத் தெரிந்துகொள். இருபத்தெட்டாங் கலியுகத்தில் வைவச்சுதமனுவந்தரம் வரும். அப்பொழுது சீகாழியிலே கவுணியர் குலத்தில் திரு அவதாரம் செய்யும் திருஞானசம்பந்தன் என்னும் எமது அடியவன் இங்கு வந்து உனக்கு எமது உருவமாகிய சாரூப பதவி கொடுப்பான். சக்கரபாணி! நீ அதுவரையில் இந்தத்தலத்திலிருந்து தவம்செய் என்று திருவாய்மலர்ந்தருளிமறைந்துபோதலும், அந்தத்திருமால், மனவருத்தம் இல்லாமல் அவ்விடத்திலேயே வாசம் செய்து, கொன்றைப் பூமாலை சூடிய

சிவபெருமானைக் கண்டு சேவிக்க வந்த இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழ் விரகர் ஆகிய திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தருளிய தமிழ் வேதமாகிய தேவாரப்பதிகத்தால் சிவபெருமானுடைய திருவுருவாகிய சாரூப பதவி பெற்றான்.

திருமேற்றளியார் திருவடி போற்றி.

---

இருபத்திரண்டாவது

## அநேகதங்காவதப் படலம்.

அந்தணர்களே! அந்த நூறு உருத்திரர் முதலானவர்கள் போற்றித் துதிசெய்த நூற்றுப்பதினெட்டு தலங்களின் பெருமை சொன்னோம். இனிக் குறைவில்லாதோங்கும் திருமேற்றளியின் வடதிசையில் விளங்கும் கச்சி அநேகதங்காவதம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

உரல்போற்கால்களையும், சிறியகண்களையும், கடுநடையையும், சொரிகின்றமதத்தையும், பிறைபோன்றதந்தத்தையும், பெருவலியையும், பிளிறு ஒலியையும் உடைய யானைமுகம் படைத்த விநாயகக் கடவுள் புகழ்பெற்றோங்கும் காஞ்சிமா நகரத்தை அடைந்து, பேரன்புடன் எம்பெருமானாகிய சிவபெருமானைப் பூசிக்க நினைந்து, தன் பெயரால் அநேக பேச்சுரன் என்னும் இலிங்கப் பிரதிஷ்டை பண்ணி, ஆவலுடன் ஆகமவிதிப்படி அருச்சனை செய்யுந் தன்மையைத் திருவுளத்திற் கொண்டு, எம்பெருமான் காட்சி கொடுத்தருளி, மகனே! நீ வேண்டிய வரம் யாது? சொல் என, அந்த விநாயகக் கடவுள், தன் பிதாவினுடைய பாதாரவிந்தங்களின்மேல் விழுந்து பணிந்து பிதாவே! இவ்வுலகத்தில் யான் செய்யவேண்டிய காரியம் யாது? கட்டளையிட்டருளவேண்டும் எனலும், இசைபாடும் வண்டுகள் சூழும் கொன்றைப் பூமாலை யணிந்த சிவபெருமான் சொல்லலானார்.

குமாரா! வேதசாஸ்திர விதிகளை நிலைநிறுத்தவும், நல்லோர் செய்யத்தொடங்கும் காரியங்களை இடையூறில்லாமல் நிறைவேற்றவும், அசடராகிய அசுரர்களுக்கு இடையூறு செய்யவும், நீ இந்த உலகத்தில் வருவதை நாடித் தேவர்கள் முன்னமே எம்மை வருந்திக் கேட்டுக் கொண்டார்கள். ஆதலால் நீ எமது கட்டளையால் புறச்சமய சாஸ்திரப் புரட்

டர்களுக்கு எந்நாளும் இடையூறு செய். வேதாகம சைவசித்தாந்த நெறி தப்பாதவர்களுக்கு இடையூறுண்டாகாதபடி துன்பந்தீர்த்துத் துணைசெய் திரு. எல்லாரும் உன்னை வாழ்த்தக் கடவர். உன்னை வந்தனை வழி பாடுசெய்யாதவர்கள் மேன்மைமிகுந்த வேதியர்களானாலும், அவர்கள் பூமியிலே செய்காரியங்கள் பயன்படாமற் போகக் கடவன. உன்பாதங் களைவணங்கி வாழ்த்துகிறவர்கள் எல்லாரும் பெருஞ் செல்வம் பெறக்கட வர். உன்னை வணங்கி வாழ்த்துதல் செய்யாதவர்களுக்குச் சுபகாரியங் களும் அசுபகாரியங்களாம். பெரியோனே ! இவ்வரங்களை யாம் உனக் குக் கொடுத்தோம். இப்பொழுது இன்னும் ஒருவார்த்தை சொல்லக் கேள். இரணிய புரத்தில் கேசி முதல் பல அசுரர்கள் வாழ்கின்றார்கள். அந்த அசுரர்கள் எல்லா உயிர்களையும் வருத்திக் கொலைசெய்கிற படி யால் உன் காலால் அவர்கள் உயிரைப் போக்கி, அந்த அசுர மாதர் கர்ப் பத்திலே அந்த அசுரர்கள் சத்தியாய் வீற்றிருக்கும் வல்லபையுடன் கலந் து சுகித்து வாழ்ந்திருப்பாயாக. அந்த வல்லபையுடன் உன்னை வந்தனை வழிபாடு செய்யப் பெற்றவர்களுக்கு வேண்டுவனவெல்லாம் விரைவில் உண்டாகக் கடவன, என்று திருவாய் மலர்ந்தருளிப்பெருங் கருணையுடன் உச்சி மோந்து வாரி யெடுத்து மார்புறத் தழுவி விடை கொடுத்தலும். விநாயகக் கடவுள் மீண்டு இரணிய புரத்தைச் சேர்ந்து அவ்விடத்தில் அடர்ந்திருக்கும் அசுரர் கூட்டங்களைக் காலால் வீசி, அவர்களுடைய ஆண்மை அடங்க அழித்து, அந்த அசுரமாதர் கர்ப்பத்தில் அவர்கள் சத் தியாய் வீற்றிருக்கும் வல்லபையைத் தும்பிக்கையால் வெளிப்பட வாங்கி அவளைத் திருமணம் செய்து கொண்டு இனிது வாழ்ந்திருந்தார்.

முனிவர்களே ! விநாயக மூர்த்தி அருச்சனை செய்ய வீற்றிருக்கும் அநேகபேசனை அநேகதங்காபதத்தில் கண்டு தொழுவாராயின், தொழும் அவர்கள் பிறவிப் பெரும்பிணிதீர்ந்து நாயேனையும் அடிமையாக உடைய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் கைலாச பதவி பெற்று, எக்கா லத்திலும் இன்பத்துடன் வாழ்ந்திருப்பார்கள்.

அநேகபேசன் அடியிணைபோற்றி.

இருபத்துமூன்றுவது

## கயிலாயப் படலம்.

சிவானந்தச் செல்வர்களே! புஷ்பசயனத்தின்மேல் ஆண் அன்னங்கள் பெண் அன்னங்களைச் சிறகால் அணைத்துக்கொண்டு தூங்குவதற்கு இடமாகிய தடாகஞ் சூழ்ந்த அநேகதங்காவதத்தின் பெருமை சொன்னோம். இனி மணிஒளி வீசும் அந்த அநேகதங்காவதத்திற்கு மேற்கில் வந்து வணங்கினவர்களுக்கு விரைந்தருள் செய்யும் கைலாயத்தின் மகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

பூர்வம் புஜபலபராக்கிரம சாலிகளாயிருந்த அசுரர்களுக்கு மயன் என்னும் அசுர தச்சன் அருந்தவம்செய்து, சுவர்க்க மத்திய பாதலம் என்னும் திரிலோகங்களிலும் உள்ள பொன், வெள்ளி, இரும்பு இவைகளால் நிருமிக்கப்பட்ட மூன்று கோட்டைகள் இருந்தன. அந்தக் கோட்டைகளில் வாழும் அசுரர்கள் எல்லாரும் சுருதி ஸ்மிருதி ஆராய்ந்துணர்ந்தவர்களும், மாசில்லாதோங்கும் ஆகமங்கள் அனைத்தையும் அறிந்து ஒழுகும் ஆசாரம் உடையவர்களும், சிவபெருமானைப்பூசிக்கும் செயலைமேற்கொண்டவர்களும், விபூதி அணிந்து வெண்ணிலாக்கிரணம் பொழியும் திருமேனியுடையவர்களும், சிவலிங்கத்தைப் பூசிக்கும் திறத்தைக் கடமையாகக் கொண்டவர்களும், சிவதரும சிந்தனை யுள்ளவர்களும், சிவனடியாரைக் கண்டால் களிக்கும் மனமுடையவர்களும், சைவாசார நெறி தவறாதொழுகும் சீலத்தில் நிகரில்லாதவர்களுமா யிருந்தார்கள். அந்த முப்புரங்களின் எவ்விடத்திலும் சிவபுராணம் சொல்லுகிற வர்களும், சொல்லச்சிரத்தையுடன்கேட்கிறவர்களும், சிவபணிசெய்கின்றவர்களும், செய்கின்றவர்களையும், செய்த சிவபணிகளையும், வியந்துகொண்டாடுகிற வர்களும், சிவனடியாரையும் வருவிருந்தையும் எதிர்கொண்டு சென்று அழைத்துவந்து அன்புடன் அமுதூட்டுகின்றவர்களும், சிவநாமமுழக்கமுமே அன்றி மற்றொன்றும் இல்லை. இப்படிப்பட்ட அசுரர்களால் அல்லற்பட்டு மனந்தளர்ந்து ஓடிப்போன தேவர்கள் எல்லாரும் மாயவனை உன் பாதமே கதி என்று வந்து அடுத்தார்கள். சேஷசயனத்தின் மேற்கண்வளரும் செந்துளபமாலையணிகிய அந்த மாயவன் தன்னை வந்தடுத்த தேவர்களுடன் வேதமந்திரங்களைச் சொல்லி ஒரு கொடிய யாகம் செய்யும்போது, அந்த யாகத்திலிருந்து அனேக பூதங்கள் புறப்பட்டன.

அந்தப் பூதங்கள் எல்லாம் மாயவன் சொற்படி விரைந்து போய் நீதிநெறியுள்ள திரிபுராசுரர்களுக்குமுன் நிற்கமாட்டாமல் அழிந்துபோய்விட்டன. அதைக்கண்டு நடுநடுங்கும் அமரர்கள் முகத்தைப் பார்த்து, மாயவன் சொல்லுகின்முன். நேசர்களே! ஆ! இதுகேளுங்கள். அசுரர்கள் எல்லாரும் அம்பலத்தில் ஆனந்தக் கூத்தாடும் ஐயன் திருவடிக்கு ஆளானவர்கள். அவர்கள் எல்லாரும் தீமை செய்யுங் கொடியர்களே. ஆனாலும் சிவபத்தியுடைவர்களும், அழியாத ஆண்மை பெற்றவர்களுமாயிருக்கிருர்கள். ஆதலால் நாம் அவர்களை ஒரு பாணத்தால் அழிக்கும் திறம் இல்லாதவர்களா யிருக்கின்ருேம். அவர்களை ஒருபாணத்தால் அழிப்பதற்குச் சிவபெருமான் ஒருவனே வல்லவன். அவர்கள் அந்தச் சிவபெருமானைப் பூசித்து வேண்டும் வரமெல்லாம் பெற்றவர்கள். இனி நாம் அவர்கள் சிவபத்தியைக் கெடுப்போம். அவர்களை அழிப்பதற்கு இதுவே உபாயம் அல்லாமல் வேறில்லை என்று, அந்த மாயவன் வேதவிதி யெல்லாம்பொய் என்றும், மோட்சம் என்பது ஒன்று இல்லை என்றும், வாசம் செய்யும் பொருள்கள் எல்லாம் ஒருக்ஷணத்திலே நாசம் ஆய்விடும் என்றும், எடுத்துப் போதிக்கும் பிடகநூல் ஒன்றை ஏற்படுத்தித் தன் உடற்கூருகப் புத்தன் என்பவனைத் தருவித்து, அவன் முகத்தைப் பார்த்துப் புத்தா! நீ இந்தப்பிடக நூலைக்கொண்டுபோதனைசெய்து, சிவநேசம் பூண்டுவிளங்கும் திரிபுராசுரர்களை மயங்கச்செய்து, அவர்கள் சிவபத்தியைக் கெடுத்துவிடு. இந்நாரதமுனிவனைத் துணையாகக் கொண்டுபோ. நீங்கள் இருவரும் உண்மையானவேதப் பொருளை விடாது மனதிலேயே வைத்துக்கொள்ளக்கடவீர்கள் என்று விடைகொடுத்தலும், புத்த நாரதர் விரைந்து சென்று திரிபுரங்களைச் சேர்ந்து செய்யும் மாயாஜால போதனையால் அங்கேவ சிக்கும் அசுரர்கள் எல்லாரும் மதிமயங்கி அவர்களுக்குச் சீஷர்களாகி அவர்கள் எடுத்துப் போதிக்கும் பிடகநூலை நம்பித் துன்மார்க்க வழியில் சென்று சன்மார்க்கமாகிய சைவ சமயாசார நெறி தப்பிப்போனுர்கள். இப்படி இழிவான சமயநெறியில் தங்கிப் பரானந்த வாழ்வுதரும் விபூதி, உருத்திராட்சம், சிவதருமம், வேதநெறி முதலியவைகளைக் கட்டோடே விட்டுவிட்டார்கள். ஐயோ! "ஊழ்வினை யுருத்துவந்தால் ஒருவரால் ஒழிக்கப்போமோ? என்றபடி ஊழ்வினையை ஒழிக்கவல்லவருமுண்டோ? இவர்கள் பத்தினிமார்களும் மகதிவீணை யேந்திய நாரதன் பேச்சைக் கேட்டுக் கற்பிழந்து போனுர்கள். கண்ணுற்கண்டதே மெய். கதி உண்டென்பது பொய் என்று சொல்லத்துணிந்தவர்களாய்ப் பொல்லாங்கு என்பன எல்லாவற்றையும் இந்த அசுரர்கள் செய்துவருவதை மாயவன் பார்த்து, நமது எண்ணம் பழுத்தது என்று, மனமகிழ்ந்து, தேவர்கள் எல்லாம் தன்னைச்சூழ்ந்துவரத் திருக்கைலாசத்திற்குச்சென்று சிவபெ

ருமானுடைய சீர்பாதகமலங்களைத் தொழுது துதிசெய்து, செந்தாம ரை மலர்போலுங் கைகளைக்குவித்துப் பரிந்து, கைலாசபதி! முப்புர ங்களில் வாசம்செய்யும் அசுரர்கள் எங்களுக்கு இடர் செய்கின்றமை யால் நாங்கள் இந்நாள்வரையில் இடர்ப்பட்டோம், பூர்வம் யாமளை முத லான சத்திகளை மயக்கிய மகாதேவா! புத்தனுடைய மாயாஜால போ தனையால் மருண்டு சுத்த வேதத்தைக் கைவிட்டு அசுத்தம் அடைந்தி ருக்கும் அந்த அசுரர்களைக் கொன்று அடியேங்களைக் காத்தருள்க என்று வேண்டிய சொல், அம்பலத்தில் ஆனந்தக் கூத்தாடும் ஐயன் திருச்செ வியில் சேர்ந்தவுடன், அந்தப் பரஞ்சோதி நந்திதேவர் முகத்தைப்பார் த்து, நந்தியப்பா! முப்புரங்களைப் போர்செய்து அழிக்க நமக்கு ஆள் அம்பு இல்லையே. ஆளும் அம்பும் இருந்தால் ஒரு கணத்திலே அவர்கள் எல் லாரும் அழியப்பார்ப்பாய். என்று மலர்ந்தருளிய திருவாய் மொழியை மாயவன் கேட்டு மற்றைய தேவர்களுடன் ஆலோசனை செய்யும்போது, பூமி ஒருதேரும், சந்திரசூரியர்கள் இருபக்கத்துச் சக்கரங்களும், நா ன்கு வேதங்கள் நான்குகுதிரைகளும், பிரமதேவன் இரதசாரதியும், மே ருமலை வில்லும், ஆதிசேஷன் அந்த வில்லிற்பூட்டும் நாணும், மாயவன் பாணமும், மற்றையதேவர்கள் மற்றும் கருவிகளும் ஆனார்கள். அப்பொ ழுது சிவபெருமான் அந்தத் தேர்மேல் ஏறி மாமேரு வில்லை வளைத்து, அக்கினிச் சுவாலை வீசும் ஓர் அம்பு தொடுத்து, அந்த அசுரர்களுடைய பலா பலங்களைப் பார்த்துப் புன்னகை செய்தனன். அந்தப் புன்னகை யால் முப்புரங்களும் நெறு நெறு நெறு என்று வெந்து விழுந்து நீறாய் விட்டன. அதைப்பார்த்த தேவர்கள் எல்லாரும் மகிழ்ந்து கூத்தாடித் தேகமெல்லாம் புளகித்து ஹர ஹர ஹர என்று ஆரவாரம் செய்தார்கள். ஹர ஹர ஹர என்று முழங்கிய தேவர்களுக்கு வேண்டும் வரம் கொடுத்துச் சிவபெருமான் கைலாயத்திற்கு எழுந்தருளினன். அப்பொழுது தேவர் கள் எல்லாரும் பிரம விஷ்ணுக்களுடன் கூட்டம் கூடி, உலகத்தில் உள் ளவர்கள் வினைதீர்ந்து பிழைக்கும் பொருட்டு, இந்நாள் முதல் சிவலி ங்க பூசைசெய்யாதவர்களும், விபூதி உருத்திராட்சங்களை விட்டவர்களும், சிவபெருமான் திருநாமங்களைப் புகழ்ந்துபேசாதவர்களும், பல நூல்களை நிரம்பக்கற்றும் ஸ்ரீ பஞ்சாட்சரங்களைக் கணித்தல் செய்யாதவர்களும், எங்களுக்கு அன்னியர் ஆகக்கடவர். இந்த நெறி தப்பினவர்கள் யாவரோ ஆயினும் கடையரோ ஆவார்கள் . என்று வகுத்தல்செய்து அவரவர் இரு ப்பிடம்போய்ச் சேர்ந்தார்கள்.

இப்பால் நாரத முனிவனும், புத்தனும் மனக்கவலை கொண்டு வருந் தித் திகைத்துத் தேவர்கள் சொல்லிய சொல்லைக்கேட்டு, நாம் என்னகா

ரியம் செய்துவிட்டோம். சிவ பத்தர்களிற் சிறந்தவர்களும், பழைய வேதங்களின் கரைகண்டவர்களும் ஆகிய, அந்த அசுரர்களை அநியாயமாய் மயக்கிவிட்டோமே ஐயோ! உண்மை நெறியாளராகிய பல பெயரைத் தப்புவழியிற்செலுத்திய இந்தப் பெரும்பாவத்திற்குப் பரிகாரம் வேதாகம புராண சாஸ்திரங்களில் யாம் கண்டதில்லை. கற்பகோடி காலம் சென்றாலும் இந்தப்பாவம் கழியமாட்டாது. எங்களுக்கு நரகமே கதி. இனி என்னசெய்யலாம் என்று ஏங்கி மனந்தளர்ந்து, தம்மைப்பற்றிய பழி பாவங்களைத் தொலைக்கும்பொருட்டுக்காஞ்சிமாநகரத்தைநவந்துசேர்ந்தார்கள். பிறவித்துன்பங்களைப்போக்கிப் பேரின்ப வீடு கொடுத்தருளும் சிவபெருமான் ஆட்சியில்விளங்கும், காஞ்சிமாநகரத்தில் பிரவேசித்தவுடன், இரும்பு மலைபோல் அதிபாரமான, அந்தப் பெரும்பாவம் எம்பெருமான் கருணையால்பருத்திக்குன்றுபோல் இலேசாயிற்று. அதுகண்டு அவ்விருவரும் அந்தஇடத்திற்குப்பருத்திக்குன்று என்றுபெயர் வைத்தார்கள். இருவரும் அவ்விடத்தில் இருந்துகொண்டு அதற்கு வட கீழ்த்திசையில் அதிவிசித்திரமான ஓர் ஆலயம் உண்டாக்கி, அந்த ஆலயத்திலே கைலாயநாதனைத் தாபித்துப் பூசைசெய்து துதித்து, நெடுங்காலம் அகோரமான தவம் செய்துகொண்டிருந்தார்கள். அப்போது பளிங்குமலைபோல் விளங்கும் ரிஷப வாகனத்தின்மேல் பலகணங்கள் புடைசூழ்ந்துவரப், பெருஞ்சோதிமயமாய்க் காட்சிகொடுத் தருளியகைலாசபதியைப் புத்த நாரதர்கள்கண்டு கண்ணீர்சொரிந்து, பலமுறை விழுந்து, பணிந்து, ஐயனே! உமது அடியவர்களை அடியேங்கள் வஞ்சனையான புறச்சமய சாஸ்திரத்தினால் மயக்கிவிட்டோம். மகாதேவா! இந்தப் பிழை பொறுத்தருளவேண்டும் என்று வேண்டுதலும், சந்தனக்கோலம்பூண்டு இறுமாந்து, ஓங்கி, அழகுமிகுந்து, முத்துவடமணிந்து விளங்கும் பயோதரங்களையும், இந்திரகோபம்போற் சிவந்த வாயினையும் உடைய பார்வதி தேவிக்கு இடப்பாகம் கொடுத்தருளிய சிவபெருமான், அவர்களைநோக்கிக் கேளீர் புத்த நாரதர்களே! நீங்கள் செய்தகொடிய பாவமானது, கோடிவருஷம் செய்யும் ஜப தபம் முதலிய எவற்றினாலும் சற்றும் கழியமாட்டாது. எமது அடியவர்களைப் பொய்யாகக்கட்டிய சாஸ்திரத்தினாலும் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசைகளைக் காட்டியானாலும், மயங்கச் செய்கின்ற பாவிகள் மீளா நரகத்திற்கே ஆளாவார்கள். நூல்களெல்லாம் சகல மாபாவங்களுக்கும் பரிகாரம் சொல்லும். எமது அன்பர்களை மயக்கினவர்களுக்கு நரகதண்டனையே அன்றி, வேறு எடுத்துச் சொல்லமாட்டா. சொல்லுமிடத்து அந்த மாபாவமும் காஞ்சிமாநகரத்தை அடைந்தவர்களைவிட்டுத் தொலைந்துபோம். மூன்றுலகமும் புகழும்படியான யாழ்முனிவனே! புத்தர் சிங்கமே! நீங்கள் காஞ்சிமாநகரத்தை அடைந்தபடியால்

உங்கள் பாவம் இலேசாயிற்று. இவ்விடத்தில் இலிங்கப்பிரதிஷ்டை செய்து எம்மைப் பூசித்த புண்ணியத்தினால் மிகவும் கழிந்துபோய் விட்டது. ஆயினும் சொல்லக்கேளுங்கள். எப்போதும் பாவம் எவ்வளவேனும் செய்யக்கூடாது. பிறருக்கு உபகாரமாகும்படி ஒருவேளை சிறிது பாவம் செய்வரர் ஆயினும், சைவசமயாசாரபத்தி நெறியைக் கெடுப்பதற்குச் சொப்பனத்திலும் நினைக்கக் கூடாது. கெடுக்க நினைக்கிறவர்கள் இரௌரவம் முதலான நரகங்களில் விழுந்து பெருந்துன்பப் படுவார்கள். இந்நாள் நீங்கள் எம்மைத்துதிசெய்யும் அன்பிற்கு யாம் மனம் இரங்கினோம். உங்கள் பாவம் அனந்தங்கோடி பிறவிகள்தோறும் உங்களுடன் இடையறாது சுழன்றே கழியும் அல்லாமல் வேறு விதமாய்க் கழியமாட்டாது. அந்தப்பாவம் கழிவதற்குப்பரிகாரம் சொல்லுகிறோம் கேளுங்கள். இந்தத் தலத்திலே எந்நாளும் எம்மைப்பூசித்துப் பிரதட்சிணம் செய்து கொண்டிருங்கள். பிரதட்சிணம் செய்வதற்கு உள்ளே பிரவேசிக்கும் போதும் வெளிப்படும்போதும் வாசற்படிவழியை நுழைந்து செல்லும் சிறு துவாரங்களாகச் செய்வோம். உள்ளே நுழையும் துவாரமும், வெளிப்படும் துவாரமும் ஆகிய அந்த இரண்டுமே செய்த கர்மபலனை அநுபவிக்கும் பிறப்பு இறப்பு என்னும் பகுதியாகி விளங்கக் கடவன. இவ்விடத்தில் இனிதுவாழ்ந்திருங்கள். இறுதியில் முத்தி யின்பம் தருகின்றோம். சகல சித்திகளையும் தரும்படியான பல விசித்திரச் சிற்பம்பொருந்திச் சித்தர்கள் அருச்சனைசெய்து தொழுது துதிக்க விளங்கும் கைலாசம் என்னும் தலமகிமை ஞானிகளுக்கே அல்லாமல் மற்றவர்களுக்குத் தெரியமாட்டாது என்று திருவாய்மலர்ந்தருளிக் காம தகனனாகிய கைலாசபதி மறைந்தருளினார்.

முனிவர்களே! இப்பால் அவ்விருவரும் அந்தப்பிரகாரமே அவ்விடத்திற் கைலாச நாதனைப் பிரதட்சிணம்செய்து துதித்துப் பிறவிப் பெரும்பிணி தீரும்படி நெடுங்காலம் வசித்துப் பின்பு சிவபெருமான் திருவருளால் சிவானந்த வீடுபெற்றார்கள். செல்வம்பெருகும் காஞ்சிமாநகரத்திலே விளங்குகின்ற கைலாசம் என்னும் தலம்போலும் ஒருதலம் மூன்றுலகங்களிலும் இல்லை என்க.

கைலாசநாதர் கனகழல்போற்றி.

## இருபத்தினன்காவது,

# வீராகவீசப்படலம்.

மனமடங்கப்பெற்ற மாதவர்களே! புத்ததேவனும், யாழ் வாசிப்பதில் சிறந்த நாரதமுனிவனும், வந்தனை வழிபாடுசெய்யச் சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் கைலாயம் என்னும் தலமகிமை சொன்னேம். இனி இந்தக் கைலாசத்திற்குக் கிழக்கில் இளந்தேன் உமிழ்ந்து கொத்துக் கொத்தாகப் பூத்திருக்கும் பூஞ்சோலை சூழ்ந்த வீராகவீசத்தின் பெருமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

பூர்வம் இராவணன் சந்நியாசி வேடம்பூண்டு, தண்டகாரணியத்திற் பின்வரும் பெருந்துன்பங்களைச் சிறிதும் நினைக்காமல், ஸ்ரீராமன்பத்தினியாகிய சீதாபிராட்டியை அபகரித்துக்கொண்டு இலங்கைக்குப்போய்விட்டான். வீரகண்டை அணிந்த வீராதி வீரனாகிய ஸ்ரீராமன் அப்பொழுது தன் தம்பியாகிய இலட்சுமணனுடன் இடரடைந்து எங்கித் திகைத்து அந்த வனமெல்லாம் சுற்றித்திரிந்து செந்தாமரைக்குளங்களும், செந்நெற் புலங்களும் சூழ்ந்த காஞ்சிமாநகரத்தை அடைந்து, சிவகங்கையில் நீராடி, ஒரு மாவடியில் வீற்றிருக்கும் ஏகாம்பரநாதனைத் தொழுது, துதித்துச் சனகராஜன் புத்திரி ஆகிய சீதாதேவியைக் கண்டு அடையும்பொருட்டுத் தாழ்ந்து பணிந்து வேண்டி மீண்டு, அந்தத் திருவேகம்பத்திற்குத் தெற்கில் சிறந்து விளங்கும் அகத்தியீசர் ஆலயத்தினருகேவசிக்கும் அகஸ்திய முனிவரைக் கண்டு, அதி துக்கத்துடன் விரைந்து ஓடி அவர் பாதத்தில் விழுந்து பணிந்து புலம்புதலும், அம்முனிவன் ஆறுதல் சொல்லித் தேறுதல்செய்து ஸ்ரீராமா! இவ்வளவு பெருந்துன்பம் உனக்குவந்த காரணம் யாது? என்று கேட்க, எம்பெருமானே! அடியேன் விண்ணப்பத்தைக் கேட்டருள் என்று சொல்லலானன். எனக்குப் பட்டம் கட்ட இருந்த என் பிதாவாகிய தசரதச் சக்கரவர்த்தி என்னைநோக்கி ஸ்ரீராமா! நீ பதினலுவருஷம் வனவாசம்பண்ணு, அதுவரையில் உன் தம்பி பரதன் அயோத்தியாபுரியிலிருந்து அரசாட்சி செய்யக்கடவன் என்று என்னைக் காட்டுக்கு அனுப்பினர். நான் காட்டுக்குப் புறப்படும்போது இலட்சுமணனும் சீதையும் என்னைத்தொடர்ந்து வந்தார்கள். நாங்கள் மூவரும் தண்டகவனத்தில் வாசம்பண்ணிக்கொண்டிருக்கையில் மாரீசன் ஒரு மாயமானகி வந்தான். அதைப் பிடித்துக் கொடுக்கும்படி வேண்டிக்கொண்ட சீதையின் இஷ்டத்தை நிறைவேற்றும்

பொருட்டு அந்தமானைப்பிடிக்கப் பின் தொடர்ந்தேன். அது என் கையில் அகப்படாமல் என்னை நெடுந்தூரம் இழுத்து அலைத்ததனால் மனம் சலித்து அதைக்கொல்ல நினைத்து ஓர் அம்புதொடுத்தேன். அந்த அம்பு தைத்து அவன் மாண்டு போகும்போது சீதா! இலட்சுமணா! என்று வாய்விட்டுக் கூவி விழுந்து மாண்டு போனான். அந்தக்குரல் ஓசையைக்கேட்டு என்தம்பி சீதையை விட்டுப் பிரிந்து என்னைத் தேடிக்கொண்டு வந்தான். அந்த வேளையில் இராவணன் அந்தச் சீதையை அபகரித்துக்கொண்டு போய்விட்டான். ஐயனே! அதனால் நான் படும்பாடு சொல்லிமுடியாது. என் உயிர் போகின்றது. அதுபோய் விடுவதற்குமுன் கருணைசெய்யவேண்டும். உம்மையே அடைக்கலமாக அடைந்தேன். என்று தேம்பித்தேம்பி அழுது சொல்லினான்.

அதைக்கேட்டு அகஸ்தியமுனிவர் சொல்லுகின்றார். மண்மாலையணிந்த தோள்களையுடைய ஸ்ரீராமா! கேள். கடல்சூழ்ந்த உலகத்திலே பஞ்சபூத சம்பந்தமான தேகமுடையவைகள் எல்லாம் கூடப்பிறந்தவைகள் என்றே தெரிந்துகொள். பல நூல்களையும் கற்றுணர்ந்த ஸ்ரீராமா! உயிருக்குள் ஆண், பெண், அலிஎன்கிறபேதம் சிறிதும் இல்லை. நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்னும் அஞ்சுபூதங்கள் தம்மில் கூடுவதும் பிரிவதும் சமுத்திரத்திலே பல சிறு துரும்புகள் தம்மில் கூடிப் பிரிவதுபோலுமாம். இந்தப்பூதங்கள் தம்மில் கூடுவதற்கும் பிரிவதற்கும் மாயையேகாரணமாம். அவரவர்கள் வினைக்கு ஈடாக வருவதுதானே வரும்; வராதது ஒருபோதும் வரவேமாட்டாது என்று உன்மனதில் நிச்சயப்படுத்திக் கொள். வினைப்பயன் அநுபவித்தே ஆகவேண்டும். ஆதலின் நீ துன்பத்தால் வருந்தி மனஸ்தாபப் படாமல் மகிழ்ந்திரு, என்று எழுகடலையும் ஒரு உளுந்தளவாக்கி உட்கொண்ட அகஸ்திய முனிவர் சொல்லக்கேட்டு, ஸ்ரீராமனும் சொல்லுகின்றான். ஐயனே! நீ சொல்லியதெல்லாம் வாஸ்தவமே, ஆயினும் இந்தவார்த்தை இவ்வுலகத்திற்கு ஏற்குமோ? மனையாளை மாற்றார் கொள்ளத் தத்துவவிசாரணை செய்பவன் பித்தன் என்று உலகத்தார் சொல்லுவர். ஆதலின் பெரியோனே! ஐயனே! யுத்த களத்திற் சென்று, பகைவரைக் கொன்று, அவர்கள் உயிரை உண்டு, சீதையை மீட்டபின்பு, தேவரீர் போதிக்கின்ற வலிய தத்துவ ஞானசாஸ்திர விசாரணைக்கு உரியனாவேன். நான் சொல்லிய சபதத்தை முடித்தால் அல்லாமல் என் மனம் அடங்கவே மாட்டாது. மனமடங்காதவன் தத்துவ விசாரணை செய்வதில் பயனுண்டோ? என்று சொல்லக் கேட்ட அகஸ்தியமுனிவர் ஸ்ரீராமனை நோக்கி, ஸ்ரீராமா! நீ ஆசைகொண்டு அழுவது ஆகாயத்திற் செல்லும் சந்திரனைத் தாவிப் பிடி-

ப்பதற்கு, ஒரு சிறு குழந்தை ஆசைப் படுவது போலும், இது நிற்க; ஸ்ரீராமா! இராவணன் சீதையை அபகரித்துக் கொண்டு போன சங்கதியை உனக்குச்சொன்னவர் யார்? என்று கேட்கச் சுவாமி! சீதையின் பொருட்டு இராவணனைவிடாமல் தடுத்துச் சண்டைசெய்து இறப்பவனுகியசடாயு என்னும் கழுகு அரசன்சொல்லத் தெரியலானேன். இனி அந்தச் சீதையைக் கண்டு அடைவதற்கு ஓர் உபாயம் கூறவேண்டும் என்று மேன்மேலும் வேண்டுதலால், அந்த முனிவன், ஸ்ரீராமா! உன் கருத்து இதுவானுல் உன் துன்பம் தீரும்படி மேருவை வில்லாக வளைத்து, முப்புரங்களையுமெரித்த சிவபெருமானுடைய சீர்பாதகமலங்களைத் தஞ்சம் என்று அடை. அந்தச் சிவபெருமானே உன் கோரிக்கையை ஈடேற்ற வல்லவன் என்று அறி; ஒருக்ஷணத்திலே உலகமெல்லாம்அழிப்பவனும், அழியாத வில் உடையவனும், எல்லாவற்றையும் அதமாக்கும் அம்புபிடித்தவனும், உருத்திரன் ஒருவனே அன்றி வேறில்லை யென்று வேதங்களெல்லாம் வியந்து பேசும். திருவடியிலுள்ள ஒருவிரலினுல் இராவணன் வலியை அழித்தான். பூர்வம் ஒரு சிறுதுரும்பைக் கொண்டு தேவர்கள் செருக்கையும் ஆண்மையையும் அழித்தான். கூர்மையான நகத்தையும் புன்சிரிப்பையும் நெற்றிக் கண்ணையும் ஆயுதமாகப் படைத்தவன். அப்படிப்பட்ட முதற் கடவுளை அடைக்கலமாக அடைந்தவர்கள் வேண்டியதெல்லாம் எளிதில் பெறுவார்கள். ஆகையால் நீ இந்தக் காஞ்சிமா நகரத்திலே பார்வதி பாகனுகிய சிவபெருமானைப் பூசை செய். ஸ்ரீராமா! நீ உன் சத்துருவை வெல்லும் வீரம் வேண்டினுய். ஆதலின் ஆகமவிதிப்படி வீரராக வீசனைப் பிரதிஷ்டைசெய்து, தொழுது துதிசெய் என்று சொல்லுதலும், வீராதிவீரனுகிய ஸ்ரீராமன், அப்படியே அருச்சனைசெய்யலானுன் : விபூதி உருத்திராட்சமாலையணிந்து, பாசுபதவிரதம் பூண்டு, வீரராகவீசனை ஸ்தாபித்து, ஆயிரம் திருநாமங்களை எடுத்துச் சொல்லி, அருச்சனைபண்ணித்துதிசெய்து பேரன்பு வளர்ந்தோங்கத் தொழுது, நயந்து உருகும்போது, அந்தப் பூசையினுல் எம்பெருமான் திருஉளமிரங்கி, அந்த இலிங்கத்திலிருந்து தோன்றி, ரிஷபவாகனத்தின் மேல் பார்வதி சமேதராய்த் தேவர்கள் புடைசூழ்ந்துவரக் காட்சிகொடுத்தருளக் கண்டு, பல்முறையும் தெண்டனிட்டுத் துதிசெய்து அண்ணலே! அடியேனுக்கு எளிதில் கிடைத்த பெருங் கருணையமுதே! அன்பர் புண்ணியமே! இராவணன் என் பத்தினியைக் கவர்ந்துகொண்டு போய் விட்டான். நீதிநெறி தப்பிய அந்த இராவணனையும், அவனைச் சேர்ந்த அரக்கர்களையும், இப்பொழுதே யமபுரத்திற்கு அனுப்பும் திறம் அடியேனுக்குக்கொடுத்தருளவேண்டும் என்று வேண்டுதலும், எம்பெருமான் திருவருள்சுரந்து ஸ்ரீராமா! நீ இந்த நாள் தொடங்கி எமக்கு இஷ்டனுகி உலகத்தில் வீர

ராகவனென்னும் பெயர் பெற்றுவாழ்வாய். உன்னை யெதிர்த்தவர்கள் எத்தனையோபெயர்களானுலும், அவர்களெல்லாருந் தளர்ந்து ஓடிப்போக ச்செய்வாய், என்று பாசுபதாஸ்திரத்தையும் அளித்துப் பிரமதேவனைக் கொண்டு பிரமாஸ்திரத்தையும், நாராயணனைக் கொண்டு நாராயணாஸ்தி ரத்தையும் கொடுப்பித்து, மற்றையதேவாஸ்திரங்களையும்கொடுத்தும்கொ டுப்பித்தும்,சத்துருக்களை அழிக்கும் ஆண்மையைத்தந்து ஸ்ரீராமா! இவை களெல்லாவற்றையும் யாம் உனக்கு அன்புடன் அளித்தோம். இவைக ளுடனும் இலட்சுமணனுடனும் சென்று, கிஷ்கிந்தா புரியைச் சேர்ந்து, சுக்கிரீபன் சேனையுடன்போய்ச் சேதுபந்தனம் செய்து, கடலைக் கடந்து இராவணன், கும்பகர்னன் முதலானவர்களைக் கொன்று, சீதையைச் சிறைமீட்டு, அயோத்தியா புரியை அடைந்து, அரசு செலுத்தி, அக்கிர மங்களை அகற்றி, இனிது வாழ்ந்திருப்பாயாக என்று திருவாய் மலர்ந்த ருள, மீண்டும் பணிந்து, திரிபுரதகனு! உயிர்களுக்கு ஆண், பெண், அலி என்கிற பேதம் இல்லை. பஞ்சபூத சம்பந்தமான தேகமெல்லாம் கூடப் பிறந்தவைகளேயாம்; என்று அகஸ்தியமுனிவர் சொல்லியதை அடி யேனுக்கு விளங்க விரித்துச் சொல்லவேண்டுமென்று வேண்டதலும், அப்படியே வேதாந்த ரகசியங்கள் எல்லாவற்றையும் விளங்க உபதேசித் து, மேலானவரங்களையும்கொடுத்துப், பார்வதிதேவியாருடன் அந்த இலி ங்கத்தினிடமாக மறைந்தருளினர். நாத தத்துவத்தைக் கடந்த பரஞ் சோதி மயமாகிய அந்த வீரராகவீசலிங்கத்தைத் தொழுது கொண்டாடு பவர்கள், எல்லாரும் தங்கள் சத்துருக்களை வென்று, இம்மையில் சகல பாக்கிய சம்பன்னராகி, மறுமையில் முத்தியின்பமும்பெறுவார்கள்.

(கற்கீசம்)

முனிவர்களே! மேன்மை பொருந்திய இந்த வீரராகவீசத்தின் தெற்கில், மண்ணித்தீர்த்தக் கரையில் கற்கீசம் என்று ஒருதலம் உண்டு. பிருகுமாமுனிவன்சாபத்தால் திருமால் ஒருயுகமுடிவில், கற்கிஆகித் துஷ் டநிக்கிரக சிஷ்டபரிபாலனம் செய்யும் பொருட்டுக் காஞ்சிமாநகரத்தில் அங்கே வந்து, கற்கீச லிங்கப் பிரதிஷ்டைசெய்து, பூசைபண்ணித் துதி செய்து, வேண்டும் வரம் பெற்றான். பெரியோர்கள்புகழும் அந்தக்கற்கீச லிங்கத்தைத் தொழுது, மண்ணித்தீர்த்தம் ஆடுகிறவர்கள் இகபரசுகம் அடைவார்கள்.

கற்கீசன் கனைகழல் போற்றி,

வீரராகவீசன் மென்றாள் போற்றி.

---

## இருபத்தைந்தாவது

# பலபத்திரராமீசப் படலம்.

சதானந்திகளே ! சூரியன் பல்லை உதிர்த்துச், சந்திரனைத் தேய்த்து, மன்மதனை நீறுக்கிய எங்கள் நிமலன் வீற்றிருக்கும் வீரராக வீசததுடன், கற்கீசத்தின் மகிமை சொன்னோம். இனிப் புகழ்பெற்றோங்கும் கற்கீசத்தின் மேற்கில் கண்டோர்கள் எமனுடைய வலியை விண்டோடச் செய்யும் பலபத்திரராமீசத்தின் பெருமை சொல்வோம் கேளுங்கள், என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

பூலோகத்திலே பலவளங்கள் மலிந்து விளங்கும் துவாரகா புரி வாசஞகிய கண்ணனுக்குத்தமையனும், கலப்பை ஆயுதம் உடையனும் ஆகிய பலபத்திரராமன் பூர்வம் பாரத யுத்தம் உண்டானபோது, தன் தம்பியாகிய கண்ணன் செய்யும் கபட நாடகங்களைக் கண்டு, மனம்பொறுமல் தீர்த்தயாத்திரை செய்யப் புறப்பட்டுச்; சரசுவதி நதிக்கரையை அடைந்து, அவ்விடத்திலுள்ள சிவாலயங்கள் எல்லாவற்றையுங் கண்டு, கைகூப்பித் தொழுது, அந்தச் சரசுவதி நதி தீரத்தில் கூட்டங் கூடியிருந்த முனிவர்களைத் தாழ்ந்து பணிந்து தபசிகாள் ! சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் தலங்கள் எவை ? அந்தத் தலங்களில் மிகவும் சிறப்புள்ளது எது ? சொல்லவேண்டும் என்றுவேண்ட, அந்த முனிவர்கள் பனம்பூமாலையணிந்த பலபத்திரராமா ! பூலோகத்திலே பரத கண்டமே கரும பூமி என்று சொல்லப்படும். அந்தக் கரும பூமியே சகல லோகங்களிலும் சிறந்ததாம். பெருமைக் குணமுடையோனே ! அந்தக் கரும பூமியிலும் தேவர்கள் வசிக்குந் தலமெல்லாம் சிறந்தவைகளாம். அந்தத் தெய்வத் தலங்களிலும் விஷ்ணுத்தலங்கள் மேற்பட்டவைகளாம். அந்த விஷ்ணுத் தலங்களிலும் மனிதரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட சிவஸ் தலங்கள் சிறந்தவைகளாம். அவைகளிலும் தேவர்களால் ஸ்தாபிக்கப் பட்ட சிவஸ்தலங்கள் சிறந்தவைகளாம். அவைகளிலும் சுயம்புவாகிய சிவஸ்தலங்கள் சிறந்தனவாம். அந்தச் சுயம்பு லிங்கங்களிலும் வியந்து சொல்லப்பட்டவைகள் சிறந்தவைகளாம். அவைகளிலும் காசி மிகவும் உயர்ந்ததாம். அந்தக் காசியைப் பார்க்கிலும் காஞ்சிமாநகரம் மிகவும் உயர்ந்ததாம். இப்பொழுது யாம் சொல்லிய காஞ்சிமாநகரத்திற்கு உயர்ந்ததும் ஒப்பானதும் ஆகிய ஒரு தலம் உலகத்தில் இல்லை. அந்தக் காஞ்சிமா நகரத்தில் கலியுகத்தால் வரும் பீடையும், பாவத்தின் கொடுமைகளும் ஒருபோதும் வந்தணுகமாட்டா. அந்தக் காஞ்சிமா நகரத்திலே

பிறந்தவர்களும், வாசம் செய்யப் பெற்றவர்களும், இறந்துபோனவர்களும் ஆகிய எல்லாரும் ஏகாம்பரநாதர் கிருபையால் முத்தி யடைவது உண்மை என்று கூறிய முனிவர்பாதத்தைத் தாழ்ந்து பணிந்து, விடைபெற்று மீண்ட பலபத்திரராமன் காஞ்சிமா நகரத்தை அடைந்து, அங்குள்ள வளமெல்லாம் பார்த்து மகிழ்ந்து, சிவகங்கை முதலிய தீர்த்தங்களில் எல்லாம் நீராடிப், பலவாத்தியங்கள் ஓயாமல் முழங்கும் சிவாலயங்கள் அனைத்தையும் தரிசித்து, வண்டு முழங்கும் பூஞ்சோலை சூழ்ந்த திருவேகம்பத்தைப் பூசித்துத் துதிசெய்து மீண்டு, அந்தக் காஞ்சிமாநகரத்திலே வேதாகம சைவசித்தாந்த உண்மைகளை உள்ளங்கை நெல்லிக் கனிபோல் எடுத்து உபதேசித்துக் கொண்டிருக்கின்ற உபமன்னிய முனிவரை அடுத்துத் தொண்டு செய்து, அவரிடத்தில் சிவ தீட்சை பெற்றுத், தன்பெயரால் பலபத்திரராமலிங்கப் பிரதிஷ்டை பண்ணி, ஆகம விதிப்படி அருச்சனை செய்து, அகமகிழ்ந்து அன்பு முதிர்ந்து, தோத்திரம் செய்யும் போது, சிவபெருமான் திருவருள் சுரந்து, தேவர்கள் போற்றப் பார்வதி சமேதராய் ரிஷப வாகனத்தின்மேல் காட்சி கொடுத்தருளக் கண்டு, கண்ணீர் சொரிந்து, ஆனந்தத்தால் ஆடிப்பாடி, அழுது தொழுது நிற்பதை நோக்கிப் பலபத்திரராமா! உனக்கு வேண்டும் வரம் யாது? எனலும் எம்பெருமானே! உன் திருவடியிலே எந்நாளும் மாறாத பத்தியும் இந்த இலிங்கத்தில் பார்வதிசமேதராய் வீற்றிருந்து கண்டு சேவிக்கின்றவர்கள் எல்லாருக்கும்இகபரசுகமும்கொடுத்தருள்க, என்று வேண்டுதலும், அந்த வரங்களைக் கொடுத்தருளி அந்த இலிங்கத்தினிடமாக மறைந்தருளினார்.

முனிவர்களே! பலபத்திரராமன் ஸ்தாபித்துப் பூசித்துத் துதிசெய்து பேறுபெற்ற பலபத்திரராமீசத்தைத் தரிசனம் செய்தவர்கள் எல்லாரும் சாலோக பதவியாகிய கைலாசபதவி பெறுவார்கள்.

பலபத்திரராமீசன் பதமலர் போற்றி.

---

இருபத்தாறுவது.

## வன்மீகநாதப் படலம்.

ஜீவகாருணியச் செல்வர்களே! தேன் ஒழுகப் பொன்போல் மலரும் கொன்றைப் பூமாலை மணக்கும் தோள்களையும், நீலகண்டத்தையும் உடைய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கின்ற பலபத்திரராமீச மகிமை சொன்னோம். இனி அந்தத் தலத்தின் மேற்கில் தேவேந்திரன் தொழுது

பேறுபெற்ற வன்மீக நாதத்தின், பெருமை சொல்வோம்,கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

பூர்வம் தேவர்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து பிரக்கியாதி அடையும் பொருட்டு, ஒரு யாகம் செய்யஉத்தேசித்து, இந்த யாகத்தால் வரும் கீர்த்தி நம் எல்லாருக்கும் பொது என்று பார்வதி பாகனுகிய பரமசிவனைத் தியானித்துக், குருக்ஷேத்திரத்திலே யாகம் செய்தபோது, சிவானுக்கிரகத்தால் அந்தயாகத்திலிருந்து பளிங்குமலைபோல் பெருங் கீர்த்தி உண்டானவுடன், திருமால் அந்தக் கீர்த்திமுழுமையும் தான் ஒருவனே அபகரித்துக் கொண்டதனுல், தடைசெய்த தேவர்களுக்குப் பகிர்ந்து கொடாமல் ஓடுவதைப் பார்த்து அவர்களும் பின் தொடர்ந்து போனுர்கள். அதனுல் அந்தத் திருமால் வில்லும் அம்பும் கொண்டு, பெரும்போர் புரிந்து, தேவர்களைமுதுகுகாட்டி ஓடச்செய்து, நெடுந்தூரம்சென்று நின்று,தேவர்களே! நீங்கள் எல்லீரும் எனக்குத் தோற்றுப் போனீர்கள், என்று சிரிக்கலுற்றுன். அவ்வாறு பழித்துச் சிரிக்கலுற்றவன் முகத்தின் வழியாய் அவன் அழகெல்லாம் சாமையாய் வெளிப் பட்டுப் போய்விட்டமையால் தன் கையில் பிடித்த வில்லைக் கழுத்தில் ஊன்றிக் கொண்டு ஒன்றும் தோன்றுமல் நெடுநேரம் சும்மா இருந்துவிட்டான். கீழ்த்திசைக் காவலனுகிய இந்திரன் அதுகண்டு, அந்தப் புகழைக் கவர்ந்து கொள்வதற்குக் காஞ்சிமா நகரத்திற்கு விரைந்து வந்து, கைலாச நாதர் சிறந்து வீற்றிருக்கும் கைலாசத்திற்கு மேற்கில் சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணித் தொழுது துதிசெய்யும்போது, எம்பெருமான் காட்சி கொடுத்தருளி உனக்கு வேண்டும் வரம் யாது? என்று கேட்க, எம்பெருமானே! துளசிமாலை அணியும் திருமால் அபகரித்துக் கொண்டுபோன கீர்த்தியைத் தேவர்கள் அடையக் கிருபை செய்ய வேண்டு மென்று மேன்மேலும் பிரார்த்திக்க, எம்பெருமான் கருணை கூர்ந்து, நீ ஒரு புற்றுய் வளர்ந்து செல் உருவம் எடுத்து, அந்தத் திருமால் கையிலேந்திய வில் நாண் அறத் தின்று, பின்பு அந்தக் கீர்த்தியைக் கவர்ந்து கொள் என்று அருள் செய்தவுடன் விடைபெற்று மீண்டு, விரைந்து ஒருபுற்றுக ஓங்கி வளர்ந்து அந்த வில்லின் நாண் அறத் தின்றுவரும்போது, அந்தவில் விசையால் அந்தத் திருமால் தலை அறுப்புண்டு விழுந்தது. அதனுல் அந்தத் தலம் சின்னமாகே சவத்தலம் என்று சொல்லப்பட்டது. அறுப்புண்ட தலையானது அவ்விடத்தில் உண்டாகிய உதிரவெள்ளத்தில் ஓடத் தலைப்பட்டது.

அவ்வேளையில் தேவர்கள் அந்தத் திருமால் இடத்திலிருந்த புகழையெல்லாம் அபகரித்துக் கொண்டு பெருமகிழ்ச்சியுடன் போய்விட்டார்

கள். இப்பால் பூலோகத்திலே யாகத்தீ வளர்க்கும் வேதியர்களுக்கு எச்சனுகிய மாயவன் இல்லாமையால் அந்த இந்திரன் மனவருத்தமடைந்து, மறுபடியும் காஞ்சிமாநகரத்திற்கு வந்து, ஆகம விதிப்படி அருச்சனை பண்ணி, அன்பு மிகுந்து தொழுது துதிசெய்யும் போது எம்பெருமான் காட்சி கொடுத் தருளக் கண்டு, சுருதி முறையாகத் துதித்து, வண்டுகள் இசைபாடும் கொன்றைப் பூமாலை சூடிய சடைமுடியுடைய பரமபதி! எச்சனுகிய மாயவன் தலைவில்லால் அறுந்து போயிற்று, எம்பெருமானே! எச்சன் இறந்து போனமையால் வேள்விக்கு உறுப்பாகிய எங்களுக்கு உதவும் அவிப்பாகமும், வீரர்களுக்கு வீரசுவர்க்கமும், இல்லாமற் போய் விட்டன. ஆதலின் எச்சனுகிய அந்த மாயவனுக்குத் தலைகொடுத்தருள வேண்டும் என்று மேன்மேலும் வேண்டிக் கொண்டதனுல், சந்திரசேகரனுகிய சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளுவார்.

அன்பனே! கேள். பூர்வம் எம்மிடத்தில் வரம் பெற்ற மருத்துவர் இருவரால் அந்தமாயவன்தலை உடலுடன்பொருந்தக்கடவது. எம்மை அடுத்தவர்களாகிய இந்தமருத்துவர் இருவரும் எமது கட்டளையால் இன்று முதல் அவிப்பாகம் பெறக்கடவர். என்று சொல்லுதலும், மீண்டும் பணிந்துதுதிசெய்து, உடைய நாதனே! உன்னருளால் நான்புற்றுகக்கிளைத்து அந்தமாயவன் ஏந்திய வில்லின் நாண் அற்றுப்போக, அதைத் தின்னும் திறம் பெற்றேன். ஆதலின் கொடியவினைகளைப்போக்கும் இந்தத்தலம் வன்மீக நாதம்என்று சொல்லப்படவும், இதைக் கண்டு தொழுகின்றவர்கள் பிறவிப் பிணி நீங்கவும், வரந் கொடுத்தருள வேண்டுமென்று கை ஏந்த, அப்படியேவரம்கொடுத்தோமென்று சொல்லி, மறைந்தருளுதலும். இந்திரன் மீண்டும் மருத்துவர் இருவரைக் கொண்டு, எச்சன் தலையை முன்போல் பொருந்தச் செய்வித்தவுடன், செந்தாமரைக் கண்ணனுகிய திருமால் சிவாநுக்கிரகத்தால் உயிர்த்தெழுந்து கோவைப் பழம்போற் சிவந்தவாயினையுடைய பார்வதிபாகனுகிய பரமபதியைத் தொழுது, அந்தப்பரமபதி கட்டளையின்படி தன்னைப் பிழைப்பித்த மருத்துவர் இருவர்க்கும் அவிப்பாகம் ஏற்படுத்தி விட்டுப் பின்பு வைகுண்டத்திற்போய் வாழ்ந்திருந்தனன்.

கேட்டீர்களோ முனிவர்களே! எல்லாரும் புகழும்படியான புருஷோத்தமனுகிய மாயவனே இந்தப் பிரகாரம் இழிவு அடைந்து, இடர்ப்பட்டமையால், இவ்வுலகத்தில் செல்வத்தை யாவது, தேகத்தையாவது அல்லது புகழையர்வது விரும்புவதும் பெருந்துன்ப மேயாம். ஆதலின் துன்பத்திற்கே ஏதுவாகிய புகழையும், இகழையும் நாடாமல் இன்பத்திற் கேகாரணமாகிய எம்பெருமான் திருவருளை நாடுதலே நன்று.

வன்மீகநாதன் மலரடி போற்றி.

## இருபத்தேழாவது.

# வயிரவீசப் படலம்.

பாசவைராக்கியப்பாக்கியவான்களே! வச்சிரபாணியாகிய இந்திரன்வண ங்கிவாழ்த்திப் பேறுபெற்ற வன்மீகநாதத்தின் மகிமைசொன்னோம். இனி அந்த வன்மீகநாதத்திற்குத் தெற்கில் விளங்கும் வயிரவீசத்தின் வரலாறு சொல்வோம்கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

மேருமலைத்தொடாைச்சேர்ந்த உஞ்சமான் என்னும் உன்னத பர்வத த்தில் சிலமுனிவர்கள்கூடித்தவம்செய்துகொண்டிருக்கையில், அன்னவா கனனுகிய பிரமதேவன் ஐந்துமுகத்துடன்காட்சிகொடுக்கக்கண்டு, அவன் பாதத்தைப்பணிந்து துதித்துக் கைகூப்பித் தொழுதுகேட்கலானர்கள்.

சதுர்வேதத் தலைவனே! பல விசித்திரமாய் விளங்கும் இவ்வுலகத்தி ற்கு மூலகாரணன் எவன்? உலகமெல்லாம் எவனிடத்தில் உற்பத்தியாகி ஒடுங்கும்? ஆன்மாக்களின் பாசத்தளையை அறுத்துப்பரகதி கொடுப்பவன் எவன்? அடியேங்களுக்கு விளங்கச் சொல்ல வேண்டுமென்று வேண்டு தலும், பிரமதேவன் பிராந்தியால்பிரமித்து, அந்தமுனிவர்களைப்பார்த்து, முனிவர்களே! இந்த இரகசியப் பொருளை எல்லாரும் உய்யும்படியாய்ச் சொல்லுகிறேம், கேளுங்கள். அகில லோகங்களுக்கும் நானே அதிபதி. உலகமெல்லாம் என்னிடத்திலே தான் உற்பத்தியாகி ஒடுங்கும். உயிர் கள் எல்லாம் என்னைத் தொழுது துதிசெய்தே கதி அடையும். இது சத்தியம். என்று சொல்லியவுடன் வேதங்கள் எல்லாம் அவ்விடத்தில் தோன்றி, அவன் எதிரில்நின்றுசொல்லலுற்றன. தாமரைப்பூங்கட்டவிழத் தோன்றினவனே! வேதாகமபுராண சாஸ்திரங்கள் எல்லாம் சிவபெரு மானையே மூலகாரணன் என்று வியந்து சொல்லும். அந்தச் சிவபெரு மானேபாசம்கழிந்தபரம். அவனேபிரமம். அவனே அநாதியானவன். அவ னே அகிலலோகங்களையும் தரும் காரணன். அனைத்துயிர்க்கும் அவனே தலைவன். தன்னைத் தொழுகின்றவர்களுக்குச் சதானந்த வீடுதருபவனும் அவனே. என்று சமூகமாய்ச்சொல்லியதும் அல்லாமல் தனித்தனியாயும் சொல்லலுற்றன.

முதலாவது இருக்குவேதம் எதிர்த்துப், பிரமாவே! அந்தச்சங்கரனே எச்சனுக்கும், இமையவர்களுக்கும், எல்லாவேதியர்களுக்கும் இராஜனும், இராஜ ராஜேஸ்வரனும் ஆவன். அவனே உன்னைப்படைத்து எல்லாவுல கங்களையும் படைக்கும் திறம் உதவும் ஞானமூர்த்தி என்று அறிந்துகொ ள் என்றது.

இரண்டாவது யசுர்வேதம் எழுந்து நின்று, பிரமாவே! உருத்திரர்களாலும் சரபாதியர்களாலும் சகல தேவர்களுடைய சமர்த்தை அழித்தவன் எவனோ, அவனே சகலலோக காரணன் என்று கண்டுதெளி என்றது.

மூன்றாவது சாமவேதம் முன்னின்று, பிரமாவே! வெற்றிதோல்வி இல்லாமல் சண்டை செய்யும்போது, கூட்டத்தின் நடுவிலேவந்துநின்று, ஒரு சிறு துரும்பை நட்டு, இதை இரண்டு துண்டாகவெட்டுங்கள், பார்ப்போம் என்று திருமால் முதலிய தேவர்கள்செருக்கை அழித்தவனும்; அபயமிட்டலறிய அமரர்பொருட்டாக ஆலாலவிஷம் உண்டவனும் எவனோ, அவனே அகிலலோக காரணன் என்று அறிந்துகொள் என்றது.

நான்காவது அதர்வணவேதம் அதட்டி எழுந்து, பிரமாவே! காற்றுக்கு மூலமாகிய ஆகாயத்தைப் பசுந்தோல்போல் சுருட்டவல்லவர் இருப்பாரானால், பார்வதி பாகனாகியபசுபதி அருள் இல்லாமல், பரகதி அடையக்கூடும் என்று நன்முகத் தெரிந்துகொள் என்றது.

இந்தப்பிரகாரம் நான்குவேதங்களும் தனித்தனியாயும், அந்த முனிவர்கள் முன்சொல்லியதைக்கேட்டுப், பிரமதேவன் மாயாவசத்தனாகி, மருண்டு வெகுண்டு வேதங்காள்! நீங்கள் இப்போது சொல்லிய தர்ம்மகுணசீலனாகிய உருத்திரன்தான் மனம்வாக்குக் காயங்களைக் கடந்துவிளங்கும் நிஷ்களமான பரம்பொருள், மகிமைபெற்றோங்கும் ஓம் என்னும் பதத்திற்குப் பொருள், சம்பு என்றுசொல்லுதல் எவ்வளவும்சரி அன்று, என்று மறுக்க, அந்த ஓம் என்னும் பிரணவ மந்திரம் ஒரு வடிவம் கொண்டு வந்து முன்னின்று, பிரமாவே! நீ மதிமயக்கத்தால் இப்படிச்சொன்னாய், யான் சொல்வதைக் கேள் என்று சொல்லலுற்றது. நான், வேதத்தின் ஆரம்பத்தில் சொல்லப்பட்டு, அந்த வேதத்தின் முடிவிலும் நாதமாத்திரையாய் நிறுத்தப்படும் தன்மையுடையேன். அந்த நான்கு வேதங்களுக்குள் அடங்கி முற்றிலும் விளங்கும் எனக்கும் ஆதிகாரணன் எவனோ அவனே அந்தமகேசன்.

"காமநாசனே கடவுளாமெனா
ஓமெனும்பத மோதிநின்றதே."

இந்தப்பிரகாரம் எடுத்துச்சொல்லிய பிரணவ மந்திரத்தையும் இகழ்ந்து, தன்பெருமையையே பெருமையாகப்புகழ்ந்து பேசும்போது, துளசிமாலையணியும் திருமால் அவ்விடத்திலே தோன்றி, நிச்சயமாக நானே சகலலோக கர்த்தா என்று சொல்லினன். இவ்வாறு இவர்கள் இருவரும் ஆணவ மலத்திற்கு ஆளாகி அகங்காரம்கொண்டு, மேன்மேலும் பகைத்

துப் பெரும்போர் செய்கையில், செந்தாமரை மலர்போல் இரண்டுகண்களையும் அரும்புபோல் ஒருகண்ணையும் பொன்னிறம்பெற்ற சிகையையும் மீசையையும் திருமேனியையும்கொண்டு, சூரியமண்டலத்திலே வீற்றிருக்கும் சிவபெருமான், அந்தக்கலகத்தைகண்டு, அவர்களைச்சமாதானப்படுத்தும்பொருட்டு, ஒரு திரு உருவங் கொண்டு, சடுதியில் அவர்களுக்கு முன்பொன்மலைபோலும்தோன்றி நின்றார். அதைக்கண்டவுடன் திருமால் திடுக்கிட்டுப் பயந்து, அவ்விடம்விட்டு அப்பாற் போய்விட்டான். பிரமதேவன் அந்தக்கடவுள்நாயகனைக்கண்டு, சிறிதும் அஞ்சாமல், என்மகனே! இங்கேவா என்று அழைக்கக், கோபங்கொண்டருளிய எம்பெருமான் திருமேனியிலிருந்து தோன்றிய வயிரவமூர்த்தி பிரமாவைத் தாக்கப் போதலும், அந்தப் பிரமதேவன் பிரமாஸ்திரத்தை அபிமந்திரித்து விட்டான். யாவராலும் தடுக்கப்படாத அந்தப் பிரமாஸ்திரம் அதி வேகமாய் வந்தது. அது தவிடுபொடி யாகும்படி அதைப்பார்க்கிலும் அதிவேகமாய்ச் செல்லுகின்ற வயிரவமூர்த்தி, சிவதூஷணம் செய்த அந்தப் பிரமாவினுடைய ஐந்து தலைகளில் ஒருதலையைத்தன்கை நகத்தால் கொய்துவிட்டார். அதனால்பிரமதேவன் வலியிழந்து உயிர்மாண்டு விழுந்த பின்பு, சிவானுக்கிரகத்தால் மீண்டு பிழைத்து, மருள்தீர்ந்து எழுந்து நின்று எம்பெருமானைத் தொழுது துதிசெய்கின்றான்.

தாமரைப் பொகுட்டில் இருக்கும் என்னை எடுத்தாண்டவனே! என்னுயிர்த் துணைவனே! புலித்தோலுடையானே! பரமனே! பினகபாணி! உனக்கு நெய் அவி ஊட்டி ஓமம் வளர்த்து வருகிறோம். மாளாமல் வாழும் வாழ்வைக்கொடுத்து எங்களைப் பாதுகாத்தருள்க. மண்ணுலகத்திற்கும் விண்ணுலகத்திற்கும் நடுவேதோன்றினவனே! அஞ்சாமையும், அதிககோபமும், கொடியசெய்கையும், எருமைக்கடாவின்மேல் ஏறிவிரைந்து செல்லுதலும் உள்ள எமன் வீசும் காலபாசத்தைக் கண்டித்துத் துண்டித்து அடியேங்களைப் பாதுகாத் தருள்க. உலகமெல்லாம் உற்பத்தியாகும் காலத்திலே, ஒருவனாகி நின்றவனே! அண்டங்களைக் காத்து ஆளவல்லவர்களை அணி அணியாய்ப்படைத் தருள்பவனே! விசாலமான இடத்தையுடைய உலகமெல்லாம் மீளவந்து ஒடுங்க வீற்றிருந் தருள்வோனே! திருவருள்புரிந்து யாங்கள் கொடுக்கும் நெய்யவியைத் திருவமுது செய்து, தீர்க்காயுளைக்கொடுத்து, அடியேங்களை ஆதரித்தருள்க. தக்கன் புத்திரி, அம்பிகை, இலக்குமிகோ அகிலகாரணி, மலையரசன் மகள் என்னும் பெயரையுடைய மகாதேவி! பராசத்தி! வினைதீர்ந்து உய்யும்பொருட்டு உன் பாதார விந்தங்களைப் பலமுறையும் பணிகின்றோம். அடியேங்களுக்குத் தீர்க்காயுள் கொடுத்துக் காத்தருள்க. அகிலலோகங்களையும் பெற்று பெற்றெடுத்த அம்மை அப்பராகிய உங்களுடைய பாதமே கதி என்று

துதிசெய்கின்ற பிரமதேவனுடைய தோத்திரத்திற்கு மனம் இரங்கிக் கருணைமிகுந்து, பார்வதியை இடப்பாகத்திற் கலந்து, யமனுடைய உயிரைக்குடித்துப் பகைவர்களை அழித்தருளும் பரசுபாணியும் ஆகி பகவனும் ஆகிய சிவபெருமான் அந்தப்பிரமதேவனைப்பார்த்து இந்த வார்த்தை சொல்லலானார்.

அன்னவாகனு! கேள். இந்த நாள் முதல் நீ நான்முகன் ஆகி எமது கட்டளை நெறி தப்பாமல் இனிது வாழ்வாயாக. நீ வேண்டும்வரம் யாது? சொல் எனக் கேட்டு மகிழ்ந்து, நாயினுங் கடையேன் உய்ந்தேன், உய்ந்தேன், சுவாமி! உன் திருவடியில் மாறுத பத்தி கொடுத்து அடியேன்செய்தகுற்றங்கள் அனைத்தையும் பொறுத்தருள்வாய் என்று வேண்டுதலும், அவ்வரங்களைக் கொடுத்துப்பின்பு, கூர்மையான சூலமும் கபாலமும் கொண்டு,கைகூப்பித்தொழுது, ஒருபக்கத்தில் நிற்கும் வயிரவ மூர்த்தியைப் பார்த்துக், கரிய மேனியனே ! கால வைரவனாகிய நீ கலவிகரணனும் (ஞானத்தை விருத்தி செய்பவனும்) பெலவி கரணனும் (பலத்தை விருத்திசெய்பவனும், பெலப்பிரமதனனும் (பிறர்பலத்தை அழிப்பவனும்) ஆகின்றாய். மேலும், சர்வபூததமனன் (பஞ்சபூதங்களையும் அழிக்க வல்லவன்) ஆகிய நீ எம்முடைய குமாரர்களில் மூத்தகுமாரன் ஆகின்றாய் என்று திருவருள் புரிந்து, நீ இந்தக்கணங்கள் புடைசூழ்ந்து வரத், திருமால் முதலிய தேவ லோகங்களுக்குப் போய் உதிரபலியேற்று, அவர்கள் அகங்காரத்தை அழித்துப், பிரமதேவனை அடுத்திருக்கும் இந் தமுனிவர்கள் செருக்கையும் அகற்றுவாய், என்று திருவாய் மலர்ந்தருளிய பரமபதியைப் பணிந்து, விடைபெற்றுக்கொண்டு, வயிரவமூர்த்தி புறப்பட்டார். இப்பால் சந்திரசேகரனாகிய சிவபெருமானும் மறைந்தருளினார். மறைந்தருளவே, பிரமதேவன் முதலிய யாவரும் அவரவர் இடம் போய்ச் சேர்ந்தார்கள். எப்படிப்பட்ட வீரர்களும் அஞ்சும்படி தோன்றிய வயிரவமூர்த்தி முந்தி வைகுண்டத்திற்குப் போக, அங்கே தடைசெய்த துவாரபாலகனைத் துரத்தி, விடுவச்சேனனைத் தாக்கி, அவனைத் தன் சூலத்தின் நுனியில் கோத்துக்கொண்டு, மாயவன்வசிக்குமிடத்தில் உதிரப்பிச்சை எடுக்கவரும் செயலை அந்தமாயவன் கேள்விப்பட்டுத் தன் பத்தினிகளாகிய ஸ்ரீதேவி பூதேவி என்னும் இருவரும் தொடர்ந்துவர எதிர்கொண்டுவந்து, செச்சைமலர் போலுந் திருவடிகளைத் தாழ்ந்து பணிந்து, யாவரும் மெச்சும்படி தன் நெற்றிநரம்பைப்பிடுங்கி, அதன்மூலமாய் அந்தப் பிரமகபாலத்தில் இரத்தப் பலியிட்டான். அந்த இரத்தம் நெடுங்காலம் தாரைதாரையாய் ஒழுகியும் அந்தப் பிரம கபாலத்தை நிறைக்க மாட்டாமற் போயிற்று.

உதிரமெல்லாம் வற்றிப்போனமையால் மாயவன் மூர்ச்சையாய் விழுந்தான். அப்பொழுது வயிரவமூர்த்தி திருவுளத்திரங்கித் தன் மலர்க்கையால் தடவிய வுடன் அந்தமூர்ச்சை தெளிந்தது. சாரங்கபாணியாகிய திருமால் ஆயர்சந்திர்ந்து எழுந்துநின்று, கைகூப்பித் தொழுது, சுவாமி! நான் உன் திருவடிப் பத்தியும் உன் அருளும் பெறும்படி திருவுளம் செய்க என்று வேண்டுதலும், பரிந்து அவ்வரம்கொடுத்து அவ்விடம்விட்டுப் பிற இடங்களுக்கு உதிரபலி ஏற்கச்சென்று, உலகமெல்லாந்திரிந்து தேவர்கள் செருக்கை அழித்துப், புன்னகைசெய்து ரிஷி பத்தினிமார்களையும் மயக்கி, மயல்பூட்டிக், காஞ்சிமா நகரத்தைச் சேர்ந்து, உதிரபலி ஏற்ற பிரமகபாலத்தை ஓரிடத்தில்வைத்துத், திருமால் வேண்டிக்கொண்டதனால் சூலத்தின் நுனியில் கோப்புண்டு கிடந்த விடுவச்சேனனை விடுவித்து, அந்தத் திருமால்வசம் சேர்த்துப் பின்பு தன் பெயரால் வேதநாயகனாகிய வயிரவீசனை ஸ்தாபித்து வந்தனை வழிபாடுசெய்து, ஐயனே! வேதத்தின்முடிவில் நடனம் செய்தருள்பவனே! என்னை ஆண்டவனே! நீ பார்வதி சமேதனாய் எந்நாளும் இந்த இலிங்கத்தில் வீற்றிருந்தருள். நானும் உன் சந்நிதானத்தின் எதிரில் வாசம்பண்ணி உய்யும்படி அடியேன் செய்யத்தக்க பணிவிடையை அநுக்கிரகம் செய். என்று மேன்மேலும் வேண்டலால் சிவபெருமான் திருவருள் சுரந்து காட்சிகொடுத்தருளி, அன்பனே! நீவேண்டியபடியே யாம் இங்கு வீற்றிருக்கின்றோம். நீ எமது சந்நிதானத்தின் எதிரில் இருந்து கொண்டு இந்தக் காஞ்சிமாநகரத்தைக் காவல்செய். பிரமகபாலத்தில் உள்ள இரத்தத்தைக்கணங்களுக்கு உண்ணக் கொடுத்துவிடு என்றுமறைந்தருளுதலும், வயிரவக்கடவுள் கபாலத்தில் உள்ள இரத்தைக் கணங்களுக்குக் கொடுக்க, அந்த இரத்தமெல்லாம் சில கணங்களுக்கே போதாமைகண்டு, பூலோகத்திலே போர்க்களத்தில் நின்று போர்செய்யும் வேந்தருடன் பகைத்துப் போராடி மாண்டு போகும் வீரர்கள் வீரசுவர்க்கம் அடையவும், அந்த மாண்டுபோன வீரருடைய உதிரமெல்லாம் உண்டுமகிழவும் ஏற்படுத்திக், காஞ்சிமா நகரத்தைக் காவல் செய்துகொண் டிருக்கின்றார்.

முனிவர்களே! ஆயர்பாடியிலே வெண்ணெய் திருடியுண்ட அந்த மாயவனுடைய ஆயாசந்தீர்த்தருளிய வயிரவக்கடவுள் தொழுது துதி செய்த வயிரவீசனை வணங்கி வாழ்த்துகிறவர்கள் எல்லாரும் அவமரணத்துக்கு ஆளாகாமல், முடிவில் அநாயாச மரணமடைந்து, சிவபெருமான் திருவடி நீழலைச்சேர்ந்து சிறப்புற்று வாழ்வார்கள்.

வயிரவீசன் மலரடிபோற்றி

---

## இருபத்தெட்டாவது.

# விடுவச்சேனீசப்படலம்.

பற்றற்று விளங்கும் பரமஞானிகளே! அழகிய பூஞ்சோலை சூழும் காஞ்சிமாநகரத்தில் சிறந்திருக்கும் வயிரவீசத்தின் மகிமைசொன்னேம். இனி ஆதி அந்தமில்லாத சிவபெருமான் அமர்ந்தருளும் அந்த வயிர வீசத்திற்குத் தெற்கேயுள்ள விடுவச்சேனீசத்தின் பெருமைசொல்வோம். கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

கொடிய தக்கன்செய்த யாகம் அழிந்தபின்பு மாயவன் சந்திரசேக ரனுடைய சரணாரவிந்தத்தைத் துதிசெய்து, விடைபெற்று மீண்டு, விர சாநதியைக்கடந்து வைகுண்டம் அடைந்து, நவரத்தினமயமாய் விள ங்கும் பீடத்தின்மேல் ஏறி வீற்றிருந்து யோசிக்கலானான். விடுவச்சே னன் முதலாகிய மந்திரி முதலானவர்களுக்குத் தக்கன் யாகத்தில் நட ந்ததையும், தான்பட்ட பாட்டையும் எடுத்துச் சொல்லி, மந்திரிகளே! இராட்சதர்களையும், அசுரர்களையும், போரிற் கொலைசெய்து, உலகமெல் லாம் பாதுகாப்பதே என்தொழில்.

சூரியமண்டலம்போல் விளங்கும் என் சக்கராயுதமானது வச்சிர தேகம்பெற்ற ததிசிமுனிவனால் கூர்மடிந்துபோயிற்று. இனி உழுவதற் குக் கலப்பையில்லாமல் பயிரிடத்தொடங்கும் ஓர் உழவன் போல் ஆயுதமில்லாமல் அகிலலோகங்களையும் நான் எப்படிக்காப்பாற்றக் கூடு ம்? அந்தச்சுதரிசனம் என்னும் சக்கராயுதமானது பூர்வம் சிவபெருமா ன் சலந்தரா்சுரனைக் கொல்லப்படைத்துப் பின்பு அவர்கொடுக்க நான் பெற்றுக்கொண்டேன். அந்தச்சக்கராயுதத்தை இந்த நாள் தக்கன் யாக த்தைக் கெடுக்கவந்த வீரபத்திரன்மேல் விட்டவுடன் அந்த வீரபத்தி ரன் பூண்டிருந்த தலைமாலையில் ஒருதலையானது அதை வாயிற் போட் டுக்கொண்டது. இனி என்னசெய்யலாம்? சொல்லுங்கள். விஷப்பல்லை யிழந்துபோன பாம்பின்சீறலும், பகைவர் அஞ்சும்படி ஓடிப்பாயும் தந் தங்களையிழந்த யானைவலியும், எதிர்த்தவர் மார்பில் ஊடுருவப்பாயும் இர ண்டுகொம்பும் இழந்துபோன எருதின் கோபமும், ஆயுதம் இழந்துபோ னவீரனுடைய வீறுப்பும், என்னசெய்யும்? மலைபோலுந் தோள்களையு டையவர்களே! சக்கராயுதம் கையில் இருந்தால் சிவபெருமான் திருவ ருளால் உலகமெல்லாங் காவல்செய்வேன். அல்லாமல் நான் என்ன செய்வேன். என்று கவலைப்பட்டு வருந்தும்போது, அந்த மாயவன் சேனபதியாகிய விடுவச்சேனன் எழுந்து நின்று சபையைப்பார்த்துச்

சபையோரே! முன்பு என்னை வயிரவமூர்த்தியின் சூலத்திலிருந்து மீட்டல்செய்த இந்தமாயவனுக்கு அந்தச்சக்கராயுதம் கொண்டுவந்து கொடுத்து என்கடனைத் தீர்த்துக்கொள்வேன். என்று சொல்லிப்பின்பு மாயவனைத்தொழுது சுவாமி! நான் இப்பொழுதே வீரபத்திரசுவாமியிடம் சென்று அவர்மன மகிழச்செய்து அந்தச்சக்கராயுதத்தைக் கொண்டுவருகின்றேன். விடைகொடுக்கவேண்டும் என்று போற்றுதலும், மாயவன் அந்த விடுவச்சேனனை வியந்துகொண்டாடி விடை கொடுக்கப்பெற்று மீண்டு வீரபத்திர மூர்த்தி வீற்றிருக்கும் இடத்தின் தலைவாசலில் வந்தபோது, அங்குக்காவலாயிருந்த பானுகம்பன் முதலானவர்கள் கோபங்கொண்டெழுந்து அச்சப்படுத்தி அதட்டி, வருத்த முண்டாகும்படி கைகொண்டு கழுத்தைப்பிடித்து நெட்டி நெடுந்தூரத்தில் தள்ளி விடுதலும், அவ்விடத்தில் அவன் மிகவும் சஞ்சலப்பட்டு, அந்த வழியே போகின்ற முனிவர்களைப்பார்த்து அவர்களை அணுகிப், பானுகம்பன் முதலானோர் செய்த கொடுமைகளையும் தன்வரலாற்றையும் அவர்களுக்கு விளங்கச்சொல்லி, ஐயமாரே! இனியான் செய்யவேண்டியதை நீங்கள் சொல்லுங்கள் என்று வேண்ட, அந்த முனிவர்களும் நெடுநேரம் யோசித்து, அப்பா! நீ காஞ்சிமா நகரத்தில்போய்ச் சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணிப் பூசித்துப் போற்றுவாயானால், உன் எண்ணமெல்லாம் ஈடேறும். என்று சொல்லக்கேட்டு மகிழ்ந்து, ஆதொண்டைக்கனி போலும் செவ்வாயினையுடைய காமாட்சிதேவி சமேதனாகிய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் காஞ்சிமாநகரத்தைச்சேர்ந்து, தன்பெயரால் விடுவச்சேனீசம் என்னும் இலிங்கப் பிரதிஷ்டை செய்துமகிழ்ந்து பூசை பண்ணித்துதித்துப் பேரன்புகொண்டு அகோரமான தவம் செய்து கொண்டிருந்தான். அந்தக்காலத்தில் விஷத்திற்கொப்பான வியாக்கிரன், அசகரன், பஞ்சமேட்டிரன் என்னும்பெயர்பெற்ற மூன்று அசுரர்கள் தவம் செய்து பெற்ற வரத்தால் பெருமை அடைந்து சகல லோகங்களும் நடுங்கத் தீமைசெய்து வந்தார்கள். அந்த அசுரர்களைக் கொல்வதற்குத் தேவர்கள் எல்லாரும் பிரமதேவனுடன் கலந்து யோசனைசெய்து, மாயவன்கையில் சக்கராயுதம் இல்லாமையை உணர்ந்து, எம்பெருமானிடத்தில் வந்து மகிழ்ந்து வணங்கி விண்ணப்பம் செய்து வேண்டுதலும், மலைவளர் காதலிக்கு மணாளனாகிய சிவபெருமான், திருவுளமிரங்கி வீரபத்திர சுவாமியை அனுப்ப, அவர்போய் அந்த அசுரர் மூவரையும் போர்செய்தழித்து மீண்டு காஞ்சிமா நகரத்திற்கு வரும்போது, அந்தமார்க்கத்தில் தவம் செய்துகொண்டிருந்த விடுவச்சேனன் தன் கவலையெல்லாம் பறந்தோடும்படி அந்தவீரபத்திரசுவாமியை எளிதிலே காணப்பெற்றான்.

மாதவர்களே! நெடுங்காலம் முயன்றும் காண்பதற்கு அருமையான அந்த வீரபத்திரசுவாமியை யாதொரு முயற்சியும் இல்லாமலே காணப் பெற்றான். என்றால், சிவபூசையால் வரும்பேறு சொல்ல யாரால் முடியும்? தான் தேடிக்கொண்டு போகும் தீர்த்தமெல்லாம் எதிரே வரக் கண்டு ஆடப்பெற்றவன்போல் அந்த விடுவச்சேனன் அகமகிழ்ந்து, தாழ்ந்து பூமியில் விழுந்து பணிந்து சுருதிமுறையாகத் துதிக்கின்றான். பஞ்சபூத சம்பந்தமான உலகமெங்கும் வியாபித்திருப்பவனே! சரணம். நான்கு திசைக்குட்பட்ட மண்ணுலகமும் விண்ணுலகமும் அழியாதிருக்கும்படி ஏந்திய உன் வில்லுக்கு ஒருசரணம். அன்பர்க்கு அன்பனே! அனந்தம் சரணம். கொடியவர்களுக்குக் கொடும்புலி போன்றவனே! சரணம் சரணம். என்று வாழ்த்துதல் செய்யக்கேட்டுத், திருவுளம் மகிழ்ந்து, விடுவசேனா! நீ வேண்டும் வரம் யாது? என்று கேட்கக், கைகூப்பித்தொழுது நின்று, சுவாமி! பார்வதி பாகனாகிய பரமபதியின் மகிமை உணராத் தக்கன் யாகத்தைத் தாங்கள் அழித்தபோது, தங்களைக் கண்டு தெளியாமல் போர்செய்யத்தொடங்கி மாயவன் தங்கள்மேல் விட்ட சக்கராயுதத்தைத் தாங்கள் தரித்திருக்கும் தலைமாலையில் ஒரு பிரமகபாலம் பிடித்து விழுங்கிவிட்டது. அந்தச் சக்கராயுதத்தை இப்பொழுது அடியேனுக்குக் கொடுத்தருளவேண்டும் என்று சொல்லக்கேட்டு, விடுவசேனா! நீ சொல்லியது எம்மிடத்திலில்லை, கபாலத்தின் வாயில் இருக்கு மானால் எவ்விதத்தினாலாவது அதுவே கொடுக்க நீ வாங்கிக்கொள் என்று சொல்லக்கேட்டு, இனி என்ன செய்யலாம் என்று யோசித்து, எல்லாரும் கண்டு சிரிக்கும்படியாக இரண்டு காலகளையும் இரண்டு கைகளையும் கோணலாக்கிக்கொண்டு, வீரகண்டை தரித்த வீரபத்திரசுவாமி முன்பு நின்று, வாய், மூக்கு, கண் இவைகளை மாறி மாறிச் சுருக்கி அசைத்துப் பார்க்கின்றவர்கள் பயந்து நடுங்கப் பல்லை இளித்துக்காட்டி உடம்பை ஒடுக்கி வளைத்துக் கூனிநெளிந்து விகடகூத்து (கோணங்கிக் கூத்து) ஆடக்கண்டு, வீரபத்திரசுவாமி குலுங்க நகைத்தலும், உடனே சூழ்ந்திருந்த கணங்கள் எல்லாரும் கடல் முழக்கம்போல் முழங்கிச் சிரித்தார்கள். அப்பொழுது அந்தப் பிரமகபாலமும் அந்தக் கோணங்கிக் கூத்தைப்பார்த்துச் சிரித்தது. சிரித்தவுடன் அதன்வாயிலிருந்து சக்கராயுதம் பூமிமேல் விரைந்து விழக்கண்டு, விநாயகக்கடவுள் அதைக் கையாற்பிடித்து மறைத்து ஒன்றுந் தெரியாதவர்போல் மௌனமாயிருக்கப்பார்த்து, விடுவசேனன் இனி இதற்கு என்ன செய்யலாம் என்று ஏங்கித்திகைத்து அந்த விநாயகக்கடவுள் சந்நிதானத்திலும், முன்போல் விகடக்கூத்தாடி வேண்டிக்கொள்ள, அந்த விடுவச்சேனன் ஆசையால் தாழ்ந்து ஆடும் விகடக்கூத்தைநெடுநேரம்பார்த்து, அந்த விநாயகக்கடவுள்அருள்சுரந்து,

அந்தச் சக்கராயுதத்தைக் கொடுத்தருளினார். வரம்பெற்றுயர்ந்த மாதவர்களே? இந்தக்காரணத்தால் அந்தநாள் முதல் காஞ்சிமாநகரத்தில் அந்த விநாயகமூர்த்தியை விகடசக்கரவிநாயகன் என்று உலகம் எடுத்துச் சொல்லும். இப்பால்விகடசக்கரவிநாயகமூர்த்தி கொடுத்தருளிய அந்தச் சக்கராயுதத்தை விடுவச்சேனன் அகமகிழ்ந்து வாங்கித் தொழுது, மீண்டு, மாயவன் பாதாரவிந்தங்களை வணங்கிக் கொடுத்துவிட்டான். சேஷசயனனாகிய அந்தத்திருமால், அதைக்கண்டு கவலை யெல்லாம்விண்டு, அந்த விடுவச்சேனனைத் தழுவிக்கொண்டு, வியந்து கொண்டாடித், தனக்கு மந்திரியாயிருந்த அந்த விடுவச்சேனனுக்குத் தேவர்கள் எல்லாரும் புகழும்படி சேனாதிபதி பட்டங்கொடுத்து, உருத்திரமூர்த்திபோல் எல்லாவற்றையும் அழிக்கவல்ல வீரபத்திரசுவாமியிடத்தில் நீபோய் இந்தச்சக்கராயுதம் பெற்றவிதம் எப்படி? சொல் என, அவன் நடந்த வரலாறு அனைத்தும் சொல்லக்கேட்டுச், சிரித்துப் பகைவர்களுக்குச் சிங்கம்போன்றவனே! அந்த விகடநாடகத்தை எமக்கு எதிரிலே செய்து காட்டு என்று சொல்லியவுடன் அப்படியே ஆடிக்காட்டினான்.

அந்த விகடக்கூத்தைப்பார்த்து மாயவன் அற்புதம் அடைந்து மகா பராக்கிரமசாலியே! கண்ணும் கருத்தும் களிக்கும்படி செய்யும் இந்த அற்புதக் கூத்தைக்கண்டு மகிழாதவர்கள் யார்? ஒருவருமில்லை. எமக்குப்பரம சந்தோஷம் தரும் இந்தக்கூத்து. இனிமேல் எம்முடைய சந்நிதானத்தில் நின்று ஆடுகிறவர்கள் எமக்கு அடியவர் ஆவார்கள். அவர்கள் வேண்டும்வரமும் விரைந்து கொடுப்போம். நவரத்தின மயமாய் விளங்கும் காஞ்சிமாநகரத்தில் வரதராஜன் என்னும் பெயர்கொண்ட எமது சந்நிதானத்தில் அன்புடன் இந்தக் கூத்தாடுகிறவர்கள் எவர்களோ அவர்கள் எமக்கு மிகுந்த அன்பர் ஆவார்கள். என்று சொல்லிப் பின்பு உலகமெல்லாம் புகழ்ந்து பேச, அந்தச் சக்கராயுதத்தை ஆகமவிதிப்படி பூசைசெய்து, சந்தோஷத்துடன் தன்கையில் எடுத்துக்கொண்டு விடுவச்சேனா? முன்னாள் காஞ்சிமா நகரத்திலே வயிரவமூர்த்தியைப் பிரார்த்தித்துச் சூலாயுதத்தின் நுனியில் கோப்புண்டு கிடந்த உன்னை நான் விடுவித்தேன். அதற்கு ஈடாக நீ இந்தநாள் எனக்கு இந்த உபகாரம் செய்தாய், உலகத்திலே ஒருவர்செய்த நன்றியை நினைக்கிறவர்களும், அந்த நன்றியின்பயனைப் பெறுகின்றவர்களும், உன்னையல்லாமல் மற்றொருவர் உண்டோ? இல்லை. நீ காஞ்சிமாநகரத்தில் தொழுது துதிசெய்த விடுவச்சேனீச லிங்கதரிசனம் பண்ணி, உன் பத்தி நெறியை உணர்த்தும் இந்தச்சரித்திரத்தை அன்புடன் கேட்பவர்கள் எல்லாரும் எமது பதவியாகிய வைகுண்டம் அடையக்கடவர்; என்று அந்த விடுவச்சேனனைத்தழுவி இருவரும் இனிது வாழ்ந்திருந்தார்கள்.

விடுவச்சேனீசன் மென்றாள் போற்றி.

---

இருபத்தொன்பதாவது

# தக்கீசப் படலம்.

தத்துவ ஞானத்தபசிகளே! அன்புடன் அடுத்தவர்கள் ஒருபோதும் விட்டுப்பிரியப்பெறாத விடுவச்சேனீசம் என்னும் தலமகிமைசொன்னோம். இனி அதன்கிழக்கில் நல்லமனமுடையவர்களுக்கு வேண்டும் வரம்கொடுத்தருளும், தக்கீசம் என்னும் தலமகிமைசொல்வோம் கேளுங்கள்என்று சூதமா முனிவர் சொல்லத் தொடங்கினார்.

தாமரைப் பூவில் வாழ்ந்திருக்கும் சதுமுகன் கட்டளைப்படி தக்கன் தவம்செய்து பெற்றவரத்தால் பல புத்திரர்களைப்பெற்றான். அந்தப் புத்திரர்கள் தங்கள்பிதாவின்சொற்படி உலகமெல்லாம்படைக்க உத்தேசம்செய்து வருந்தி, முயற்சிசெய்து கொண்டிருக்கும்போது, மகதியாழ் எடுத்து மதுரகீதம்பாடிச் சிவபெருமானைத்துதிசெய்யும் நாரத முனிவன் அங்கேவந்து, அவர்களைநோக்கி, நீங்கள் இங்கே என்ன செய்கின்றீர்கள் என்றுகேட்க, அவர்கள் ஐயனே! எங்கள் பிதா ஏவியபடி நாங்கள் சிருஷ்டிசெய்யும் திறம்தெரியாமல் திகைக்கின்றோம். சிருஷ்டிப்பதற்கு ஓர் உபாயஞ் சொல்லவேண்டுமென்று வேண்ட, அந்தநாரத முனிவர், மாதவர்களே! கேளுங்கள். படைத்தல் காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்துதொழில்களை இடையறாமல் நடாத்திவரும் முக்கண்மூர்த்தி ஒருவனே எல்லாவற்றையும் படைக்கவல்லவன். அவனையல்லாமல் நீங்கள்படைக்கமுயல்வீர்களானால், உங்கள்படைப்பெல்லாம் பாசபந்தத்திற்கே ஏதுவாகும். பாசபந்தத்திற்கு ஏதுவாகியபடைப்பினால் வரும்பயன் என்ன? எப்படிப்பட்டவர்களும் தம்மைக் கட்டிய கட்டை அறுத்துக்கொண்டு தப்பிப்போகும் வழிதேடுவார்கள். இதனை நன்றாகத் தெரிந்துகொள்ளுங்கள். கருணைக்கடலாகிய நீலகண்டப்பெருமானுடைய சீர்பாதகமலங்களைச் சேவித்துத் தியானிப்பதொன்றே கட்டறுத்துக் கதிகொடுக்கும். அல்லாமல் மற்றையகாரியமெல்லாம் பாசபந்தத்தையேகொடுக்கும். ஆன்மாக்களுக்கு உறுதிப்பொருளாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கில் வீடு என்றே மிகச் சிறந்ததாம். மற்றைய மூன்றினால் வரும் துன்பங்கள் சொல்லிமுடியாது. ஆதலால், நீங்கள் எல்லாரும் பார்வதிபாகனாகிய பரமபதி வீற்றிருக்கும் காஞ்சிமா நகரத்தைச்சேர்ந்து, சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து, பூசித்துச் சிவானுக்கிரகத்தால் உண்டாகும் சிவஞானத்தினால் மாயப்பிறவிக்கு வித்தாகிய மும்மலங்களை ஒழித்து, முத்தியடைய முயலுங்கள் என்று

சொல்ல, அந்தமுனிவனைத் தாழ்ந்து பணிந்துமீண்டு, அவர்சொல்லிய படியே செய்து சிவானந்த வீடு பெற்றார்கள். அவர்கள் முத்தி அடைந்த செய்தியைத் தக்கன்கேள்விப்பட்டுப் பெருமூச்சுவிட்டுத் தனக்குள் வருத்தமடைந்து, வேறு புத்திரர்களைப்படைத்து, முன்போல் அனுப்பினான். இவர்களும் அந்த நாரதன் சொற்படி காஞ்சிமா நகரத்திற்திற்கு வந்து, சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணிப் பூசைசெய்து, சிவானந்த முத்திபெற்றார்கள். இதைக்கேட்டுத் தக்கன் துக்கசாகரத்தில் அழுந்தித், துன்பப்பட்டு, நாரதமுனிவனை நோக்கி, நாரதா! என்மக்கள் எல்லாருக்கும் சிவபத்தி உண்டாக்கி உலகவாழ்க்கையைக் கெடுத்துவிட்டாய். ஆதலின் உனக்கு மக்களும் மனைவியும் இல்லாமற்போகக்கடவது, என்று சாபம் கொடுத்துப் பின்பு, அந்தத் தக்கன் பெண்களையே பெற்றெடுத்தான். இப்பால் நாரதமுனிவன் கவலைப்பட்டுத் தக்கனைப்பார்த்து, உன் புத்திரர்கள் எல்லாரையும் நல்வழியில் செல்லவிட்டேன். அதற்கு நீ மனமகிழாமல் என்னைச் சபித்தாய். இந்தத் தோஷத்தினால் நீ எம்பெருமானாகிய சிவபெருமானால் தண்டிக்கப்படுவாய் என்றான். தக்கன் ஸ்திதி இதுவாகும். இப்பால் ததீசிமுனிவன் தன்னைப் பகைத்ததேவர்களைப்பார்த்துத் தேவர்களே! நான் பார்ப்பான். நிரபராதி, மேலும் தனியேன். என்னை வீணில் போர்செய்து எல்லாரும் நிஷ்காரணமாய் எதிர்த்தீர்கள். ஆதலால் நீங்கள் எல்லாரும் சிவபெருமான் கோபாக்கினிக்கு இரையாகக்கடவீர்கள் என்று சபித்தான்.

இப்பால் தக்கன், தேவர்கள் என்னும் இருதிறத்தாருக்கும் சாபம்பலித்தவிதம் சொல்லுகிறோம் கேளுங்கள். நாரத முனிவன் சாபம் கொடுத்தபின்பு தக்கன் மதிமயங்கிச் செருக்கடைந்து, சிவபெருமானை மாத்திரம் தள்ளிவைத்து ஓர்யாகம் செய்யத்தொடங்கினான். மருத்துவர் முனிவர், சித்தர், பன்னிரண்டு சூரியர், உருத்திரர், பிரம விஷ்ணுக்கள் மற்றும் உள்ளவர்கள் எல்லாரையும் ஒருமிக்கச்சேர்த்துக்கொண்டு யாகம் செய்யும்போது, ததீசிமுனிவன்கோபங்கொண்டு, சபையைப் பார்த்துத், தக்கனுக்குச் சொல்லுகின்றான். தக்கனே! காத்தருள் செய்யும் யாகத்தலைவனாகிய சிவபெருமானை இங்கே அழைப்பிக்காத காரணம் என்ன? என்றுகேட்கத் தக்கன் சொல்கின்றான். "எச்சத்தை எச்சத்தால்" தொழுக என்று தெரிவிக்கும் சுருதியானது மாயவன்றான் எச்சன் என்றும் சொல்லும். ஆதலின் யாகத்தலைவனாகிய மாயவனே அன்றித்தாமசகுணத்தனாகிய உருத்திரன் இங்கேவருவதற்குக் காரணமில்லை. என்றுசொல்லுதலும், ததீசிமுனிவன் பெருநகைசெய்து, சபையில் உள்ள யாவரையும் பார்த்துச் சபையோரே! "எச்சத்தால் எச்சம்" என்னும்வேதவசன

த்திற்கு பொருள் இதுதானே? சொல்லுங்கள். சுருதிகள் பலகாரியங்களை எடுத்துச் சொல்லும். அந்தக் காரியங்கள் எல்லாவற்றிலும் மேலான காரியம் எச்சமே. அதுபோல் எச்சத்திற் குரியவர்கள் எல்லாரைப்பார்க்கிலும் சிவபெருமானே மேற்பட்டவன் என்னும் கருத்தைக்கொண்டுதானே, அந்தச் சுருதிகள் அவ்விடத்தில் எச்சம் என்னும் பதத்தால், சிவபெருமானைக் குறிப்பிட்டுச்சொல்லும் ஆதலின், எச்சம் என்னும் வேதபதத்திற்குப் பொருள் பார்வதிபாகனாகிய பரமபதியை, மாயவன் முதலான தேவர்கள் எல்லாரும் வந்தனைவழிபாடு செய்து, உய்வர் என்பதே யல்லாமல், எச்சம் தன்னாலே தன்னைத்தொழும் என்பது சரியாகுமோ? உலகத்தில் எவரும் தம்மைப்பார்க்கிலும் உயர்ந்தவர்களையே உபசரிப்பார்கள். தம்மிலும் உயர்ந்தவர்களுக்கே யல்லாமல் தமக்கு ஒப்பானவர்களுக்கும், தம்மிலுந் தாழ்ந்தவர்களுக்கும், மரியாதை செய்பவர்களும், உண்டோ?ஒருவருமில்லை.

வேதவிதியும் இதுவேயாம். ஆதலின் சிவபெருமானே யாகத்தலைவன் என்று வேதமெல்லாம் சொல்லும். ஆலகால விஷம் உண்டருளிய சிவபெருமானே அகிலலோகமும் தொழுங்கடவுள் என்று அறியர்தவர்கள் யார்? என்று ததீசிமுனிவன் சொல்லக்கேட்டு, அந்தச் சபையில் அடர்ந்திருக்கும் பார்ப்பார்கள் எல்லாரும் தக்கன்கொடுக்கும் தட்சணைக்கு ஆசைப்பட்டுத் தங்கள் அற்பபுத்தியால் மதிமயங்கித் தக்கன் சொல்லியபடியே சொல்லலானார்கள். அதுகேட்டுத் ததீசிமுனிவன் அதிககோபத்துடன் அவர்களைப்பார்த்துப் பார்ப்பனப் பதர்களே! பொருள் ஆசையால் பொதுவாய்ப் பேசாமல், பட்சபாதமாய்ப் பேசுகிறீர்கள். இந்தத் தோஷத்தால் நீங்கள் எல்லாரும் கலியுகத்திலே பூலோகத்திற் பிறந்து, பொய்யொழுக்கம்பூண்டு, கெடுமதி கண்தெரியாமல் சிவதூஷணஞ் செய்து, உங்களுக்குள்ளேயே ஒருவரை ஒருவர் பகைத்துச் சண்டைசெய்து மண்டையுடைத்து, அல்லல்மிகுந்து, வைதிகமார்க்கத்திற்கு அன்னியர்ாகி, சைவ சித்தாந்த சாஸ்திரத்தைக் கைவிட்டுப், பிழைக்கும் வழிதெரியாமல் பிரமிக்கச்செய்யும் புறச்சமயநூல்களைத்தழுவிச், சத்திய வேதத்தை அற்பமாக நினைத்து, நிந்தைசெய்து, அவ்வேதத்திற்கு அன்னியமான நூல்களை ஆதரித்து, நரகத்திற் செலுத்தும் நாமத்தை நெற்றி நிரம்பப் போட்டுக்கொண்டு, வேதாகமசாஸ்திர புராணமெல்லாம் வியந்து கொண்டாடுகின்ற விபூதி, உருத்திராட்சம், சிவலிங்க பூசைகளில் நீராவிரோதமடைந்து, நெருப்பில் வெந்த சங்கு, சக்கரம், கதாயுதக்குறிகளைத் தேகத்தில் சூடுபோல் வடுப்படத்தாங்கி, அந்தணர்களுக்குக் கடவுளாகிய சிவபெருமானுடைய சீர்பாதகமலங்களைத் தொழாமல், அரசர்க

ளுக்குத் தெய்வமாகிய மாயவனைத் தாழ்ந்து பணிந்து, நிந்தனைக்கே ஆளாகி அலையக்கடவீர்கள். நீங்கள் வீணே வருந்தித் தொழுகின்ற மாயவனும் உங்களுக்குக் கிருபை செய்யமாட்டான். என்று கொடிய சாபங்கொடுத்துப் பின்பு மூடத்தன்மையனாகிய தக்கனைசீறிச் சினந்து, வெருட்டிப்பார்த்து, அடா தக்கனே! நீ சிறிதும் பயப்படாமல் செம்பொன் மயமான சடாமுடியையுடைய சிவபெருமானை இகழ்ந்துபேசினாய். அடா! புத்தியில்லாதவனே ! உன்வம்சம் இப்பொழுதே நாசமாம். என்று நன்றாய் நினை. வந்தனை வழிபாடு செய்தற்கு உரியவர்களை, வந்தனை வழிபாடுசெய்யாமல், மற்றவர்களை மதித்து, வணங்குகிறவர்களுக்குத் தெய்வம் கொடிய தண்டனைவிதிக்கும். அப்படிப்பட்டவர்களுக்குக் கொடியதண்டமே குரு. என்பது சாஸ்திரவழக்கமும் உலகவழக்குமாம், என்று சொல்லிவிட்டுத் ததீசிமுனிவன் தன் இருப்பிடம்போய்ச் சேர்ந்தான். அதுகண்டு பிரமதேவன் பயந்து விரைந்துபோய்ச் சிவபெருமான் பட்சத்தில் சேர்ந்துகொண்டான். பிரமதேவன் போய்விட்ட பின்பு தக்கன் எழுந்து நின்று, எச்சனாகிய மாயவனைத் தொழுது துதித்து, அந்தமாயவனைக்கொண்டு யாகஞ்செய்யத் தொடங்கினான். இந்தச் செய்தி யெல்லாம் நாரதமுனிவன் சொல்லக் கேள்விப்பட்டுப், பைங்கொடிபோலும் பார்வதி, பரமபதிக்குச் சொல்லுகின்றாள். பிராணநாயகா ! அடியேனுக்குப் பூர்வம் பிதாவாகிய தக்கன், நமக்கு எந்நாளும் தீங்குசெய்துவருகின்றான். அவன் இப்பொழுது செய்கின்ற யாகத்தை அழித்தருள்க. அதுவே அடியேன் வேண்டும் வரம் என்று சொல்ல, அதுகேட்டுக் கருணாநிதியாகிய சிவபெருமான் வீரபத்திரசுவாமியைப் படைத்தருள, உடனே எம்பெருமாட்டியும் அதிககோபங்கொண்டு, பத்திரகாளியைப் படைத்தருளினாள். படைத்தருளலும், வீரபத்திரசுவாமி, பத்திரகாளி ஆகிய இருவரும் அம்மை அப்பனைத் தாழ்ந்து பணிந்து, அடியேங்கள் செய்யவேண்டிய பணிவிடையைத் தெரிவிக்கவேண்டும் என்று கேட்கச், சிவபெருமான் வீரபத்திரசுவாமியைப்பார்த்து, நீ இந்தப் பத்திரகாளியுடன் ஒரு க்ஷணத்திற்போய்த் தக்கன் செய்கின்ற யாகத்தை அழித்து, இந்த உமையவள் கோபத்தைத்தணித்தல்செய். என்று கட்டளையிட, உமையவளும் அப்படியேபோய் அழித்துவிட்டு வாருங்கள் என்று விடைகொடுத்தனுப்ப மீண்டு, பிரசண்டமாருதம் மந்தமாருதமாகவும், வடவாமுகாக்கினி தண்ணென்று குளிர்ந்துபோகவும், தீப்போல் சுடுகின்ற சூரியன் சீதளசந்திரனாகவும், யமனுடைய மனதிற்கதம் தீர்ந்து சாந்தமாகவும், வீரபத்திரன் அதிக்கோபங்கொண்டு, அந்தப் பத்திரகாளியுடன் அதிவேகமாய் யாகசாலைக்குவந்து சேர்ந்து, தன்னைப்போல் அஞ்சாத ஆண்மையுடையர் ஆகிய உரோமசக்கணங்களையும், தன் கணங்களையும் நோக்கிக், கணவீர

களே! நீங்கள் இந்த யாகசாலையை நெருப்பிட்டுக் கொளுத்தி நீறுக்கி விடுங்கள், என்று ஏவிவிட்டு, உள்ளே பிரவேசித்துத், தக்கன் தலையை வெட்டித்தள்ளியபோது, மான் உருவங்கொண்டுதுள்ளி ஓடிய யாகத்தின் உயிரைப்போக்கி, சூரியருடைய கண்களேயும், முப்பத்திரண்டு பற்களையும் பறித்து, உதிர்த்துத்தப்பிப்போக வழிபார்க்கும் சந்திரனைச் சிறிக் காலால் தேய்த்து, அக்கினி பகவானுடைய ஏழு நாக்குகளையும், கைகளையும் கண்டித்துத் துண்டித்துச், சரசுவதி மூக்கையும் அரிந்து, அந்தச்சரசுவதியைப்போலவே தெய்வப்பத்தினிகளுக்கும் சிட்சைபண்ணி, மற்றையதேவர்களுக்கும், முனிவர்களுக்கும்திக்குப்பாலகருக்கும், தக்கதண்டனை செய்தருளினுன். அந்தவேளையில் கணங்கள் எல்லாம் களிப்புடன் சென்று அந்தயாகசாலையைக்கொளுத்தி, யூபஸ்தம்பத்தைப் பிடுங்கி, யாகத்தை நடத்தினவர்கள்கழுத்தைக் கயிற்றினுல் இறுக்கிக்கட்டி, அங்குள்ள பண்டபாத்திரங்கள் எல்லாவற்றையும் வாரிவாரி கங்கைநதிக்குள் கலக்கும்படி எறிந்துவிட்டார்கள்.

இந்தப்பிரகாரம் அந்த யாகசாலைமுழுதும் அழிந்து போனதைக் கண்டு, மாயவனுனவன் மனம்பொருமல் புழுங்கி வெட்கப்பட்டுப் பின் வாங்கப்பார்க்கையில், மானமான துமுன்நிற்கத்தூண்டுவதினுல் புள்ளரசு என்னும் கருடவாகனத்தின்மேல்ஏறிச் சக்கராயுதத்துடன் வந்து, எதிர்த்தான். அப்பொழுது வீரபத்திரன் சிவபெருமான் கட்டளைப்படி பிரமதேவன்கொண்டுவந்து நிறுத்தியதேர்மேல் ஏறிக்கொண்டு, அந்தமாயவனுடன் எதிர்த்து அஸ்திரசஸ்திரங்களைப் பிரயோகம்செய்தான். அவ்விடத்தில் அவ்விருவருக்கும் உண்டானயுத்தம் இப்படிப்பட்டதென்று சொல்லயாரால்முடியும்? இவர்கள் இருவரும் வெற்றி தோல்வியில்லாமல் எதிர்நின்று நெடுங்காலம் போர்செய்யும்போது, மாயவன் உக்கிரங்கொண்டு சக்கராயுதத்தைவிட்டான். அந்தச்சக்கராயுதத்தை வீரபத்திரன் மார்பில் அணிந்திருந்த தலைமாலையில் ஒருதலையானது பிடித்து விழுங்கிவிட்டது.

அந்தச்சக்கராயுதம் அழிந்துபோனதை அறிந்து கணங்கள் அண்டகடாகமெல்லாம் படீரென்று வெடித்து, அதிரும்படி ஆரவாரம்செய்து, இருபுடையும் விலாப்புடைக்கத் தட்டிக் கூத்தாடியதனுல் உண்டாகிய ஓசையை மாண்டவர்கள் போக மற்றைய தேவர்கள் கேட்டு, மனங்கலங்கிப் பெரு ஓட்டம் பிடிக்கும்போது, வீரபத்திரன் அந்தத் தேவர்களைக் கணங்களால் ஓடவிடாமல் மடக்கிக், கால்களுக்கு விலங்குபூட்டிச் சாய்த்துக்கொண்டு வருவதைக்கண்டு, அப்போது ரதசாரதியாயிருந்த பிரமதேவன் அந்த வீரபத்திரனைத் தொழுது சுவாமி! கோபந்தணிந்தருள

வேண்டுமென்று விண்ணப்பம் செய்துகொள்ள, அதைக்கேட்டுத் திருவுளம் இரங்கிக், கணங்களுடன் கோபந்தணிந்து, சிவபெருமானுடைய சீர்பாத கமலங்களைத் தியானித்தவுடன், அந்தச் சிவபெருமான் பார்வதி சமேதனாய் அங்கே எழுந்தருளினர். குடமுழா, பதலை, தக்கை, கொக்கரை, பணவம், கோதை, படகம், ஆகுளி, தடாரி, தகுணிச்சம், பம்பை, மொந்தை, துடி, பணே, திமிலை, கண்டை, தொண்டகம், பேரி, கல்லவடம் முதலிய பல வாத்தியங்கள் எங்கும் முழங்கவும், வளைவயிர், (சங்கு,) திருச்சின்னம், வங்கியம், தாரை, எக்காளம், வீணை, புள்ளாங்குழல் முதலிய துளைக்கருவிகளும், மிடற்றுக் கருவி முதலிய கீதவாத்தியங்களும் எல்லாம் ஒன்றுசேர்ந்து, ஒரேகாலத்தில் முழங்குவதனால் உலகமெல்லாம் இசைமயமாகித் தேங்கவும், சந்திரவட்டக் குடைகளும் மயில்குஞ்சங்களும், வெண்சாமரைகளும், மணிமாலைகளும், ஆலவட்டங்களும் ரிஷபக்கொடியின் அருகே அடுத்துவரவும், யமனை உதைத்ததும், முப்புரங்களைச் சிரித்தெரித்ததும் முதலான வீரப்பிரதாபங்களை உலகத்தார் கண்டுதெளியப் பூதகணங்கள் விருதுபோல் எடுத்துப்பாடவும், ரிஷபமாகித் தன்னைப்போல் இணையடி தாங்கப்பெற்றுத் தன் எதிரில் தருக்குற்ற மாயவன் தற்காலம் கால்விலங்கு பூண்டிருப்பதைக் கண்டு, களிக்கும் களிப்புடன் சிவபெருமான் ஏறி நடத்தும் வெள்ளை ரிஷபம் எங்கும்பரவிச் சென்றாடிவரவும், செங்கண்மால் பறித்துச் சாத்திய கண் அவன் படும்பாட்டைக் காண வெட்கமடைந்து, மறைந்தாற்போல், சிவபெருமான் திருவடியில்சாத்திய புஷ்பங்களுக்குள் மறைந்துபோகவும், என்புமாலைகள் தங்கள் சுற்றத்தார் வருத்தமடைந்து மெலிவதைப்பார்த்து, மனங்கசிந்து அழுவதுபோல், ஒன்றோடொன்று கலந்து அசைந்து ஆடவும், துன்மார்க்கநெறியில் நின்று, எம்பெருமானை இகழ்ந்துபேசித் துன்பத்திற்கு ஆளாகிய இந்தத் தேவர்களை யெல்லாம் எமது இறைவன் எனக்கு உணவாகக் கொடுத்தருள்வான் என்று சந்தோஷம் பெருகி, மலர்ந்ததுபோல் செந்தாமரை மலர்க்கையில் விளங்கும் மழுவானது, ஒளி மிகுந்து ஓங்கிக் கூத்தாடவும், பிழைக்கும்திறம் உணராத மற்றைய தேவர்கள் போல் பழிக்கு ஆளாகாமல் பின்வரும் பெருந்துன்பத்தை முன்னமே அறிந்து, வீரபுத்திரனுக்கு இரத சாரதியாகி மேன்மைபெற்று விளங்கும் தன் சுற்றத்தானாகிய பிரமதேவனுடைய சூழ்ச்சியை அறிந்து, மனமகிழ்ந்தாற்போல் பிரமகபாலம் அதிசய நகைசெய்து காட்டவும் பதைத்துக் கொலைசெய்யும் நமது ஆண்மையைச் சிவபெருமானுக்கு அறிவித்து, நம்மைக்கொல்வித்து இடையூறு செய்த இந்தத் தேவர்களுக்கு இந்தத் தண்டனை தகும் தகும் என்று பெருமகிழ்ச்சிகொண்டு ஆடுவதுபோல் சடைமுடிமேல் கொக்கிறகு

அசைந்து ஆடவும், வேதகாரணன் ஆகிய சிவபெருமான் கட்டளைப்படி வீரபத்திரன்செய்த தண்டனையைப் பூர்த்திசெய்ய நினைத்துக், கொடிய விஷம் இறைப்பதுபோல் சர்ப்பாபரணங்கள் வாய் திறந்து, கவைநாவை நீட்டிப்பெருமூச்செறிந்துகண்பிதுக்கநோக்கவும், பலவண்ணப்பந்தல்போட்டாற்போல்பருந்துமுதலிய பட்சிகள் சூழ்ந்திருக்கும் போர்க்களத்திலே பட்டுவிழுந்த தேவர்களுக்கு உயிர் உண்டோ இல்லையோ என்று கை நீட்டித்தொட்டுப்பார்ப்பதுபோல், சடைமுடிமேல் உள்ளசந்திரன் கிரணங்களை எங்கும் நீட்டிப் பரவச்செய்யவும், சிவபெருமான் தன்னை இகழ்ந்துபேசிய தேவர்களைத் தண்டித்து விடாமல், அவர்களுக்கு அநுக்கிரகம் செய்யப்போவதை அறிந்து, மனம்பொறுமல் வேர்த்துப் பிணங்கி வெம்பி எழுந்து விழுந்து புரண்டு கையால், அடித்துக் கொள்வது போல் சடைமுடியில் தங்கிய கங்கை நாயகி இடையறுமல் ததும்பி ஆடவும், தகப்பனுயிருந்தும் நன்மைசெய்யாமல் தீங்கேசெய்துவந்த அந்தத் துஷ்டன் முகத்தைப் பார்க்க, நான் வரமாட்டேன் என்று மறுதலித்த உமையவளை வாவென்று கையால் தழுவிக்கொண்டு போகும் தன்மை போல், அந்த உமையவளை அன்புமிகுந்து இடதுகையால் இறுகத்தழுவி அணைக்கும் காட்சிதோன்றவும், செவ்வெலும்பும், இரத்தமும், மூளையும், குடலும், அறுபட்ட முண்டங்களும் அடர்ந்திருக்கும் படுகளத்தைப் பார்க்கக்கூடாதென்று திரைபோட்டு மறைப்பவர்கள்போல் புஷ்பமாரி பெய்து, உருத்திர கணங்கள் புடைசூழ்ந்துவரக் கருணை கூர்ந்து காட்சி கொடுத்தருளிய கடவுள் நாயகனை அங்கிருந்தவர்களெல்லாரும் கண்களிக்கக்கண்டார்கள். தூக்கத்தில்கொடிய கனவுகண்டு உடம்புவேர்த்து வாய் குழறிப்பயந்து நடுங்கும்போது, பெற்றதாயானவள் பக்குவமாய்அந்தக்கனவை ஒழித்து விரைந்து பக்கத்தில் அணைத்துக்கொள்ளப்பெற்ற சிறு பிள்ளைகளைப்போல், நடுக்கமுற்றிருந்த தேவர்கள் எல்லாரும் சிவபெருமானைக் கண்டவுடன் பரமசந்தோஷமடைந்து, பணிந்து, வணங்கி நின்றார்கள். எம்பெருமான் அவர்களைப்பார்த்துப் புன்னகைசெய்து, நீங்கள் செய்தயாகத்தில் எமக்கு அவிப்பாகம் கொடாதகாரணம் என்ன? அது இருக்கட்டும், மிக்க வீரர்களாகிய நீங்கள் பலரும் இந்த ஒரு வீரனுக்குத் தோற்றுப்போனது ஏது? சொல்லுங்கள் என்று வினவ, மாயவன்முதலிய தேவர்கள் எல்லாரும் தாழ்ந்து பணிந்து, பெரியோனே! சிறியேங்கள் வீரமெல்லாம் ஒரு சிறு துரும்பினுல் அளவிட்டிருக்கின்றும். அடியேங்களை அடிக்கடி குரங்குபோல் ஆட்டுவிப்பது அடிகளுக்கு அழகாகுமோ? எமது பரம பிதாவே! இனி ஒரு கணமேனும் சகிக்கமுடியாது. எங்களைக் காத்தருள்வாய் எம்பெருமானே! பலமுறையாக அடியேங்களைக்கண்டித்துத் தண்டித்து அறிவு விளங்கச்செய்தும், ஆடையில் அழுக்கு ஏறுவதுபோல்

எங்கள் மனதில் மலினம் ஏறுவதனால் மதமடைந்து மென்மேலும் மயங்குகின்றோம். கைகளைக் கட்டித் திட்டி அடித்து வருத்தியானாலும், ஆண்டுகொள்வார்களே அல்லாமல் எத்தனைபிழைசெய்தாலும், அடிமைகளைக் கைசோரவிடுவார்களோ? அடியேங்கள் உமது நீலகண்டத்தை நினைந்திலோம். கையில் ஏந்திய பிரமகபாலத்தைக் கண்டு தெளியோம். அஸ்திமாலை அணிந்திருப்பதை ஆராய்ந்தறியோம். செங்கண்மால் பறித்துச் சாத்திய கண் தேவரீர் திருவடிமேல் இருப்பதை உணரோம். ஆமையோடும் வராகதந்தமும் அணிந்திருப்பதை ஆழ்ந்து சிந்தைசெய் தறியோம். "விதிவழி மதி" என்று பெரியோர் சொல்வதை எங்களிடத்தில் கண்டறிந்தோம். பரமானந்த பரிபூரணப் பரம்பொருளே! இவ்விடத்தில் அடியேங்களைத் தடுத்தாட் கொள்ளும் பொருட்டுப் படைத்தல்முதலிய ஐந்தொழில்களை நடாத்திவருவதை அறியோம். மலைமகளை மணம்புரிந்தாய் என்றும், மக்களைப்பெற்றாய் என்றும் எங்களில் ஒருவனாக மதித்து உன்னை இகழ்ந்து கெட்டுப்போனோம், மகாதேவா! நாங்கள் எல்லாரும் கண்டு செருக்கடையாதபடி ஆலகால விஷம் முதலிய அடையாளங்களைத் திருமேனியிற் கொண்டிருக்கின்றாய் அந்த அடையாளங்கள் அனைத்தையும் கண்டும் தெளியாமல் அகங்காரம் கொண்டமையால் இந்தநாள் எங்கள் உடம்பிலும் பல அடையாளங்களை ஞாபகக்குறியாக வைத்தருளினாய். இதனால் நாங்கள் கடைத்தேறினோம். இதற்கு ஐயமில்லை. வீரபத்திர சுவாமி இந்தநாள் எங்களைத் தண்டிக்கவந்தது உன் அருளே என்றும் செவ்வையாய்க்கண்டு தெளிந்தோம். கருணாநிதி! இப்பொழுதும் அடியேங்களுக்குத் தக்க புத்திமதிகளைச் சொல்லி, எந்நாளும் நல்வழியில் நிலைபெற நிறுத்துவதும் உமது கடமைதானே. எமது பரமபிதாவே! பூர்வம் உம்மை மதிக்காமல் திருப்பாற்கடலைக் கடைந்ததும் அல்லாமல், எங்களைக் கொல்லவந்த விஷத்தைத் திருவமுது செய்யக்காட்டியகுற்றமும் செய்திருக்கின்றோம். இப்பொழுது தங்களை இகழ்ந்த குற்றம் ஒன்றினால் சகலகுற்றமும் தவிரலானோம். அநந்தம்கோடிகாலம் இரவுரவம் முதலிய நரகங்களில் விழுந்து நொந்து, வெந்து சாம்பலாயினும், சற்றேனும் தீராமல்வளரும் இந்தச் சிவத்துரோகம்வீரபத்திரசுவாமியால் எளிதில் தீர்ந்துபோய்விடும்படி செய்தருளினீர். இப்படிப்பட்ட பெருங்கருணைக்குச் சிறியேங்களாகிய நாங்கள் என்ன ஈடுசெய்யப்போகிறோம். என்று தேவர்கள் எல்லாரும் இந்தப்பிரகாரம் பலவாறு பன்னிப்பேசி வேண்டி வேண்டி மனங்கலங்கித் தொண்டைகம்மிப்போகவும், வாய்குழறவும், கண்ணீர்பெருகவும், கைகள் சிரமேற் குவிந்திருக்கவும், துதிசெய்யும்போது, முள் அடர்ந்த தண்டின்மேல் பூத்துவிளங்கும் தாமரைப்பூ மாளிகையில் வாழ்ந்திருக்கும் பிரமதேவன், எம்பெருமானாகிய சிவபெருமானை வணங்கி விண்ணப்பம் செய்கின்றான். பரமகருணாநிதி! வேள்வி

யிலே தங்களுக்கு அவிப்பாகம் கொடாத இந்தத்தேவர்கள் எல்லாரும் தக்கனுடன் தண்டிக்கப்பட்டார்கள். இந்தத் தண்டனையேபோதுமானது. இனித் தேவரீர் அவிப்பாகம்பெறும் வரம்கொடுத்துப் பாழ்பட்டழிந்து போகும் அவர்கள் எல்லாரும் பழையபடி வாழ்ந்திருக்கத் திருவுளம் செய்தருள்க. காலிற் கட்டுண்டுகிடக்கும் தேவர்களையும், கட்டறுத்துக் காத்தருள்செய்க. என்று வேண்டுதலும் யானையையுரித்துப் போர்த்தவராகிய எம்பெருமான் திருவருள் சுரந்து கடைக்கண் சாத்தியவுடன் தேவர்கள் எல்லாரும் துன்பம்தீர்ந்து பரம சந்தோஷ மடைந்து துதிசெய்யப் பார்த்துத் தேவர்களே! நீங்கள் செய்த குற்றமெல்லாம் தீரும்வழி சொல்லுகிறோம் கேளுங்கள். எமக்குநீங்கள் பெருங்குற்றஞ் செய்திருக்கின்றீர்கள். அந்தக் குற்றந் தீர்ந்து பிழைக்கும்படி நமக்குப் பிரியமான காஞ்சி மாநகரத்தைச் சேர்ந்து, கைலாயம் என்னும் தலத்தின் பக்கத்தில் நாரதமுனிவன் சொற்படி தக்கன் புத்திரர்கள் நம்மையே நம்பிப் பூசித்துத் தொழுது துதிசெய்து, பேறுபெற்ற ஸ்தலத்தின்கண் இலிங்கப்பிரதிஷ்டை பண்ணிப் பூசை செய்யுங்கள். பழிபாவம் தீரும்படி தக்கனும் இந்தமுறையாகப் பூசைசெய்யக் கடவன். நீங்கள் இது செய்கிறவனாயில் உங்களுக்குப் பகைவராகிய அசுரர்கள் துன்பமேசெய்து வருவார்கள்.

அந்த அசுரர்கள் யார்? எனில், தாரகன், சூரபத்மா முதலானவர்களாம். என்று திருவாய் மலர்ந்தருளி வீரபத்திர சுவாமியும் மற்றும் பூதகணங்களும் புடைசூழ்ந்துவரக் கைலாசத்திற்கு எழுந்தருளினார். இப்பால் திருமால் முதலிய தேவர்கள் எல்லாரும் சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளியதை மறந்துவிட்டமையால், மகா வீரர்களாகிய தாரகன், சூரபத்மா முதலான அசுரர்கள் தோன்றித் துன்பப்படுத்தி வந்தார்கள். அதனால் தேவர்கள் எல்லாரும் துக்கசாகரத்தில் அழுந்திப் பிரமதேவனுடன் கலந்து யோசனைபண்ணிச் சிவபெருமான் திருவாய்மலர்ந் தருளியதைச் சிந்தித்துக் காஞ்சிமாநகரத்திற்குப்போய்ச் சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து, பூசைபண்ணித் தொழுது துதித்துத் துன்பம் தீர்ந்து, சுகித்து வாழ்ந்திருந்தார்கள். தக்கனும் அவர்களுடன்போய்த் தன் மக்கள் பூசித்துப் பேறுபெற்ற ஸ்தலத்தின் அருகில் தன் பெயரால் தக்கீசம் என்னும் இலிங்கப்பிரதிஷ்டை பண்ணிப் பூசித்துச் சிவபெருமான் திருவருளால் வினைதீர்ந்து சிவகணங்களுக்குத் தலைவனாகும் பதவி பெற்றான்.

தக்கீசன் சரணமே சரணம்,

---

முப்பதாவது,

## முப்புராரி கோட்டப்படலம்.

நிமலநித்தியானந்தத் தபசிகளே! அடியேன் உன் அடைக்கலம் என்றடுத்த மார்க்கண்டேயனை அஞ்சாதே என்று அபயாஸ்தமளித்து, யமனை உதைத்தருளிய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் தக்கீசம் என்னும் தலமகிமை சொன்னோம். இனிச் சர்வதீர்த்தத்தின் மேற்றிசையில் கண்டு சேவிப்பவர்களுடைய கவலையெல்லாம் விண்டுபோகச் செய்தருளும் முப்புராரீசம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

முப்புரங்களில் வாழ்ந்திருந்த அசுரர்களில் சுதன்மன், சுசீலன், சுபுத்தி என்னும் மூன்று அசுரர்கள் மாத்திரம் புத்தனுடைய பொய்ப்போதனையால் மதி மயங்காமல் சிவபெருமானுடைய சீர்பாத கமலங்களைப்பணிந்து, சைவாசாரத்திலும் சிவபத்தியிலும் சிறிதும் தவறாமல் இருந்தார்கள். அதனால் அந்த முப்புரங்களும் சிவபெருமான் புன்னகையால் கரிந்து பெரிந்து சாம்பலாய்ப் போனபோது, நீற்றறையில் நீந்தி விளையாடிய அப்பர் சுவாமிகளைப்போல், அந்த அசுரர் மூவர்களும் அக்கினிக்கு இரையாகாமல் தப்பிப் பிழைத்தார்கள். சிவபெருமான் ஆணைவழியில் அடங்கி யிருப்பவர்களுக்கு அபாயம் நேரிடுமோ? நேரிடவே மாட்டாது. எம்பொருமான் அவர்களை நோக்கி, உங்களுக்கு வேண்டும்வரம் யாது? சொல்லுங்கள் என, அவர்கள் தாழ்ந்து பணிந்து, சுவாமி! அடியேங்கள் உன் கோயில் வாயிற்படியைக் காத்துக்கொண் டிருக்கக் கருணைசெய்யவேண்டும் என்று வேண்ட, அப்படியானால், நீங்கள் காஞ்சிமாநகரத்திற்குப்போய், இலிங்கப்பிரதிஷ்டை செய்து, எம்மைப் பூசித்துக்கொண் டிருங்கள். உங்கள் இஷ்டப்படியே துவாரபாலகராய் வாழ்ந்திருக்கும் பதவி தருகின்றோம், என்று மறைந்து போதலும், அவர்கள் மூவரும் காஞ்சிமாநகரத்திற்குப்போய்ப் பலவரம் கொடுத்தருளும் முப்புராரி இலிங்கப்பிரதிஷ்டைபண்ணிப் பூசைசெய்து, எண்ணியவரம் பெற்றார்கள். இந்த முப்புராரீசம் என்னும் தலமகிமைசொல்ல யாரால்முடியும்? அந்தத்தலங் காஞ்சிமாநகரத்திலே முப்புராரி கோட்டம் என்று சொல்லப்படும் என்றுசொல்லிய சூதமாமுனிவரைப்பார்த்து, மற்றைய முனிவர்கள் ஐயா! சூதமாதவரோ! திரிபுராசுரர்களில்இவர்கள் மூவர்மாத்திரம்புத்தனுடைய மாயாபோதனைக்கு உட்படாமல், சிவபத்தர்களாய்ச் சிறந்திருந்தது எப்படி? இது மிகவும் ஆச்சரியம். இதை எங்களுக்கு விள

ங்கச் சொல்லவேண்டும் என்று பிரார்த்திக்க, அவர் அம்முனிவர்களைப் பார்த்து, முனிவர்களே! சிவபத்தியானது காமியபத்தி, நிஷ்காமியபத்தி என்று இரண்டுவகைப்படும். காமியபத்தி, புத்திமுதலியவைகளைத் தருவதாகும். நிஷ்காமியபத்தியோ ஏகபரிபூரணானந்தப் பரம்பொருளுடன் இரண்டறக் கலப்பதாகிய முத்திதருவதாகும். இந்த இரண்டு பத்தியும் முத்திக்கு மூலம் என்றாலும், வினைவலைப் பட்டவர்களுடைய காமியபத்தியானது நடுவில் விண்டுபோய் விடும். நிஷ்காமியபத்தி தன்னை உடையவர்களை ஒருபோதும் விட்டுநீங்காது. செய்தவைகளும் செய்பவைகளும் ஆகிய தீவினைகள் எல்லாம் இப்படிப்பட்ட சிவபத்தர்களைத் தாமரை இலைமேல் தண்ணீர்போல் கலந்தும் கலவாமலே இருக்கும் என்று அறிந்துகொள்ளுங்கள். காமிய பத்தியும் முற்றத்துறந்த முனிவர்கள் வேண்டுவாராயின் முற்றிலும் நிலைபெற்றிருக்கும். திரிபுராசுரர்கள் காமிய பத்தி யுடையவர்களும், தீமையேசெய்கின்றவர்களுமா யிருந்தார்கள். ஆதலால் அவர்கள் புத்தநாரதருடைய போதனையால் மயங்கி மாண்டுபோனார்கள். இவர்கள் மூவரும் நிஷ்காமியபத்தியுடையார் ஆதலால், அவர்கள் மாயாபோதனையால் மதிமயங்காமல் திடச்சித்தம் கொண்டு நின்று சிவ்பெருமான் திருக்கோயிலின் வாயில் காத்திருக்கும் பதவிபெற்றார்கள் என்று, அந்த முனிவர்களுக்கு விளங்கச்சொல்லி வேறுகதை சொல்லத் தொடங்கினார்.

முப்புராரீசன் முளரித்தாள் போற்றி.

---

முப்பத்தோராவது,

## இ ர ணீ ச ப் ப ட ல ம்.

மெய்யைப் பொய்யென்று வெறுக்கும் வேதியர்களே! முப்புரத்தில் தீமூட்டினவரும் யமனை உதைத்தவருமாகிய சிவ்பெருமான் சிறந்து வீற்றிருக்கும் முப்புராரீசம் என்னும் தலமகிமை சொன்னோம். இனி அதன் கிழக்கில் இரணியன் பூசித்துப் பேறுபெற்ற இரணீசம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

அசுரர்களில் ஆண்சிங்கம் போன்றவனாகிய இரணியன் தன் வமிச குருவாகிய சுக்கிரனை ஏகாந்த ஸ்தானத்தில் வருவித்து வந்தனை வழிபாடுசெய்து சுவாமி! அகண்ட செல்வம்தரும் அரசாட்சி பெறுவதற்கு நான் அநுஷ்டிக்கவேண்டிய விரதம் யாது? தெரியச்சொல்லவேண்டும் எனச், சுக்கிரன், அப்பா! உனக்கு அரசாட்சிவேண்டுமானால் சிவபெருமானைப் பூசைசெய். சிவபூசையின் பெருமை சொல்ல யாரால் முடியும்?

பிரமதேவன் சகலலோகங்களையும் படைக்கும் திறம் பெற்றதும், திருமால் அவைகளைப் பாதுகாக்கப் பெற்றதும், இந்திரன் விண்ணுலகத்தில் வீற்றிருந்து இந்த மண்ணுலகத்தில் கீழ்த்திசைக் காவலனாகி மகிழ்ந்து வாழ்வதும், ஆகிய இந்த வாழ்வெல்லாம் சிவபூசையால்வந்த வாழ்வேயாம். அன்றியும் கல்வி, செல்வம், தைரியம், அழகு, கீர்த்தி, பெருவாழ்வு, தயை, பேரழகுடைய மாதர்போகம், செல்வாக்கு, முன்யோசனை இவைகள் எல்லாம் சிவபூசையால் வருபவைகளேயாம். இந்திரபோகம், பிரமலோகம், வைகுண்டப் பதவிகளை வேண்டினாலும் சிவபத்தி ஒன்றே தடையில்லாமற் கொடுக்கும். மேலும் சிவபத்தி யுடையவர்களுக்குப் பகைவர்களும் பாம்பு முதலிய துஷ்ட செந்துக்களும், நோய்களும், பூதவேதாளப் பேய்களும், சனிமுதலிய ஒன்பது கிரகங்களும், இடர்செய்ய முடியாது. ஆதலின், புஜபல பராக்கிரமசாலியாகிய இரணியனே! அந்தச் சிவபெருமான் சீர்பாத கமலங்களைத் தொழுது, துதிசெய்கின்றவர்களுக்கு எந்தக்காரியமும் சுலபமாய் முடியும். சிவபெருமான் திருமேனியைக் காணாத கண்களே குருட்டுக்கண்களாம். சிவபெருமான் திருமேனியைத் தியானம்செய்யாத சிந்தையே வெறிபிடித்ததாம். சிவபெருமான் கீர்த்தியைக் கேளாத செவியே செவிடாம். சிவபெருமான் புகழை எடுத்துப்பேசாத வாயே ஊமையாம். இளமைப் பருவமானது நீர்க்குமிழிபோல் நிலையில்லாததாம். தேகமும் மின்னல்போல் தோன்றி மறைந்துபோய் விடும். பிறவியால் வரும் பிணிகளும், கவலைகளும், இவ்வளவு என்றும் இந்தக்காலத்தில் வரும் என்றும் தெரிந்து சொல்லவல்லவர்யாவர்? ஆதலின்,

காய நெகிழாமுன் கண்களிருளா முன்
வாயிலுள்ள பல்லும் வழுவாமுன்—காயம்பார்த்
தோடிநமன் வாராமு னுள்ளமே சோணகிரி
நாடிநம வென்றே நட. என்றும்,

மாயங்கள் செய்தைவர் சொன்ன வழிநின்று
காயங்கொண்டாடல் கணக்கன்று—காயமே
நிற்பதன்றாதலாற் காளத்தி நின்மலன் சீர்
கற்பதே கண்டீர் கணக்கு. என்றும்,

படைகொள்கூற்றம் வந்துமெய்ப் பாசம்விட்ட போதின்கண்
இடைகொள்வா ரெமக்கிலையெ ழுதுகபோது நெஞ்சமே
குடைகொள் செல்வன்மூதாதை குழகன்கோவலூர் தனில்
விடையதேறுங் கொடியினான் வீரட்டானஞ் சேர்துமே. என்றும்,

உற்றாரார்உளரோ வுயிர் கொண்டுபோம்பொழுது
குற்றாலத்துறை கூத்தனல்லானமக்
குற்றாரார்உளரோ. என்றும்,

மத்தயானையேறி மன்னர் சூழ வருவீர்காள்
செத்தபோதி லாருமில்லை சிந்தையுள் வைம்மின்கள்
வைத்தவுள்ள மாற்ற வேண்டா வம்மின் மனத்தீரோ
அத்தர்கோயி லெதிர்கொள் பாடியென்பதடைவோமே. என்றும்,

என்னெஞ்சேயுன்னை யிரந்துமுரைக்கின்றேன்
கன்னெஞ்செய்வாயாகிற் காலத்தால்—வன்னெஞ்சேய்
மாகம்பத்தானை யுரித்தானை வண்கச்சி
ஏகம்பத்தானை யிறைஞ்சு. என்றும்,

பெரியோர்கள் திருவாய்மலர்ந் தருளியபடி இந்தத்தேகம் இடிகரைபோல் இடிந்து விழுந்து கரைந்து மறைந்து மண்ணுடன் மண்ணுகி மாய்ந்துபோவதற்கு முன், விரைந்து மனங்கரைந்து, சிவனேசம்பூண்டு, சிவபூசைசெய்து, சிவஞான நெறியில் நிற்கின்றவர்கள் இப்படிப்பட்ட துன்பங்களுக்கு ஆளாகாமல், சீவன் முத்தர்போல் எப்போதும் சிவானந்த போகிகளாய்ச் சிறந்து வாழ்ந்திருப்பார்கள். மேலும் பத்தர் என்னும் பதத்திற்கு மூலமாகிய பத்தியென்பதற்கு அர்த்தம். சேவை (வணக்கம்) என்று சொல்வதனாலும் அந்தப் பத்தர்களுக்கு இனிமையான சேவியன் (வணக்கத்திற்குப்பத்திரமானவன்) சிவபெருமானே ஆதலாலும், சிவபத்தருடைய பிறப்பு, ஆசாரம், குலம், கோத்திரம் முதலியவைகளைப் பாராட்டல் கூடாது. திருமேனியில் திருநீறும், திருக்கண்மணியும், தரித்தவர்களே சிவபத்தர் என்று சொல்லப் படுவார்கள். சிவனடியார் தரிசனம் செய்யப்பெற்றால், கங்கைநீராடிய பலன் கிடைக்கும். சிவனடியாருடன் கலந்துபேசப் பெற்றால், சகல தீர்த்தங்களிலும் சென்று ஆடிய பலனுண்டாம். சிவனடியார்களுக்குச் செய்யும் பூசையானது, சகலதேவர்களுக்கும் திரிமூர்த்திகளுக்கும் பிரீதியாம். சாதுக்கள் அந்தச் சிவனடியாரிடத்திலேயே தானங்கொடுத்தலும் கொள்ளலும் செய்வார்கள். பிரம விஷ்ணு தேவேந்திராதி தேவர்களுடைய வாழ்வை ஒரு துரும்பாகமதிக்கும் சுபாவமுள்ள சிவனடியார் பெருமையை மிக அற்பனாகிய நானோ சொல்ல வல்லவன். ஆதலால், பெரும் புகழ் படைத்தோங்கும் இரணியனே! நான் பல்விதமாகப் பன்னிப் பேசுவதில் பயன் என்ன? நீ மற்றைய காரியங்கள் எல்லாவற்றையும் மறந்து, சிவபெருமான் சீர்பாத கமலங்களையே சிந்தித்துப் பூசை செய்து, கடைத்தேறுவாயாக. என்று பிருகு முனி புத்திரனாகிய சுக்கிரன் சொல்லக் கேட்டுத் தனக்குள் வியப்படைந்து தாழ்ந்து பணிந்து, சுவாமி! தாங்கள் சொல்லிய சிவபெருமானை எவ்விடத்தில் எவ்விதமாகப் பூசித்தல் வேண்டும்? என்று கேட்கச் சுக்கிரன் சொல்லுகின்றான். அப்பா இரணியனே! எள்ளுக்குள் எண்ணெய் போல் எங்கும் நிறைந்திருக்கின்ற சிவபெருமானுக்குப் பிரிய

மான தலங்கள் இந்த உலகத்தில் அனந்தம் உண்டு. அந்தத் தலங்களுக்குள் காசிப் பட்டணம் மேலானதாம். அந்தக் காசிப் பட்டணத்தைப் பார்க்கிலும் காஞ்சிமாநகரம் மேலானதாம். அந்தக் காஞ்சிமா நகரத்தைப் பார்க்கிலும் மேற்பட்ட தலம் எக்காலத்திலும் எவ்விடத்திலும் இல்லை. சூரிய மண்டலம், சந்திரமண்டலம், அக்கினிமண்டலம், அடியவர் மனம், மந்தரமலை, கைலாசகிரி முதலிய தலங்களைப் பார்க்கிலும், சிவபெருமானுக்கு அதுவே மிகவும் பிரியமானது. அந்தக் காஞ்சிமா நகரத்தில் எம்பெருமானாகிய சிவபெருமான் தன் அடியார்கள் வேண்டும் வரங்களை வேண்டியபடியே விரைந்து கொடுத்தருளுவார். ஸ்ரீ பஞ்சாட்சரங்களைக் கணித்துப்பச்சிலையர்னாலும், பனிமலரானாலும், பத்தியுடன் பறித்தணிந்து, தொழுது, துதி செய்வதே அந்தப் பரம சிவத்திற்குப் பரம சந்தோஷம். ஆதலின், நீ அவ்விடத்திற்குப் போய் விபூதி உருத்திராட்சமணிந்து, சிவபெருமானைப் பூசித்து, வேண்டும் வரம்பெற்றுக்கொள். என்று உபதேசித்த குருவின் பாதங்களைப் பணிந்து, விடைபெற்று மீண்டு, புள்ளிவண்டுகள் முழங்கும் பூஞ்சோலை சூழ்ந்து விளங்கும் காஞ்சிமா நகரத்திற்குப் போகப் புறப்பட்டான். அவனுடன் அவன் தம்பியாகிய இரணியாட்சனும், அந்த இரணியாட்சன் குமாரனாகிய அந்தகாசுரனும், தன் மகனாகிய பிரகலாதனும், தன் பேரன்மார்களாகிய மாவலி, வாணன், விரோசன் முதலானவர்களும், தன்னிடத்தில் அன்பு வைத்தொழுகும் காயாது முதலான பத்தினிமார்களும், மற்றும் சுற்றத்தார்களும் புறப்பட்டு காஞ்சிமா நகரத்திற்கு வந்து சேர்ந்து, தங்கள் தங்கள் பெயரால் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து பூசித்துக் கொண்டிருக்கத் தான் முப்புராரிகோட்டத்தின் கீழ்த்திசையில் தன் பெயரால் இரணீசம் என்னும் சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணித் தன் குரு உபதேசம் செய்தபடி விபூதி உருத்திராட்சம் அணிந்து, அன்பு மிகுந்து, ஆகம விதிப்படி பூசைசெய்து, உண்ணல் உறங்கல் முதலியவைகளை ஒழித்து, நெடுங்காலம் தவம்செய்து கொண்டிருக்கும் போது, பொன்போல் விளங்கும் சடைமுடியுடைய சிவபெருமான் காட்சி கொடுத்தருளக் கண்டு, கைகூப்பித் தொழுது, மனிதர்களாலும், மிருகங்களினாலும், மற்ற பிராணிகளாலும், ஆயுதங்களாலும், மண்ணிலும், விண்ணிலும், வெப்பம், குளிர்ச்சி முதலியவைகளிலும் உள்ளிலும், புறத்திலும், பகலிலும், இரவிலும், மாளா வரமும், சுவர்க்க மத்திய பாதலம் என்னும் மூன்றுலகங்களையும், ஏகச்சக்கராதிபதியாய் ஆளும் திறமும் பெற்றுக்கொண்டான். இரணியாட்சன் முதலானவர்களும் அவரவர்களுக்கு வேண்டும் வரம்பெற்றுக்கொண்டார்கள். அந்த இரணியாட்சன் முதலானவர்கள் மணமலர் கொண்டு பூசித்துத் தொழுது துதிசெய்த தலங்களுடன் தேவர்கள் எல்லாரும் பிரதட்சிணம் செய்யும் இரணீசம் என்னும் தலமும் மிகவும் உத்தமஸ்தலங்களாய்ச் சிறந்து விளங்கும்.

இரணீசன் இணையடிபோற்றி.

முப்பத்திரண்டாவது

## நரசிங்கேசப் படலம்,

சிவநேசச் செல்வர்களே! பூலோகத்திலே புகழ்பெற் றோங்கும் காஞ்சிமாநகரத்தில் விளங்கும் இரணீசம் என்னுந்தலமகிமை சொன்னோம். இனி அதற்கு மேற்கில் உள்ள நரசிங்கேசம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

இரணியன், தக்கன் செய்த யாகத்திலே அவி உண்ண வந்து சேர்ந்திருந்த தேவர்கள், படுகளத்தில் விழுந்து புரளும்படி போர்செய்தழித்த முக்கண் மூர்த்தியாகிய சிவ பெருமானிடத்தில் வரம் பெற்றுக் கொண்ட பின்பு, மூன்றுலகத்தாரையும் கீழ்ப்படுத்தி மேற்பட்டிருத்தலால், வண்டுகள் முழங்கப் பெருத கற்பகப் பூமாலை சூடிய தேவர்கள் எல்லாரும் மனங்கலங்கித், துளபமாலையணியும் திருமால் திருவடிகளைத் தாழ்ந்து, பணிந்து எழுந்து, அந்த இரணியன் தாட்சிணியமில்லாமல் செய்துவருகின்ற அக்கிரமங்கள் எல்லாவற்றையும் அறிவித்தார்கள். அது கேட்டு மாயவன், அந்தத் தேவர்களுக்கு அபயாஸ்தமளித்துக், காஞ்சிமா நகரத்திற்குப் போய்ச், சிவபெருமான் சீர்பாத கமலங்களைத் தொழுது, துதி செய்து, அந்த இரணியனைக் கொல்லும் உபாயம் தெரிந்து கொண்டு, தன் ஒரு சத்தியை அவன் குமாரன் ஆன பிரகலாதனிடத்தில் நிலைபெற்றிருக்கவைத்து, இருவருக்கும் பகை மூட்டியபோது, ஒரு நாள் இரணியன் பிரகலாதனை அழைத்து, மகனே! நீ பிழைக்க வேண்டுமானல் அந்த மாயவனைத் தெய்வமென்று மதிக்காதே என்று சொல்லப், பிரகலாதன், என் உயிர் போனலும் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியை நான் மறக்கமாட்டேன் என்று மறுதலித்ததனல், அவன் அதிக கோபங்கொண்டு, இரண்டுகண்களிலும் நெருப்புப் பொறி பறக்கும்படி வெருட்டிப் பார்த்து, அடா பிரகலாதா! நீ சொல்லிய மாயவன் எங்கே இருக்கின்றான்? என்று கேட்க, எங்கள் இறைவன் எங்கும் இருப்பான் என்றுசொல்லவே, பெருங்கோபங்கொண்டு, இந்தத்தூணில் இருக்கின்றானு? என்று அதட்டிக்கேட்கையில், அதற்கும் அஞ்சாமல் தூணிலும் இருப்பான்; துரும்பிலும் இருப்பான் என்று சொல்லுதலும், இரணியன் பின் வருவது தெரியாமல், வடவாமுகாக்கினிபோல் சீறிச் சினந்து, அந்தத் தூணைக் கையால் ஓர் அறை அறைந்தான். அறையவே, மாயவன் நரசிங்க ரூபத்துடன் அந்தத் தூணைக் கிழித்து வெளியிற்புறப்பட்டு, அந்த இரணியனைத் தூக்கிப் பிடித்தெடுத்துத், தன்தொடைமேல் வைத்து, அஸ்தமனம் ஆகும் வேளையில் அவன் ஊட்டியைக் கடித்து உதிரத்தில் ஒருதுளியும் சிந்தவிடாமல் எல்லாவற்றையும் உறிஞ்சி, அகங்காரங்கொண்டு, உன்மத்தனகி, மூன்

றுலகத்தாருக்கும் பெருந்துன்பம் உண்டாக்கக்கண்டு, பிரகலாதனும், இலட்சுமியும், மற்றும் தேவர்களும், தொழுது, துதிசெய்து சொல்லும் உபசார வார்த்தைகளையும் கேளாமற் போய்விட்டான், உன்மத்தன் காதில் உபசாரவார்த்தைகள் நுழையுமோ? இனையளவேனும் நுழையமாட்டாது. மாண்டுபோன இரணியனுடைய இரத்தமே இவ்வளவு அநர்த்தம் செய்யுமானால், அந்தப் பாவி செய்த கொடுமைகளை அளவிட்டுச்சொல்ல வல்லவர் யார்? அப்பொழுது பிரமதேவன் முதலானதேவர்கள் எல்லாரும் மனவருத்தமடைந்து, திகைப்பட்டு, மந்தர கிரிக்குச் சென்று, எம்பெருமானாகிய சிவபெருமான் சேவடிகளைத் தஞ்சமாக அடுத்துத், துதிசெய்து, அச்சத்தால் வாய்வறண்டு, நடுநடுங்கித் திகைத்திருக்கையில், அந்தப் பரமபதி பலகணங்கள் கொண்டாடப் பார்வதி சமேதராய் ரிஷபவாகனத்தின்மேல் காட்சி கொடுத்தருளித் தேவர்களே! நீங்கள் அஞ்சவேண்டாம் என்று அநுக்கிரகம் செய்து, உடனே ஒரு சரபப்பட்சியின் உருவம் கொண்டு, அம்பிலும் அதிவேகமாய்ப் பாய்ந்து, அந்த நரசிங்கத்தைக் கொன்று, அதன் தோலை உரித்துக் கொண்டு, சோதிமயமாகத் தோன்றினார். இப்பால் நரசிங்க ரூபங்கொண்ட நாராயணன் காஞ்சிமாநகரம் சேர்ந்து, நரசிங்கேசன் என்னும் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து, ஆகம விதிப்படி அருச்சனை பண்ணி, அன்புடன் துதித்து, வினைதீர்ந்து வேண்டும்வரம் பெற்று, மீண்டு போய்விட்டான். நீர்வளம் பொருந்திய அந்த நரசிங்கேசம் என்னும் தலம் மிகவும் உத்தமமான தலமாம்.

நரசிங்கேசன் நற்றாள்போற்றி.

---

(வராகேசம்.)

அந்த நரசிங்கேசத்திற்குத் தெற்கில் வராகேசம் என்னும் தலம் ஒன்று இருக்கின்றது, அது பூர்வம் இரணியன் தம்பியாகிய இரணியாட்சன் பூமியைப் பாய்போற்சுருட்டிக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு, பாதாளத்தில் பதுங்கிவிட்டமையால், துளபமாலை யணியும் திருமால், வராக அவதாரம் எடுத்து, அந்த இரணியாட்சனை வதைத்துப் பழையபடி பூமியை நிலைபெறநிறுத்திச் செருக்கடைந்து திரியும்போது, சிவபெருமான் வேடனைப்போல் வேடம்பூண்டுவந்து வேட்டையாடி, அந்த வராகத்தைக்கொன்று, அதன் தந்தங்களில் ஒரு தந்தத்தைப்பிடுங்கி, அடையாளமாகத் தாம் அணிந்திருக்கும் ஆபரணத்துடன் கோத்து அணிந்து கொண்டபின்பு, அந்தத் திருமால் பத்திமிகுந்து பூசித்துப் பேறுபெற்றதலமாகும்.

வராகேசன் மலரடிபோற்றி

---

முப்பத்து மூன்றாவது

## அந்தகேசப் படலம்.

உலகம் பொய்யென்று உள்ளபடி உணர்ந்த உத்தமர்களே! கொன்றைப் பூமாலைசூடிய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் நரசிங்கேசம், வராகேசம் என்னும் தலங்களின் மகிமைசொன்னோம். இனி அந்த வராகேசத்தின் கிழக்கில் மிக்க பலமுள்ள ரிஷபவாகனராகிய எம்பெருமான் இனிதுவீற்றிருக்கும் அந்தகேசம் என்னும் தலமகிமை சொல்வோம். கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

இரணியாட்சன் மகனாகிய அந்தகாசுரன் என்பவன், தன்பிதாபூசை செய்து பேறுபெற்ற தலத்திற்குவந்து, ஆகம விதிப்படி அருச்சனை பண்ணி, வேண்டும் வரம்பெற்று மீண்டு போய், முரன் என்னும் அசுரனைக்கொன்ற மாயவன், முதலான தேவர்களையெல்லாம் போர் புரிந்து, வென்று, முதுகுகாட்டி ஓடச்செய்து, உலகமெல்லாம் ஏகச்சக்ராதிபதியாய் ஆண்டுவந்தான். அந்த அசுரனுக்குத் தோற்றுத் திருமகள் மார்பனாகிய திருமால் முதலியதேவர்கள் எல்லாரும் மின்னற்கொடிபோலும் இடைநடுங்க இறுமாப்படைந்து, முத்துமாலையணிந்து விளங்கும் பயோதரங்களையுடைய பெண் உருவெடுத்துக், கொள்ளி வட்டம்போல் உலகமெல்லாம் இடையறாமல் சுற்றிச் சுழன்று, கைலாச கிரியைச்சேர்ந்து, சிவபெருமானுடைய திருவருள்பெற்று, வள்ளி நாச்சியாருக்கு மாமியாகிய பார்வதிதேவியாருடைய பாங்கிமாருடன் கலந்து, தேவிக்குப் பணிவிடை செய்துகொண்டு, அவ்விடத்திலேயே வாசமாயிருந்தார்கள். இந்தப்பிரகாரம் நெடுங்காலம் சென்றபின்பு, எம்பெருமானாகிய சிவபெருமான் தாருகாவனத்தில் வசிக்கும் ரிஷிகளுக்கு மருள் உண்டாக்கி, அந்த ரிஷிகளுடைய உண்மை நிலையைச்சோதித்து அறியும்படி திருவுளம்செய்து, அந்தத்தாருகாவனத்திற்குப் பிக்ஷாடன மூர்த்தியாய் எழுந்தருளினார். அந்தச்சமயத்தில் அந்தகாசுரன், தேவர்கள் எல்லாரும் பெண்ணுருவெடுத்துக் கைலாசகிரியில் மறைந்து வாசம்பண்ணுவதைக் கேட்டறிந்து, பெருங்கோபம்கொண்டு, அந்தக்கைலாசக்கிரிக்குச்சென்று போர் செய்யும்போது, மாயவன் மகாதேவியாகிய பார்வதி கடாக்ஷம்பெற்று, எண்ணிறந்த மாயாமடந்தையரைப் படைத்து, அவனுடன் எதிர்த்துப் போர்செய்ய அனுப்ப, அந்த அசுரன் அந்த மாயாமடந்தையர் முன்னின்று சண்டைசெய்யமாட்டாமல்முதுகுகாட்டி ஓடிப்போய்விட்டான்.

இப்பால் எப்பெருமான் தாருகாவனத்திற்குப்போய்ச் செய்தகாரியங்களைச் சொல்வோம். காலில் அணிந்த சிலம்புகள் கலீல் கலீல் என்று சத்தமிடக் கையில் பிக்ஷாபாத்திரம் ஏந்திக்கொண்டு, பலகோடி பாலசூரியப் பிரகாசராய் எழுந்தருளிய எம்பெருமான் முழக்கும் தமருகத்தின் முழக்கத்தைக் கேட்டுப், புள்ளாங்குழல் ஓசைக்குமகிழ்ந்து ஓடிவரும் அசுணப்பட்சிகளைப் போல் அகமகிழ்ந்து அந்தரிஷி பத்தினிகள் எல்லாரும் பிச்சையிடும்பொருட்டுத் தெருவாயிற்படிக்கு வந்து, அழகெல்லாம் திரண்டு ஒரு வடிவுகொண்டு வந்தாற்போல் வந்திருக்கின்ற எமது ஐயனுடைய சந்திர கிரணம்பொழியும் புன்னகைக்கும், செம்பவள வாய்க்கும், பொன்மலைபோல் விளங்கும் புஜங்களுக்கும், மலைபோல் விசாலமான மார்பின் அழகுக்கும், பார்வதிதேவி தன்மெல்லிய விரல்கள் சிவந்துபோகும்படி தடவும் தொடைகளுக்கும், தங்கள் கண்மலர்களைச் சாத்துபடிசெய்து தாழ்ந்து பணிந்தார்கள். எம்பெருமான் அந்த ரிஷிபத்தினிகளுடைய கண்மலரைக் கவர்ந்து கொண்டபடியால், மின்னற்கொடிபோலும் அந்தமாதர்கள், அவருடைய பண்மலரும் வாய்மலரையும், பனிமலரும் முகமலரையும், கருணைமலரும் கண்மலரையும், தாள்மலரையும், கைமலரையும் ஈடாகக் கவர்ந்துகொண்டார்கள். எம்பெருமானுடைய சுந்தரத் திருமேனியானது அந்தமாதருடைய மனமெல்லாம் தன் இருப்பிடமாக்கிக்கொண்டபடியால், அவர்கள் நம்பியிருந்த நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் நான்கு குணங்களும் ஒட்டக்குடியிருந்தவர்களைப்போல் தங்களைவிட்டு நீங்கிப்போய்விட்டதனால், அவர்கள் எல்லாரும் மதுபானஞ்செய்து மயங்கினவர்களுக்கு ஒப்பாகமதிமயங்கி, அந்தச்சுந்தரவேடனைச்சூழ்ந்துகொண்டு, சோபனம்பாடி ஆடத்தொடங்கினார்கள். இதையன்றி அவர்கள் வேறு என்னசெய்வார்கள்? அவர்கள் அணிந்திருந்த களபச்சந்தனம் பொரிந்து போகவும், முத்துமாலைகள் பஸ்பமாகவும், தேன் ஒழுகப்பூத்திருக்கும் பூமாலைகள் மொய்த்திருக்கின்ற வண்டுகளுடன் கரிந்துபோகவும், இவ்வளவு என்று சொல்லப்படாத அளவினையுடைய காமத்தீயில்விழுந்து அழுந்தி, இந்தச்சுவாமிகளுயுடையபுன்னகையானது முப்புரங்களிலே தீ மூட்டிய முக்கண் மூர்த்தியின் புன்னகைபோலும் என்பார்கள். விரகத்தால் உடல் மெலிந்துபோகின்றமையால் இடையிலிருந்து கலைந்து சரிந்துபோகும் சரிகைச்சேலைகளை இறுக்கிக் கட்டிக்கொள்வதற்கு அவகாசம் இல்லாமல், கையால் இடுக்கியபடியே, விரைந்து கொண்டுவந்த பிச்சையைப் பாத்திரத்தில் இடாமல், அவர் திருவோட்டின்மேல் அணியும்பொருட்டுப் பூமாலை ஏந்திக்கொ

ண்டு போகின்ற ஒருத்தியைப் பார்த்துப், பெருமூச்சுவிட்டுப் பிரமித்திருப்பார்கள். இவ்வாறு திகைத்திருக்கின்றவர்கள்மேல் எம்பெருமான் கடைக்கண் சாத்தக் கண்டு தெளிந்து, நாம் எல்லாரும் இந்தச் சுவாமிகளுடைய பூரண கடாக்ஷம் பெற்றுக் கடைத்தேறினோம் என்று, அகமலர்ந்து முகமலர்ச்சி கொள்வார்கள். ஐயரோ! நீர் தருந்தபிச்சை ஏற்க வந்தீர். நாங்கள் தனப்பிச்சை தருகின்றோம். அதைத் தாங்கள் கைப்பற்றிக்கொண்டு போகலாம். அந்தத் தனப்பிச்சை இதோ இருக்கின்றது பாரும் என்று மார்பை நெளித்துக்காட்டிக் காமம் தலைக்கொண்ட நாங்களும் நீரும் திகம்பரர் ஆய்விட்டோம்.

இங்கே கிடக்கின்ற உத்தரியம் தங்களுடையதோ? அல்லது எங்களுடையதோ? சொல்லும் என்பார்கள். ஐயரோ! எங்கள் அரையானது தங்கள் அரைக்கு ஒப்பாகும்போல் தோன்றுகிறபடியால், இரண்டையும் கலக்கவைத்துக் கண்டுதெளிவோம் என்று அவர் அண்டையிற் போவார்கள். சுவாமிகளே! எங்கள் பயோதரங்களாகிய மதயானைகள் இடையை முறித்து, இடையூறு செய்யாமலிருக்கத் தங்கள் கைநகமாகிய அங்குசத்தால் வடுப்பட அழுத்தி நடத்துவீரானால், தங்களுக்கு நல்ல புண்ணியமாம். ஐயரே! தாங்கள் கேட்ட பிச்சையை நாங்கள் இல்லையென்னமற் கொடுத்தோம். நாங்கள் கேட்ட பிச்சையைத் தாங்கள் கொடுக்காமற்போனால், தங்களுக்குப் பழியாகும்லல்லவோ? நாங்கள் கேட்ட பிச்சையைத் தாங்கள் இல்லை என்று சொன்னாலும், தங்களை விடுவோமா? விடமாட்டோம். அடி தங்கையரோ! நாம் எல்லாரும் கூட்டமாகப்போய், மன்மதனுடைய போர்க்களத்தில் முனைந்து நின்று போராடுவோம். இந்தச் சுந்தரரை விடாமல் சூழ்ந்து வலைபோட்டது போல் வளைத்துக்கொள்ளுங்கள். என்று ஆரவாரம் செய்து போவார்கள். அழகரோ! நாங்கள் கொண்டுவந்து போட்ட பிச்சையுடன், எங்கள் கைவளையலும், கைவிரல்மோதிரமும் ஆகிய, (வளை ஆழிகளைத்) தங்கள் பிக்ஷாபாத்திரத்தில் ஏற்றுக்கொண்டீர். நித்தியானந்த நிமலரோ! அந்த வளை ஆழிகளை எங்களுக்குக்கொடுப்பீர் ஆனால், காஞ்சிமா நகரத்திற்கு வந்து யாசித்தமாலார்க்கு, வளை ஆழி (சங்கு சக்கரம்) கொடுத்தருளிய விகட சக்கர விநாயகருக்கு ஒப்பாவீர் என்பார்கள். ஆரண்ய சுந்தரரே! இவ்விடத்திலே இருக்கின்ற இது, பாம்பு அன்று; அல்குல் இவை யானைகள் அல்ல; பயோதரங்கள், இது பச்சோந்தி அன்று; நாசி, இது சிங்கம் அன்று; இடை, தங்களைக்கண்டு மகிழும் இவைகள் தங்களுக்கு இடர்செய்யும் என்று எண்ணிப்பயந்து போய்விட

வேண்டாம். எங்களைத் தழுவிக் கலந்தருளும் என்று அவர் திருவடிமேல் விழுந்து கும்பிடுவார்கள். இவ்வண்ணம் எம்பெருமானுடைய செவ்வண்ணத்திருமேனி அழகைக்கண்டு, ரிஷிபத்தினிகள் எல்லோரும் கற்பிழந்து போனார்கள். அதைக்கண்டு வெகுண்டு, வடவாமுகாக்கினி போற் சீறி எழுந்த ரிஷிகள் எல்லாரும் இட்ட சாபம், எம்பெருமானிடத்திற், செல்லாத காசுபோற் செல்லாமையால், அந்த முனிவர்கள் எல்லாரும் ஒன்றுசேர்ந்து, ஒரு யாகம் செய்யத்தொடங்கினார்கள். அந்த யாகத்தினிடமாகத்தோன்றி, எதிர்த்துவந்த முயலகன் என்னும் அசுரன், புலி, பாம்பு, மான், பூதம், எரி, மழு முதலானவைகளைத் தமது செந்தாமரைமலர்க்கையில் ஏந்திக்கொண்டு, எம்பெருமான் ஆனந்தக் கூத்து ஆடுவதைக்கண்டு, அந்த முனிவர்கள் எல்லாரும் சோர்ந்து, அயர்ந்து, பூமியில் விழுந்து, மனந்திடுக்கிட்டுத் திகைக்கும்போது, சிவபெருமான் அவர்களுக்குக் காட்சிகொடுக்கக் கண்டு, தெளிந்து, கைகூப்பித் தொழுது, எழுந்து, சிரசின்மேற் கைகளைக் குவித்துக்கொண்டு, தெய்வசிகாமணியே சரணம். அருளால் எங்களை ஆளவந்த அரசே! சரணம். பொன்போல் மலரும் கொன்றைப் பூமாலை யணிந்தவனே! அடியேங்கள் செய்த அபசாரமெல்லாம் உபசாரமாகக் கொண்டருளி, அடியேங்களுக்குப் பரமானந்த முத்திச் செல்வம் கொடுத்தருள வேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். அப்படியாகக் கைகூப்பித்தொழுது முத்திச்செல்வம்வேண்டிய முனிவர்கள்மேல் கிருபை வைத்து, முனிவர்களே! உங்களுக்கு முத்திச்செல்வம் வேண்டுமானால், காஞ்சிமா நகரத்திற்குப்போய், அந்தணர், அரசர், வைசியர், சூத்திரர் என்னும் நான்கு சாதிகளில் பிறந்து, அவ்விடத்தில் வாசம்பண்ணிக் கொண்டிருங்கள். அகப்பற்று, புறப்பற்று என்னும் இரண்டு பற்றும் அறத்துறந்தவர்களானாலும், பற்று நீங்கப்பெறாதவர்களானாலும், பரம ஞானிகளானாலும், ஞானமில்லாதவர்களானாலும், பன்றி, கழுதை, நாய், பாம்பு, புல் பூண்டு, மரங்கள், புழுப் பூச்சியானாலும் காஞ்சிமா நகரத்தில், பிறந்து இறந்துபோகப்பெற்றால், அவ்வுயிர்கள் எமது திருவடி நிழலைச்சேர்வது உண்மை. நீங்கள் எல்லாரும் அந்தக்காஞ்சிமா நகரத்திற் பிறந்து, இல்லறநெறியில் நின்று எம்மைப்பூசித்து, இன்பமுத்தி அடையுங்கள் என்று சொல்லத் தாழ்ந்து, பணிந்து, மீண்டு, பிருகுமுனி முதலான நாற்பத்தெண்ணாயிர முனிவர்களும் காஞ்சிமா நகரத்திற்கு வந்து, நான்கு சாதிகளிலும் பிறந்துவளர்ந்து, தனித்தனியாகச் சிவலிங்கப் பிரதிஷ்டைபண்ணிப், பத்தியுடன் மலர்கொய்து, ஆகமவிதிப்படி அருச்சனைசெய்து, துதி

த்துச், சிவபெருமான் திருவருளால் வேண்டும் வரம்பெற்று, இல்வாழ்க்கையில் மகிழ்ந்து வாழ்ந்திருந்தார்கள். முனிவர்களே! இந்தக் காரணத்தால் காஞ்சிமாநகரத்தில் வாசம் பண்ணுகிறவர்கள் எல்லாரும் முனிவர்களேயாம். அங்குள்ள சிலேயெல்லாம் இலிங்கங்களாம். நீரெல்லாம் கங்கையாம். மனிதர்கள் சொல்லும் சொல் எல்லாம் மந்திரங்கள். கைகளாலும் கால்களாலும் செய்யப்படும் தொழில்கள் எல்லாம் சிவ பணிவிடைகள். அந்த ஊரில் யமன் அதிகாரஞ் செல்லமாட்டாது. தாருகாவன ரிஷிகளுடைய செயல் அப்படியிருக்க, இப்பால் பிக்ஷாடன மூர்த்தியாய் நடித்தருளிய சிவபெருமான் கைலாசத்திற்கு எழுந்தருளி, பார்வதி தேவியாருடன் கலந்து மகிழ்ந்திருந்தார். பெண் உருவெடுத்து அங்கே வாசம் செய்துகொண்டிருக்கும் திருமால் முதலானதேவர்கள் எல்லாரும், அம்மை அப்பனைத் துதிசெய்தலுடன் இருபுடையுஞ் சூழ்ந்து கொண்டிருக்கும்போது, அந்தகாசுரன் தன்னை முதுகுகாட்டி ஓடச்செய்த அந்தப்பெண்களைச்சிறையாகப் பிடித்துக்கொண்டு வருவோம் என்று மீண்டு வருவதைப்பார்த்து, மாயவன் முதலான தேவர்கள் எல்லாரும் விண்ணப்பம் செய்யக் கேட்டு, எம்பெருமான் அந்த அந்தகாசுரனைக் கொல்வதற்கு வயிரவ மூர்த்தியை ஏவினர்.

சிவபெருமானல் ஏவப்பட்ட வயிரவ மூர்த்தியானவர், வச்சிரபாணியாகிய இந்திரன் முதலான தேவர்களுக்கு இடையூறுசெய்யப் பகைகொண்டு, துடித்துப், படையுடன் போர்செய்ய வந்தவனைப், போர்செய்து வென்று, தன் சூலாயுதத்தில் கோத்து ஏற்றிக்கொண்டு, பரமசந்தோஷத்துடன் கூத்தாடும்போது, சிவாநுக்கிரகத்தால் அந்தகாசுரனுக்கு மெய்ஞ்ஞானம் உதிக்கவே, அவன் அந்தச்சூலாயுதத்தில் கோக்கப்பட்டிருந்தபடியே வயிரவமூர்த்தியின் பாதாரவிந்தங்களை வணங்கி, வாழ்த்துதலும், அவர் திருவுளம் இரங்கி, அன்பனே! யாம் உன்தோத்திரத்திற்கு மகிழ்ச்சியடைந்தோம். உனக்கு வேண்டும் வரம் யாது? சொல் என, அவன் ஐயனே! அடியேனுக்கு முத்தியே வேண்டும். மற்றொன்றும் வேண்டுவதே இல்லையென்முன். அந்தகாசுரனே! உனக்கு முத்திவேண்டுமானல், சிவபெருமான் திருவருள் பெற்றுக், காஞ்சிமா நகரத்திற்கு போவோம்வாவென்று சொல்லிக் கைலாசபதியினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, தன் காவலில் விளங்கும் காஞ்சிமாநகரத்திற்குவந்து, சூலாயுதத்தில் கோப்புண்டு கிடந்தவனைத் திரிபுர தகனம் செய்தருளிய ஏகாம்பரநாதர் இனிதுவீற்றிருக்கும் திருவேகம்பத்திற் சிறந்து விளங்கும் சிவகங்கையில் நீராடச்செய்து, அநுக்கிரகம்பண்ணி, ஆணவம்முத

விய பாசங்களை அறுத்தெறிந்தார். பாசத்தளையை அறுத்துவிடுதலும், அந்த அந்தகாசுரன் பூர்வம் தான் பூசித்து வரம்பெற்றுக்கொண்ட அந்தகேச இலிங்கத்தில் மறைந்து, அருட் பெருஞ்சோதியுடன் ஐக்கியமானன்.

அந்தகேசன் அடியிணை போற்றி.

---

முப்பத்தினன்காவது

## வாணிசப்படலம்.

பரிபூரணனந்தப் பாக்கியவான்களே! தருமங்களுக்கெல்லாம் தாய் வீடாகிய காஞ்சிமாநகரத்தில் சிறந்து விளங்கும் அந்தகேசம் என்னும் தலமகிமையை யாம் அறிந்தபடி சொன்னோம். இனி அதன்கிழக்கில் மேருவில்லியாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் வாணீசம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

மகா பலசாலியான வாணசுரன் பூர்வம் காஞ்சிமா நகரத்திற்குப் போய்த் தன்பெயரால் வாணீசம் என்னும் சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணிப் பூசைசெய்து, தபசிகளைப்போல் நெடுங்காலம் தவம் செய்துகொண்டிருந்தான். அடியார்க்கு எளியன் ஆகிய சிவபெருமான் அந்த அசுரன் முன் நின்று, ஆனந்தக் கூத்தாடுவதைக் கண்டுகளித்து, உடம்பெல்லாம் குழைந்து, மனமெல்லாம் உருகித், துதிசெய்து, நந்திதேவர் முதலிய கணங்களுடன் தானும் மத்தளம் தட்டினன். இரண்டுகைகளும் குலுங்கும் படி அவன் மத்தளந் தட்டுந்தோறும் சிவபெருமான் திருவுளம் மகிழ்ந்து, திருவருள் சுரந்து, அவனுக்கு ஆயிரம்கைகொடுத்து, வாணசுரனே! உனக்கு வேண்டும்வரம் யாது? சொல் என, ஆயிரம் செந்தாமரை மலருடன் ஓங்கிப் படர்ந்திருக்கும் நீலகிரிக்கு ஒப்பாகிய அவன், தாழ்ந்து பணிந்து, எழுந்து, ஒருமாவடியில் தானே முளைத்த தனிநாயகனே! அடியேனுக்கு அக்கினிமதில்சூழ்ந்த கோட்டையும், அதிக பலமும், அகண்ட ஐசுவரியமும், மூன்றுலகங்களை ஏகச்சக்கராதிபதியாய் ஆளும் திறமும், மாளா வாழ்வும், உன் திருவடிப்பத்தியும் கொடுத்தருள வேண்டும் என்று பிரார்த்திக்கையில், சிவபெருமானும் அந்த வரமெல்லாம் கொடுத்துவிட்டு, அந்தர்த்தானம் ஆய்விட்டார். இப்பால் அந்த வாணசுரன் சகலலோகங்களை

யும் தன் வசப்படுத்திக்கொண்டு, அகங்காரம் அடைந்து, அக்கிரமம் செய்து வாழுங்காலத்தில், ஒருநாள், பார்வதிபாகனுகிய பரமபதியைக் கண்டு சேவிப்பதற்குக் கைலாசகிரிக்குப்போனுன். அங்கே எம்மை அடிமையாகப் படைத்தருளும் சிவபெருமான் ஆனந்தக்கூத்தாடும் வேளையில், அந்த வாணுசுரன் நவரத்தினக் கடகம் அணிந்திருக்கும் தன் ஆயிரங் கைகளாலும் தொம், தொம் என்று ஒலிக்க மத்தளம் அடித்ததனுல், அந்த நடராஜன் மனமகிழ்ந்து, அவனைநோக்கி, நீ எந்தவரம் வேண்டினுலும் யாம் தருகின்ருேம். கேள் எனவும், அந்த அசுரன் தாழ்ந்து பணிந்து, கைலாசபதி! அடியேன் உமது திருவடிகளைத் தினந்தோறும் கண்டு சேவிக்க விரும்பினேன். ஆதலால், தேவரீர் பார்வதிதேவி, விநாயகக்கடவுள், சுப்பிரமணியசுவாமி, மற்றும் கணங்களுடன் அடியேன் கோட்டைவாசற்படியில் குடிகொண் டிருந்தருள வேண்டும் என்று கும்பிட்டான். தன் அடியார்கள் எண்ணியபொருள்களை எண்ணியபடியே கொடுத்தருளும் எம்பெருமான், அந்த அசுரன் கேட்டுக்கொண்ட பிரகாரம், அவன் கோட்டைவாயிலிற் கோயில்கொண் டிருந்தார். யாவராலும் மதிக்கும்படியான அந்த அசுரனும், தினந்தோறும் காலம் தப்பாமல் அந்தக் கடவுள் நாயகனைக் கண்டு, கைகூப்பித்தொழுது, களிப்புற்று வாழும் நாட்களில், இந்திரன், மாயவன் முதலான தேவர்கள் எல்லாரையும் போர்செய்து, வென்று, முதுகு காட்டி ஓடவைத்து, நீலகண்டனுகிய சிவபெருமானுக்கு முன் நின்று சிறிதும் அஞ்சாமல் அகங்காரத்தால் இதுசொல்லலானுன்.

சுவாமி! தேவர்கள் எல்லாரும் என்னுடன் எதிர்த்துப் போர்செய்ய மாட்டாமல் ஓடிப்போய் விட்டார்கள். எம்பெருமானே! இனி என் தோளில் உள்ள தினவை உம்முடன் போர்செய்து தீர்த்துக்கொள்ள வந்தேன். உம்முடைய கருத்து என்ன? சொல்லும் என்று சற்றேனும் அஞ்சாமல் சந்நிதானத்தில் நின்று சொல்லக்கேட்டுப், பகைவர்களாகிய யமனையும், இராவணனையும், பிரமதேவனையும், மன்மதனையும், திரிபுராசுரர்களையும், திருவடியாலும், திருவடியிற் பெருவிரலாலும், திருவிரல் நகத்தாலும், திருநெற்றிக் கண்ணுலும், திருநகையாலும், உதைத்தும், மிதித்தும், கிள்ளியும், சுட்டெரித்தும், சாம்பலாக்கியும், கீழ்ப்படுத்தி, யாவரினும் மேற்பட்டிருக்கும் சிவபெருமான், சந்திரகிரணம் வீசும்படி சிரித்து, அவனைப்பார்த்து, வாணுசுரனே! நீ வீணுய் அவசரப்படாதே. சற்றுப் பொறு. மகாதபசியாகிய பிருகுமுனிவன் இட்ட சாபத்தால் யாதவகுலத்திற்பிறந்து, எமக்கு அன்பனுகிவிளங்கும் கண்ணன், உன் தோளில் உள்ள தினவு எல்லாம் விரைவில் தீர்க்கவருவன். என்று சொல்லினர்.

என் இப்படிச் சொன்னுர் என்பீர்களாகில் முனிவர்களே! தன்னைத் தொழுகிறவனைத் தானே கொலைசெய்தல் தருமம் அல்ல. என்பதை நாடியே அன்றி, அவனைக் கொல்லமாட்டாமையால் அப்படிச் சொல்லியது அல்லவென் றறிக. ஆன்மாக்கள், பரமானந்தம் தரும் பரமபதியாகிய தன்னை மறந்து, விட்டுப் பிரிந்து, பாழ்ப்படுத்தும் மாயையுடன் சம்பந்தப் பட்டமையால், திருவுளத்திற் கோபங்கொண்டு, அந்த ஆன்மாக்கள் எல்லாவற்றையும், அவன், அவள், அது என்னும் பிரபஞ்சமாகப் படைத்து, இடையறாமல் ஆட்ட வல்லவனுகிய அந்தக் கடவுள் நாதனுக்கு இந்த வாணசுரனை அடக்குவது அருமையாகுமோ? ஒருபோதும் அருமையாகமாட்டாது. பூர்வம் எம்பெருமான் வரதராஜப் பெருமாளுக்கு வரம்கொடுத்தபோது, வரதராஜனே! நீ யுத்தகளத்திலே எம்மைப்பார்க்கிலும் வெற்றியிற் சிறந்தவன் ஆவாய் என்று திருவுளம் பற்றியது, அஞ்ஞானத்தால் இருண்ட மனமுள்ள இந்த வாணசுரனை மர்த்தனம் செய்யவேயாம். சிவபெருமான் அப்படிச் சொல்லுதலும், அந்த அசுரன் கைதட்டிச் சிரித்துச் சுவாமி! அந்தச் செந்தாமரைக் கண்ணன் முப்பது தரம் என்னுடன் எதிர்த்துப் போர்செய்து, என் யுத்தத்திற்குச் சகிக்கமாட்டாமல் தனக்குத்துணையாய் வந்த தேவர்களுடன் ஓடி ஒளித்துக் கொண் டிருக்கின்றுன்.

என்பிதாவே! அப்படி ஓடி ஒளித்துக் கொண்டிருக்கின்றவனை ஒருவீரனுக வைத்துத் தாங்கள் இப்படிச் சொல்லலாமோ? என்று ஊழ்வினை வலியால் அவன் இகழ்ந்து சொல்லக்கேட்டு, அவன் பண்ணிய சண்டைக்குப் பயந்து போனவனைக் கொண்டே, அவனை அடக்கத்திருவுளம் செய்து, எம்பெருமான் சிரித்து, மகாபராக்கிரம சாலியான வாணசுரனே! கேள் என்று சொல்லுகின்றுர். அந்தக் கண்ணன் உன் சண்டைக்குத் தோற்று ஓடிப் போனபின்பு, உன்னை அடக்கும் பொருட்டு, எமது அன்பனுகிய உபமன்னிய முனிவனுக்குத் தொண்டு செய்து, எமது அருள்பெற்று, எல்லாரைக்காட்டிலும் மிக்க பலசாலியா யிருக்கின்றுன். அவனை முன்போல் இலேசானவன் என்று எண்ணுதே. அவன் எப்போது வருவான் என்று கேட்பாயாகில், உன் மகளாகிய உஷா என்பவளுக்கு ஒரு பழி நேரிடும். அந்தப் பழிக்கு உற்பாதமாக உன் பட்டணத்துக் கொடிமரங்களில் ஒன்று ஒடிந்துவிழும் போது வருவான். என்று சொல்லுதலும். அந்தவாணசுரன் மீண்டு, தன் இருப்பிடம் ஆகிய சோணிதபுரத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அவ்விடத்தில் அவன் பெற்ற பெண்ணுகிய உஷா என்பவள், ஒருநாள் இரா

த்திரி நித்திரைசெய்யும்போது, கண்ணன் குமாரனுகிய பிரத்தியும் னன் பெற்ற மகனும், பேரழகுள்ளவனுமாகிய அனிருத்தன் என்பவன் அவள் சொப்பனத்திலே தோன்றி, அவளைக் கட்டித்தழுவ, அவளும் அவனைத் தழுவிப் புணர்ந்து, பரமசந்தோஷம் அடைந்து, கண்விழித்துப் பார்க்கும்போது, அவன் காணப்படாமையால், கை அடித்துக், கண்ணீர்விட்டுக், கதறி அழுது, களைத்து ஆபரணமெல்லாம் சிதறுண்டு, வெற்றுடம்பாய் இருக்கக்கண்டு, அவள்பின்னுல் தனக்கு மருமகள் ஆவாள் என்பதை உணர்ந்தவன்போல் மன்மதனுனவன் தன் கையில் உள்ள பஞ்ச புஷ்பங்களால் இலேசாகச் சாத்துபடி செய்துவைத்தான். களாப்பழம்போல் கறுத்திருக்கின்ற தன் கூந்தலால் கவலைமூட்டித் தன்னை நெடுநாளாக வருந்தச்செய்யும் பகை தீர்த்துக்கொள்ளச் சமயம் வாய்த்தது என்று, மன்மதனுடைய போர்க்குச் சிறந்த இராத்திரி என்னும் யானையானது அவள் எதிரில் நின்று தன்பலத்தைக் காட்டியபடியால், அவள் இதற்குத் தப்பிப் பிழைப்பது எப்படி என்று, மனங்கலங்கி வேரற்றுவாடும் இளங்கொடிபோல் வாடிப்போய்விட்டாள். பூர்வம் சிவபெருமான் வாணனைநோக்கி, உன்மகளுக்கு ஒருபழி நேரிடும் என்று சொல்லிய சொல்லுக்குப் பழுதுவராதபடி, அவள் மாண்டுபோவதைத் தடுக்க விரைந்து வருபவன்போல், அவளை மருட்டிய இருட்டைப்பிளந்து கொண்டு சூரியன் கருங்கடல் முகட்டில் தோன்றினுன்.

அனிருத்தன் வந்து தன்னைக் கலந்ததையும், கண்விழித்துப் பார்த்தவுடன் காணுமற் போய்விட்டதையும், அவள் சொல்லக் கேட்டறிந்த உயிர்த்தோழி ஒருத்தி தனக்குள் ஆலோசனைபண்ணி, உலகத்தில் உள்ள இராஜகுமாரர் உருவங்களைப் படத்தில் எழுதிக் காட்டிக்கொண்டு வருகையில், அவள் அனிருத்தன் படத்தைப்பார்த்து, இவன்தான் என்று மகிழ்ச்சியடையக்கண்டு அந்தத்தோழி உடனே துவாரகாபுரிக்குப்போய், அங்கே விசித்திரக் கட்டிலின் மேல் நித்திரை செய்து கொண்டிருந்த அவனை அந்தக் கட்டிலுடன் அசையாமல் ஒரு சித்திரம் போல் எடுத்துக்கொண்டு வந்து, அவள் எதிரில் வைத்தாள். வைக்கவே அசுரன்மகள் அவனைக் கண்ணாரப்பார்த்து, அமுதம் அள்ளி உண்டவள்போல் ஆனந்தம் அடைந்து, அவனைக் கட்டித் தழுவி, அவன் திருமேனி அழகெல்லாம் உற்றுப்பார்த்துக் கவலைதீர்ந்தாள். அப்போது அவன் விழித்துக்கொண்டான். விழித்துக்கொண்டவுடன் அவனுக்கும் விரகம்மேலிட்டது. அதனுல், அவன் கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்றறியும் ஐம்புலன்களும் ஓரோகாலத்தில் மகிழும்படி கங்குகரை காணுமற் பெருகிவரும்

புதிய சுகானந்தபோகக்கடலில் முழுகிவிட்டான். தன்கண்கள் சிவக்கவும், செவ்வாய்துடிக்கவும், அழகுபெருகிவழிந்து ஒழுகுவதுபோல், நெற்றியில் வேர்வைநீர்பெருகவும், காடை, குயில், புறா ஓசைபோல் கண்டத்தினிடமாகக் குமுகு, குகுகு, குங்குங் என்று ஓசைஉண்டாகவும், கைவளையல்கள் கலீல் கலீல் என்று கலிக்கவும், அவனுடைய தோள் மலைகளைத் தன் பயோதரங்கள் என்னும் யானைகள் அடிக்கடிமுட்டி இடித்துக் குலுங்கச்செய்யவும், மலரணைமேல் மருவி அவளும் மன்மதப் போராடினாள். மாதர், ஆடவர், மதனலீலைசெய்து மருவும் இடத்தில் நிற்பது தகுதியல்லவென்று மௌனமாய் விலகிப்போய் விடுகின்ற புத்திமான்களைப்போல, அவள் ஆடையும் நாணமும் அவளைவிட்டு அப்பாற்போய்விடவும், விலகிப்போய்விடாமற் சூழ்ந்துபார்த்து அலர்தூற்றி அறிவிக்கும் அற்பர்களைப்போல், வாரிமுடித்த கூந்தல் அவிழ்ந்து அவளைச் சூழ்ந்துகொள்ளவும், பாதச்சிலம்புகள் வாய்விட்டொலிக்கவும், அவனைவிட்டுப் பிரியாமல் இன்பம் அநுபவித்து வாழும் நாட்களில், அவள் மேனி வேறுபட்டுக் கருப்பம் அடைந்திருப்பதைத் தாதிமார்கள் அறிந்து, வாணனுக்குத் தெரிவிக்கவே, அந்த வாணன் அனிருத்தனைப் பிடித்துச் சிறைப்படுத்தினன். அதைக்கண்டு பெண்கொடியாகிய உஷா என்பவள் மனங்கலங்கும் மயில்போல் கலங்கித்தேம்பி அழுது மூர்ச்சையாய்விட்டாள்.

பூமிமேல் விழுந்து சோர்ந்துகிடக்கும் அந்தப் பெண்கொடிக்குக் கொழுகொம்புபோல் உதவியாக, ஆகாயத்தை அளாவியிருக்கும் கொடிமரங்களில் ஒன்று, காற்றினால் முறிந்து விழுந்தது; வாணாசுரன் தவம் செய்து பெற்ற வாழ்வும் கூடவே இற்று விழுந்தது. இங்கேநடந்த காரியங்களை நாரதமுனிவன் அறிந்து, வில்லெடுத்துப் போர்செய்வதில் வல்லவனை தன் குமாரன் பிரத்தியும்நன் பெற்றபிள்ளையாகிய அனிருத்தனை எங்கும் தேடிக்காணாமல் சருகுபோல் தன் சுற்றத்தாருடன் வாட்டம் அடைந்திருக்கும் துவாரகாபுரி வாசனாகிய கண்ணன் இடத்திற்குப் போய்த் தெரிவிக்கக்கேட்டுத் தெளிந்து திரண்டகல்போலும் தோள்களின்மேல் துளசிமாலை அணியும் அந்தக் கண்ணன் தூதர்களை அழைத்து, வாண சுரனுடன்சண்டைசெய்வதற்குச் சேனைகள் எல்லாம் புறப்படுக என்று பறை அறைவித்தான்.

தூதர்களால் தெரிந்துகொண்ட வள்ளுவர் பறைசாற்றக் கேட்டவுடன், அவ்விடத்தில் இரதகஜ துரகபதாதி என்னும் சதுரங்க சேனைகள் சேர்ந்தது. அது அன்றியும் தேவர்களிடத்திலிருந்து திசாதிசைகளில் சித

றுண்டிருந்த புண்ணியங்கள் எல்லாம் மீண்டுசேர்ந்து, அந்தத் தேவர்க ளிடத்தில் போய்ச் சேர்ந்துகொண்டன. கொடுமை செய்யும் அசுரர்க ளால் நெடுநாள் வருத்தமடைந்திருந்த யமதூதர்கள், அந்த அசுரர்களைப் பிடிக்க மகிழ்ந்து வேற்றுருவெடுத்துக் கொலை முதலிய கொடுந்தொழில் களை நன்முகக் கற்றுக்கொண்டு வந்தாற்போல் விளங்கும் கூர்மையான தந்தங்களையும், தும்பிக்கையையும், கொல்லுந் தொழிலையும், அஞ்சாமை யையும் உடைய எண்ணிறந்த யானைகளை யானைப்பாகர்கள் அலங்கரித் தார்கள். நவரத்தின முடி சூடிய தேவர்களுடைய மனமெல்லாம் கூட் டமாகச்சேர்ந்து, நம்மைக் கவலைப்பட வருத்திய அசுரர்களை வெல்வத ற்குஇதுசமயம் என்று கால்முதலிய அவயவம்படைத்து, அனந்தமாய்வரு வதுபோல், விரைந்து செல்லுங் காட்சியுடன் விளங்கும் கடிவாளம் பூண்டிருக்கும் எண்ணிறந்த குதிரைகளைக் குதிரைப்பாகர்கள் அலங்கரி த்தார்கள். பார்வதி, பரமசிவன், சுப்பிரமணியசுவாமி, விநாயக மூர்த்தி என்னும் இப்படிப்பட்டவர்களைத் தன் கோட்டை வாசலில் குடியிருக் கவைத்த வஞ்சகனாகிய வாணாசுரன்மேல் மலைகள் எல்லாந் தோபங் கொண்டு போர்செய்யப் புறப்பட்டாற்போல், விரைந்துசெல்லும் பல கோடி கொடித் தேர்களைச் சாரதிகள் சிங்காரம் செய்துவைத்தார்கள். முன்பு திரிபுரங்களில் தீ மூட்டிய சிவபெருமான் இப்பொழுதுதன்னை ஏவி விடவும் வரம்பெற்றுக்கொள்ளவும் கூடும் என்று நிச்சயித்து, அந் தவாணாசுரனுடைய உயிரை வாங்குவதற்குப் பலகோடி உருவங்கொண் டுவந்தாற்போல், தோன்றும் வடவாமுகாக்கினிக்கு ஒப்பாகிய பெருங் கோபமும் பேராண்மையும் உள்ள வீரர்கள் அநேகர்நெருங்கினார்கள்.

இவ்வாறு அலங்கரிக்கப்பட்ட இரதகஜ துரகபதாதி என்னும் சது ரங்கசேனையின் பெருக்கத்தைப்பார்த்துப் பூமியில் உள்ளவர்கள் பயப் படாமல் இருக்கும்படி சந்திரவட்டக் குடைகளும், மயில் குஞ்சங்களும், மேல்நின்று மறைக்கத், திருப்பாற்கடல் நடுவிலும் தான் வீற்றிருக்கும் காட்சிபோல் கண்ணனும், அந்தச்சேனாசமுத்திரத்தின் நடுவில் மும்மதங் களையுடைய ஓர் யானைமேல் ஏறிச்சென்றான். நான்குவகைப்பட்ட சே னைகள் புறப்பட்டுப் போகும்போது பூமியிலிருந்து ஆகாயத்திற் பறக் கும் செந்தூளானது, நமது கணவனாகிய கண்ணன் யுத்தத்திற்குப்போக, நாம் இங்கே சும்மா இருந்து வீணில் பொழுதுபோக்காமல், நமது வைகு ந்தம் என்னும் பழைய திருமாளிகையின் ஸ்திதியை விரைந்துபோய்ப் பார்த்துவருவோம் என்று பூமிதேவியும் ஆகாயத்திற் படர்ந்துபோவதை ஒக்கும்.

இந்தப்பிரகாரம் எழுகடலும் ஏக காலத்தில் அணைகடந்து பெருகி வந்தாற்போல் பரவிவருகின்ற சேனையானது, சத்துருக்கள்வந்து அணுகுவதற்கு அருமையான சோணிதபுரத்தைச் சூழ்ந்துகொள்ள, அதை அந்தவாணன் அக்கினிப்பொறிபறக்கப் பார்த்துப்பெருநகைசெய்து, தன்னைப்போல் கொலைசெய்யும் போரில்சிறந்த சேனைத் தலைவர்களை ஏவினன். ஏவுதலும் நால்வகைச்சேனைகளும் புறப்பட்டன. எங்கும் வாத்தியங்கள்முழங்கப்பெற்றன. குதிரைவாய்நுரைகள் கொப்புளித்து வீழ்ந்தன. தூரத்தில் இருந்துபார்த்தவர்கள் வாணனுடைய பட்டணமாகியசோணித புரத்தில் மண்மாரி பெய்கின்றது போலும் என்று மருட்சியடையும்படி மண்ணுலகத்திலும், விண்ணுலகத்திலும், செந்தூள் கருந்தூள் பறந்தன. பூமிதேவியானவள் தன் பிராணநாயகனாகிய கண்ணன்மேல் யுத்தம்செய்யப்போகின்ற அந்தச்சேனையில் உள்ளவர்கள் மனம் வருந்தும்படி புழுதிமண்ணை வாரி இறைத்து, அவர்கள் கண்ணை மறைக்கின்றதனால், அவர்கள் அதிக கோபங்கொண்டு, அந்தப் பூமிதேவியின் மார்பு நோகப் பாதங்களை அழுந்தவைத்து, ஆரவாரம்செய்து நடந்து, பட்டணத்தைவிட்டு வெளியிற் புறப்பட்டார்கள். பளபளவென்று சொலிக்கின்ற ஆயுதங்கள் மின்னொளிகாட்டவும், குதிரைவாய் நுரைகள் மழைத்தாரை காட்டவும், ஆரவாரம் இடியோசை காட்டவும், அந்நாள் இரண்டு மேகபடலங்கள் ஒன்றோடொன்று எதிர்த்தாற்போல் இருதிறத்தாருடைய சேனைகளும் ஜயலட்சுமி சபாஷ் என்று மெச்சும்படி கைகலந்து சண்டைசெய்யத் தொடங்கி யுத்தகளத்திலே உடல்கிடக்க, வீர சுவர்க்கத்திற்கு வருகின்றவீரர்களை எதிர்கொண்டு அழைக்கவருகிறவர்கள் போல், சீதளமான மலர்மாலைசூடிய முடியுடைய தேவர்கள் எல்லாரும் அந்த யுத்தத்தின் காட்சியைக் காண்பதற்கு வானத்தில் எங்கும் நிறைந்திருந்தார்கள்.

நவமணிபோலும் யுத்தகளமாகிய நடனசாலையில் ஜயலட்சுமி கூத்தாடும்படி அடர்ந்த பல வாத்திய வோசைபோல் படகம், சல்லி, தக்கை முதலான பலவாத்தியங்கள் முழங்கின. திரிபுரதகனனாகிய சிவபெருமான் ஒருவனே போர்செய்வதில் வல்லவன் என்று உணர்ந்தவர்கள் போல், அந்தச்சிவபெருமான் திருமுடியில் அணிந்துகொள்ளும் தும்பைமாலையை அணிந்துகொண்டு, ஆரவாரம்செய்து, ஆண்மை மிகுந்து, இரண்டுகட்சியாரும் செய்த சண்டையை விரித்துச்சொல்ல எவரால் முடியும்? யானை ஏறும் வீரருடன் யானை ஏறும் வீரர்களும், குதிரை ஏறும் வீரருடன் குதிரை ஏறும் வீரர்களும், தேர் ஏறும் வீரருடன் தேர் ஏறும் வீரர்களும், காலாள்களுடன் காலாள்களும் கலந்து சண்டை செய்தார்கள். தண்டம் என்னும் படைக்குத் துணைசெய்யும் மதவீர வேதண்

டங்கள் (மதத்தையும் வீரத்தையும் உடைய யானைகள்) தும்பிக்கையால் சுழற்றி எறியும் தண்டாயுதங்கள், பகைவர்கையில் ஏந்திய தண்டாயுதங்களும், தோள்மேல்தாங்கிய தண்டாயுதங்களும், முறிந்து, பூமியில் உருளும்படி தண்டனைசெய்யலாயின. படுகளத்தில் உறவுபார்ப்பது உண்டோ? பார்ப்பதில்லை. அதுபோல் ஆயுதங்கள் ஆயுதங்களை அழிக்கலாயின. ஆகாயத்தைஅளாவும்படி ஓங்கியிருக்கும் உன்னதபர்வதத்தில் உள்ளகுகைகளில் இருந்து புறப்பட்டுப்பெரும்பறவைகள் வட்டமிட்டுப் பறந்துவிரைந்துவேறுமலைக்குகையில்குடியிருக்கப்போவதுபோல், தேர்மேல்சண்டைசெய்யும் வீரர்கள் எதிர்த்துச் சுழற்றி எறியும் சக்கராயுதங்கள் கிறுகிறுவென்று வட்டமிட்டுச் சுழன்று விரைந்துபோய் வேறு தேர்முகத்திற் பாய்ந்து அடங்கும். போர்செய்யுங்குதிரைகள் வலசாரி இடசாரியாக ஓடுந்தோறும் பகைவருடைய முடித்தலைகள் அற்று விழுந்து, நீங்களும் எங்களைப்போல் வலியிழந்து முதுகுகாட்டி ஓடவேண்டாம் என்று தடைசெய்வதுபோல், தம்மைச்சேர்ந்த வீரர்கள் ஏறி ஓடும் தேர்ச்சக்கரங்களை ஓடவிடாமல் தடுக்கும். வண்டுகள் முழங்கும் வாவியில்வசிக்கின்ற செந்தாமரை என்னும் தன் பத்தினியைத் தாவி எடுத்துக்கொண்டு தன் மண்டலத்திற்கு மீண்டுபோகின்ற சூரியன் என்னும் புருஷனைப்போல், பராக்கிரமசாலிகளாகிய பகைவர்கள் சுழற்றிவிடும் சக்கராயுதங்கள் எதிரிகளுடைய தலைகளைக்கிள்ளி ஏந்திக்கொண்டு அண்டகடாகத்தில் சுழன்று சொலித்துக்கொண்டிருக்கும். பகைவர்மேல்விரைந்துசெல்லும் வீரமுள்ளயானைகள் ஒன்றின் மேல் ஒன்றுவீசி அடிக்கும் இருப்பு உலக்கைகளும், அவைகளைத் தடுக்கும் இருப்பு உலக்கைகளும் செம்பவளம் போற் சிவந்த வாயினை யுடைய பெண்கள் மாறிமாறித் தட்டி ஆடும் கோலாட்டம் போல் இருந்தபடியால், ஆகாயத்தில் அடர்ந்திருந்த தேவர்கள் எல்லாரும் கண் இமையாமற்கண்டு ஆச்சரியப்படுவார்கள். திதிபுத்திரராகிய அசுரர்கள்கோபத்துடன்விழித்துப்பார்த்த கண்களில்இடக்கண் அடிக்கடி துடித்ததனால், நமது சத்துருக்கள் நம்மை இலேசாக நினைத்து அழித்து, அட்டகாசம் செய்வார்கள் என்று, வெட்கமடைந்து அந்த இடக்கண்ணால் பார்ப்பதைவிட்டு, வலக்கண்ணால் நெருப்புப் பொறிபறக்கப் பார்த்து, ஆரவாரம்செய்து தங்கள் சௌரியத்தைத் தாமேபுகழ்ந்துபேசிச் சண்டைசெய்யத் தலைப்பட்டார்கள். கடுங்கோபங்கொண்ட யானைகள் தும்பிக்கையால் சுழற்றி எறிவதனால் ஆகாயத்தி னிடமாக வருகின்ற அசுரர்கள் ஆயுதபாணிகளாய் வருவதைக்கண்டு, நமக்கு இடர்செய்யும் பொருட்டு இங்கே வந்தார்கள் என்று மனம் திடுக்கிட்டு, அங்கே அடர்ந்திருந்த தேவர்கள் எல்லாரும் ஓடிப்போய்விட்டார்கள். பகைவர்களைக் கொன்று கொதிப்படைந்திருக்கும் வாளாயுதம் ஏந்திய அசுரர்கள் ஆகா

யத்திற்செல்லும்படி தூக்கி எறிந்தயானைகள்குளிறிப்பிளிறி, மதநீர் ஒழு கப் பூமிமேல் விழுவது, வலன் என்னும் அசுரனை வருந்த வதைத்த வச் சிரபாணியாகிய இந்திரன் கட்டளையால் மேகங்கள் வில்லுடன் கண்ண னுக்குத் துணைசெய்யவருவதை ஒக்கும். மகாவீரனாகிய ஒரு அசுரன் கோ பங்கொண்டு செலுத்திய குதிரையானது, உயர்ந்த ஆகாயத்தில் செ ன்று, அவ்விடத்தில் உள்ளசுழல்காற்றில் அகப்பட்டுச் சுழன்று அலையுங் காட்சியானது, அந்தச் சண்டைக்குப் பயந்து அதிவேகமாய் வருகின்ற சூரியனுடைய தேரில் கட்டிய குதிரைகளில் ஒன்று அந்தத் தேர்செல் லும் விசையால் தப்பித் தன் இனத்தைக்காணாமல் திகைப்படைந்து அவ்விடத்தில் திரிந்துகொண் டிருப்பதுபோல் விளங்கும். போர்க்களம் எல்லாம் சதுப்பு அடையும்படி நிறைந்திருக்கும் இரத்த மாமிசத்தில் சறுக்கி விழுகின்ற சூரருடைய முதுகில், மதயானைகள் குத்திய தந்தங் கள் ஊடுருவி மார்பில் நிமிர்ந்திருக்கிறதைக் கண்டு, இந்தப் புருஷர்கள் ஸ்திரீகளைப்போல் பயோதரம்பெற்றிருக்கிறகாரணம் என்னவென்று, அர ம்பையர் எல்லாரும் அதிசயம் அடைவார்கள். சத்துருசம்மாரம்செய்து வீ ரகண்டை அணிந்து கோபம்கொண்டிருக்கும் வீரருடைய தேகத்திலே வேலாயுதம் பட்ட துளையிலிருந்து இழிந்து பாய்ந்து வருகின்ற இரத்த வெள்ளமானது இந்தச்சத்துருக்கள் உயிரை நான் குடித்து விடுவேன் என்று அவர்கள் மனதினிடமாக மறைந்திருந்த கோபாக்கினி வெளிப் பட்டு விரைந்து ஓடிவருவதை ஒக்கும். கொடிய யானைகள், தங்கள் தும் பிக்கையால் சூலாயுதங்களைச் சுழற்றி எறியும்போது, தேர்க்கொடிஞ்சி யில் இழைக்கப்பட்டிருக்கும் மாமணிகள் பல பல வென்று உதிர்ந்துவி ழுங் காட்சியானது, கொலைத்தொழிலிற் சிறந்த ஆயுதங்களை ஏந்திய வீர ர்கள் அட்டகாசம்செய்து அதட்டி நடக்கும் அதிர்ச்சியால் ஆகாயத்தில் உள்ள நட்சத்திரங்கள் பல பல வென்று உதிர்ந்து பூமிமேல் விழுவதை ஒக்கும். வீரர்களுடைய வீராவேச முழக்கத்தால் விண்ணுலகத்திலிருக் கும் கற்பக விருட்சம் வேராட, உதிர்ந்து விழுகின்ற இலைகள் போல் கொடிமரத்தில் கட்டப்பட்டிருக்கும், சீலைகள் எல்லாம் பாணங்களால் சின்னபின்னமாகச் சிதறுண்டு பறக்கும். பொருள் எல்லாம் இழந்து தரி த்திரர் ஆனபோதும் நாங்கள் பகைவர்கள் கொடுக்கும் பொருளைவாங்க மாட்டோம் என்று வைராக்கியம் படைத்திருக்கும் மானிகளைப் போல், கையில்பிடித்திருக்கும் ஆயுதங்களை இழந்துவிட்டவர்கள்தம்மோடு எதிர்த்தவர்கள் விடும் ஆயுதங்கள் அனைத்தையும் பிடித்து அவர்கள் மேலேயே எறிந்து விடுவார்கள். வீரர்கள் எல்லாரும் மாண்டு போனார் கள். வாத்தியங்கள் எல்லாம் அழிந்துபோயின. உதிரவெள்ளம் பூமி யை மூடிக்கொண்டது. பிணங்கள் கும்பல் கும்பலாய்க் குவிந்து கிட

ந்தன. காக்கைகளும் பருந்துகளும் கூட்டம் கூட்டமாய்க் கூடின. பேய்கள் மகிழ்ந்து கூத்தாடின. அறுபட்ட முண்டங்களும் ஆடியதுகள். அந்த யுத்தகளமெல்லா நிணங்களும், குடர்களும், இறைச்சிகளும், மூளைகளும், முறிந்துபோன வில்லுகளும், வாளாயுதங்களும், கேடயங்களும், வேலாயுதங்களும், கிடுகுகளும், இருசுகளும். சக்கரங்களும், கொடிஞ்சிகளும், முடித்தலைகளும் மிகுந்திருந்தன. பிணங்களையும் சோர்ந்து விழுகிறவர்களையும், அறுந்துவிழுந்திருக்கும் தோள்களையும், ஆயுதங்களையும் வளமான வார்கொண்டு இறுக்கிக்கட்டிய வாத்தியங்களையும், தழுவிக்கிடக்கும் குடல்களையும், நிணங்களையும், முடிகளில் சிந்தியநவமணிகளையும், இவ்வளவு என்று கணக்கிட்டுச்சொல்ல முடியாது. பிணங்களின் குவியலால் மண்ணுலகம் மெலிந்து போயிற்று. உடலைவிட்டு வீரசுவர்க்கத்திற்குப்போகின்றவர்களால் பிளவுபட்டுச் சூரியமண்டலம் மெலிந்துபோயிற்று. அந்த வீரர்கள் அடர்ந்து விண்ணுலகம் மெலிந்துபோயிற்று. அடர்ந்திருக்கின்ற வீரர்களை எண்ணி அளவிடமாட்டாமல் அமரர்கள் அலுத்துப்போனார்கள. இருதிறத்தாரும் நெருங்கி இந்தப்பிரகாரம் போர்செய்யும்போது, இசைபாடும் வண்டுகள் முழுகிக்கிடக்கும் பூமாலை அணிந்த வலிய அசுரவீரர்கள் வலி அழிந்து, மனம் தளர்ந்து, நடுங்கி, ஒடுங்கிச், சிதறுண்டு, பின்வாங்கிச் சண்டைசெய்வதைவிட்டுத், திசைகள்தோறும் ஓடிப்போய்விட்டார்கள். தேன் ஒழுகப் பூத்திருக்கும் மலர்களையுடைய தடாகங்களால் சூழப்பட்ட துவாரகாபுரிக்கு அரசனாகிய கண்ணனுடைய கடல்போல் அளவுபடாத பெருஞ்சேனையில் உள்ள வீரர்கள் எறிந்த ஆயுதங்கள் என்னும் கல் அடியால், தங்கள் தைரியம் என்னும் குடம் உடைய, அதனுள்ளிருந்து புறப்பட்ட நண்டுகளைப்போல் (நண்டுக் குடுவையை நடுத்தெருவில் உடைத்தாற்போல) வாணாசுரனுடைய பெருஞ்சேனாவீரர்கள், தனித்தனியே நாலாமூலையும் பரவிப் படர்ந்து ஓடித் தங்கள் நகரத்தை நோக்கிப்போய்விட்டார்கள். கண்ணனுடைய போர் வீரர்கள், அப்படி ஓடுகின்றவர்கள் பின்னால் விரைந்து போதலும், பலமாலை அணிந்துகொண்டு தலைவாசலில் வீற்றிருக்கின்ற பிறைபோலும், ஒற்றைக் கொம்பையுடைய யானைமுகமுள்ள விநாயகக் கடவுள் கண்டு, பயங்காட்டிவந்த அந்தச்சேனா வீரர்களை வருத்தி அழுத்தி, மீண்டு, ஓடிப்போகச் செய்துவிட்டார். இப்பால் கண்ணனும் இனி என்னசெய்யலாம் என்று விரைந்துபோய், உண்ணுதற்குரிய பால் அன்னம், பழவகைகள், மிக்க சுவையுள்ள பட்சணங்கள் முதலியவைகளை திருவமுது செய்யப் படைத்துத் தாழ்ந்து பணிந்ததனால், அவ்விநாயமூர்த்தி அந்தத்தொழிலில் அகமகிழ்ந்து அமர்ந்தருளினார். இதைப்பார்த்து இரண்டாம் வாசலில் வாசஞ்செய்யும் சுப்பிரமணிய சுவாமி, எதுகுல

குமாரா! வருக என்று வில்லை வளைத்து எதிர்த்து வருதலும், துளசிமாலைசூடுவோனாகிய அந்தக்கண்ணன் சோடச உபசாரம்செய்து மகிழ்வித்ததனால், அந்த ஆறுமுகக்கடவுளும் அகமகிழ்ந்திருந்தார். விநாயகக்கடவுள், சுப்பிரமணிய சுவாமி இவர்கள் இருவரும், விடைகொடுத்தருளப்பெற்று மூன்றும் வாசலில் அடைந்து, அவ்விடத்தில் வீற்றிருக்கும் பார்வதி தேவியைக்கண்டு சேவித்துத் திருவருள் பெற்று, மீண்டு வருவதை நான்காம் வாசலில் சிறந்து வீற்றிருக்கும் சிவபெருமான் கண்டு, பூர்வம் மைநாகபர்வதம்போலும் அத்திகிரியில் அருந்தவம் செய்து கொண்டிருந்த இந்தக் கண்ணனுக்கு எம்பெருமான் யுத்தகளத்தில் யாம்வந்து எதிர்த்தாலும் நீயே வெற்றி அடைவாய் என்று கொடுத்த வரம் பொய்த்துப்போகாமல, அதைக் காக்கும்பொருட்டுத் தன்பிநாகம் என்னும் பெரியவில்லை எடுத்துக்கொண்டு எதிர்த்து நிற்க, அந்தக் கண்ணன், அநாதியாய், அநந்தமாய், ஆனந்தமாய், அருட்சோதியாய், மனம்வாக்குக் காயங்களுக்கு எட்டாதிருக்கும் மாமுக்கருணைப் பரம்பொருளைத், தன் கண்கள் களிக்கக் கண்டு சென்று, தாழ்ந்து, எழுந்து, நாவுதடிப்பேறப்புகழ்ந்து பாடி, நளின மலர்போலும் கைகூப்பி, என் பிதாவே! சோத்து (உயர்ந்தோர்க்குத் தாழ்ந்தோர் செய்யும் அஞ்சலி) என்று சொல்லித் தேவர்களுக்கே இருவருள் சுரந்து காத்தருளும் கடமை யுடையானே! இரக்கம் இல்லாத அசுரர்களுக்குத் தலைவனாகிய வாணாசுரனை வதைக்கும் திறம் அடியேனுக்குக் கொடுத்தருள வேண்டும் என்று மென்மேலும் பிரார்த்திக்க, அதைக்கண்டு மேருவில்லியாகியசிவபெருமான் புன்னகை செய்து துவாரகைவாசனாகிய கண்ணா! நீ எம்மை வென்று தானே வாணனை வெற்றி கொள்ள வேண்டும். ஆதலால் முந்தி எம்முடன் போர்செய்ய வாராய் என்றுசொல்ல, அந்தக் கண்ணன் மனங் கலங்கி, எம்பெருமானே! தேவரீர் இப்படித் திருவாய் மலர்ந்தருளியது யாது காரணமோ? எல்லா வுயிர்களுக்கும், எளியேனுக்கும், இறைவன் நீ. ஆண்டவனுடன் எதிர்ப்பது அடியேனுக்கு அழகாகுமோ? சுவாமீ! உன் திருவடிக்கே மெய்த் தொண்டுபூண்டு, உனக்கு உரிமையான பணிசெய்கின்ற அடிமை யாம் என்னிடத்தில் உன் திருவருள் இப்படியாகலாமோ? என்பிதாவே! உன் பாத பூசையால் பகைவர்களை முதுகுகாட்டி ஓடச்செய்யும் திறம் பெற்றேனாகிய நான், உன்னுடன் எதிர்த்துப்போர்செய்ய வல்லவன் ஆவேனோ? உப நிஷதங்கள் எல்லாம் எடுத்துரைக்கும் ஒப்பில்லாத முதற்கடவுளே! பாச பந்தத்திற்கு ஏதுவாகிய உலகமெல்லாம் படைத்தாளுகின்ற உன் எதிரில் எதிர்த்து நின்று பிழைத்தவர்களும் உண்டோ? ஒருவரும் இல்லை எனில், உன்னுடன் எதிர்த்தால் அடியேன் பிழைப்பது எப்படி? எண்ணிறந்த

அண்டங்கள் எல்லாவற்றையும் ஒரு நொடிக்குள் அக்கினிக்கு இரையாக்கி விடுங்கண்ணுதலே! கடையேனாகிய நான் உனக்குஒரு பொருட்டோ? உனக்குவேண்டுவன எல்லாம் யாங்கள் செய்ய நீ புன்னகை செய்த மாத்திரத்தில் முப்புரங்களும் கூட்டோடே அழிந்துபோய்விட்டனவே. ஒரு சிறு துரும்பை நாட்டித் தேவர்கள் செருக்கைப் போக்கிவிட்டாய். கரும்பு வில்லியாகிய காமனை, நெற்றிக்கண்ணால் நீறாக்கிவிட்டாய். வேதமாகியவண்டுகள் மொய்த்துத் தேம்பாடும் உனது பாதாரவிந்தத்தின் பெரு விரலால், இலங்காபுரியை ஆளும் வன்னெஞ்சனாகிய இராவணனை இடர்ப்படுத்திவிட்டாய். பெருமையில்லாத யமனைச், சிர்பாதத்தால் உதைத்துவதைத்தாய். தாமரைப்பூவில் வசிக்கும் பிரமதேவனுடைய தலைகளில் ஒன்றை நகத்தாற்கிள்ளி எறிந்தாய். மச்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், வாமனம் ஆன என் பிறவிகளும், உன்னால் தண்டிக்கப்பட்டன. நீர் படைத்து அனுப்பிய வீரபத்திரன் தக்கன் யாகத்தில் வந்து பகைத்து வருத்தப்படுத்திய நாள், என்னுடன் தேவர்களும் சேர்ந்து பட்ட பாடு சொல்ல எவரால் முடியும்? இவைகள் எல்லாம் உன் திருவிளையாட்டேயாம். எங்கும்பரவிப் பெருகி வெகுண்டுவந்த கங்கையின் வலியை அடக்கிய, கற்றைச் செஞ்சடையானே! என்னை வெல்ல நினைப்பாயாகில் சற்று நீ முகம் எடுத்துப்பார்த்தால் அது போதாதோ? செந்தாமரை மலர்போலும் உன்கைக்கு வேறு ஆயுதமும் வேண்டுமோ? பாணமாகவும், ரிஷபவாகனமாகவும் பாரியாள் ஆகவும், உன்னை அடுத்திருக்கின்ற என்னை, எதிர்ப்பது உன் பெருங்கருணைக்குத் தகுமோ? என்னையும் என் குடும்பத்தையும் அடிமைகொண்டவனே! இப்பொழுது என்மேற் கடாக்ஷம் வைத்தருள். ஆலகாலவிஷம் உண்டருளிய நீலகண்டனே! உன் திருவடிபோற்றி என்று, பலமுறையும் இரந்துவேண்டி தொழுது பணிகின்ற கோவர்த்தனகிரியைக் குடையாகப்பிடித்த கோபாலனுக்கு எம்பெருமான் சொல்லுகின்றார். கண்ணா! நீபயப்படாதே. கவலையைவிட்டுவிடு. பூர்வம் அத்திகிரியில் யாம் உனக்குக் கொடுத்த வரத்தை மறந்துவிட்டாயோ? நீ போர்செய்ய வருவதை வாணசுரனுக்குமுன்னமே யாம் தெரிவித்திருக்கின்றோம், அந்தவாணனை இனி நீ வென்றுவெற்றிமாலைஅணிவாய். மின்னல் போல் விளங்கும் கவுத்துவமணி மார்பனே! அருச்சுனனுடன் யாம் பூர்வம் செய்தபோர், எமக்கு இனிய குமாரனை முருகனுடன் விளையாடும் விளையாட்டுப்போல் பரம சந்தோஷமாயிருந்தது. ஆதலின் அந்த விளையாட்டுப்போல் ஒருக்ஷணம் உன்னுடன்சண்டைசெய்வோம். நமது சண்டையைப்பார்த்து, மனிதர்களும் தேவர்களும் மகிழ்ச்சி அடையக்கடவர். விநோதமாகச்சண்டை செய்வதே அல்லாமல், பகையாளி

கள்போல் கொலைசெய்யமாட்டோம். நீ அஞ்சாதே யென்றுதேறுதல் சொல்லித், தேற்றித், தன்கையில் பிடித்திருந்த பிநாகம் என்னும் பெரியவில்லை வளைத்தருளினர். பசுந் துளசிமாலை அணியும் அந்தக்கண்ணனும் எம்பெருமானே! அடியேன் கடைத்தேறினேன். திருவுளத்தின்படி செய்தருள்க என்று அடிக்கடி சொல்லி, அவருடைய சீர்பாதகமலங்களைத்தொழுது போர்செய்ய உடன்பட்டுப் பகைவர்களைப் பயமுறுத்தி அழிக்கும் சாரங்கம் என்னும் வில்லிற்கு நாண் ஏற்றினன். தாருகாவன ரிஷிகள் ஏவிய யானையைக் கொன்ற, சிவ பெருமானுடன் கஞ்சன் ஏவிய யானையைக்கொன்ற கண்ணன் பவளமலையுடன் நீலகிரி எதிர்த்தாற்போல் எதிர்த்து, விரைந்து, வில்லின் இருதலையும் வளையவளைத்து, நாண் ஏறிட்டதனல் உண்டாகிய குணத்தொனியானது மூன்றுலகத்தாரும் செவிபெற்றிப்போம்படி எங்கும் நிறைவுற்றது. அப்படிப்பட்ட ஓசையால் அவர்கள் கோபாக்கினியைத் தணிப்பதற்கு உலகில் சலம்போதாமையால், ஆகாயகங்கையைக் கொண்டு அவிக்க வானத்தில் வழிதிறந்தாற்போல் அண்டகடாகம் அதிர்ந்து பிளவுபட்டது. பூமியும் அந்த ஆகாயகங்கையை உண்ணும் ஆசையால் வாடி வாய்திறந்தாற்போல் வெடித்துப் போயிற்று. பெருங்கோபத்துடன் போர்செய்ய அடுத்தபோது சிவபெருமானை எல்லாருக்கும் இறைவன் என்று எண்ணி, அந்தக் கண்ணன் அவருடைய பாதத்தில் விழுந்து, பணியும்பொருட்டு, மலர் கொண்டு பூசை செய்வது போல் ஒருபாணம் தொடுத்துவிட்டான். சத்தியாகிய திருமாலும் சத்திமானகிய சிவபெருமானும் அக்கினிச்சுவாலை வீசும் அம்புகளைப் புங்காநு புங்கமாய்த் தொடுக்கப் பெரும்போர் மூண்டது. அதனல் பூமியில் உள்ளவர்கள் இது என்ன விபரீதமோ என்று சந்தேகப் பட்டார்கள். சித்தர், சாரணர், இமையவர், இயக்கர், கந்தருவர் முதலானவர்கள் உயர்ந்த ஆகாயத்தில் ஓடிப்போயிருந்தார்கள். முதுகில்கட்டிய அம்பறாத்தூணியில் இடையறாமல், கைபோட்டு எடுத்து, வில்லின் இருதலையும் வளைத்து போகும்படி தொடுக்கும் பாணங்களை, யுகாந்தகால மழைபோல் பொழிந்து, அஷ்ட திசைகளையும் நிறைத்து விடுவார்கள். ஒரு க்ஷணத்திலே அந்தப்பாணங்கள் அனைத்தையும் அழித்து, மறுபடியும் கொடியபாணங்களைத்தொடுத்துத் தொலைந்து போகச் செய்வார்கள். எண்ணிறந்ததேவதாஸ்திரங்களைத் தொடுப்பார்கள். சூரத்தையும், குளிரையும், தரும்படியான ஆயுதங்களை ஒன்றுக்கொன்று விரோதமாக விடுப்பார்கள். பகை கொண்டு வரும் அந்த ஆயுதங்கள், ஒன்றினல் ஒன்று அழிந்துபோகச்செய்வார்கள். இந்தப்பிரகாரம் இருவரும் அற்புதப் பெரும்போர் செய்தார்கள். முனிவர்கள் எல்லாரும் சிவபெருமான் கருத்

தை உணராமல், பிரம, விஷ்ணு, ருத்திரர் என்னும் மும்மூர்த்திக ளும் தொழுதற்குரிய முதற்கடவுளே போர்செய்யத் தொடங்கியபடி யால், காரியம் எப்படியாமோ? என்று பயந்து போனார்கள். சகல தேவர்கள் பயந்தார்கள். பஞ்சபூதங்கள் பயந்துவிட்டன. தேவேந்திர னும் பயந்துபோனான். இந்தப்பிரகாரம் நெடுநேரம் போர் செய்யும் போது, கண்ணன் சிவபெருமானை நோக்கிச் சுவாமி! அடியேனால் இனிச் சகிக்கமுடியாது என்று தாழ்ந்து பணிதலும், எம்பெருமான் புன்னகைசெய்து, அடியார்க்கு எளியன் என்பதைத் தானும்தாழ்ந்து பிரத்தியட்சமாகக் காட்டினார்.

நான்கு வேதங்களும் காண்பதற்கு அருமையான சீர்பாத கம லங்கள் மிகச்சிவந்து வருந்தும்படி நடந்துபோய்ச், சற்றும் வெட்கப்ப டாமல் யான் பாணபத்திரனுடைய அடிமை என்று விறகு சுமந்தும், வந்தி என்பவளுடைய ஆள் என்று மண் சுமந்தும், பாண்டியன் அடித்த பிரம்படி தாங்கியும், சுந்தரமூர்த்தியார் பொருட்டுப் பரவைநாச்சியாரி டம் தூதுசென்றும், தன் அடியவருடைய கோரிக்கைகளை நிறைவேற் றுவதையே விரதமாகக்கொண்டிருக்கும் எம்பெருமான், இந்தக்கண்ண னுக்கு வெற்றிஉண்டாக்கியது ஓர் ஆச்சரியமோ? ஆச்சரியம் அல்ல. தேவர்கள் எல்லாரும் சிவபெருமானுடைய பெருங்கருணையை நோக்கி ஆரவாரம் செய்தார்கள். கருடக்கொடியோனாகிய கண்ணனும், ஆ! ஆ!! எம்பெருமான் என்னிடத்தில் வைத்த திருவருள் இப்படிப்பட்டதோ என்று பார்வதி பாகனாகிய அந்தப் பரமசிவனுடைய பாதாரவிந்தங்க ளைத்தொழுது பரமானந்தம் அடைந்தான்.

சந்திரசேகரனாகிய சிவபெருமான், போர்த்தொழிலை விடக்கண்டு கோபம் கொண்டு, வாணாசுரன் அண்டகடாகம் படீர் என்று வெடித் தாற்போல் ஆரவாரம்செய்து கண்ணனை எதிர்த்தான். இருவரும் தங்கள் வில்லுகளை வளைத்துப் போர்செய்தார்கள். கொலைசெய்வதில் கொடுமையான ஆயுதங்களைக்கையிற்பிடித்திருக்கும் அவ்விருவரும், தங் கள் மேன்பாட்டை எடுத்துச்சொல்லியும், யுகமுடிவில்தோன்றும் வட வாமுகாக்கினிபோல் கண்களில் நெருப்புப் பொறிபறக்கச் சீறியும், உலகத்தைப் புழுதியாக்கியும், வலசாரி இடசாரியாக மாறிமாறிச் சுழன் றும் போர்செய்தார்கள். இத்தன்மையான பெரும்போரில் எம்பெரு மான் திருவருள் பெற்றுவிளங்கும் கண்ணன், அதிக பலம்கொண்டு, வாணாசுரனுடைய வில்லையும், பாணத்தையும், தேரையும், நவரத்தினமு டிகளையும் அறுத்தும், முறித்தும், அவனைத் தனியனாக நிற்கும்படி செய்தான். தனியனாக நிற்கச்செய்து அவனுடைய பொன்மலைபோ

லும் ஆயிரம் தோள்களையும், கரும்புத்துண்டுபோல் துண்டிக்கும்போது, காமதகனனாகிய சிவபெருமான், அவர்கள் முன்பு எழுந்தருளிக் கஜேந்திரன் என்னும் யானையைக் காத்தருளிய கண்ணன்மேல் கருணைவைத்துக் கண்ணா! இதுகேள். இந்த அசுரன் உன்னைப் போல் எம்மிடத்தில் மெய்யன்புள்ளவன். இவன் எண்ணம் ஈடேற நம்மைப்பூசித்த கைகள் இரண்டையும் செந்தாமரை மலர் முகத்தையும் சேதிக்கவேண்டாம் என்று திருவாய்மலர்ந்தருளினர். இதைக் கேட்டவுடன், யாதவகுல சிகாமணியாகிய கண்ணன், தாழ்ந்து, தொழுது, எழுந்து, சுவாமி! சகலமும் உருத்திரனே அன்றி மற்றொன்றில்லை என்றுவேதங்கள் எல்லாம் முறையிடுகிறபடியால், உம்மைப் பூசித்தவன் எங்கள் எல்லாரையும் பூசித்தவன் ஆவன். ஆதலின் இவன் இரண்டுகைகளையும் வெட்டாமல் விட்டு விடுகின்றேன். ஐயனே! அடியேன் செய்த அபசாரம் அனைத்தையும் பொறுத்தருள்க. என்று தாழ்ந்து, சிவபெருமான் கட்டளைப்படி அந்த வாணாசுரனைச் சிநேகனாகக் கொண்டு, அவன் மகள் உஷாவைத்தன் பேரனாகிய அனிருத்தனுக்குத் திருமணம் செய்வித்துத், தன்னுடன் அழைத்துக்கொண்டு, மீண்டு துவாரகாபுரிக்குப் போய்விட்டான். முப்பது தரம் தோல்வி அடைந்து இகழப்பட்டான் என்று சொல்லப்பட்டவனைக்கொண்டே, இந்தவாணாசுரனுடைய அகங்காரத்தை அடக்குவித்தார். ஒருவர்செய்த காரியத்தைச் செய்து முடிக்கவும், செய்யாமல் விடவும், மற்றொன்றைச்செய்யத்தொடங்கவும் செய்யவல்லவனாகிய சிவபெருமான் மகிமையை எடுத்துச்சொல்ல வல்லவர் யார்? ஒருவருமில்லை.

உலகத்திற்குத் துணைக்காரணமான கார்மேக வண்ணனாகிய கண்ணன் துவாரகாபுரிக்குப் போய்விட்டபின்பு, பார்வதிபாகனாகிய சிவபெருமான் வாணாசுரனைப்பார்த்து, வாணாசுரனே! உன் தோளில் உள்ள தினவு எல்லாம் தீர்ந்துபோய்விட்டதோ? என்று புன்னகை செய்து கேட்டலும், பேரன்புடையவனாகிய அவன் தலை சாய்ந்து, எம்பெருமானே! துன்பத்திற்கே ஏதுவாகிய அரசாட்சி முதலிய ஒன்றும் வேண்டியதில்லை. அடியேனுக்கு நித்தியானந்த முத்தி ஒன்றே கொடுத்தருளவேண்டும் என்று பிரார்த்தித்தான். அதுகேட்டுச் சிவபெருமான் அவனைநோக்கி, வாணாசுரனே! உனக்கு நித்தியானந்தமுத்திவேண்டுமானால் காஞ்சிமாநகரத்திற்குச் சென்று, நீ முன்பு எம்மை ஸ்தாபித்துத் துதிசெய்து வரம்பெற்றுக்கொண்ட வாணீசம் என்னும் தலத்திலே மீண்டு பூசித்துப் பெற்றுக்கொள் என்று மறைந்தருளினர். இப்பால் பத்தியிற் சிறந்த அந்த வாணாசுரன், காஞ்சிமா நகரத்திற்கு

ப்போய்ப், பூர்வம் தான் தொழுது துதிசெய்த வாணீசனை வாழ்த்தி, அந்த வாணீசனுடைய திருவருளால் சிவகணங்களுக்குத் தலைவனுகும் பதவியுடன் பரமானந்த முத்திபெற்முன். அன்பர்களே! வரி அமைந்த சிறைகளையுடைய வண்டுகள் தடவக்குவிந்திருக்கும் அரும்புகளின் கட்டு அவிழ்ந்து பரவும் வாசனையுடன் விரிந்த நெட்டிதழ்களை யுடைய தாமரைப்பூந்தடஞ் சூழ்ந்து கண்டோர் வியக்கத்தகுந்த வாணீசம் என்னுந்தலத்தில் சிறந்து வீற்றிருக்கும் சிவபெருமானை ஆகம விதிப்படி அருச்சனை செய்து, அன்புடன் தொழுது துதிக்கும் அடியார்கள், பிறவித்துன்பமெல்லாம் நலிந்து ஒழிந்துபோகப் பேரானந்த முத்தி பெறுவார்கள்.

வாணீசன் மலரடிபோற்றி.

---

முப்பத்தைந்தாவது

## திருவோணகாந்தன் றளிப்படலம்.

அகண்டபரிபூரணனந்தச் செல்வர்களே! பூவும்புனலுங்கொண்டு பூசிக்க வல்லவர்களுடைய பிறவித்துன்பங்களைப்போக்கிப், பேரானந்த முத்திகொடுத்தருளும் வாணீசம் என்னும் தலமகிமைசொன்னேம். இனி அழகும் வளமும் உள்ள இந்தத் தலத்தின் கிழக்கில் சிறந்து விளங்கும் ஓணகாந்தன்றளி என்னும் தலமகிமை சொல்வோம். கேளுங்கள், என்று சூத மாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

பகைவர்கள் முடிசாய்ந்து வணங்கப்பெற்ற வாணசுரனுடைய சேனைத் தலைவர்களும், தருமநெறியில் தவருதவர்களும் ஆகிய ஓணன், காந்தன் என்று இரண்டு அசுரர்கள் இருந்தார்கள். மாசில்லா மனத்திற்கே அல்லாமல் மலினமான மனதிற்கு எட்டாத சிவபெருமானுடைய சீர்பாத கமலங்களில் அன்புவைத்து அருள்நெறியில் ஒழுகும் அந்த அசுரர்கள் இருவரும் துன்பத்திற்கே ஏதுவாகிய பிறவியை ஒழிக்கும்பொருட்டு, நகரங்கள் அனைத்திலும் சிறந்துவிளங்கும் காஞ்சிமா நகரத்தை அடைந்து, ஒரு தீர்த்தம் உண்டாக்கி, அதன் பக்கத்திலே தங்கள் பெயரால் சிவலிங்கங்களைப் பிரதிஷ்டைபண்ணி, அன்புமிகுந்து பூசைசெய்து வந்தார்கள். இவ்வண்ணம் பூசைசெய்துவந்த இருவருடைய அன்பை அறிந்த சிவபெருமான் பார்வதிதேவியாருடன் ரிஷபவாகனத்தின்மேல்

காட்சிகொடுத் தருளக்கண்டு, அவ்விருவரும் ஆனந்தக்கடலில் அழுந்தி னார்கள். கங்குகரையில்லாமல் பெருகிவரும் அன்புடன் கைகூப்பித்தொ ழுகின்ற அந்த அசுரர்கள் இருவருக்கும் கைலாசபதியாகிய சிவபெருமான் அநுக்கிரகம்செய்து, அன்பர்காள்! உங்களுக்கு வேண்டும் வரம்யாது? சொல்லுங்கள் என்று திருவாய்மலர்ந்தருள, அந்த அசுரர்கள் கைகளைக் கூப்பிக் கண்ணீர்பெருகச் செந்தாமரைமலர்போலும் திருவடிகளைத்தொ ழுது, ஐயனே! சிவஞானச்செல்வம் அளித்து அடியேங்களை ஆதரித்து அருளவேண்டும். அடியேங்கள் உனது அடைக்கலம். இந்தத் தீர்த்தமீ ராதி எங்கள் பெயரால் விளங்கும் ஓணகாந்தன்றளி என்னும் இலிங்கங்க ளைக்கண்டு சேவிக்கின்றவர்களுடைய எண்ணங்களை நிறைவேற்றி, இவ்வி டத்திலே நீர் எந்நாளும் வீற்றிருந்தருள்க என்று போற்றிய அவ்விருவருக் கும் வேதமணம் வீசும் ஒரு மாவடியில் வீற்றிருக்கும் எம்பெருமான் அவ் வரங்களைக்கொடுத்து அங்கே அமர்ந்தருளினார். அந்நாள்முதல் அந்த ஓணகாந்தன்றளி என்னும் தலம் அற்புதத் தலமாம்.

ஓணகாந்தன்றளியீசன் உபயத்தாள்போற்றி.

---

முப்பத்தாறுவது

## சலந்தரீசப்படலம்.

சத்தியஞானானந்தத் தபசிகாள்! திரு ஓண நட்சத்திரத்திற் குரிய திருமாலால் அறியப்படாத சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் திரு ஓணகாந்தன்றளி என்னும் தல மகிமை சொன்னோம். இனி மகி மைபொருந்திய அந்த ஓணகாந்தன்றளிக்கு வடக்கில் சலந்தராசுரனால் பூசிக்கப்பட்ட சலந்தரீசம் என்னும் தலமகிமைசொல்வோம், கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினார்.

சலத்திற்பிறந்த சலந்தரன் என்னும் அசுரன் காஞ்சிமாநகரத்தை அடைந்து, சலந்தரீசம்என்னும் சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணித் தினந் தோறும் தொழுது துதித்து, நெடுங்காலம்தவம்செய்துகொண்டிருந்தான். அப்பொழுது காட்சிகொடுத்தருளிய சிவபெருமானைத் தொழுது எழுந்து நின்று, ஆண்மையும், வீரமும், அரசாட்சியும், பகைவரை அழிக்குந் திற மும், அழியா திருக்கக்கொடுத்தருளவேண்டும். நீண்ட சடைகளை உடையா னே! மேலும் உன்னாலேயே அல்லாமல் பிறரால் அடியேன் மாளாவரமு ம் மாளுங்காலத்தில், நான் இந்தவிடத்தில் முத்திபெறுதலும் தரல் வேண் டும் என்று அவ்வரமெல்லாம் பெற்று மீண்டு மூன்றுலகங்களையும் தன் கா

வின்கீழ் அடங்கவைத்து, ஏகச்சக்கராதிபதியாய் ஆளுங்காலத்தில், இந்திரன்முதலான திக்குப்பாலகர்களையும், தாமரைப்பூவில் வாழ்ந்திருக்கும் சதுமுகனையும் வென்று, பின்பு பசுந்துளப மாலையணியும் திருமாலையும், அந்தத்திருமாலுக்கு வாகனமாகிய கருடனையும் நாகபாசத்தினால் கட்டிச் சிறையிட்டு வைத்தான். சிலநாள்செல்லத் தேவர்கள் எல்லாரும் கூட்டமாய்வந்து வணங்கி, அந்த அசுரனை வேண்டித் திருமாலையும் கருடனையும் சிறையிலிருந்து மீட்டுக்கொண்டு போனார்கள். பிறைபோலும் கோரதந்தங்களையுடைய அந்த அசுரனும் பெருமைபடைத்து வாழுங்காலத்தில் முடிவுகாலம் நெருங்கியதனால் ரிஷபவாகனனாகிய சிவனை "நான் போர்செய்து அழிப்பேன்" என்று சேனையுடன் சென்று, கைலாசத்தில் சிறைச்சாலையில் அடைக்கப்பட்டிருந்தான். அந்தச் சலந்தராசுரன் பத்தினியாகிய பிருந்தைமேல் மோகங்கொண்டிருந்த கண்ணன், இதுவே சமயம் என்று அறிந்து, தவவேஷங்கொண்டு, அவள் அரண்மனைக்கு எதிரில் உள்ள ஒரு பூஞ்சோலையில் தங்கி இருக்கக்கண்டு, ஒடியும் இடையையும், பருத்திருக் கும்பயோதரங்களையும் தொழில்முற்றிய ஆபரணம் உடையவளும் ஆகிய அந்தப்பிருந்தையானவள், அந்த வேடதாரிமுன்னின்று இதுகேட்கின்றாள்:—தபோதனராகிய சுவாமிகளே! சிவபெருமானை அழித்துவிட்டு வருவேன் என்றுபோன என் கணவனுக்கு உண்டானது வெற்றியோ? தோல்வியோ? இவ்விரண்டில் யான் எதுவும் அறியேன். இது எப்படியாகும்? சொல்லுங்கள் என்னத் திருமால் அவளை நோக்கிக், கூட்டமாய்ப்பிரகாசிக்கும் வளையலை உடையாளே! நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம் என்னும் அஞ்சு பூதங்களும், அவைகளில் உள்ள சராசரப்பொருள்களும், பஞ்சுபட்டபாடுபட, நெற்றிக்கண்ணைத் திறந்தருளும் நீலகண்டப் பெருமானுக்கு முன்சென்று பிழைத்தவர்கள் யார்? ஒருவரும் இல்லை என்று நீ அறியவில்லைபோலும். அறிந்திருந்தால் எம்மை நீ இப்படிக் கேட்கமாட்டாய். பாம்பின் படம்போல் படர்ந்து அகன்றிருக்கும் பக்கம் உடையாளே! அந்தப்பேராளனாகிய சிவபெருமானுடன் போர் செய்யப்போனமையால், உன் கணவன் மாண்டுபோவான். இது சத்தியம் என்றுசொல்ல, அந்தவேளையிலே ஒரு அசுரன் குடுமிகலைந்து அலையவும், தோளில் இட்ட உத்தரியம் தரையிற்புரளவும், நெற்றியில் வேர்வைநீர் ஒழுகவும், பெருமூச்சு வீசவும், உடம்பெல்லாம் நடுங்கவும், பெரு ஓட்டமாய் ஓடிவந்து, வாய்வறண்டு, எதிரில்நின்று இது சொல்லுகின்றான். எம்பெருமாட்டியே! உன் கணவன் கைலாசத்திற்குச்சென்று கைலாசபதியைச் சண்டைக்கு அழைக்கும்போது, அந்தக் கைலாசபதி, தன் கண்ணால் பார்வையிட்டு, நமது கடல்போலும் சேனைகளைச் சுட்டெ

ரிந்து, நீருக்கிவிட்டார். அதன்பின்பு ஆயிரம்சூரியர்களைப்போல் விளங்கும் ஒரு சக்கராயுதத்தை உண்டாக்கினர். அந்தச் சக்கராயுதத்தினல் நமது அரசனுகிய சலந்தராசுரன் மாய்ந்துபோனன். நான் இவைகளை எல்லாம் நெடுந்தூரத்தில் இருந்து பார்த்துப் பயந்து மீண்டு இங்கு ஓடிவந்துவிட்டேன். என்று சொன்ன சொல்லைக்கேட்டுக், கொழுகொம்பை இழந்து அலையும் பூங்கொடிபோல் அலைந்து, சேவலைக் காணுமற்கலங்கும் பெண்மயில்போல் திகைப்படைந்திருக்கும் அவளை, மன்மதபாணங்கள் உடம்பெல்லாம் துளைக்க, அதனுல் நலிந்து, மெலிந்து, வாடி, வதங்கி, வருந்திக், கரிந்து கிடக்கும் கண்ணன் விரைந்துபோய்த் தாவிப் பிடித்தான். பிடிக்கும்போது அவள் எண்ணமிட்டுச்சொல்லுகின்றுள். பெருமானே! நான் கணவனைப் பறிகொடுத்துப் பரிதபித்திருக்கின்றேன். மூன்றுநாள் போனபின்பு உனக்கு நான் பாரியாவேன், என்று தந்திர மாய்ச்சொலித் தப்பித்துக்கொண்டு போய்விட்டாள். பதிவிரதையாகிய அவள் அப்படிச்சொல்லித் தப்பித்துக்கொண்டு அரண்மனையிற்போய்ச் சேர்ந்து, தீயைவளர்த்து அதில் விழுந்து, சிவலோகப் பிராப்தியானுள்.

மூன்றுநாள் ஆனபின் நமக்கு மனைவியாவாளென்று மகா சந்தோஷத்துடன் அங்கே தங்கியிருந்த மாயவன், அவள் மாய்ந்துபோனதை அறிந்து, அவள் மாண்டு மடிந்த சாம்பலிலேபுரண்டு, பேய்பிடிக்கப் பட்டவர்போல் பிரமைகொண்டு, வருந்தித், தேம்பி அழுது, அவளுடைய திருமேனியைத் தன் மனதில் அழுந்தவைத்தான். இதையன்றி அவன் வேறு என்னசெய்வான்? இப்படி அவளை நினைத்துக்கொண்டே அவ்விடத்தில் நெடுங்காலம் போக்கிவிட்டான். இப்பால், தேவர்கள் எல்லாரும் கூடித் திருமாலை எங்கும்தேடிக் காணுமல், சிகரங்களுடன் நீண்டிருக்கும் கைலாசகிரியை அடைந்து, சிவபெருமான் திருவடிகளைப்பணிந்து விண்ணப்பம்செய்ய, மூங்கில்போல் திரண்டு, பசந்து, ஆபரணங்களுடன் விளங்கும் தோள்களையுடைய பார்வதி பாகனுகிய எம்பெருமான் அந்தமாயவனுடைய நிலைமையை உணர்ந்துசொல்லுகின்றுர்.

சோதிமயமாகச் சொலித்துவிளங்கும் சுவர்க்கலோக வாசிகளாகிய தேவர்களே! கேளுங்கள். புகழ்பெற்று விளங்கும் இலட்சுமிபதியாகிய மாயவன் இப்பொழுது, சலந்தராசுரனுடைய பத்தினியும், கற்பில் சிறந்தவளும், கட்டழகு படைத்தவளும் ஆகிய பிருந்தை யென்பவள்மேல் மோகங்கொண்டு, அவள் திருமேனியை இழந்த மயானத்திலே உள்ள சாம்பலில் புரண்டுகொண் டிருக்கின்றுன். என்றுசொல்லிப் பின்பு, பதினுலு உலகங்களையும் பரிந்து பெற்றெடுத்த பார்வதிதேவி தன் திருமே

ணியில் அணிந்துகொண்டிருக்கும் களபச்சந்தனத்தின் அழுக்கை உருட்டித், திரட்டி எடுத்துத் தேவர்களே! நீங்கள் இதை எடுத்துக்கொண்டு போய், அந்தச் சாம்பலில் விதைத்தவுடன் அந்த மாயவனுடைய மயக்கத்தை நீக்கும்படியான மரங்கள் மூன்று உண்டாகும் என்றுசொல்லக்கேட்டுத், தேவர்கள் அதை வாங்கிக்கொண்டு வணங்கி விடைபெற்று, மீண்டு பிருந்தை மாண்டு மடிந்த சாம்பலிலே விதைத்தவுடன் துளசி, நெல்லி, அகத்தி என்னும் மூன்றுமரங்களும் தன் எதிரில் தோன்றக் கண்டு, அந்த மாயவன் மனமகிழ்ந்து, மெல்லிய கொத்துகளையுடைய துளசியைப் பிருந்தையாக எண்ணித், துணிந்து தழுவிப் பெரும்பிணி தீர்ந்து, தன் இருப்பிடம்போய்ச் சேர்ந்தான். துவாதசியிலே இந்தத் துளசி, நெல்லி, அகத்தி என்னும் மூன்று மரங்களையும் துதிசெய்யப் பெற்றவர்களுக்கு மாயவன் கருணைவைத்துக் காத்தருளுவன். மலைபோலும் தோள்களையுடைய சலந்தராசுரன் கைலாசகிரியில் சிவபெருமானால் மாண்டு காஞ்சிமாநகரத்தில் சோதிமயமாகத்தோன்றித், தான் பூர்வம் பூசித்த இலிங்கத்தினிடமாகக் கலந்துகொண்டான். அந்தச் சலந்தரீசனுடைய பெருமை சொல்ல யாரால் முடியும்?

சலந்தரீசன் சரணமே சரணம்.

---

முப்பத்தேழாவது

## திருமாற்பேற்றுப்படலம்.

உலகெலாம்புகழும் உத்தமர்களே! தன்னை வணங்குகிறவர்களுக்கு இகபரசுகத்தை மிகவும்கொடுத்தருளும் எம்பெருமானாகிய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் சலந்தரீசம் என்னும் தலமகிமை சொன்னோம். இனி அரம்பையர்போல் அழகுவாய்ந்திருக்கும் மாதர் ஆடலும் பாடலும் இடையறாது முழங்கும் மணிமாட வீதிகளில் எல்லாம் தேவகணங்கள் சூழ்ந்திருக்கப்பெற்ற திருமாற்பேறு என்னும் தலமகிமையைச் சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

பூலோகத்தில் அனைவரையும் காக்கும் தொழிலை மேற்கொண்டிருக்கும் குபன் என்னும் அரசனுக்கு உடந்தையாய்ச், சிவபத்தியிற் சிறந்த ததீசிஎன்னும் முனிவனுடன் சண்டைசெய்தபோது, விட்ட சக்கராயுதமானது அந்தத் ததீசி முனிவனுடைய வச்சிரதேகத்தில் பட்டு வாய்மடிந்து போய்விட்டமையால், கவலைப்பட்டு அந்த முனிவனுடன் போர்செ

ய்வதை விட்டு நீங்கிப்போன மாயவன், இனிச்சக்கராயுதம் பெறுவது எப்படி என்று, கொடிய அசுரர்களால் நலிந்து, தன் இடத்தில் வீற்றிரு க்கின்ற தேவர்களுடன் கலந்து ஆலோசனை செய்து, ஆயுதங்களுக்கெல் லாம் ஆசானாகச்சிவபெருமான் சலந்தராசுரனைக்கொல்லப்படைத்தமகா உக்கிரமான சக்கராயுதம் ஒன்று இருக்கின்றது என்று அறிந்து, பரமசந் தோஷம் அடைந்து, தேவர்களுக்குத் தெரிவித்துத் தேவர்களே! சிவபெ ருமானுடைய சீர்பாத கமலங்களைப் பூசித்தால், உடனே அந்தச் சக்கரா யுதத்தை அவர் மகிழ்ந்து கொடுத்தருள்வார் என்று சொல்லி, அந்தத் தேவர்களுடன் வந்து காஞ்சிமாநகரத்திற்கு வடமேற்கில் செம்பவளம் போற் சிவந்த வாயினையுடைய பார்வதிதேவி பரவிப் பூசித்த சோதிமய மாய் விளங்கும் சிவலிங்கத்தைக் கண்டான். செம்பொன் ஆபரணங் களை அணிந்திருக்கும் பார்வதிதேவி தன் அருமைத் திருக்கரத்தால் தட வச் சிவந்துதோன்றிப் பவள மலையார் என்னும் திருநாமம்பெற்று நாற்ப த்தெண்ணாயிரம் முனிவர்கள் நாலாயிரம் யுகம் அங்குத்தங்கி வாழ்த்தி வணங்க வீற்றிருக்கும் எம்பெருமானைப் பார்க்குந்தோறும் அந்த நாரா யணன் அற்புதம் அடைந்து, பேரன்புகொண்டு, நியமம் பூண்டு, ஆசை, கோபம், அகந்தை முதலிய குற்றங்களை ஒழித்துப், பாசுபதவிரதத்தை அநுஷ்டித்து, முறையாகப் பெற்ற திரு வெண்ணீறு அள்ளித் தேகம் எல் லாம் பூசி, ஆசாபாசத்தை அறுத்தெறியும் விபூதியை நெற்றியில் திரிபு ண்டரமாகத் தரித்துத், திருக்கண் மணிமாலை அணிந்து, சூரியனைப்போல் சொலிக்கும் சக்கராயுதம் அடையவேண்டும் என்று சங்கற்பம் செய்து கொண்டு, வேண்டும் பொருள்கள் எல்லாவற்றையும் விண்ணவர்கள் எடு த்துக்கொடுக்க, மேன்மேலும் பெருகும் அன்புடன் ஆகமவிதிப்படி பூசை செய்யலானான். தினந்தோறும் ஆயிரம் செந்தாமரை மலர்களைக் கையிற் கொண்டு எம்பெருமானுக்கு உரிய ஆயிரந் திருநாமங்களை அடைவுடன் சொல்லிச் சொல்லி, அருச்சனைசெய்து துதித்து, அவ்விடத்திலேயே வாசமாயிருந்தான்.

வேதாகம புராண சாஸ்திரங்கள் எல்லாங்கண்டு தெளியப்பெருத பரம் பொருள் ஆகிய சிவபெருமான், அந்தத் திருமாலுடைய பத்தியைச் சோதித்து அறியும்படி ஒரு நாள் அவ்விடத்திலே பூசைக்குக் கொண்டு வந்து வைக்கப்பட்டிருந்த ஆயிரம் செந்தாமரை மலர்களில் ஒரு மலர் மறைந்துபோகத் திருவுளஞ் செய்தார். செய்தவுடன் ஒரு பூ மறைந்து போய்விட்டது. இப்பால் கார்மேக வண்ணனாகிய திருமாலும் பழையபடி "பவன்" முதலாகிய ஆயிரம் திருநாமங்களை அடைவுடன் சொல்லி,

அன்புமிகுந்து, தாமரை மலர்கொண்டு பூசை செய்யும் போது, தான் சொல்லிவருகின்ற திருநாமங்களில் ஒரு திருநாமத்திற்குஒரு பூ காணமற் போனமையால், வெயிலிற்பட்ட புழுப்போல் பதைத்துத் துடித்து, இனியென்ன செய்யலாம்; என்று ஏங்கித்திகைத்துத் தேர்ந்துதெளிந்து, தன் இருகண்மலர்களில் ஒருகண்மலரைப்பறித்து, எம்பெருமானுடைய சீர்பாத கமலங்களில் சாத்துபடி செய்து பரம சந்தோஷம் அடைந்தான். கொண்ட கொள்கையில் நிலைத்திருக்கும் பெரியோர்கள் தங்கள் அவயவங்களை அறுத்துக்கொடுத்தாயினும் தாங்கள் கொண்ட விரதத்தைக் காத்துக்கொள்வார்களே அல்லாமல் இடையில் கைசோர விட்டுவிடுவார்களோ? ஒருக்காலும் விடமாட்டார்கள். பரசுபாணி யாகிய பரமபதி அந்த மாயவனுடைய பத்திவைராக்கிய விசித்திரத்தைப்பார்த்துத், திருவருள்சுரந்து பெருகி ஊற்று எடுக்கவும், சோதிப் பிரகாசம்வீசவும், நூறு யோசனைதூரம் அக்கினிச்சுவாலை வீசவும், கண்கொண்டு பார்க்கக்கூடாத பேருருவங் கொண்டு, சூரிய மண்டலத்தில் இருந்து இறங்கி எதிர்நின்று காட்சி கொடுத்தருளினர். எம்பெருமான் இவ்வண்ணம் எழுந்தருளியதைக்கண்டு பயந்து, தன்னைச் சூழ்ந்திருந்த தேவர்கள் எல்லாரும் ஓட்டம் பிடித்ததைப் பார்த்துத், திருமால் பரம சந்தோஷமடைந்து, பூமிமேல் விழுந்து தாழ்ந்து அட்டாங்க பஞ்சாங்கமாகப் பணிந்து, சிரசின்மேற் குவிந்தகையுடன் நின்று, சுருதிமுறையாகப்பாடி ஆடி, ஆநந்தக்கண்ணீர் வெள்ளத்தில் அமிழ்ந்து விட்டான். அப்பொழுது எம்பெருமான் அந்தத் திருமாலைப்பார்த்துத், திருமாலே ! நீ பண்ணிய பூசைக்கு யாம் மன மகிழ்ச்சி அடைந்தோம். இந்நாள் உனக்கு யாம் செந்தாமரைக் கண் கொடுத்தோம். இன்று முதல் செந்தாமரைக்கண்ணன் என்னும் பெயர் பெற்றுவிளங்குவாய். இந்த ஊரானது திருமாற்பேறு என்று விளங்கக் கடவது. என்று திருவாய்மலர்ந் தருளிப்பின்பு கோடிசூரியப்பிரகாசமாய் விளங்கும் சுதரிசனம், என்னும் சக்கராயுதம் கொடுத்து, மேலும் எம் பெருமான் திருவுளம்பற்றுவார். திருமாலே ! பிறர் வெல்வதற்கு அருமையான வீரர்களையும் நீ இந்தச் சக்கராயுதத்தால் வென்று விடுவாய். இவ்விடத்தில் நீ எடுத்துச்சொல்லிய ஆயிரம் திருநாமங்களையும் சொல்லி, எம்மைப் பூசிக்கின்றவர்களுக்கு ஆணவாதி மும்மலங்களையும் அகற்றி, அனந்தானந்த முத்திவீடு தருவோம். இவ்விடத்தில் இவை அல்லாமலும் நீண்டச் சிவந்தார் முதலிய திருநாமங்களைக் கொண்டு எம்மைத் தொழுகின்றவர்களும் இன்பமுத்தி அடைவார்கள். இது உண்மை. சாந்த பதம் அடைந்த மனமுடைய மாதவர்கள் புகழ்ந்துபேசும் நீண்டச்சிவந்தார், சாதரூபர், மணிகண்டர், தயாநிதியார், பவளமலையார், வாட்டம

தவிர்த்தார், பாசவிமோசனராகிய சாகிசனர், திருமாற்குப் பேறளித்தார் என்னும் திருநாமங்கள் எட்டும், "பவன்" முதலிய ஆயிரம்திருநாமங்களுக்கு ஒப்பானவைகளென்று அறிந்துகொள் என, எம்பெருமான் திருவாய் மலர்ந்தருளியதைக் கேட்டுச் செந்தாமரைக்கண்ணன் ஆன திருமால் எம்பெருமானுடைய சீர்பாத கமலங்களில் விழுந்து, பணிந்து, செவ்வையாக நின்று, சிரசின்மேற்கைகூப்பிக்கொண்டு, நாவாரப் புகழ்ந்து, எம்பெருமானே! இந்தத் தலத்திலே ஒரு க்ஷணம் ஆயினும் வாசம் பண்ணப்பெற்றவர்களுக்கு மாளாச்செல்வமும், மீளாவீடும் கொடுத்தருளவேண்டும். அது அல்லாமல் அடியேனுக்கு இன்னும் ஒருவரம் தரல்வேண்டும், அது யாது எனில், மஹாப்பிரபு! அடியேன்பண்ணிய பூசையைக் கொண்டருளிய இந்தப் பரமலிங்கத்தைப் பணிந்து வணங்கப்பெற்றவர்கள் கடல்சூழ்ந்த உலகத்தில் உள்ள இலிங்கங்கள் எல்லாவற்றையும் வணங்கிய பலன் அடையும்படி கிருபைசெய் தருள்வேண்டும். என்று வேண்டுதல்செய்ய, வேண்டுவார் வேண்டியதையே விரைந்து கொடுக்கும் எம்பெருமான் அந்தத் திருமாலுக்கு அவ்வரமெல்லாம் கொடுத்தருளி அந்தச்சோதிலிங்கத்தில் மறைந்தருளினர். முத்துமணிகளைத்திரட்டும் பேரலைகளை யுடைய நீர் நிலைகளில் வாளைமீன்கள் துள்ளிப்பாயச் செழித்திருக்கும் பூஞ்சோலை சூழ்ந்துவிளங்கும் காஞ்சிமண்டலத்தில் உள்ள தலங்கள் எல்லாவற்றிலும் மேன்மைபெற் றிருக்கும் திருமாற் பேறு என்னும் இந்தத்தலத்திலே ஊர்ப்பிரயாணம் செய்யும்போதாயினும் ஒருநாள் தங்கி வாசம்பண்ணப் பெற்றவர்களும் பிறவித்தளை அறுத்துப்பேரின்ப வீடு பெறுவர் என்றால், எந்நாளும் அந்தத்தலத்திலே வாசம் செய்வோர் பெறும்பேறு சொல்ல எவரால் முடியும்?

திருமாற்குப்பேறளித்தார் திருவடி போற்றி.

---

முப்பத்தெட்டாவது,

## பரசிராமீசப்படலம்.

தபோநிதிகளே! வலம் சுழித்திருக்கும் உந்தியையுடைய பார்வதி தேவியும், யோகியர்களும், திருமாலும் வந்தனை வழிபாடுசெய்ய மகிழ்ந்தருளும் மணிகண்டருடைய வாசஸ்தலமாகிய திருமாற்பேறு என்னும் தலமகிமை சொன்னேம். இப்பால் இசைமுழங்கப் பாடல்பாடும் வண்டுகள்மொய்த்திருக்க மணமலர்ச் சோலை சூழ்ந்து விளங்குன்ற திருமாற்

பேறு என்னும் அந்தத்தலத்திற்குக் கிழக்கில் அரசர்களைப்பழித்து அழித்தல்செய்த பரசிராமன் பூசைசெய்து பேறு பெற்ற பரசிராமீசம் என்னுந் தலமகிமை சொல்வோம் கேளுங்கள், என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

சிவபத்தியில் சிறந்த பிருகுமுனி இட்ட சாபத்தினால் திருமால் பூர்வம் தவமெல்லாம் ஒரு உருவங்கொண்டு வந்தாற்போல் விளங்கும்சமதக்கினி முனிவனுக்கும் இரேணுகைக்கும் ஒரு புத்திரனாகப்பிறந்து, சதானந்தம் தரும் தவத்தை நாடாமல் அவமான காரியங்களைச் செய்து, அநர்த்தத்தையே உண்டுபண்ணுகின்ற ஐம்புலன்களாகிய அரட்டரை அடக்கும் அறிவாளியாய் இராமன் என்னும் பெயர்படைத்து, வாழ்ந்திருக்கும் நாள்களில் ஒரு நாள் காத்தவீரியார்ச்சுனனால் தன்தாயாருக்கு நேரிட்ட பொல்லாங்கை உணர்ந்து, அவளை வெட்டி விடும்படி தன்பிதா திட்டம் செய்யக்கேட்டு மனங்கலங்கித், தகப்பன் சொல்லைத் தள்ளாமல் செய்வதே சற்புத்திர தர்மம் என்று தெளிந்து, தன்னைப்பெற்று வளர்த்த தாயைக்கொன்று, பின்பு தன்பிதா அநுக்கிரகம் செய்தபடி அவளை உயிருடன் எழுப்பிவிட்டு மீண்டுவந்து, அந்தப்பிதாவைத் தொழுது அருகில் நின்றான். அதைக்கண்டு, அந்த முனிவன் மனமகிழ்ந்து, கோபந்தணிந்து, நிஷ்டையி லிருக்கும்போது, காத்தவீரியார்ச்சுனன் அங்கேவந்து,

கொலையஞ்சார் பொய்நாணார் மானமு மோம்பார்
களவொன்றோ வேனைய்வுஞ் செய்வார்—பழியொடு
பாவமிஃதென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங்கதுவப்பட்டார்.

என்றபடி அந்தமுனிவனைக் கொலைசெய்து விட்டான். புஜபல பராக்கிரமசாலியாகிய இராமன் அதைக்கண்டு, அதிக கோபம்கொண்டு, ஆண்மைபடைத்த அரசர்குலத்தைக்கருவறுப்பேன் என்றுசபதம்பண்ணி ஆரவாரம் செய்து, ஆலகால விஷம் உண்டருளிய எமது ஐயன் திருவருளை நாடி விரைந்துவந்து, வாசம்செய்யப் பெற்றவர்கள் தாம் பெறுதற்கரிய மானிடதேகத்தைப் பெற்றதனால் பெறும்பேறு பெறுதற் குரிய காஞ்சிமண்டலத்திலே சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணிப் பூசைசெய்து, ஐம்புலன்களையும் ஐந்து ஆசைவழியில் விடாமல் அகமுகமாகத் தடுத்து, அருந்தவம் செய்துகொண் டிருந்தான்.

அப்பொழுது சந்திரசேகரனாகிய சிவபெருமான் திருவருள் சுரந்து அவனுடைய அன்பைச்சோதித்து அறியும்பொருட்டு, வேதங்கள் எல்

லாம் கண்டுதெளியப்பெருத சீர்பாதங்கள், பூமிதேவி செய்ததவம் ஈடே றும்படி பூமிமேற் படிய நடந்து வருகின்ருர். மலையரசன் மகளாகிய பா ர்வதிதேவியும் பூணூல்புரளும் மலைபோல் விசாலமான மார்பையுடைய விநாயகக்கடவுளும், வேலாயுதத்தை வலதுகையில் ஏந்திய சுப்பிரமணிய சுவாமியும், தன்னைப்போல் வடிவங்கொண்டு தொடர்ந்துவரவும், நான்கு வேதங்களும் கூர்மையான நகங்களையுடைய நான்கு நாய்களாகிப்புறம் சூழ்ந்துவரவும், பாதாரவிந்தங்களில் தொடுத்திருக்கும் பாதரட்சைகள் அழகுகாட்டவும், புலால்நாற்றம் வீசும் நீலவஸ்திரம் இடையில் உறுத் தவும், தோலால் ஆகிய கச்சு அழகுகாட்டி விளங்கவும், தோள்மேல் சா த்திய வார்ப்பட்டையுடன் கண்டோர் அஞ்சும்படியான நடையுடைய வனுகிக் கோவதைசெய்யும் புலையன்போல் கறுத்திருக்கும் தேகம்கொ ண்டு, சூரியன் உச்சியில்வரும் வேளையில் விருத்தகக்ஷீர நதிக்குவந்து கர்மா நுஷ்டானங்களைச் செய்யத்தொடங்கிய அந்த இராமனுக்கு எதிரில் எழு ந்தருளினுர். குயவன் சக்கரம்போல் இடையருமல் சுழன்றுகொண் டிருக்கும் மனதை அலையவிடாமல் சிவத்தியானத்திலே அழுந்தவைத்து நிலைபெறச் செய்தமையால், வெட்கம் அடையும்படி ஐம்புலன்களை அட க்கிய இராமன், கள்ளுண்டு களிப்பவனுகிச் சற்றும் அஞ்சாமல் தன் எதிரில்வருகின்ற சிவபெருமானைப்பார்த்துத் தன் வாயைத் திறவாமல் மௌனமாய்க் கைகளை அசைத்துத் தூரமாய் விலகிப்போய்விடு என்று குறிப்பிக்கவும், அந்த முக்கண்மூர்த்தி சிறிதும் விலகாமல் சமீபத்தில் வந்துவிட்டமையால், புலையா! நீ விரைந்து விலகிப்போ என்று வாய்தி றந்து சொல்லினுன். வாய்திறந்துசொல்லவும் நீங்காமல் பிரமவிஷ்ணு க்களுடைய மனதிற்கு எட்டாத எங்கள் இறைவன் மிகவும் சமீபமாய் வருதலும், அந்த முனிவன் அதிக கோபத்துடன் சொல்லுகின்ருன்: பாவத்தொழில்செய்து பசுமாமிசம் தின்னும் பறையா! நீ அகங்காரம் அடைவது ஏன்? உன்னைத் தண்டிக்கிறவர்கள் இங்கே ஒருவரும் இல் லையென்று நினைத்தாயோ? என்று சொல்ல, வாசனைவீசும் கொன்றைப் பூமாலை சூடிய சடைமுடியை மறைத்து வந்த எம்பெருமான், பொருள் நிறைந்திருக்கும் வேதங்களாகிய நாய்களை அவன்மேல் ஏவினுர். வெற் றிபெற்று விளங்கும் வடிவேல் முருகையனும், வலியயானை முகமுடைய விநாயக மூர்த்தியும் கோபங்கொண்டவர்களாகி, ஓடி, அவனுடைய இர ண்டுகைகளையும் பிடித்துக்கொண்டார்கள். நாய்கள் புடைசூழ இரண்டு பிள்ளைகள் கையில் பிடிப்புண்டு திகைக்கும் அந்த முனிவனைப்பார்த்து, ஐயோ! பாவம், நீ பிச்சையெடுக்கும் பார்ப்பான். இவர்கள் கையில் அக ப்பட்டு மிகவும் வருத்தம் அடைந்தாய் என்றுசொல்லிப் பார்வதிதேவி

திருவுளமிரங்கி, நாய்களை விலக்கி அவனைத் தன் மக்கள் கையிலிருந்து விடுவித்தாள். விடுவிக்கவே, தவநெறியில் தவறுதல் இல்லாத அந்த இராமன் எம்பெருமான் திருமுகத்தைப்பார்த்துப் பறையா! நீ அருகில்வந்து என்னைத் தீண்டுவது தருமம் அல்ல. உனக்குப் பாவமாம் என்றுசொல்ல, எம்பெருமான் அவனைப்பார்த்துப்பாவம் உனக்கு உண்டோ? எனக்குஉண்டோ? நீ என் உறவினன்போல் காணப்படுகின்றாய். நீ யார்சொல்லென, அவன் எமது ஐயனைப்பார்த்து, என்னசொன்னாய்? நான் சமதக்கினிமுனிவன் புத்திரன். நீ பறையன். சற்றேனும் வெட்கமில்லாமல் என்னை உன் உறவினன் என்றது நன்றாயிருக்கின்றது எனத், தனக்கு ஒப்பில்லாதவனாகிய சிவபெருமான்நகைத்து ஓ ஓ! நீதானோ சமதக்கினிமுனிவன் புத்திரன் ? நீ சமதக்கினி முனிவன் புத்திரன் ஆனதால் எனக்கு நெருங்கிய பாத்தியஸ்தன் ஆய்விட்டாய். இதற்கு எவ்வளவும் சந்தேகம் இல்லை. உன்னைப் பெற்றெடுத்த இரோணுகை என்பவள் என் உத்தம பத்தினிக்கு நேசம் ஆனவள். இந்த முறையால் நீயும் எனக்கு நேசன் ஆகின்றாய் என்றுசொல்ல, இராமன் பெருங்கோபம்கொண்டு, நெருப்புப் பொறி பறக்கப்பார்த்து, உலகத்தில் எல்லாரும் புகழும்படியான பிராமணனும் என் எதிரில் நின்று, இந்த வார்த்தைசொல்லிய உனக்குத்தண்டனை உன் நாக்கையறுப்பதே யல்லாமல், வேறுதண்டனை இல்லையென்று சொல்லச் சகலலோக நாயகன், உலகத்தில் எல்லாரும் அஞ்சும்படியான தாய்க்கொலைசெய்த மகாபாவி ! நீ தயை தாட்சிணியம் இல்லாதவன், நீ வல்லவன் ஆனால் என் நாவைமாத்திரமோ அரிவாய்? தலையையும் அரிந்துவிடுவாய் வெட்கங்கெட்டவனே! இனி நான் சொல்வதைக்கேள். உலகத்தில் சுற்றத்தாரைத் தழுவிக்கொள்ளாமல் நீக்கிவிடுபவர்கள் உண்டோ?

பாம்புடனே பழகினாலும் பழகினவர்கள் பின்பு அதை விலக்கமாட்டார்கள். தமது சுற்றத்தார் வேப்பங்காய்போல் வெறுப்படையச்செய்தாலும், உலகத்தார் அவர்களை விட்டு நீங்கமாட்டார்கள். உதாசினம் பேசி உறவினனை வெறுக்கும் கொடியவனாகிய உன்னைவாடி வருந்த வதைக்க வேண்டுமென்று கோபங்கொண்டு, நாய்களை யெல்லாம் அவன்மேல் ஏவி ஏசுதல் செய்து; கற்களையும் ஓடுகளையும் விரைந்தெடுத்து விறுவிறென்று வீசி எறியும் போது, அந்த முனிவன் வடவாமுகாக்கினி போல் சீறிச்சினந்து தண்டாயுதம் எடுத்துச் சுழற்றி, நாய்களைப் பயமுறுத்தி அசுரருடைய முப்புரங்களையும் அக்கினிபகவானுக்கு ஆகாரமாக்கிய சிவபெருமான்மேல் செல்லவிட்டான். உடனே யானைமுகமுடைய விநாயகப்பிள்ளை அந்தத்தண்டாயுதத்தைக்கையாற்பிடித்துஒடித்து இரண்டு துண்டாக்கி விட்டார். பூர்வம் காளியுடன் கூத்தாடிய கடவுள்

நாயகன் அந்த முனிவன்மேல் கோபங்காட்டிக்கடுஞ்சொற்களைச் சொல விப், பறைத்தேவடியாள் மகனே! நீ என் அருமையான மகன் வருந்தும் படி தண்டாயுதம் எறிந்தாய். அந்தத்தண்டாயுதம் தெய்வச்செயலால் ஒடிந்து போயிற்று. தாயைக் கொலை செய்வதற்கு அஞ்சாதவனே; அருள் இல்லாதவனே! உன்னை இனிக் கொல்வேன், என்று கொல்ல உடன்பட்டுக் கைகளை ஓங்கிக்கொண்டு போகும் போது, நாய்கள் எல்லாம் முந்தி விரைந்து சூழ்ந்து துரத்துதலும், அந்த இராமன் பயந்து விரைந்து ஓடிப்போனான். சந்திரனைத்தரித்த சடை முடியையுடைய சிவபெருமானும் அவசரத்துடன் பின் தொடர்ந்துபோய் ஒருகையால் அவனைப்பிடித்துக் கொள்ளுதலும், எல்லாரையும் அடிமையாகக் கொண் டிருக்கும் இறைவன் தீண்டப் பெறுதலால், அவன் தேகமெல்லாம் புளகிக்கும்படி பரமசந்தோஷம் அடைந்தான். அடைந்தும், புலையன் தீண்டப்பட்டதே என்று வெட்கம் அடைந்து, துக்கக்கடலில் அழுந்தி, அதிக உக்கிரங்கொண்டு சொல்லுகின்றான். அந்த அந்தச்சாதியார் தங்கள் தங்கள் சாதி ஆசாரம் தவறாமல் நடந்துவரச் சிவபெருமான் நடத்திவருங் காலத்தில் கடல்சூழ்ந்த இந்த உலகத்திலே எங்கேயாவது பிராமணனைச் சற்றேனும் பயப்படாமல் அறிவீனனும், இழிதொழில் செய்பவனும், ஆன ஒரு பறையன் தன் அசுத்தமானகையால் தீண்டத் துணிவானோ? துணியமாட்டானே! ஆ! இது என்ன விபரீதம்? புலையா! இப்பொழுதே உன் தலை அறுந்துபோவது நிச்சயம் அறிந்துகொள் என்று சொல்லித் தன்மனங் கொதித்து, ஒரு புலையன் கையில் சிக்கிக் கொண்டேனே அந்தோ! சீசீ! என் தவமும் கெட்டது. நானும் கெட்டுப் போனேன் என்று வருந்துகையில், நெற்றிக் கண்ணையும், நீலகண்டத்தையும், மான் மழுவையும், செம்பவளத் திருமேனியையும் மறைத்துப், புலையன்வேடம் பூண்டு வந்த கருணாகர மூர்த்தியாகிய சிவபெருமான், அந்த இராமன் சொல்லியவைகளைக்கேட்டுத்திருவாய் மலர்ந்தருளுவார். அடா! நீமாசில் லாத மறையவர் குலத்தான் என்றால், நான் உன்னைத் தொடமாட்டேன். நீ பார்ப்பான் அல்ல. சண்டாளன். யான்கொலைத்தொழில்செய்யும் புலை யன். ஒருபோதும் தாய்க்கொலைசெய்யமாட்டேன். நீதாய்க்கொலை செய் திருக்கின்றாய், ஆதலின் நீஎன்னைப்பார்க்கிலும்ஈனன், கடையரிலும்கடை யனான நீ இனி எனக்கு அடிமையாகி அகமகிழ்ந்திரு. உனக்குநான் ஆதர வாயிருப்பேன். யான் சொல்வது பொய் அன்று, மெய், என்று சொல்ல, அந்த வார்த்தைகளை அந்தமுனிவன் கேட்டுத் தடியால் அடிக்கப்பட்ட சர்ப்பம்போல் சீறி, எம்பெருமானைத் தன்கைகொண்டு அடித்தான். தேவர்கள் இன்னுங்கண்டு தெளியாத புண்ணியப்பொருளாகிய சிவபெரு மானும் விரைந்து, தன்செந்தாமரைக் கைகளில் ஒரு கையால் அந்தமுனி

வனுடைய இரண்டு கைகளையும் பிறழ வொட்டாமற் பிடித்துக்கொண்டு, மற்றொரு கையால் அவன் கண்பிதுங்கவும், கன்னம் தடிக்கவும், அறைந்தனர். இந்தப்பிரகாரம் இருவரும் மாறி மாறி ஆரவாரம்செய்து அடித்து, உக்கிரங் கொண்டு, உயிர்கள் எல்லாம் பயந்து துன்பமடையக் கொடிய யுத்தம் செய்தலும், எம்பெருமாட்டியாகிய பார்வதி தேவி பார்த்துப், பிராண நாயகா! இவன் உன் திருவடிமேல் பத்திவைத்துப் பணிவிடை செய்யும் பத்தன். இவன் பொறுக்கும்படி அடி என்றாள். அப்படியே எம்பெருமான் அவன் பொறுக்கும்படி மெதுவாய் அடிக்க, வேதவிதிகளை உணர்ந்த அந்த முனிவன், வெற்றி தன்னுடையது என்று எண்ணி, மேருவை வில்லாக வளைத்தருளிய சிவபெருமானுடைய திருமார்பில் வலிந்து தன்கையால் தாக்கித் திடங்கொண்டு வீரநாதம் செய்தான். சிட்டருக்கே அன்றித் தேவர்களுக்கு அருமையான சிவபெருமான் பெருங்கோபங் கொண்டவன் போல் நடித்து, அந்த முனிவனை வருத்தும்படி கைகளையும் கால்களையும் சேர்த்துக் கட்டித், தன் ஒரு திருவடியால் உருட்டி வெகுதூரத்தில் தள்ளிவிட்டார். அப்படி வெகுதூரத்தில் கட்டி உருட்டித் தள்ளப்பட்டவனை, வேதங்களாகிய வலிய நாய்கள் வளைத்துக்கொண்டன; பக்கத்தில் நின்ற விநாயகமூர்த்தி சுப்பிரமணிய சுவாமி என்னும் மக்கள் இருவரும் கண்டு, தங்கள் விலாப் புடைக்கச் சிரித்தார்கள். திருவிளையாட்டாக எம்பெருமான் தன் சீர்பாதகமலங்களால் வெகு தூரத்தில் உருட்டித் தள்ளிவிடவே, வாசனை வீசும் மலர் சூடிய கரிய கூந்தலையுடைய இரேணுகை புத்திரனான இராமன் மனவருத்தமுடையவனாகி, பசுங்கிளைகள் அடர்ந்து ஓங்கிய ஒரு மரத்தின் அடியில் உயிர்போனவன் போல் மூர்ச்சை அடைந்து, விழுந்து அளவுபடாத துக்கக்கடலில் அழுந்தும்போது, அவ்விடத்திலே தேன் பெருகப் பூத்திருக்கும் தாமரைத்தடாக நீரில் படிந்து, அந்தத்தாமரை மலர் மணத்தைத் தாங்கிக் கொண்டுவரும் தென்றல் காற்றானது, விரகவேதனையால் மெலிந்து, மிருதுவான மலர்களை யுடைய பூஞ்சோலைகளில் குறியிடங்களில் தங்கி, கண்ணும் பூத்துப் போக வழிபார்த்துப் பார்த்து, வாடி வருந்திச் சோர்ந்து கிடக்கின்ற சோரநாயகர் உயிர் தழைக்க நாடிவரும் சோர ஸ்திரீகளைப் போல் மெல்ல நடந்து வந்தது. இனிமையான இளந்தென்றற்காற்றானது தன் உடம்பைத் தடவுதலும், தெளிவு உண்டாகி ஆயாசந்தீரக் கண்விழித்துப் பார்த்துத், தேம்பித் திகைத்துத் துன்பத்திற்கு இடம் ஆனவனாகி, மாறுபடாத மனமெல்லாம் நிரம்ப ஓதிய அந்த மறையவன் தன் மனதில் பற்பலவிதமாய் எண்ணலுற்றான். வேத நெறியில் தவறாத முனிவர்களுக் கெல்லாம் தலைவனாகிய சமதக்கினி முனிவன் குலத்திற் பிறந்தேன். நாலு வேதங்களையும், ஆறுஅங்கங்களையும், கர்ம

நூல், ஞானநூல் என்னும் இருவகை நியாய நூல்களையும் பதினெண் புராணங்களையும், முறைமையாக ஓதி உணர்ந்தேன். தனுர் வேதத்திலும் சமர்த்தன் ஆனேன். எதிலும் நிபுணனாயிருக்கும் எனக்கு இந்த வேளையில் முற்பிறப்பில் செய்த வினை மூண்டுவிட்டது. இது என்ன பாவம்? இந்தப் பாவத்தைப் பரிகரித்துப் பாதுகாப்பவர்கள் யார்? என்னைப் பெற்ற தாயானவள் கொடிய பழி அடைந்து என்னால் தலை வெட்டப் பட்டாள். பின்பு என் பிதாவும் மூடாந்தகனாகிய கார்த்தவீரியார்ச்சுனனால் தலைவாங்கப் பட்டார். மேலும் இப்பொழுது ஒரு புலையன் கையால் தொட்டு அவமானப் படுத்தும்படி நேரிட்ட கொடும்பழிக்கு ஆளாகியும், ஐயோ! மாபாவியாகிய நான் இன்னும் மாளாதிருக்கின்றேன். ஆலகால விஷத்தை அமுது செய்தருளிய சிவபெருமானைத் துதிப்பவர்கள் ஒரு போதும் துன்பம் அடைய மாட்டார்கள். அந்தச் சிவபெருமானுடைய சீர்பாத கமலங்களை விடாது பிடித்தும், என் துன்பத்திற்கு அளவு காணேன். இது அற்புதம்! அற்புதம்! ஆன்மாக்களுக்கு இன்பம் தருவதனால் சங்கரன் என்றும், இன்பமயம் ஆக்குவதனால் சம்புவென்றும், துன்பமெல்லாம் தொலைத்தலால் உருத்திரன் என்றும், எம்பெருமானை அறிவுடையோர் சொல்வார்கள். அறிவுடையோர் சொல்லியவைகள் எல்லாம் என்னிடத்தில் பொய்த்துப்போய்விட்டனவோ? அஞ்ஞானத்தால் பெருத்த அபசாரம் செய்திருக்கின்றேன். ஆதலால் இப்படிப்பட்ட துன்பத்திற்கு ஆளானேன். இனியாயினும் பசுபதி ஆகிய சிவபெருமானைத் துதித்து, என்பாவத்தைப்பரிகரித்துக் கொள்வேன் என்று நிச்சயம் பண்ணிக்கொண்டு துதிசெய்யலானான். எந்நாளும் வளர்ந்து ஓங்கிவரும் படைப்பு முதலிய ஐந்து தொழில்களையும் இடையறாமல் நடத்தி, ஆன்மகோடிகள் அழிந்துபோகாதபடி ஆணவம் முதலிய மும்மலங்களையும் அகற்றி, ஆனந்த வீடு தருவோனே! ஆ! ஆ! அடியேன் உன் அடைக்கலம். பிருதிவி முதலான பலதத்துவங்களாய் நாததத்துவம் வரையில் படர்ந்திருக்கின்ற பரஞ்சோதியே! ஆதி அனாதி ஆனவனே! சுவாமி! அடியேன் உன் அடைக்கலம். பார்வதி தேவியை இடப்பாகத்தில் வைத்தவனே! முறையோ? மேருமலையை வில்லாக வளைத்தவனே முறையோ? உண்ணக் கூடாத விஷம் உண்டு உவந்தவனே! முறையோ? ஆன்ம சொரூபம் அறிந்த பெரியோர்களுக்கும் பெரியோனே! முறையோ? காஞ்சிமா நகரத்தை அடைந்து உன் பாதாரவிந்தங்களைப் பத்தியுடன் பணிந்து போற்றுகின்ற சுரர் நரர் என்னும் இருதிறத்தாருள் வேண்டியவைகளை வேண்டியபடி பெறுவிட்டாலும் வெறுங்கையராய்ப் போனவர்கள் உண்டோ? ஒருவரும்

இல்லையே! எம்பெருமானே! அடியேன் படும்பாடு அறியாயோ? உன்னை அன்றி எனக்கு வேறு ஆதாரம் இல்லை. சந்திரசேகரா! நான் மெலிந்து போகாதபடி இனியாயினும் கிருபை செய்தருளாய். என்று இப்படிப்பட்ட வார்த்தைகளால் துதித்துச் சோர்வடைகின்ற மேரு மலை போலும் தவம் உடையவனுகிய அந்த இராமனுடைய அன்புடன் கலந்த உபசார வார்த்தைகளைத் தன் திருச்செவி சாத்திப் பரம சந்தோஷம் அடைந்து, பார்வதி பாகனுகிய பரமசிவன், அந்த இராமனுக்கு முன்பாக க்கொண்ட வேஷத்தை மாற்றிப், பழைய ரூபத்துடன் தோன்றித், தன்னைப்போல் பழைய வடிவங்கொண்டு சூழ்ந்திருக்கும் பார்வதிதேவி, சுப்பிரமணியசுவாமி, விநாயகமூர்த்தி, என்னும் இவர்களுடன் காட்சி கொடுத்தருளினுர். அதைக்கண்டு அந்த முனிவன் பேரன்பும், நடுக்கமும், அச்சமும் கொண்டு எழுந்து, துன்பம் மிகுந்திருக்கும் இடர்களை எல்லாம் கடந்து, ஆநந்தக்கடலில் அழுந்தி, மருள் கொண்டு நீங்காத அன்புடன் எம்பெருமானுடைய இணையடிகளில் விழுந்து பணிந்தான். தன்திருவடிகளில் விழுந்து பணிந்தவனைச் சந்திரசேகரனுகிய சிவபெருமான் விரைந்து எடுத்து, அணைத்து அருள் சுரந்து, நம்மிடத்தில் மாறுத பத்தியுடையவனே! நீ விரும்பியது யாது? சொல் என, அந்தமுனிவன் ஆறுதல் அடைந்து, அன்பு மிகுந்து, அஞ்சலியாஸ்தனுகி நின்று, பின்புறமாக நீண்டிருக்கின்ற சடைகளையுடைய சிவபெருமானே! பஞ்சேந்திரியங்களை வென்றவனும், என் பிதாவும் ஆகிய சமதக்கினி முனிவனைக் கேகய தேசாதிபதியான காத்தவீரியார்ச்சுனன் கொலை செய்தான். அவனையும், அவன் குலத்தையும் கொன்று அழித்து, அவர்கள் உதிரத்தைக் கையில் அள்ளி, என் பிதாவுக்குத் தர்ப்பணம் பண்ணச் சங்கற்பஞ் செய்திருக்கின்றேன். அவர்களைக் கொல்லும் திறம் அடியேனுக்குக் கொடுத்தருள வேண்டுமென்று பிரார்த்திக்கையில், எமது ஐயன், எல்லாரும் புகழ்ந்து பேசத் தன் திருக்கைமேல் விளங்கும் மழுவாயுதத்தின் மேல் கடைக்கண் வைத்தலும், அந்த மழுவானது அவருடைய திருவுள்ளக் கருத்தை உணர்ந்து, தன் ஒரு கூறுகொண்டு ஒரு பெலத்த ஆயுதம் ஆக்க, அதை எடுத்து அவனுக்குக் கொடுத்து, வெள்ளை யானைக்கு இறைவனுகிய இந்திரன் உடந்தையாய் வந்து எதிர்த்தாலும், சத்துருக்களை யுத்தகளத்தில் தப்பாமற் கொன்று நீயே வெற்றி பெறுவாய். பரசு என்னும் இந்த ஆயுதம் எம்மிடத்திற் பெற்றுக்கொண்டாய். அதனுல் இனிப் பரசிராமன் என்று பெயர் படைத்து வாழ்ந்திரு. என்று திருவாய் மலர்ந்தருளப் பரசிராமன் அஷ்டாங்க பஞ்சாங்கமாகத் தாழ்ந்து விழுந்து பணிந்து, புரம் எரித்தருளிய புண்ணியனே! அடியேனுக்கு அனுக்கிரகம் செய்த இந்த இலிங்கத்தில் நீ எந்நாளும் வாழ்ந்தருள. இந்தப்பழைய பாலாறு

என்னும் விருத்தகக்ஷீரநதியில் நீராடி, வெண்ணிலாக் கிரணங்களை வீசி இருளை அகற்றும் சோமவாரம் முதலான சுபதினங்களிலே என் பெயர் கொண்டு விளங்கும் இந்தப் பரசிராமீச லிங்கத்தை வணங்கி, அடியார்களுக்கு ஒருபொழுது அன்னம் படைத்தவர்கள் மாளாச் செல்வமும் மீளாவீடும் பெறக்கடவர். என்று வேண்டி வணங்கி எழுந்தபோது, அந்த முனிவனுக்கு அந்தவரம் எல்லாம் கொடுத்துப் பர்வதராஜ புத்திரியாகிய பார்வதிதேவி, விநாயகமூர்த்தி, சுப்பிரமணிய சுவாமியுடன் மறைந்தருளியபின், அந்தப் பரசிராமன் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு, அதிக கோபத்துடன் அந்தப் பரசு என்னும் ஆயுதத்தினால் நவரத்தின முடியையும், நால்வகைச்சேனைகளையும் உடைய அரசர்களைப் போர் செய்து கொன்று, அக்கினி மயமாய்ப் பெருகும் உதிரத்தால் தர்ப்பணம் செய்து, பிதிர்த் தேவதைகளின் கடனைத் தீர்த்துப் பெரு மகிழ்ச்சி அடைந்தான்.

பெரியோர்களே! அப்படிப்பட்ட அருள்மயமான சிவலிங்கத்தை எப்படிப்பட்டவர்கள் ஆனாலும் கண்டு, மெய்யன்பு கொண்டு, அவ்விடத்தில் தாழ்ந்து வணங்குவார்கள் ஆயின் அவர்கள் வணங்குவதற்கு முன்னமே உள்ளங்கை நெல்லிக்கனிபோல் யாதொரு சந்தேகமும் இல்லாமல் பெருஞ் செல்வத்துடன் பிரமானந்த போகவீடும் பெற்று வாழ்வார்கள்.

பரசிராமீசன் பதமலர்போற்றி.

---

முப்பத்தொன்பதாவது.

## இரேணுகேச்சரப்படலம்.

தரும சிந்தனையுள்ள தபசிகளே! வாசனையுடன்மலரும் கொன்றை மலர் சூடிய சடை முடி யுடையவனாகிய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் பரசிராமீசம் என்னும் தலமகிமை சொன்னோம். இனி அதன் தெற்கில் விருத்தக்ஷீரநதிக்கரையில் பூஞ்சோலையால்சூழப்பட்ட இரேணுகேச்சரம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

பெண்யானை நடைபோல் நடக்கும் பார்வதிதேவி மணாளனாகிய சிவபெருமானுடைய பத்தர துபாதநூளித்தைக் கவசமாகத்தன் உடலில் தாங்கித், தன்னுடன் எதிர்த்த அரசர்களுடைய வலி சிந்தும்படி போர்

செய்து வெல்லும் பரசிராமன் விரும்பும் தாயாகிய இரேணுகை என்பவள் அழகெல்லாம் குடிகொண்டிருப்பதற்கு ஓர் இடம்போன்றவள். தனுர்வேத முதலான சாஸ்திரங்களைக் கசடறக் கற்றிருக்கும் தன்மையுள்ள வருமராஜன் தவம் செய்து பெற்ற வரத்தால் பிறந்தவள். அந்தச் சமதக்கினி முனிவனுக்குப் பத்தினி ஆனவள், மாசில்லாத கற்பினால் விளங்கும் பெருமை பெற்றவள். இல்லற வாழ்க்கையில் நெறி தவறாமல் நடக்கும் விலையுயர்ந்த ஆபரணம் அணிந்தவளும், அரும்பு அவிழப்பூத்த மலர்சூடிய கூந்தலை யுடையவளுமாகிய அந்த இரேணுகை, ஒரு நாள் பொய்கையில் சலம் திரட்டிக்கொண்டு வரப்போனபோது, ஊழ்வினைவலியால் அவளைக் காத்தவீரியார்ச்சுனன் கண்ணுறக்கண்டான். கண்டவுடன் அவன் மன்மதபாணங்களுக்கு இலக்காகி, அவள் எதிரில் நெருங்கிவந்து நின்றான். பெருமைபொருந்திய தன் புறவடியைப் பார்த்து நடக்கும் அந்த ஸ்திரீ, நிறைந்த பேரழகுடைய அந்த அரசனைக் கண் எடுத்துப் பார்க்காமலிருந்தாள். அதனால் அந்த அரசன் இனி என்ன செய்யலாம் என்று தனக்குள் ஆலோசனை செய்து, அந்தப்பொய்கையில் உள்ள சலத்தின்மேல் ஆகாயத்தினிடமாக விளக்க முறத்தோன்றினன். சமதக்கினி முனிவன் பத்தினி யானவள் அந்தப் பாதகனுடைய நிழலைக்குளிர்ந்திருக்கும் நீர்ப்பரவையினிடத்தில்முன்னிற்கப் பார்த்தாள். அவள்பார்த்த வுடன் மன்மதனும் தன்பலத்தைக் கொஞ்சம் காட்டினன். மலர் சூடிய கூந்தலையுடைய அவள், புறத்திற் சென்ற தன் மனதை விரைவில் தன் வசமாக்கிக்கொண்டு, வழக்கப்படி சலந்திரட்ட வாராமையால், ஒரு பொன் குடத்திலே சலம் மொண்டு எடுத்துக்கொண்டு மீண்டு வீடு போய்ச் சேர்ந்தாள். வீட்டில் குடத்தை இறக்கிவிட்டுக் கணவனுக்கு எதிரில் வந்தபோது, முனிவர்களில் ஆண்சிங்கம் போன்றவனாகிய அந்தச் சமதக்கினி முனிவன், சந்திரன் போலும் முகத்தையுடைய தன் மனைவி காலதாமதம் செய்து வந்ததைத் தன் அறிவினால் சிந்தனைசெய்து, நீதி நெறி தப்பிய மூர்க்கனாகிய காத்தவீரியார்ச்சுனனுடைய துஷ்டத்தனத்தை விரைவில் தெரிந்துகொண்டு, வடவாமுகாக்கினிபோல் வெகுண்டு, தன் மகனைப் பார்த்துப் பெரும் புகழ் படைத்தோங்கும் இராமா! ஆலகாலவிஷம்போல் தோன்றிய காத்தவீரியார்ச்சுனன் உன்னைப் பெற்ற தாயின் பேரழகைக்கண்டு மோகங்கொண்டு போயிருக்கின்றான். அவன் இளமையும், அரசாட்சியும், அதிக பலமும், அறிவீனமும் உடையவன். ஆதலால் எம்மை மதிக்காமல் இவளைப்பிடித்துக்கொண்டு போய்விடுவான். உயர்குணம் உடையோனே! நான் சொல்வதைக் கேள். நீ என்கட்டளை வழியில் நிற்பாயாகில், இவள் தலையை வெட்டிவிடு. விரைந்துபோ

என்று சொல்லத் தன் பிதா வார்த்தையைத் தலைமேல் வைத்துத்தாயை அழைத்துக்கொண்டு படுகளத்திற்குப்போக வெளியிற் புறப்பட்டான்.

அந்தணர்களே! பெண் என்று பிறப்பதே துன்பம். இளமைப் பருவத்தில்செல்வமாய்ச்சிறந்திருப்பது அதைப்பார்க்கிலும் அதிகதுன்பம். அதிக அழகுபடைத்திருப்பது அதைப்பார்க்கிலும் அதிகதுன்பம். தரித்திரனுக்கு வாழ்க்கைப்படுவது அதைப்பார்க்கிலும் அதிகதுன்பமேயாம். மேலும் "பெண் பெற்ற போதே மீளாப்பெருந்துன்பம்பெற்றனமே" என்பர், ஆதலின் பெண்ணைப் பெற்றவர்களுக்குப் பெருந்துன்பமே உண்டாமென்று உணர்க. அரத்தையும் துண்டிக்கும் படியான வாளாயுதத்தைக் கையில் ஏந்தி, வலிமையில் சிறிதும் குறைவுபடா தோங்கும் அந்த இராமன், தன்தாயாருடைய தலையைவெட்டி, எறிந்துமீண்டுவந்து, தன் பிதாவின் சீர்பாதங்களைத் தொழுதலும், மகா தபசியாகிய சமதக்கினிமுனிவன் துன்பம் அடைந்து, மனம் இளகிச் சொல்லுகின்றான். அறிவிற் பெரியோனே! நீ பராக்கிரமசாலியாகிய வர்மராஜன் மகளுக்கு மகன் என்பதையும், என்னிடத்தில் விசுவாசமுள்ளவன் என்பதையும் இன்றுதான் நான் உன்னிடத்தில் கண்டு தெளிந்தேன். பிதாவாகிய என் சொல்லைத்தட்டாமற்செய்தாய் என்றாலும், தாயைக் கொலைசெய்வது தருமம் அல்ல. உலகத்தாரும் உன்னைப்பழிப்பார்கள். ஆதலால் நீ என் சொற்படி அந்தப் படுகளத்திற்குப்போய், உன் தாயாருடைய தலையை உடற்குறையுடன் பொருந்தச் சேர்த்து எழுப்பி, பேரன்புடன் அவளுடைய புனிதமான பாதங்களை வணங்கிக் கைகூப்பித்தொழுது துதித்து, என் தாயே! உன் இஷ்டப்படி நடந்து கொள் என்று விடைகொடுத்து மீண்டு, நீ இங்கே வந்துசேர் என்று போதித்துப், பின்பு அந்த முனிவன் கோபமே எல்லா வுயிர்களுக்கும் கொடுமை செய்யும். கோபமே சற்குணத்தையும் தவத்தையும் கொண்ட விரதத்தையும் கூட்டோடே அழித்துவிடும். கோபமே அறிவைக்கெடுத்துவிடும். கோபத்தைப் பார்க்கிலும் ஒருவனுக்குக் கொடிய சத்துரு வேறில்லை.

கோபத்தாற் கௌசிகன் றவத்தைக் கொட்டினன்
கோபத்தான குடனுங் கோலமாற்றினன்
கோபத்தாலிந்திரன் குலிசம்போக்கினன்
கோபத்தா லிறந்தவர் கோடி கோடியே.

கோபமே பிறவியைக் கொடுக்குங் கொள்கையாம்
கோபமே யறிவினைக்குறைக்குங் குட்டநோய்
கோபமே தாயையுங் கொல்லுந் திண்படை
கோபமே தவத்தினைக் குலைக்கும் பேயரோ.

"சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி
யினமென்னும் ஏமப்புணையைச்சுடும்.

ஆறுவதுசினம்.

என்று இவைபோல்வனவற்றைத் தன் மனதில் எண்ணிக் கோபம் எல்லாவற்றையும் விட்டுத்துறந்து மகிழ்ந்து வாசஞ்செய்திருக்கும் காலத்தில்;

காமத்தாலிந்திரன் கலக்கமெய்தினன்
காமத்தாலிராவணன் கருத்தழிந்தனன்
காமத்தாற் கீசகன் கவலையுற்றனன்
காமத்தாலிறந்தவர் கணக்கிலார்களே.

ஆசையாற் சந்திரனங்கந் தேய்ந்தனன்
ஆசையாற் சவுபரி யறிவைநீங்கினன்
ஆசையா னராசுரனுவிபோக்கினன்
ஆசையால் வாலியுமழிந்துபோயினன்.

பையராவணிந்த வேணிப்பகவனேயனையதங்கள்
ஐயனும்வியாழப்புத்தேளா யிடையடைந்தானுக்குச்
செய்யதாள்வழிபாடின்றித் தேவர்கோனிருந்தானந்தோ
வையலார்மயலிற்பட்டோர் தமக்கொருமதியுண்டாமோ.

சர்ப்பமாகெனமுற்கொம்பு தாங்கிமுன்சென்றதென்றல்
வெற்பனுமுனிவன்சாபம் விளைத்தனன்விளைத்தலோடும்
பொற்புமாசுணமேயாகிப் போயினனறிவில்லாத
அற்பரானவர்க்குச்செல்வமன்றியும் பகைவேறுண்டோ,

என்றபடி காமத்தாலும், செல்வத்தாலும், கண்தெரியாமல் மதோன்மத்தனாய் மயங்கிக்கிடக்கும் காத்தவீரியார்ச்சுனன் அதை அறிந்து, அவ்விடத்தில் விரைந்துவந்து, உலக ஆசையை ஒழித்தவனாகிய அந்த முனிவனுடைய தலையை வெட்டிவிட்டு மீண்டுபோய்விட்டான்.

இப்பால் தன்மகனால் உயிர்பெற்றெழுந்த இரேணுகை, தன்பிராணநாயகனை இழந்த துன்பத்துடன் சிறிதுகாலங்கழித்துப், பின்பு தன்மகன் சிவபெருமானைப்பூசித்து வரம்பெற்றதை அறிந்து, அந்த மகனுடையசம்மதி பெற்றுக்கொண்டு அவ்விடம்விட்டுப் போயினள். இள வண்டுகள்

இசைபாடும் பூஞ்சோலை சூழ்ந்து செழித்திருக்கும் காஞ்சிமா நகரத்தை அடைந்து, தன் மகன் பூசித்துப் பேறுபெற்ற பரசிராம புரத்திற்குப், (பளுவூருக்குச்) சமீபமாகச் சோதிமயமாய் விளங்கும் சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து, பிள்ளையிடத்தில் வைக்கும் பேரன்பிலும் பெரிது அன்புவைத்து, நெடுநாள் தவறாமல் பூசைசெய்துகொண்டு வரும்போது திருவருள் சுரந்து, பார்வதிதேவியுடன் எம்பெருமான் அவள் எதிரில் தோன்றிக் காட்சிகொடுத்தருளினார். சிற்றிடையையுடைய இரேணுகை எம்பெருமானைத்தரிசித்து, உள்ளத்தில் பெருகும் அன்பால் தீப்பட்டமெழுகுபோல் உருகிக், கைகூப்பித்தொழுது, இனியகுரல் ஓசையுள்ளகுயில்களும்வெட்கிப்போம்படி தன் செம்பவளவாய்திறந்து எம்பெருமானைத் துதித்துச் சொல்லுகின்றாள்.

எம்பெருமானே! சகல ஜீவாத்துமாக்களுக்கும் தந்தை நீ. தாய் பார்வதி. அன்பான தாய்தந்தையரிடத்தில் தங்கள் குறைகளைச் சொல்லிக் கொள்வதற்கு வெட்கப்படுகிறவர்கள் உண்டோ? இல்லை எனில், அம்மை அப்பர் ஆகிய உங்களிடத்தில் என் குறைகளை முறையிட்டுக் கொள்ள நான் ஏன் வெட்கப் படவேண்டும்? அடியேன் பலவிதங்களிலும் அவமானம் அடைந்தேன். திரு நீறு தாங்கிய திருமேனியனே! இப்பொழுது உன் அருளால் உன்னைப் பூசிக்கும் பெருவாழ்வு அடைந்து உன்னைக் கண்ணாரக் காணப்பெற்றேன். இனி உலகம் என்னைப் பழித்து ஒழித்து விடாதபடி என்மேல் கருணைவைத்துக் காத்தருள்வது உன் பாரம். ஆன்மாக்களுக்குப் புகழும், செல்வமும், முத்தியும்கொடுப்பவனும், துன்பமெல்லாம் தொலைத்தருள் செய்பவனும், அஞ்ஞானத்தால் இருண்டு கிடக்கும் ஆணவமுதலான மும்மலங்களை வேர் அறக் களைந்து எறிபவனும், எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் நிறைந்திருப்பவனும், அடியவருடைய அன்பிற்கு எளியவனும் ஆயிருப்பவன் சிவபெருமான் என்றும், பெண்ணுக்குக் கணவன் மற்றவர்களைப் பார்க்கிலும் பிரியமானவன் என்று பெரியோர்கள் சொல்வார்கள், யோசித்துப் பார்க்குமிடத்தில் அந்தக்கணவன் இந்தத் தேகத்திற்கு மாத்திரம் பாத்தியம் உள்ளவன். ஆன்மாக்களுக்குக் கொன்றைப் பூமாலை சூடிய சடாமுடி யுடைய சிவபெருமானே கணவனும், தந்தையும், தாயும், செல்வமும், மற்றவைகளும் என்றும், இப்படிப்பட்ட உன் பெருமைகளை வினைதீர்ந்து விளங்கும் என் கணவன் நாள்தோறும் எடுத்தெடுத்து எனக்கு விளங்க விரித்துச் சொல்லிவருவார். அப்படிப்பட்ட மகத்துவமுடைய உன்னைத்தொழுது, துதிசெய்து, கடைத்தேறினவர்கள் அனேகர். அடியேனுடைய குமாரனுக்கும் பெரும் பேறுகொடுத்தாய். ஐயனே! அடியேனையும் காத்தருள்.

மலைமகளே! சகலலோகங்களையும் தந்தருளிய தாயே! அடியேனை ஆத ரித்தருள். அஞ்ஞானிகள் மனதிற்கு அகப்படாதவர்களே! உங்களைத் தஞ்சம் என்று அடைந்தேன். சரணம் என்று பிரார்த்தித்தாள். அம்மை அப்பராய் அகிலலோகங்களையும் படைத்துக் காத்தருளும் பரம கருணை நிதியாகிய சிவபெருமான், புன்னகை அரும்பித் தோன்றத் திருவுளம் மகிழ்ந்து, அன்புள்ளவளே! நீ எம்மிடத்தில்வேண்டும் வரங்களைக் கேள். இந்தப் பார்வதி அந்தவரங்களை உனக்குத் தருவாள் என்று சொல்ல, அன்பு மிகுந்து துதிசெய்து, இரேணுகை வேண்டுகின்றாள். அடியேன் செய்யுந் தொண்டிற்கு அன்புகொண்டவளே! பலதுன்பங்களால் பஞ்சு படும் பாடு பட்டநான் உன்னருளால் பெருஞ்சிறப்பு அடைந்து, மனிதர் கள் எல்லாம் வந்தனை வழிபாடு செய்யும் தேவதையாய் விளங்கி, அவரவ ர்கள் வேண்டும் போகபோக்கியங்களை எல்லாம் பிரத்தியட்சமாகக் கொடு க்கும் திறம் எனக்குக் கொடுத்தருள். ஏகநாயகனே! நீ இந்தலிங்கத்தில் இனிது வீற்றிருந்து, வந்து தரிசனம் செய்பவர்களுக் கெல்லாம் இகபர சுகம் கொடுத்தருள் என்று சொல்லுதலும், எம்பெருமான் திருவுளமகிழ் ந்து, பார்வதி தேவியின் ஒரு சத்தியைக்கொண்டு அந்த இரேணுகைக்குக் கொடுத்து, இந்தப் பூலோகத்திலே கலியுகத்தில் வாழும் மனிதர்கள் எண் ணியவரங்களை எண்ணியபடியே கொடுக்கவும், இழிகுலத்திற் பிறந்தவர் கள் வந்து அடுத்து வேண்டும் பொருள்களை விசேஷமாகக் கொடுக்கவும், கொடுத்தருளிப், பூங்கொடிபோலும் அழகுள்ளஅவளுக்குத்தெய்வத் திரு மேனிகொடுத்துப் பார்வதி தேவியாருடன் மறைந்தருளினார். இயற்கை மணத்துடன் நீண்டிருக்கும் கூந்தலையுடைய இரேணுகை அப்பொழுதே பூலோகத்திற்குக் கண்கண்ட தெய்வம் ஆனாள். செவிகளிலே சர்ப்ப குண்டலம் தரித்துக், கைகளிலே கேடகமும், வாளாயுதமும் ஏந்தினவளா கிப், போதராஜன் முதலான பலகணங்கள் இருபுடையும் சூழ்ந்துவர, வேதவேதியர் வாழ்த்தொலி பரவும் காஞ்சிமாநகரத்திற்கு வந்து சேர்ந்து, அவ்விடத்திலே தெய்வமாய்க் கோயில் கொண்டிருக் கின்றாள். பிரார்த் தனை செலுத்துகிறவர்கள் எண்ணியபடியெல்லாம் கொடுத்தருளும் இரே ணுகை யீச்சரத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய மகிமை யை அளவிட்டுச் சொல்ல வல்லவர்கள் யார்? அறிவுடையோரால் மதிக்கப் படும் இந்தஸ்தல சரித்திரத்தைக்கற்றுப் பிறருக்கு விளங்க எடுத் துச் சொல்லுகின்றவர்களை அந்த இரேணுகாதேவி இடையூறு செய்யா மல் காத்தருளுவாள்.

இரேணுகேசன் இணையடி போற்றி.

---

நாற்பதாவது.

## யோகாசாரியர்தளிப் படலம்.

சற்குணனந்தத்தபசிகளே! பெருவெள்ளந் தாங்கிய சடைமுடியுடைய சிவபெருமான், பார்வதி தேவியுடன் கலந்துவாழ்ந்தருளும் இரேணுகை யீச்சரம் என்னும் தலமகிமைசொன்னோம். இனி மேற்சொல்லிய பரசிரா மீசத்தின் தென்பக்கத்தில் யோகாசாரியர் பூசித்துப் பேறுபெற்ற பல தலங்களின் பெருமை சொல்வோம் கேளுங்கள் என்று, சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

சுவேதன், சுவேதகேது, பிறவித்துயரை அறவீசிய சுவேதசிகன் சுவேதாச்சுவன், மாசில்லாத புகழ்பெற்றோங்கும் சுவேத லோகிதன், சாதனமாகத் திருவெண்ணீறணிந்து விளங்கும் துந்துமிமுதல் மெய்த் தப சிகளாகிய இலகுளீசன் ஈறுனவர்களும் மற்றும் எண்ணிறந்தவர்களும் உலகமெல்லாம் பரவிய சிறப்படைந்த யோகசாரியர்களாய்ச் சிவபெ ருமான் கூறுகத்தோன்றினவர்கள். யோகாசாரியர்களாகிய இவர்கள் தங் கள் தங்கள் மேலானபதவிகளை அடையவும் அஞ்ஞானங் காரணமாக வரும்வினை அணுகாத முத்தி உலகத்தில் வாழவும் நினைத்து அண்டக டாகத்தை அளாவும்படி ஓங்கிய கைலாசகிரியில் அருந்தவம் செய்து கொண்டிருக்கும்போது, ஏகநாயகனாகிய சிவபெருமான் அவர்களுக்குப் பிரத்தியட்சமாகி, யோகிகளே! நீங்கள் காஞ்சிமாநகரத்தைச் சேர்ந்து ஒருமாவடியில் வீற்றிருக்கும் எமது பாதங்களை வாழ்த்தி, அவ்விடத்தி லே தனித் தனி இலிங்கப்பிரதிஷ்டை பண்ணிப்பூசித்து, மருள் தீர்ந் திமாதவம் செய்துகொண்டிருங்கள். அவ்விடத்தில் உங்கள் எண்ணம் ஈடேறச்செய்கின்றோம், என்று திருவாய் மலர்ந்தருளினர். அதைக்கே ட்டு அவர்கள் கைகூப்பித்தொழுது துதிசெய்து, எம்பெருமானிடத் தில் விடைபெற்று மீண்டு, தொழில் முற்றிய ஆபரணங்களை அணிந்தி ருக்கும் பேரழகுடைய மாதர்கள் தங்கள் கணவருடன் ஊடிய ஊட லில் அறுத்தெறிந்த முத்துகள் சந்திரகிரணம் வீசி இருளை உண்டு ஒழி க்க நெடிய தேரோடும் வீதிகளால் விளங்குகின்ற காஞ்சிமாநகரத்தை ச்சேர்ந்து, இசைபாடும் வண்டுகள் பாய்வதனல் அரும்பு அவிழ்ந்து இனிய தேன் சொரியும் செந்தாமரைகளையும் தெளிந்த நீரையும் உடை யசிவகங்கையிலே நீராடித்துன்பமெல்லாம் தொலைத்தருளும் ஒரு மாவ டியில் வீற்றிருக்கின்ற ஏகாம்பரநாதரை வணங்கிவாழ்த்தி, வேதவிதிப்

படி. வெவ்வேறாக இலிங்கப்பிரதிஷ்டை பண்ணினார்கள். முன்பு ஒரு காலம் அவ்விடத்தில் சிவபெருமானை வந்தனைவழிபாடுசெய்து, முந்நூற்றைம்பத்தைந்து பெயர் யோகாசாரியர் ஆகி முத்தியைத் தங்கள் பதவியாகப் பெற்றார்கள். அவர்களைப்போல் இவர்களும் எம்பெருமானைத் தங்கள் தங்கள் பெயரால் ஸ்தாபித்துப் பூசைசெய்து புகழ்ந்து, நீலகண்டப்பெருமான் திருவருளால் யுகங்கள் மாறினும் மாறாதோங்கும் புகழ்பெற்ற யோகாசாரியர்களாகி அகண்ட பரிபூரணானந்த முத்திபெற்றார்கள். அவ்விடத்திலே அந்த யோகாசாரியர்கள் மகிழ்ந்து போற்றிய எம்பெருமான் வீற்றிருக்கும் பல தலங்களும் தரிசனம் செய்யப்பெற்றவர்கள் எல்லாருக்கும் எளிதில் பரமானந்த போகவீடு கொடுக்கும். பாசத்தை வென்றருளும் இந்தத்தலங்கள் எல்லாம் பரசிராமீசத்தின் தென்றிசை தொடங்கிச் சர்வ தீர்த்தத்தின் வடதிசை வரையில் சுவேதலிங்கம்முதல் இலகுளீச லிங்கம் ஈறாகத் தொடர்ந்திருக்கும் இந்தத்தலங்கள் எல்லாவற்றுள்ளும் இலகுளீசம் என்னும் தலம்மேலானதாகச்சொல்லப்படும்.

யோகாசாரியர் தளியீசன் உபயத்தாள்போற்றி.

---

நாற்பத்தோராவது

## சர்வதீர்த்தப் படலம்.

சின்மயானந்தச் செல்வர்களே! அஞ்ஞானத்தால் உண்டாகும்கொடிய பிறவிகளைப்போக்கி முத்திகொடுத்தருளும் சுவேதேச்சரம் முதல் இலகுளீசம் ஈறாக விமலஞானானந்த போகாநுபவர்களான யோகாசாரியர்கள் பூசித்துப் பேறுபெற்ற பல தலங்களின் பெருமைசொன்னோம். இப்பால் வாசனை அடர்ந்த மலர்கள்மேலே பூத்திருக்கும் வளமான நீராடப்பெற்றவர்களுடைய பிறவித்துன்பத்தை நீக்கிப் பேரின்ப வீடுகொடுக்கும் தன்மையுள்ள சர்வதீர்த்தக்கரையில் விளங்கும் சிவாலயங்களின் மகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமா முனிவர் சொல்லத் தொடங்கினார்.

## காமீசம்.

குடம்போல் பருத்திருக்கும் சங்குகள் வருந்தி ஈன்ற முத்துகள் சந்திரகிரணம் வீசிச் சூழ்ந்திருக்கும் இருளை ஓட்டும்படி துறைகளில் எல்லாம் அந்த முத்துகளை அடுத்தடுத்து ஓங்கிவரும் அலைகளால் ஒதுங்கச்செய்யும் தெண்ணீர்முழங்கும் சர்வதீர்த்தக்கரையில் காமீசம் என்னும் தலம் ஒன்று இருக்கிறது, அதன்வரலாறு யாதெனில், பூர்வம் பாவையைப்படைத் துணையாகக் கொண்டு சென்று கரும்பை வில்லாகவளைத்து, முல்லை, அசோகு, முளரி, நீலம், சூதம் என்னும் பஞ்சபுஷ்பங்களைக் கொஞ்சமேனும் இரக்கமில்லாமல் பாணங்களாகத்தொடுத்து, நெருப்பில் பஞ்சுபட்டபாடு பட்டுக் கெட்டழிந்து போன மன்மதன் சிவபெருமான் திருவுளப்பாங்காக அனங்கன் எனத்தோன்றி அவர் சீர்பாதகமலங்களை வணங்கிவாழ்த்தி, எம்பெருமானே! அடியேன் புத்திரசந்தான விர்த்திக்கு ஏதுவாகி, ஆன்மாக்களுக்குப் போகம் அளித்து, என்பத்தினியாகிய இரதிக்கு இனிய மணவாளனுய்த் தானம் கொடுப்பவர்கள் வாங்குகிறவர்கள் மனதில் தங்கிக்கொடுத்தல் வாங்கல் செய்து, என் அதிகாரத்தை மூன்றுலகங்களிலும் செலுத்தும் பேறு கொடுத்தருளவேண்டும் என்று விண்ணப்பம் செய்யக்கேட்டு, எம்பெருமான் அவனைப்பார்த்து, காமனே! எமக்குப்பிரியமான தலம்காஞ்சித்தலம். நீ அதைச்சேர்ந்து எம்மை வந்தனை வழிபாடு செய்து அவ்விடத்தில் இவ்வரங்களைப் பெற்றுக்கொள். என்று சொல்லுதலும் அந்தக்காமன் விரைந்து காஞ்சிமாநகரத்திற்குவந்து, சர்வதீர்த்தத்தின் அலைவீசும் கரையில் இடையறுதோங்கும் பேரன்புடன் காமீசனை ஸ்தாபித்து விதிப்படி பூசைசெய்து, பூரணசந்திரனைப் போன்ற முகத்தையும் மெல்லிய தோள்களையும் சோதிமயமான ஆபரணங்களையும் உடைய பார்வதி தேவியை இடப்பாகத்திற் கொண்டிருக்கும் எம்பெருமானுடைய கடாக்ஷம் பெற்றுத் தன்மனதில் விரும்பியபடி எல்லாம் அடைந்து, உயிர்கள் யாவும் உற்பத்தி ஆவதற்குக்காரணமாகித் தானங்கொடுப்பவனும் கொள்பவனும் தானேயாய், மூன்றுலகத்தையும்தன் ஆணைக்கு உட்படுத்தும் ஆண்மை அடைந்து இரதிதேவியுடன் அகமகிழ்ந்திருந்தான். ஆதலின் பிராமணர்கள் கோதானம், பூதானம்முதலிய சோடசதானங்களை வாங்கும்போது தங்கள்மனதில் அந்தமன்மதனை நினைத்து வாங்குவார்களாயின், தாங்கள் வாங்கும் தானத்தால் யாதொரு பீடையும் அடையாமல் கடைத்தேறுவார்கள். தன்னைப்பூசித்துப் புகழ்வோருடைய இஷ்டகாமியார்த்தங்களைக் கொடுத்தருளும் காமீசம் என்னும் தலம் வந்தவாறு சொன்னோம்.

காமீசன் கனைகழல் போற்றி.

## தீர்த்தீசம்.

செவியில் அணிந்திருக்கும் குண்டலங்களைத் தாக்கும் வெண்மை கருமை, செம்மை, அகலம், நீளம், ஒளி என்னும் அறுவகை இலக்கணங்களில் குறைவில்லாமல் நிறை பெருங்கருணை குடிகொண்டிருக்கும் கண்களையும் செம்பவள வாயையும் உடைய காமாட்சி தேவி பயந்து நயந்து தன்னைத் தழுவிக்கொள்ளும் பொருட்டு வேதவடிவாய் விளங்கும் ஒருமாவடியில் வீற்றிருக்கின்ற ஏகாம்பரநாதர், தீர்த்தங்கள் எல்லாவற்றையும் வருக என்று அழைத்த நாள் தீர்த்தராஜனாகிய வருணனுடன் ஒருபெரிய நதிவடிவங்கொண்டு அண்டரண்ட பகிரண்டங்களின் உள்ளும் புறமும் கலந்துகிடக்கும் தீர்த்தங்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து காஞ்சிமாநகரத்திற்கு மேற்கேவந்து, எம்பெருமாட்டி ஒப்பில்லாதோங்கும் ஒருமாவடியில் சிறந்துவிளங்கும் ஏகாம்பரநாதனை விரைந்து தழுவிக்கொண்டதனால் வேகந்தணிந்து பெருவெள்ளமாய் ஓடிவருவதைவிட்டுச் சுருங்கி அடங்கி அவ்விடத்திலே சந்திர சேகரனாகிய சிவபெருமானைத் தீர்த்தராஜன் என்னும் பெயரால் பிரதிஷ்டை பண்ணிப் பார்வதிதேவியையும் பரிந்து பூசைசெய்கையில், எம்பெருமான் காட்சிகொடுத்தருளித்தீர்த்தங்காள்! இந்நாள்முதல் உங்களிடத்தில்வந்து நீராடி, முனிவர்களுக்கும், தேவர்களுக்கும், தென்புலத்தார்களுக்கும் உரிய நீர்க்கடன் முதலியகடன்களைக்கொடுத்துப் புண்ணியவழியில் கஷ்டப்பட்டுத்தேடியபொருளைப் புண்ணியாத்துமாக்களுக்கும் ஏழை எளியவர்களுக்கும் தான தருமங்களைச்செய்து இவ்விடத்தில் எம்மைக்கண்டு சேவிக்கின்றவர்களை முத்தியின்பத்துடன் கலந்திருக்கச்செய்வோம். இதல்லாமல்இன்னமும் சொல்லக்கேளுங்கள் என்று பெருங்கருணை கூர்ந்து ஒப்புயர்வில்லாத பெருமாட்டி தன்னை மார்பாரத்தழுவிக்கொள்ளச் செய்ததனால், அந்த உபகாரத்திற்கு ஈடாகப்பிரதி உபகாரம்செய்பவனைப்போல் பொன்னிறமாகவிளங்கும் சடைமுடி யுடைய சிவபெருமான் பலதீர்த்தங்களுக்கும் இதைச்சொல்லுகின்றார். புண்ணியதீர்த்தங்களே! பந்தபாசமாகிய பகைவனைக் கொலைசெய்யுந் திறமுள்ள உங்களிடத்தில் வந்து நீராடி, எம்மைக்கண்டு தொழப்பெற்றவர்களுக்குக் கொலைத் தொழில் எல்லாவற்றிலும் மிகக்கொடுமையான பிராமணக்கொலை, வலியவீரரை வதைசெய்யுங்கொலை, சிசுக்கொலை, தாய்க்கொலை, தந்தைக்கொலை,கோக்கொலை முதலானமற்றும் கொலைப்பாதகமெல்லாம்தொலைந்துபோய்விடும். காற்றினால் முரிந்து மடியும் தெண்ணீரை யுடைய உங்களிடத்தில் ஒருமுறைநீராடிப்புகழ்பெற்றோங்கும்திருவேகம்பம்என்னும்எமது ஆலயத்தைத் தரிசிக்கப்பெற்றவர்கள் பெறுதற்கரிய மானிடதேகத்தைப்பெற்றதனால்

பெறும்பேறு ஆகியஅறம், பொருள், இன்பம், வீடு என்னும்நான்குபயனை யும் பெறுவர். மறுபடியும் தாய்வயிற்றில் ஜனிக்கமாட்டார்கள். எமது அருள்மயமான கர்ப்பத்திலே எப்போதும் இனிதுவாழ்ந்திருப்பார்கள். என்று இவ்வாறு சொல்லி விட்டுத் தீர்த்தநாயகனுகிய சிவபெருமான் அந்தத்தீர்த்தீசலிங்கத்தில்மறைந்தருளினுர். அந்தநாள்முதல் அவ்விடத் தில்சிறந்து விளங்கும் சர்வதீர்த்தத்தில் நீராடித் திருவேகம்பத்திற்குச் சென்று எம்பெருமானைக்கண்டு தொழுகின்றவர்கள் கலிதீர்ந்து களித்து வாழ்வார்கள். சர்வதீர்த்த நீராடப் பெற்றமையால் பிரகலாதன் தன்பிதா வாகிய இரணியனைக்கொன்ற பாவத்தை ஒழித்தான். விபீஷணன். தன் தமயன்மாராகிய இராவணன், கும்பகர்ணன் முதலாயினேரைக் கொல் வித்த பாவத்தை ஒழித்தான். பராக்கிரமசாலியான பரசிராமன் வீரர்க ளைக்கொன்ற பாவத்தை ஒழித்தான். அருச்சுனன் துரோணசாரி முத லான பெரியோர்களைக்கொன்ற பாவத்தைப்போக்கினன். அசுவத்தாமன் சிசுக்களைக்கொன்ற பாவத்தைத்தீர்த்தான். உலகத்தி லின்னும் அநேகர் சர்வதீர்த்த நீராடித் தீராக்கொலை முதலிய பாவங்களைப் போக்கினவர்கள். வில்போல் வளைந்திருக்கும் புருவங்களையுடைய மாதர் ஆடவர்கள் இந்த க்காலத்திலும் அந்த நீரில்முழுகுவாரானுல், அவர்கள்செய்தகொலைமுதலா னகொடும் பாவங்களிலிருந்து நீங்குவார்கள். இது இடையருமல் முழங்கும் கடல் என்று எண்ணி நீர் உண்ணவரும் மேகங்கள் அங்கங்கே வாய்வைத் து உறிஞ்சும் நீர்வளமுள்ள சர்வதீர்த்தத்தின் பெருமையை அளவிட்டுச் சொல்ல வல்லவர் யார்?

தீர்த்தீசன் திருவடிபோற்றி.

---

## வருணீசம்.

மேலும் அந்தச் சர்வதீர்த்தக் கரையின் கிழக்கில் வருணன் எம்பெரு மானைக் கங்காதேவியுடன் ஸ்தாபித்துத் தொழுது துதிசெய்து சலசரங்க ளுக்கும் சலத்திற்கும் தலைவனுகும் பதவி பெற்றுன். அதன் பெயர் கங்காவரம் என்று விளங்கும்.

வருணீசன் மலரடி போற்றி.

---

## விசுவநாதம்.

இந்த விசுவநாதம் என்னும் தலம் பரசுபாணியாகிய எமது பரம பிதாவின் கருணைக் கடல் போல் பரிபூரணமாய் நிறைந்து எங்கும் பெய ர்பெற்றேங்கும் குளிர்ந்த நீரை யுடைய சர்வதீர்த்தத்தின் மேற்கரையில் இருக்கின்றது.

விசாலமான இடத்தையுடைய இந்த உலகத்திலே சிவபெருமான் சிறந்து வாழ்ந்திருக்கும் தலங்கள் எல்லாம் காசி விசுவநாதனைக் கலந்து விளங்கும். அப்படிப்பட்ட மகிமையுள்ள காசிவிசுவநாதனும் இந்தக் காசியைப் பார்க்கிலும் காஞ்சியே எமக்கு மிகப் பிரியமானது என்று திருவுளம் புரிந்து, கைலாசகிரி, மந்தரமலை, திருக்கோகரணங், ஸ்ரீசைலம் முதலான பல தலங்களிலும் சிறந்து விளங்கும் காஞ்சிமா நகரத்தில் சர்வ தீர்த்தக் கரையின் மேற்பக்கத்தில் எழுந்தருளி யிருக்கின்றார். அவ்விடத்தில் எழுந்தருளியிருக்கின்ற காசிவிசுவநாதனைக்கண்டுதொழுது, முத்தி மண்டபத்தைத்தரிசிக்கின்றவர்கள் முத்திக்கு உரியர் ஆவர். யுகமுடிவிலும் முடியாதோங்கும் காஞ்சிமாநகரத்திலே மூன்றுமுத்தி மண்டபங்கள் உண்டு. அவற்றுள் ஒருமுத்திமண்டபம்முத்தீச்சரத்தின் எதிரில் உள்ளது. ஒருமுத்தி மண்டபம் சர்வ தீர்த்தக் கரையிலுள்ளது. இந்தமுத்திமண்டபங்கள் தம்மைத்தரிசித்தவர்கள் எல்லாருக்கும் எளிதில்முத்தியின்பம் கொடுக்கும். செந்தாமரை மலர்கள் மலர்ந்திருக்கும் சிவகங்கைக்குத் தெற்கில் திருவிராமீசத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமான் சந்நிதானத்திற்கு எதிரிலே, இருவினைகாரணமாகவரும் பிறவித்துன்பத்திற்குப் பயந்துவந்து அடுத்தவர்களுக்குப் பேரின்பந்தரும் முத்தி மண்டபம் ஒன்று உண்டு. இந்த முத்திமண்டபங்கள் மூன்றையும் விடியற்காலத்தில் நித்திரை விட்டெழுந்துநேசங்கொண்டு மனமார நினைக்கின்றவர்கள் தங்கள் மனமெல்லாம் கொள்ளை கொண்டோடும் பழவினை வலியையும் மும்மல வலியையும் கடந்து பரமானந்தக் கடலில் பரம சந்தோஷத்துடன் படிந்து வாழ்வார்கள்.

விசுவநாதேசன் மென்றாள் போற்றி.

சர்வதீர்த்தக் கரைநாதர் சரணமே சரணம்.

---

நாற்பத் திரண்டாவது

## நவக்கிரகீசப் படலம்.

தத்துவக்கியானிகளே! இடையறாமல் முழங்கும் கடல்போல் விளங்கும் சர்வதீர்த்தக்கரையினிடத்துத் தன்கைமேல் ஒருமான் ஏந்தியபெருமான் சிறந்துவீற்றிருக்கும் காமீசம் முதலான தலங்களின் மகிமை சொன்னேம். இனிவாயுபகவானும் நவக்கிரகங்களும் பூசித்துப் பேறுபெற்ற தலங்களின் பெருமைசொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

தலைமாலை தரித்திருக்கும் வயிரவமூர்த்தி புஜபல பராக்கிரமசாலியான அந்தகாசுரனைத் தன் சூலாயுதத்திலிருந்து விடுவித்தநாள் அதனால் உண்டாக்கப்பட்ட சூலதீர்த்தம் இந்தப்பூமியில்சிறந்துவிளங்கும், அமாவாசை முதலிய புண்ணியகாலங்களில் அந்தத்தீர்த்த நீராடித்தென்புலத்தார் கடனைச்செலுத்தினால், அவர்கள் சுவர்க்கம் அடைந்து சுகானந்தபோகம் பெறுவார்கள். பூர்வம் வாயுபகவான் அந்தச்சூல தீர்த்தக்கரையில் சிவலிங்கப்பிரதிஷ்டை பண்ணிப் பனிநீரால் அபிஷேகம் செய்து, சுகந்தபரிமளமுள்ள செவ்வந்தி (சாமந்தி) மலர் பலகொண்டு, வினைதீரப் பூசைபுரிந்து கந்தவாகனன் என்று சொல்லப்பதம் பெற்றான். இவ்வண்ணம் வாயுபகவான் பூசித்துப் பேறுபெற்ற செவ்வந்தீச்சரத்திற்கு வடமேற்கான திருநகரத்தில் ஆயிரங்கிரணனாகிய சூரியபகவான் தன் பெயரால்விளங்கும் பரிதிக்குளம் உண்டாக்கிப் பிறவிப் பிணிதீர்த்துப் பேரின்பவீடுகொடுக்கும் அந்தத்தீர்த்தத்தால் அபிஷேகம் செய்து, அசுரர்புரங்களை அழித்து அமரர்களுக்குப்பெருவாழ்வு கொடுத்தருளிய பெருஞ்சோதியைத்தொழுது வேண்டும் வரம்பெற்றான்.

சூழ்ந்திருக்கும் இருளை அழித்துப் பால்போலும் நிலாக்கிரணங்களைப் பரவச்செய்து, பலவிதமான பயிர்களை வளர்க்கும் சந்திரனைவன் இனியதாமரை அரும்பு அவிழ்ந்து மலர்ந்திருக்கும் சர்வ தீர்த்தத்தின் தென்திசையில் அமுத தீர்த்தம் என்று ஒரு தீர்த்தம் உண்டாக்கி, அந்தத் தீர்த்தக்கரைமேல் தன்பெயரால் சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணி. விதிப்படி பூசித்து வேண்டும் வரம் பெற்றான். சிவானந்த போகம் தந்தருளும் செவ்வந்தீச்சரத்திற்குக் கிழக்கில், செவ்வாயும், புதனும், வியாழமும், வெள்ளியும், சனியும் இராகு, கேதுக்களும் ஆகிய இவர்கள் தனித்தனியே இலிங்கப் பிரதிஷ்டைசெய்து பூசித்துச் சிவாநுக்கிரகத்தால் நவக்கிரக நிலைபெற்றார்கள்.

செவ்வந்தீசர் திருவடிபோற்றி.
நவக்கிரகேசன் நற்றாள்போற்றி.

---

நாற்பத்துமூன்றாவது

## பிறவாத்தானப்படலம்.

சிவபுராணச்சிரவணனந்தச் செல்வர்களே! வாயுபகவானுடன் நவக்கிரகங்களும் பூசைசெய்து பேறு பெற்ற தலங்களின் மகிமை சொன்னோம். இப்பால் சிவபெருமானைச் செவ்வாய் முதலானவர்கள் விளக்கமு

றப்பூசித்துப் பேறு பெற்ற ஸ்தலங்களில் சிறந்து விளங்கும் பிறவாத்தானம் என்னும் தலமகிமை சொல்வோம். கேளுங்கள் என்று சூதமா முனிவர்சொல்லத்தொடங்கினர்.

தேன்முகம்பிலிற்றும்பைந்தாட்செய்யபங்கயத்தின்மேவும்
நான்முகத்தேவே நின்னுடைட்டியவகிலமாயை
கான்முயற்கொம்பேயென்கோகானலம்புனலேயென்கோ
வான்முகமுளரியென்கோ மற்றென்கோவகுத்தல்வேண்டும்.

என்றபடி விளங்கும் இந்திரசாலப் பிரபஞ்சத்தில் வாமதேவன் என்னும் மகாரிஷி தன் தாய் வயிற்றில் இருக்கும்போதே,

பிணிகளுங்கவலையும் பேசினேழ்கடல்
அணைதருமணலினு மனந்த கோடியால்
இணைதருபிறவியினிடர்லாதொரு
கனமது மிலதெனக்கண்டு நொந்தனன்"

"பிறவியால் வருவனகேளே"

இறைகளோடிசைந்த வின்பமின்பத் தோடிசைந்த வாழ்வு
பறைகிழித்தனைய போர்வைபற்றி யானேக்கினேற்குத்
திறை கொணர்ந்தீண்டித்தேவர் செம்பொனும்மணியுந்தூவி
அறைகழலிறைஞ்சுமாரூரப்பனேயஞ்சினேனே. (க)

ஊன்மிசையுதிரக்குப்பை யொருபொருளிலாத மாய
மான்மறித்தனைய நோக்கமடந்தைமார் மதிக்குமிந்த
மானிடப் பிறவிவாழ்வுவாழ்வதோர் வாழ்வு வேண்டேன்
ஆனல் வெள்ளேற்ற வாரூரப்பனே யஞ்சினேனே. (உ)

அறுபதும் பத்து மெட்டுமாறி னேடஞ்சு நான்கும்
துறுபறித்தனைய நோக்கிச்சொல்விற்றென்றுகச்சொல்லார்
நறுமலர்ப்பூவுநீரும்நாடொறும் வணங்குவார்க்கு
அறிவினைக்கொடுக்கு மாரூரப்பனேயஞ்சினேனே. (ங)

சொல்விடலெல்லையில்லைச்சுவையிலாப்பேதைவாழ்வு
நல்லதோர் கூரைபுக்கு நலமிகவறிந்தேனல்லேன்
மல்லிகை மாடநீடு மருங்கொடுநெருங்கி யெங்கும்
அல்லி வண்டி யங்குமாரூரப்பனே யஞ்சினேனே (ச)

நரம்பினோடெலும்பு கட்டி நசையினோடிசைவொன்றில்லாக்
குரம்பைவாய்க்குடியிருந்து குலத்தினல் வாழமாட்டேன்
விரும்பியகமழும்புன்னை மாதவித்தொகுதியென்று
மரும்புவாய் மலருமாரூரப்பனே யஞ்சினேனே. (௫)

மணமென மகிழ்வர் முன்னேமக்கடாய் தந்தை சுற்றம்
பிணமெனச்சுடுவர் பேர்த்தே பிறவியை வேண்டேனுயேன்
பணையிடைச்சோலை தோறும் பைம்பொழில் விளாகத்தெங்க
ளணைவினைக்கொடுக்குமாரூரப்பனே யஞ்சினேனே. (௬)

தாழ்வெனுந்தன்மை விட்டுத்தனத்தையேமனத்தில்வைத்து
வாழ்வதேகருதித்தொண்டர்மறுமைக்கொன்றீயகில்லா
ராழ்குழிப்பட்டபோது வலக்கணிலொருவர்க்காவ
ரியாழ்மூயன்றிருக்குமாரூரப்பனே யஞ்சினேனே. (௭)

உதிரநீரிறைச்சிக்குப்பையெடுத்தது மலக்குக்கைம்மேல்
வருவதோர் மாயக்கூரை வாழ்வதோர் வாழ்வுவேண்டேன்
கரியமாலயனுந்தேடிக்கழலிணை காணமாட்டா
வரியனுய் நின்றவாரூரப்பனே யஞ்சினேனே. (௮)

பொய்த்தன்மைத்தாயமாயப்போர்வையைமெய்யென்றெண்ணும்
வித்தகத்தாய வாழ்வுவேண்டிநான் விரும்பகில்லேன்
முத்தினைத்தொழுது நாளுமுடிகளால் வணங்குவார்க்கு
வத்தன்மைத்தாகுமாரூரப்பனே யஞ்சினேனே. (௯)

தஞ்சொலாரருள்பயக்குந் தமியனேன்றடமூலைக்க
ணஞ்சொலார்பயிலுமாரூரப்பனை யூரனஞ்சிச்
செஞ்சொலானயந்தபாடல் சிந்தியாவேத்தவல்லார்
நஞ்சுலாங்கண்டத்தெங்களத்தனை நணுகுவாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

என்று பரமஞானிகளும் பயப்படுவதற்கு ஏதுவான பிறவிக்குப் பயந்து மனங்கலங்கி, ஆதி அந்தம் இல்லாத ஆனந்தப் பெருஞ்சோதியாகியசிவபெருமானைத்தன் இதயாரவிந்தத்தினிடமாக எழுந்தருளவைத்துச் சகலலோக காரணா! சர்வஜீவதயாபரா! சர்வவியாபி! சர்வதத்துவாதிபதி! சர்வஞான சர்வவல்லபா! சம்பு! சதாசிவா! சகள நிஷ்கள சச்சிதானந்தா! பராபரா! பராசத்திபாகா! பரானந்தயோகா! பரமபதீ! பரமகருணாநிதீ! பரஞ்சோதீ! பரமேட்டீ! சுத்த சூன்யமான மாயாபிரபஞ்சத்திலே அடியேன் என்றும்பிறந்து எண்ணிறந்த துன்பங்களால் மதிமயங்கி, வாடிவரு

ந்தி மாண்டு மடிந்து, மேன்மேலும் இந்தப்பிரகாரமே சனனமரண சாகரத்திலே சுழன்று உழன்று தட்டுக்கெட்டுத் தத்தளித்துத் தடுமாறிப் பிறந்த இடமும் வளர்ந்த இடமும் இறந்த இடமும் தெரியாமல் மறைந்து போகாதபடி அநுக்கிரகம் செய்யவேண்டும். மகாதேவர்! என்று பேரன்புடன் துதிசெய்யும்போது எம்பெருமான் அவ்விடத்தில் அந்தமுனிவன் தம்மை நினைத்த வடிவத்துடன் தோன்றிச் சொல்லுகின்றார். அன்பனே! நீ அஞ்சாதே. பூலோகத்திலேபிறந்து காஞ்சிமாநகரத்தை அடைந்து எம்மைப் பூசைபண்ணு. பூசைசெய்தால் கொடிய பிறவித்தளை உன்னை அணுகமாட்டாது என்று சொல்லக்கேட்டு, மேன்மேலும் மனமகிழ்ந்து, கடல்சூழ்ந்த உலகத்தில்பிறந்து காஞ்சிமாநகரத்தை அடைந்துசிவலிங்கப் பிரதிஷ்டைபண்ணி, ஆகமவிதிப்படி பூசித்து, மனங்கலங்கித் தவிக்கச் செய்யும் பிறவித்துன்பத்திலிருந்து நீங்கிச் சிரஞ்சீவியாக வாழ்ந்திருக்கின்றான். அதனால் அந்தத்தலம் பிறவாத்தானம் என்று செல்லப்பட்டது. இந்தப்பிறவாத்தானம் என்னும் தலத்தை வந்தனைவழிபாடு செய்யப்பெற்வர்கள் மறுபடியும் தாய்வயிற்றில் பிறந்து அல்லற்சேற்றில் அகப்பட்டுச் சஞ்சலம் அடைந்து தவிக்காமல், பார்வதிபாகனான பரமசிவனுடைய திருவருள்பெற்றுச் சிறந்துவாழ்வார்கள். வாமதேவமுனிவன் பிறவாத்தானத்தில் பூசைசெய்து மறுபடியும் பிறவாவரம்பெற்றுக் கைலாசகிரிக்குப் போய்எம்பெருமானுடைய சீர்பாதகமலங்களைத் தாழ்ந்து பணிந்து எழுந்து, அவர்கொடுத்தருளிய இலிங்கத்தைக் கையில் ஏந்திக்கொண்டுசீர்வளத்தாற்சேறுபட்டிருக்கும் வயல்கள்சூழ்ந்த காஞ்சிமாநகரத்தை மீண்டு அடைந்து, மகிமைபெற்றோங்கும் பிறவாத்தானத்திற்கு மேற்கில் உள்ள ஞானதீர்த்தத்தின் பக்கத்தில் முத்தீசன் என்னும் திருநாமத்துடன் முத்தித்தளியில் ஸ்தாபித்து மனமகிழ்ந்து பூசைசெய்து வாழ்த்திக்கொண்டிருந்தான். அந்த முத்தித்தலம் ஆனது வராகதந்தம் அணிந்திருப்பவராகிய சிவபெருமானுக்கு மிகப்பிரீதியானதாம்.

முத்தீசன் முளரித்தாள் போற்றி.

பிறவாத்தானத்-தறவோன்பாதம்
மறவாதாரொம்-உறவாவாரே.

---

நாற்பத்தினன்காவது

# இறவாத்தானப்படலம்.

போதானந்தப் புண்ணிய முனிவர்களே! புள்ளிவண்டுகள் பெண்வண்டுகளுடன் கலந்து புஷ்ப சயனத்திலே பள்ளிகொண்டிருக்கும் பிறவாத்தானம் என்னும் தலத்தின் பெருமைசொன்னோம். இனி வாளைமீன்கள் துள்ளிப்பாயும் நீர்வளமுள்ள இந்தப் பிறவாத்தானத்தின் பக்கத்தில் சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் இறவாத்தானம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

திருச்சிற்றம்பலம்.

படைகொள்கூற்றம்வந்துமெய்ப்பாசம்விட்டபோதின்கண்
இடைகொள்வாரெமக்கிலையெழுகபோதுநெஞ்சமே
குடைகொள்வேந்தன்மூதாதைகுழகன்கோவலூர்தனுள்
விடையதேறுங்கொடியினன்வீரட்டானஞ்சேர்துமே. (க)

கரவலாளர்தம்மனைக்கடைகடோறுங்கானிமிர்த்
திரவலாழிநெஞ்சமேயினியதெய்தவேண்டினீர்
குரவமேறிவண்டினங்குழலோடியாழ்செய்கோவலூர்
விரவிநாறுகொன்றையான்வீரட்டானஞ்சேர்துமே. (உ)

உள்ளத்தீரேபோதுமின்னுறுதியாவதறிதிரேல்
அள்ளற்சேற்றிற்காலிட்டங்கவலத்துள்ளழுந்தாதே
கொள்ளப்பாடுகீதத்தான்குழகன்கோவலூர்தனில்
வெள்ளந்தாங்குசடையினன்வீரட்டானஞ்சேர்துமே. (ங)

கனைகொளிருமல்சூலைநோய்கம்பதாளிகுன்மமும்
இனையபலவுமூப்பினோடெய்திவந்துநலியாமுன்
பனைகளுலவுபைம்பொழிற்பழனஞ்சூழ்ந்தகோவலூர்
வினையைவென்றவேடத்தான்வீரட்டானஞ்சேர்துமே. (ச)

உளங்கொள்போகமுய்த்திடாருடம்பிழந்தபோதின்கட்
குளங்கினின்றுநாடொறுந்துயரலாழிநெஞ்சமே
வளங்கொள்பெண்ணைவந்துலாவயற்கள்சூழ்ந்தகோவலூர்
விளங்குகோவணத்தினன்வீரட்டானஞ்சேர்துமே. (ரு)

கேடுமூப்புச்சாக்காடுகெழுமிவந்துநாடோறு
மாடுபோனைகளாயாக்கைபோக்கதன்றியுங்
கூடிநின்றுபைம்பொழிற்குழகன்கோவலூர்தனுள்
வீடுகாட்டுநெறியினான்வீரட்டானஞ்சேர்துமே. (௬)

உரையும்பாட்டுந்தளர்வெய்தியுடம்புமூத்தபோதின்கண்
நரையுந்திரையுங்கண்டெள்கிநகுவர்நமர்களாதலால்
வரைகொள்பெண்ணைவந்துலாவயல்கள்சூழ்ந்தகோவலூர்
விரைகொள்சேர்வெண்ணீற்றினான்வீரட்டானஞ்சேர்துமே (௭)

ஏதமிக்கமூப்பினோடிருமலீளையென்றிவை
ஊதலாக்கையோம்புவீருறுதியாவதறிதிரேற்
போதில்வண்டுபண்செயும்பூந்தண்கோவலூர்தனில்
வேதமோதுநெறியினான்வீரட்டானஞ்சேர்துமே. (௮)

ஆறுபட்டபுன்சடையழகனாயிழைக்கொரு
கூறுபட்டமேனியான்குழகன்கோவலூர்தனில்
நீறுபட்டகோலத்தானீலகண்டனிருவர்க்கும்
வேறுபட்டசிந்தையான்வீரட்டானஞ்சேர்துமே. (௯)

குறிகொளாழிநெஞ்சமேகூறைதுவரிட்டார்களும்
அறிவிலாதவமணர்சொல்லவத்தமாவதறிதிரேற்
பொறிகொள்வண்டுபண்செயும்பூந்தண்கோவலூர்தனில்
வெறிகொள்கங்கைதாங்கினான்வீரட்டானஞ்சேர்துமே. (௧௦)

கழியோடுலவுகானல்சூழ்காழிஞானசம்பந்தன்
பழிக்கிடரச்சொன்னசொற்பாவநாசமாதலால்
அழிவிலீர்கொண்டேத்துமினந்தண்கோவலூர்தனில்
விழிகொள்பூதப்படையினான்வீரட்டானஞ்சேர்துமே. (௧௧)

கொல்லத்தானமனார்தமர்வந்தக்கால்
இல்லத்தார்செயலாவதென்னேழைகாள்
நல்லத்தானமைளுடையான்கழல்
சொல்லத்தான்வல்விரேற்றுயர்தீருமே.

இன்றுளார்நாளையில்லையெனும்பொருள்
ஒன்றுமோராதுழிதருமூமர்காள்
அன்றுவானவர்க்காகிவிடமுண்ட
கண்டனார்காட்டுப்பள்ளிகண்டுய்ம்மினே.

காலபாசம்பிடித்தெழுதூதுவர்
பாலகர்விருத்தர்பழையாரெனார்
ஆலநீழலமர்ந்தவாட்போக்கியார்
பாலதாயினார்பாவம்பறையுமே.

மத்தயானையேறிமன்னர்சூழவருவீர்காள்
செத்தபோதிலியாருமில்லைச்சிந்தையுள்வைம்மின்கள்
வைத்தவுள்ளமாற்றவேண்டாவம்மின்மனத்தீரோ
அத்தர்கோயிலெதிர்கொள்பாடியென்பதடைவோமே.

நடுவிலாக்காலன்வந்துநலியும்போதறியவொண்ணா
அடுவனவைந்துபூதமவைதனக்காற்றலாகேன்
படுவனபலவுங்குற்றம்பாங்கிலாமனிதர்வாழ்க்கை
கெடுவதிப்பிறவிசீசீகிளரொளிச்சடையினீரோ.

ஒருமுழமுள்ளகுட்டமொன்பதுதுறையுடைத்தாய்
அரைமுழமதனகலமதனுள்வாழ்முதலையைந்து
பெருமுழைவாய்தல்பற்றிக்கிடந்துநான்பிதற்றுகின்றேன்
கருமுகில்தவழுமாடக்கச்சியேகம்பனீரோ.

நாட்டுக்குநாயகனம்மூர்த்தலைமகன்
காட்டுச்சிவிகையொன்றேறிக்கடைமுறை
நாட்டார்கள்பின்செல்லமுன்னேபறைகொட்ட
நாட்டுக்குநம்பிநடக்கின்றவாறே.

---

க்ஷேத்திரத்திருவெண்பா

ஓடுகின்றநீர்மையொழிதலுமேயுற்றாருங்
கோடுகின்றார்மூப்புங்குறுகிற்று—நாடுகின்ற
நல்லச்சிற்றம்பலமேநண்ணாமுனன்னெஞ்சே
தில்லைச்சிற்றம்பலமேசேர். (க)

கடுவடுத்தநீர்கொடுவாகாடிதாவென்று
நடுநடுத்துநாவடங்காமுன்னம்-பொடியடுத்த
பாழ்க்கோட்டஞ்சேராமுன்பன்மாடத்தென்குடந்தைக்
கீழ்க்கோட்டஞ்செப்பிக்கிட (உ)

குந்திநடந் துகுனிந்தொருகைகோலூன்றி
நொந்திருமியேங்கிநுரைத்தேறி-வந்துந்தி
ஐயாறுவாயா றுபாயாமுனெஞ்சமே
ஐயாறுவாயாலழை. (௩)

காளைவடிவொழிந் துகையுறவோடையுறவாய்
நாளுமணுகிநலியாமுன்-பாளை
அவிழ்க்முகம்பூஞ்சோலையாரூற்காளாய்க்
கவிழ்கமுகங்கூம்புகவென்கை.

வஞ்சியனநுண்ணிடையார்வாட்டடங்கணீர்சோரக்
குஞ்சிகுறங்கின்மேற்கொண்டிருந்து-கஞ்சி
அருத்தொருத்திகொண்டுவாவென்னுமுனெஞ்சே
திருத்துருத்தியான்பாதஞ்சேர். (௫)

காலக்கரையிழையாற்கட்டித்தாங்கையார்த்து
மாலைதலைக்கணிந்துமையெழுதி-மேலோர்
பருக்கோடிமூடிப்பலரழாமுன்னந்
திருக்கோடிகாவடைநீசென்று. (௬)

மாண்டுவாயங்காவாமுன்னமடநெஞ்சே
வேண்டுவாயாகில்விரைந்தொல்லைப்-பாண்டவாய்த்
தென்னிடைவாய்மேயசிவனார்திருநாம
நின்னிடைவாய்வைத்துநினை. (௭)

தொட்டுத்தடவித்துடிப்பொன்றுங்காணாது
பெட்டப்பிணமென்றுபேரிட்டுக்-கட்டி
எடுங்களத்தாவென்னுமுனேழைமடநெஞ்சே
நெடுங்களத்தான்பாதநினை. (௮)

அழுகுதிரிகுரம்பையாங்கதுவிட்டாவி
ஒழுகும்பொழுதறியவொண்ணா-கழுகு
கழித்துண்டலையாமுன்காவிரியின்றென்பாற்
குழித்தண்டலையானைக்கூறு. (௯)

படிமுழுதும்வெண்குடைக்கீழ்ப்பாரொலாமாண்ட
முடியரசர்செல்வத்துமும்மை—கடியிலங்கு
தோடேந்துகொன்றையந்தார்ச்சோதிக்குத்தொண்டுபட்
டோடேந்தியுண்பதுறும். (௧௦)

குழீஇயிருந்தசுற்றங்குணங்கள்பாராட்ட
அழீஇயிருந்தவங்கங்களெல்லாந்—தழீஇயிருந்து
மென்ஞானக்காவாவிதுதகாவென்னுமுன்
தென்ஞானக்காவடைநீசென்று. (கக)

குயிலொத்திருள்குஞ்சிகொக்கொத்திருமல்
பயிலப்புகாமுன்னநெஞ்சே-மயிலைத்
திருப்புன்னையங்கானல்சிந்தியாயாகில்
இருப்பின்னையங்காந்திளைத்து. (கஉ)

காளையர்களிளையர்களாகிக்கருமயிரும்
பூளையெனப்பொங்கிப்பொலிவழிந்து-சூளையர்கள்
ஓகாளஞ்செய்யாமுன்னெஞ்சமேயுஞ்சேனை
மாகாளங்கைதொழுதுவாழ்த்து (கங)
இல்லும்பொருளுமிருந்தமனையளவே
சொல்லுமயலார்துடிப்பளவே-நல்ல
கிளைகுளத்துநீரளவேகிற்றியேநெஞ்சே
வளைகுளத்துளீசனையேவாழ்த்து. (கச)

அஞ்சனஞ்சேர்கண்ணாருவருக்குமப்பதமாய்க்
குஞ்சிவெளுத்துடலங்கோடாமுன்-னெஞ்சமே
போய்க்கர்டுகூடப்புலம்பாதுபூம்புகார்ச்
சாய்க்காடுகைதொழுநீசார்ந்து. (கரு)

இட்டகுடிநீரிருநாழியோருழக்காச்
சட்டவொருமுட்டைநெய்தான்கலந்-தட்ட
வருவாச்சாரென்றங்கழாமுன்னம்பாச்சிற்
றிருவாச்சிராமமேசேர். (கசு)

கழிந்ததுநென்னற்றுக்கட்டுவிட்டுநாறி
யொழிந்ததுடனிராவண்ண-மழிந்த
திராமலையாகொண்டுபோவென்னுமுன்னெஞ்சே
சிராமலையான்பாதமேசேர் (கஎ)

இழவாடிச்சுற்றத்தாரெல்லாருங்கூடி
விழவாடியாவிவிடாமுன்னம்-மழபாடி
யாண்டானையாரமுதையன்றயன்மால்காணமை
நீண்டானைநெஞ்சேநினை. (கஅ)

உள்ளிடத்தான்வல்லேயேநெஞ்சமேயூழ்வினைகள்
கள்ளிடத்தான்வந்துகலவாமுன்-கொள்ளிடத்தின்
றென்றிருவாய்ப்பாடியான்றெய்வமறைநான்கினையும்
தன்றிருவாய்ப்பாடியான்றாள். (கக)

என்னெஞ்சேயுன்னையிரந்துமுறைக்கின்றேன்
கன்னஞ்செய்வாயாகிற்காலத்தால்-வன்னெஞ்சேய்
மாகம்பத்தானையுரித்தானைவண்கச்சி
யேகம்பத்தானையிறைஞ்சு (உ0)

கரமூன்றிக்கண்ணிடுங்கிக்கால்குலையமற்றோர்
மரமூன்றிவாய்குதட்டாமுன்னம்—புரமூன்றும்
தீச்சரத்தாற்செற்றான்றிருப்பனந்தாட்டாடகைய
வீச்சரத்தான்பாதமேயேத்து. (உக)

தஞ்சாகமூவுலகுமாண்டுதலையளித்திட்
டெஞ்சாமைபெற்றிடினும்யான்வேண்டே—னஞ்சங்
கரந்துண்டகண்டர்தம்மொற்றியூர்பற்றி
இரந்துண்டிருக்கப்பெறின். (உஉ)

நூற்றனைத்தோர்பல்லூழிநுண்வயிரவெண்குடைக்கீழ்
வீற்றிருந்தசெல்வம்விழையாதே—கூற்றுதைத்தா
ஞடரவங்கச்சாவரைக்கசைத்தவம்மான்றன்
பாடரவங்கேட்டபகல். (உங)

உய்யுமருந்திதனையுண்மினெனவுற்றூர்
கையைப்பிடித்தெதிரேகாட்டியக்காற்—றைபய
வெழுந்திருமியான்வேணடேனென்றுமுனெஞ்சே
செழுந்திருமயானமேசேர். (உச)

திருச்சிற்றம்பலம்.

புல்லனந்தும்பொறிகலங்கிநெறிமயங்கியறிவழிந்திட்டைமேலுந்தி
அலமந்தபோதாகவஞ்சேலென்றருள்செய்வானமருங்கோயில்
வலம்வந்தமடவார்கணடமாடமுழவதிரமழையென்றஞ்சிச்
சிலமந்தியலமந்துமரமேறிமுகிலேனக்குந்திருவையாறே.

படிறுயினசொல்லிப்பாழூடலோம்பிப்பலகடைச்சென்
றிடறுதொழிதுமெழுநெஞ்சமேயெரியாடியெம்மான்
கடறுயினநஞ்சமுண்டபிரான்கழல்சேர்தல்கண்டா
யுடறுனுளபயனுவசொன்னேனிவ்வுலகினுள்ளே,

நீநாளுநன்னெஞ்சேநினைகண்டாயாரறிவார்
சாநாளும்வாழ்நாளுஞ்சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளுந்தலைசுமப்பப்புகழ்நாமஞ்செவிகேட்ப
நாநாளுநவின்றேத்தப்பெறலாமேநல்வினையே.

பொத்தையூன்சுவர்புழுப்பொதிந்துளுத்தசும்பொழுகியபொய்க்கூரை
இத்தைமெய்யெனக்கருதிநின்றிடர்க்கடற்சுழித்தலைப்படுவேனை
முத்துமாமணிமாணிக்கவயிரத்தபவளத்தின்முழுச்சோதி
அத்தனாண்டுதன்னடியரிற்கூட்டியவதிசயங்கண்டாமே.

கல்வாயகிலுங்கதிர்மாமணியுங்கலந்துந்திவருநிவவின்கரைமேல்
நெல்வாயிலரத்துறைநீடுறையுந்நிலவெண்மதிசூடியநின்மலனே
நல்வாயில்செய்தார்நடந்தாருடுத்தார்நரைத்தாரிறந்தாரென்றுநானிலத்திற்
சொல்லாய்க்கழிகின்றதறிந்தடியேன்றொடர்ந்தேனுய்யப்போவதோர்சூழல்
[சொல்லே.

புக்கிலமைந்தின்றுகொல்லோவுடம்பினுட்
டுச்சிலிருந்தவுயிர்க்கு.
நெருநலுளனொருவனின்றில்லையென்னும்
பெருமையுடைத்திவ்வுலகு.

இறப்பெனுமெய்ம்மையையிம்மையாவர்க்கும்
மறப்பெனுமதனின்மேற்கேடுமற்றுண்டோ
துறப்பெனுந்தெப்பமேதுணைசெயாவிடிற்
பிறப்பெனும்பெருங்கடற்பிழைக்கலாகுமோ.

என்று சிவஞானச் செல்வர்களாகிய ஜீவன் முத்தர்களும், சிவநேசச் செல்வர்களும், தெய்வப்புலமைத் திருவள்ளுவர் முதலானவர்களும் திருவாய் மலர்ந்தருளியபடி, சிலமுனிவர்கள் 'புலிஅடிக்குமுன் கிலிஅடிக்கும்' என்பதுபோல மரணம் வருவதற்கு முன் பயமடைந்து பூர்வம் முறைமையாக அருந்தவஞ்செய்து கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஒரு நாள் தாமரைப்பூவில் வீற்றிருக்கும் பிரமதேவன் அவர்களுக்குப் பிரசன்னமாகி, முனிவர்களே! உங்கள் விருப்பம் யாது? என்று கேட்க, அந்த முனிவர்கள் சகலலோகங்களையும் படைத்தருளும் எங்கள் பரமபிதாவே! அடியேங்களுக்கு உன்பாதமே அன்றி வேறுகதி இல்லை. நாங்கள் மரணத்தைப்பற்றித்திகில் அடைந்திருக்கின்றோம். அந்த மரணபயத்தை நீக்கிக் கொள்ள ஓர் உபாயங்கூறவேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். செம்ப

ளக்கால்களையுடைய அன்னவாகனனை பிரமதேவன் அவர்கள்பிரார்த்த னையைக்கேட்டுத் தேன்பெருகும் பூங்கொத்துகள் நிறைந்து வாசனை மலிந்திருக்கும் பூஞ்சோலை சூழ்ந்துவிளங்கும் காஞ்சிமாநகரத்தை அடைந்து, பார்வதிசமேதனுகிய சிவபெருமானுடைய சீர்பாதகமலங்களை வந்தனைவழிபாடுசெய்யின், அவ்விடத்தில் இந்தவரம்பெறலாம் என்றுசொல்லுதலும், அந்தமுனிவர்கள் பிரமதேவனுடைய பாதங்களைப் பணிந்து விடைபெற்று மீண்டு காஞ்சிமாநகரத்தை அடைந்து, சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து துதிபுரிந்து, சாவாவரம்பெற்று மகிழ்ந்து வாழ்ந்திருந்தார்கள்.

சுவேதன் என்பவன் தனக்கு மரணகாலம் கிட்டியதை உணர்ந்து முத்துச்சுண்ணம் தீற்றிய மாடமாளிகையுடைய அந்த இறவாத்தானத்தில் இனிதுவீற்றிருக்கும் சிவபெருமானுடைய சீர்பாதகமலங்களைத் தொழுது, திருவெண்ணீறணியும் சிவபெருமான் திருவருளால் மரணவஸ்தை வாராமற் காத்துக்கொண்டான்.

மேலும் மார்க்கண்டேய முனிவன் அவ்விடத்தில் எம்பெருமானைப் பூசித்துப்புகழ்ந்து, யமனை எதிர்த்து, அழித்துச்சிரஞ்சிவியாக வாழ்திருக்கப்பெற்றுன். சாலங்காயினன் என்பவனது செல்வப் புத்திரனுடைய குமாரனும் அவ்விடத்தில் எம்பெருமானைப் பூசித்துத் துதி செய்து, மரணம் அடையாமல் சிவகணங்களுக்குத்தலைவன் ஆனன். இன்னும் அனேகர் தங்கள் ஆயுள் முடியும்போது அன்புமிகுந்து தொழுது மாளா வரம்பெற்றுர்கள். ஆதலால் அன்பர்களே! ஆயுள்விர்த்தியாகவேண்டுகிறவர்கள் பெரும்புகழ்படைத்தோங்கும் இந்த இறவாத்தானம் என்னும் தலத்தைத் அடைந்துவணங்கல்வேண்டும்.

கூகாவென்று குரைப்பதல்லாற்சமன்
வாவாவென்னில் வரோமெனவல்லிரோ
தேவேசன்பயிறில்லைனெல்லையில்
சேர்வீரோலதுசெய்யவும்வல்லிரோ.

வெஞ்சமன்வஞ்சவேல் கொடெதிர்ந்தான்மரங்காள்
அஞ்சலெனுஞ்சொலார் சொல்வல்லார் நமரங்காள்
மஞ்சிவரிஞ்சிமன்ற மிறைஞ்சீர் நமரங்காள்
நஞ்சமயின்றுர் நல்குவர்மாதோநமரங்காள்.

அம்பேருண்கண்ணார்க்கழிந்த மடநெஞ்சே
கொம்பேறுடையான் கழலிறைஞ்சாதென் கொலியாம்
வம்பே யிறந்துவிடல்.

வானேருண்கண்ணார்க்கழிந்த மடநெஞ்சே
நீனகம்பூண்டான்கழலிறைஞ்சாதென்கொலியாம்
வீணே யிறந்துவிடல்.

வாளாருண்கண்ணார்க்கழிந்த மடநெஞ்சே
ஆளாகியாண்டான் கழலிறைஞ்சாதென்கொலியாம்
வாளாவிறந்துவிடல்.

"பாற்கடல்போலாவிபலமீன்போலாருயிர்கள்
பாற்கடலாலுண்டோ பயன்."

மணமகனே பிணமகனும் மணப்பறையே பிணப்பறையாய்
அணியிழையார்வாழ்த்தொலி போயமுகையொலியாய்க்கழியும்
கணமதனிற்பிறந்திறமிக் காயமிதில்வரும்பயனே
உணர்வுடையார் பெறுவருணர்வொன்றுமிலார்க்கொன்றுமிலே.

மக்களாக்கையிற்பிறத்தலே யரிதுமற்றதிலும்
துக்ககூன்குருடுமைமையைத் துறத்தலுமரிது
நற்குலத்திடைவருதலுமரிது ஞானத்தால்
முக்கணீசனுக்காட்படல்முற்றிலுமரிதே.

எனச்சாதுக்கள் பலவாறு போதித்துப்பாடியும் எழுதிவைத்திருத்த லால் தேகமானது மின்னல்போலவும் நீரிற்குமிழிபோலவும் மலையாமே மஞ்சுபோலவும் வானவில்லுப்போலவும் மாய்ந்து போவதன்முன் மகா தேவனுடைய மலரடிகளைத்தஞ்சம் என்று அடுத்து,

எனக்கினித்தினைத்தனைப் புகலிடமறிந்தேன்
பனைக்கனிப்பழம்படபேரவையின்கரைமேல்
எனக்கினியவன் தமர்க்கினியவனெழுமையும்
மனக்கினியவன் மருவிடம்வலம்புரமே

என்று திருவாய்மலர்ந்தருளியபடி மறுமையிலும் மகிழ்ந்து வாழாது வாழ்ந்திருக்கும் வழிபார்த்தலே தகுதி.

இறவாத்தானத்-தறவோன்பாதம்
மறவாதார்மேற்-பிறவாதாரே.

நாற்பத்தைந்தாவது.

# மகாலிங்கப்படலம்.

தபோதனர்களே! சந்திரனுடன்விளங்கும் சடைமுடியையுடைய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கின்ற இறவாத்தானம் என்னும் தலமகிமைசொன்னோம். இனிக்கிளிப்பிள்ளைபோல் மழலைச்சொல்லைச்சொல்லுகின்றமாதர்கள் வாசம்செய்யும் அந்த இறவாத்தானத்தின் கிழக்கில் விளங்கும் மகாலிங்கத்தானம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

ஒரு யுகமுடிவிலே அண்டரண்ட சராசரங்கள் அனைத்தும் அழிந்து எங்கும் இருள்சூழ்ந்துகொள்ளும்படி சமுத்திரங்கள் எல்லாம் அதிவேகமாய்ப்பாய்ந்து பொங்கித்ததும்பிப் பெருகிக்கிடந்தபோது சத்தியலோகவாசியான பிரமதேவன் நித்திரைதெளிந்து மெள்ள விழித்துப்பார்த்துப் பழையபடி எல்லாவற்றையும் படைக்க நினைத்துப் பார்த்தவிடமெல்லாம் அலைகள் புரளச்சலம் கோத்துக் கொண்டிருப்பதையும் அந்தவெள்ளத்தில் கார்மேகம்போல் பள்ளிகொண்டிருக்கும் திருமாலையும்பார்த்தான். பார்த்துப்பக்கத்திலேவந்து அந்தத் திருமாலைத்தட்டி எழுப்பி மதிமயக்கத்தால் நீ யார்? என்று கேட்கக் கார்மேகவண்ணனாகிய அந்தத்திருமால் அண்ட சராசரமெல்லாம் காக்கும் அகில லோகநாயகன், மிண்டுபேசும் நீ யாவன்? என்னை நாடிவந்த காரியம்யாது? சொல் என்றான்.

அதைமலரவன் கேட்டுத்தனக்குள் நகைத்துச் சகலலோகங்களையும் படைத்துக் காக்கும் தலைவன் நானே அன்றி நீயும் அல்லை. பிறரும் அல்லர். என்றான். இந்தப்பிரகாரம் இருவரும் மறுத்து மறுத்துப் பேசித் தமக்குள் பகைவளர்ந்து, மனதில் உள்ள நாண்கழன்றுபோக வில்லில் நாண்பூட்டிப் பாணங்களால் நிறைத்து அக்கினி அஸ்திரம், வருணாஸ்திரம், சந்திராஸ்திரம், சூரியாஸ்திரங்களை விட, அவைகள் தம்மில்போர் செய்து அழிந்துபோகப் பந்தவினையால் மருள்கொண்டு தங்கள் ஆயுதங்களாகிய தண்டாயுதத்தையும் சக்கராயுதத்தையும் விட்டு வீரநாதம் செய்தார்கள். பிரம தண்டாயுதமும், விஷ்ணு சக்கராயுதமும் தம்மில் போர்செய்து ஒழிந்தபின்பு பிரமதேவன் பாசுபதாஸ்திரம்விடத் திருமால்

உருத்திராஸ்திரம் விட்டு உக்கிரங்கொண்டு நின்முன். அந்தப் பாசு பதா ஸ்திரமும் உருத்திராஸ்திரமும் பதினாயிரம் வருஷம்வரையில் தம்மில் எதிர்த்துச் சண்டைசெய்யும்போது நெருப்புப் பொறிகள் குபீர் குபீர் என்று பறக்கும்படி எம்பெருமான் ஒரு சோதிலிங்க சொரூபமாய் அவைகளுக்கு நடுவே தோன்றி நின்றார். நடுவில் நின்ற சோதிலிங்கத்தில் அந்த இரண்டு ஆயுதங்களும் கலந்து மறைந்துபோகக்கண்டு திகைத்து அரியும்அயனும் இப்பொழுது இவ்விடத்தில்தோன்றிய இந்தச்சோதி யாது? இதன் அடிமுடிகளை யாம் காண்போம் என்று, வராகமும் அன்னமுமாகி அடியையும் முடியையும் தேடிக்காணுமல் ஆயிரவருஷம்வரையில் அலைந்தார்கள். அலைந்து ஆகாயத்திற் பறந்துபோனபிரமன் ஆகிய அன்னம் தன்னுடைய பெருஞ்சிறகுமுறிந்து வருந்திவிழுந்தும், வராகமாய்ச்சென்றவனும் திருவடியைக்காணுமல் வீரூப்பும் வலியும் குறைந்து இளைப்பும் தவிப்பும் அடைந்தும், வேறு மகாசமுத்திரத்தில் தோன்றி அவ்விடத்தில் மாறுபட்டிருக்கும் பிரமவிஷ்ணுக்கள் இருவரும் மருண்டு மதிமயங்கினார்கள்.

இவ்வண்ணம் இருவரும் இறுமாப் படைந்திருக்கும்போது அவ்விடத்தில் ஒலிவடிவாக ஒரு நாதம் உண்டாகி ஓம் என்றும் உமை என்றும் இரண்டு பிரிவாகிக்கலந்து இருக்குவேதம், எசுர்வேதம், சாமவேதம் எனப்படர்ந்து விரிந்தன. அவ்வேதங்கள் இறுமாப்படைந்திருக்கும் அவ்விருவர்முன் தங்கள் வடிவத்துடன் நின்று, கருணைகூர்ந்து சொல்லலுற்றன. பிரமவிஷ்ணுக்களே! வேதியர்கள் தங்கள் வினைதீரும்படி எவனுடையபாதத்தை யாகத்தால் வந்தனைவழிபாடு செய்வார்கள்? அரி அயன் என்னும் உங்களைத்தன் இடப்பக்கத்திலும் வலப்பக்கத்திலும் உண்டாக்கினவன் எவன்? உங்கள்பதவிகளாகிய வைகுண்டத்திலும் சத்தியலோகத்திலும் உங்களை நிலை பெற்று வாழ்ந்திருக்க வைப்பவன் எவன்? உங்களுடைய அஞ்ஞானம் அகலவரும் அந்தக்கடவுள் நாயகனுடைய குறி இது. அறிந்து கொள்ளுங்கள் என்று அந்தவேதங்கள் அன்புடன்சொல்ல, அவ்விருவரும் கேட்டு மயக்கந்தெளிந்து, ஆலகாலவிஷம் உண்டருளிய எம்பெருமானைத் தனித்தனியே தாழ்ந்து, பணிந்து எழுந்து துதிசெய்தார்கள். நாயேனையும் அடிமையாகக் கொண்டிருக்கும் எம்பெருமான் அவர்களுக்குக் காட்சிகொடுத்தருளி அன்பர்காள்! உங்கள் மதிமயக்கத்தைவிட்டுவிடுங்கள். வேண்டியதைக் கேளுங்கள் கொடுக்கின்றோம் என்றுசொல்ல, மலரவன் தன் கைகளைச்சிரசின்மேல் கூப்பிக்கொண்டு எம்பெருமானுடைய சீர்பாதகமலங்களில் விழுந்து பணிந்து, மனம்

உருகி அடியேன்செய்த அபசாரத்தை இன்று பொறுத்தருளி, எளிதில் காட்சிகொடுத்தருளிய எங்கள் இறைவனே! உன்னை அறிந்து கொள்ளாதபடி இங்கே எனக்கு உண்டாகிய மதிமயக்கம் இனி என்னை அணுகாமலிருக்க, உன்னிடத்தில் நிலையாகவைக்கும் பத்திகொடுத்து, ஊழிதோறும் என்வடிவமாகிய இந்த அன்னத்தின்மேல் ஏறிவந்தருளவேண்டும் என்று சொல்லினான்.

இலட்சுமிதேவி ஆசைப்படும்படி விளங்கும் மார்பினையுடையமாயவனும் எம்பெருமானுடைய இணை அடிகளைத்தொழுது, எம்பெருமானே! இந்த மருளானது இனி என்னை ஒருபோதும்தொடராமல் ஒழிக. உன் திருவடிகளை வந்தனைவழிபாடும் செய்யும் தொழில் வழுவாமலிருக்கக்கடவது. கார்மேகம்போலும் நீலகண்டம் உடையவனே! உன் கருணையை என்னிடத்தில் நிலைபெற வைத்தால், உன் திருவடித்தொண்டு செய்யும் அடியேனுக்கு ஒரு குறை உண்டாகுமோ? ஒருக்காலும் உண்டாகமாட்டாது, என்று மகிழ்ச்சியுடன் வாய்திறந்து சொல்லினான்.

இவ்வண்ணம் பிரம விஷ்ணுக்கள் இருவரும் குறைகூறித் துதிசெய்து முறையிட்டுக்கொண்டதைக் கேட்டு, அப்படியே ஆகுக என்று அருள்சுரந்து, அகிலலோகங்களையும் பெற்றெடுத்த அன்னை ஆகிய பார்வதிதேவியின் திருமுலைத்தழும்பும் வளைத்தழும்பும் மாறாத செம்பவளத்திருமேனியையுடைய சிவபெருமான் மேலும் அவர்களுக்கு விளங்கச்சொல்லுகின்றார். தொண்டர்களே! இந்தநாள் நீங்கள் கண்டு தரிசனம்செய்த இந்த மகாலிங்கத்தைக் கற்பாந்தத்திலும் அழியாமல் ஓங்கும் காஞ்சிமாநகரத்திலே ஸ்தாபித்து, வந்தனை வழிபாடுசெய்து, சகல லோகங்களைப் படைத்துக் காக்கும் திறம்பெற்று வாழ்ந்திருங்கள். கடல் சூழ்ந்த உலகத்திலே உங்களுடன் தேவர்கள், அசுரர்கள், சித்தர்கள், பழவினைப் பகை அறவீசிய முனிவர்கள், மனிதர்கள், எல்லாரும் பாசங்கழிந்து பரமானந்தம் அடைய, இந்தநாள்முதல் எம்மைச் சிவலிங்கத்தின் மூலமாய் நேசங்கொண்டு பூசைசெய்யக்கடவர். எம்மைப் பூசைசெய்கிறவர்களுக்கு எந்நாளும் மருள் அணுகாமல் இருக்கக்கடவது. அவர்களைப்பாதுகாப்பது எமது கடமையாம். தரித்திரம், பயம், மனக்கவலை, பசி, பாவம், கொடியநோய், முதலானவைகள் அவர்களை வருத்தப்படுத்தாமல் விலகக்கடவன.

எமது அடியார்களாம் அவர்களுக்கு வினைகாரணமாக வரும் பிறவி மீளவாராமல் ஒழிந்து போகக்கடவது. ஒருவேளை மறுபடியும் பிறந்தா

லும் இன்பம் அடைந்து பெருமகிழ்ச்சியுடன் நெடிது வாழக்கடவர். நமது விளையாக்கலி என்னும் கட்டளை வலியால், கடுங்கோபங்கொண்டு வரும் எமன் அவர்களிடத்தில் அனுகாதிருக்கக்கடவன். அந்தணர். அரசர், வைசியர், சூத்திரர், அநுலோமர், பிரதிலோமர் முதலிய சங்கர சாதியார் ஆனாலும், தேவர்கள், நாகர்கள், அசுரர்கள், இராட்சதர்கள், கந்தருவர்கள், முனிவர்கள் ஆனாலும் இம்மைக்குரிய லீலா விபூதியையும் மறுமைச்குரிய நித்திய விபூதியையும் கொடுத்தருளும் சிவலிங்க பூசை இல்லாதவர்களும் அடியார்களுக்கு இன்றி அமையாதனவாகிய விபூதி, உருத்திராட்சம் முதலிய சாதனங்களை விரும்பாதவர்களும் எமக்கு அன்னியர் ஆவர். எமக்கு அன்னியராம் அவர்களுடன் பேசினவர்களும்கடையரிலும் கடையரே ஆவர், மேற்சொல்லிய சிவபூசையின் மகிமையையும், சிவனடியார் பெருமையையும் அடியில் வருவனவற்றுாலும் காண்க.

பூசனைசெயாதகைபுராந்தகன்புகழ்
பேசுதலிலாதவாய்பெற்றுழன்றிடும்
நீசரானவர்தமினெடுவனத்திடைக்
கூசுதலிலாதபுன்குரங்குநன்றரோ.

ஆவுரித்திடினுநீறணியுமன்பனம்
மாவுரித்தவனெனவணங்கத்தக்கவன்
பூவுரித்தவன்பதம்புனையப்போற்றுற
நாவுரித்தெனமறைநான்குமோர்துமால்.

ஆரங்கண்டிகைஆடையுங்கந்தையே
பாரமீசன்பணியலதொன்றிலார்
ஈரநெஞ்சினர்யாதுங்குறைவிலார்
வீரமென்னல்விளம்புந்தகையதோ.

சங்கநிதிபதுமநிதியிரண்டுந்தந்து
தரணியொடுவானாளப்பெறுவரேனும்
மங்கினுரவர்செல்வமதிப்போமல்லே
மாதேவர்க்கேகாந்தரல்லராகில்
அங்கமெலாங்குறைந்தழுகுதொழுநோயரா
யாவுரித்துத்தின்றுழலும்புலையரேனும்
கங்கைவார்சடைக்கரந்தோர்க்கன்பராகி
லவர்கண்டீர்நாம்வணங்குங்கடவுளாரே.

வைதீகமுறையாகச் செய்யும் யாகம், தவம், தானம், விரதம், முதலியவைகளால் செய்யப்படும் பூசையால் வரும் பிரயோசனம் எல்லாம் சிவலிங்கபூசையால் வரும் பிரயோசனத்தின் கோடிபங்கில் ஒருபங்கு ஆயினும் இணையாகமாட்டா. உலகம் எம்மைப்பூசித்து உய்யும்பொருட்டே நாம் இப்படி ஏற்பாடுசெய்தோம். நீங்களும் பூசித்துத் துதிசெய்து கடைத்தேறக்கடவீர்கள் என்று திருவாய் மலர்ந்தருளிச் சிவபெருமான் தன் அடியாருடைய திருமனக்கோயிலில் குடிகொண்டருளப் போய் விட்டார்.

இப்பால் சேஷசயனத்தின்மேல் பள்ளிகொள்ளும் திருமாலும் தாமரைப்பூவில் வசிக்கும் பிரமதேவனும் பணிந்து விடைபெற்று மீண்டு கட்டுக்கோப்பு அமைந்த தண்ணீர்த்தடாகங்களையும் பெருஞ்செல்வத்தையும்உடைய காஞ்சிமாநகரத்திற்குவந்துசேர்ந்து,அவ்விடத்தில்மேற்பட்டு விளங்கும் மகாலிங்கப்பிரதிஷ்டை பண்ணி விதிப்படி பூசைசெய்து தொழுது துதித்து, வேண்டும் வரம் பெற்று மீண்டுபோனார்கள்.

அன்பர்களே! கடல் சூழ்ந்த நெடிய உலகத்திலே சிவலிங்கபூசை செய்வதனால்வரும் பேறு இவ்வளவு என்றும் இப்படிப்பட்டது என்றும் எடுத்துச்சொல்லவல்லவர்யாவர்?

மகாலிங்கேசன் மலரடிபோற்றி.

---

நாற்பத்தாறுவது.

## வீராட்டகாசப்படலம்.

தத்துவானந்தத்தபசிகளே! நீர்விளையாடும் மடமகளிர் அணிந்திருக்கும் வாசனைத்திரவியங்கள் நெடுந்தூரம் வரையில் மணம்வீசப்பெற்ற தடாகம் சூழ்ந்து விளங்கும் மகாலிங்கேசம் என்னும் தலமகிமை சொன்னோம். இதன் வடக்கில் பூர்வம் தேவர்கள்முன் புன்னகைசெய்து, எமது உள்ளங்கையில் உருண்டு திரண்டு ஒடுங்கி இருக்கின்ற இந்த ஆலகாலவிஷத்தை விட்டெறியவோ? அல்லது உண்ணவோ? என்று திருவருள் சுரந்தருளிய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் வீராட்டகாசம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத் தொடங்கினர்.

இண்ணம்போலும் வாய்நிறைந்து வழியும் தேன் பொருந்திய வெள்ளைத்தாமரைப்பூவில் வீற்றிருக்கும் அன்னநடையைப்பார்க்கிலும் அழகிய நடையை யுடைய சரசுவதியின் பயோதரங்களின் மேல் எழுதப்பட்டிருக்கும் கலவைச்சந்தனத்துடன் கலந்த பரிமளம் வீசும் பூமாலைகளைத் தரித்ததோள்களையுடைய

பிரம தேவனுக்கு, யாவரிலும் கடையனும் என் மனதைத் தன்னிருப்பிடமாகக் கொண்டிருக்கும் சிவபெருமான் ஏற்படுத்திய இரண்டு பரார்த்தங்களும் ஒழிந்தபோது, வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை,என்னும் ஐந்துநிறம் படைத்திருக்கும் சத்தியோசாதம், வாமம், அகோரம், தற்புருடம்,ஈசானம்,என்னும் ஐந்துதிருமுகங்களையுடைய சிவபெருமான் திருவருளால் அந்திவண்ணம்போலும் காலாக்கினி ருத்திரமூர்த்தியின் நெற்றிக்கண்ணிலிருந்து பெரு நெருப்புத்தோன்றி, அண்டரண்டங்களில் எல்லாம் சடசடவென்று முழங்கி நிமிர்ந்து ஓங்கி எல்லாவற்றையும் அரக்குப்போல் உருக்கி உண்டு தெவிட்டி, மெய்யன்பருடைய பாவமலை பஸ்பமாவதுபோல் பஸ்பம் ஆக்கிவிட்டது. எல்லாம் நீறாய் வெந்து விடுகையில் இரவு இல்லை-பகல்இல்லை. அயன் இல்லை-அரியும் இல்லை-ஆகாசம் முதலான பூதங்கள் ஐந்தும் இல்லை-எனில் பூதசம்பந்தமான மற்றைய பவுதிகங்களைப்பற்றி யாம் என்ன சொல்வலாம்? திரிபுராந்தகனாகிய உருத்திர மூர்த்திஇந்தப்பிரகாரம் சகல அண்டங்களையும் சாம்பலாக்கிவிட்டுப்.பரமானந்தம் அடைந்து,தன்இயல்பையுணர்ந்து தன் இடப்பாகத்தில் கலந்திருக்கும் எம்பெருமாட்டி காவலில் கற்பமுடிவிலும் அழியாமல் விளங்கும் காஞ்சிமாநகரத்தில் அமர்ந்தருளிச் சகல லோகமாதாவாகிய காமாட்சிதேவி கண்டு களிக்க, அந்தராத்திரியெல்லாம் ஓயாமல் ஆனந்தக்கூத்தாடி அடிக்கடி ஆரவாரம் செய்து மேன்மேலும் வீரநகை புரிந்தருளினார். அந்த ராத்திரி மாறும் வேளையில் ஆனந்தக்கூத்தாடுவதை விட்டு, இலிங்கமூர்த்தியாய் அவ்விடத்தில் சிறந்து விளங்கினார். ஆதலால் அந்த மூர்த்தி வீராட்டகாசமூர்த்தியாம். அந்த வீராட்டகாசலிங்கத்தை வந்தனை வழிபாடுசெய்து சில சித்தர்கள் பல அற்புதமான சித்திபெற்றார்கள். சித்தர்கள் சித்திபெற்றதைக் கேள்விப்பட்டுக் கொங்கணமுனி அங்கேவந்து சேர்ந்து, அந்த இலிங்கத்தின் மகிமையைச்சோதித்து அறியும்பொருட்டு, அதன் சிகரத்தின்மேல் தன்குளிகையைவைத்தான். எந்தப்பொருள்மேல் வைத்தாலும் எல்லாவற்றையும் நீருக்கிவிடும் தன்மையுள்ள அந்தக் குளிகையை அந்த இலிங்கம் ஒரு க்ஷணத்திலே தனக்குள் அடங்கும்படி இழுத்துக்கொண்டது. அதை கண்டு அந்தக் கொங்கண முனி அதிக ஆச்சரியம் அடைந்து அந்த இலி

ங்கத்தின் எதிரில் வாசம் பண்ணி, நெடுங்காலம் தவம்செய்து அந்தக்கு ளிகையுடன் வேண்டும் வரமும் பெற்றான். இன்னமும் அந்த இடம் சேர்ந்து எம்பெருமான் திருவருளால்வேண்டும் சித்திகளைஎளிதில் பெறுகி ன்றவர்கள் அநேகர். சூலபாணியாகிய வீராட்டகாச நாதருடைய மகிமை சொல்வார் எவர்?

மாயவன் பூர்வம் அந்தத் தலத்தில் வந்தனே வழிபாடுசெய்து பவள வண்ணம்பெற்றான். அதையும் சொல்வோம் கேளுங்கள். படர்ந்திருக் கும் அலைகளைச் சுருட்டிக் கரைமேல் வீசும் வெள்ளிமயமான திருப்பாற் கடலில் இரத்தினமயமாய் விளங்கும் மாடமாளிகைகளை யுடைய போக புரத்திலே ஓர் ஏகாந்தஸ்தானத்தில் தனித்திருந்து, கட்டவிழ்ந்த தேன் உமிழும் செந்தாமரை மலர்ப்பீடத்தின் மேல் சிறந்து வீற்றிருக்கின்ற ஸ்ரீதேவியுடன் சேர்ந்து, பாஞ்சசன்னியம் என்னும் பருத்த சங்கு ஏந்திய கையையுடைய திருமால் திருவிளையாட்டாகச் சரசசல்லாபஞ் செய்து சந்தோஷித்திருக்கும் நாளில் அண்டரண்ட சராசரங்கள் அனைத்தையும் ஈன்று காத்தருளும் மனைவியும் மணவாளனுமாகிய அவ்விருவரும் அவ்விட த்தில் பொழுது போக்கத் தங்களில் சிலகதை சொல்லலானார்கள். சேஷ சயனத்தின் மேல் அறிதுயில் செய்யும் திருமால் திருமகளைப் பார்த்துச் சிற்றிடையுடன் பேரழகு படைத்தவளே! நான் ஒருகதை சொல்லுகி றேன் கேள் என்று சொல்லத்தொடங்கினான்.

பார்த்தவர்களுக்குப் பயம் கொடுக்கும் நல்ல நிறம் படைத்த நீர்ப்ப ரவையையும் பேரலைகளையுமுடைய திருப்பாற் கடலின் அழகுமாறிப் பின்னிட, வெண்சோதி விரிக்கும் கைலாசகிரியில் எம்பெருமான் மின் னல்போல் துவளும் சிற்றிடையை யுடைய பார்வதிதேவியுடன் ஒருநா ள் இடையறாமல் முழங்கும் அருவிகளுடன் அழகுவாய்ந்திருக்கும் சார லையுடைய மந்தரகிரியில் ஏகாந்த ஸ்தானத்தில் இனிது வீற்றிருக்கும் போது, எம்பெருமான் எம்பெருமாட்டியை ப்பார்த்துக் காளி! என்று அழைக்க, அதுகேட்டு மனம் புழுங்கிக் கண்ணீர் முத்தம் சிந்தி எம்பெரு மாட்டி சொல்லுகின்றாள். பிராணநாயகா! நான் காளநிறம் (கருநிறம்) படைத்திருக்கின்றேன். நீவெள்ளைநிறம் பெற்றிருக்கின்றாய். நமக்குப் பொருத்தம் எப்படி உண்டாகும்? இவ்வளவு நெடுங்காலம் என்னிடத்தி ல் அன்புவைத்து இன்பக்கலவி செய்து மகிழ்ச்சி அடைந்தாய். பரசுபாணி! இனி நான் அந்தக்காளநிறத்தை விட்டுக் கவுரநிறம் பெற் றுக் கவுரி ஆகும் விதம் அநுக்கிரகம்செய்யவேண்டும், என்று பிரார்த்தித் தாள். செம்பொற் சிகரங்களையுடைய மலையரசன் மகள் சொல்லிய சொ ல்லைத் திருச்செவியிற்கொண்டு, சந்திரகாந்தி வீசும் திருவெண்ணீறு அ ணியும் அந்தச்சுந்தரக்கடவுள் சொல்லுவார்

செவ்வரிபரந்த கண்ணுளே! கேள்- நீ வருத்தப்படாதே. உலகமெல்லாம் க்ஷேமம் அடையும்படி எக்காளும்பாதுகாப்பது நமதுகடமை, ஆதலால், தேவர்களுக்கு ஆகவேண்டிய ஓர் காரியத்தைப்பற்றி இப்படி அழைத்ததே யல்லாமல் வேறல்ல. நீ அதைப்பின்னுல் அறிந்து கொள்வாய். நீ கவுர நிறம் பெறும்மார்க்கம் சொல்வேன் கேள். ஊசி நாட்டவும் இடம் இல்லாமல் எங்கும் நிறைந்து பரவெளியில் வீற்றிருக்கும் தன்மையுள்ளவன் நானே, ஆனுலும் மேன்மையுள்ள தலங்களிலும் ஞானிகள் மனதிலும் கருணைகூர்ந்து மகிழ்ந்து வாழ்ந்திருப்பேன். மேன்மையுள்ள அந்தத்தலங்களிலும் உத்தமத்தலங்களும் வேதாந்த சைவசித்தாந்த சமயாசார நெறிகளைப் பாதுகாத்து மிகவும் மேன்மையடைந்திருப்பவர்களுடைய மனமும் எனக்கு உசிதமானவைகள், உத்தமத்தலம், சமயாசாரநெறி தப்பாதவர்கள் மனம் என்னும் அவைகளைப்பார்க்கிலும் காசிப்பட்டணமும் சிவயோகிகள் மனமும்சிறந்தவைகள். காசிப்பட்டணம், சிவயோகிகள் மனம் என்னும் இவ்விரண்டிலும்காஞ்சிமா நகரமும்மெய்யன்பர் இருதயமுமேசிறந்தவைகளாம். மேன்மைபொருந்தியகாஞ்சிமாநகரம், மெய்யடியார்மனம் என்னும் அவைகளைப்பார்க்கிலும் எனக்கு அன்பானதலம் மற்றும் எங்கும் இல்லை. பூங்கொடி போன்றவளே! நீ அந்தக் காஞ்சிமா நகரத்தை அடைந்துவிரும்பி என்னைப்பூசை செய்து, மாசில்லாத்தவம்புரிந்து வேண்டியபடி கவுரநிறம் பெற்றுக்கொள் என்று சொல்லுதலும், அந்தப்பார்வதிவிடைபெற்றுமீண்டு, காஞ்சிமா நகரத்தை அடைந்து, பஞ்சதீர்த்தக்கரையின் பக்கத்தில் மாதவம் செய்து, பொன்வண்ணம் பெற்றுக்கவுரியாய் விளங்கினுள். செந்தாமரைப்பூவில் வசிக்கும் முத்தநகையாளே! இந்த அற்புதத்தை நான் என்னவென்று சொல்வேன் என்று, மந்தரமலை அலையச்சுழற்றித் திருப்பாற்கடலைக்கடந்து தேவர்களுக்கு அமுது ஊட்டிய திருமால் சொல்லச், ஸ்ரீதேவி கேட்டுமிகவும் ஆச்சரியம் அடைந்து சொல்லுகின்ருள். பிராணநாயகா! அம்பாளுடைய செய்கையைக்கேட்கும்பொழுதெல்லாம் அற்புதம் உண்டாக்குகின்றது. உண்மை அறிவானந்த உருவாய் விளங்கும் சத்தியும் சிவனும் செய்கின்ற இந்தச்செய்கைகள் எல்லாவற்றையும் செவ்வையாகத்தேர்ந்த உணர்ந்த பெரியோர்கள் அம்மை அப்பராம் அவர்களுடைய திருவிளையாட்டு என்பார்கள். நீலமணிவண்ணனே! இத்தன்மையதேயல்லாமல் மன்மதனை நீருக்கி, எல்லாம் அறிந்து, எல்லையில்லாத இன்பமுடைய ஈசனுக்கு வேறுபிரயோசனம் யாது? அந்தத் திருவிளையாட்டும் உலகம் உய்யும்பொருட்டேயாம். அத்தன்மை யதென்று அறியாத அசடர்கள் காமவிஷயமென்று நினைப்பார்கள். அப்படி நினைக்கின்றவர்களுடைய மடமையின் கொடுமையை அறியவல்லவர்கள் யார்?

ஒருவரும் இல்லை. அண்டரண்ட சராசரப்பொருள்கள் அனைத்தையும்நிலைபெற நிறுத்திய தலைவன் ஆன அவனே படைத்துக் காத்து அழிப்பதற்குத்தன் இடப்பாகத்திலிருந்து பார்வதியையும் உன்னையும், வலப்பாகத்திலிருந்து பிரமதேவனையும் என்னையும், மனதிலிருந்து காலாக்கினி ருத்திரனையும் சரசுவதியையும் உண்டாக்கினான். சகலமும் தானே ஆகிப் பஞ்சகிருத்தியங்களைச்செய்து வருகின்ற அந்தக்கடவுளுக்கு எல்லாவற்றைப்பார்க்கிலும் பேரன்பு பார்வதி தேவியிடத்திலும் உன்னிடத்திலுமே அல்லவோ? பெருமானே! கார்மேகம்போற் கரிய கூந்தலையுடைய அந்தக்கவுரிபோல் நீயும் அடியேனுக்குப் பெருமகிழ்ச்சி உண்டாகும்படி அப்படிப்பட்ட திருமேனிபெற்றுக்கொள் என்றாள். செம்பொன் ஆபரணம் அணிந்தவளான திருமகள் வார்த்தையைத் திருமால்கேட்டுப்பெருங்கோபங்கொண்டு, அடீ பொன்னி! உன் எண்ணம் இதுஆனால், களாப்பழம்போல் கறுத்திருப்பவனாகிய என்னுடன் இந்நாள்வரையிலும் எப்படி கலந்து போகத்தை அநுபவித்தாய்? இனி இந்தக்கரு நிறத்தைமாற்றி நீ கண்டு மகிழும்படியான செம்பவளத்திருமேனி பெறுவேன் என்று அவளுக்குச் சொல்லிவிட்டு, அவ்விடத்திலிருந்து விரைவில்மறைந்து காஞ்சிமாநகரத்தை அடைந்து, வீராட்டகாசம் என்னும் தலத்திற்கு எதிரில் அந்த வீராட்டகாசனுடைய வீரநகை எல்லாம் ஒன்றுசேர்ந்து விளங்கினாற்போல் விளங்கும் சக்கரதீர்த்தம் என்று ஒரு தீர்த்தம் உண்டாக்கி, மூன்றுலகத்தாரும் புகழ்கின்ற கங்கையைப்பார்க்கிலும் சிறந்திருக்கின்ற அந்தத்தீர்த்த நீராடி, விரதம்புரிந்து பச்சைமால் வாசமாயிருந்தான். அந்தப்பச்சைவண்ணப் பெருமாள் வாசமாயிருந்த இடம் பச்சைவண்ணன் ஆலயம் என்றுசொல்லப்படும். அவ்விடத்தில் வாசமாயிருந்து தினந்தோறும் வண்டுகள் மொய்க்கும்படியான பதினாலாயிரம் செந்தாமரை மலர்கொண்டு வீராட்டகாசப் பெருமானைப் பூசைசெய்து பேரன்புடன் விழுந்துபணிந்து எழுந்து பிரார்த்திக்கையில், மாங்குயில்போல் வசனிக்கின்ற பார்வதிதேவிபாகனாகிய சிவபெருமான் திருவருள் சுரந்து காட்சிகொடுத்தருளிச் செம்பவளவண்ணம் கொடுத்தருளினார். இப்பால் சேஷசயனனாகிய திருமால் பொருக்குகளால் அடர்ந்திருக்கும் அடியையுடைய காயாம்பூப்போலும் கருநிறத்தைக் கழித்துச் செம்பவளவண்ணம் பெற்றுப்பரமசந்தோஷம் அடைந்து, அவ்விடத்தில் சில நாள் வாசம்செய்து, மீண்டு திருப்பாற்கடலுக்குச் சென்று, திருமகளுடன் கலந்து விசேஷமான ஆபரணங்களை அணிந்திருப்பவளே! செம்பவளச்சோதியுடன் தழைத்திருக்கும் இந்த வடிவத்தைப்பார். இரவுக்கையின்கட்டுத்தளரும்படி பருத்துப் பக்கமெல்லாம் படர்ந்து ஓங்கிய

மணிவடம் அணிந்த மார்பை உடையவளே! இந்தச்செம்பவள வண்ணத்தை நான் என் சுவேச்சையால் பெற்றுக்கொண்டேன். இனி நீ விரும்பியபடி என்னிடத்தில் இன்பம் அநுபவி என்றுசொல்லப் பச்சை மயில்போலும் சாயலையுடைய அந்தத்திருமகள், சுவாமி! இந்தச்செம்பவளவண்ணம் தங்கள் சுவேச்சையால் பெற்றுக்கொண்டதானால், அது மாயவித்தைபோல் மாய்ந்துபோகுமே அன்றி நிலையாக நிற்கமாட்டாதே. இது எனக்கு என்ன பிரயோஜனம் தரும் என்றாள். அதைக்கேட்டுக் கருடவாகனத்தையும் ஆயிரம் பணாமுடியுடைய சேஷசயனத்தையும் தனக்கு உரிமையாகக் கொண்டிருக்கும் திருமால் கோபங்கொண்டு அடிபொன்னி! என்னைப்பழித்தபடியால், இனி நீ கரிநிறம் பெறக்கடவை என்று சபித்தலும், அந்தத் திருமகள் தன்னுடைய செம்பொன் மேனி கறுத்துப் போனதைப் பார்த்து மனம் துடித்துப் பூதேவி நாயகா! சிறியேன் செய்தபிழை பொறுத்து இந்தச்சாபம் தவிர்த்தருள வேண்டும் என்று பாதங்களில் விழுந்து பணிந்தாள். பகைவர்செய்யும் சண்டையைக் கடந்த சக்கரபாணியாகிய திருமால் மனம் இரங்கி என்கண்மணி போலும் பெண்மணியே! கோபத்தால் விரைந்து உன்னைச் சபித்தேன் அதனால் நீ கருநிறம் பெற்றாய். ஆனாலும் கறுப்பில் அழகியான உன் போகம் முன்போலவே எனக்கு உண்டாகுக. நீ பயப்படாதே என்று அவளைத்தன் இரண்டு கைகளாலும் தழுவிக்கொள்ள, அந்தத்திருமகளும் அந்தத்திருமாலுடைய திருவடிகளைத் தாழ்ந்து பணிந்து, அதி விசித்திரமாய் விளங்கும் தன் அரமனைக்குள்ளாகப் போயினாள். அரமனைக்குள் போனபின்பு தன் பாங்கிமார்களுடன், ஆலோசனைசெய்து, புதிய தேன் பொழிந்து மணந்துவிளங்கும் பூஞ்சோலைகளால் சூழப்பட்டிருக்கும் காஞ்சிமாநகரத்தை அடைந்து, அவ்விடத்தில் தேசமெல்லாம் புகழவிளங்கும் உலகாணித்தீர்த்தக்கரையின் பக்கத்தில் காமாட்சிதேவி இனிது வீற்றிருந்து தவம் செய்தருளிய தலத்தைத்தன் இருகண்களும் களிக்கக்கண்டாள். உலகமெல்லாம் தன்புகழ் விளங்கச்செய்யும் காஞ்சிமாநகரத்திலே அந்தத்தலமானது அதிசூட்சுமமான பிலமாகிப்பரவெளியாய்ச்சிறந்து விளங்கும். சத்திக்கின்ற சமுத்திரத்தை ஆடையாக உடுத்திருக்கும் பூதேவிக்கு நாபித்தானமாம். கொன்றைசூடியாகிய சிவபெருமானுக்கும் காமாட்சிதேவிக்கும் உயர்வு ஒப்பில்லாமல் ஓங்கும் ஒரு திருமேனியாம். அடியார்களுடைய வினைகளைப்போக்கி விமலமாக்கி வீட்டின்பம்கொடுக்குமூலகாரணத்திருமேனியும் அதுவேயாம். அகண்ட பரிபூரணமாய், உண்மையாய், அறிவாய், குயவன் சக்கரம்போல் இடையறாமல் சுழன்று உழலும் மனம் அடங்கும் இடமாய், வேதாந்தப்பொருளாய், இன்பமாய்ச் சிவமாய், நிர்மலமாய் விளங்கும் பரஞ்சோதியாகிய

சிவபெருமானை நிறைகுடம்போல் நிறைதவத்துச் சிவயோகிகள் இந்தப் பரவெளிமயமாகத் தங்கள் மனதில் அகமுகமாய்த் தரிசனம் செய்வார்கள். சத்திக்கின்ற கடல்சூழ்ந்த உலகத்திலே காஞ்சிமாநகரத்தில் அந்தப்பிலத்தினிடமாகப் பகிர்முகமாய்த் தரிசனம் செய்வார்கள். ஒருமுறை அந்தப்பிலத்தில் இஷ்டகாமியார்த்தமாகும் தருமம் செய்கிறவர்களுக்கும் அந்தத் தருமம் தரும்பயன் கோடி ஆதலால், கரடமதத்தை வெள்ளம் போற் பொழியும் யானைமுகம்படைத்த விநாயகமூர்த்தியையும் சுப்பிரமணிய சுவாமியையும் பெற்றவளான காமாட்சிதேவி அமர்ந்தருளும் அந்தப்பிலமானது காமக்கோடி என்று உலகத்தில் காரணப்பெயராய் விளங்கும். அல்லாமலும் தன்னைவந்து தரிசிப்பவர்களுடைய இஷ்டகாமியார்த்தங்களை வரையாது கொடுக்கும்பொருட்டுக் குபேரனைப்போல் கோடி காமத்தலைவரைப் படைத்தபடியால், எப்பொழுதும் ஒரே தன்மையாய் எங்கும் வியாபித்து எல்லாவற்றையும் கடந்துவிளங்கும் பரஞ்சோதியாகிய சிவபெருமானைத் தன்மலைபோல் குவிந்திருக்கும் பயோதரங்களால் குழைத்தருளிய கருணைப்பிராட்டி காமாட்சிதேவி சிறந்துவீற்றிருக்கும் பெருஞ்சோதிமயமான பிலத்திற்குக் காமக்கோடி என்னும் அந்தப்பெயர் சொல்லுதலும்தகும். மேலும் காமியார்த்தங்கள் என்பன:—மனைவியர், மக்கள், ஆடை, ஆபரணங்கள், மாடமாளிகைகள், உணவுகள் முதலாகப் பலவகைப்படும். பூந்தளிரைப்பார்க்கிலும் மெதுவான தன்பாதங்களை வணங்கிக் குறைகூறி வேண்டினவர்களுக்குப் பர்வதராஜ புத்திரியாகிய காமாட்சிதேவி அந்தக்காமியார்த்தங்களைக்கோடி, கோடியாய்க் கொடுக்கின்றமையாலும் காமக்கோடி என்னும்பெயரை அந்தப்பிலம் அடையப்பெறும். அல்லாமலும் கவைக்கால்களையும் கருநிறத்தையும் உடைய எருமைவாகனனைக் கொல்லும் தொழிலைக்கொண்டிருக்கின்ற யமனை உதைத்தருளிய ரிஷபவாகனனாகிய சிவபெருமானுடைய நெற்றிக்கண் நெருப்பால் நீறாய்விட்ட ஒருகாமனைத் தேவி திருவிளையாட்டாகத்தன் கடைக்கண் பார்வையால் கோடி காமர் ஆகப் படைத்தமையால் காமக்கோடி என்னும் பெயரைப் பூண்டதும் ஆகும். மற்றும் ஆன்மாக்கள் அடையும் நால்வகைப் பிரயோசனங்களில் மூன்றாவதாக வகுக்கப்பட்டது காமம். அந்தக்காமத்தின் கோடியாகிய முடிவில் இருப்பது மோட்சம். தன்னைத் தஞ்சம் என்று அடுத்தவர்களுக்குக் காமத்தின்கோடியாகிய மோட்சம் கொடுக்கின்றமையாலும், உலகமாதாவாகிய காமாட்சிதேவி வீற்றிருக்கும் செம்பொற்சோதி விமானமானது அந்தக்காமக்கோடி என்னும்பெயரால் சொல்லப்படும். பின்னும் ஏகாட்சரமாகிய பிரணவமானது அகரம், உகரம், மகரம் என்று மூன்று அட்

சரங்களாகப்பிரியும். அந்த மூன்று எழுத்துகளும் முறையே அரி அயன் அரன் என்னும் மும்மூர்த்திகளை உணர்த்தும். இந்த மும்மூர்த்திகளைக் கோடி முறை யுகங்கள்தோறும் தன்கண்களிலிருந்து படைத்தாள் என்பதனாலும், அந்தக்காமக்கோடி என்னும் பெயர்விளங்கும் என்பதாம். வேறு ஒருவகையில் கா என்பது சரசுவதி. மா என்பது இலட்சுமி. கா, மா, என்னும் சரஸ்வதியும் இலட்சுமியும் தேவியின் திருக்கடைக்கண்ணிலிருந்து பிறப்பதனால் எம்பெருமாட்டிக்குக் காமாட்சி என்கிற பெயர் உண்டாயிற்று, என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். விந்துதத்துவத்தினிடமாக விளங்கித் தேவி வீற்றிருக்கும் மகாசக்கரத்தின்வடிவம் ஆகிய அந்தப்பிலமானது காமியார்த்தங்களுக்கெல்லாம் உறைவிடம் ஆகிக்காமக்கோட்டம் என்று ஒருபெயர்கொண்டிருக்கும். அந்தப் பிலம் மற்றைய பீடங்களுக்கெல்லாம் முதற் பீடம் ஆதலால் ஆதிபீடம் என்றும் சொல்லப்படும்.

இப்படிப்பட்ட மகத்துவம் உடைய பிலத்தைத் திருமகள் கண்டு கைகூப்பித்தொழுது, அந்தப்பிலத்தின் இடப்புறத்தில் வாசம்செய்து, திரிபுரதக்னனாகிய சிவபெருமானுக்கு ஒருசத்தியாய், ஆனந்தமாய், சகலமும் தானாய்விளங்கும் அகிலகாரணியும், நிலத்திலே நிவிர்த்திகலையால் ஒருபாதத்துடனும், நீரிலே பதிஷ்டாகலையால் இரண்டு பாதத்துடனும், தீயிலே வித்தியாகலையால் நான்குபாதத்துடனும், காற்றிலே சாந்திகலையால் எட்டுபாதத்துடனும், ஆகாயத்திலே சாந்திய தீதகலையால் ஒன்பது பாதத்துடனும், அதற்குமேற்பட்ட பரவெளியில் ஆயிரம் பாதத்துடனும், தங்கிய அட்சரங்களுக்கெல்லாம் தலைவியாகியபராசத்தியும், கருமை, செம்மை, வெண்மை நிறமுடையவளும் காமக்கோடியில் பிலவடிவமாயிருப்பவளும், மலைமகளும், மாயையுடன் சகலலோகங்களைப் பெற்றவளும் ஆகிய எங்கள் காமாட்சிதேவியைத் தன்மனக்கோவிலில் எழுந்தருளவைத்து, மகாதேவி! சாம்பவி! சதானந்தி! சத்தி! நித்தியகல்யாணி! நிரஞ்சனி! நிமலி! பத்மினி! பராசத்தி! பராபரி! அந்தரி! சுந்தரி! ஆரணி! காரணி! ஏகநாயகி! லோகநாயகி! என்தாயே! என்தாயே! என் பொன்மேனியை மறைத்துக்கொண்டிருக்கும் இந்தக்கரிய நிறம் செதிள் எடுத்துப்போகக் கருணைசெய்யவேண்டும் என்று வந்தனை வழிபாடுசெய்யத்தொடங்கினாள். பூர்வம்வருணபகவான் உன்னைவாருணி என்று பிருகுமாமுனிவனுக்குக் காதற்புத்திரியாகக் கொடுத்த காரணத்தால் பிருகுவாரமாகிய சுக்கிரவாரந்தோறும் உன்னைத் தரிசித்துவந்தனைவழிபாடு செய்கிறவர்கள் எல்லாரும் நிறைசெல்வம் பெற்றுப் பெருவாழ்வுபெறுவார்கள் என்று பெரியோர்கள் சொல்லுவார்கள். இருவினை

களுக்கும் காரணமாய் எதிர்த்துவரும் புலன்களாகிய பகைவர்களை அறவீ சிவிளங்குகின்ற பிருகுமாமுனிக்குப்பிரியமான புத்திரியே! கரும்பை வில் லாகவுடைய மன்மதனைச்சுட்டெரித்தவராகிய சிவபெருமானுக்குப் பிரி யமானவளே! அடியேனுக்கும் கருணைசெய்வது உன் கடமையாம். கணைபோல் பிறழும் கண்ணுடையாளே! கா என்னும் பெயருள்ள சர சுவதியைப் பூர்வம் உன் கண்ணைப்போல் காத்தருள் செய்தாய். மா என் னும்பெயருள்ள என்னையும் உன் கண்ணைப்போல் காத்தருள் செய்து, காமாட்சி என்னும் பெயர் பெறுவாய் என்று செந்தாமரைப்பூவில் வாழ் ந்திருக்கும் திருமகள் துதிசெய்தலும், எம்பெருமாட்டி கருணைகூர்ந்து காட்சிகொடுத்தருளிப் பூமகளே! நீ நடுங்காதே. உன் உடம்பின் கருநி றம்கருஞ்சாந்து ஆகக்கழிந்துபோகக்கடவது. முன்னையிலும் நல்லஉருவம் பெறுவாய். இப்பொழுதே திருமாலுக்கு உகந்தபத்தினியாவாய். வீணி லே இரவுக்கையைக் கிழித்து உயர்ந்து அண்ணந்து மதர்த்துப்பருத்திருக் கின்ற பயோதரங்களை உடையவளே! அதிரூபசுந்தரியாகிய உன் திரு மேனியிலிருந்து கழிந்துபோகும் அந்தக்கருஞ்சாந்தை எடுத்துநெற்றியில் திலதமாக இட்டுக்கொள்பவர்களுக்குக் கலியாணமும் சந்தோஷமும் செல்வமும் புகழும் மென்மேலும் விர்த்தி ஆகுக. பழிபாவங்கள் அணுகா மல் ஒழிக, பழையவேதம் எல்லாம் ஓதி உணர்ந்து பெருமை பெற்றி ருக்கும் சரசுவதியும் இங்கே வாசம் செய்கின்றமையால், அன்புடன் நீ விரும்பியபடியே எனக்குக் காமாட்சி என்கின்ற பெயர் உண்டாகுக என்று சொல்ல, இந்தப்பிரகாரம் இவ்விடத்தில் சம்பாஷணை நடந்து கொண்டிருக்கையில், வண்டுகள் முழங்கும் தாமரைமலர் போலும் நாபியையுடைய திருமால் அந்தப்புரத்திற் சென்று, தன் மனைவியாகிய திருமகளைக்காணமல் மனம் வருந்திப் பிரிவுஎன்னும் பெருநோய் வருத்த ப்படுத்துவதனுல் சகிக்கமாட்டாமல், கடல்சூழ்ந்த உலகம் எங்கும் தேடி க்கடைசியில் காஞ்சிமாநகரத்திற் கண்டு, தன்பத்தினியாகிய திருமகளும் எம்பெருமாட்டி ஆகிய காமாட்சி தேவியும் தம்மில் கலந்து பேசுவதை உற்றுக்கேட்டுக்கொண்டு அவ்விடத்தில் மறைந்து நின்ருன். செம்பொ ன்வளையல் அணிந்த கைகளை யுடைய அவ்விருவரும் அவன் ஒளித்துக் கொண்டு நிற்பதை அறிந்து, எம்பெருமாட்டி அவனைப்பார்த்து, இங்கே திருடனைப்போல் பதுங்கி நிற்பவன் யாவன்? என்று கேட்டலும், திரு மகள் வெட்கம் அடைந்து தேவி திருவடிமேல் முந்தி விழுந்து பணிந் தாள். மாயவனும் விரைவில் எம்பெருமாட்டியின் இணையடிகளைத் தொ ழுது மனமகிழ்ந்து ஒருபக்கமாக ஒதுங்கி நின்ருன். எம்பெருமாட்டி அந்தச்சேஷசயனனைப்பார்த்துச் செந்தாமரைக்கண்ணு! நீ நன்ருயிருக்கி

ன்றையோ ? நீ பாதுகாக்கும் மூன்றுலகத்தில் உள்ளவர்கள் எல்லாரும் க்ஷேமமா யிருக்கின்முர்களோ ? என்று கேட்டலும், கருடவாகனன் ஆகிய அந்தத் திருமால் கைகூப்பித் தொழுது மகாதேவி ! உன்கருணை பெற்றிருக்கின்ற எங்கள்வாழ்வுக்கு ஒரு தாழ்வுவருமோ? நானும் என்ப த்தினியாகிய இவளும் கடைத்தேறினேம். இனி எங்களுக்கு என்னகு றை ? என்று வணக்கமாய்ச் சொன்னுன். எம்பெருமாட்டி பின்னும் அவனுக்கு ஒருவார்த்தை சொல்லுகின்முள். மாயவனே ! முப்பத்திர ண்டு தரு மங்களைவளர்க்கும் என் அறச்சாலை இது. இந்தத்தருமங்களுக்கு இடையூருக இங்கே ஒரு மகா பூதம் மிக்கபலத்துடன் சஞ்சரித்துக்கொ ண்டிருக்கின்றது. நீ அதன் துஷ்டத்தனத்தை அடக்கிவிடு என்று ஏவ, அந்தத்திருமால் நயந்து தொழுது பஞ்சதீர்த்தக் கரைமேல் தன்னைப்ப கைத்த பூதத்தைத் தரைமேல் தள்ளித் தன்பலமெல்லாம் கொண்டு மிதி த்து மிதித்தபடியே அதன்மேல் நின்முன். அந்தப்பூதம் தன்னை மிதித் துக்கொண்டு நின்றவனைக் கீழேதள்ளி மேலே எழும்பவே அது எழும் பாதபடிக்கு அதன் எலும்புகளை ஒடித்து அதன் மேல் உட்காந்திருந்தா ன். அந்தவெற்றி மிகுந்த வலிய பூதமானது தன்மேல் உட்காந் திருந்த வனையும் அந்தரத்தில தள்ளவே அவன் நீண்டு வளர்ந்து அதன்மேல் படு த்துக்கிடந்தான். உக்கிரங்கொண்ட பூதமானது தன்பலமெல்லாம் இழ ந்து அந்தத்திருமாலை வணங்கி ஒருவரம் கேட்கலுற்றது. மகாப்பிரபு ! மலர்மகள் விளையாடும் மார்பனே ! அடியேன் பெரும்பசியால் மனங்க லங்கினேன். வருஷந்தோறும் அடியேனுக்கு ஒரு பிள்ளையை உயிருட ன் பலிகொடுத்தால் அந்தப்பலி ஏற்று மனமகிழ்ந்திருப்பேன். அடியே னுக்கு இந்தவரம் கொடுத்தருள் என்று பிரார்த்திக்கச் சேஷசயனனுகிய திருமாலும் அப்படியே ஆகுக. என்று சொல்லிப் பத்தர்கள் எல்லாரும் போற்றும்படி அந்தத்தலத்தில் இனிது வீற்றிருந்தான். பாஞ்சசன்னி யம் என்னும் தவளச்சங்கு ஏந்திய கையை யுடைய திருமால் அவ்விடத் திலே கள்வன், நின்றவன், இருந்தவன், கிடந்தவன் என்னும் நான்குவ கையான வடிவங்களுடன் அமர்ந்திருந்தான். காமாட்சிதேவி கட்டளை யால் திருமகளும் அந்தப் பிலத்தின் பக்கத்தில் அமர்ந்திருந்தாள்.

கருடக்கொடி உயர்த்திய திருமாலுக்குப்பிரியமான அவ்விடத்திலே அந்தத்திருமாலை வந்தனைவழிபாடு செய்யப்பெற்றவர்கள்வைகுந்தப்பதவி பெறுவார்கள்.

அன்பர்களே ! நீலகண்டனுகிய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் வீராட்டகாசம் என்னும் தலமகிமையின் தொடர்ச்சியால் இந்தக்காமக்

கோட்டத்தில் திருமால் வரலாறு எல்லாம் சொன்னோம்; அந்தவீராட்டகாசம் என்னும் தலத்தை அன்புடன் வந்தனை வழிபாடு செய்பவர்கள் இம்மையில்பெருவாழ்வு பெற்றவர்களாகி, மறுமையில் சந்திரசேகரனாகிய சிவபெருமானுடைய திருவடிக்கலப்பில் உண்டாகும் சின்மயானந்த போகம் பெறுவார்கள்.

வீராட்டகாசப் பெருமான்மெய்யடிபோற்றி.

---

நாற்பத்தேழாவது

## பாண்டவீசப்படலம்.

சிவயோகச் செல்வர்களே! பேரன்புகொண்டு சாக்கிய நாயனார் எறிந்த கல் அடிக்கும் கதிகொடுத்தருளிய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் வீராட்டகாசம் என்னும் தலமகிமை சொன்னோம். இதன் தெற்கில் மேகமண்டலத்தை அளாவிய மதிலால் சூழப்பட்ட பாண்டவீசம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

தருமக்கடவுள் புத்திரனாகிய தருமனுடன் வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் என்னும் பாண்டவர் ஐவரும் வனவாசம் பண்ணியகாலத்தில் உரோமசன் முதலான முனிவர்களுடன் கலந்து சகல தீர்த்தங்களிலும் நீராடினைத்துத்தீராத ஆவலுடன் யாத்திரை செய்தார்கள். சிங்கத்தைக்கொல்லும் திறல் வீரர் ஐவரும்சென்ற இடங்களில் எல்லாம் சிவலிங்கப் பிரதிஷ்டை பண்ணிச் சிவபெருமானைத் தொழுது துதித்து வரும்வழியிலே, தென்னஞ்சோலை சூழ்ந்து விளங்கும் திருக்காஞ்சிமாநகரத்தைச் சேர்ந்து, அங்குள்ள பல தலங்களையும் பார்த்துப் பரமசந்தோஷமடைந்து, கங்காதரனாகிய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் திருவேகம்பம் முதலான சிவாலயங்கள் எல்லாவற்றையும் பத்தியுடன் தொழுது போய்க் கடைசியில் வீராட்டகாசம் என்னும் தலத்தில் மலர்கொண்டு பேரன்புடன் பூசைசெய்து, அதன் தெற்கில் தங்கள் தங்கள் பெயரால் தனித்தனியாகச் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்தார்கள். தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவன் என்னும் ஐவர்கள், இந்த ஐவருடைய மனைவாழ்க்கைக்கு உரிய கற்பிற் சிறந்த துரோபதை முதலானபத்தினிமார்கள், திருஷ்டத்துய்மனன், சிகண்டி மற்றும் யதுகுல மன்னவர்கள், ரிஷபுவாகனனாகிய சிவபெருமானிடத்தில் அன்பு

வைத்தொழுகும் உரோமசர், முற்கலனர், வியாசர் முதலான பலமுனிவர்கள் என்றுசொல்லப்பட்ட இவர்கள் எல்லாரும் தனித்தனியே இலிங்கப் பிரதிஷ்டை பண்ணிப் பூசித்து வேண்டும் வரம் பெற்றார்கள். அந்நாள் அந்தத் தருமன் முதலானோர் தொழுது துதிசெய்த சிவலிங்கங்களைத் தரிசித் தவர்கள்பொன்னம்பலத்திலே ஆனந்தக்கூத்தாடும் எமது ஐயனுடைய அநுக்கிரகம் பெறுவார்கள்.

அந்தத்தலங்களுக்குத் தெற்கில் கயிலாயம் என்று ஒருதலம் இருக்கின்றது. பகைவர்களுக்கு இடர் செய்யும் சூலாயுதம் ஏந்திய ஈசானன் பூர்வம் அந்தத்தலத்தில் கயிலாயநாதனை ஸ்தாபித்துப் பூசைசெய்து திக்குப்பாலகரில் ஒருவனாகும் பதவிபெற்றான். என்று பெரியோர்கள் சொல்லுவார்கள்.

கயிலாயநாதன் கனைகழல்போற்றி
பாண்டவீசன் பதமலர்போற்றி.

---

நாற்பத்தெட்டாவது.

## மச்சீசப் படலம்.

பற்றற்றுவிளங்கும் பரமஞானிகளே! அருச்சுனன் முதலானவர்கள் வந்தனை வழிபாடுசெய்த பாண்டவீசம் என்னும் தலங்களின் மகிமைசொன்னோம். அந்தப் பாண்டவீசத்திற்கு மேற்கில் இப்பிதீர்த்தத்தின் அருகில் உள்ள மச்சீசம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

எம்பெருமானுடைய நிகரில்லாத அற்புதத்தை அறிவிக்கும்படி இப்பிதீர்த்தம் என்னும்பெயர் வழங்கலாயிற்று.

அந்த இப்பிதீர்த்தக்கரைமேல் திருமால் பூசைசெய்து பேறுபெற்ற மச்சலிங்கம் என்று ஒரு சிவலிங்கம் இருக்கின்றது. மகாபாவியான சோமகாசுரன் வேதங்களை யெல்லாம் திருடிக்கொண்டு சமுத்திரத்தில் ஒளித்துக் கொண்டபோது, உலகத்திலே வேதம் இல்லாமல் யாகம் செய்வது ஒழிந்துமழைவளம் குறைந்து அவி அளிப்பார் இல்லாமையால் தேவர்கள் எல்லாரும் கொடியபசியால் நலிந்து மெலிந்து திருமாலைத் தாழ்ந்து பணிந்து தஞ்சம் என்றடுத்துத் துதிசெய்தார்கள். அதுகேட்டு

த்திருமால் தேவர்களே ! நீங்கள் அஞ்சாதிருங்கள் என்று அபயம் அளித்துத் தன்மனதினுல் தியானித்து, அந்தச் சோமகாசுரன் வேதங்கள் எல்லாவற்றையும் திருடிக்கொண்டுபோய்க் கடலில் மறைந்திருப்பதை அறிந்து, பிருகுமுனி இட்டசாபத்தால் மச்சரூபம்கொண்டு மணமலர்ச் சோலைசூழ்ந்து விளங்கும் காஞ்சிமாநகரத்தில் இப்பிதீர்த்தத்தை அடைந்து, மச்சரூபங்கொண்ட தன் பெயரால் மச்சலிங்கப் பிரதிஷ்டைசெய்து, அன்பு மிகுந்து அருச்சனைபண்ணிச் சிவபெருமான் திருவருள்பெற்றுப், பல பண்டங்களால் நிறைந்திருக்கும் கப்பல்கள் உலாவும் கடலில் சென்று, சோமகாசுரனைக்கொன்று, அவன் திருடிக்கொண்டுபோன வேதங்களை எடுத்துக்கொண்டுவந்து வேதியர்களுக்குக் கொடுத்தான். இது அல்லாமலும் கண்டோர் அஞ்சும்படியான நீர்ப்பெருக்குள்ள சமுத்திரத்திலே சேஷசயனத்தின்மேல் செந்தாமரைக்கண்வளரும் மாயவன் சங்குவண்ணனுகிய பஞ்சசனன் என்னும்பெயரையுடைய அசுரனையும் அந்தச்சமுத்திரத்தினிடமாக வதைத்து, வலம்புரிச்சங்குவடிவமாய் விளங்கும் அந்த அசுரன் எலும்பைத்தன் கையில் பாஞ்சசன்னியம் என்னும் சங்கு ஆகத்தரித்துக்கொண்டான்.

அன்பர்களே ! காஞ்சிமாநகரத்திலே செந்துளசி அணியும் திருமால் மச்சாவதாரம் எடுத்துப் பூசைசெய்த மச்சலிங்கத்தை இச்சித்து வாழ்த்துகிறவர்களும் பெறும்பேறு இவ்வளவென்று அளவிட்டுச்சொல்ல வல்லவர் இவ்வுலகத்தில் யாவர் ?

மச்சீசன் மலரடிபோற்றி.

---

நாற்பத்தொன்பதாவது.

## அபிராமீசப் படலம்.

பரம ஞானிகளே ! வண்டின் கூட்டங்கள் வாழ்ந்திருக்கும் பூஞ்சோலைகள் சூழ்ந்து விளங்கும் மச்சலிங்கேசம் என்னும் தலமகிமை சொன்னேம். செந்தாமரைத்தடம் சூழ்ந்திருக்கும் அந்த மச்சலிங்கேசத்திற்கு வடமேற்கில் மாசில்லாதோங்கும் அபிராமீசம் என்னும் தலமகிமை சொல்வோம்.

அசுரர்களுக் கெல்லாம் தலைவனுகிய மாவலி என்பவன் சகலலோகங்களையும் ஏகச்சக்கராதிபதியாய் ஆண்டுகொண்டிருக்கும் நாளில்தேவேந்திரனுடைய அதிகாரம் குறைந்து போனபடியால், இனி நான் என்ன

செய்வேன் என்று ஏங்கித்திகைக்கும்போது, அந்த இந்திரனுக்கு இளையவனுகிச் சுவர்க்கலோகத்திலே உபேந்திரன் என்னும் பெயர்கொண்டிருக்கும் திருமகள் மணாளனுகிய மாயவன் தன் தமயனுக்கு அந்த அரசாட்சியைத்தரும்பொருட்டுக் காசிபமுனிவன், புத்திரனுகி வாமனவடிவங்கொண்டு, காஞ்சிமாநகரத்திற்குச்சென்று, அபிராமீசம் என்னும் சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து ஆகமவிதிப்படி பூசித்துத்துதித்துச் சிலநாள் அவ்விடத்தில்வாசஞ்செய்து, சிவாநுக்கிரகம்பெற்றுமீண்டு அந்தமாவலியினுடைய யாகசாலைக்குப்போய், மூன்று அடி நிலம் வேண்டினன். வேண்டியபோது தன் வஞ்சனையை உணர்ந்து மூன்றடிமண்தானம் கொடுத்தால் விபரீதமாய் முடியும். கொடுக்கவேண்டாம் என்று புத்திசொல்லித்தடைசெய் தசுக்கிரன் கண்ணைக்கெடுத்துக் குருடனுக்கி விட்டுத் தன் அடியால் மூன்று அடி நிலம் தானமாக அந்த அசுரன் கொடுக்க வாங்கிக்கொண்டு சரசர வென்று அண்டகடாகம் வரையில் ஓங்கிவளர்ந்து, மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் இரண்டு அடியாக அளந்து, மற்றொரு அடிக்கு இடமில்லாமல், அந்த அசுரன் தலைமேல் ஓர் அடிவைத்து அழுத்தி, அவனைப்பாதாளத்திலே சிறைப்படுத்தி, ஏகாதிபதியாய் அரசாளும் பதவியை இந்திரனுக்குக்கொடுத்து, மாசில்லாதோங்கும் காஞ்சிமாநகரத்திற்கு வந்து கொன்றைப்பூமாலை சூடிய சடைமுடியையுடைய அபிராமீசனுக்கு அபிஷேகம் செய்யத் தன்பெயரால் வாமனதீர்த்தம் என்று ஒருதீர்த்தம் உண்டாக்கி, அந்தப்புண்ணிய தீர்த்தத்தால் அபிஷேகம் செய்து தொழுது துதிபுரிந்து உலகமெல்லாம் அளந்த தன் உருவத்தை எம்பெருமானுக்குக்காண்பித்து, இன்னருள்பெற்று உலகளந்தபெருமாள் என்னும்பெயர் பூண்டு அவ்விடத்தில் அமர்ந்து சிவபணிசெய்து கொண்டிருந்தனன்.

அபிராமீசன் அடியிணைபோற்றி.

---

ஐம்பதாவது.

## கண்ணீசப்படலம்.

உலகம் பொய் என்று ஒழித்தவர்களே! மாயவன் வாமனவதாரம் எடுத்துப்பூசித்துப் பேறுபெற்ற அபிராமீசம் என்னும் தலமகிமை சொன்னோம், இப்பால் நீர்வளம் பொருந்திய காஞ்சிமாநகரத்தில் சிறந்துவிளங்கும் கண்ணீசம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

திருப்பாற்கடலில் உண்டாகிய விஷம் பட்டுத் தேகமெல்லாம் கறுத்து வேக்காடு உண்டானபடியால் சேஷசயனனாகிய மாயவன் வாடிவருந்தி, அந்தவிஷத்தை அமுது செய்தருளிய எம்பெருமானைத்துதிசெய்யும்பொருட்டுக் காஞ்சிமாநகரத்தை அடைந்து! தன்பெயரால் கண்ணலிங்கப்பிரதிஷ்டைபண்ணி, அன்புமிகுந்து பூசைசெய்து துதிசெய்தலும் பைங்கொடிபோலும் பார்வதிபாகனான சிவபெருமான் காட்சிகொடுத்தருளிக் கண்ணனே! உனக்குவேண்டியது யாது? சொல் என்று கேட்கவே, அந்தக்கண்ணன் கைகூப்பித்தொழுது, செவ்வல்லிமலர்போல் சிவந்திருக்கும் வாயினையுடைய பார்வதிபாகனே! நீ அடியேன்பொருட்டாக ஆலகாலவிஷம் அமுதுசெய்தருளினை. அமுதுசெய்தருள்வதற்கு முன் அந்த விஷம் சற்று என்னைத்தாக்கியபடியால், தேகமெல்லாம் வெந்து கருகிப்போய்விட்டேன். இனி நான் இந்தவேக்காடுபொறுக்கமாட்டேன். நறுமணம்வீசும் கொன்றைமலருடன் குளிர்ந்த சந்திரனைத் தரித்திருக்கும் சடைமுடியுடையவனே! நீ ஆன்மாக்களுக்குப் பாவ விமோசனம் செய்து பரகதிகொடுக்கும் தன்மையால், சங்கரன், சிவன், சம்பு, உருத்திரன் என்னும் திருநாமங்களைக் கொண்டிருக்கின்றாய். அழகிய கண்ணா! அடியேன் உன் அடைக்கலம். என்று மாயவன் தன் குறைகூறிவேண்டுதலும், கொன்றை சூடியாகிய சிவபெருமான் திருவுளம் இரங்கி, நறுமணம் வீசும் துளசிமாலை அணியும் மாதவனே! யாம் ஒன்று சொல்கிறோம் கேள். உனக்கு இந்தவரம் வேண்டுமானால், எந்நாளும் யாம் மகிழ்ந்திருக்கும் திருவேகம்ப லிங்கத்திற்கு எதிரில் சென்று, எமதுசடைமுடிமேல் விளங்கும் சந்திரபிறைக்கு அருகில் நின்று, கச்சிநிலாத்துண்டமால் என்னும் பெயர்பெற்று வாழ்ந்திரு என்று அந்தமாயவன் துயரம் தீரத்திருவாய்மலர்ந்தருளிப் பார்வதிதேவியுடன் மறைந்தருளினார். இப்பால் அந்தமாயவன் தாழ்ந்து பணிந்து எழுந்து தன்துயரம் எல்லாம் நீங்கும்படி அப்படியே ஏகாம்பரநாதர் சந்நிதானத்திலே கச்சிநிலாத் துண்டமால் என்னும் பெயருடன் அமர்ந்திருக்கின்றனன்.

அன்பர்களே! கார்மேகவண்ணனாகிய கண்ணன் தொழுது துதிசெய்த கண்ணலிங்கேசனைப் பத்தியுடன் வந்தனைவழிபாடு செய்தவர்கள் தேவலோகத்தை அடைந்து தேவர்களாய் வாழ்வார்கள்.

கண்ணீசன் கனைகழல்போற்றி.

---

### கவுசிகீசம்.

மேலும் அவ்விடத்திலே கவுசிகேசம் என்று ஒரு சிவஸ்தலம் இருக்கின்றது. அந்தக்கவுசிகேசம் என்னும்தலம் பூர்வம் எம்பெருமான் பார்வதிதேவியைக் காளி என்று அழைத்தநாள் அந்தத்தேவி திருமேனியிலிருந்து கழிந்துபோன கருமேனியின் உரி ஆகிய கோசத்திலிருந்து உண்டான கவுசிகி என்பவள் பத்திமிகுந்து பிரதிஷ்டைசெய்து பூசைபண்ணிப்பேறு பெற்றதாம்.

கவுசிகீசன் கழலிணைபோற்றி.

### மாகாளீசம்.

அன்பர்களே! காமக்கோட்டத்தில் கதிகொடுத்தருளும் உலகாணித்தீர்த்தத்திற்கு அருகில் மாகாளீசம் என்று ஒருதலம் இருக்கின்றது. அந்தமாகாளீசம் என்னும் தலம் பூர்வம் மாகாளன் என்னும் சர்ப்பராஜன் முத்தியின்பம் அடைய விரும்பிப் பூலோகத்திலேதென்கைலாசம் என்று புகழ்பெற்றுவிளங்கும் காளத்தியீசனைத்தொழுது துதித்துக்கொண்டிருக்கையில், அந்தக்காளத்திநாதர் கட்டளைப்படி காஞ்சிமாநகரத்திற்குவந்து, மாகாளீசம் என்னும் சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து, வந்தனைவழிபாடு புரிந்து விடைபெற்று மீண்டு காளத்திக்குப்போய்ப் பரமானந்த போகவீடு பெறப்பட்டது.

மாகாளீசன் மலரடிபோற்றி.

ஐம்பத்தோராவது.

## குமரகோட்டப்படலம்.

ஞானசூரியர்களான நற்றவசிகளே! நீந்துவதற்கு அருமையானபிறவிக்கடலை வற்றிப்போகும்படி செய்தருளும் கண்ணலிங்கம், கவுசிகலிங்கம், மாகாளலிங்கம் என்னும் மூன்று இலிங்கங்களின் மகிமைசொன்னோம். இனி வலி அமைந்த ஆயுதங்களைத் தாங்கிய பகைவருடைய சேனைகள் அனைத்தையும் அழித்து அதம்செய்து நிணம் உண்டு மகிழ்ந்து அந்தப்பகைவருடைய குடலை மாலையாகத் தரித்திருக்கும் வேல் ஏந்திய குமாரசுவாமி வீற்றிருக்கும் குமரகோட்டத்தின் பெருமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமா முனிவர் சொல்லத்தொடங்கினர்.

மிகச்செருக்கு அடைந்திருந்த தாரகன் என்னும் அசுர ராஜனையுத்த களத்திலே வருத்தி வதைசெய்து, தேவேந்திரனுக்கு அரசாட்சிகொடுத்த பின்பு பகைவருடைய செருக்கை அழித்து ஓங்கும் வடிவேலை வலது கையில் ஏந்தும் சுப்பிரமணியசுவாமி கைலாசகிரிக்கு எழுந்தருளிக்கொன்றைப்பூமாலை சூடிய சடாமுடியையுடைய பரமசிவனையும் இடப்பக்கத்தில் வாழ்ந்தருளும் பார்வதிதேவியையும் வணங்கி மகிழ்ந்து, எண்ணிறந்த அண்டரண்ட சராசரங்களை எல்லாம்படைத்துக் காத்தருள்கின்ற அம்மையுடன் விளங்கும் செங்கனிவாய் அழகுகாட்டி நெடுநேரம் விளையாடிப்பார்வதிதேவி பல ஆபரணம் பூட்டி அனுப்ப மீண்டு, கொடிச்சீலைகள் நீண்டுவிளங்கும் தலைவாயிலில் மகாபராக்கிரமசாலியான கஜமுகாசுரனை மர்த்தனம் செய்தருளிய விநாயகமூர்த்தி வசிக்கும் இடத்திற்போகவே, அந்த விநாயகமூர்த்தி, தன் தம்பியாம் அவரைமடிமேல்வைத்துப் பலமுறை உச்சிமோந்து, கன்னத்தில் கரும்பிலும் இனிய முத்தங்கொண்டு, பேரன்புடன் தழுவிப் பெருமகிழ்ச்சி அடைந்து விடைகொடுக்க, ஆறு திருமுகங்களையுடைய எம்பெருமான் எவ்விடத்திலும் வாசம்செய்து கொண்டிருக்கின்ற கணநாதர்கள் இடந்தோறும் சென்று திருவிளையாடல்செய்துகொண்டிருக்கையில், பிரமதேவன் தேவர்கூட்டத்துடன் அம்மை அப்பரைக்கண்டு சேவிக்க அவ்விடம் வந்துசேர்ந்தனன். அந்த இடத்தில் தங்கித்திருவிளையாடல் செய்துகொண்டிருக்கும் சிவசுப்பிரமணிய சுவாமியைச்சற்றும் மதிக்காமல் சரேலென்று உள்ளே நுழைந்து பார்வதியையும் பரமசிவனையும் பணிந்துவாழ்த்தி வேண்டும்வரம்பெற்று விடைகொண்டு தன் உலகத்திற்குப்போகத்திரும்பினன். திரும்புங்காலையிலும் அவ்விடத்தில் திருவிளையாடல் செய்துகொண்டிருக்கின்ற வேலாயுதமூர்த்தியைமதிக்காமற்போகையில், மயில்வாகனமூர்த்தி அதைக்கண்டு, அந்தப்பிரமதேவன் தம்மை மதிக்காமல் போகும்மடமையைக் குறித்துக்கண்கள்சிவந்து புன்னகைசெய்து, ஓய்! இங்கெ வாரும் என்று அழைத்தலும் அவன் திகிலடைந்து வணங்கி அடங்கி ஒடுங்கிக் கைகூப்பிக்கொண்டு ஒருபக்கமாக ஒதுங்கி நின்றான். அப்படி அடங்கி ஒடுங்கி ஒதுங்கி நின்ற பிரமதேவனுடைய முகத்தைப்பார்த்துக் கிரவுஞ்சகிரியை இரண்டாக பிளந்த சுடர்வேல் ஏந்திய சுப்பிரமணியசுவாமி சொல்லுகிறார். நீ யாவன்? உன் இருப்பிடம் எது? உன் உத்தியோகம் என்ன? உனக்கு என்னசாஸ்திரம் தெரியும்? சொல் என்றுவினவ, அந்தப் பிரமதேவன் ஐயனே! நான் பிரமன். கருணைக்கடலான உமதுபிதா பூர்வம் எனக்குக்கலைஞானங்கள் அனைத்தையும் உபதேசித்து, உலகங்களைப் படைக்க ஏவியபடி, சத்தியலோகத்திலே வாசம் செய்து கொண்டிருக்கிறேன்.

என்று பல்முறை தாழ்ந்து பணிந்துசொல்லி, அமலநாயகனே! இன்று பார்வதிதேவியையும் பரமசிவனையும் கண்டு துதிசெய்யும்பொருட்டு இங்கேவந்தேன். அம்மை அப்பராம் அவர்கள் அநுக்கிரகம் பெற்றுமீண்டேன். மீண்டுவருகையில் நான்செய்த தபோபலத்தால் தங்கள்கடாக்ஷமும் பெற்றேன். உமது அடிமையான நான் இனி என் ஊருக்குப்போய் வருகிறேன் என்று சொல்ல, ஆறுமுக சுவாமி அதைக்கேட்டு, நன்றாய்ச் சொன்னாய். மகாபுத்திசாலி! சகலலோகங்களையும் படைக்கும் சதுமுகன் நீதானோ? சிவபெருமான் திருவருளால் கலைஞானங்கள், எல்லாவற்றையும் கசடறக்கற்று உணர்ந்தாய் அல்லவா! அந்தக்கலைகள் எல்லாம் எடுத்துரைக்கும் ஆதி அட்சரம் எது? அந்த ஆதி எழுத்தின் அர்த்தம் என்ன? இப்பொழுது எனக்கு இதைச்சொல் எனச் (சிலேடையால் மடலவிழ்ந்தமலர்மேல் வசிப்பவன் என்றும் அர்த்தம் தெரியாமையால் புஸ்தகத்தின் ஏட்டை அவிழ்த்துப்பார்க்கும் மலரவன் என்றும் பொருள்படும்) ஏடவிழ்க்குமலராளி தாழ்ந்துபணிந்து, ஐயனே! உன்பிதாவின் அருள் இல்லாமல் எங்களுக்குச்சிறிது அறிவும் உதயம் ஆகுமோ? ஆதி எழுத்தை அறியேன். அதன் அர்த்தமும் தெரியாது. உய்யும்படி கருணை வைத்து அடியேனைக்காத்தருள்க என்று பிரார்த்தனைசெய்து, விரைந்து தப்பித்துக்கொண்டு போய்விடமுயன்றான். சுப்பிரமணிய சுவாமி அதை அறிந்து மலரவனே! நீ ஆதி எழுத்தின் அர்த்தம் சொல்லாமற் போகக் கூடாது. போவாயாகில், ஐந்து திருமுகங்களையுடைய எமதுபிதாவின் ஆணையாகிய விலங்கை விரைவில் வைப்போம், சீக்கிரமாய்ச்சொல் எனலும், அந்தப்பிரமதேவன் சுவாமி! அந்தப் பரமேஸ்வர மூர்த்தி தந்தருளிய செல்வப்புத்திரன் நீ. கலை ஞானங்கள் எல்லாம் உன்னிடத்தில் குடிகொண்டிருக்கின்றன. நீ அறியாதது ஒன்று உண்டோ? எம்பெருமான் திருவடிமேல் ஆணை வைக்கவேண்டாம். ஆதி எழுத்தின் அர்த்தத்தை நான் அறிந்தமாத்திரம் சொல்லுகிறேன் என்று சொல்லலுற்றான், சுவாமி! கலைஞானங்களுக்கெல்லாம் ஆதியாகச் சொல்லப்படுவது ஓம் என்னும் பதமாம். அந்தப்பதத்தின்பொருள் அயன், அரி, அரன் என்னும் மும்மூர்த்திகளாம். என்று பெரியோர்கள் சொல்லுவார்கள், மெய்ஞ்ஞானப் பொருளால் நிறைந்திருக்கும் வேதங்களின் உட்பொருளாய்ச் சோதிமயமாய்ச்சிவயோகிகள் மனதில்தோன்றும் மகிமை பொருந்திய அந்தப் பிரணவ மந்திரத்தை அறிந்தவர்களே இன்பவீடு அடைவதற்கு உரியர் ஆவர். முதல் எழுத்தும் அதன் பொருளும் நான் அறிந்து கொண்டது இவ்வளவே சுவாமி! சரணம். நான்போய் வருகிறேன் விடைகொடுத்தருளும் என்று சொல்லுதலும், சுப்பிரமணிய சுவாமி தன் கணங்களைப்பார்த்துக் கணநாதர்களே! இவன் அற்பன். அணுவளவேனும் அறி

வில்லாதவன். சிறியகேள்வியோர் கழியவும் செருக்குடையார் என்றபடி அகங்காரம்மாத்திரம் அடைந்திருக்கின்றான். ஆதலின் இவனைச் சிறைச் சாலையில் அடைத்துவிடுவோம் என்று கோபம்கொண்டு சொல்லித் தன்னுடையவாசஸ்தலமான கந்தகிரிக்குகையிலே அந்தப்பிரமதேவனைச்சிறைப் படுத்தித் தாமே சகல லோகங்களையும் படைக்கத் தொடங்கினார்.

கணநாதர்கள் அந்தப்பிரமதேவனைச் சிறைச்சாலைக்கு அழைத்துக் கொண்டு போகும்போது ஆறுமுக சுவாமியுடன் அங்கிருந்த முனிவர்களும் தேவர்களும் பின்தொடர்ந்து அந்தக் கந்தகிரி வரைக்கும் போனார்கள். அப்பால் செல்ல விடாமல் கணநாதர்கள் கழுத்தைப்பிடித்து நெட்டித் தள்ளுவதனால், மீண்டு வருந்திக் கைலாசகிரிக்குப்போய்க் கண்ணுதல்மூர்த்தியைக் கண்டு தெண்டனிட்டு எழுந்து நடந்தகாரியங்களைச் சொல்லி முறையிடுதலும், அந்தக்கடவுள் அவர்கள் முகத்தைப் பார்த்துச் சொல்லுகிறார். தேவர்களே! முனிவர்களே ! வேதங்கள் எல்லாம் எம்மையும் எமது இளங்குமரனாகிய சுப்பிரமணியனையும் பிரணவப் பொருளாக எடுத்துச்சொல்லுகின்றன அன்றோ? அந்தவேதங்களை ஓதி உணர்ந்த பிரமதேவன் இப்படிச்சொல்லியது மிகவும் ஆச்சரியமாயிருக்கின்றது. சகலகலைகளுக்கும் பஞ்சபூதங்களுக்கும் பிரமதேவனுக்கும் தேவன் என்று சொல்லத்தக்க முதற்கடவுளை அந்தவேதங்கள் பரம் பிரமம் சதாசிவன் ஓம் என்று பிரணவத்தை ஒருமுறை கூட்டி உச்சரிக்குமே அல்லாமல் இரண்டுமுறை கூட்டி உச்சரிப்பதில்லை. ஆனால், எமது குமாரன் சுப்பிரமணியனை மாத்திரம் ஆகவனீயம், தக்கிணாக்கினியம், காருகபத்தியம் என்னும் மூன்றுவகையான செந்தீயால் வளர்க்கப்படும் யாகத்தின்கண் சுப்பிரமணியன் ஓம் என்றுமூன்றுதரம் எடுத்துச்சொல்லும். இப்படிச் சொல்லுவதின் கருத்தை அறிந்துகொள்ளாத பிரமதேவனை யாம் சிறையிலிருந்து விடுவிப்பது எப்படி? சொல்லுங்கள். விடுவித்தல் கூடாது. ஆயினும் காருண்ய சத்தியால் அவனை விடுதலைசெய்வோம். நீங்கள் பயப்படவேண்டாம் என்று பரிந்துசொல்லி, நந்திதேவனைப்பார்த்து, நந்தியப்பா! நீ ஆறுமுகனிடத்திற்குப்போய்ப் பிரமதேவனை விடுதலைசெய். கோபிக்காதே, என்று யாம் சொல்லியதாகச்சொல்லி, அந்தப் பிரமதேவனைச் சிறையிலிருந்து மீட்டு எம்மிடத்திற்கு அழைத்துக்கொண்டுவா என்று கட்டளையிட்டருளினார். அது கேட்டு வேத்திராயுத பாணியாகிய நந்திதேவர் விடை பெற்றுக்கொண்டு வேலாயுதமூர்த்தி யிடத்திற்குப் போய், மாமரத்தின் வடிவம்கொண்டிருந்த சூரபத்மனை வதைத்தருளிய அந்தச்சுப்பிரமணிய சுவாமியைத் தொழுது தரையில் விழுந்து பணிந்து எம்பெருமானே! பரசுபாணியான சிவபெருமான்பிரமதேவனைத் தாங்கள்

விடுதலைசெய்யச்சொன்னார் என்று துதிசெய்யும்போது, அந்த ஆறு முகக்கடவுள் தமது உதட்டைக்கடித்து உக்கிரங் கொள்ளுதலும் பயந்து மீண்டு, விரைந்து ஓடிவந்து, கைலாசபதீ! உமது கட்டளையை அடியேன் விண்ணப்பஞ்செய்யச் சிறிதும் விரும்பாமல், மயில்வாகனக்கடவுள் கோபங் கொண்டமையால், பயந்து ஓடிவந்துவிட்டேன் என்று சொல்ல, மொய்த்திருக்கும் வண்டுகள் றீங்காரம்செய்யும் பூமாலைசூடியதேவர்களும், முனிவர்களும் கேட்டுத் தங்கள் கைகளை நெரித்துக்கொண்டு இனி என்னசெய்வோம் என்று ஏங்கித் திகைத்துச் சுவாமீ! கைலாசபதீ! அடியேங்களைக் காத்தருளாய் என்று அவர் திருவடிமேல் விழுந்து பணிந்தார்கள். கைலாசகிரியைக் காவல்செய்பவர்களில் தலைவரான நந்திதேவர் வாய்ச்சொல்லையும் சுரர்முனிவருடைய துயரத்தையும் எம்பெருமான் திருவுளத்திற்கொண்டு, கருணை மிகுந்து அந்தக்கந்தகிரியில் வசிக்கும் தமது புத்திரனைக் காணும் அபேட்சையால், பார்வதி தேவியாருடன் வருவதைப் பார்த்து, வேலாயுதமூர்த்தி விரைந்து எதிர்கொண்டு சென்று, அம்மை அப்பருடைய பாதங்களை வணங்கித் துதிசெய்து நிற்க, அவ்விருவரும் அவரைத் தங்கள் மடிமேல் வைத்து, மனமகிழ்ந்து அன்புகூர்ந்து, செங்கனிவாய் முத்தம் உண்டு, உச்சிமோந்து மனங்குழையத் தழுவியபின்பு நாயேனையும் அடிமைகொண்டாளும் சிவபெருமான் புன்னகைசெய்து அழகுகாட்டித் திருமேனியைத் தடவிக் குமாரா! உன்னை அவமதித்த பிரமதேவனைச் சிறையிலிருந்து விடுதலைசெய் என்று சொல்லிப் பின்னும் நீ நமது கட்டளையை மறுத்தாய். அந்தத்தோஷம் தீர நீ பிராயச்சித்தம் செய்துகொள்ளவேண்டும். பிராயச்சித்தம் செய்துகொள்வதற்குக் கொடியமாயை அணுகுவதற்கு அருமையான காஞ்சிமாநகரத்திற்குப்போய், அன்புடன் அவ்விடத்தில் தேவசேனாபதீச்சரம் என்று இலிங்கப்பிரதிஷ்டைபண்ணி விதிப்படி பூசைசெய்து புகழ்ந்து மனவூக்கங்கொண்டு தவம் செய் என்று சொல்லக்கேட்டுக் கடப்பம் பூமாலையணிந்திருக்கும் சுப்பிரமணியசுவாமி தன் கணங்களைக்கொண்டு பிரமதேவனைச் சிவபெருமான் சந்நிதானத்தில் சேர்ப்பித்து, உள்ளன்புடன் அம்மை அப்பருடைய திருவடிகளை வணங்கி விடைபெற்று மீண்டு, வயல்களால் சூழப்பட்டு மாசில்லாதோங்கும் காஞ்சிமாநகரத்தை அடைந்து, உலகாணித்தீர்த்தத்தின் மேற்கில் மாகாளீசத்தின் அருகில் தேவசேனாபதீசலிங்கப்பிரதிஷ்டை செய்து, விதிப்படி பூசித்துத் துதித்து, வள்ளிநாச்சியாருக்கு உகந்த மணவாளன் ஆகிய அந்தக் குமாரசுவாமி ஆனவர் தமது அரையில் புள்ளிமான்தோல் ஆடையும் மௌஞ்சி அரைஞாணும் விளங்கவும் திருக்கரங்களில் திருக்கண்மணிமாலையும் கமண்டலமும் பிர

காசிக்கவும் நினைப்பவருடைய பிறவிகளைப்போக்கிப் பேரின்ப வீடுகொடுக்கும் திருக்குமரகோட்டம் என்னும் ஆசிரமத்தில் முனிவர்கள் புடைசூழ்ந்து போற்றுதல்செய்ய இனிது வீற்றிருந்தார்.

அன்பர்களே! அழகிய மாணிக்கங்கள்ஒளிவீசப் பதித்திருக்கு நெடியமதிலால் சூழப்பட்ட குமரகோட்டம் என்னும் தலத்தை ஒருமுறைஇருவிழியாலும் காணப்பெற்றால், கடையர் ஆனாலும் மறுபிறப்பில் மறையவராய்ப் பிறப்பர். அந்தணர் முதலானவர்கள் தொழுதுவணங்கப் பெறுவராயின், மறுமையில் தேவர்கள் யாவரும் கண்டுதெளியாத பரம்பொருளின் இயல்பை அறிந்து பேரின்பவீட்டில் பரமானந்த போகம்பெற்று மாறுமல் வாழ்ந்திருப்பார்கள்.

தேவசேனாபதீசன் திருவடிபோற்றி.

துறவிகாள்! இடையறாமல் முழங்கும் அருவிகளையும் செம்பொற் சிகரங்களையும் உடைய கிரவுஞ்சகிரியைப் பிளந்த வேலாயுத மூர்த்தியாகிய குமாரசுவாமி வந்தனைவழிபாடுசெய்ய விளங்கும் இந்தத் தேவசேனாபதீச்சத்தில் வீற்றிருக்கும் சிவபெருமானை ஆவலுடன்பூசித்துப்புகழ்ந்து, வலிமையால் விளங்கும் சக்கராயுதத்தை வலதுகையில் ஏந்திய மாயவன் "உருகும் உள்ளத்தான்" என்று பெரியோர்கள் எடுத்துச்சொல்லும் ஒரு திருநாமம் பெற்றான். அந்தப்பெயர்பெற்றவிதமும்சொல்வாம்கேளுங்கள்.

முள்ளுடன் கூடிய அடியையுடைய வளமான தண்டின்மேல் மலர்ந்த தாமரையில் வாசம்செய்யும் பிரமகற்பம் ஒன்று முடிதலும், உயிர்கள் எல்லாம் நடுங்கும்படி விரைந்து பரந்து உலகங்களை எல்லாம் சூழ்ந்து கொண்ட சலப்பிரளயத்தின்மேல் மார்க்கண்டேய முனிவன் மிதந்துகொண்டிருந்தான். தனியனாகிச்ச லப்பிரளயத்தில் தத்தளித்துக்கொண்டிருக்கின்ற அந்த முனிவன் அவ்விடத்தில் சேஷசயனத்தின்மேல் இன்பநித்திரை செய்து கொண்டிருந்த மாயவனைக்கண்டு அருகில் சென்று பணிந்து, மனமகிழ்ந்து சொல்லுகின்றான். துளசிமாலையணியும் திருமாலே! சண்டமாருதக்கள் நிலையாகநின்று எரிக்க அண்டரண்ட சராசரங்கள் எல்லாம் சாம்பலாய்ப் போகக் கண்டேன். அப்பொழுது பலத்திற்சிறந்த அறிவை இழந்து மயக்கம் அடைந்தேன். அப்பொழுது உண்டான மயக்கம் தீர்ந்து இப்பொழுது உணர்ச்சிபெற்றெழுந்தேன். சலப்பிரளயத்திலே நீந்தி நீந்தி என் கால்களும் கைகளும் மேலிந்து ஓய்ந்துபோயின. புண்ணியவசத்தால் யான் உன்னை இங்குக் கண்டேன். பூமிதேவியின்புணர்முலைப்போகம் அநுபவிக்கும்மார்பு உடை

யவனே ! பேராண்மையுள்ளவனே! உலகமெல்லாம் காரிருள் மூடிக்கொண்டது. சோதிமயமான சூரிய சந்திரர்கள் எங்கே போனார்கள். மற்றும் கிரகங்களும் எங்கே மறைந்துபோய்விட்டன ? பூலோகத்திலே இருந்த பொருள்கள் எல்லாம் எங்குச்சேர்ந்தன ? இவைகளையெல்லாம் விளங்க நீ எனக்குச் சொல்லவேண்டும் என்று பிரார்த்திக்க, அந்த மாதவன் இந்த மாதவனைப்பார்த்து, மார்க்கண்டேயமுனிவனே ! அண்டரண்ட சராசரங்கள் எல்லாம் என் வயிற்றுக்குள் அடங்கியிருக்கின்றன. நீ பார்க்கவேண்டுமானால் என் வாய்க்குள் நுழைந்துபார் என்று சொல்லுதலும், அந்த முனிவன் சொல்லுகின்றான். மாயவனே !, நீ இப்படிப்பட்ட நயவஞ்சகமான வார்த்தையிலேயே முன் ஒரு கற்பத்தில் பிரமதேவனை மோசம்பண்ணிவிட்டாய். அம்பரீஷன் என்னும் அரசன் அரமனையில் நாரதமுனிவனையும் ஸ்ரீசைலமுனிவனையும் வஞ்சித்து, அந்த அரசன்மகளை அபகரித்துக்கொண்டுபோய்விட்டாய். வருந்தும்படியாகமாவலி என்னும் அசுரனுக்கும் பூர்வம் வஞ்சனைசெய்தாய்.

இந்தப்பிரகாரம் உன்னை நம்பியிருக்கும் அடியார்களுக்கும் மோசமேசெய்வது உன் உத்தியோகம் என்று தெரிந்துகொண்டிருக்கின்றேன். ஆதலின் உனக்குநான் அஞ்சுகிறேன். இனி வழிபார்த்துக்கொண்டுபோகின்றேன் என்று சொல்லிவிட்டு அந்த வெள்ள நீரைத் தன்கைகளால் நீந்தி அவ்விடம்விட்டுப்போய்விட்டான்,

அப்படியாக நீந்திக்கொண்டு போகும்போது அந்த வெள்ளத்தின் மேல் தோன்றும் வேதமாகிய மாமரத்தின் கிளைகளில் தழைத்திருக்கும் தழைகளைக்கண்டு அவைகளை ஆதரவாகப்பிடித்து, விரைவில் உள்ளே இறங்கி, அவ்விடத்திலே சோதிமயமாக நீண்டிருக்கும் செம்பொன்மதிலால் சூழப்பட்ட மாடமாளிகைகளையுடைய காஞ்சிமா நகரத்தைக் கண்டான். வீசுகின்ற அலைகளை யுடைய வெள்ளமானது மதில்போல் சூழ்ந்துகொள்ள, ஒரு நீர்க்குமிழிக்குள் அடங்கிய வெளிபோல் விளங்கி நீண்டிருக்கின்ற ஒருமாவடியிலே வீற்றிருக்கும் ஏகாம்பரநாதருடைய அருட்சோதி ததும்ப நிலைபெற்றிருக்கும் காஞ்சிமாநகரத்தில் உள்ள அதிசயங்களைப்பார்க்குந்தோறும் அதிசயம் அடைந்தான். அவ்விடத்தில் தங்கி ஆயாசம் தீர்ந்தபின்பு திருவேகம்ப முடையவரை அடுத்து அருச்சனை செய்து, அந்த இராத்திரிமுழுதும் திருவேகம்பர் சந்நிதானத்திலே தங்கியிருந்தான். சங்கு சக்கரங்களை ஏந்திய மாயவனும் அந்த மார்க்கண்டேய முனிவனைத் தொடர்ந்து வந்தனன், வரும்வழியில் காஞ்சிமாநகரத்தை அடைந்து, அந்த நகர் அலங்காரம் எல்லாம் அதிசயம் உண்டாகப்பார்

த்துமாவடியில் சிறந்து வீற்றிருக்கின்ற ஏகாம்பரநாதனைவணங்கிவாழ்த்தி, அந்த மார்க்கண்டேய முனிவன் சொல்லிய எல்லாவற்றையும் எண்ணி, எண்ணி, மனம் புண்ணாகி நான் என்னகாரியம் செய்யநினைந்தேன் என்று அநுதாபப்பட்டு, என்னை அடைக்கலமாக அடுத்தவர்களுக்கும் எந்நாளும் வஞ்சனையே செய்கின்றேன். பராசத்தியான பார்வதி தேவியின் மாயையால் மதிமயங்கினேன். எனக்கு உண்டான மாயையை நீக்கும் பொருட்டுப் பார்வதிதேவியாருடைய பாதாரவிந்தங்களை ஆதாரமாக அடுத்து அருச்சனைசெய்வேன் என்றுகாமக்கோட்டத்திற்குப்போயினன். அந்தக்காமக்கோட்டத்தில் சிறந்து வீற்றிருக்கின்ற காமாட்சி தேவியைப் பூசித்துத் துதிசெய்து அந்தத்தேவி அருளால் மாயையை ஒழித்து மெய்ஞ்ஞானம்பெற்றுப் பஞ்சதீர்த்த நீராடித் தேவசேனாபதீசத்திற்குப்போய் அந்தத்தேவசேனாபதீசனை விதிப்படி பூசைசெய்து கொண்டிருக்கையில், எம்பெருமான் திருவருள்சுரந்து காட்சிகொடுக்கக்கண்டு தெண்டனிட்டுப்பணிந்து தொழுது சுவாமி ! அடியேனுக்கு உன் திருவடியில் மாறாத பத்தி கொடுத்தருளவேண்டும். அதல்லாமல் மெய்த்தபசிகளிடத்திலும் மெய்யடியவரிடத்திலும் ஒருக்ஷணம் ஆனாலும் வஞ்சனைசெய்யக்கூடாது என்னும் மனமும்கொடுத்தருளவேண்டும். எம்பெருமானே ! இந்தத்தலத்தில் உன்குமாரனுடன் உன் சந்நிதானத்திலே வாசம்செய்துகொண்டிருக்கவும் வரம்தரவேண்டும். என்று குறைகூறி விண்ணப்பம்செய்துகொள்ள, வெண்பிறை அணிந்து நீண்டிருக்கும் செஞ்சடைமுடியையுடைய சிவபெருமான் திருவுளமகிழ்ந்து அப்படியே ஆகுக என்று அநுக்கிரகம் செய்துபின்னும் சொல்லுகின்றார்.

நிலையானபத்தியுடையானே ! இனி நீ உருகும் உள்ளக்கோயிலான் என்று ஒரு பெயர்பெற்றுச்சிறந்துவாழ்க என்று மறைந்தருளினர். இப்பால் பூர்வம் கோவர்த்தனமலையைக் குடையாக எடுத்துப்பிடித்துப்பசுக்கூட்டங்களைப்பாதுகாத்த திருமாலும் உருகும் உள்ளக்கோயிலான் என்னும்பெயருடன் மணம்வீசும் வெட்சிமாலை சூடிய குமரக்கடவுள் அருள் பெற்று அவ்விடத்தில் மகிழ்ந்து வாழ்ந்திருந்தான்.

அன்பர்களே ! இப்படிப்பட்ட மகத்துவமுள்ள குமரகோட்டம் என்னும் தலத்தில் சிறந்து வீற்றிருக்கும் வேலாயுதமூர்த்தியின் சீர்பாதகமலங்களைக் கார்த்திகைநட்சத்திரத்திலும், விசாகநட்சத்திரத்திலும், சனி, நாயிறு, செவ்வாய் தவிர மற்றவாரங்களிலும் விரும்பிச்சென்று தொழுது துதிசெய்பவர்கள் பெறும்பேறுகள் எல்லாம் எடுத்துச்சொல்லுந் தன்மையுடையவர்யாவர் ?

குமரகோட்டத்தெம்மான் குரைகழல்போற்றி.
உருகுமுள்ளக்கோயிலான் உபயத்தாள்போற்றி.

## ஐம்பத்திரண்டாவது.

## மாசாத்தன் றளிப்படலம்.

புண்ணிய குணசீலர்களே! தேன் உமிழும் தாமரைப் பூம்பொகுட்டில் வாழ்ந்திருக்கின்ற பிரமதேவனைச் சிறைப்படுத்திய சுப்பிரமணிய சுவாமி சிறந்து வீற்றிக்கும் குமரகோட்டம் என்னும் தலமகிமை சொன்ஞேம், இனி நிறைமலர்ச் சோலை சூழ்ந்துவிளங்கும் அந்தக் குமரகோட்டத்திற்குத் தெற்கில் புகழ்பெற்ரேங்கும் மாசாத்தன்றளி என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

கூர்மையான கோரதந்தங்களையுடைய அசுரர்களும் தேவர்களும் மந்தர மலையை நாட்டி வாசுகி என்னும் பாம்பைவடமாகப்பூட்டி இழுத்துக் கடைந்தபோது திருப்பாற்கடலில் உண்டாகிய தீய விஷத்தைக் கண்டத்தில் அடக்கி அச்சம் தீர்த்தருளிய சிவபெருமான் திருவருள்பெற்று மறுபடியும் அவர்கள் அந்தக் கடலைக் கடைந்தபோது அதிலிருந்து மூதேவியும் ஸ்ரீதேவியும் சிந்தாமணியும் காமதேனுவும் கற்பக விருட்சமும் தெய்வப்பெண்களும் மருத்துவர்களும் நான்கு தந்தங்களையுடைய வெள்ளையானை முதலான பல பொருள்களும் தோன்றியபின் அவர்களை வாட்டும் மரணநோய் தீர்க்கும் மருந்தாக அமுதம் தோன்றுதலும், அந்த அமுதத்தை அபகரித்துக்கொள்ளுதற்கு ஆசைப்பட்ட தேவர்களும் அசுரர்களும் தம்மில் கலகம் செய்தார்கள். அந்தச் சண்டையில் அசுரர்கள் தங்கள் பராக்கிரமத்தால் அமுத கலசத்தை அபகரித்துக்கொள்ளத் தோல்வியடைந்து வருந்தித் தேவர்கள் மனங்கலங்கித் திகைக்கும் துயரத்தைப் பார்த்துத் தேன்பொழியும் துளசிமாலை யணிந்த மேகவண்ணனுகிய கண்ணன் தன் இரு கண்களைப்பார்த்து யமனும் பயப்படும்படியான மோகினி வடிவங் கொண்டான். பெண் தன்மையும் பேரழகும் மாயமும் பேதம் இல்லாமல் தம்மில் கலந்து திரண்டு ஒருவடிவம் கொண்டாற்போல் விளங்கி அவர்கள் முன்தோன்றி அசுரர்கள் கையிலிருந்த அமுதத்தைத் தன் கையில் வாங்கிக்கொண்டு, சுராசுரர்களே! நீங்கள் எல்லாரும் விரைவில் வரிசை வரிசையாய் உட்காருங்கள். இவ்விடத்தில் இந்த இனிமையான அமுதத்தை எல்லோர்க்கும் அவரவர்கள் இஷ்டப்படி நான் பகுத்துக் கொடுக்கின்றேன். வேலாயுதம்போன்ற கண்களையுடைய ஸ்திரீ ஆகிய நான் ஆசைப்படப் பெற்றவர்களுக்கு அமுதம் அதிகமாகக்

கொடுப்பேன் என்று திருப்பாற்கடலிலே சேஷ சயனத்தின்மேல் வாழ்ந்திருக்கும் சங்கபாணியாகிய மாயவன் எல்லாரும் மகிழ்ச்சி அடையச் சொல்லுதலும், அழகிய வளையல் அணிந்தவளான திதிபுத்திரர் ஆகிய அசுரர்கள், அந்த மோகினியினுடைய, சத்தம்இடுகின்ற சமுத்திர சலத்தைக் குடித்த சூல்கொண்ட கார்மேகங்கள் வெட்கப்பட்டு வெளுத்துப்போகும்படி நுனி குழன்று இருண்டு நெய்ப்பசையுற்று நீண்டு மகரமச்சக் கோலம் வலம்புரிக்கோலம் என்னும் தலைக்கோலங்களை விளங்கத்தரித்து இழைபோல் சிறுத்திருக்கும் இடையைத் தொட்டுக்கொண்டிருக்கின்ற மலர்க்கூந்தலையும், சாதிலிங்கத்தின் தன்மை கலந்து பாலசூரியப் பிரகாசத்தைக் கவரும் காட்சியுடன் விளங்கும் பரிமளச்சாந்துஎன்னும் அருமையான திலகம் இட்ட சிறு பிறைபோல் பிரகாசிக்கின்ற நெற்றியையும், பிறர் வெல்வதற்கு அருமையான வீரத்தையும் பஞ்சபாணங்களையும் உடைய மன்மதனால் வளைக்கப்பட்ட இனிய மதுரமான தேன்மொழியும் கொடிய கரும்பு வில்லுக்கு வில்லுத்தொழிலைக் கற்பிக்கும் பேரழகு வாய்ந்த புருவக்கடைகளையும், கோபமும் கொடுமையும் உள்ள ஆலகால விஷமும் அமுதமும் கலந்து சிதறிய செவ்வரி படர்ந்து, மை அணிந்து யமன் அதிகாரம் செய்துகொண்டிருக்கும் கண்களிலிருந்து கண்டோர் உயிரைக் களவுசெய்யப் பார்த்துக்கொண்டிருக்கும் கடைக் கண்களையும், மாசு மறுவில்லாத முத்துமணியானது அவளுடைய புன்னகையைப்பார்த்துத் தன்னைப் பழிப்பதாக நினைத்து வெட்கப்பட்டு அந்தப் புன்னகைக்குப் பழி உண்டாக்க வேண்டும் என்று அதன் அருகில் தூக்குப்போட்டுக்கொண்டதுபோல் தொங்கலாடச் சிறந்த அழகு படைத்து, நேர்நின்று பார்த்தவர்களுடைய உயிரை உண்டு, குமிழம் பூப்போல் விளங்கும் நாசி அழகையும், சூரியகாந்தி வீசும் இரத்தினாபரணம் அணிந்திருக்கின்ற வாலிபருடைய மனமெல்லாம் ஆடும்படியான பொன்னூசல்போல் விளங்கிக் கத்திரிக்கோலின் வளையம்போல் வட்டமாக விளங்கும் இரத்தினகுண்டலங்களுடன் பிரகாசிக்கும் செவிகளையும், குயிலின் கூட்டங்கள் வெட்கம் அடையப் புள்ளாங்குழல் இசையுடன் பழகும் மழலைச் சொல்லும் புன்னகையும் அரும்பும் அரும்பு அவிழப்பூத்த செவ்வல்லிப்பூப்போல் சிவந்த வாயினிடமாக அமுதம் ஊற்றாகச் சுரந்து ஓங்கும் கனி இதழின் ஒளியையும், மடல்விரிந்த பாளைகளையுடைய பைங்கமுகோ? (பாக்குமரம்) வயிறுநொந்துபுலம்பி முத்துகளை ஈனும்பருத்தசங்கின் விளக்கமோ? என்று கண்டோர் கருத்தை மயக்கும்படி அழகு குடிகொண்டிருக்கும் கழுத்தையும், மணம் வீசும் இரசம் ஒழுகவும் கணுக்கள் முறியவும்மெல்லிய கரும்புகளை ஒடித்து, இளம் பச்சை மூங்கிலை மலைகளில்

செலுத்திப் பூமாலைகளை வாடச்செய்து மேன்மை பெற்றிருக்கும் அழகமைந்த தோள்களையும், காற்றினால் மடிகின்ற அலைகளையுடைய திருப்பாற்கடலில் தோன்றிய அமுதம்போல் மதுரகீதம் பொருந்திய மகரவீணை முதுகுகாட்டி ஓடச் செம்பொன் வளையலும் வயிரக் கடகமும் நெருங்க அணிந்து பேரழகு படைத்திருக்கும் முழங்கையையும், வார்த்தைசொல்லும் பைங்கிளியின் செம்பவள வாய்போலும் நுனியுள்ள நகங்களின் அழகுவாய்ந்து, நிகரில்லாதிருக்கும் விரல்கள் அமைந்து, பெருஞ்சோதி வீசும் குளிர்ந்த மலர்களையுடைய காந்தளுக்கு ஒப்பான கைகளையும், தேமல் படர்ந்திருக்கும் அழகும் முத்துமாலையும் எழுதப்பட்ட சந்தனக் கோலமும் சந்தனக்குழம்பும் கலந்து மேல் நோக்கி அண்ணாந்து, ஒரு பாதி வெளியிற் காணும்படியாக மறுபாதி மேல் பொன் உத்தரியத்தால் மூடப்பட்டிருக்கும் மலைபோலும் பயோதரங்களையும், காம நோயை உண்டாக்கி வாலிபருடைய மனம் என்னும் மதயானையைப் பிடிக்கும் படுகுழிபோன்ற உந்தியின்மேல் சிறிய வண்டின் தாரைபோல் கரியரோமரேகை வாய்ந்து அழகு படைத்திருக்கும் ஆலிலைக்கு ஒப்பான வயிற்றின் அழகையும், பூங்கொடிபோல அசைந்து, மன்மதனைப்போல் மறைந்து, பருத்திருக்கும் பயோதரங்களுக்குத் தளர்ந்து, ஒரு கைப்பிடிக்குள் அடங்கி உடுக்கைபோல் சிறுத்து, மின்னல்போல் விளங்கும்சிற்றிடையையும், தபசிகளுடைய துறவு ஒழுக்கம் என்னும் சிற்றரசர்களை அடக்கிக் கீழ்ப்படுத்தி, நடு நிலை உயர்ந்து பரந்து பேரொழில்படைத்து, மதுமலர்க்கணை ஏந்திய மன்மதச்சக்கரவர்த்திகொலுவிருக்க விளங்கும் கடிதடத்தையும், நீண்டிருக்கும் இலைகளையுடைய வாழைத்தண்டுபோல் இணைத்து நெருங்கி நீண்டு, விலை மதிக்கப்படாதவட்டிலினால் நுழைக்கப்பட்ட செவ்வொளியுள்ள இழைகளையுடைய செம்பொற்பட்டுச் சேலையின் அழகு வாய்ந்திருக்கும் வளமான தொடைகளையும், ஆசைப்பட்டவர்கள் மருள் அடையப் பேரழகுள்ள மன்மதன் எடுத்து ஊதும் எக்காளமும் அம்புகள் நிறைந்திருக்கும் அம்பருத்தூணியும் வீற்றிருந்தாற்போல் விளங்கும் செம்பொன்மயமான கணைக்கால்களையும், தன்மேற் கோபம் கொண்டிருக்கும் ஒளிமயமான அவள் முகத்திற்குப் பயந்து பாதத்தில் விழுந்துபணியும்சந்திரனைப் போன்ற வெண்மையான நகங்களுடன் மன்மதனால் எழுதப்பட்ட புத்தகத்திற்கு ஒப்பான புறவடிவையும், அன்னநடைபோல்நடக்கும் பூந்தளிர் அடிகளையும், அறிவுடையோர் எண்ணிச் சொல்லுகின்ற உபமானங்கள் எல்லாவற்றையும் கடந்து அள்ளிக்கொள்ளத்தக்க பேரழகு அமைந்தமாசு மறுவில்லாத மேனியில் இளமை மிகுந்து மாணிக்கச் சோதிவீசும் தளிர் நிறத்தையும், உற்றுப்பார்த்தார்கள். அசுரர்கள் உற்றுப்பார்த்தலும் மன்

மத பாணங்களுக்கு இலக்கு ஆகி மாண்டு மடிந்தவர்கள்போல் அறிவை இழந்து விரகதாபம் அடைந்தார்கள். ஸ்திரீ ரூபம் கொண்டுவந்த மாய வன் மாயையால் அந்த அசுரர்களை வசித்துத் தேவர்களுக்கே அமுதமெல் லாம் விரைவாகக் கொடுத்து, அந்தத் தேவர்கள்போல் வடிவம்கொண்டு அவர்களுடன் தங்கியிருந்த இராகுவை அமுதம் அள்ளிப் படைத்த அகப் பையால் தலை அரிந்து, தானும் அமுதம் உண்டு மனமகிழ்ந்திருந்தான். அதைக்கண்டு பகைகொண்டு எதிர்த்த அசுரர்களைச்சத்துருசம்மாரம்செய் யும் சக்கராயுதம் ஏந்திய மாயவன் யுத்தம்செய்து வென்று தன் இருப்பி டம் போய்ச் சேர்ந்தான். அழகுள்ள நெடிய ரிஷபக்கொடி ஏந்தி அக்கி னிபோல் நீண்ட சடையிலே ஆகாயகங்கை தாங்கியிருக்கும் சிவபெரு மான் இவைகளை எல்லாம் கேள்விப்பட்டு, ஒரு நாள் தமது பாதங்களைக் கண்டு சேவிக்கவந்த மாயவனை நோக்கி, மாதவா? நீ அமுதம் பகிர்ந்த போது நடந்த காரியம் என்ன? கொண்ட வடிவம் எது? அந்த வடிவ த்தை எம் எதிரில் காண்பிக்கவேண்டும் என்று சொல்லச் சாரங்கபாணி யும் பார்வதி தேவியாருடைய திருமுக தரிசனம்செய்து கடாக்ஷம் பெற் றுத் தேவர் மாதவர் யாவருக்கும் மோகம்மூட்டும் மோகினி வடிவத்தைக் காட்டி விரைவாக நடந்துபோயினன். காமதகனனாகிய சிவபெருமான் விரைந்து எழுந்து நடந்து பிடித்துத்தழுவவும் கார்மேக வண்ணனாகிய மாயவன் கைகளைத்திமிறிக்கொண்டு ஓடிப்போய்விட்டான். மறுபடியும் எம்பெருமான் அந்த மாயவனை வலியப் பிடித்து இறுகத் தழுவியபோது, சகல லோகங்களிலும் வேத விதிகளை நிலைபெறச்செய்யும் நீதிபரனாகிப் பெரும்புகழ் படைத்தோங்கும் சாத்தன் என்பவன் அவ்விடத்தில் அவ் விருவருக்கும் ஒரு புத்திரனாகப் பிறந்தான். இவன் பிறந்த பின்பு மாய வன் வெட்கப்பட்டுத் தேவாதிதேவனாகிய சிவபெருமானுடைய சேவடிக ளைத்தொழுது தன் உலகத்திற்குப் போய்ச்சேர்ந்தான். பெரும் புகழ் படைத்த சாத்தனும் பரமசிவனுடைய பாதாரவிந்தங்களை வாயார வாழ் த்தி வணங்கி வேண்டுதல் செய்யலானான். ஆலகால விஷம் உண்டரு ளிய ஆதாரபூதனே! என் ஐயனே! உன் திருவடிகளைத் தஞ்சம் என்று அடுத்திருக்கின்ற சிறியேன் ஆகிய எனக்கு வினைதீரச் செய்யும் தொழி லைக் கட்டளை யிட்டருளி உன் திருவருளுக்குரிய பெருந்தன்மையை யும் கொடுத்தருள வேண்டும் என்று பிரார்த்திக்கச் சாமகண்டனாகிய எம் பெருமான் சொல்லுகின்றார். மகனே! யாம் சொல்வதைக் கேள். நீ வேண்டும் மகிமை எமது அருளால் அடையுந் தன்மையுள்ளது. அந்த அருளும் மெய்யன்பினால் உண்டாகும். அந்த மெய்யன்பும் பூசை செய் வதனால் வரும் செல்வமாம். பூசையாவது சிவலிங்க பூசையேயாம்.

அந்தச் சிவலிங்க பூசை செய்வதற்கு உரிய இடமும் மேன்மை மிகுந்த மாசில்லாத ஸ்தலங்களாம். அந்தத் தலங்களிலும் காசிப்பட்டணம் சிறந்ததாம். அந்தக் காசியைப்பார்க்கிலும் காஞ்சிமாநகரம் சிறப்புடையதாம். விசாலமான மதிலால் சூழப்பட்ட காஞ்சி மண்டலத்திலே புண்ணியரூபமான சிவலிங்கப் பிரதிஷ்டைபண்ணிப் பூசைசெய்து தேவர்களும் முனிவர்களும் மற்றும் யாவரும் பெரும்பேறு பெற்றுப் பேரின்பம் அடைந்தார்கள். ஆதலால் அந்தக்காஞ்சிமாநகரத்லே நீ எம்மைப் பூசைபண்ணித் துதிசெய்திரு. நீ வேண்டியபடியே தலைவனுக்கும் பதவி நாம்தருவோம் என்று திருவாய்மலர்ந்தருளுதலும், பகைவரைக்கோபிக்கின்ற இலைபோலும் அச்சவடிவமான வேல் ஏந்திய அந்தச்சாத்தன் காஞ்சிமாநகரத்திற்கு வந்து சேர்ந்தான். அதிரூபசுந்தரியாகிய காமாட்சிதேவியின் செந்தாமரைமலர்போலும் திருவடிச்சுவடுபெடிந்து செல்வம்பெருகி விளங்கும்காஞ்சிமாநகரத்தை அடைந்து, வேலாயுதம் ஏந்திய குமாரசுவாமியைக் குமரகோட்டத்தில் வணங்கிவாழ்த்தி, அவர் அருள்பெற்று, அவர் ஆசிரமத்திலே சிவலிங்கப்பிரதிஷ்டை பண்ணி விதிப்படி பூசைசெய்துகொண்டிருந்தான். பூசைசெய்துகொண்டிருக்கும்போது கலீல் கலீல் என்று சத்திக்கும் வீரகண்டைஅணிந்த தேவர்கள் எல்லாரும் புடைசூழ்ந்துவர அந்தச்சாத்தனுக்கு வேதநாயகனாகிய சிவபெருமான் காட்சிகொடுத்தருளித்தமது கணங்களுக்கெல்லாம் தலைவனும்பட்டம் கட்டி மணிமுடி சூட்டினார். அவரிடத்தில் எண்ணிறந்ததேர்கள், யானைகள், குதிரைகள், வீரர்களுடன் நிலையாக நிற்கும் தலைமைப்பட்டம் பெற்றுக்கொண்டு அந்தச்சாத்தன் சிற்றிடையையுடைய காமாட்சிதேவிமகிழ்ந்து வாழ்ந்தருளும் காமக்கோட்டத்தின் அயலில் களித்துவாழ்ந்திருந்தான், பகைவரைஅழிக்கும் பராக்கிரமசாலியாகிய அந்தச்சாத்தன் ஏழுமுழ உயரமான மதயானைகள்மேல் ஏறிநடத்தி மனமகிழ்ந்து இறுமாப்படைந்து, நாள்தோறும் காஞ்சிமாநகரத்திற்கு வடக்கில் உள்ள செண்டுவெளியிலே திருவிளையாடல்செய்து வருவான். மகாபலசாலியான மாசாத்தன் துதித்துப் பேறுபெற்ற மாசாத்தநாதனை அறிவு வளர்ந்தோங்கும் மனதினால் தியானம்செய்து போற்றப்பெற்றவர்கள் தரித்திரத்தால் துன்பப்படாமல் இம்மையிலும் மறுமையிலும் இன்பமே அநுபவிப்பார்கள்.

---

### மங்களீசம்.

முனிவர்களே ! அந்தமாசாத்தன்றளிக்கு வடக்கில் பார்வதிதேவி யாருடைய பாங்கிமார்களில் மங்களை என்பவள் ஓர்விசித்திர மண்டபம் செய்து, அந்தவிசித்திரமண்டபத்தின் பின்பக்கத்தில் மங்களீசனைவிதிப்படி பிரதிஷ்டைபண்ணிப் பெரும்புகழ்படைத்தோங்கும் மங்களதீர்த்தம் என்று ஒருதீர்த்தம் உண்டாக்கி அந்தத்தீர்த்தத்தால் அபிஷேகம்செய்து வந்தனைவழிபாடு புரிந்து வேண்டும்வரம் பெற்றுள், மங்களவாரத்தில் (செவ்வாய்க்கிழமை) அந்தத்தீர்த்த நீராடி மங்களீசனை வணங்கி வாழ்த்துகிறவர்கள் இகபரசுகம்பெறுவார்கள்.

மங்களீசன் மலரடிபோற்றி.

---

### இராமநாதம்.

இப்பொழுது யாம்சொல்லிய அந்தமங்களீசத்திற்கு மேற்கில் தசரதன் மகனாகிய ஸ்ரீராமன் இராவணனைக்கொன்ற பழியையொழிக்கும்பொருட்டுச் சேதுவிலே சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து பூசித்துச் சிவபெருமான் கட்டளையிட்டபடி காஞ்சிமா நகரத்திற்குவந்து இராமநாதனைப் பிரதிஷ்டைசெய்து வந்தனைவழிபாடு புரிந்து, தீவினை தீர்த்து நீர்வளம் பொருந்திய அயோத்திக்குப்போய் அரசாட்சி செய்திருந்தான். அந்த இராமநாதம் என்னும் தலம், சேதுவைப்போல் சிறப்புள்ளதாம்,

இராமநாதன் இணையடிபோற்றி.

---

### மாதலீச்சரம்.

இந்த இராமநாதத்திற்குவடக்கில் தேவேந்திரனுடைய இரதசாரதியான மாதலி என்பவன் பூர்வம் ஸ்ரீராமன் இலங்கைக்கு அரசனான இராவணன் தலைகளைக்கொய்தநாளில் தேவேந்திரன் அனுப்பவந்து இரதசாரதியாகி, வெற்றிமாலைசூடியபின்பு அந்த இராமனுடன் காஞ்சிமாநகரத்திற்குவந்து தன்பெயரால் மாதலீச்சரம் என்னும் சிவலிங்கப்பிரதிஷ்டைபண்ணிப்பூசைசெய்து வேண்டும்வரம் பெற்று மீண்டு விண்ணுலகத்திற்குப்போய் இந்திரனுக்கு மிகுந்த இஷ்டனானன்.

மாதலீசன் மலரடிபோற்றி.
மாசாத்தநாதன் மலர்த்தாள்போற்றி.

---

ஐம்பத்து மூன்றுவது.

## அனந்தபத்ம நாபேசப்படலம்.

ஆனந்தச்செல்வர்களே! ஜனனங்கள்தோறும் விடாமல் பின்தொடர்ந்துவருகின்ற வினைகளைப்போக்கி வீட்டின்பம்கொடுக்கும் மாசாத்தன்றளி, மங்களீசம், இராமீசம், மாதலீசம் என்னும்தலங்களின் மகிமைசொன்னேம், இனிவிருட்சங்களில் உள்ளமலர்கள் உதிர்ந்து சிதறுண்டிருக்கும் மாதலீசத்திற்கு மேற்கில் மாறுப்புகழ் படைத்தோங்கும் அனந்தபத்ம நாபேசம் என்னும் தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

எண்ணிறந்த உயிர்களை ஈன்றருளிய அம்மை அப்பரான பார்வதியும் பரமசிவனும் கைலாசகிரியில் வீற்றிருக்கும்பொழுது ஒருநாள் உலகமெல்லாம் உய்வதை நாடி மனமகிழ்ந்து சொக்கட்டான் ஆடநினைத்தார்கள். அப்பொழுது மாயவன் வந்துவணங்கி நின்று விருப்பத்துடன் விசிறி எடுத்து வீசித் திருமேனியில் துளிக்கும் வெயர்வை நீரை நீக்க நோக்கி, அந்திவெண்பிறைசூடிய சடைமுடியையுடைய பரமசிவனும் பார்வதிதேவியும் அந்தமாயவனை ஆட்டத்திற்குச் சாட்சிவைத்து ஆடினார்கள். கையாற்பிடித்து எறியும் சூதாட்டத்தில் சிவபெருமான்தோல் வியடையச் செந்தளிர்போலும் திருவடிகளையுடைய பிராட்டி எம்பெருமானைப்பார்த்துச்சுவாமி! தங்களை நான் வென்றேன் என்றாள். அதைக்கேட்டுப் பெருமான் நீ வெல்லவில்லை. நாமே வென்றோம் என்றுசொல்லினர். பாசமாகிய கோட்டையைப் புழுதியாக உடைத்தவர்களாகிய அவர்கள் இருவருக்கும் இப்படியாக மேன்மேலும் கலகம் மூண்டது. மூண்டபோது இனி நாம் சச்சரவுசெய்வதை விட்டுவிடுவோம். என்று இருவரும் மாயவனைப்பார்த்துத் தோற்றவர் யார்? கெலித்தவர் யார்? என்று கேட்டலும் அந்தமாயவன் சிவபெருமானுடைய திருமுகத்தைப் பார்த்துச் சுவாமியும் கெலித்தார் என்று கோமுட்டிசாட்சியாய்ச்சொல்ல மாந்தளிர்போலும் திருமேனியுடன் அழகிய வளையலை உடையவளாகிய அம்பிகை அதிககோபங்கொண்டு நீளமான துளசிமாலையணியும் மாயவனே! கண்ணுற்கண்டதைக் கண்டபடிசொல்லாமல் பொய்ச்சாட்சி சொன்னபடியால் நீ தேவர்களும்மற்றயாவரும் இகழும்படி சர்ப்பமாகக்கடவது என்றுசாபம்கொடுக்க, மாயவன் மனந்துடித்துக் குறைகூறித்தாழ்ந்து தொழுது, பராசத்தி! அடியேன் அறியாமையால் சொல்லிய

அபசாரத்தைப் பொறுத்தருள்; என்று பலமுறைசொல்லி ஏங்கித்திகைத் திருக்கும்போதுபெருமாட்டி அவனைப்பார்த்துத் திருவருள்சுரந்து மாயவனே ! நீ பயப்படாதே. நீர்வளமுள்ள காஞ்சிமாநகரத்திற்கு விரைந்து போய், எம்மைப்பூசைசெய். இலிங்கவேதி என்பது என்வடிவம். இலிங்கமூர்த்தி சந்திரசேகரனாகிய சிவபெருமான் வடிவம், சகலரும் புகழும்படியான இலிங்கவேதி என்னும்பெயரினால் என்னை உன்பெயர்விளங்கப் பிரதிஷ்டைசெய்து பூசித்துப் புகழ்ந்து இந்தச் சாபத்தைத் தீர்த்துக் கொள்.

வலம்புரிச்சங்கு ஏந்திய கையுடையவனே ! நீ இனி அனந்த பத்மநாபன் என்னும்பெயர்பெற்று விளங்குவாய் என்று அநுக்கிரகம் செய்தாள். செய்தலும் உருளைக்கல்போல்குவிந்திருக்கும் வலிய தோள்களையுடையமாயவன் பார்வதியையும் பரமசிவனையும் தொழுது விடைபெற்று மீண்டு காஞ்சிமாநகரத்திற்குப் போய்த் திருவேகம்ப லிங்கத்தைக் கண்டு வணங்கி அதன் அருகில் அனந்தபத்மநாப வேதிலிங்கப் பிரதிஷ்டை செய்து, விதிப்படி பூசைபண்ணித் தேவிகடாக்ஷம் பெற்றுப் பாம்புதோலுரித்தாற்போல் தன்னைப் பற்றிய சாபத்தைத் தவிர்த்துத் திருவருளுக்கு உரியன் ஆனான்.

அனந்தபத்மநாபேசன் அடியிணைபோற்றி.

---

ஐம்பத்துநாலாவது.

## கச்சிமயானப்படலம்.

முத்திச்செல்வத்திற்குரிய முனிவர்களே ! பலவிதச்சிற்பத்தொழில் அமைந்த மாளிகைகளாலும் நெடியமதிலாலும் சூழப்பட்டிருக்கும் திரு அனந்த பத்மநாபேசம் என்னும் தலமகிமை சொன்னோம். இனிசராசரப்பொருள்களாய் எங்கும் நிறைந்திருக்கின்ற சிவபெருமான் இனிது வீற்றிருக்கும் மகா அற்புதமான திருக்கச்சிமயானம் என்னும் தலமகிமைசொல்வோம் கேளுங்கள் என்று சூதமா முனிவர் சொல்லத் தொடங்கினர்.

பூர்வம் ஒரு பிரமகற்பமாகிய புருஷகற்பம் முடிந்து பின்உண்டான அகோரகற்பத்திலே விளங்கும் உலகங்களில் உள்ள உயிர்கள் எல்லாம் தழைத்துவளர்ந்து ஓங்கும் காலத்தில் மகாபலசாலியான பண்டாசுரன் என்னும் ஒரு அசுரன் இவ்வுலகத்தில் தோன்றினான். அந்தப்பண்டா

சுரன் செய்தமாதவத்தினல் மனமகிழ்ந்து காட்சிகொடுத்த பிரமதேவனுடைய பாதாரவிந்தங்களைப் பணிந்து சுவாமி ! நான் சுரா சுரருடைய உடம்பிற்கலந்து அவர்கள் வீரியம் எல்லாவற்றையும் உண்ணும்படி வரம் கொடுத்தருள் என்றுசொல்ல, மலரவனும் தீர்க்காலோசனைசெய்து, அப்படியே ஆகுக என்று சொல்லி மறைதலும், அந்த அசுரன் சகலருடைய உடம்பிலும் பிரவேசித்து உயிருடன்கலந்து வீரியம் உண்டு இருக்க, ஆதாரமான வீரியம்போய் உயிர்கள் எல்லாம் வருத்தமடைந்து, திருமேனியின் அழகு மாறி உற்பத்தியில்லாமல் குறைந்துபோய்விட்டன.

மருத்துவர்களும், யட்சர்களும், தேவர்களும், அசுரர்களும், மனிதர்களும், சித்தர்களும், கந்தருவர்களும், உருத்திரர்களும், வசுக்களும், இராட்சதர்களும், சூரியர்களும், சாத்தியர்களும், மருத்துக்களும், பிரமவிஷ்ணுக்களும், மற்றவர்களும் அந்தத்துன்பம் சகிக்கமாட்டாதவர்களாய்க்கூட்டம்கூடிக் கைலாசகிரிக்குப்போய்ச் சிவபெருமான் திருவடிகளைத் தொழுது விண்ணப்பம் செய்யலானார்கள்.

கைலாசபதி ! அடியேங்கள் வீரியம் இல்லாமல் பலம் குறைந்து நடமாடு பிணம்போல் திரிகின்றோம். அதன்காரணம் அறியோம் என்று நாரணன் முதலானவர்கள் வாடிநின்று முறையிடச் சகலலோக நாயகன் புன்னகைசெய்து, திருமால்முதலியவர்களே ! உங்கள்வீரியம் எல்லாவற்றையும்போரிற்சிறந்தபண்டாசுரன் அபகரித்துக்கொண்டான். அந்தப்பண்டன் சகல தேகங்களிலும் கலந்து உயிரினிடமாய்த் தங்கியிருக்கிறபடியால், இனி அவன் எப்படி வெல்லப்படுவான் ? என்று திருவாய்மலர்ந்தருளத் தேவர்கள் முதல் யாவரும்பயந்து, மாங்குயில்போல் மதுர வசனங்களை வசனிக்கும் மலைகள் மணவாளா ! திருப்பாற்கடலில் தோன்றிய ஆலகாலவிஷத்தை அடக்கிய நீலகண்டனே! அடியேங்களைப் பாதுகாப்பது உன்பாரம் என்று துதிக்கலானார்கள். ஐயனே ! சர்வ சத்தியும், சர்வ சுதந்தரமும், சர்வஞானமும், சர்வதயையும், நிமலமேனியும், இயற்கை உணர்வும், இயல்பாகவே பாசங்களில் நீங்குதலும், எல்லை இல்லாத இன்பமும் ஆகிய எண்குணங்கள் உடையானே! அடியேங்கள் எந்நாளும் உனது அடைக்கலம். பார்வதிபாகனே ! எங்கள் ஐயனே ! அண்டங்கள் எல்லாம் அணுவாகும்படி வளர்ந்திருக்கின்றாய். அணுவிலும் அணுவாய் இருக்கின்றாய், அண்டபிண்டங்கள் எங்கும் அசைவற்று நின்று அசைக்கும்நிமித்த காரணனாய் வியாபித்திருக்கின்றாய். உன்னைக் கண்ட சிவயோகியருடைய சிந்தையிலேவீற்றிருக்கின்றாய். மனம்

புத்திசித்தம் அகங்காரம் என்னும் அந்தக் கரணங்களைக் கடந்திருக்கின்றாய். அடியேங்கள் உனது அடைக்கலம். பிரமம் என்பவர்களும் சிவன் என்பவர்களும் சீவன் என்பவர்களும் மயங்குகின்ற கர்மம் என்பவர்களும் வேறு அந்த அந்தக்கடவுள் என்பவர்களும் ஆகித்தம்மில் கலகமிட்டு அந்தஅந்தச்சமயவாதிகள் வாதித்துக் கொண்டிருக்க யாவருக்கும் பொதுவாய் நின்றருளும் புண்ணியப்பொருளே! ஆதியந்தம் இல்லாதவனே! எங்கள் ஐயனே! அடியேங்கள் உனது அடைக்கலம். என்று இந்தப்பிரகாரம் தன்மனம் மகிழும்படி துதிசெய்கின்ற தேவர்களை வீரகண்டை அணிந்திருக்கும் சிவபெருமான்பார்த்துத்தேவர்களே! உங்களுக்கு வீரியம் பெறுவதே கருத்து ஆனால் தக்ககாரியம் செய்து அவனைக்கொல்வோம். அல்லாமல் உடம்பிலும் உயிரிலும் கலந்திருக்கும் அந்தவஞ்சகனைக் கொல்வதுஅரிது. தக்ககாரியம் செய்து கொல்வது உங்களுக்குச்சம்மதமா! என்று வினவினார். ஐயன் வாய்மொழிகேட்டலும் தேவர்கள், செந்தீ ஏந்திய கையனே! எங்கள் சம்மதிபெற்றோ சகலலோகங்களையும் பாதுகாத்தருள்வது?, எங்கள் சம்மதிபெற்றல்லவே ஆதலின் உன் சித்தத்தின் படியே தாமதிக்காமல் அந்தக் காரியம் செய்ய வேண்டும் என்று பிரார்திக்கப் பெருமானும் அப்படியானால், காஞ்சிமாநகரத்திலே யாம் வளர்க்கும் யாகத்தீயிலே அவிபோல் உங்கள் தேகத்துடன் குதித்து அத்தீயுடன் ஒன்றுபடக்கலந்து விடுங்கள். என்று அநுக்கிரகம் செய்ய, அவர்கள் எம்பெருமானே ! நாங்கள் இவ்வுலகத்தில் இருந்து என்ன பயன்? உனது சோதிசொருபத்தில் கலந்து விடுவோம் ஆனால்மென்மேலும் ஓங்கும் இன்பமே அடையப்பெறுவோம், என்றுசொல்லிப் பாதங்களைப்பணிந்து துதிசெய்யும் அவர்களுக்கெல்லாம் விடைகொடுத்துப் பார்வதியுடன் காஞ்சிமாநகரத்தின் ஒருபக்கத்தில்சோதி மயமான அக்கினிச்சுவாலைவீசும் ஒருதிருமேனி கொண்டருளினார். எண்ணிறந்த சுவாலைகள்களைகொண்டுமேலே எழுந்து எங்கும் தணல்வீசும்படி தோன்றி நின்று தன் வலப்பக்கத்திலே நகத்தினால் யாககுண்டம் உண்டாக்கி, அந்தக் குண்டத்தினிடத்தில் வாமதேவமூர்த்தியாய் நெய்பூரித்து அறிவை விளக்கும் தத்துவசாஸ்திரங்களைத் தருப்பையாகவும் இராசதம், தாமதம், சாத்துவிகம் என்னும் மூன்று குணங்களை யூபஸ்தம்பமாகவும் கொண்டு, யாகமும்தானே; யாகத்திற்கு உரியபொருள்களும் தானே, யாகம்செய்பவனும்தானே, யாகத்தின் பலனை அனுபவிப்பவனும் தானே, யாகத்தால் வரும் பயனும் தானே என்னும் வேதரகசியங்களை வெளிப்படையாகக்காட்டி., எம்பெருமான்தன் அருட்சத்தியுடன் யாகம்செய்வதற்குரிய தீக்ஷை பெற்றுக் கொண்டார். வண்டுகள் வாசம் செய்யும் தாமரைப் பூவின்மேல்

வசிக்கின்ற பிரமதேவன் முதலிய தேவர்கள் முதல் மரங்கள் ஈறானதாவரம் வரையில் அண்டரண்டங்களில் உள்ள சராசரப் பொருள் அனைத்தையும்சண்டமாருதம்போல் அதிவேகமாய் எடுத்தெடுத்துச் சுத்திசெய்து நெய்பூரித்து விளங்குகின்ற யாககுண்டத்தில் ஓங்கும் செழுந் தீயில் இட்டருளினார். இடுந்தோறும் மேல்ஓங்கி விளங்கிச் சுவாலை வீசும் தழற் கூட்டத்தில் கலந்து நனைக்கின்ற ஆகாயகங்கையால் அண்டகடாகங்கள் எல்லாம் வெந்து போகாதபடி தடைசெய்ததாகும். ஆகாயகங்கையானது அப்படித் தடைசெய்யாவிட்டால் சராசரப் பொருள்களால் நிறைந்திருக்கும் மேலேழுலகமும் உருகி இவ்வுலகமும் கவிழ்ந்து போய்விடும். இந்தப் பிரகாரம் சராசரங்களையெல்லாம் அக்கினியுடன்கலந்து போகச்செய்து, பழியில்லாதோங்கும் காலாக்கினி ருத்திரன் முதலான கணங்களையும் தேசுமயமாய் விளங்கும் தன்திருமேனியில் ஐக்கியமாகச் சேர்த்துக் கொண்டு, பின்பு அங்குவந்து சேர்ந்த பண்டாசுரனையும் யாகத்தீயில் இட்டருளினார். எண்ணிறந்தவுயிர்களும் யாகத்தீயில் ஒடுங்கி நாள்தோறும் நித்திரைசெய்யும் போது அடைந்தசுகம் போலும் சுகம் அடைந்து மகிழ்ந்து வாழ்ந்திருந்தன. அணுகுவதற்கு அருமையான அந்த அக்கினியானது அந்தநாள் தொடங்கிப்புண்ணியலிங்கமாகிக் கச்சிமயானலிங்கம் என்னும்பெயர்பெற்றுவிளங்கியது. அப்படிப்பட்ட மகத்துவம் உள்ள கச்சிமயான லிங்கத்திலே எம்பெருமான் பெருங்கருணைகொண்டு பார்வதிதேவியாருடன் தன்பாதாரவிந்தங்களை ஆதாரமாகத்தியானம் செய்கின்றவர்களுக்கு இகபரசுகம் அளித்து இனிதுவாழ்ந்திருக்கின்றார். திரிபுரங்கள்சாம்பலாய்விடத்திருமால் என்னும் ஒருபாணம்தொடுக்கவல்லவராகிய சிவபெருமான் அந்தயாகத்தைப் பூர்த்திசெய்து, யாககுண்டத்தைச் சிவகங்கை என்னும்பெயரால் விளங்வைத்துச் சாதுக்கள்புகழ்ந்துபேசும் அபபிருதநீராடினார். வலிய யானைக்காலடியால் மற்றக்காலடிச்சுவடுகள் மறைந்து போவது போலவும் பெரிய ஆலமரமானது சிறுவித்துக்குள் அடங்கியது போலவும் அண்டத்தின் புறத்திலும் உள்ளிடத்திலும் உள்ள தீர்த்தங்கள் எல்லாம் எம்பெருமானால் உண்டாக்கப்பட்ட சிவகங்கையினிடமாகக்கலந்து சிறந்து விளங்கும்.

நிர்மலமானமனமுடையவர்களே! பூர்வம் சிலமுனிவர்கள் அந்தச்சிவகங்கையில் நீராடிக்கச்சிமயானத்தில் வீற்றிருக்கும் கடவுள் அருளால் வினைதீர்ந்துவீடு பெற்றார்கள். அந்தச் செந்தாமரைத்தடாகத்தின் மகிமை இப்படிப்பட்டது என்று தெரிந்து கொள்ளவல்லவர்கள் யாவர்?

கச்சிமயானத்தான் கனைகழல் போற்றி.

ஐம்பத்தைந்தாவது.

## திருவேகம்பப்படலம்.

பூரணனந்தத்தபசிகளே!

தெய்வத்தன்மையுள்ள இயல், இசை, நாடகம் என்னும் முத்தமிழ்ப் புலவர்களும் சீவன் முத்தர்களும் ஆகிய திருஞானசம்பந்தசுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள் என்னும் அப்பர்சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் மாணிக்கவாசகசுவாமிகள் முதலான பெரியோர்களால் புகழ்ந்துபாடப்பெற்ற கச்சித்திருமயானம் என்னும் தலமகிமை இதுவாகும். இனி மாசுமறுவில்லாமல் சிறந்துவிளங்கும் தலங்களுக்கெல்லாம்தலைமை யான தாய் நவரத்தினமயமாய் ஓங்கிவிளங்கும் தேவாலயங்களையுடைய எங்கள் செல்வத் திருவேகம்பத்தின் மகிமையை மனமாரத்தியானம் செய்து சொல்வோம் கேளுங்கள் என்றருதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

திருமால்கண்டு தெளியாதபரம் பொருள் ஆகிய சிவபெருமான் கச்சித்திருமயானத்திலே அக்கினிமயமாகத்தோன்றி, உடல் உயிர்தோறும் கலந்த இரக்கம் இல்லாதமகாபாவியான பண்டாசுரனைப் பஸ்பமாக்கிய பின்பு உயிர்கள் எல்லாம் ஆயாசந்தீர்ந்து உடலுடன் கலக்கும்படி யாகத் திருவுளம் செய்து, பிரிவு இல்லாமல் விளங்கும் பழைய வேதத்தைப்பார்த்து, வேதமே! யாம்எல்லாவற்றையும் சிருஷ்டிக்கும் பொருட்டு நீகச்சித் திருமயானத்தின்மேற்கில் இலை, பூ, காய், கனிகள் அடர்ந்திருக்க, ஒரு மாமரமாகிவிளங்குக என்று சொல்லினர். சொல்லியவுடனேகுற்றம் இல்லாத பழையவேதமானது எம்பெருமான் திருவருளால் கச்சித்திருமயானத்தின்மேற்கில் ஒருமாமரமாகித்தழைத்து அரும்பிப்பூத்துக் காய்த்துக் கனிகளைத்தாங்கிக்கொண்டு குளிர்ந்த நிழலுடன் கவிழ்ந்து ஓங்கிநின்றது.

கொன்றைப்பூமாலைசூடியசடைமுடியையுடையசிவபெருமான் அது கண்டு அந்தமாமரத்தின்கீழ் ஆனந்தப்பெருஞ்சோதிலிங்கமாகத்தோன்றி, அழகெல்லாம் பிறப்பதற்கு இடமாகிய தன்திருமேனியின் இடப்பக்கத்திலிருந்து இயற்கை மணம்வீசும் நெடிய கூந்தலையுடைய இலளிதாதேவியைப்படைத்தருளினர். வளைந்துபோகும்சிற்றிடைக்குவருத்தம் உண்டாக்கமதர்த்துமேல் ஓங்கிமுத்துமாலையணிந்திருக்கும் முலைகளையுடைய இலளிதாதேவி எழுந்துநின்று, துன்பத்திற்கு ஏதுவாகிய பிறவிப்பெருங்கடலிலிருந்து ஆன்மாக்களைமோட்சக்கரையில் இனிதுஏற்றுதல் செய்யும்சூல

பாணியாகிய சிவபெருமானுடையசிர்பாதகமலங்களைத்தாழ்ந்து வணங்கித் தேசுமயமாய்விளங்கும் திருவேகம்பத்தில் வீற்றிருக்கும் விமலனே! தேவர்கள் எல்லாம்கங்கு ப்படி திருப்பாற்கடலில் உண்டான ஆலகாலவிஷம் கண்டத்தில் விளங்க உட்கொண்டருளிய ஆதாரபூதனே! உன்திருவருளுக்கு உரியபணிவிடையை அடியேனுக்குக் கட்டளையிட்டருளவேண்டும் என்று சொல்லுதலும், பெண்ணே! நீ உலகங்களுக்கெல்லாம்துணைக் காரணம். துன்பங்களை நீக்கிச்சுகம்தரும் நிமித்தகாரணம்யாம். ஆதலின் இப்பொழுது அழிந்துபோன உலகங்களைமுன் இருந்தாற்போல் பார்க்கும்படி உன்னுடைய அதிரூப சுந்தரத் திருமேனியிலிருந்து சிருஷ்டிசெய் என்று கட்டளையிட்டருளினர். சர்ப்பமும் இளஞ் சந்திரனும் அலைவீசும் ஆகாயகங்கையும் கலந்திருக்கும் செஞ்சடை முடியையுடைய சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய கட்டளையைத் தன்சிரசின்மேல் கொண்டு, முத்தநகையுடையவளாகிய அந்த இலளிதை எல்லாவுயிர்களையும் முறையாகப்படைக்கத் தொடங்கினள்.

முதலாவது.

அந்தப்பெண்ணரசி ஆனவள் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் மூன்றுதொழில்கள் விளங்கும்படி தன்வலக்கண்ணிலிருந்து பிரமதேவனையும் இடக்கண்ணிலிருந்து விஷ்ணுவையும் நெற்றிக் கண்ணிலிருந்து நெற்றிக்கண்படைத்த உருத்திரனையும் படைத்தாள்.

இரண்டாவது.

நன்மைகளையெல்லாம் பரிவுடன் கொடுக்கும் பெருங்கருணைத்திருமுகத்திலிருந்து அக்கினிபகவான் அதிதேவதைஆகவும் காயத்திரிச்சந்தம் சந்தம் ஆகவும் இரதந்தரசாமம் சாமம் ஆகவும் மூன்றுஸ்தோமங்களுடன் வேதியரையும் சந்திரனையும் படைத்தாள்.

மூன்றுவது.

மேன்மைமிகுந்த நவரத்நபூஷணம் பூண்டு விளங்கும் மெல்லிய தோள்களில் இருந்து இந்திரன் அதிதேவதை ஆகவும் திரையிஷ்டுப்பு என்னும் சந்தம் சந்தம் ஆகவும் மகாசாமம் என்பதுசாமம் ஆகவும் பதினைந்துஸ்தோமங்களுடன் வெற்றிமாலைசூடிய முடிமன்னர்களையும் சூரியனையும் படைத்தாள்.

நான்காவது.

விசுவதேவர்கள் அதிதேவதை ஆகவும் சாகதம் என்னும் சந்தம் சந்தம் ஆகவும் வயிரூபம் என்னும் சாமம் சாமம் ஆகவும் பதினேழுஸ்தோமங்களுடன் பசுக்கள் வைசியர்என்று சொல்லிய இவைகளையெல்லாம் தொடையிலிருந்து படைத்தாள்.

ஐந்தாவது.

செந்தளிர்போலும் திருவடியிலிருந்து அனுஷ்டுப்பு என்னும் சந்தம் சந்தம் ஆகவும் வைராசம் என்னும் சாமம் சாமம் ஆகவும் இருபத்தொரு ஸ்தோமங்களுடன் குதிரைகளையும் சூத்திரர்களையும் படைத்தாள். இச் சூத்திரர்களுக்கு ஒரு தேவதைசொல்லப்படாமையால் இவர்கள் தொழுவதற்குரியவர்கள் மேற்சொல்லிய பிரமக்ஷத்திரிய வைசியர்களேயாம்.

மற்றும் புல்பூண்டு மரம் முதலானவைகள் எல்லாம் அந்தத்தேவி திருமேனியில் உள்ளரோமங்களில் இருந்து உண்டாயின. இவ்வண்ணம் எல்லாவற்றையும்படைத்தபின்பு மணம் வீசும் மலர்சூடிய கூந்தலையுடைய இலளிதாதேவி மாவடியில்மகிழ்ந்து வீற்றிருக்கும் ஏகாம்பரநாதனைத்தொழுது போற்றினள். கொடுத்த கட்டளையைநிறைவேற்றி விட்டுக் கைகூப்பித்தொழுத இலளிதாதேவியைத் தன்புனிதமான மடிமேல் வைத்துக்கொண்டு, சர்வமும் தானே ஆகிய சிவபெருமான் மாமரத்தின் நிழலின் கீழ்மாமணிப் பீடத்தின்மேல் மகிழ்ந்து வீற்றிருந்தார். உயிர்கள் எல்லாம்வருத்தம் இல்லாமல் சந்தோஷத்துடன் விருத்தியாய் விட்டன. பிரமா, விஷ்ணு, உருத்திரன் என்னும் மூவரும் இலளிதையின் மூன்று கண்களினிடமாகப் பிறந்த பொழுதே நித்திரைதெளிந்து எழுந்தவர்களைப்போல், பூர்வக்கியானம் பெற்று, அந்தத்தேவி பாதங்களையும் எம்பெருமான் பாதங்களையும் தொழுது எழுந்து பணிந்து துதிசெய்யலானார்கள்.

அலைகளையுடைய திருப்பாற்கடலில் தோன்றியகொடிய விஷத்தைத் திருவுளம் இரங்கி உண்டு, அப்பொழுது அடியேங்களைக்காத்தருள் செய்தாய். இப்பொழுது மகாபலசாலியான பண்டாசுரனால் மாண்டுபோகாதபடி அடியேங்களுடைய உயிர்கள் எல்லாம் உய்யக்கருணைவைத்துக்காத்தருளிய வள்ளலே! சரணம், சரணம், சிவாக்கினியிலே எங்களை நெய்பெய்வதற்குஉரிய சமிதைகளாக்கி, யாகத்தைப்பூர்த்திசெய்த சிவபெருமான் திருவருளால், மீள உயிர் கொடுத்துப் பிழைப்பித்தபெருங்கருணைத்திருக்கண்களையுடைய தெய்வப் பூங்கொடிபோல் சிறந்து விளங்கும் தேவி! உன்திருவடிசரணம். தாயாகித் தந்தையாகிச் சற்குருவாகித் தெய்வமும் ஆகி, மிக்கநீர்வளமுள்ள காஞ்சிமாநகரத்திலே சகள நிஷ்களமாகத் தோன்றி, அடியேங்களையும் ஆண்டுகொண்ட அம்மை அப்பரானவர்களே! விசுவாசமுள்ள மெய்யன்பருடைய மனங்களாகிய வண்டுகள் விரும்பும் உங்களுடைய மணமலரடிகளே சரணம். குழந்தைகள் குழறிப்பேசும் மழலைச்சொற்களைவீணையிலும் பிரியமாய்க்கேட்டு மகிழும் தந்தைதாயர்

களைப்போல், சிறியேம் செய்யும் தோத்திரங்களைச் சிந்தையிற் கொண்டு மகிழ்ந்து திருவருள்செய்யுங்கள் என்று மனங்கனிந்து கண்ணீர் பெருக நயந்து துதிசெய்தார்கள். அடக்கப்படாத அன்பானது மேன்மேலும் வளர்ந்து ஓங்கி, ஆனந்தக்கூத்தாடுகின்ற பிரமதேவனையும் திருமாலையும் உருத்திரமூர்த்தியையும், நீலகண்டப்பெருமான் திருவருள் சுரந்துநோக்கி,நீங்கள் விரும்பியது யாது?சொல்லலுங்கள் என்று சொல்லக்கேட்டு, அவர்கள் சொல்லுகின்றார்கள். சுவாமி! க, என்னும் பிரமனும் அ, என்னும் விஷ்ணுவும் ம, என்னும் உருத்திரனும் ஆகிய எங்கள் மூவரையும் தன்மூன்றுகண்களில் இருந்து படைத்தருளிய இந்தத்தாயார் காமக்கண்ணியென்று பெயர்பெற்று விளங்குக. செந்தீவண்ணமாகச் சிவந்திருக்கின்ற மெல்லிய தளிர்களைக்கோதிக் குயில்கள் இனிதாகக்கூவும் பூங்கொத்துகளை ஏந்தியகிளைகள்தோறும் இளந்தேன் பெருக்கி, வாசனையுள்ள மகரந்தப்பொடி சிந்திச் சீதளமான புதியநிழலைப்பரப்புகின்ற தெய்வீகமான இந்த மாவடியிலே நீங்கள் இருவரும் எந்நாளும் வாசம்செய்க என்றார்கள். திருவெண்ணீறுபூசிய திருமேனியையுடைய சிவபெருமான் அவ்வரமெல்லாம் கொடுத்தருளப்பெற்று, அவர்கள் மீளவும் கைகூப்பித் தொழுது பிரார்த்தனை செய்ததனால்; உலகமெல்லாம் உய்யும்பொருட்டு மாவடியிலே ஆனந்தச் சோதிமயமாய்த் தோன்றிய சிவலிங்கத்தின் மகிமை சொல்லலானார்.

மதுரகீதம் பாடும் வண்டுகள் தடவும்படியான மலர்மாலை சூடிய தோள்களையுடைய மைந்தர்களே! யாம் சொல்வதைக் கேளுங்கள், உருத்திரனே பிரமம் அந்தப்பிரமத்தை அன்றி மற்றொன்றும் இல்லையென்பதே சித்தாந்தம். உண்மைப்பொருளை விளங்க உணர்க்கும் பிரமஞானமான வேதமே ஒரு சூதவிருட்சமாய் முளைத்துத் தழைத்திருக்கின்றது. அந்த வேதத்திற்குத் தலைவன் ஆன யாமே அதன் அடியில் வாசம்செய்வோம், அஞ்ஞானத்தை அதம் ஆக்கும் வேதம் என்னும் சொல்வடிவாகவும் சூதம் (மாமரம்) என்னும் பொருள் வடிவாகவும் விளங்குகின்ற அந்த வேதத்திற்கு நாதன் யாம் என்று அறிந்துகொள்ளுங்கள். இவ்விடத்தில் எழுந்தருளியிருக்கின்ற எமது நாமம் ஏகம்பநாதன் என்று அறிவுடையோர் சொல்வார்கள். மூலமந்திரமாக * ஏகம்பநாதன் என்னும் அஞ்செழுத்தால் ஆகிய இந்தமந்திரமே கொலை, களவு, கள், காமம், பொய் என்னும் பஞ்சமாபாதகங்களை அறுத்துவிடும். ஏகம்பநாதன் என்னும் இந்தமந்திரம் மற்றும் சொல்லப்படுகின்ற ஐந்துவகையான பிரமமந்திரங்களைப் பார்க்கிலும் பஞ்சாட்சரத்தைப் பார்க்கிலும் உசிதமானதாம்; விதிதவறாத பல

* ஏகம்பநாதன் என்னும் இருப்பெயரில் ஒற்றெழுத்து நீக்கலாகமற்றெழுத்து ஐந்து என்க.

அங்கங்களையுடைய வேதத்தில் காயத்திரிசிறந்ததாம். அந்தக் காயத்திரியைப்பார்க்கிலும் அஞ்சமாமந்திரம் சிறந்ததாம். அந்த அஞ்சமாமந்திரத்தைப்பார்க்கிலும் பன்னிரண்டு எழுத்துச்சிறந்தவைகளாம். அந்தப் பன்னிரண்டெழுத்தைப் பார்க்கிலும் எட்டெழுத்துச் சிறந்தனவாம். அந்த எட்டெழுத்தைப்பார்க்கிலும் அஞ்செழுத்து கோடாகோடியின் மேற்பட்டதாம். அந்த அஞ்செழுத்தைப்பார்க்கிலும் யாம்சொல்லிய ஏகம்பநாதன் என்னும் மந்திரமானது நூறுகோடியின் மேற்பட்டதென்று அறிந்துகொள்ளுங்கள்.

அப்படிப்பட்ட மந்திரங்களுக்கெல்லாம் மேற்பட்டிருக்கின்ற ஏகம்பநாதன் என்னும் மந்திரத்தை உச்சரிக்கும் நாவுபடைத்தவனுக்கு மானிடதேகத்தால் பெறுதற்குரிய பேரின்பவீடு கிடைக்கும். கீர்த்தியும், விடாமுயற்சியும், செல்வமும், ஆயுளும்மேன்மேலும்வளர்ந்தோங்கும். அவனே கல்விகேள்வி ஒழுக்கங்களில் தவறமாட்டான் என்று அறிந்துகொள்ளுங்கள். மனைவி, தந்தை, தாய், வேதியர் முதலானவர்களைக் கொலை செய்தவர்கள், கள்ளுண்பவர்கள், பிறர்பொருளைத்திருடுகிறவர்கள், குருபத்தினிபோகத்தை விரும்பினவர்கள், மற்றும் தீராப் பழிவிளைக்கும் தீவினை செய்தவர்கள் முதல் எப்படிப்பட்டவர்கள் ஆனாலும் ஏகம்பநாதன் என்னும் மந்திரத்தை ஒருமுறை உச்சரிப்பார் ஆயின், அவர்களிடத்தில் அடர்ந்திருக்கும் கொடிய பாதகங்கள் எல்லாம் விரைவில் அவர்களைவிட்டு ஓடிப்போய்விடும்.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்குவகையான பயன்களை உணர்த்தும் நூல்கள் அனைத்தையும் ஓதி உணர்ந்தவர்களுக்கே உபதேசம் செய்வதற்குரிய இந்த மந்திரத்தைப் பெரும்பசிப்பிணி அடர்ந்து, இறந்துபோகும்படி உயிரைவருத்தும் இடர்வந்த காலத்திலும் மறதியினாலாவது சொல்லவல்லவர்களே எமக்கு மிகுந்த நேசர் ஆவார்கள். இந்த மந்திரத்தின் மகிமை அறிந்து பிறர் சிறப்படையும்படி இந்த முறையாக உபதேசம்செய்தவர்களுக்கு இன்பவீடு கொடுப்போம் என்று மாவடியில் முளைத்தெழுந்தருளிய இலிங்கமேன்மையை எடுத்துச்சொல்லக்கேட்டதனால், உண்டாகிய ஆனந்தக்கடலில் அழுந்தி அந்த மும்மூர்த்திகளும் கொன்றைப் பூமாலை சூடிய சடைமுடியையுடைய சிவபெருமான் சீர்பாதகமலங்களைத் தொழுது, துதிசெய்து, இகொட்டில் இன்பக்கூத்தாடும் இறைவனே! கம்பம் என்னும்தலத்தில் வீற்றிருக்கும் கருணைக்கடலே! கடல்சூழ்ந்த உலகமெல்லாம் கண்டு அதிசயப்படத்தக்க இந்தக் காஞ்சித்தலமகிமையையும்,நீ கோயில் கொண்டிருக்கும்

மாமரத்தின் மகிமையையும், அடியேங்களுக்கு விளங்கச் சொல்லுக என்று வேண்டுதலும், சரக்கொன்றைப் பூமாலைசூடிய சடைமுடியையுடைய சிவபெருமான் காஞ்சித்தலமகிமை சொல்வோம் கேளுங்கள் என்று சொல்லலானார்.

சுழலுகின்ற வண்டுகள்முழங்கும் செந்தாமரை மலர்மாலையும், செந்துளசிமாலையும், செம்பொற் கொன்றைமாலையும்புரளும்தோள்களையுடைய புத்திரர்களே! பதங்களில் சிறந்துவிளங்கும் க, என்னும் பதத்திற்குப் பொருள் பிரமம் என்பதாம். அந்தப்பிரமம் ஆன எம்மால் அஞ்சிக்கப்படலால் (அடையப்படலால்) இந்தநகரம் மாறுப்புகழ் பெற்றோங்கும் காஞ்சி என்று உலகமெல்லாம் புகழ்ந்துபேசும் ஒரு திருப்பெயர்பெறும். தருமங்களை எடுத்துச் சொல்லுகின்ற வேதங்கள் எம்மை பரம், பிரமம், அகிலகாரணம் என்று சொல்வதை அறிந்துகொள்ளுங்கள். முத்துப்போல்விளங்கும் தந்தங்களையும், செவ்வரிபடர்ந்து செழித்து மழைபோல் குளிர்ந்திருக்கின்ற கண்களையும், கார்மேகம்போற் கறுத்து நீண்டிருக்கும் கூந்தலையும், மூங்கில்கள்மருளும்படியானதோள்களையும், கலாபமயில்போலும் சாயலும், அழகும் உள்ள மாதருடைய நாபிஸ்தானத்தைக் காஞ்சி என்று அறிவுடையோர் சொல்லுவர். சூழ்கின்ற வெண்மையான அலைகடலை ஆடையாகஉடுத்திருக்கும் பூமிதேவிக்குக் காஞ்சிஸ்தானமாய் விளங்கும் தன்மையாலும், காஞ்சி என்னும் அந்தத்திருப்பெயர் வழங்கும். மேலும் க, என்பது சிரசு, இன்பம், பிரமதேவன் என்னும் பலபொருள்களையுணர்த்தும். அஞ்சித்தல் என்பது பூசை, அடைதல் என்பவைகளை அறிவிக்கும். எல்லாரும் சிரசுபோல் முதன்மையாகக்கொண்டு தொழுதற்குரியசிறப்பினாலும், நிலையாகவாசம்செய்கிறவர்கள் பேரின்பம் அடைவதனாலும், பிரமதேவன் பூசை செய்தமையாலும் காஞ்சி என்னும் திருப்பெயர்பெற்றதாகும். இதனால் இதுபிரமலோகம் என்றுசொல்லவும்படும். வீட்டின்பம்பெற்றவர்களைத் தேவர்கள் என்பார்கள். அந்தத் தேவர்கள் விரும்பும் இந்த நகரத்தில் வீட்டின்பம் பெற்றுவாழ்பவர்கள் நிறைந்திருக்கிறபடியால் இதுதேவபுரம் என்று சொல்லப்படும். பகைவர்களால் போர்செய்து அழிக்கப்படாத் தன்மையால் இந்த நகரம் அயோத்தி என்றும் சொல்லப்படும். அயோத்தியானது அரசர்கள்வசிக்கும்இடமே அல்லாமல் சீவன்முத்தர்கள் வசிப்பதற்குரிய இடம் அன்று. ஆதலால் அந்த அயோத்தியைப்பார்க்கிலும் இந்தக்காஞ்சியே சிறப்புடைத்து என்க. சுவர்க்கம் அடைந்தவர்களைத் தேவர்கள் என்று சுருதிமுறையிடுவதனால், அந்தச் சுவர்க்கலோகம் தேவலோகம் அன்று. அந்த வேதங்களால் புகழ்ந்து பேசப்படும் உருத்திரலோகமே சுவர்க்கம் ஆகும். ஆதலின்

பெருஞ்சோதிமயமாய் விளங்குவது என்னும்பொருள் அமைந்த அயோத்தியும், பிரமலோகமும், தேவபுரமும், காஞ்சிபுரமே அல்லாமல் சுவர்க்கமத்திய பாதாளம் என்னும் மூன்றுலகங்களிலும் வேறில்லை. இப்படிபட்ட மகத்துவம் உள்ள காஞ்சிமாநகரத்திலே யமனுக்குப்பயப்படுகிறவர்களும், இகபரசுகம்அடையவேண்டுகிறவர்களும், எந்நாளும் அன்புடனே எம்மை வந்தனைவழிபாடுசெய்துதுதிக்க, யாம்பெருங்கருணையுடன்தோன்றி இனிதுவீற்றிருப்போம். சத்தியவேதமெல்லாம் இவ்வண்ணம்முறையிடும் ஆதலின் எமக்குப்பிரியமான உத்தமத்தலம் இது என்று உணர்ந்துகொள்ளுங்கள். இனி மாமரத்தின் மகிமையையும் சொல்வோம் கேளுங்கள்.

உலகமெல்லாம் பெரும்பிரயோசனம் அடையும்பொருட்டாக, ஆரோகணமாய் மேல்நோக்கி விளங்கும் அடியையும், அவரோகணமாய்க் கீழ்நோக்கி வளரும் கிளைகளையும் உடையதாய் ஞானமணம், வீசும் அந்த மாமரத்தின் இயல்பைக்கண்டு தெளிந்தவன் இன்பவீடு பெறுவன். அதுபல கனிகளைத் தாங்கிக்கொண்டு கம்பைநதிக்கரையின் அருகில்சத்தமயமானவேதமாமரம் என்று விளங்கிப்புகழ்பெற்றிருக்கும். சக்கராயுதம் ஏந்திய அரி, அயன், அரன் எனப்படும் அன்புடைய குமாரர்காள்! பதினான்கு சாஸ்திரங்களும் அந்தமாமரத்தின்மேல் மல்லிகைக் கொடிகளாகப் படர்ந்திருக்கும். சாஸ்திரங்களுக்கெல்லாம் தலைவியாகிய இந்தக் காமாட்சி அந்த மல்லிகைக்கொடிகளிடத்தில் அன்புடையவளாம். யுக முடிவிலும் அழியாதோங்கும் மாமரத்திற்கு யாமே சுதந்தரம் உடையோம். பழுதுபடாத வேதங்கள் எமது வாக்கியமாம். வாக்கியத்திற்கும், வாச்சியத்திற்கும் பேதம் இல்லை ஆதலின், எமக்கும் இந்தமாமரத்திற்கும்பேதம் இல்லை. முடிவில்லாதோங்கும் இந்தமாமரத்தின் அடியில் யாம் இலிங்கமூர்த்தியாய் வாசம் செய்வோம். நேற்றுவரையிலும் எம்மைக்கண்டவர் ஒருவரும் இல்லை. இந்நாள் நீங்கள் காணும்படியாக யாம் பார்வதி தேவியுடன்வீற்றிருந்தோம். தெய்வப்பெயர்கள் எல்லாம் எமக்கு உரிமையான பெயர்களாம். அந்தப்பெயர்களிலும் பவன்முதலான ஆயிரம்பெயர்கள் சிறந்தனவாம். அந்த ஆயிரம்பெயர்களிலும் சம்பு, மயோபு, சங்கரன், மயக்கான், சிவன், சிவதரன், என்னும்பெயர்கள் இனியனவாம். இந்தப்பெயர்கள் எல்லாவற்றினும் மேலாய்ப் புகழ்படைத்தோங்கும். ஏகாம்பரநாதன் என்றுசொல்லும் பெயரே எமக்கு மிகவும் இனிமையானதாம். புத்திரன் முதலானவர்களுக்கு இப்படிப்பட்ட மகத்துவம் உள்ள இந்தப் பெயர் இட்டு அழைப்பவர்களுக்கு, அவர்கள்பண்ணியபாவங்களைப்பறக்கடித்து, இம்மைக்குரிய செல்வத்தையும், மறுமைக்குரிய முத்தி யின்பத்தையும் கொடுப்போம். பரமரகசியமான இதை உங்களுக்குவிளங்கச்சொன்னோம்

என்று, சிவபெருமான் அவர்கள் கேட்ட கேள்விக்கு விடைகொடுக்க, அவர்கள் மூவரும் பரமசந்தோஷம் அடைந்து,அம்மை அப்பரை வணங்கிவே, ரென்று சொல்லுவார்கள்.

இறைவனே! கம்பை நதி என்று ஒரு நதி இங்கே இருக்கின்றது என்றுதிருவாய் மலர்ந்தருளினே். அதற்கு அந்தப் பெயர்வந்த காரணம் அறியோம் என்றுசொல்ல, எம்பெருமான் தன் மடிமேல் இருக்கும் தேவி திருமுகத்தைப்பார்த்து மகிழ்ந்து, மைந்தர்களே ! சொல்லுகிறேம் கேளுங்கள் என்று அதன் வரலாறு சொல்லலானுர். எமக்கு நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், இந்து, இரவி, இயமானன் என்று எட்டுவடிவம் அமைந்தனவாக வேதங்கள் விளம்பும். அந்த எட்டுவடிவங்களில் ஒருவடிவம் ஆகிய நீரானது உலகத்தில் எல்லாவற்றையும் பரிசுத்தம் ஆக்குவதும், சகல உயிர்களுந்தழைக்க வழங்குவதுமாய் இருக்கின்றது. இந்த நீரானது உயிர்கள் எல்லாம் உய்யும்பொருட்டு ஒரு நதிவடிவங்கொண்டு இவ்விடத்தில் செல்லுகின்றது. இந்த நதியின் தெண்ணீரானது எம்மைப்போல்,யாவர் கண்ணிற்கும் புலப்பட மாட்டாது. சிவயோகிகள் மனதில் யாம் வசித்திருப்பது போல், பூமியின் கீழ் நீண்டு செல்லுகின்றது. கண்டுதெளியுங்கள். இந்த நதியானது கம்பை யென்று ஒரு காரணப்பெயர் பெற்றது. பா என்னும் பதத்திற்குப் பொருள் பரிசுத்தம், உண்ணல், பாதுகாத்தல் என்பனவாம். தம்மிடத்தில் வந்து மூழ்கினவருடைய் பாவங்களையும், உடலில் உள்ள அழுக்கையும் போக்கிப், பரிசுத்தம் ஆக்கும்பொருட்டுக், கங்கை முதலான கம் என்னும் நீர்கள்எல்லாம் தன்னிடத்தில் முழுகி, பா என்னும் பரிசுத்தம் அடைதலால், கம்பா என்னும் இந்தநதியானது தென்மொழியால் கம்பை யெனத்திரிந்து, அப்பெயர் பெற்றது என்று அறிவுடையோர்கள் சொல்லுவார்கள். கம் என்னும் சிரசின்மேல் தெளித்துக்கொண்டால், பரிசுத்தம் ஆக்குவதனுலும், உட்கொண்டவருடைய கம் என்னும் உயிரைக் காத்தலாலும், மூழ்கினவர்களைக் கம் என்னும் வீட்டின்பத்தை அநுபவிக்கச்செய்வதனுலும், செய்தகர்மங்கள் எல்லாவற்றையும் ஒழிக்கும் இந்த நதி கம்பையென்று சொல்லப்படும்.

கங்கை, மகாநதி, யமுனே, சரசுவதி முதலான நதிகளில் உள்ள தீர்த்தம் எல்லாம் கம்பைநதியில் உள்ள தீர்த்தத்திற்கு இணையாகமாட்டாது. நன்மை தரும் கம்பைநதியில் உள்ள தீர்த்தத்தில் படிந்த காற்று உலாவும் இடங்களில் இருக்கும் புல் மரங்களும் இன்ப முத்தி அடையும். யோகநிலையிலும், தபோநிலையிலும் தவறிப்போனவர்கள், இந்தக் கம்பை

நதியிலே மச்சம் முதலான சலசரங்களாய்ச் சனித்துப் பின்பு முத்தி பெறுவார்கள். அந்த நதி ஓடும் கரையிலே கிளைத்திருக்கின்ற மரங்கள் எல்லாம், உருத்திரலோகத்திலிருந்து வழுவிய உருத்திரரேயாம். இது உண்மையெனத் தெளிந்துகொள்க. எவ்விடத்திலானாலும் இறப்பவர்களுக்கு இறந்துபோகும்வேளையில் இந்தத்தீர்த்தம் சிரசின்மேல் தெளிக்கப்பெறுவாராயின், அவ்விறப்பவர்கள் இன்பமுத்தி அடைவார்கள். இனிமையான சுவையுள்ள அமிழ்து உண்பவர்கள், மகா பராக்கிரமசாலிகளான தேவர்கள் ஆவார்கள், ஆனால் இந்த இனிமையான நீர் உண்பவர்கள் எம்முடன் ஒன்றுபட் டிணங்குவர். ஆதலின், அந்த அமுதத்தைப் பார்க்கிலும் இந்தக் கம்பைநதி நீரே சிறந்தது. ஞானிகளுக்கே அல்லாமல் மற்றவர்கள் கண்களால் காண்பதற்கு அருமையான பெருமைபெற்றோங்கும் கம்பைநதியால் சூழப்பட்டு, நகரங்களுக்கெல்லாம் அரசாய் விளங்குவது காஞ்சிமாநகரம். மாறுப்புகழ்பெற்றோங்கும் கம்பைநதி, காஞ்சிமாநகரம் என்னும் இந்த இரண்டிலுமே அன்றி எமது இஷ்டத்தை மகிமைபெற்று விளங்கும் கங்கைமேலும் காசிமேலும் வைத்திலேம். இது உண்மை.

காஞ்சிமாநகரமானது புவனசாரம், மும்மூர்த்திவாசம், விண்டுபுரம், காஞ்சி, கலிசித்து, இலயசித்து, சகலசித்தி, தபோமயபுரம், பிரமபுரம், ஆதிபீடம், கன்னிகாப்பு, சிவபுரம் என்று சொல்லப்படும் பன்னிரண்டு திருப்பெயர்களையுடையது. மூன்றுலகங்களிலும் பெறுவதற்குரிய பயனுகிவிளங்குவதனுல் புவனசாரம் என்றுசொல்லப் படும். நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம், சந்திரன், சூரியன், உயிர் என்னும் பிரபஞ்ச வடிவாய் விளங்கும் எம்மை, மும்மூர்த்திகளாகிய நீங்கள் பூசைசெய்து கொண்டிருக்கிறபடியால், மும்மூர்த்திவாசம் என்று சொல்லப்படும். மேக வாகன கற்பத்திலே செந்தாமரைக்கண்களையுடைய வரதராஜன், எம்மை வந்தனை வழிபாடு செய்தலால், விண்டு புரம் ஆம். காஞ்சிபுரம் ஆனது முன்னமே வகுத்துச்சொன்னேம். கலிபுருஷனுல் வரும் பீடைகள், கலி யுகத்திலும் அணுகாபடி காத்தருள்வதனுல்,கலிசித்து என்று சொல்லப்படும். யுகமுடிவிலே இந்த நகரம் எமக்கு நடனசாலையாய் விளங்குவதனுல், இலயசித்து என்றுசொல்லப்படும். தடையில்லாமல் சகல சித்திகளையும் தருகிறபடியால், சகலசித்திபுரமாம்,இமயமலையில் பிறந்த அன்னநடையுடையவளாகிய பார்வதி தவம்செய்து வாழ்த்திய பரம்பிரமமயமான இந்த நகரம் தபோமயபுரமாம். பிரமதேவன் எமக்குத்தக்க சோமயாகஞ்செய்ததனுல், பிரமபுரமாம். முதற் பீடம் ஆன மேன்மையால், ஆதி பீடமாம். எல்லா

வுயிர்களையும் பெற்றெடுத்தும், இன்னும்கன்னி என்றுசொல்லும்படியான காமாட்சிதேவி காத்தருள்வதனால், கன்னிகாப்பு என்று சொல்லப்படும். இவ்விடத்தில் எம்மைத் தரிசனஞ் செய்தவர்கள் யாவராயினும் பேதமில்லாமல் சிவானந்தபோகம்பெறலால், சிவபுரமாம். இப்பொழுது யாம் எடுத்துச்சொல்லிய பன்னிரண்டுதிருநாமங்களையும் விடியற்காலையில்நித்திரை தெளிந்து எழுந்து ஓதினால், ஓதுகிறவர்கள் கொடியசொப்பனம், துன்பநோய், வறுமைமுதலிய கொடுமைதீர்ந்து, எமது அருள்பெற்று, ஆனந்த போகவீடு அடையும்படியாய்க் காருண்யத்தால் உங்களுக்கு விளங்கச்சொன்னோம் என்று, திகம்பரனை சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுதலும், பரமானந்தக்கடலில் அழுந்தி, அந்த மும்மூர்த்திகளும் திரண்ட கல்போலும், தோள்களையுடைய பண்டாசுரனால் பழி அடைந்து, வாடி, வதங்கிய எங்களைப், பெருஞ்சோதியில் ஒடுக்கி, மீள இந்த மகாதேவியின் மூன்றுகண்களிலும் இருந்து படைத்தருளிய மகாதேவா? அடியேங்கள் அறிவுபெற்று இனிச்செய்யவேண்டிய பணிவிடைகளைக் கட்டளையிட் டருளவேண்டும் என்று பிரார்த்தித்தார்கள். அந்தமும்மூர்த்திகள் செய்த பிரார்த்தனையைத் திருச்செவிசாத்தி, எனது மனம் மகிழும்படி கொடுத்த கட்டளையைத் தள்ளாமல் நடத்திவரும் விசுவாசமுள்ள மைந்தர்கள் நீங்கள் ஆதலால், உங்களுக்கு அநுக்கிரகம் செய்வோம் என்று, தன் இடப்பாகத்தில் மணமலர்சூடிய கூந்தலையும், தாமரை அரும்புபோலும் குஜங்களையும், செம்பொன் வளையலையும், பூங்கணையையும், மதர்த்த வேலாயுதத்தையும் போன்ற கண்களையும், அழகிய பிறைபோலும் நெற்றியையும், பைங்கொடிபோலும் சாயலையும் உடைய பார்வதி தேவியுடன் கலந்திருக்கும் சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளுவார்.

இளவண்டின்கூட்டங்கள் முழங்கி இசைபாடி, நீண்டு ஒழுகும்தேன் வெள்ளத்தைமிகுதியும் சேர்ந்து உண்ணும் மலர்ப்பூந்தடாகங்களையுடைய சோலைகள்தோறும், கிளிப்பிள்ளைகள் தமிழ்வேதமாகிய தேவாரங்களைப் பாடும் சிறப்புவாய்ந்த காஞ்சிமாநகரத்திலே, சோதிமயமாய் விளங்கும் இந்த இலிங்கத்தில், யாம் முத்துப்போல் விளங்கும் தந்தங்களையும், பவளம்போன்ற செவ்வாயையும் உடைய, இந்தப்பார்வதியுடன் எந்நாளும் வீற்றிருக்கின்றோம். எந்நாளும்வீற்றிருக்கும் எம்மை ஒருவரும் காண மாட்டார்கள். சிவயோகிகளுக்குமாத்திரம் ஒரு காலம் காணப்படுவோம். நீங்கள் வேதவிதிப்படி எமது பாதங்களைப் பூசைசெய்து மூன்றுலகங்களையும் படைத்துக் காத்து அழிக்கும்படி முயற்சிசெய்யுங்கள். எமது பாதங்களைப் பூசைசெய்வதனால் எம்மிடத்தில் மிகுந்தபத்தியும்

அடைவீர்கள். பிரமதேவனே! நீ சிருஷ்டிசெய், திருமாலே! நீ காத்தல்செய், உருத்திரனே! நீ இவர்கள் படைத்துக்காக்கும் உலகங்களையெல்லாம் பற்றற அழித்தல்செய் என்று அநுக்கிரகம்செய்து, இந்தத்தேவியும் எம்மை இவ்விடத்திலே எந்நாளும் அன்பு மிகுந்து பூசைசெய்க, என்றுசொல்லக்கேட்டவர்கள் சுவாமி! விதிகளை விளங்கச்சொல்லும் வேதம் என்பது யாது? அதன் வரலாறு என்ன? என்றார்கள். இப்படி வினவிய மும்மூர்த்திகளுக்கு எம்பெருமான் இளநிலாக்கிரணம்வீசப் புன்னகை செய்து சொல்லுகின்றார். சிருஷ்டி, ஸ்திதி, சம்மாரம் என்னும் மூன்றுதொழில்களையும் செய்பவர்களே! யாம் சொல்வதை நன்றாகக்கேளுங்கள். எமக்கு உரிய இரவில் ஆனந்தக் கூத்தாடி விடியற்காலையில் எம்மிடத்தில் ஒடுங்கிய அண்டரண்ட சராசரங்கள் அனைத்தையும் தவறாமல் பழையபடி சிருஷ்டிக்க நினைத்தோம். ஆனந்தப் பெருஞ்சோதி மயமான இந்த இலிங்கத்தினிடமாக வீற்றிருக்கும் எம்மிடத்தில் நிலைபெற்றிருக்கின்றவேதங்களைப்பழையபடி படைத்தருளினோம். பலவண்ணப்பாசுரங்களுடன் கலந்திருக்கும் அந்தப்பழைய வேதங்கள் எல்லாம் எமதுபாதங்களைத்தொழுது, துதிசெய்து, பேரன்பு மிகுந்து, கொண்டாடிச்சிரசின்மேற் கைகூப்பி நின்று, நிலத்திலே சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்என்னும்ஐந்து தன்மாத்திரைகளாக அமர்ந்தன. அந்த நிலத்தை அஷ்டமூர்த்தங்களில் ஒரு மூர்த்தமாகக் கொண்டிருக்கின்றனை. அந்த நிலத்தினால் அறியப்படமாட்டாய். நிலத்தையும் அந்த நிலத்தில் உள்ள இருதிணைப் பொருள்களையும், உன் கட்டளையின்படி நடக்கக் கற்பித்தனை. நீரிலே கந்தம் நீங்கலாக மற்ற நான்கு தன்மாத்திரைகளாகத்தங்கின. அந்தநீரை ஒருவடிவமாகக் கொண்டிருக்கின்றனை. அந்தநீரினால் அறியப்படமாட்டாய். நீரையும், அந்தநீரில் வாழும் உயிர்களையும் உன் கட்டளையில் தவறாதபடி நிலைக்கச்செய்தனை. நெருப்பில் இரசத்துடன் கந்தம் நீங்கலாக மற்ற மூன்று தன்மாத்திரைகளாகச்சார்ந்தன. அந்தநெருப்பை ஒருவடிவமாகக்கொண்டிருக்கின்றனை. அந்தநெருப்பினால் அறியப்படமாட்டாய். நெருப்பையும், அந்நெருப்பில் உள்ள பொருள்களையும், உன் கட்டளையில் நிலைபெற்றிருக்க நிறுத்திவைத்தனை. காற்றிலே ரூபம், ரசங்களுடன் கந்தம் நீங்கலாக, மற்ற இரண்டு தன்மாத்திரைகளாக இருக்கின்றன. அந்தக்காற்றை ஒருவடிவமாகக் கொண்டிருக்கின்றனை. அந்தக்காற்றுக்கு அறியப்படமாட்டாய். காற்றையும், அந்தக்காற்றில் கலந்திருக்கும் பொருள்களையும், உன்கட்டளைவழியில் வாசம்செய்ய வைத்தனை. ஆகாசத்திலே சத்தமாத்திரையாய்ச்சார்ந்தன. அந்த ஆகாசத்தை ஒருவடிவமாகக் கொண்டிருக்கின்

றனை. அந்தஆகாசத்திற்கு அறியப்படமாட்டாய். ஆகாசத்தையும், அந்த ஆகாசத்தில் உள்ள பொருள்களையும், உன்கட்டளையில் நிலைபெறநிறுத்தினை. மதிக்கப்படும் உயிர், சந்திரன், சூரியன் முதலான எல்லாப்பொருள்களிலும் இந்தப்பிரகாரம் கலந்து ஓங்கி, மனம் வாக்குக் காயங்களைக்கடந்து விளங்கும் மகாதேவா! உன் மலரடிபோற்றி என்று இவ்வண்ணம் துதித்து எம்மைத்தொழுதல் செய்த அன்புள்ள வேதங்களைப் பார்த்து, வேதங்காள்! நீங்கள் விரும்பியதைக் கொடுக்கின்றோம். சொல்லுங்கள் என்றலும், அந்த வேதங்கள் சொல்லலுற்றன. எங்கள் பரம பிதாவே! உன் திருமுகத்திலிருந்து எங்களைப் படைத்தருளினை. உன் திருமுகத்தில் பிறக்கும்படியான பேறுபெற்ற எங்களைத் திருவுளஞ்செய்து, திருவருள்வைத்து, உன் அற்புதத் திருமேனியில் ஆபரணமாக அணிந்துகொள்க. நீ விருப்பமடைய நாங்கள் இனி உலகத்திலே செய்யவேண்டிய பணியாது? சொல்லுக. மேலும் எங்களை வேதங்காள் என்று அழைத்தனை. அப்படி அழைத்த காரணம் அறியோம் என்றவேதங்களை, அந்த நாள்முறைமையாகக் கோவணம், சிலம்பு முதலிய அணிகலம் ஆக்கி, மகிழ்ந்தபின்பு அவைகள்கேட்கும்படி ஒன்று சொன்னோம். வெள்ளியங்கிரியிலிருந்து சகலலோகங்களையும் ஆண்டருளும் எமது அன்பர்களே! இது புண்ணியம், இது பாவம். இது இவ்விரண்டின் கட்டறுத்துக் கதி உதவும் கடவுள் இயல்பு என்று எல்லாரும் உணர்ந்து கடைத்தேறுவதற்கு நீங்கள் ஒரு பிரமாணமாய் விளங்கக் கடவீர்கள். வித் என்னும் பகுதியானது ஞானம் என்று அர்த்தம்கொடுக்கும். மனதைப்புலன்களின் வழிவிடாமல் அகமுகமாய் அடக்கும் பெரியோர்கள் உங்கள்வார்த்தையாலே எம்மை உணர்ந்துகொள்ளும் தன்மையால் நீங்கள் வேதங்கள் என்னும்பெயர் பெற்றீர்கள்.

அந்தணர், அரசர், வைசியர் என்னும் முதல் மூன்று சாதியாரும் உங்களை ஓதி உணர்ந்து இன்பவீடு பெறக்கடவர். வேதங்களில் இரண்டாயினும் ஒன்றாயினும் ஓதி உணராமல், வேறுநூல்களைக்கற்கும் இருபிறப்பாளராகிய அந்த முக்குலத்தாரும், எமக்கு அன்னியர்களாய் இருண்ட நரகத்தில் விழுந்து துன்பப்படுவார்கள். உலகம் உய்யும்பொருட்டு நாம் எக்காலத்தில் எவ்விடத்தில் எந்தவேடம் எடுப்போம். அக்காலத்தில் அவ்விடத்தில் அந்தவேடத்திற்கு இணங்க நீங்களும்வேடம் எடுக்கக்கடவீர்கள், என்று நயந்து பூர்வம் இந்தக் காஞ்சிமாநகரத்தில் அந்த வேதங்களுக்கு வரம்கொடுத்திருக்கின்றோம். ஆதலின் பகைவர்கள் பயப்படும்படியான பலம்பொருந்திய தோள்களையுடைய மைந்தர்களே!

இவ்விடத்தில் நாம் பரஞ்சோதியிலிங்கவடிவமாய் எழுந்தருளினோம். ஆகவே அந்தவேதங்கள் எல்லாம் இவ்விடத்தில் தேன் ஒழுகும் பூங் கொத்துகளும் கனிகளும் அடர்ந்த ஒரு மாமரவடிவாய்விளங்கிநின்றன. முப்புரங்களையும் எரித்த நாளிலே யாம் போர்க்கோலம் கொண்டோம். அப்பொழுது அவ்வேதங்களும் கொய்யும்படியான பிடர்மயிரையும், கடிவாளத்தையும் உடைய குதிரைகளாய் அமைந்தன. அறிந்துகொள்ளுங்கள். மற்றும் நாம் வேடரூபம் முதலிய வடிவங்களை எடுத்தபோதுவேதங்களும் நாய்முதலியவாகி வந்தன. இந்த நகரத்தில் ஒருபக்கத்தில்சர்வசம்மாரத் திருத்தாண்டவக் கூத்து ஆடும்போது, பாதச்சிலம்புகளாய்விளங்கின. அந்தஸ்தலம் அந்தநாள்முதல் வேதநூபுரம் என்று பெயர்பெற்று, வந்தனைவழிபாடு செய்பவர்களுடைய வல்வினைகளை அறுக்கும் பெருவளம்பொருந்திய தாருகாவனத்திலே நாம் பிக்ஷாடன மூர்த்தியாய்ச்சென்றபோது, அவைகள் நமக்குக்கோவணமாய் விளங்கின.

இவ்வண்ணமாக எம்மிடத்தில் வரம்பெற்றோருங்கும் வேதங்களை உணராதவர்கள், எமது இயல்பை உணரமாட்டார்கள். வேதியர்க்கு மேன்மை தருவது வேதமேயாம். இப்படிபட்டமகத்துவமுள்ள வேதங்களைப்பூர்வம் இந்தக்காஞ்சித்தலதிற்குத் தெற்கில் ஓடுகின்ற நீரலைகளைப் புரட்டும் சேயாற்றின் கரையிலே தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் ஓதுவித்தோம். ஆதலால் திருஓத்தூர் என்னும் அந்தத்தலத்தில் எம்மைக்கண்டு தொழுகிறவர்கள் வேதங்கள் அனைத்தையும் ஓதி உணர்ந்து இன்பவீடு பெறுவார்கள். இத்தன்மையான வேதவிதியால் இந்தத்திருவேகம்பத்தில் சிறந்து வீற்றிருக்கும் எம்மைப் பூசைசெய்யுங்கள் என்று, சர்ப்பாபரணம் அணிந்தசிவபெருமான் கட்டளையிட்ட வார்த்தையை அவர்கள், சிரசின் மேற்கொண்டு செங்கைக்கூப்பிப், பரமானந்தக் கடலிற்படிந்து, பரமசந்தோஷம் அடைந்து, பர்வதராஜபுத்திரியாகிய பரர்வதிதேவியைத்திருமணம் புரிந்தருளும் சிவபெருமானைப் பூசிக்கலானார்கள். காரணகர்த்தர்களாகிய மும்மூர்த்திகளைத் தன் சேல்போலும் கண்களிலிருந்து பிறப்பித்த காமக்கண்ணியாகிய இலளிதாதேவியானவள், ஆகாயத்தை அளாவி உயர்ந்திருக்கும் ஒருமாவடியிற்பரஞ்சோதியைப்பூசைசெய்தாள். படர்ந்த இதழ்களுடன் அழகுவாய்ந்திருக்கும் செந்தாமரைப்பூவில் சிறந்துவாழ்பவனாகிய பிரமதேவன், அந்தத் திருவேகம்பநாதருக்குச் சற்றுத் தெற்கில் அந்தப்பெயர்கொண்ட சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து, தெளிந்தமனம் உடையவனாகிச் சிவபூசைசெய்தனன். கவுஸ்துவமணி அணிந்த மார்பையுடைய மாயவன், உயிர்களையெல்லாம் மயக்கவேண்டும் என்

னும் ஆசையுடன் பிரமதேவனைப் போல் அந்தத் திருவேகம்ப நாதருக்கு இடப்பக்கத்திலே சிவலிங்கப்பிரதிஷ்டைசெய்து, செந்தாமரை மலர்கொண்டு பூசை செய்தனன். உருத்திரமூர்த்தியும் அபேதமாய்ப் பாவித்து, அன்புமிகுந்து அருச்சனைபண்ணிச் சிவபெருமானுடன் இணங்கி வீற்றிருந்தார். ஆதலால், இவ்விருவருக்கும் வேற்றுமை இல்லை. மலரவன், மாசில்லாத மனத்துடன் வந்தனைவழிபாடுசெய்த வெள்ளக்கம்பமூர்த்தியை அன்புகொண்டு அருச்சனைசெய்து துதிப்பவர்கள் பொதிபோலும் தேகபாரத்தை ஒழித்துச் சிவானந்த வீடுபெறுவார்கள். மயங்கிய மனத்துடன் மாயவன் பூசித்தபடியால் அந்தப்பெயருள்ள கள்ளக் கம்பமூர்த்தியின் சிர்பாத கமலங்களைக் கண்டு சேவிக்கப்பெற்றவர்கள், பிறவிக்குக் காரணமான இருவினை மயக்கத்திற்கு ஆளாகமாட்டார்கள். உருத்திரன் அபேதமாய்ப் பாவித்து நல்ல மனதுடன் பூஜைசெய்த நல்ல கம்பமூர்த்தியை, அன்புடன் வந்தனைவழிபாடுசெய்யும் அன்பர்கள் எம்பெருமானுடைய திருவடி நிழலிற் சேர்ந்து சிறந்து வாழ்வார்கள். மணம்வீசும் மலர்க்கொத்துகளையுடைய மாவடியில் வாழ்ந்திருக்கும் சிவபெருமான் ஒருவரோ, நல்லகம்பன், கள்ளக்கம்பன், வெள்ளக்கம்பன், திருவேகம்பன் என்னும் நான்குவகையான இலிங்கங்களாய் விளங்கினார். அழகுமிகுந்த காஞ்சி மாநகரத்திலே ஆன்மாக்களுக்குச் சகலசித்தியும் தரும்பொருட்டாக எம்பெருமான் திருவுளமகிழ்ந்து அப்படிப்பட்ட பூசைகளையேற்று மும்மூர்த்திகளுக்கும் வேண்டும்வரம் கொடுத்தருளினர்.

இப்பால் இலளிதாதேவியானவள் இந்தமாமரத்தின் நிழலிலே இனிது வீற்றிருக்கின்ற வேதநாயகனாகிய ஏகம்பநாதனுடைய சீர்பாத கமலங்களை வணங்கிவாழ்த்திப் பெருமகிழ்ச்சியுடன் பேரன்புகொண்டு பலவரங்களை வேண்டலானாள். வேதமாகிய கோவணம் உடையானே! வேதமாகிய குதிரையுடையானே! வேதமாகிய பூஷணம் உடையானே! வேதநாயகனே! அந்தவேதத்தினாலும் அறியப்படாத மேன்மை யுடையானே? வேதச்செல்வனே! அடியேன் விண்ணப்பத்தைக் கேட்டருள். ஞான மணம் வீசும் வேதமாவடியிலே எந்நாளும்வீற்றிருக்கின்றனை என்றாலும். சிவயோகிகளுக்கே அல்லாமல்மற்றவர்களுக்குப்புலப்படாதிருக்கின்றனை, இனி இவ்விடத்தில் எல்லாருக்கும் எளிதிலே காட்சிகொடுத்தருள்க. சுவாமி! தெளிந்திருக்கும் இனிய நீரையுடைய இந்தக் கம்பைநதியும் ஓரிடத்திலே எல்லாரும் காணும்படி தோன்றி விளங்குக என்றுவேண்டுதலும், சிவபெருமான் சொல்லுகின்றார். உயிர்களையெல்லாம் பெற்றெடுத்தவளே! அந்த உயிர்களெல்லாம் கண்டுதொழுது உய்யும்படி நினை

ந்து கருணையால் இந்தவரங்களை வேண்டினாய், அதனால் யாம் அகமகிழ்ச்சி அடைந்தோம். யாம்சொல்வதைமனதில்பதியும்படி அன்புவைத்துக்கேள். அழகிய ஒளியுள்ள நெற்றியுடையாளே ! சிற்பரவியோமரூபம் நீ. சிற்பரவியோமரூபியாம். அந்தப் பரமாகாசமும் மயங்கும்படி இந்தப் பிலத்துவாரம் சிறந்துவிளங்கும். நம் இருவருக்கும் ஒரு வடிவம் ஆகிய இந்தப்பிலத்தைப் புண்ணியம்செய்து, அகப்பற்று புறப்பற்றுகளை அறத்துறந்த ஞானிகளே காண்பார்கள். பற்று அமைந்தவர்களுக்கு இந்தப்பிலம் அதிக தூரமானதாம். சிறந்த செம்பொன் வளையலையுடையவளே ! யாம் இருவரும் அவ்விடத்தில் அகமகிழ்ந்து வாழ்ந்திருப்போம், அந்தப் பிலத்தைப்பார்க்கிலும் அதிக அன்புடன் இந்தச்சோதிலிங்கத்தில் உலகமெல்லாம் கண்டுதொழும்படி உன்னுடன் நிலைபெற்று வசிப்போம். இதுவரையில் இவ்விடத்திலே எம்மை ஒருவரும் காணவில்லை. இனிமேல் நீ பெற்ற வரத்தால் எல்லாரும் கண்டு துதிசெய்யக்கடவர். பரமாகாசமாய் விளங்கும் பிலத்தினிடத்தில் உன்னையும் காணக்கடவர். நீர்வளமுள்ள காஞ்சிமாநகரமே எமக்குத்திருமேனியாம். இதை நீ நன்றாகத்தெரிந்துகொள். இந்தக்காரணத்தால் தேவர்களும் முனிவர்களும் இவ்விடத்தில் வாசம் செய்தும் பிறர்கண்ணுக்குத் தோன்றாமல் மறைந்திருப்பார்கள். அழகியவளையல்களையும் வேல்போலும் கண்களையும், புளகிதபூஷணம் அணிந்த பயோதரங்களையும், இலவம்பூப்போலும்சிவந்திருக்கும் வாயையும், பிறைபோலும் நெற்றியையும், உடைய பார்வதியே !

சாதுக்கள் எல்லாரும் இந்த ஆலயத்தின் அவயவங்களாய்ச் சூழ்ந்து இவ்விடத்தில் எம்மைத்தொழுது கொண்டிருப்பார்கள். இருண்மயமான கூந்தலையுடையாளே ! நல்லகம்பம், வெள்ளக்கம்பம், கள்ளக்கம்பம், கச்சித்திருமயானம், வாலீசம் என்னும் பஞ்சலிங்கங்களிலே பஞ்சபிரமமாகி யாம் இனிது வீற்றிருப்போம். என்று சொல்லுதலும், வணங்கி, எம்பெருமானே ! வாலீசம் எங்கே யிருக்கின்றது ? அதைப்பிரதிஷ்டை செய்தவர்கள்யார் ? அதன் மகிமை என்ன ? என்று பொன்போல் விளங்கும் தேமல்படர்ந்து பொலிவுபெற்றிருக்கும் புளகிதமான குஜங்களையுடையாள் கேட்க, கரும்பை வில்லாகவுடைய மன்மதனைச் சாம்பலாகப் பார்த்தருளிய பரமபதி சொல்லலானார். ஏலவார் குழலி ! வாலீசத்தின் மகிமைசொல்வோம் கேள். கச்சித்திருமயானத்தின் கிழக்கில், பல சித்தர்கள் சில சித்தி அடையும் பொருட்டு வேண்டுதல்செய்து போற்ற, ஆதியாய், அருட்பிரகாசமாய், ஆனந்தமயமாய் வாயுலிங்கம் தோன்றிற்று, அந்தவாயுலிங்கத்தில் யாம் எந்நாளும் மகிழ்ந்து வாழ்ந்திருப்போம். மயில்போலும் சாயலையுடையாளே ! பூர்வம் வாலி என்

பவன் தொழுது, தன்னுடன் எதிர்த்தவர் பலத்தில் பாதியும் எங்கும் தோல்வியடையாத் திறமும்பெற்றுன். என்று சொல்லத்தேவி, வாலி என்பவன் யார்? எவனுடைய புத்திரன்? உன்னிடத்தில் பல வரம் எவ்வாறு பெற்றுக்கொண்டான்? என்று கேட்டலும், எம்பெருமான், சொல்லத் தொடங்கினர். தேவர்களும், முனிவர்களும், கல்விகேள்விக ளால் நிறைந்தவர்களும், இருபக்கங்களில் சூழ்ந்திருக்கத் தேவேந்திரன் தேவசபையில் சிற்றிடையையுடைய அரம்பையர் மின்னற்கொடிபோல் தன் எதிரில் ஆடும் பரத நாட்டியத்தை ஆயிரங் கண்களும் கண்டு களிக்கும்படி நவரத்தின சிங்காதனத்தின்மேல் வீற்றிருந்தான். ஆகவே அவ்விடத்தில் அந்த அரம்பையருடைய ஆட்டத்தைப் பார்க்கவேண் டும் என்கிற ஆசையால் சூரியனுடைய இரதசாரதியான அருணன் அந்தச் சூரியனிடத்தில் விடை பெற்றுக் கொண்டு போய்த் தேவ ர்கள் எள்விழுவதற்கு இடமில்லாமல் எங்கும் நிறைந் திருப்பதனல், உள்ளே பிரவேசிக்க முடியாமல், ஒரு உபாயம் செய்யலானன். அற் புதமான அழகுவாய்ந்திருக்கும் அரம்பையர்கள் அந்தச்சபையில் எல் லாருக்கும் முன்னுக நிற்பதைப்பார்த்துத், தானும் ஒரு பெண்வடிவம் கொண்டு, அவர்கள் ஆட்டத்தைப் பார்த்துக்கொண்டு நிற்கையில், மல் லுப்போரில் சிறந்த வச்சிரபாணியான இந்திரன் அந்த வடிவத்தைக் கண்கொண்டு பார்த்தான். பார்த்தலும் வளைத்தவில் ஏந்தியமன்மதனு டைய பாணங்களுக்கு இலக்கு ஆகிப்பெருகிய காமக்கடலில் அழுந்தித் தன்பலத்தால் பலாத்காரம் செய்து பிடித்து, அழகிய குஜங்கள் பொ திர்ந்து போகும்படித் தழுவிச் சுகானந்தபோகத்தை அநுபவித்தலும், பூர்வம் இராவணன்பழித்துநகைத்ததனுல் எமது நந்தி கோபம்கொண்டு, இராவணு! உன்னை வானரசேனைகள் அழிக்கக்கடவது என்றுசாபம்கொடு த்தபடி தேவர்கள் நயந்து வானரங்கள் ஆனர்களே? இந்த வாலியானவன் அந்தவானரங்களுக்குத் தலைவனுய்த் தேவேந்திரன் அமிசமாக அவ்விட த்தில் பிறந்தான். அதன்பின்பு அரம்பையர் ஆட்டத்தைப்பார்த்து அவ் விடத்திலிருந்து மீண்டு சூரியனுடைய இரதத்தில் சாரதியாக விளங்கி னன். சூரியன் இந்திரசபையில் நடந்ததெல்லாம் உண்மையாய்ச் சொ ல்லும்படி கேட்டு அந்தவடிவத்தை இவ்விடத்தில் காண்பி என்று சந் தோஷம்மேலிட மேன்மேலும் வேண்டிக்கொள்ளுதலும், அருணன்செம் பவளவாயையும், கரியகூந்தலையும், பால்போல்மதுரமான சொல்லையும் தேமல்படர்ந்த குஜங்களையும், விசாலமான அல்குலையும் அழகிய வளையல் களையும் துளிர்போலும் கைகளையும்கொண்டு அழகெல்லாம் ஒருவடிவம் கொண்டு வந்தாற்போல் தன் பெண்வடிவத்தைக் காண்பித்தான். அந்த

வடிவத்தைப் பார்த்தலும், சூரியனும் காமங்கொண்டு புணர்ந்ததனால் அவ்விடத்தில் வீரனை சுக்கிரீப்ன்பிறந்தான்.

இப்பால் இந்திரன்பெற்ற வாலியைத்தன் செந்தாமரை மலர்போலும் கைகளால்வாரி எடுத்து உச்சியை மோந்து, புத்திசொல்லலானன். மகனே! தேவர்களும் முனிவர்களும் மற்றெல்லாரும் பூசித்துப்பேறுபெற்ற புண்ணியநகரம் காஞ்சிமாநகரம். அவ்விடத்திற் போய் முக்கண்மூர்த்தியான சிவபெருமானைத்தொழுது, வானரங்களுக்கெல்லாம் தலைவன் ஆகும் வரம்பெற்றுக்கொள் என்று விடைகொடுக்க, வாலியானவன் காஞ்சிமா நகரத்திற்குவந்தான். மாயப்பிறப்பை மாற்றிவிடும் சிவகங்கையிலே நீராடி, ஆனந்தச் சோதிமயமாய் விளங்கும் திருவேகம்பத்தைத் தொழுது, போய்க் கச்சித் திருமயானத்தின் கிழக்கில் பல சித்தர்கள் வந்தனை வழிபாடு செய்யும் பெருமை மிகுந்த வாயுலிங்கத்தை தன் கண்களிப்படையப்பார்த்தான். மாதர்கள் மடல் எழுதுவதற்குரிய அழகுவாய்ந்திருக்கும்வாலியானவன், அந்த இலிங்கத்தைவாயுவின் அமிசமாகநினைத்துக் கடல்போல் பெருகும் அன்புடன் அவ்விடத்தில் தங்கிக், கைகூப்பித் தொழுது, தவம் செய்து, எம்மிடத்தில் பல வரம்கேட்டுத் தன்னுடன் எதிர்த்தவர்கள் பலத்திற் பாதியுடன் வானரங்களுக்கெல்லாம் அரசனாகவும் பெற்றான். வேண்டும் வரம் பெற்றுக்கொண்டபின்பு அந்த இலிங்கத்தைத் தன் இருப்பிடத்தில் கொண்டுபோய்ச் சேர்க்க வலிந்துபிடித்தான். காஞ்சிமாநகரம் எமக்குப்பிரியமுள்ளது ஆதலால், அவனால் பெயர்க்கமுடியாமல் தன் பலமெல்லாம் வைத்து வாலினால்சுற்றி இழுத்து வாலற்றுப்போனவேகத்தால் வெகுதூரமாய் அலறிவிழுந்தான். அப்படிவிழுந்தவன் எழுந்துவந்து எமதுபாதங்களைத்தொழுது, துதிசெய்து, சந்திரசேகரனே! அடியேன் அரமனைக்கு எழுந்தருளி யான் செய்யும் பூசையை ஏற்றுகொண்டருளாய் என்று மேன்மேலும் வேண்டக் காட்சிகொடுத்தருளி, அன்பனே! யாம் காஞ்சிமா நகரத்தை விட்டுக் கணமேனும் பிரியமாட்டோம். இவ்விடத்திலேயே எம்மைப் பூசைசெய். உன்வால் உறுத்தியதனால் உண்டாகிய தழும்புடன் யாம் வாலீச்சரன் என்று விளங்கி மூன்றுலகமும் புகழ வாழ்ந்திருக்கின்றோம் என்று சொல்லி, அந்த இலிங்கத்தில் மறைந்தருளினோம். அழகுள்ள ஆபரணம் அணிந்தவளே! அந்த நாள்தொடங்கி அந்த அற்புதத்தலம் வாலீசம் என்று ஒருபெயரால் விளங்கும். பஞ்சதீர்த்த வாவிகளில் நீராடி, இப்பொழுது யாம்சொல்லிய நல்லகம்பம், வெள்ளக்கம்பம், கள்ளக்கம்பம், கச்சித்திருமயானம், வாலீசம் என்னும் இந்தப்பஞ்ச பிரமலிங்கங்களை நன்று

கக்கண்டு துதிசெய்யப் பெற்றவர்கள் துன்பத்திற்கே ஏதுவான பிறவியை ஒழித்துப் பேரின்பவீடு பெறுவார்கள்.

சதாசிவமூர்த்தி இந்தப்பிரகாரம் திருவாய்மலர்ந்தருளிச் செம்பொற்சிகரங்களையுடைய இமயமலையில் பிறந்த பார்வதி தேவியுடனும் பிரமா, விஷ்ணு, உருத்திரன், என்னும் மும்மூர்த்திகளுடனும் தேசோமயானந்தமாய்விளங்கும் திருவேகம்பத்தில் மறைந்து அமர்ந்தருளினார். அறிஞர்களே ! அப்படிப்பட்ட மகத்துவம் உள்ள காஞ்சிமாநகரத்தின் பெருமை எல்லாம் சொல்ல வல்லவர் யாவர் ?

வரமார்கச்சிப் புரமேகம்பம்.
பரவாவேத்த விரவாவினையே.

திருவேகம்பன் திருவடிபோற்றி.

---

ஐம்பத்தாறுவது

## தழுவக்குழைந்தபடலம்.



சத்தியஞானனந்தத் தபசிகளே ! கம்பத்தில் கட்டுதற்குரிய மதயானையை உரித்தவரும், ஆகாயகங்கையைத்தலைமேல் தரித்தவருமான ஏகாம்பரநாதர் ஆன்மகோடிகள் அனைத்தும் தம்மைக்கண்டு தொழுது கடைத்தேறும்பொருட்டுப், பசுமையானபூஞ்சோலைகளில் இரத்தினக்கம்பளம் விரித்தாற்போல் பலவர்ணமான மலர்களைப் பரப்பும் திருவேகம்பத்திலே ஆனந்தச்சோதிலிங்கமாய் அமர்ந்தருளியதைச் சிறிது சொன்னோம். இப்பால் சங்குகளை அலைத்து முழங்கி மேல் ஓங்கி விரைந்துவந்த கம்பைமாநதியின் பெருக்கத்தைக்கண்டு நடுங்கி உமையவள் தன் திருமார்புறத் தழுவிக்கொண்டதனால் எம்பெருமான் திருமேனி குழைந்தருளிய திருவருட்சிறப்பையும் சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினார்.

தாமரைப்பூம்பொருட்டில் வாழும் பிரமதேவன் அப்பொழுது உண்டான தற்புருடகற்பத்திலே விடியற்காலையில் நித்திரைதெளிந்து, பார்வதிதேவிபாகனாகிய பரமசிவனுடைய பாதாரவிந்தங்களைத் தொழுது

எழுந்து, சகலலோகமும் சலப்பிரளயத்தில் முழுகிவிட்டதைப் பார்த்து, மனக்கவலை அடைந்து, இனிச்சகலலோகங்களையும் படைப்பது எப்படி? என்று தனக்குள் மயங்கும்போது, திருவெண்ணீறணியும் சிவபெருமான் திருவருளால் பூர்வஞானம்பெற்று, ஆதிகற்பத்திலே எம்பெருமான்காட்சிகொடுத்தருளிக் கற்பங்கள்தோறும் யாம் குமார ரூபத்துடன்தோன்றி, வேண்டும்வரம் தருவோம் என்று முன்னமேதனக்குக்கொடுத்திருக்கின்றவரத்தைஉணர்ந்து, இப்பொழுதும்நமக்கு அவரோ அநுக்கிரம் செய்வாரென்றுதெளிந்தமனதுடன்தன்புருவமத்தியஸ்தானத்திலிடமாக எம்பெருமானுடைய சீர்பாதகமலங்களைத்தியானித்துநெடுங்காலம் தவம் செய்து கொண்டிருக்கையில், தலைமேல் ஆகாய கங்கைதரித்தவராகிய சிவபெருமான் உருத்திரகாயத்திரியுடன் குமாரரூபம் கொண்டுவந்து, காட்சி கொடுத்தருளக்கண்டு, உருத்திரகாயத்திரி என்னும் அந்த மந்திரத்தினால் முதற்கடவுளாம் என்று உணர்ந்து, கைகூப்பித்தொழுது, எமதுபிரார்த்தனையை ஏற்றுக்கொண்டருளும் தற்புருடன்பொருட்டாகயாம்மிகவும்தியானிக்கின்றோம். எமக்கு உருத்திரமூர்த்தி அநுக்கிரகம் செய்க என்னும் வலி அமைந்த காயத்திரிமந்திரத்தை முறைமையாகக்கணித்துப்போற்றியதனால், நீண்டு ஒழுகும் அருவிகளுடன் அழகுவாய்ந்த ஆயிரம்சிகரங்களையுடைய மேருமலையை வில்லாகவளைத்தவராகிய சிவபெருமான் திருவருள் சுரந்து சிருஷ்டிக்கும்திறம் கொடுத்தருளி மீண்டுபோதலும், வெண்டாமரைப்பூவில் வீற்றிருக்கும் சரசுவதிக்கு மணவாளனன பிரமதேவன் பூரண பத்தியுடன் அந்தப்புருடனை நினைந்து, உலகத்தை உண்டாக்கும்போது, எல்லாம் ஆணுகவே தோன்றினமையால், பெண்ணையும் படைக்கமுயன்றும் முடியாமல், தன்புத்தியால் தேர்ந்து தெளிந்து, தற்புருடன்பொருட்டு என்பதை நீக்கி, ஆயிரம்கண்களையுடைய புருடனதுபெருங்கருணையைத் தியானிக்கின்றோம். எமக்கு உருத்திரமூர்த்தி அநுக்கிரகம் செய்க என்னும் வேறு காயத்திரி மந்திரத்தைப் புணர்ச்சியால் உலகத்தை உண்டாக்கும்திறம் வாய்க்கும்படிகணித்து, அருந்தவம் செய்யும்போது, பிளவுபட்டநாவையுடையசர்ப்பங்களை அணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் பார்வதி பாகனய்த் தரிசனம் கொடுத்தருளி, மலரவனே! நீ இந்த மந்திரத்தைக்கணித்தல் செய்ததனால், அபிப்பிராயம் அறியலானேம்.உன் இஷ்டதேவதையான இவள் எமது இடப்பாகத்தை விட்டுப்பிரிந்து தன் அமிசத்தால் பெண்ணுருவம்படைக்கும் திறம்கொடுப்பாள்என்றுசொல்ல, அந்த க்ஷணமே தனக்கு நிகரில்லாத பிராட்டியும் எம்பெருமான் இடப்பாகத்தை விட்டுத்தனித்து நின்று, தன் அமிசத்தால் அழகுமிக்க வேறு ஒரு பெண்ணைப்படைத்து, மலரவனுக்குச் சொல்லலானள். மலரவனே!

நீ எந்நாளும் இந்தபெண்ணைவந்தனைவழிபாடு செய்து, பெண்கள் எல்லா வற்றையும் சிருஷ்டி செய் என்று சொல்லி, அந்தப்பெண்ணைப்பார்த்து, உன் அமிசமாகப்பெண்கள் அனைத்தையும் வகுத்தல்செய் என்று அநுக்கிரகம் செய்து, அவளைப்பிரமதேவன் வசமாக்கிவிட்டுத் தன் நாயகனுடைய இடப்பாகத்திற் கலந்துகொண்டாள். கலந்து கொள்ளுதலும் எம்பெருமானும் கருணைசெய்து போய்க் கைலாசகிரியிற்சேர்ந்தனர்.

இவ்வண்ணம் எம்பெருமான் கைலாசகிரிக்கு எழுந்தருளிய பின்பு அந்தப்பெண் ஆனவள் தன்னைத்தொழுது துதி செய்கிறபிரம தேவனைப் பார்த்து, அன்பினால் இளகிய மனமுடையவனே! உனக்கு நான் செய்ய வேண்டிய உதவியாது ? என்று சொல்லப் பிரமதேவன் வணங்கிக் கருணாநிதியாகிய எம்பெருமான் இடப்பாகத்திலிருந்து தோன்றியதாயே! நீ பெண்ணுருவங்களை எல்லாம் படைத்தருள்க. படைக்காவிட்டால், படைக்குந்திறத்தை அடியேனுக்குக் கொடுதருள்க. தேவர்கள் எல்லாரும் துதிசெய்யும்படியானஉன்பாததூளிதத்தை என் தலைமேற்கொண்டு நான் படைக்கின்றேன். மகாதேவி! இன்னும் ஒரு விண்ணப்பம். அது யாது? எனில், அடியேன் பெற்ற குமாரனான தக்கனுக்குப் புத்திரியாய் நீ இந்த உலகத்தில் அவதாரம் செய்ய வேண்டும் என்று வேண்டுதலும், உலக மாதா வாகிய எம்பெருமாட்டி கருணைமிகுந்து, சொல்லுவாள். மாசில்லா தவனே! சிவபெருமானே எல்லாமாய் உயிருக்கு உயிராய் விளங்குவன் என்று முறையிடும் சுருதி முறையால், யான் அந்தச்சிவபெருமானுடைய இடப்பாகத்தில் வாழ்ந்திருக்கும் சத்தியாம். அந்தச்சிவபெருமான் சத்தியனும். அந்தக்காரணத்தால் யாவராலும் தொழத் தகுந்த சத்திமானாகிய அந்தச்சிவபெருமானுடையதிருவடிவமானபிரபஞ்சத்தின் இடப்புறம்என்னுடையதாம்.ஆதலால்நீஉன்னுடைய உருவத்தைப்பிரித்துப் பாதிபெண்ணாகவும் பாதி ஆணாகவும் விளங்குக. எம்பெருமான் அருட்சத்தியும், சிவனுமாய்விளங்கிய தன்மையால், அந்தநாள் தொடங்கி, உயிர்க்கெல்லாம் பெண்மை, ஆண்மை என்னும் இருவகைப்புணர்ச்சியால், பெண்ணும் ஆணுமாய் விளங்கும் என்று சொல்லிப் பல வண்ணங்களையுடைய வேதங்களை யுணர்ந்த பிரமதேவனுக்கு அநுக்கிரகம் செய்து, பாவைபோலும் அழகுவாய்ந்த அம்பிகாதேவியானவள் அவ்விடத்தில் மறைந்து, உலகமெல்லாம் உய்யும்பொருட்டுச் சதி என்னும்பெயருடன் தக்கனுக்கு ஒரு திருமகளாக அவதாரம் செய்தாள். அந்தப் பெண்ணை விதிப்படி எம்பெருமானுக்குக் கன்னிகாதானமாகக் கொடுத்துப், பிரமதேவன்பாதிபெண்ணாகவும் பாதி ஆணாகவும் விளங்கியதனால், உலகத்திலே உயிர்கள் எல்லாம் ஆணும் பெண்ணுமாய் விளங்கலுற்றன.

இப்பால் உலகமாதாவாகிய உமையவள் சிவபெருமானைத்திருமணம் புரிந்து, தன்னையும்தன்மணவாளனையும்பழித்த தக்கனை இகழ்ந்து, அந்தத் தக்கனுக்கு மகளாகிய திருமேனியைநீக்கி, மலையரசனுக்கும், மேனாதேவிக்கும், ஒரு செல்வபுத்திரியாய்த் திருஅவதாரம் செய்து, அந்த இமயமலைச் சாரலில் யோகம்செய்து கொண்டிருந்த சிவபெருமானுக்குரிய தொண்டு செய்திருந்தனள். ஆகவே, அந்தக்காலம் பிரமதேவன்கொடுத்தவரத்தால், தாருகாசுரன் என்னும் துஷ்டன் தன் பராக்கிரமத்தால் சகல லோகங்களையும் வருத்தப்படுத்தியதனால், தேவேந்திரனானவன் தேவகுருவான வியாழபகவான் முதலானவர்களுடன் ஆலோசனை செய்து, பிரமதேவனிடத்திற்குவந்து, அசுரன் செய்யும் அக்கிரமங்களைச்சொல்லி, எம்பெருமானே ! நீ இந்தத்துன்பம் தொலையும் விதம்சொல்லுக என்றுதாழ்ந்துவேண்டுதலும், பிரமதேவன், அந்த வீரனாகிய தாருகாசுரன் ஆண்மையை அடக்கும் திறமுடையவர் சுப்பிரமணியசுவாமியே அன்றிச், சுகந்தமலர் மாலைசூடிய தேவர்களும், மற்றவர்களும், வல்லவர் அல்லர். அந்தச்சுப்பிரமணியசுவாமியைத் தரும்பொருட்டாகச் சந்திரசேகரனான பரமசிவன் பார்வதி தேவியைத்திருமணம் செய்து கொள்வதற்குரிய உபாயத்தை நீ செய் என்று விடைகொடுத்தான்.

விடைகொடுத்தவுடன் இந்திரன்மீண்டு தன்னுலகம் வந்துசேர்ந்து மன்மதனைநினைக்க, நினைத்தமாத்திரத்தில் அந்த மன்மதன் கரும்பு வில்லையும் புஷ்பபாணங்களையும் கையில்கொண்டு, பேரழகியரான இரதிதேவியும், மதுதேவியும், இரண்டு பக்கமும் இணைந்துவர, விரைந்துவந்து தாழ்ந்து பணிந்து, சுவர்க்காதிபதியே! யான் உன்கருணைத்திறத்தால் எந்தக்காரியமும்செய்யமாட்டுவேன், திரிபுராந்தகனாகிய சிவபெருமானையும் வெல்லவல்லேன். வேறு நான் சொல்லவேண்டியது யாது? ஒன்றுமில்லை, ஆதலின், நான்செய்யவேண்டியதைத் தெரிவிக்கவேண்டும் என்று, இப்படிப் பட்டதைச் சொல்லும்போது இந்திரன் மனமகிழ்ந்து, தேவர்கள் படும் பாட்டையும், அசுரர்கள் செய்யும் அநியாயத்தையும், பிரமதேவன் சொல்லியதையும், விரித்துவிளங்கச்சொல்லி, நாங்கள் எல்லாரும் மனம்பேதிக்காமலிருக்கும்படி சிவபெருமானைப் பார்வதிதேவியுடன் கலந்திருக்கச் செய். போ என்றமாத்திரத்தில் மன்மதன் இந்திரனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு மீண்டு, சிவபெருமான்யோகத்தில் இருக்கும்இடம் சேர்ந்து, தன்கையில் ஏந்திய வில்லைப்பயத்தினால் மெல்ல வளைத்தமாத்திரத்தில் எம்பெருமான், அவனைத் தமது நெற்றிக்கண்நெருப்பிற்கு இரையாக்கி, இரதிதேவி வேண்டிக்கொண்டதனால், அவன் உருவத்தையாரும் காணு

தபடி அருவமாக்கி, அங்கே அருந்தவம் செய்து கொண்டிருந்த பார்வதி தேவியைத்திருமணம் புரிந்து, வேலாயுதக்கடவுளைத் தந்தருளித்தாருகாசுரனைத் தொலைத்தருளினர்.

அதன்பின்பு செவ்வண்ணச்சோதிமயமான திருமேனியில் நீலகண்டமுடையவராகிய பரமசிவனும் பார்வதிதேவியும் அவ்விடம்விட்டு, வானத்தை அளாவ வளர்ந்திருக்கும்பலாமரங்களையும் சந்தனமரங்களையும் முறித்து மடித்துப் பெருகி முழங்கும் அருவிகளுடன் உயர்ந்திருக்கும் மந்தரமலைமேற்சென்று, அந்தப்புரத்திலே அலங்கார சப்பரமஞ்சத்தில் பாங்கிமார்கள் ஐந்து அடுக்காகவும்மூன்று அடுக்காகவும் இட்டபுஷ்பசயனத்தின் மேல் உலகமெல்லாம் உய்யும்பொருட்டு வீற்றிருந்து, இடையறுதோங்கும் சந்தோஷம் தருவதான இங்கித சரசசல்லாப போகலாபத்தை விரும்பிப் போகமூர்த்தியாய்த்தம்மில்களித்துச்சுகித்துமகிழ்ந்திருக்கும்போது, மூன்றுலகங்களும் செய்த தபோபலம் நிறைவேறவும், முழக்கமுடைய அலைகடலை ஆடையாக உடுத்திருக்கும் இந்தப்பூலோகம் புகழ் அடையவும், வளமான எட்டுத்திசைகளில் தென்றிசையானது செருக்குமிகுந்து மற்றத்திசைகளிலும் மேற்பட்டோங்கவும், அஞ்ஞானத்தின் கூட்டத்தை அழித்து அதமாக்கும் செந்தமிழ் நாடுவாழவும், நன்மையால் விளங்கும் தண்டகநாடுசெழித்துப் பலவளம்பெற்றோங்கவும், எல்லாரும் புகழும்படியான காஞ்சிமாநகரத்திற்கு மகிமை உண்டாகவும், கொண்டாடப்படுகின்ற ஆறுசமயத்தார்களுக்கும், ஆனந்தம் அதிகரிக்கவும், வேதசம்பந்தமான சைவசமயமானது சகலலோகங்களிலும் உயர்ந்துவிளங்கவும், பலவிதமான தவங்களிலே சிவபூசையே சிறந்தது என்று உலகத்தார் கண்டு தெளிந்து கடைத்தேறவும், பகைவனைப்போல் எந்நாளும் தீமை செய்யும் பாவமெல்லாம் பாழாய்விடவும், துன்பங்களுக்கு ஏதுவான வறுமை என்னும் களை இல்லாமல், உயிர்கள் என்னும் பயிர்கள் எங்கும் செழித்தோங்கவும், ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க்கு உணவு, அறுசமயத்தார்க்கு உண்டி, பசுவுக்கு வாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டம் நல்கல், அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர்த்தல், மகப்பால்வார்த்தல், அறவைப்பிணம் சுடுதல், அறவைத்தூரியம், சுண்ணம், நோய்மருந்து, வண்ணார், நாவிதர், கண்ணாடி, காதோலை, கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண் போகதானம், பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை, ஆவுரிஞ்சுதறி, விலங்கிற்கு உணவு, ஏறுவிடுத்தல், விலைகொடுத்து உயிர்காத்தல், கன்னிகாதானம் என்னும் முப்பத்திரண்டு தருமங்களும் தழைக்கவும், எந்தலோகத்திலும் உள்ள

ஒளியெல்லாம் எம்பெருமானுடைய நெற்றிக்கண் ஒளியின் பெருக்க மாம் என்று எல்லாருங்கண்டு தெளியவும், ஆகாய கங்கைதங்கிய சடையுடையவராகிய சிவபெருமானுக்குத் தொண்டுசெய்யும் அடியவருடைய மனமகிழவும், வலமிருந்தோங்கும் அன்பும் ஆசையும் மேன்மேல் வளரும் குறிப்புடன் விம்மிப்பருத்துச் சுற்றுப்பக்கங்களில் தடித்து எழுந்த தனங்களின் பொலிவையுடைய எம்பெருமாட்டி முதுகின் புறமாய் மெல்லவந்து சடுதியில் தன் மலர்போலுங்கைகளால் சந்திர சடாதாரியாகிய சிவபெருமானுடைய திருக்கண்களை மறைத்தல்செய்தாள். மலரணிந்து இருண்டிருக்கும் கூந்தலையுடைய எம்பெருமாட்டி தன் செங்கைகளால் இறுகமறைத்தல் செய்தலும், நீலகண்டமுடைய எம்பெருமான் திருக்கண்களாய்விளங்கும் சந்திரசூரியர்கள் மறைந்துபோனமையால், உலகமெல்லாம் இருண்டுபோயிற்று. எட்டுதிசைகளும் இருண்டுபோயின. எந்நாளும் இருள் இல்லாமல் விளங்கும் தேவலோகமும் இருண்டுபோயிற்று.

அப்பொழுது இருட்கூட்டமானது தன்னை எந்நாளும்பகைத்து ஆகாயத்திணிடமாக உலாவும் சூரியருடன் ஒழுங்காகத்திரட்டி நீட்டிச் செருகிவைத்தாற்போலும் சந்திரனையும், அக்கினியையும், நட்சத்திரங்களையும், நவமணிகளையும் விழுங்கித் தன்வீறுப்பு வெளிப்படக்காட்டி எங்கும்வியாபித்திருந்தது. கோட்டான் முதலானவைகள் காக்கைக்கூட்டங்கள்போல் குருடாய்விட்டன. கொடும்புலி முதலானவைகள் குரங்குகளைப்போல் அடங்கிவிட்டன. தேன் மணம்வீசும் செவ்வல்லியும், செந்தாமரைகளும் மலராமற்குவிந்தன. மிக்க துயரால் நிலாமுகிப்புட்களும், சகோர பட்சிகளும் வாட்டம் உற்றன. முழங்கும் அலைகளையுடைய சமுத்திரம் சூழ்ந்த உலகத்தாரும், விசாலமான பூமியையும், அதில் உள்ள சராசரப் பொருள்களையும், தங்கள் தங்கள் தேகஸ்திதியையும் காணமல், எப்பொழுதும் கண்டறியாத வானத்தில் உள்ள இருள் ஒன்றையே ஒழிவ்றக்காணப்பெற்றூர்கள். சிருஷ்டியின் விருத்தி ஒழிந்துபோயிற்று. யாகம்செய்வது ஒழிந்துபோயிற்று. தவமும் தானங்களும் பறந்துபோயின. தேவாராதனைகள் ஒழிந்துபோயின. போகாநுபவங்கள் தொலைந்துபோயின. வேதாகம புராண சாஸ்திர விசாரத்தால் அடையும் அறிவையிழந்து, உலகமெல்லாம் மயங்கிவிட்டன. தேவர், முனிவர், மனிதர் யாவரும் கவலையடைந்து, அங்கங்கே இருட்கூட்டத்தில் முழுகித் துடிதுடித்துக் கடலின் முழக்கமும் வெட்கம் அடையும்படி கூகா என்று கூவி முறையிடும்போது, பார்வதிதேவி தன்மலர்க்கைகளை நீக்குதலும், எம்

பெருமான் தன் மலர்க்கண்களைத் திறந்தருளினார். திறந்தருளிய மாத்திரத்தில் ஒளிகள் எங்கும் தங்கியதுகள். இருளின்தடிப்புக் குறைந்தது. படைத்தல் காத்தல் ஆகிய தொழில்கள் மலிந்தன. தருமங்கள் எல்லாம் தழைத்தன. யாகங்கள் விருத்தியாயின. எம்பெருமான் கீர்த்தி எங்கும் பரவியது. வேத நீதிகள் விளங்கின. உயிர்கள் எல்லாம் பரமசந்தோஷம் அடைந்தன. மணம்வீசும் மலர்களைத் தருகின்ற முல்லை அரும்புபோலும் நகைத்தலையுடைய எம்பெருமாட்டி எம்பெருமானுடைய திருக்கண்களைமறைத்து நீக்கப்பெற்ற ஒரு க்ஷணப்பொழுதிலே சகலலோகங்களில் பலயுகங்கள் கழிந்து, வேதநீதிகளும், படைத்தல் முதலான தொழில்களும் தடைப்பட்டமையால், எம்பெருமான் எம்பெருமாட்டியின் திருமுகத்தைப்பார்த்துத் திருவாய்மலர்ந்தருளுகின்றார். மணமலர்க் கூந்தலையுடையாளே ! சந்திரசூரியர்களுக்கு ஆதாரமான தாமரை மலர்போலும் எமது திருக்கண்களை மறைத்தபடியால், படைத்தல் முதலான தொழில்கள் ஒழிந்து போய், உன்னைப் பாவம் வந்து தொடர்ந்து கொண்டது. ஆதலால் அந்தப்பாவத்தைப் பரிகரிக்கும்பொருட்டு நீ வேதாகமவிதிப்படி பிராயச்சித்தம்செய்து கொள்ள வேண்டும். மாறுகருணையுள்ள எம்மையும், உன்னையும், நமது அடியவர்களையும் பாவம் அணுகமாட்டாது. ஆயினும் எல்லாக்காரியங்களையும், வேதாகம விதிப்படி யாம் செய்து காட்டியபடியே உலகமும் செய்யும் ஆதலால், யாம்சொன்னபடி நீ பிராயச்சித்தம் செய்துகொள் என்று சொல்லக்கேட்டுப் பயந்து நடுங்கித்தாழ்ந்து வணங்கி எழுந்து நின்று எம்பெருமாட்டி சொல்லுகின்றாள். எம்பெருமானே ! பிராயச்சித்தம் என்றது என்ன ? அதைச்செய்யும் காலம் யாது? செய்யும் இடம் எது ? எல்லாவற்றையும் அடியேனுக்கு நன்குவிளங்கச் சொல்லவேண்டும் என்றுவேண்டுதலும் எம்பெருமான் சொல்லுகின்றார்.

## பிராயச்சித்தங்களாவன

ஒளிவீசும் முத்துமாலை அணிந்து இறுமாப்படைந்து வளரும் தனங்களையும் இயற்கை மணம்வீசும் கூந்தலையும் உடையாளே ! சற்றேனும் யோசித்து நீக்கிவிடாமல் பாவகாரியங்களைச்செய்து, பின்னால் பயப்படுகிறவர்களுக்குப் பிராயச்சித்தமாக, முனிவர்கள் தரும சாஸ்திரங்களில் விதித்துவைத்தார்கள். அந்தவிதிகள் எல்லாம் பாவத்தைப் பரிகரிப்பது அசாத்தியமாம் இது நிச்சயம். எவ்வளவு கொடும்பாவம் ஆனாலும் முழுதும் தொலைக்கும் பிராயச்சித்தங்களாவன. எம்மைமெய்யன்புடன் பூசை

செய்தல், ஏகமனமாய்த் தியானித்தல், துதிசெய்தல், எமது பெயரைச் சொல்லுதல், எமது அடியவர்களைப் பத்தியுடன் வந்தனைவழிபாடுசெய்தல் என்னும் இவைகளாம்.

பாவைபோல் அழகுபடைத்தவளே! மேன்மைபொருந்திய இளங்காலசந்தி, காலசந்தி, உச்சி, மாலை, சாயங்காலம், அர்த்தசாமம் என்னும் ஆறுகாலங்களும் முறையே எம்மைப்பூசிப்பதற்குரிய காலங்களாம். யாம் பரமானந்தம் கொண்டு வாசஞ்செய்யும் இடங்கள் எம்மைப் பூசை செய்வதற்கு உரிய இடங்களாம். எமது அன்பர்கள்வசிக்கும் இடமும் அத்தன்மையதாம் என்று அறிந்துகொள். ஆதலால், யாம் வாசஞ்செய்யும் இடத்தில் ஆயினும் எமது அடியவர்கள் வசிக்கும் இடத்திலாயினும் மேற்பட்டோங்கும் அன்புடன் எம்மைப் பூசைசெய். இதைக் கண்டு சுவர்க்க மத்திய பாதாளம் என்னும் மூன்று உலகத்தாரும் எம்மைப் பூசைசெய்து கடைத்தேறக் கடவர். என்று சொல்லுதலும், எம்பெருமானுடைய பாதாரவிந்தங்களைத் தாழ்ந்து பணிந்து, நாயேனையும் அடிமையாகக் கொண்டருளும் நாயகி, ஏகமனதுடன் சொல்லுகின்றாள். விசுவாசமில்லாத மனம் வாக்குகளில் தங்குவது இல்லாத நீ, அவரவர்கள் தங்கள் தங்கள் பொய்ப்போதத்தால் பூசை செய்யவும் எளிதில் எழுந்தருளினை. அடியேனும் மகிழ்ந்து உன்னைப் பூசைசெய்யும் பாக்கியம் பெற்றேன். தேன் ஒழுகப் பூத்த கொன்றைப் பூமாலைசூடிய செஞ்சடையையுடைய சிவபெருமானே! மாசில்லாத உன்பூசைசெய்யும் வகையாது? அதைச்சொல்லுக. என்று சொல்ல, ரிஷப வாகனத்தையுடைய கருணைக்கடலான சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளுகின்றார். எனக்கு உரிமையான பாதபூசைகள் மாசில்லாத நித்திய பூசை, நைமித்திகபூசை, காமியபூசை என்று, மூன்றுவகைப்படும். மற்ற உலகங்களில் செய்யும் பூசையானது நித்திய பூசை ஆகுமேயல்லாமல், காமிய பூசையும் நைமித்திகபூசையும் ஆகமாட்டாவாம். ஒப்பில்லாத இந்த மூன்றுவகையான பூசைகளும் கருமபூமியில் உள்ளனவாம். கரும பூமியாவது பரதகண்டமாம். கிழக்கு கடல், மேற்கு கடல், சேது, இமயமலை, என்னும் இந்தநான்கு எல்லைக்குட்பட்ட பூமியானது பரதகண்டமாம். முத்துப்போல்விளங்கும் தந்தங்களையும்தொழில்முற்றிய ஆபரணங்களையும் உடையாளே? உலகமெல்லாம் ஆன்மலாபமடையும் பொருட்டாக நீ இப்படிப்பட்ட பரதகண்டத்திலே எமக்குப் பிரியமான உத்தமத்தலங்களில் ஆகம விதிப்படிஎம்மை இலிங்கத்தில் ஆவாகனம்செய்து, விரைந்து பூசைசெய். என்றுசொல்லுதலும் அப்பொழுது எம்பெருமானே! அந்தப்

பாதகண்டத்திலுள்ள பலதலங்களில் நீ மிகவும்மகிழ்ந்து வசிக்கும் மேன்மை பெற்றுள்ளதலம்யாது? என்றுகேட்க, நீதிமூறைதப்பியபகைத்த அசுரர்களுடைய முப்புரங்களை அழித்தருளிய சிவபெருமான் சொல்லுகிறார். மணமலர்க்கூந்தலையுடையாளே ? அந்தப்பரதகண்டத்திலே நாம் மகிழ்ந்து வாசம்செய்யும் தலங்கள் பலகோடிகளாம். அந்தத்தலங்களில் ஆயிரத்தெட்டுத்தலம் சிறந்தவைகளாம். அந்த ஆயிரத்தெட்டுத்தலங்களில் நூற்றெட்டுத்தலம் சிறந்தனவாம். அந்த நூற்றெட்டுத்தலங்களில் அறுபத்தெட்டுத்தலங்கள் சிறந்தவைகளாம். அந்த அறுபத்தெட்டுத் தலங்களில் காசி, காஞ்சி என்னும் இரண்டுதலங்கள் சிறந்தனவாம். அறிவிற்சிறந்த பெரியோர்கள் ஆராய்ந்துபார்க்குமிடத்தில் காசி, காஞ்சி என்னும் அந்த இரண்டு தலங்களிலும் அழகும் நீர்வளமும் உள்ள காஞ்சியானது நமக்குமிகப்பிரீதியானதாம். இப்படியாகப் பல தலங்களை ஏற்படுத்தியது என்? என்பாயாகில், சொல்லக்கேள். மைபோல் கறுத்திருக்கும் மும்மலங்களால் விளையும் இருவினையாகிய பாசத்தால் கட்டப்பட்டு, மருட்கடலில் முழுகிப் பிழைக்கும்வழி உணராத ஆன்மாக்களை, மலரகிதனுகிய நாம் கருணையால் கட்டறுத்துக் கதிசேர்க்கும் பொருட்டாகப் பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, என்னும் ஐந்து சத்திகளைப்படைத்துப் பின்பு, அருவவகையான சத்தி, சிவம், விந்து, நாதமும், உருவவகையான பிரமன், திருமால், உருத்திரன், மகேச்சுரனும், ரூபாரூபம் ஒன்றும் ஆகிய நவ வடிவங்களைத் தோற்றுவித்துப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அநுக்கிரகம் செய்தல் என்னும் ஐந்து தொழில்களையும் நடத்த நினைத்துச் சுத்தமாயை, அசுத்தமாயை என்னும் இருவகையான மாயைகளால் தனு கரணபுவன போகங்களை அந்த ஆன்மாக்களுக்குக் கொடுத்து, அவைகளின் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் முதலியவற்றின் வேறுபாட்டால் விளையும் இருவினைகளுக்கு ஈடான பிறவிகளைத்தந்து, புண்ணியத்தின் மிகுதியால் சுவர்க்கத்திலும், பாவத்தின் மிகுதியால் நரகத்திலும்,புண்ணியபாவத்தால் பூலோகத்திலும், ஊசல்போல் உழலச்சுழல்வித்துப், பருவம் பார்த்து அவைகள் செய்த வினைப்பயனை மெள்ள அநுபவிக்கச் செய்து, இகபரங்களில் விஷமும் அமுதம்போல வெறுப்பும்விருப்பும் உண்டாகக் கலந்துகொண்டுசுத்தப்படுத்தி, அவைகள்அறிந்தும் அறியாமலும்உபாயத்தினுலாவது உண்மை அறிவினுலாவது தலங்களில் சேரும்படி செய்வோம். மலமாசுகளைநீக்கி எமது யதார்த்த சொருபத்தை உணர்த்தும் தலங்கள் சரியை கிரியை, யோகம், ஞானம் என்று சொல்லப்பட்ட நான்காகும். இந்தச்

சரியை கிரியை யோகம் ஞானங்களில் சேர்வதற்கு உரிமை உண்டாக்கும் தீக்ஷைகள் சமயதீக்ஷை, விசேஷதீக்ஷை, நிருவாணதீக்ஷை முதலியமூன் றும். அந்தச்சரியைமுதலியநான்கும் தரும் பதவிகள்சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் முதலான நான்கு என்று சுருதிகள் சொல்லும். தேக்குஎடுக்கும்படி சுரக்கும் தேன் போலும் இனியமொழியுடையாளே! ஆணவம் முதலான மலங்களை அகற்றுதற்கு உரிய தீக்ஷைகள் பலவித மாம். அவற்றுள் நயனதீக்ஷை, ஸ்பரிசதீக்ஷை, வாசகதீக்ஷை, மானச தீக்ஷை, சாஸ்திரதீக்ஷை, யோகதீக்ஷை, ஹோமசம்பந்தமுள்ள ஹௌத்தி ரிதீக்ஷை ஈறுகச் சொல்லப்பட்ட ஏழில், மேலானதாக எடுத்துச் சொல் லப்படும் ஹௌத்திரிதீக்ஷை யானது, கிரியாதீக்ஷை என்றும் ஞானதீ க்ஷை என்றும் இருவகையாகிச் சமயதீக்ஷை, விசேடதீக்ஷை, நிருவாண தீக்ஷை என்னும் பகுப்பினுல் மூன்றுவகைப்படும். உலகாயதம் முதலான புறச்சமயங்களிலும், சைவம் முதலான உட்சமயங்களிலும் உண்மை நிலை காணுமல் உழன்று, அந்தணர், அரசர், வணிகர், சூத்திரர் என்னும் நான்கு சாதிகளுக்கும் வகுக்கப்பட்ட, பிரமசரியநிலை, கிரகஸ்தநிலை, வானப்பிரஸ் தநிலை, சந்நியாசிநிலை என்னும் நான்கு நிலைகளில் தவறுமல் நின்று, சுரு திஸ்மிருதி முறையாகப் பலயாகங்களைச்செய்து, வேதாந்தப் பொருளை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஐயம் திரிபு அறவிசாரித்து வரும் முறை யால், இவைகளை எல்லாம் முடித்துப் பின்பு வீடு அடைய வேண்டும் என்னும் அறிவால் மிகுந்த பெரியோர்கள் பதி, பசு, பாசம் என்னும் முப் பொருள்களைவிளங்க உணர்த்தும் சைவசமயத்தில், விதந்துசொல்லப்படும் சமயதீக்ஷைக்கு உரியர் ஆவார்கள். சமயதீக்ஷைக்கு அதிகாரிகளாகி யாம் வீற்றிருக்கும் திருக்கோயில்களில் திருஅலகிடுதல், மெழுகல், பத்தியுடன் மலர் கொய்து பலவித மாலையாகத் தொடுத்துச் சாத்துதல், திருவிளக் கிடுதல், தேகத்தால் பெறும் பேறு பெறும்பொருட்டாகச் சிவனடியார் ஏவியதொழிலில்நின்று, அந்த அடியார் அருளைப்பெறுதல்முதலான இந்த நெறிகளுடன் கூடிய தாதமார்க்கமான சரியாபாதத்தை அநுஷ்டிக்கின்ற வர்கள் எமது உலகில் வாழ்வதான சாலோகபதவி பெறுவார்கள். இந்தச் சரியாபாதமாகிய தாதமார்க்கத்தை முடித்த பின்பு, யாகத்திற்குரிய விசேஷதீக்ஷை பெற்றுச் சிவபூசைக்கு விதிக்கப்பட்ட மலர் தூபதீபம், திருமஞ்சனம், திருவமுது முதலியவைகளைக் கொண்டு, ஆதாரசத்தி முதல் சத்திஈருக ஓங்கும் பத்மாசனத்தின்மேல், வித்தியாதேகமாகியமூர் த்தியையும், மூர்த்திமானுகிய சுத்தசிவத்தையும் தியானித்து, ஆவாகனம் செய்து, ஆவரணபூசை புரிந்து, காருகபத்தியம், ஆகவனீயம், தக்கிணுக் கினியம் என்னும் முத்தீயை வளர்க்கும் புத்திரமார்க்கமான கிரியாபாத த்தில் தவறுதல் இல்லாதவர்கள் எமக்கு அருகில் வாழ்வதான சாலோ

கபதவி பெறுவார்கள். இந்தக்கிரியாபாதமாகிய புத்திரமார்க்கத்தை முடித்த பின்பு இயமம், நியமம், ஆதனம், பிராணயமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதியென்னும் அஷ்டாங்கயோக நிலைகளை அடைந்து, இடைகலை பிங்கலைகளாகிய இரேசக பூரகவாயுக்களை ஓடவிடாமல் தடுத்துக் கும்பித்துப் பிராணவாயுவைச் சுழுமுனைநாடியினிடமாக நிறுத்தி, மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி, ஆக்கினை என்னும் ஆறுதாரங்களில் கூடியிருக்கும் பத்மதளம், அதிதேவதை, அட்சரங்களாகிய பொருள்களை அறிந்து மேற் சென்று, விந்துத்தானமாகிய சந்திரமண்டலத்தின் வழியே இறங்கிப்பெருகுகிற அமுததாரைகளைப் புசித்துச் சோதிமயமான எம்முடன் இரண்டறக் கலக்கும் சகமார்க்கமாகிய யோகபாதத்தை வருந்திச்சாதித்தவர்கள் எமது உருவமாகிய சாரூபபதவி பெற்று வாழ்வார்கள். சரியை, கிரியை, யோகம் என்னும் இம்மூன்றையும் முறையே செய்து முடித்துச் சத்தினி பாதத்து உத்தமர்களாய், இருவினை ஒப்பு வாய்ந்து, மலபரிபாகம் அடைந்தகாலத்தில் உயிர்க்கு உயிராய் விளங்கும் யாமே குரு மூர்த்தமாய் எழுந்தருளி, வேதாகம விதிப்படி நிருவாணதீக்ஷை நெறியால் ஆறு அத்துவாக்களையும் சுத்திசெய்து அருட்பெருஞ் சோதியாம் எம்மைத் தெரிசிப்பிக்கும் ஸ்ரீபஞ்சாட்சரநிலைகளை விளங்கப் போதித்து, அருவம் உருவம், குறி, குணம், பந்தம், வீடு முதலிய ஒன்றும் இல்லாமல், பெரியதிற்பெரியதாய்ச் சிறியதிற் சிறியதாய்ப் பேரறிவாய், எங்கும் வியாபித்திருக்கின்ற ஒரு முதற்பொருளாய், அழியாதோங்கும் சுடர்ச்சோதியாய், அகண்டபரிபூரணமாய், உயிர்கள் தோறும் பாலில் நெய்போலவும், பழத்தில் இரசம் போலவும் கலந்து மறைந்து சத்காரியங்களைச் செய்வித்து, ஆனந்த வீடு கொடுத்தருளும் பதியாகிய எமது இயல்பையும், எண்ணிறந்தனவாய், விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்னும் மூன்று வகையாய்த் தன்நிறத்தையே காட்டாமல் தன்னைச் சேர்ந்த பொருள்களின் நிறத்தையே காட்டும் பளிங்குபோல் தமது உருவத்தைக்காட்டாமல் தாம்பற்றிய பொருள்மயமாகவே விளங்குவனவாய், என்றும் உள்ளதாய், இது சத்து, இது அசத்து என்று பகுத்தறியும் திறமுள்ள சத்து ஆனதாய், இருளுடன் கலந்து இருளும் ஒளியுடன் கலந்து ஒளியும் ஆகாதகண்ணின் இயல்பாய் வசிக்கும் நிறை பொருளாய், எமது அருளால்கட்டறுத்து வீடுபெறுபவைகளாய்த் தாமாய் அறிந்து கொள்ளும் தன்மையில்லாமல், அறிவிக்க அறிந்து கொள்ளும் சிற்றறிவுடன் பலவாய் விளங்கும் பசுக்களாகிய ஆத்மாக்களின் இயல்பையும் ஒன்றாகி அழிவில்லாமல், பலசத்திகளையுடையதாய்ச் செம்பி

ல்களிம்புபோல் அநாதியாய், அருட்சத்திபதியுங்காலத்தில் விட்டு நீங்கு வதாய், எப்போதும் அஞ்ஞானத்தையே விளைக்கும் ஆணவமலமும் அந்த ஆணவமலத்தை அகற்றமின்னல்போல் ஒருக்ஷண நேரத்திலே தோன்றி மறைந்துபோகும் தனுகரணபுவன போகங்களைக் கொடுக்கும் சுத்தமாயையும் அசுத்தமாயையும், சுகதுக்கங்களைத்தரும் நல்வினை தீவினைகளுக்கு மூலமென்று சொல்லப்படும் கர்ம மலமும், இந்த மலங்கள் தங்கள் தங்கள் தொழில்களைச் செய்யத் தூண்டும் திரோதான காரியும் ஆகிய பஞ்ச பாசங்களின் இயல்பையும், பொது இலக்கணத்தை நீக்கி ஐயம்திரிபு இல்லாமல் சிறப்பு இலக்கணத்தால் உணர்ந்து சிந்தித்துத் தெளிந்து நிஷ்டைகூடல் ஆகிய சன்மார்க்கம் என்னும் ஞானநிலைபெற்ற பெரியோர்கள், தாம் அடைந்த ஞானத்தால் பாசங்களை நாசமாக்கிச் சிவானந்தப் பெருஞ் செல்வம் பெற்று, அந்தப்பாசங்கள் மீண்டு குளத் திற்பாசிபோல் விலகுவதும் கலப்பதும் இல்லாமல், ஒரு நிலையாய் விளங் கும் அந்த இயல்பில், ஞாதரு (அறிபவன்) ஞானம் (அறிவு) ஞேயம் (அறிபொருள்) என்னும் மூன்று பகுப்புகளும் பற்றறத்தொலைந்து, சூரிய காந்தியுடன்கலந்த கண்களையும், நீரில் தண்மையையும், தீயில் இரும் பையும், சலத்தில் உப்பையும், சூரியன் முன் நட்சத்திரங்களையும் போல இரண்டறக் கலக்கும் கலப்பினால் எம்முடன் பேரின்பத்தை அநுபவித்து வாழ்வார்கள். வாசனை யுள்ள மலர்சூடிய கூந்தலையுடையாளே! அந்த ஞானிகளுடைய தேகமே எமக்குப் பிரியமான கோயிலாம். இதுவேமு த்தி முடிவாகும். ஏனைய சாலோகம், சாமீபம், சாரூபம் என்றமூன்றும் முத்திபதங்களாம். இப்படிப்பட்ட முத்திகளை இவ்வண்ணம் முயன்று சாதித்தவர்களே அடைவார்கள். அப்படிச்செய்யும் திறம் இல்லாதவர் கள் எளிதாக முத்தி அடைவதற்கு எண்ணி, அவர்கள்மேல்வைத்த பெரு ங்கருணைத் திறத்தால், பூலோகத்திலேயாம் பலதலங்களை வகுத்தல் செய் தோம். அந்தத் தலங்களிலே வாசம் செய்பவர்கள் முயற்சி யில்லாயலே எமது உலகத்தில் வாழ்வதான சாலோக சாமீப பதவிகளைப் பெறுவா ர்கள். மணம் வீசும்மலர் சூடிய கூந்தலையுடையாளே! அந்தத் தலங்களி லும் அலங்கார மாடமளிகைகளையுடைய காசியில் வாசம் செய்பவர்கள் எமது உருவமாகிய சாரூப பதவி பெறுவார்கள். திருக்காஞ்சியில் வாசம் செய்பவர்கள் அழிவில்லாத ஆணவாதி மலங்களை ஒழித்து, நம்முடன் கலப்பதாகியசாயுச்சியம் என்னும் பேரின்ப வாழ்வுபெறுவார்கள். எமது உலகத்தில் வாசம்செய்வதான சாலோக பதவியைப் பார்க்கிலும் எமது அருகில் வசிப்பதான சாமீபபதவி உயர்ந்ததாம். அந்தச்சாமீபபதவியைப் பார்க்கிலும் சாரூபபதவி உயர்ந்ததாம். அந்தச்சாரூபபதவியைப் பார்க்

கிலும் பேரின்பமயனும் எம்முடன்கலப்பதாகிய சாயுச்சியம் உயர்ந்ததாம். இந்தமுறையால் தன் இடத்தில் வாசம் செய்யும் யாவருக்கும் தப்பாமல், எம்முடன் கலப்பதாகிய சாயுச்சியம் கொடுக்கும் காஞ்சியானது எல்லாத் தலங்களிலும் உயர்ந்தது என்று கண்டு தெளி. வேதாந்தமும் இப்படியே வீடு தரும் வளமுள்ள நகரம் காஞ்சி என்றேசொல்லும். அதையும் விரித்துச் சொல்லக்கேள் என்று, பூர்வம் நிந்தைசெய்ததக்கனுடையயாகத்தில் வந்திருந்ததேவர்களுடைய அங்கங்களை யெல்லாம் வெட்டியும் மிதித்தும் வருத்தியும்வாட்டியபின் இரங்கித்திருவருள் செய்தவராகியசிவபெருமான் திருவாய் மலர்ந்தருளுகின்றார். தனக்கு நிகரில்லாத கேசாந்தமுத்தியை அடையும் உயிரானது தனது கபாலத்தைக் கிழித்துத் தீயினிடத்தில் பூ என்று போயும் வாயுவினிடத்தில் பு என்று போயும், சூரியனிடத்தில் சு என்று போயும், இந்திரனிடத்தில் மக என்று போயும் பிரமத்தில் ஒன்று பட்டிணங்கும். இந்தக் கேசாந்த முத்தியைக் காஞ்சிமாநகரமானது சகலாத்மாக்களுக்கும் கொடுக்கும். க என்று சொல்லும் படியான பிரமதேவனுக்கு ஈசனாகிய எம்மைக் கேசன் என்று வேதங்கள் சொல்லும், ஆத்மாக்கள் எந்த இடத்திலே எம்மிடத்தில்அந்தம் (ஒடுக்கம்) அடையுமோ? அவ்விடத்திலே அந்த அந்த மாகிய முத்தி கேசாந்தமுத்தி என்று சொல்லப்படும். அந்தப்பரிசுத்தமான இடமும் எமக்கு இராஜதானியாக விளங்கும் காஞ்சிமாநகரமாம். மின்னல்போல் விளங்கும் சிற்றிடையையுடையாளே! நீ, யாம்இன்னும் ஒருவகைசொல்லக்கேள். கம் என்று சொல்வது சிரசாம். அந்தச் சிரசின்மேல் சயனித்திருப்பது கேசம். அதை அஞ்சித்தல் (அடைதல்) காஞ்சியாம் அதனால்காஞ்சி என்பதும் கேசம் என்தும் ஒருபொருளை உணர்த்தும் மொழிகளாம். ஆதலின் கேசாந்தம் என்பதுகாஞ்சியந்தம் என்றும்சொல்லப்படும். மணமலர்க்கூந்தலையுடையாளே! எந்நாளும் எமக்கு இனிமையானதாலும் எமது ராஜதானியானதாலும் எண்சாணுடம்பிற்கும்சிரசேபிரதானம்என்பதுபோல் தலங்களுக்கெல்லாம் தலை என்று சொல்லப்படும் காஞ்சியென்னும் இப்படிப்பட்ட கேசாந்தத்தலத்தில் விவேகமில்லாதவர்கள், மிருகங்கள், மரங்கள் ஆனாலும் எல்லாம் உயிர்விடுங்காலத்தில் கபாலத்தைப் பிளந்துகொண்டு, தேகத்தைவிட்டு நீங்கிக்கேசாந்தமுத்தியை அடையும். பெண்ணே! இக்காலத்திலும்அந்தக்காஞ்சித்தலத்தில் இறந்துபோனவர்களுடைய உடல்கள் காஷ்டத்தில்வேகும்போது தலைகள்வேடிக்கமாட்டாதுகள். வேதங்களெல்லாம்சிறப்பித்துச் சொல்லும் படியான அந்தக்காஞ்சிமாநகரத்தின் பெருமைசொல்லவல்லவர்யாவர்? எமது திருக்கண்களை மறைத்ததனால் உனக்கு உண்டாகியகுற்றம்தீரும்படி அந்தக்காஞ்சிமாநகரத்திற்குப்போய்

ப்பிராய்ச்சித்தம் செய்து கொள். பூர்வம் ஒருரிஷபமும் தன்குற்றம்தீரப் பிராயச்சித்தம் செய்துகொண்டது என்று அநுக்கிரகம் செய்தார்.

சிவபெருமான் இவ்வாறு திருவாய் மலர்ந்தருளியதைக் கேட்டமாத்திரத்தில் எம்பெருமாட்டி கைகூப்பித்தொழுது, எம்பெருமானே! அந்த ரிஷபம் எது? அதுசெய்தகுற்றம் என்ன? அந்தக்குற்றம் தீர அதுசெய்தகாரியம் யாது? சொல்லுகவென்று கேட்க, இருள்போற் கறுத்திருக்கும் நீலகண்டமுடையவரான எம்பெருமான் சொல்லுவார். பொன்போலும் தேமலையும்பொன்னுபரணங்களையும்பூண்டபயோதரங்களையும் இனியசொல்லையும் உடையாளே! முன் ஒருயுகமுடிவில் பிரமதேவன் முதல் உலகமெல்லாம் எம்மால் அழிக்கப்பட்டன. அந்த நாளில் தருமதேவதையானது உலகமெல்லாம் அழிந்துபோனதைப் பார்த்து, அநித்தியமான உலகத்தில் உள்ள சராசரப் பொருள்கள் எல்லாம் அழிந்துபோயின. நானும் அழிந்துபொவேனென்று தனக்குள் வருந்தி, இனி யென்ன செய்யலாம்? என்று ரிஷபரூபம் கொண்டு எம்மிடத்தில் வந்து பணிந்து சரணம் என்று சொல்ல, யாம் அதைக் கண்டு, நீ கவலைப்படாதே என்று அதை வாகனம் ஆக்கிக்கொண்டோம். வாகனம் ஆக்கிக்கொள்ளப்பெற்று அதுபரமசந்தோஷம் அடைந்திருந்தது. வண்டுமுழங்குங்கூந்தலையுடைய பூங்கொடியே! அந்த நாள்.இராத்திரி ஒழிந்தபோது காருண்யத்தால் யாம் இதுசொன்னேம். தருமதேவதையே! நீ உயிர்களைத் தரிக்கச் செய்வதனால் தருமமாம். தரிக்கச்செய்யாமையானது அதர்மமாம். எமது அன்பர்கள் எம்பொருட்டுச் செய்யும் பாவத்தையும் புண்ணியமாக்கி, அன்பில்லாதவர்கள் தம் பொருட்டுச் செய்யும் புண்ணியத்தையும் பாவமாகச் செய். எந்தத்தலத்திலும் எமது சந்நிதானத்தில் இந்த ரிஷபரூபத்துடன் வாசம் செய்க என்று கொடுத்த வரம் பெற்றுக்கொண்டு, அப்படியே எமது சந்நிதானத்தில் எந்நாளும் வாசமாயிருக்கின்றது. அழகு மிகுந்த செவ்வாயையும் கருமையான கூந்தலையும் வெண்மையான தந்தங்களையும் பொன்னலாகிய பூஷணங்களையும் உடையாளே! மகிமைபொருந்திய தருமக்கடவுள் ஆகியரிஷபத்திற்கு ஒரு அமிசம் ஆனபடியால், மாயவனும் யாம் திரிபுரதகனம் செய்த நாள் ரிஷபமாகி எம்மை யாம்வீற்றிருந்த இரதத்துடன் சுமந்தான். ரிஷபம் வந்த வரலாறு இது. இனி அந்த ரிஷபம் செய்த குற்றத்தையும் மற்றும் காரியங்களையும் சொல்லுவோம்.

பின்பு ஒருகாலத்திலே பராக்கிரமம் மிகுந்து பாம்புகளுடன் பகை சாதித்த பறவைகளுக்கெல்லாம் அரசனாகிய கருடன் இலட்சுமிவாசம் செய்யும் மார்பையுடைய மாயவனைச்சுமந்து கொண்டு அதிசீக்கிரத்தில்

உலகமெல்லாம் சுற்றித்திரும்பியது. திரும்பிவந்தபின்பு மிகச்செருக்கடைந்து வீறுப்புடன் மாயவனைப்பார்த்துச் சுவாமி! மூன்றுலகங்களிலும் என்னைப்போல் பலமும் வேகமும் படைத்தவர்கள் உண்டோ? நெடியோனே! சராசரப் பொருள்களாய் எங்கும் நிறைந்திருக்கின்ற உன்னைச் சுமந்து கொண்டு அரைக்ஷணத்தில் மூன்றுலகங்களுக்கும் போய்மீண்ட இந்த அற்புதம் எனக்கே அல்லாமல் யாருக்கு உண்டாகும்? என்று இந்த வார்த்தைகளைக்கருடன் சொல்லக்கேட்ட மாத்திரத்தில் அந்தமாயவன் புன்னகைசெய்து, ரிஷப நாயகம் இந்தக்கருடனுடைய கர்வமெல்லாவற்றையும் அழிக்கும் என்று தன்மனதில் நினைத்துத் திருமகள் போகத்தை அநுபவிக்கும்மாயவன் மனதில் கரவடம்வைத்து,முடியையசைத்து, அப்பா! நீசொல்லியது மெய். உலகத்தில் உனக்கு இணையானவர்கள்யார்? ஒருவரும் இல்லை என்றுசொல்லினான். சொல்லியபின்பு நாம் இந்தநாள் சிவபெருமான் திருவடியைக் கண்டு சேவிப்போம் என்று போரிற் சிறந்த வலிபடைத்த கருடனுடன் கைலாசகிரிக்குப்போய், அழகு மிகுந்த போகபுரத்தின் எல்லையில் அந்தக் கருடவாகனத்தை விட்டு இறங்கி நடந்து எமது சந்நிதானத்திற்கு வரும்போது ஐந்தாம் ஆவரணத்தில் எமக்கு எதிரில் ஐந்து பசுக்கள் சூழ்ந்து நெருங்கி வசிக்க வாழ்கின்ற வலியமைந்த ரிஷபமானது அவ்விடத்தில் மாயவனுடன் வந்த பலம் மிகுந்த கருடனைப்பார்த்துத்தன் எதிரில் அலட்சியத்துடன் அகங்காரம் அடைந்திருக்கும் அந்தக் கருடனுடைய அற்ப புத்தியையறிந்து, விரைவில் தன் தலையை இடதுகாலின் தொடைமேல் வைத்துக்கொண்டு தூங்குவது போல் பெருமூச்சுவிட்டுப் பிடித்தது. ஆபரணங்கள் அணிந்தவளே! மாயவன் எமது பாதங்களைப்பணிந்து அன்புடன் அவ்விடத்தில் நெடுநேரம் இருந்துவிட்டான். எமது வாகனமாகிய ரிஷபத்தின் பெருமூச்சில் அகப்பட்டு உழலும் கருடனும் மிக நொந்து போயிற்று. உச்சுவாச நிச்சுவாசங்களை விட்டுவிட்டு அடக்கும்தோறும் உண்டானவேகத்தால் கருடனைப்பலநூறு காதங்களுக்கு அப்பால்போய் மீண்டு தன் நாசியில் வந்து தங்கும்படிசுழல்வித்து வருத்தப்படுத்தியது. இந்தப்பிரகாரம்ரிஷபத்தின்பெருமூச்சினால் தாக்குண்டு விரைவில் மீளுந்தோறும் கருடனுடைய தேகத்தில் சுஃஃ றென்று விரிந்து குவியும் செம்பொற்சிறைகளில் சிறு மயிர்கள் சிதைந்து பஞ்சுகொட்டப்பறக்குந்தூசிபோல் ஆகாயமெங்கும் பறக்கலாயின. மிகவும் உக்கிரங்கொண்டு ஓங்கும் கோப முள்ள ரிஷபத்தின் சுவாசபலத்தால் விண்ணுலகம் எங்கும் அதிர்ந்தது. அஷ்டதிக்கு யானைகள் சோர்ந்துபோயின. பஞ்சதருக்களில் உள்ள தழைகள் உதிர்ந்தன. நக்ஷத்திரங்களெல்லாம்பலபலவென்று உதிர்ந்தன. மலைகளெல்லாம் தவி

டுபொடியாய் விட்டன. நவக்கிரகங்களும் நிலைதப்பிப் போய் விட்டன. தனக்கு நேராகவிளங்கும் மலைகளையும் மற்றப் பொருள்களையும் ஆதார மாகப் பிடித்துக்கொள்ளத் தன்மனதில் நினைப்பதற்குமுன் ரிஷபத்தின் சுவாசவாயுவானது வலியமைந்த கருடனை அதிசீக்கிரத்தில் நூறு யோச னைதூரம்வரையிலும் செலுத்தி மீளச்செய்யும். இதனால் கருடனுக்குக் கர்வம் அழிந்தது. உடல் மெலிந்துபோயிற்று. பலம் பறந்து போயிற்று. இறுமாப்பு முறிந்தது. பொன்வண்ணச் சிறகுகள் ஒடிந்தன. துன்பநோய் மிகுந்தது. பொன்னிறமும் கரிநிறமாயிற்று. இப்படியாய் விட்டதனால், கருடன் துக்கம் அடையும். தப்பித்துக்கொண்டு போய்விடச் சுற்றுப்பக் கங்களைப்பார்க்கும். இது நீங்கும் தன்மையுள்ளது என்னும் நிச்சயம் இல் லாமையால் மயங்கும், வாடும், திகைக்கும், தேம்பும், பயப்படும், மாய வனைக்கூப்பிடும். இவைகளல்லாமல் அது வேறு என்ன செய்யும்? ஐய வோ! உலகம் காக்கும் அடிகளோ! காயாம்பூவண்ணவோ! எனை ஆண் டவிமலவோ! சக்கரமேந்திய கையவோ! ஆபத்துக்குதவும் செல்வமா கிய ஆதரவோ! அன்பருக்கு அன்பவோ! பத்தி யில்லாதவர்களுக்குப் பகைவவோ! சகலலோக நாயகவோ! ரிஷபராஜனுடைய சுவாசத்தில் அகப்பட்டு மெலிகின்றேன் ஓலம். இந்தச் சங்கடத்தை நீக்கி அடியே னைக் காத்தருள்வாய் ஓலம். காவாவிட்டால் நாயினுங் கடையேனாகிய நான் இப்பொழுதே இறந்துபோவேன் ஓலம். நாயேனை அடிமையாக உடையவனே! என்று ஓலமிட்டழைத்தது. சீறுகின்றகொடிய பாம்பின் வாயில் அகப்பட்ட தவளைபோல் வருந்திக்குரல் ஓசை வேறுபட்டு மாய வனை அழைத்ததை யாம் எமது செவியால்கேட்டுப் பகைவரை அழி க்கும் சக்கரமுடையானே! இக்குரல் ஓசையாது? என்றுகேட்கச் சத்து ருக்களைப் பொடியாக்கும் கோபமும் பலமும் பெருந்தன்மையும் உள்ள மாயவன் சொல்வான். விமலநாயகனே! இந்தநாள் உனது பாதங்களைப் பணியும் ஆவல்கொண்ட என்னுடன் மகா பராக்கிரமசாலியான கருடன் வந்து, கோபுரவாசலில் நித்திரைசெய்துகொண்டிருக்கும் வெள்ளிமலை போலும் முசுப்புள்ள இரிஷபராஜனுடையசுவாசத்தில் அகப்பட்டுக்கொ ண்டு இறந்துபோகின்றவனைப்போல்நொந்து அடியேனை அழைக்கின்றான் என்றான். இவ்வாறு மாயவன்சொல்லக்கேட்டு, இப்படியாக நடப்பதற் குக் காரணம்யாது? நீ அறிந்திருந்தால் சொல்லு அதனை விடுவிக்கிறோம் என்றுசொல்ல, எம்பெருமானே! கருடன் மிகக் கர்வம் அடைந்தான். அந்தக்கர்வத்தைஅழிக்கும் இச்சையுடன் உன்சந்நிதானத்திற்குவந்தேன். இதுதான் காரணம் என்று சொன்னான். சொல்லவே! மாயவா! நீ உள்

ளாதே சொன்னுய் என்று எமது நந்தியைத்திரும்பிப்பார்த்துத்தேன் ஒழு கும் மாலையைத் தரித்தவனே ! எம்மை வணங்கும் எண்ணத்துடன் வந்த கருடன் வருந்தாதபடி நீ விரைந்துபோய், உக்கிரம்கொண்டிருக்கும் ரிஷபத்தின் சுவாசத்திலிருந்து அந்தக் கருடனை விடுவித்து இங்கே அழைத்துக்கொண்டுவா என்று கட்டளை இட்டோம். நந்தி இந்தக் கட்டளையை மேற்கொண்டு சென்று அவ்விடத்தில் தூங்குவதுபோல் இருக்கும் ரிஷபத்தைத்தட்டி எழுப்பியமாத்திரத்தில் அதுமெய்யாகத்தூங்கி எழுந்திருப்பவன்போல் விரைந்து எழுந்து கண்கள் சிவந்திருக்கக்காட்டி அவ்விடத்தில் நின்றபோது, யாவராலும் புகழப்படும் சிறப்புள்ள நந்திதேவன் தேகமெல்லாம் புண்பட்டிருக்கும் கருடனையும் ரிஷபத்தையும் எம் எதிரில் நடத்திவந்து நிறுத்தினன். ஆகவே, மகா பலமுள்ள கருடன் கோபமும் கர்வமும் சௌரியமும் வீறுப்பும் குறைந்து எமது பாதங்களை வணங்கி வாழ்த்தி, ஒடுங்கி மனங்கலங்கிப்பெருமூச்சுவிட்டு, வருந்தித் தேகமெல்லாம் நடுங்கவும் கண்ணீர்பெருகவும் ஒடிந்த சிறைகள் இருபக்கத்திலும் தொங்கவும் தன் கைகளைத் தலைமேல் குவித்துக்கொண்டு மாயவன் பக்கமாய் ஒதுங்கி நிற்பதைப்பார்த்துக் கோபத்தொழிலில் வல்ல அம்பு போலும் கண்களையுடையாளே ! ரிஷபத்திற்கு யாம் இது சொல்லத்தொடங்கினேம்.

ரிஷபமே ! இந்நாள் எமது கட்டளை யில்லாமல் எம் எதிரில் நீயே மடமையால் இக்காரியம் செய்துவிட்டாய். ஆதலின் இத்தக்குற்றம் தீரும்படி மனிதரூபம் கொண்டு, கடல்சூழ்ந்த உலகத்தில் காஞ்சிமாநகரம் சேர்ந்து, அவ்விடத்தில் எம்மைப் பூசைசெய் என்று விடைகொடுக்க, எம்மைத்தொழுது, கொடிபோலும் இடைதுவளப் புடைபரந்து எழுதுந் பருத்திருக்கும் பயோதரங்களையுடைய பைங்கொடியே ! ரிஷபநாயகமானது விரைவில் மனிதரூபம்கொண்டு இடை இடையே மணிகளால் இழைக்கப்பட்ட செம்பொன் மாளிகைகளையுடைய காஞ்சிமாநகரம்சேர்ந்து, கொத்துக்கொத்தாகப் பூத்திருக்கும் ஒருமாவடியில் எமக்கு எதிரில் தாமரை மலரும் சிவகங்கை என்னும் தீர்த்தக்கரையில், அது தங்கி இருக்கும் இடத்திற்கு மேற்குமுகமாகத் தன்பெயரால் பசவேசலிங்கப் பிரதிஷ்டை பண்ணிப் பூசைசெய்து கொண்டிருக்கையில் யாம் காட்சிகொடுத்தருள எம்மிடத்தில் பல வரம்பெற்றுக்கொண்டு, நெடுங்காலம் உலகமெல்லாம் மனுநீதிதவறாமல் அரசாட்சிசெய்து, முடிவில் எமது அருள்பெற்று, இவ்விடம் வந்து சேர்ந்து இனிது வாழ்ந்திருக்கின்றது. ஆதலால் சகல லோகமும் பிழைக்கும்பொருட்டு நீயும் அந்தக் காஞ்சிமாநகரத்தில் பிராயச்சித்த விதிப்படி எம்மைப் பூசைசெய்யப்போய்வா என்று விடை

கொடுத்தருளினார். எம்பெருமாட்டி தாழ்ந்து பணிந்து எம்பெருமானுடைய சம்மதம் பெற்று விரும்பி நடக்கலுற்றாள். எம்பெருமானை இன்பநகைசெய்யும் வேளையிற் பிரியும் துக்கமும் திருவேகம்ப முடையவரைப் பூசைசெய்யும் சந்தோஷமும் பின்னும் முன்னும் விடாமல் இழுக்க, எம்பெருமானே! யான் எங்கே இருக்கினும் கருணைவைத் தருளாய் என்று அடிக்கடி தாழ்ந்துபணிந்து எழுந்து நின்று பூங்கொடிபோல் அசைந்து, பலமுறையும் போய்வருகிறேன் போய்வருகிறேன் என்று வணங்கி விடைபெற்றுக்கொண்டு, காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குறும்புகளை (குறுநிலமன்னர்) அடக்கி, மெய், வாய், கண், மூக்குச்செவி என்னும் ஐம்புலவேடர்கள் அடிக்கும் கொள்ளையில் அகப்படாமல் தப்பித்துக்கொண்ட பெரியோர்கள் தங்களுடைய ஞானக்கண்ணால் கண்டுகொள்ள அகண்டபரிபூரண ஆனந்தச் சோதிமயமாய் விளங்கும் எம்பெருமாட்டி, எம்பெருமான் கண்களுக்கு எதிரில் மறையும்வரையிலும் பின்காலால் நடந்துபோய், முதற்கோபுர வாசலைக்கடந்து முன்னோக்கி நடந்து அவ்விடத்தை விட்டுப் பிரிய மனமில்லாமையால் கஷ்டத்துடன் பிரிந்து, சிவபெருமான் திருவருளால் அங்கே பல பூத கணங்கள் சுமந்துகொண்டுவந்த பெருஞ்சோதிமயமான விமானத்தின்மேல் தன் பிராணபதமான பாங்கியர் கூட்டத்துடன் தானும் ஏறிக்கொண்டு பிரயாணமானாள்.

அவ்வேளையில் சகலலோகங்களையும் பெறாமல் பெற்றெடுத்த எம்பெருமாட்டி பெரும்புகழ் பெற்றோங்கும் திருவேகம்ப நாயகனை ஆகமவிதிப்படி பூசைசெய்யப் போகின்றாள் என்று பரம சந்தோஷத்துடன் எடுத்துச்சொல்லும் மங்கல ஓசையைக்கேட்டு, உருத்திரமாதர் முதலானவர்கள் அளவுபடாத மனமகிழ்ச்சியுடன் ஆரவாரம் செய்து நடந்து கூட்டமாய்க் கூடிவந்து சூழ்ந்துகொண்டார்கள். அழகிய மாலை அணிந்தவர்களாகிய பல மாதர்கள் புடைசூழ்ந்துவரச் செந்தாமரைப்பூவில் வாசம் செய்யும் இலட்சுமி வந்தாள். பலகோடி மாதர்கள் பக்கத்தில் சூழ்ந்துவரச் சரசுவதிவந்தாள். இளந்தளிர்போலும் அழகுவாய்ந்த பல மாதர் கூட்டத்துடன் இந்திராணி வந்தாள். அனந்தங்கோடி மாதர்கள் சூழ்ந்துவரப் பிராமி, மயேச்சுவரி, கௌமாரி, நாராயணி, வராகி, இந்திராணி, காளி என்னும் சத்தமாதர்கள் வந்தார்கள். தெய்வலோகப்பெண்களிலும் கருடகாந்தர்வ சித்தவித்தியாதர மாதர்களிலும் பல கோடி மாதர்களும், பகைவருடைய உளன் அடர்ந்த சூலாயுதமேந்திய இடாகினி, காளி, யோகினி வகுப்பில் அநேகரும், நீலவண்ண மேகம்போல் கறுத்திருக்கும் கூந்தலை

யுடைய ரிஷிபத்தினிமார்களும், எங்கும் நிறைந்து பரம சந்தோஷத்து டன் வணங்கி, அவரவர்களுக்குத்தக்க பணிவிடைசெய்துகொண்டு, தேவியுடன் சேர்ந்து வரவும், உரகர், கந்தருவர், இராட்சதர், இயக்கர், உருத்திரர், மருத்துவர், வசுக்கள், கருடர், கிம்புருடர், சாரணர், சித்தர், தேவர்கள், பிரமவிஷ்ணுக்கள், நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்கள், பல சமயதேவர்கள் முதானவர்கள் வந்து, தேவி பாதாரவிந்தங்களைத் தொழுது பணிந்து, பெரு மகிழ்ச்சியுடன் சய சய போற்றி என்று துதித்து முன்னடக்கவும், தண்ணுமை, முருடு, குடமுழா, மொந்தை, தகுணிச்சம், பேரிகை, தக்கை, பதலை, முரசம் முதலாகக் கொட்டுவாத்தியங்களும், திருச்சின்னம், எக்காளம், கொம்பு, சங்கு, குழல் முதலாக ஊது வாத்தியங்களும், மற்றவாத்தியங்களும் தாம் தாம் என்று முழங்கி, எழுகடல் முழக்கத்தை அடக்கவும், நவரத்தினங்களால் இழைக்கப்பட்ட வெண்சாமரைகள் வெண்பட்டுக் குடைகள், விசிறிகள், ஆலவட்டங்கள் ஆகிய இவை எல்லாம் அங்கங்கேவிளங்கவும், கற்பகவிருட்சங்கள் எங்கும் புஷ்பமாரி பொழியவும், குயில்போல் இனிமையாகப்பேசும் மாதர்கள் கூட்டம் கூட்டமாய்க் கூடி யாவராலும் கொண்டாடப்படும் பல்லாண்டு எடுத்துப்பாடவும், இருகடையும் பிடிப்புள்ள நவமணிக்குழைபூணும் மாதர்கள் ஆண் உடைதரித்துப் பள பள வென்று விளங்கும் வாளாயுதங்களை ஏந்திக்கொண்டு வரவும், பஞ்சலோகங்களையும் பேதிக்கும் குளிகைமுதலான அற்புதப்பொருள்களும், செல்வத்தை மிகுதியாகக்கொடுக்கும் பஞ்சதருக்களும், புண்ணிய தீர்த்தங்களும், நதிகளும் குற்றமற்ற சிறப்பினையுடைய இவைபோல்வனபிறவும் தொடர்ந்துசெல்லவும், குள்ளர்களும்பூதங்களும் கைவீசிக்கொண்டு ஆவலுடன் விரைந்து குறு குறு வென்று முன்னே நடக்கவும், பல கருவிகளா லுண்டாகும் கல கல வென்னும் முழக்கமும் கள கள வென்னும் முழக்கமும் கலின் கலின் என்னும் முழக்கமும் சல சல வென்னும் முழக்கமும் சளசள வென்னும்முழக்கமும் சட சட வென்னும் முழக்கமும் மற்றும்சில சில முழக்கமும் ஹர ஹர வென்னும் முழக்கமும் சயசயவென்னும்முழக்கமும்ஆகிய பல பலமுழக்கமும் எட்டுத்திசைகளின் முழக்கத்தை அடக்கி மேற்பட்டோங்கி மண்ணுலகத்திலும் விண்ணுலகத்திலும்முழங்கவும், வேதநாயகனை ஒருபாகத்தில்கலந்தவள்வந்தாள் என்றும், தேவர்களுக்கு அருமையானவள் வந்தாள் என்றும், பெருங்கருணைப்பிராட்டிவந்தாள் என்றும் நிர்மலமான பரஞ்சோதிவந்தாள் என்றும் நீர்வளம்பொருந்திய கச்சித்திருவேகம்பனைவணங்கச்சகலலோகங்களையும் ஆதிகாலத்திலேபெற்றெடுத்தபிராட்டிவந்தாள் என்றும்பலதிருச்சின்னங்களில் உண்டாகும் முழக்கம் எங்கும் வியாபிக்கவும், கணவன் கட்டளை

வழியில் நின்றவளாகிய எம்பெருமாட்டி, கங்குகரை காணமற் பெருகிவ ரும் பெருங்கருணைக் கடல்போலவும், நிறைந்த வல்லிருள் உடைந்து ஒடு ம் கிளைவழிகளில் தேடித்துரத்திக்கொண்டுபோகும் பெருஞ்சோதிக் கூட் டம்போலவும் பல வளங்களாலும் நிறைந்திருக்கும் தென்றிசையானது செய்ததவம் எல்லாம் திரண்டு வருவதுபோலவும் அளவில்லாத சந்தோ ஷம் தரும் அலங்காரத்துடன் ஆகாயமார்க்கமாய் எழுந்தருளினுள்.

இந்தப்பிரகாரம் எண்ணிறந்தவர்கள் நெருங்கி ஆகாசமண்டலத்தை மறைத்துச்செல்லுகின்றமையால், சூரியன் முதலான சோதிகள் எல் லாம் மறைந்துபோகக் கண்ணைமூடிச் சந்தேகப்படுவதற்கு முன் விரை வாகப்போகின்றவர்களுடைய மேனிப்பிரகாசம் அந்த இருளை நீக்குதல் செய்யப்பார்த்து இந்த வுலகத்தார்கள், நம்மை மயக்கும் தன்மையுடன் இப்பொழுது தோன்றி மறைந்து போனது நீல நிறமுள்ள மின்னலோ என்பார்கள். இப்படிச் சொல்லுதற்குமுன் ஆகாயத்தில் முழங்கும் பே ரோசையைக்கேட்டு, இந்த ஓசையானது, அந்த மின்னலைத் தந்த குளி ர்ந்த மேக கர்ச்சனையோ என்று சந்தேகப்பட்டுச் செவிகொடுத்து உற்று க்கேட்பார்கள். ஆகாயமார்க்கமாய்ப் போகின்றவர்களுடைய நெருக்கத் தால் தெறிக்கும்பசும்பொன்னுலாகிய பல பூஷணங்களில் இருந்து உதி ரும்நவமணிக்கூட்டங்களை விரைந்துபார்த்து, முன்பு முழங்கிய மேகமா னது இப்பொழுது நவரத்தினங்களாகிய கல் மழைபெய்கின்றது என்று காணுந்தோறும் அதிசயப்படுவார்கள். ஆகாயத்தில் அணியணியாக அட ர்ந்திருக்கும்கூட்டங்களைப் பார்க்கின்றவர்களும், உலகமாதா என்று திருச் சின்னம் எங்கும் முழங்கும் பேரோசையைக் கேட்கின்றவர்களும், பெ ருமகிழ்ச்சியால் தேகமெல்லாம் பூரித்துப் பரமானந்தவெள்ளத்திற் படி ந்து கண்ணீர் துளிக்க நின்று கைகூப்பித் தொழுகின்றவர்களும், எம் பெருமானை விட்டுப் பெருமாட்டி இங்கே வந்த காரணம் என்ன? என்று கேட்கத் திருவேகம்பமுடையவரைப் பூசைசெய்யும் கருத்துடன் வந்தா ள் என்று சொல்லத் தெளிந்து, அடியேங்கள் ஆனந்த வீடு அடையுங் காலம் இது என்றும் இந்தப் பூலோகம் என்னதவம் செய்ததோ என்றும் சொல்லுகின்றவர்களும் ஆனார்கள். மண்ணுலகத்திலே வாழும் மனிதர் கள் இத்தன்மையராக, இப்பால் மாட்சிமைபொருந்திய ஆபரணங்கள் அணியும் பெண்களுக்குள் நல்லவளாகிய பார்வதிதேவியானவள்பூலோகத் தில்உள்ள புண்ணியஸ்தலங்கள்தோறும் விமானத்திலிருந்து இறங்கிப் போரிற்சிறந்த ரிஷபவாகனத்தை யுடைய சிவபெருமான் இனிது வீற் றிருக்கும் இலிங்கபூசைசெய்துகாசித்தலத்தை அணுகி, மூன்றுலகமும் கழ்ந்துபோற்றும் திறம்மிகுந்தகாசிவிசுவநாதரைப்பூசைசெய்து, வேறு

ஒரு இலிங்கப்பிரதிஷ்டைபண்ணி, அருச்சனைசெய்து துதித்துச் சிலநாள் தங்கிக் காஞ்சிமாநகரத்தின்மேல் வைத்த ஆசை இழுத்தலால் அவ்விடம் விட்டுப்போயினள்.

அங்கங்கே எம்பெருமான் மகிழ்ந்துவாழும் தலங்கள் தோறும் பேரன்புடன் பூஜைசெய்து போய் மங்கலகரமான தமிழ்நாடு என்னும் பெண்ணுக்கு மதிமுகம் என்று சொல்லத்தகுந்த மாட்சிமை பெற்றோங்கும் தொண்டைவளநாட்டை அணுகி, ஐப்பசிமாசம்கிருஷ்ணபக்ஷம் சோமவாரம் ஏகாதசி பூரநட்சத்திரம் துலாத்தில் சூரியனும் கடகத்தில் சந்திரனும் ஆட்சிபெற்றிருக்கும் சுபதினத்தில் சகலலோகமும் பெருவாழ்வுபெறும்பொருட்டாகத்தெய்வநாயகியான காமாட்சிதேவியானவள் காஞ்சிமாநகரத்தின் எல்லைக்குள் பிரவேசித்தாள். பிரவேசித்து யுகமுடிவிலும் அழியாதோங்கும்காஞ்சிமாநகரத்தைப் பார்த்துமேன்மேலும் மகிழ்ச்சி அடைந்து, சிரசின்மேல்செங்கைகளைக்குவித்து, உடம்பெல்லாம்சிலிர்த்து, ஆனந்தக்கண்ணீரை மழைபோற்பொழிந்து, அங்குள்ள ஒரு தீர்த்தத்தில் நீராடிச் சங்கற்பஞ்செய்து, சோதிமயமான கைகளில் செம்பொற்காப்பும் திருமஞ்சட் கயிறும் அணிந்து, அவ்விடத்தில் நிலைபெற்றோங்கும் இலிங்கப்பிரதிஷ்டைபண்ணிப் பூசைசெய்தாள். அதனால் நன்மை மிகுந்த அந்தத்தீர்த்தத்தைக் காப்புத்தீர்த்தம் என்று அறிவுடையோர் சொல்லுவர். இடையறுமல் தியானிக்கின்றவர்களைத் தங்கள் வமிசத்துடன் ஈடேறச்செய்யும் அந்த இலிங்கமும் காப்பிலிங்கம் என்று பெயர்பெற்று விளங்கும். நவரத்னகடகம் அணியும் இடத்திலும் கடகேசன் என்னும் சிவபரஞ்சோதியைப் பூசைசெய்து தன் கைகளில் தரித்துக்கொண்டாள். முத்த நகையாள் ஆனதேவி பூசைசெய்த காப்பிலிங்கம். கடகேசம் என்னும் இரண்டு இலிங்கங்களையும் தரிசித்தவர்கள் எதனுலும்கெடுதல் இல்லாத மும்மலநோய்களை நீக்கிப் பிறவித்துன்பங்களைப் போக்கி முத்தியிற் கலந்து வாழ்வார்கள். அடியேனை ஆளாகக் கொண்டருளும் எம் பெருமாட்டி அந்தப்பிரகாரம்பூசைசெய்து துதித்துத் தன்னை நினைப்பவர்களுடைய பிறவித்துன்பங்களைப்போக்கும் உள் நகரத்தில் எங்கும் விளங்கும் வளங்களையெல்லாம் மனமகிழப்பார்த்துச் சொல்லுதற்கரிய சிறப்புவாய்ந்த பரவெளியாகும் பிலத்தைச் சென்றடைந்தாள். அந்தப்பரவெளிப் பிலத்தின் அருகில் பூர்வம் நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம் என்னும், பஞ்சபூதங்கள் தங்கள்பெயரால் ஒரு தீர்த்தம் உண்டாக்கி, அந்தத்தீர்த்தத்தில் நீராடி, அருந்தவம்செய்துகொண்டிருக்கும்போது, திருவேகம்பமுடையவர்திருவருள்சுரந்து காட்சிகொடுக்கக்கண்டு துதிசெய்து,

திரிமூர்த்திநாயகா! பிரமவிஷ்ணு ருத்திரர் என்னும் மும் மூர்த்திகளும் தங்களில் கூடல், பிரிதல் முதலிய வேறுபாட்டால் விளையும் அந்தக்கரணங்களுக்கும் தேகங்களுக்கும் விஷயங்களுக்கும் ஆதாரமாகும் பொருள்களாய் விளங்க வரந்தரவேண்டும் என்று வரம்பெற்றுக்கொண்ட காரணத்தால் உலகமெல்லாம் தன்வடிவமா யோங்கும் உலகாணித் தீர்த்தக்கரையின் பக்கத்தில் மகிழ்ந்து வாசம்செய்து தவத்தின்மேல் கருத்துள்ளவளாய்த் தன்னுடன்வந்த தேவர்களுக்கெல்லாம் அநுக்கிரகம்செய்து விடைகொடுத்து, கடல்சூழ்ந்த உலகமெல்லாம்கடைத்தேறும்பொருட்டு அவ்விடத்திலே திரு அறச்சாலை அமைத்துச் சகல தருமங்களையும் வளர்க்கலுற்றாள். எங்ஙனம் எனில்:—பிறவிக்குக் காரணமான அஞ்ஞானத்தை அழிக்கும் மெய்ஞ்ஞானப்பூங்கொடியாகிய காமாட்சிதேவியானவள் தேவயாகம், பிதிர்யாகம், பூதயாகம், மானிடயாகம், பிரமயாகம், என்று சொல்லப்பட்ட ஐந்துவகையான யாகங்களை நடத்தும் இடமாகிய பூர்த்தங்கள், பற்றறத்துறந்தவர்களுக்கு மடங்கள், பற்றுவைக்கும் இல்வாழ்வார்க்கு வீடுகள், வீடுகளுக்குரிய தட்டு முட்டுச் சாமான்கள், மணமலர் சேர்த்து அமைத்த தண்ணீர்ப் பந்தல், எங்கும் விளங்கும் பூஞ்சோலைகள், இரப்பவர்களையும் குருடர்களையும் துன்பப்பட்டவர்களையும் பாதுகாத்தல், கொடியநோய்களைத் தீர்க்கும் மருந்து, பரிசுத்தமான வாயையுடைய பாலரைக்காத்தல், சுண்ணும்பு, தாம்பூலம், எண்ணெய், ஸ்நானம் செய்வதற்குச் சீக்காய் முதலியன, புஷ்பசயனம், பூதானம், கோதானம் கன்னிகாதானம், தர்மகல்யாணம், தீபம், நீராக்கடன்தீர்த்தல், சிவனடியார்கள் விரும்புவனவாகிய பொருள்கள் உருத்திராட்சம், வீபூதி சிவபூசாபாத்திரங்கள், பாசத்தை நாசமாக்கவல்ல வேதரகசியங்களை விளங்கப்போதிக்கும் சைவாகமங்களையும் சிவ புராணங்களையும் ஓதுவித்தல், சிவபெருமான்திருவடியின் கீழ்த்தங்கும் பத்திமார்க்கத்தை எடுத்து உபதேசித்தல், அபயமென்று அடுத்தவர்களுக்கெல்லாம் மனமகிழ்ச்சியுடன் அபயதானமளித்தல் உட்படச்சொல்லிய மாசில்லாத முப்பத்திரண்டு தருமங்களும் எந்நாளும் நடந்தேறும்படி நிறுத்திப் பின்பு மிகுந்த நீரையுடைய கம்பை நதிக்கரையில் செழித்திருக்கின்ற ஒரு மாவடி நிழலில் பரஞ்சோதிமயமாய் விளங்கும் திருவேகம்பநாயகனைக் கண்ணாரக் காணவேண்டும் என்னும் ஆசையெழுப்பதனால், வளையும் இயல்புள்ள சிற்றிடைவருந்தப் பருத்துவளரும் பயோதரங்களையுடைய பாங்கியர் முதலானவர்கள் புடைசூழ்ந்துவர நவரத்தின ஒளிவீசும் திருவீதியில் எழுந்தருளினாள்.

பர்வதராஜ புத்திரியான பார்வதிதேவி திருவீதியில் எழுந்தருளிய மாத்திரத்தில், வளம்பெற்றோங்கும் நகரத்தில் வாழ்கிறவர்கள் எல்லாரும் தொழுது கூத்தாடி, மேன்மேற்பெருகும் அன்புடன் வணங்குகிறவர்களும், மனமகிழ்ச்சி அடைகிறவர்களும், இடங்கள்தோறும் அலங்காரம் செய்கிறவர்களும், குலைகளுடன் நீண்டிருக்கும் வாழை கமுகு துகிற்கொடி என்ற இவைபோல்வனவற்றை நாட்டுகிறவர்களும், பூமாலைகளையும் நவரத்னமாலைகளையும் அழகு மிகுந்த மகுட தோரணங்களையும் வரிசையாக நிறைக்கின்றவர்களும் ஆனார்கள். வேதங்களை ஓதி விதிகளை நிலைநிறுத்த வல்ல தவமுனிவர்கள் வீதிகள் எங்கும் மணம்வீசும்படி பன்னீர் தெளிப்பார்கள். கையில் ஏந்திய செம்பொற்குடத்துடன் எதிர்கொண்டு வருகின்ற பார்ப்பனப்பெண்கள் வாழ்த்துவதுடன் மங்கலவார்த்தை சொல்வார்கள். மணம்வீசும் கூந்தலையுடைய அரமகளிருடன் நரமகளிர்கள் கைகோத்துக்கொண்டு நடனம் செய்வார்கள். பிறர் காண்பதற்கு அருமையான திருவடிகளை அடியேன் மனதில் குடியாக வைத்தருளிய பிராட்டியானவள், அவ்வேளையில் பேரழகு பெருகும்படி அலங்கரிக்கப்பட்ட திருநகரத்தை விருப்பத்துடன் பிரதட்சணமாகவரும் முறையால், தன்பக்கத்தில் சூழ்ந்திருக்கும் சரசுவதியையும் இலட்சுமியையும் தெய்வப்பெண்களையும் காளிகளையும் சாத்தனையும் எங்கும் பரவிய சிறப்பும் சிரமும் உள்ள யோகினிகளையும் சத்தமாதர்களையும் திசைகள்தோறும் அங்கங்கே காவலாகவைத்துக் கிழக்குத்திசைமுதற்கொண்டு, சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் திருநெறிக்காரைக்காடு முதலான சிவாலயங்களுக்கெல்லாம் முறையாகப்போய்க் கொத்தாகப் பூத்திருக்கும் புஷ்பத்தால் பூசைசெய்து சிவானுக்கிரகத்துடன் நாயேனையும் ஆளாகவுடையவள் அரி அயன் முதலானவர்கள் இன்னும் கண்டு தெளியாமற் கலங்கும்படியான ஒருபரஞ்சோதி, மணமலர் தூவும் மாவடி நீழலில் வெளிப்பட்டு எளிதில் காட்சிகொடுக்க விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் கடைத்தேறக்கண்டு தொழும் திருவேகம்பத்திற்கு வந்து சேர்ந்தாள்.

பராக்கிரமத்தால் விளங்கும் மலை அரசன் பெற்ற மயில்போலும் சாயலையுடையவள் மனமகிழ்ந்து, எம்பெருமான் கட்டளைப்படி தெய்வத்தச்சன் தன் மனதினால் மிக விசித்திரமாகச் செய்த திருவருட்கோயிலில் நவரத்தினங்களால் இழைக்கப்பட்டுப் பொன்மயமாய் விளங்கும் மதில்களின் உயர்வைப்பார்த்துப் பரமானந்தக்கடலில் முழுகி, அந்தப்பரமானந்தத்தின் எல்லையைக் காணாதவளாகி, ஆனந்தக் கண்ணீர் பெருகவும்

மனம் குழையவும் தேகமெல்லாம் புளகிக்கவும் கார்மேகம்போற் கறுத்திருக்கும் கூந்தல்மேல் காந்தள் மலர்போலும் கைகள் குவிந்திருக்கவும் போய், தேவர்கள் கூட்டம் கூட்டமாய்க் கூடியிருக்கும் சுவர்க்கலோகத்தை அளாவிய கொடிகளுடன் உயர்ந்திருக்கும் கோபுரவாசற்படியில் கும்பிடவேண்டிய முறையாகக் கும்பிட்டுத் துதிசெய்து, அதிக சந்தோஷத்துடன் உள்ளே பிரவேசித்தாள். மலர் தலை யுலகமெல்லாம் தங்கும்படி விசாலமாய் விளங்கும் ஐந்தாம் ஆவரணத்தில் தங்கிச் சைவப் பிராமணர்கள் முதலான சைவர்களுக்கு அநுக்கிரகம்செய்து, பிரதக்ஷணம்பண்ணிப் பன்னிரண்டு சூரியர், காலாக்கினிருத்திரர், பிரமவிஷ்ணுக்கள் என்னும் நால்வருடைய சிருஷ்டி முதலான காரியங்களுக்கு இலக்காகிச் சுழலாநின்ற எங்களைப்பாதுகாத்தருளும் ஈஸ்வரியானவள் மெள்ள நடந்து தென்பக்கத்தில் விளங்கும் விண்டுவீச்சுரத்தை நேராகக் கண்டாள். என்றுசொல்லியசூதமாமுனிவரைமற்றத் தவமுனிவர்கள் எல்லாரும்போற்றிப்புகழ்ந்து, எந்நாளும் இருள்தங்குகின்ற ஐம்புலன்களாகிய அரட்டர்களை அடக்கிய அறிவுடையோனே! விண்டு வீச்சரம் என்பது என்ன ! நீ அதை விரித்து விளங்கச்சொல்லவேண்டும் என்று கேட்க விடை கூறுகிறார். முத்திக்குரிய முனிவர்களே! பூர்வம் அதிக கூர்மையான ஆயுதங்களை ஏந்தியதேவர்களுக்கு அமுதம்கொடுத்ததிருப்பாற்கடலில் சேஷசயனத்தின்மேல் மாயவன் நடராஜனுடைய சீர்பாதகமலங்களைத்தியானித்துக்கொண்டு நித்திரைசெய்திருந்தான். அப்படியாக யோகநித்திரை செய்பவன் ஒருநாள் தன்னைமறந்து சோதிமயமாய் விளங்கும் இதயாரவிந்தத்தை மலர்ந்து மேல்நோக்கும்படி செய்தான். எப்படி எனில் தீராவினை தீர்ந்துவிளங்கும் யோகத்தால் பிராணவாயுவை மேலே எழுப்பி நாபிக்குமேல் மலரும் அந்தக்கமலத்தில், மாசில்லாமல் பிரகாசிக்கும் அதி சூட்சுமமான குகையில், உண்ணும் உணவைப்பகுத்துக்கொண்டிருக்கிற மூலாக்கினியின் சிரசில் சொலிக்கும் நுட்பமான சுவாலைகளுக்கு நடுவில், வேதாகமங்களால் விதந்து கூறப்படும் மெய்ப்பொருளான பிரமம் என்னும் சதாசிவமூர்த்தி வீற்றிருப்பதை யோகத்தால் கண்டான். கண்டமாத்திரத்தில் நறுந்தேன்பொழியும் துளசிமாலை சூடிய மாயவன் மனமகிழ்ந்து அன்பு முதிர்ந்து போற்றி போற்றி என்று கைகூப்பித்தொழுதான். அன்பிற்கு எளியவன் ஆன சிவபெருமான் திருவருள்சுரந்து அவ்விடத்தில் ஆனந்தக்கூத்தாட, முரன் என்னும் அசுரனை முன்புவதைத்த மாயவன் மலவிருள் தீர்ந்து, அந்த ஆனந்தக்கூத்தாட்டத்தைப் பார்த்துத் தேகமெல்லாம் நெக்கு நெக்கு உருகிப் புளகம் அடைந்து, சரீரம் நடுங்கி வாய்குழறி ஆனந்தக் கண்ணீர்சொரிய நடுக்கமுற்று மேன்மேல்

பெருகும் அன்பினால் தன்னை மறந்து, யோகநித்திரை செய்யும்போது அங்கே அருகில் இருந்தவர்கள் அந்தச் செய்கைகளைப் பார்த்தார்கள். பார்த்து மனம்பதைத்துத் திகைத்துக் கவலைப்பட்டு வருந்திப்பயந்து இரங்கி இலட்சுமிமுதலானவர்கள் தேவாதிதேவனாகிய நம்பெருமானுக்கு இப்படி நடந்தகாரணம் என்ன? என்று சமிக்கைசெய்து தெரிந்துகொள்ளலானார்கள்.

இலட்சுமியானவள் எம்பெருமானுடைய மெல்லியதளிர்போலும் கோமளத்திருவடிகள் வினையேனுடைய கடினமான கைகளால் வருடியதனால் வருத்தமடைந்தனவோ? அல்லாமல் என்மடிமேல் அசைந்து நொந்தனவோ? என்று தனக்குள் சந்தேகப்பட்டாள். ஆதிசேஷனானவன் முகர்ந்தால் குழைந்துபோகும் தன்மையுள்ள அனிச்சம் பூவையும் மிருதுத்தன்மையால் வாடச்செய்யும் எம்பெருமானுடைய திருமேனியானது கருங்கற்போல் வலியும் சலவைக்கல்போல் சீதளமும் உள்ள அற்பனும் என்உடலில் வசித்தலால் வருந்ியதுபோலும்; அல்லது வேறுகாரணம் யாது? என்று பயந்துபோனான். இடம்கொண்டு எதிர்க்கும் சத்துருக்கள்செய்யும் சண்டை ஒழிந்துபோக யுத்தம் செய்யவல்ல கருடனானவன், பிடரியின்மேல் சுமந்துகொண்டு உலகமெல்லாம் ஒருநொடிக்குள் சுற்றிவந்த என்னால் மணம் வீசும் துளசிமாலை சூடிய முடியுடையவனும் இலட்சுமிவாசம்செய்யும் மார்பையுடையவனுமான எம்பெருமான் திருமேனி வருந்தியதோ என்று எண்ணமுற்றான். இந்தப்பிரகாரம் இவர்கள் எல்லாரும் வெவ்வேறாகநினைத்துப்பெருங்கவலைஅடையும்போதுபார்வதிதேவிபாகனாகிய பரமசிவன் செய்தருளிய பரமானந்தக் கூத்தினால் விளைந்த பரமசுகத்தை அநுபவித்த இலட்சுமிபதியானமாயவன் யோகநித்திரை தீர்ந்து எழுந்தான். யோகநித்திரையில்கண்ட சுகானுபவத்தில் அழுந்தியமனதுடன் எழுந்து வெள்ளம்போல்ஆனந்தக்கண்ணீர் பெருக, அம்பலவாணர் அடியேனுக்கு எளிதில் காட்சிகொடுத்தருளினார் என்று பெருமகிழ்ச்சிஅடைந்து, மேன்மேல் பெருகும் அன்புடன் கைகளைச் சிரசின்மேற் குவித்துக்கொண்டு ஐயனே! அடியேனுக்கு அநுக்கிரகம் செய்க. சுவாலைவீசும் மழுவேந்தியகையனே! அடியேனுக்கு அநுக்கிரகம் செய்க. கோடிசூரியப்பிரகாசமான திருமேனியுடையானே! அடியேனுக்கு அநுக்கிரகம் செய்க. உண்மை அறிவானந்தக் கூத்துக்காட்டிய பெரியோனே! சிறியேனுக்கு அநுக்கிரகம் செய்க என்று பலமுறை சொல்லினான். அதைப்பார்த்து இலட்சுமிமுதல் எல்லாரும் அதிசயமடைந்து சந்தோஷத்துடன் பொன்போலும் பாதங்களைப்பணிந்து, சுவாமி! இது என்ன?

என்ன ? என்றுகேட்டலும் மாயவன் பெருமகிழ்ச்சியுடன் அவர்களுக்கு இது சொல்லலானான். பொருள் அமைந்த நான்குவேதங்களின் சிரசில் வீற்றிருக்கும் பரமசிவம், காணவேண்டுமென்று முயலும் பெரியோர்களும் காணாத அற்புதத்திருக்கூத்தை இந்நாள் தன்பெருங்கருணையால் எனக்குக் காண்பிக்கப்பெற்றேன். மாய்ந்துபோகும் இந்தத் தேகத்தால் வரும்பிரயோசனம் எனக்குக் கிடைத்தது. அந்த அற்புதக்கூத்தைப்பார்த்த ஆசையால் என்சரீரத்தில் உள்ள உறுப்புகள் எல்லாம் நடுக்கமுற்றன. இதை நன்றாக அறிந்துகொள்ளுங்கள் என்று சொல்லிய சொல் செவித்துளையை நிறைக்கக் கோவைப்பழம்போற் சிவந்த வாயினையுடைய இலட்சுமி முதலானவர்கள் ஆவலுடன் கேட்டபொழுது கண்ணாரக்கண்டாற்போல் பொங்கிப்பெருகும்ஆசையானதுமேன்மேலும்வளர, அந்தமாயவனுடையபாதங்களை வணங்கிச்சுவாமி ! தாங்கள் சொல்லிய அந்த அற்புத நடனத்தை நாங்களும் காண ஆசைப்பட்டோம். அதைக்காணப்பெறு மார்க்கத்தை அடியேங்களுக்கு விளாந்தருள்செய்க. என்று, பலமுறை வேண்டலும், குளிர்ச்சியான துளசிமாலை சூடியமாயவன் உங்கள்கருத்து நல்லது என்று பெருநகைபுரிந்து முகமலர்ந்து, மேருமலையைவில்லாகவளைத்தருளிய சிவபெருமானுடைய சீர்பாதக மலங்களைத்தியானம் செய்தனன். அப்பொழுது எம்பெருமான் அருளால் தனக்கு நல்லஞானம் வந்து உதித்ததனால் தில்லைவனத்தில் விளங்கும் சிதம்பரத்திலே எம்பெருமான் எந்நாளும் ஆனந்தக்கூத்தாடுவான் என்று தெரிந்து, அதை இலட்சுமி முதலானவர்களுக்குச் சொல்லி, நாம் அந்தச் சிதம்பரத்தை அடைந்து, நம்மை ஆளாக உடைய நடராஜன் சந்நிதானத்தில் அன்புடன் அடைக்கலம் அடைந்து போற்றிப்புகழ்ந்து அங்கேவாஞ்செய்து மெய்த்தவம் செய்வோம் ஆனால், திருவருள்சுரந்து நமக்கு எதிரில் ஆனந்தக்கூத்து ஆடிக்காட்டுவான். யோகியர்களும் காண்பதற்கு அருமையான அற்புதக்கூத்து மெய்யன்புடைய அடியவர்களுக்கு எளியதாம். ஆதலின் அவ்விடத்திற்குப்போவோம் வாருங்கள் என்று அவர்களுடன் புறப்பட்டு ஆகாயமார்க்கமாய்ச்சென்று தேசுமயமாய் விளங்கும் தில்லைத்தலத்திற்கு வந்துசேர்ந்தான். சேர்ந்து திருமூலட்டம் தொழுது துதித்து மனமகிழ்ந்து. ஆதிசேஷன், கருடன் முதலானவர்கள் கூடியிருக்கத் தவம்செய்து, யோகநிலையால் நெடுங்காலம் முயற்சிசெய்தான். அப்பொழுது, நீண்டசடைகளையுடைய சிவபெருமானும் மகிழ்ந்து காட்சிகொடுத்தருளி, பகைவருடைய் உயிரை உண்டு விளங்கும் ஒப்பில்லாத சக்கராயுதமுடையானே! நீ இவர்களுடன் எம்மிடத்தில் விரும்பிய பொருள்யாது ! சொல்லுக எனச் செம்பொன ஆடைதரிக்கும் திருமால் பூமியின்மேல் விழுந்து பணிந்து எழுந்

து பவன் முதலான திருநாமங்களை எடுத்துச்சொல்லிப் புகழ்ந்து கைகூப்பித்தொழுது சொல்லுகின்றான். அண்ணலே ! ஆனந்தத் தெள்ளமுதே ! உன்னைத் தியானிக்கின்றவர்களுடைய எண்ணங்களை ஈடேறச்செய்யவல்ல எம்பெருமானே ! அடியேங்கள் உன் அற்புதத்திருக்கூத்தின் அமுதம் உண்டு விளங்கும் பேராசை உடையோம். கருணைசெய்தருளாய் என்று பூர்வம் வாமன ரூபமாய் மூன்றுலகங்களையும் அளந்த மாயவன்சொல்லிய சொல்லைக்கேட்டுத் தருமக்கடலாகிய சிவபெருமான் சொல்லுகின்றார்:- சக்கராயுதமுடையோனே ! எப்படிப்பட்டவர்களும் காண்பதற்கு அருமையான எமது அற்புதநடனம் காணஆசைப்பட்டாயாகில், ஒருபோதும் கலி அணுகாத காஞ்சிமாநகரத்தில் எமக்குரிய இலிங்கப்பிரதிஷ்டை செய்து, மணமலர்கொண்டு பூசைபண்ணி விரைவில் மீண்டு இங்கேவந்து சேர். உன் இஷ்டத்தை நிறைவேற்றுகின்றோம் என்று அநுக்கிரகம் செய்த வார்த்தையைக்கேட்டு, மாசில்லாத மனதில் அன்புவைத்தொழுகும் மாயவன் அவ்விடத்தில் எல்லாரையும் நிறுத்திவிட்டு நீர்வளமும் நிலவளமும் உள்ள காஞ்சிமாநகரத்திற்கு விரைந்துவந்து சேர்ந்து, திருவேகம்பத்தில் விளங்கும் சோதிமாணிக்கமும் அன்புள்ள அடியார்கள் செய்யும் தவங்களில் ஒன்றைப்பத்தாகக்கொண்டருளும் பரமனும் வாமனரூபமாய் மாவலிமுன்சென்ற விஷ்ணுவாகிய பாணத்தால் முப்புரங்களைச்சுட்டெரித்த முதற்கடவுளும் ஆகிய ஏகாம்பரநாதனைத் தன் தேகமெல்லாம் நடுக்கமும் புளகமும் அடையும்படி விழுந்து தொழுது எழுந்து, அந்தத்திருவேகம்பமுடையவர்க்குத் தென்பக்கத்தில் அன்புமிகுந்து தழைத்து ஓங்க விண்டுவீசன் என்னும் சிவலிங்கப்பிரதிஷ்டை பண்ணி, ஆணவமுதலான மலங்கள் எல்லாம் அழியும்படி பூசைசெய்து பிரார்த்தித்து வேண்டும் வரம்பெற்று, மீண்டு உலகமெல்லாம் புகழவிளங்கும் தில்லைவனத்திற்குவந்து சேர்ந்தான். அங்கேவந்து சேர்ந்த மாயவனுக்குத் திருவருள் சுரந்து, அமுதம்போன்றவராகிய எம்பெருமான் சோதிமயமாய் விளங்கும் திருச்சிற்றம்பலத்திலே காணத்தக்க ஆனந்தக்கூத்து ஆடிக்காட்டியதைப் பேரன்புடைய ஆதிசேஷன் கருடன் முதலானவர்களுடன் கண்டான். கண்டவுடன் பேரன்பினால் உண்டாகும் ஆனந்தவெள்ளம் அணைகடந்து பெருகத் தன் மனதில் தோன்றிய மகிழ்ச்சியுடன் ஆடிப்பாடிக் கும்பிட்டுப் பழையநிலைமையை மறந்து, மதுஉண்டு மயங்கிய வண்டுபோல் பரவசனாகி. ஆண்மையுடன் வணங்கித்தொழுது மகிழ்ந்திருந்தான். எப்பொருட்கும் இறைவனாகிய எம்பெருமான் திருக்கூத்துக்கு இசைய, நந்திதேவர்முதலான கணங்கள் பலவாத்தியங்களை முழக்குவதைப்பார்த்து, மாயவன் தானும் படகம் என்னும் வாத்தியத்தை முழக்குதலும் வேதநாயகன் ஆன எம்பெருமான் அதைப்பார்த்து மகிழ்ந்து, படகவாத்தியம் முழக்கும் தொழிலைத் தனக்கே கொடுத்தருளப்பெற்று இனிது வாழ்ந்திருந்தான்.

முனிவர்களே ! சந்திரன்தங்கிய சடைமுடியுடையவரான சிவபெருமான் சிறந்து, வீற்றிருக்கும் விண்டுவீசம் வந்தவரலாறு இதுவாகும். இந்த விண்டுவீசத்தில் தொழுது வந்தனைவழிபாடு செய்து. கணநாதர்கள் வசிக்கும் திருமாளிகைகளால் சூழப்பட்டிருக்கும் திருவாசலில் பார்வதிதேவிவந்து சேர்ந்தாள். பெண்களுக்குரிய பேரழகுவாய்ந்த பிராட்டியானவள் வரிவண்டுகள் பண்ணுடன் இசையும் பாடல்பாடும் தாமரைமலர்களையுடைய சிவகங்கையிலே நீராடி, அவ்விடத்திற் சோதிமயமாய் விளங்கும் அகத்தியீசத்தைக் கண்களிக்கக்கண்டு அப்பால்சென்றனள்.

என்று சொல்லிய சூதமுனிவரை மற்றமாதவர்கள் எல்லாரும் துதிசெய்து, வராகமான மாயவன் காண்பதற்கு அருமையானமலரடிகளைப் பற்றிய மனமுடையவரே ! மகிமைபொருந்திய அகத்தியீசத்தின் வரலாறு என்ன ? சொல்க என மிகவும் மகிழ்ந்து விளங்கச் சொல்லுகின்றார். தெய்வத்தன்மையுள்ள நாரதமுனிவர் முன் ஒருகாலத்தில் கச்சித்திருவேகம்ப நாதனைக்கண்டு, மகதியாழ்வாசித்துத் தோத்திரம் செய்யும்பொருட்டுக் கைலாசகிரியைவிட்டுப் புறப்பட்டார். சிவபெருமான் திருவடிகளைப்பற்றிய மனதுடன் வருகின்ற நாரதமுனிவரை ஆகாயத்தினிடமாகப்பார்த்துவிரைந்து விந்தமலையானது தன் எண்ணம் ஈடேற நடக்கும்படியான ஒருவடிவம்கொண்டு, எதிர்சென்று, அருக்கியமுதலான வைகளால் வந்தனைவழிபாடுசெய்து பத்தியுடன் உபசரித்துக் கைகூப்பித்தொழுது வணங்குதலும், பிறவியை ஒழித்து மலநோய் தவிர்க்கும் தவமுடையவரான நாரதமுனிவர் பரமசந்தோஷத்துடன் வாசனையுள்ள பூஞ்சுனைகளையுடைய விந்த மலைக்கு இது சொல்லுகின்றார். மெய்த்தவசிகளிடத்தில் செய்யும் வந்தனைவழிபாடுகளில் உனக்கு ஒப்பானவர்களை யான் கண்டதில்லை. அப்படிப்பட்ட உன்னையும் தேவர்கள் இகழ்ந்து பேசினார்கள். அவர்கள் இகழ்ந்து பேசியதை எண்ணி எண்ணி என்மனம் வருந்துகின்றது.

என்று சொல்லிய நாரதமுனிவரை மறுபடியும் வணங்கிச் சுவாமிகளே ! தேவர்களிலே என்னை இகழ்ந்தவர்யார் ! என்னை இகழ்வதற்குக்காரணம் என்ன ? தெரிவிப்பீரானால் நான் அதை நிச்சயமாக மாற்றிக்கொள்வேன் என்று விந்தமலை சொல்லிற்று. நாரதமுனிவர் அந்தவார்த்தையைக்கேட்டு,யாவராலும் புகழ்ந்து பேசப்படும் மேன்மையுடையோனே! நூல்கள் எல்லாம் மேருமலையை உனக்கு நிகராகச்சொல்லும், சீதளமான சந்திரனைத் தரித்த சடைமுடியுடையவரான சிவபெருமான் தேவர் கூட்டத்துடன் மிகமகிழ்ந்து எந்நாளும் அங்கு வீற்றிருப்பர். ஆதலால் ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற கிரகங்கள் நட்சத்திரங்கள் இராசிகளுடன்

விளங்கும் சந்திர சூரியர்கள் அந்த மேருமலையை நயந்து எந்நாளும் பிரதட்சிணம் செய்வார்கள். அதன் வாழ்வைப் பார்த்து நான் வருந்துகின்றேன். என்று பின்னும் சொல்லுகின்றார். நிகரில்லாதவனே ! இனிப் பலவார்த்தை சொல்வதிற் பயன் என்ன ? நீ எனக்கு நேசன் ஆனபடியால், உனக்கு இதை வெளிப்படுத்திவிட்டுப் போகின்றேன். உன் இஷ்டப்படி செய் என்று செல்லிப்போய் விட்டார்.

மகதி வீணை ஏந்திவாசிப்பவரும் தபசிகளுக்குரிய போசனம் செய்பவருமான நாரதமுனிவர் போய்விட்டபின்பு விந்த மலையானது அதிக கோபம் கொண்டு, உலகத்திற் கெல்லாம் ஒரு தீபம் போலும் மேற்கே நோக்கிவரும் சூரியனை மறைக்கும் படி மிக ஓங்கிவளர்ந்து, ஆகாயத்திற் சென்று, அதற்கப்பாலும் உயர்ந்து, காரிருளைப்பிளந்து பேரொளி வீசும் சந்திர சூரியர்கள் சஞ்சரிக்கும் வழியைத்தடுத்துத் துருவமண்டலம் கீழ்ப்படும்படி மேற்பட்டோங்கும் விந்தமலையைத் தேவர்கள் பார்த்துப்பூர்வம் அக்கினி சுவாலை வீசும் வச்சிராயுதத்தால், சிறகுகளை வெட்டிய இந்திரனோடு சண்டைசெய்யும் கருத்துடன் வருகின்றதுபோலும் என்று தமக்குள் மயங்கிப் பயந்து ஓட்டம் பிடித்தார்கள். தங்களுக்கு நிகராகும் தன்மைகொண்டு சிறிதும் அஞ்சாமல் வரும் தருக்கை உணர்ந்து, கோபத்தால் பொங்கி விம்மி மதர்த்து எழுந்து எதிரே போர்செய்யப்போகும் தன்மைபோல், பயோதரங்கள் தம்மிடத்தில் அப்பிய கலவைச்சந்தனம் சரிந்துபோக மார்பை அலைவுசெய்து வீறுபெற்றோங்க விரைந்து, தெய்வப்பெண்கள் எல்லாரும் அந்த விந்தமலையின் உன்னதத்தை மூந்திப் பார்க்க ஆகாயத்தில் சூழ்ந்திருந்தார்கள். அப்படியாக அந்த மலை ஓங்கி வளர்ந்திருந்ததினால், படைப்புக்காலம் தொடங்கி ஓய்வில்லாமல் தினந்தோறும் மேருமலையைப் பிரதட்சிணஞ்செய்ய,வட்டமிட்டுழலும் காற்றாடி போல் சுழன்று அலுத்து நொந்துபோன கிரகங்கள் இராசிகள், நட்சத்திரங்கள் முதலிய எல்லாம் அந்தநாள் கொஞ்சம் இளைப்பாறித் தம்முள்ளத்தில் பெருகும் சந்தோஷத்துடன் தங்கி இருக்கப் பெற்றன. மாட்சிமைபொருந்திய மேருமலையின் சிகரத்தில் நிலையாகத் தங்கிக் குயவன் சக்கரம்போல், சூரியன்முதலானவைகளை இடையறாமல் விரையச் சுழற்றி, மிகவும் தளர்ந்துபோன பெருங் கீர்த்திமான் ஆன துருவனும் சற்றுநேரம் வேலையில்லாமல், சும்மாஇருந்து சுகம் அடையும்படி மணி அருவிகளுடன் மிக ஓங்கிய விந்தமலை உதவிசெய்தது. இவ்வண்ணம் அருவிகளுடன் ஓங்கும் விந்தமலை யானது சந்திர சூரியர்கள் சஞ்சரிக்கும் வழிகளைத் தடுத்து மேற்பட்டிருத்தலால், அதன் ஒரு பக்கத்தில் இருள் சூழவும் மற்றொருபக்கத்தில் ஒளிசூழ்ந்திருக்கும். இப்படி இருளும் ஒளியுமான இரண்டு வகையுடன் கலக்கும் தன்மை பொருந்திய உலகமானது அந்தநாள் பார்வதிசமேதராய் விளங்கும் பரமேஸ்வர மூர்த்தியை ஒத்திரு

ந்தது.அடிவாரத்தைப் பெயர்த்துக் கல் என்று முழங்கி,வேள் என்று வெளுத்துப் பெருகும் அருவிகள், அலட்சியம் செய்த நீங்கள் இனி எப்படிப் போவீர்கள்? என்று சந்திரசூரியர்களைப் பழித்துச் சிரிப்பதும் மேருமலையுடன் சண்டைசெய்ய அழைத்து வீரநகைசெய்வதும், இறுமாந்து ஓங்கும் தன் கீர்த்தி பரவுவதும் போல அந்தமலை எங்கும் உள்ளன. குறிஞ்சி நிலத்தில் வாசஞ்செய்யும் குறவர்களுக்கு விண்ணுலகத்தில் வாசஞ் செய்யும் தேவர்கள் விருந்து செய்து மகிழ்ச்சி அடைந்தார்கள். குறப்பெண்களும் தெய்வப்பெண்களும் மனங்கலந்து உறவுசெய்தார்கள். வேதநீதிகளை நிறுத்திய தெய்வரிஷிகள் மலைவாசிகளான ரிஷிகளை எதிர்கொண்டு அழைத்தார்கள். குகைகளில் மறைந்திருக்கும் பாம்புகள் வானத்தில் உலாவும் இராகுகேது என்னும் பாம்புகளுடைய வருத்தம் தீர்க்கவந்தன. பலபொருள்களால் அலங்கரிக்கப்பட்ட சாரலையுடைய விந்தமலை வானத்தின்மேல் ஓங்கி வளர்ந்தமாத்திரத்தில் சந்திர சூரியர்கள் தடைப் பட்டுப் பகல் இரவு என்னும் காலபேதம் இல்லாமற் போனதனுல், தவங்கள்தானங்கள் முதலியவைகள் ஒழிந்து பயிர்கள் விளைவுகுறைந்து உலகம்பாழாய்க்கிடந்தது. அதைப்பார்த்து விரைந்து தேவேந்திரன் முதலிய தேவர்கள் தங்கள் குலக்குருவான வியாழபகவானுடன் பிரமலோகத்திற்குப் போய்ப் பிரமதேவனுடைய சீர்பாதங்களை வணங்கி வாழ்த்தித்தொழுது, அடியேங்களை வெறுத்துக் கைசோரவிடாமற் காத்தருள் என்று இதைச் சொன்னார்கள்.

சந்திர சூரியர்கள் சஞ்சரிக்கும் மார்க்கத்தைக் காடுசூழ்ந்த விந்தமலை தடைசெய்தமையால், பகல் இரவு என்னும் காலபேதம் இல்லாமல், வேதவேள்விகள் எல்லாம் ஒழிந்து உலகம் மயங்கிக் கிடக்கின்றது. தாமரைப் பூவில் வாழ்ந்திருக்கும் சதுமுகக்கடவுளே! அடியேங்களுக்கு இனி உறுதி ஆவது யாது! என்று சொல்லுதலும் இளவண்டுகள் முழங்கும் பனிமலர் சூடிய கூந்தலை யுடைய சரசுவதிக்கு மணவாளனுகிய பிரமதேவன் அதைக்கேட்டுச் சமுத்திர சலத்தை ஆசமனஞ்செய்த அகஸ்திய முனிவனே நிகரில்லாத வலிபடைத்தோங்கும் விந்தமலைச் செருக்கை அடக்கவல்லவன் என்று தனக்குள் எண்ணிச்சொல்லுகின்றுன். வஞ்சனையான மனவலிகடந்த வியாழபகவானே! கேள். தேவர்கூட்டத்துடன் போய்க் காசிப்பட்டணத்தில் வாசஞ்செய்யும்அகஸ்தியமுனிவனைக்கண்டு விந்தமலைச்செருக்கை நீக்கவேண்டிக்கொள்க. தவத்தால்மேற் பட்டவருகிய அந்த முனிவன் பூர்வம் எழுகடலையும் உள்ளங்கையில் உளுந்தளவாகக்கொண்டு உண்டு விட்டான். என்று இந்தவார்த்தைகளை வியாழபகவானுக்குச் சொல்லிப் பின்னும் தன்மனதில் ஆலோசனைசெய்து, அந்த

மலைச்செருக்கை அடக்க நானே மணமலர்ச்சோலை சூழும் காசிப்பட்டணத்தை அடைந்து அந்த அகஸ்திய முனிவனுக்குச் சொல்லி வருவேன் என்று எழுந்து போயினன். தாமரைப்பூவில் வாசஞ்செய்யும் பிரமதேவன் வியாழபகவான் முதலான தேவர்கள் புடைசூழ்ந்து வரப் போய்ச் செங்கால் அன்னங்களும் கருமையான கூந்தலையுடைய அன்னங்களும் (பெண்களும்) நீந்தி விளையாடும் தெண்ணீரையுடைய கங்கைநதியால் சூழப்பட்ட காசிப்பட்டணத்திற்குப் போய்ச்சேர்ந்தான். அந்தக் காசிப் பட்டணத்தில் வீற்றிருக்கும் விசுவநாதன் திருவடிகளைத் தொழுது துதித்துப் பகைவரைவதைக்கும் பராக்கிரமமுள்ள தேவர்கூட்டத்துடன் மாசில்லாத கல்வி கேள்விகளால் நிறைந்திருக்கும் அகஸ்திய முனிவருடைய ஆசிரமத்தை அணுகி, அவரைக்கண்டு முக்குற்றங்களையும்முனிந்தொழித்த முனிவர்கோமானே! மிக ஓங்கிவளரும் விந்தமலையானது இறுமாப்படைந்து, சந்திரசூரியர்கள் சஞ்சரிக்கும் வழியைத் தடைசெய்தது. அந்தமலையின் அகங்காரத்தை அடக்குவதற்குநீயேவல்லவன்.இப்பொழுதே விரைந்துபோ.தாமதஞ் செய்யாதே என்று வேண்டிக்கொள்ளும் அன்னக்கொடிஉயர்த்தினவனகிய பிரமதேவனுக்குஅகஸ்தியமுனிவர்சொல்லுகின்றார்.

ஐயனே! நீ என்னசொன்னாய்? எம்பெருமானுக்குப் பிரியமானகாசிப்பட்டணத்தை விட்டு ஒருபோதும் நீங்கமாட்டேன். இந்தக்காசிப்பட்டணம் இன்பவீடு தருவதல்லவோ? என்று சொல்ல, ஆண் வண்டுகளும், ஞிமிறுகளும், தேன்வண்டுகளும், பெண் வண்டுகளும் முழங்கத் தேன் துளிக்கும் தாமரைப்பூம்பொகுட்டில் வாழும்பிரமதேவன் கேட்டுச்சமுத்திரத்தை உண்டு உயரும் அகஸ்தியமுனிவர் சம்மதிக்கும்படியாகச்சொல்லுகின்றான். வெறுப்பும் விருப்பும் இல்லாதவனே! தேவர்கள் படும் துன்பத்தை எப்படி யாவது நீக்குவதே மேல். அல்லாமல் முடியாது என்று மறுப்பது தகுதியல்ல. மூன்றுலகமும் சந்திரசூரியருடைய ஒளிகளைப்பெறத்தகுந்த பெருங்காரியம் என்றால், இனிநாம் சொல்லவேண்டியதுயாது? பெருமைபொருந்திய ததீசிமுனிவன் முதலானவர்கள் தேவர்கள்பொருட்டாகத் தங்கள் உயிர்க்கு உறுதியாவதைப்பாராமல் உடம்பையும் கொடுத்தார்கள். இந்தக்காரியத்தை இலேசானதாகநினைக்கவேண்டாம், ஆராய்ந்து பார்க்குமிடத்தில் உனக்கு ஒப்பானவர்கள் திரிலோகத்திலுமில்லை ஆயாசப்படவேண்டாம். சிவபெருமானுக்குச்சந்தோஷந்தந்து காசியைப்பார்க்கிலும்சிறந்துவிளங்கும்நகரம் ஒன்று அங்கேயிருக்கின்றது அந்தநகரம் மொய்த்திருக்கும் வண்டுகள் பாய்வதனால், அரும்பு அவிழ்ந்து ஒழுகும் தேன்மணம் வீசும் மலர்த்தடங்களும் வளவயல்களும் சூழ்ந்து விளங்கும் காஞ்சிமாநகரமாம். மதுமலர்ச் சோலைகளால் சூழப்பட்ட காசிப்பட்டணமானது தன்னிடத்தில் ஒருவர் இறந்துபோகப் பெற்றால்

முத்திகொடுக்கும். அந்தமுத்தியும் எம்பெருமானுடைய திரு வுருவைப் பெறுதலாகிய சாருபமுத்தியேயாம். காஞ்சிமாநகரம் தன்னை நினைக்க வே முத்திதரும். இந்த முத்தி பற்றுதற்கு அருமையான பரமசிவத்து டன் இரண்டறக்கலப்பதான சாயுச்சியமுத்தியாம். உத்தமகுண முடை யோனே! அந்தக்காஞ்சிநகரத்தின்பெருமை எல்லாம் சிவபெருமான் ஒரு வ்ரோ அறிவதல்லாமல், வேறு அறியவல்லவர்யார்? ஒருவருமில்லை. சகல சித்திகளையும் தரும் அந்தக்காஞ்சி மாநகரத்திற்குப்போவாயாகில், உனக் குமேன்மேலும் நன்மை உண்டாகும். உயிர்களை அசையவிடாமற் பற் றும் விஷத்தை யுடைய வாசுகி என்னும் பாம்பை வடமாகச்சுற்றித் திரு ப்பாற்கடலைக் கடைந்து பெற்ற அமுதத்தைத் தேவர்களுக்கு ஊட்டிய திருமாலைப்போல், நீ திருவேகம்பத்தில் வீற்றிருக்கின்ற சிவபெருமான் திருவருளால் நவரசங்களைத் தெள்ளித்திரட்டும் செந்தமிழ் என்னும் ஒரு பாஷையைப் பூலோகத்தில் விளங்கச்செய்வாய். காலதாமதம் செய்தது போதும். இப்போதே விரைந்துபோ. என்று சொல்லிய பிரமதேவனி டத்தில் விடைபெற்றுக்கொண்டு, மகிழ்ந்து, செம்பொற் கோயிலில்சிறந் துவீற்றிருக்கும் விசுவநாதனை அன்புடன்தாழ்ந்து பணிந்து எழுந்து காசி ப்பட்டணத்தை விட்டுப் புறப்பட்டார். காஞ்சிமாநகரத்தைக் காணவே ண்டும் என்னும் ஆசை வலிகொண்டு இழுக்க, நீலகண்டமுடையவரது சீர்பாதகமலங்களைத் தியானஞ் செய்வதுடன் தமதுபத்தினியான உலோ பாமுத்திரையுடன் ஆகாயமார்க்கமாய் வருகின்ற அகஸ்தியமுனிவரைவிந் தமலைகண்கொண்டுபார்த்தது. ஊற்றுகளுடன் ஓங்கும் சமுத்திரசலத்தை ஒரு உளுந்தளவாக்கி உட்கொள்ளும் சத்தியால்பெரியவராய் உருவத்தால் சிறியவரான அகஸ்தியமுனிவரைக் கண்டமாத்திரத்தில் மனந் திடுக்கிட் டுப் பயந்து பதை பதைத்து ஒடுங்கித் தளர்ந்து, எதிர்கொண்டு அணுகித் தாழ்ந்து பணிந்து, விதிப்படி அருக்கியம் முதலியவைகளால் பாத பூசை செய்வதைப்பார்த்து, அம்முனிவரும் மகிழ்ந்து, அதன்பத்தியைச் சிறப் பித்துச் சொல்ல, மறுபடியும் அந்தமலைதொழுது துதிசெய்து இந்தவரம் வேண்டலுற்றது. ஐயனே! அடியேனிடத்திலும் பெருங்கருணை வைத்தவ னே! உலோபாமுத்திரை மகிழும் திருமேனியுடையானே! எழுகடலையும் உளுந்தளவாகத் திரட்டி ஏந்திய கையுடையானே! அடியேன் இனிச்செ ய்யவேண்டிய பணிவிடையைக் கட்டளையிட்டருள்க என்று சொல்லத் தமக்குநிகரில்லாதவரான அகஸ்தியமுனிவர், விந்தமலையே! நாம்தேவர்கள் பொருட்டாகத் தென்றிசைக்குப்போகின்றோம் நீ இந்த நிலையிலேயே இரு என்று கைகளால் தானமட்டாய்த் தாழ்ந்திருக்கவைத்து, காஞ்சிமா நகரத்தைநோக்கிநடந்தார். நிலைபெற்றோங்கும் மேருமலையுடன்பகைத்து வளர்ந்தோங்கிய விந்தமலையானது முன்னிருந்த தோற்றத்தையும் வீறுப்

பையும் முழுதும் இழந்துவிட்டது. இதனால் தருமநெறியை ஆராய்ந்து அடங்கி அந்தத்தருமவழியில் நடவாதவனும் தன் வரவு அறிந்து செலவு செய்யாதவனும், தன்னைத்தானே மதித்துக்கொண்டாடினவனும் ஆகிய மூவரும் விரைந்து கெடுவார்கள் என்று பெரியோர்கள் சொல்வது யதார்த்தம். இதை இந்த மலையினிடத்தில் பிரத்தியட்சமாகக்கண்டறிந்தோம். தென்றிசைநோக்கிச்செல்லும் அகஸ்யமுனிவருக்கு எதிர்ப்பட்ட விந்தமலையானது பூர்வம் தடாதகைப்பிராட்டியார்(மீனாட்சிதேவி) திக்குவிஜயஞ் செய்து திருக்கைலாசத்தின்மேல் யுத்தஞ்செய்யப் போனபோது திருக்கலியாணம் செய்துகொள்ள எதிரில்வந்த சிவபெருமானைக்கண்டு நாணம் அடைந்து மறைந்துபோன ஒருதனம்போல் தான் இருந்த இடமும் தெரியாதபடி மறைந்து போயிற்று .அதைப்பார்த்த தேவர்கள் எல்லாரும், எம்பெருமான் மீனாட்சிதேவியைத் திருமணம்புரியவரும்செய்திகேட்டு மகிழ்ந்ததாயான பொன்மாலை என்பவளைப்போல் பரமசந்தோஷத்துடன் தங்கள் இருப்பிடம்போய்ச்சேர்ந்தார்கள். மலையில் தாக்குண்டு வருந்தும் குருவிகளைப்போல் தடைப்பட்டுவருந்திநின்ற சூரியன் முதலானவர்கள் தடையில்லாமல் தங்கள் மார்க்கத்திலே செல்லவிடுத்து, தன்பத்தினியான உலோபாமுத்திரையுடன் வருகின்ற அகஸ்தியமுனிவர் மணமலர்ச் சோலைசூழ்ந்து விளங்கும் காஞ்சிமாநகரத்தை நேராகக்கண்டார். கண்டு தொழுது வணங்கி இருகைகளும் சிரசின்மேற்குவியத் தோன்றிய பேரன்புடன் சென்று, விதிப்படி அநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு, தேவதேவனாகிய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் திருக்கோயில்களுக்கெல்லாம் முறையாகச்சென்று பணிந்து பழமையான வேதங்கள் இடையறாமல் முழங்கும் பெருஞ்சோதிமயமான திருவேகம்பத்தைச் சேர்ந்து, செல்வத்திருக்கோபுரவாசலிற்சென்று வணங்கி உள்ளே பிரவேசித்து, அங்கே சிவபெருமான் திருவருள்போல் நிறைந்திருக்கும் சிவகங்கையிலே நீராடித் திருநீறும் திருக்கண்மணிமாலையும் தேகமெல்லாம் விளங்க அணிந்து, திருவேகம்பமுடையவரது திருமாளிகையைச் சூழ்ந்திருக்கும் திருவாசலிலே முறையாகப் பிரதட்சிணம் செய்து போய்த் தெய்வத்தன்மையுடன் நிகரில்லாதோங்கும் ஒருமாவடியில் தேசோமயமானந்தக் கடல் போல் விளங்கும் கருணாநிதியான ஏகாம்பரநாதனைக் கண்ணாரக்கண்டு, கருத்தினிடமாகக்கொண்டு, அஷ்டாங்க பஞ்சாங்கமாக அடிக்கடி வணங்கி மகிழ்ந்து சிவானந்த போகத்தை அநுபவித்து, ஆனந்தக் கண்ணீர் சொரியக் குணம் குறி இல்லாமல் தானே முளைத்த சகளநிஷ்களத் திருமேனியைத் துதிசெய்து, சிவாநுக்கிரகம்பெற்றுத் திரும்பிப் பழவினைகளைப் பஸ்பமாக்கிப் பரமானந்த வீடுதரும் திருவேகம்பமுடையவருக்குத் தெற்கில் தன்பெயரால் அகத்தீயீசலிங்கத்தைப் பிரதிஷ்டைபண்ணி ஆகமவிதி

ப்படி அருச்சனைசெய்து, பலவரம்பெற்று மேன்மேல்வளரும் அன்பினு ல்மறுபடியும் எம்பெருமானைத்துதிசெய்யத் தொடங்கினர்.

எம்பெருமானே! இந்தநாள் உன்னைக் காணப் பெற்றமையால் அடியேனுக்கு இந்த நாள்தான் பிரயோசனப்பட்டது. இந்தப் பிறப்பு இந்த நாள்தான் பிரயோசனப்பட்டது. அடியேன் செய்ததவம் இந்த நாள்தான் பிரயோசனப் பட்டது. என் அறிவும் இந்த நாள்தான் பிரயோசனப் பட்டது. எம்பெருமானே! பிரம விஷ்ணுக்கள் அன் னமும்வராகமும் ஆகித்தேடியுங்காண்பதற்கு அருமையான சீர்பாதகமல ங்களை இந்தநாள் அடியேன் கண்ணாரக்கண்டுகொள்ளக்காட்டியபடியால் என் இஷ்டமெல்லாம் நிறைவேறியது. என் இஷ்டமெல்லாம் நிறைவே றியது. என் இஷ்டமெல்லாம் நிறைவேறியது. சங்கரா! சம்புவே! சங்க ரா! சம்புவே! சங்கரா! சம்புவே! சாம்பசிவனே! என்றும் அங்ஙனு! என்றும் எந்நாளும் உன்னை ஓலமிட்டழைக்கின்ற என் வாழ்நாள்கள் இப்ப டியே உன்னை ஓலமிட்டழைப்பதில் கழிதல் வேண்டும். எப்போதும் ஒரு தன்மையாகவே விளங்கும் பெருமானே! உன்னிடத்தில் மாறாதபத்தியே உன்னிடத்தில் மாறாதபத்தியே உன்னிடத்தில் மாறாதபத்தியே எந்நாளும் எனக்கு உண்டாகுக. எந்நாளும் எனக்கு உண்டாகுக. எந்நாளும் என க்கு உண்டாகுக. எம்பெருமானே! பூமியில் பிறந்தநாள்முதல் இறந்து போகும் நாள்வரையில் உன்னையே தெய்வமென்று உபசாரஞ் செய்யாத மூடர்கள் ஒருக்காலும் என்வமிசத்தில் வந்து பிறவாதிருத்தல் வேண்டும். ஒருவேளை வந்து பிறந்தாலும் உடனே மாண்டு மடிந்து போகவேண்டும். ரிஷபக்கொடியை உயர்த்தித் திரிபுராசுரர்களைச் சிரித்தெரித்தசெல்வமே! நீயே என் குலதெய்வம் ஆனபடியால், சகலலோகங்களிலும் நானே மகா பாக்கியவான். நானேபாக்கியவான்நானேபாக்கியவான். பார்வதிபாகனே! உன்னையேசிறந்ததெய்வம் என்றுஉள்ளத்தில் உணர்ந்துகொள்ளாத உண ர்வில்கள் பிறந்தகுலத்திலும்பிறவாநின்றகுலத்திலும்கருப்பையில்தங்கிய குலத்திலும்மறந்தும்பிறவாத வாழ்வே அடியேனுக்குக் கொடுத்தருள வே ண்டும். சிறுகுறும்புசெய்தலையுடையதேவர்கள் பொருட்டுத் திருவுள மிர ங்கித்துன்பப்படுத்தும் கொடியவிஷமுண்டருளிய பேராளனே! கருணை க்கடலே! ஆரமுதே! மலையரசன்பெற்றமாவடுப்போலும்அழகியகண்களை யுடைய பார்வதிபாகனே! உன்பாதாரவிந்தமேசரணம். மலைபோலும்மா தவமுடைய அகஸ்தியமுனிவர் இந்தப்பிரகாரம்பலமுறையும் துதித்துத் தொழுதுதாழ்ந்து எழுந்துநின்று, சிரசின்மேல்கைகள்குவிந்திருக்கப்பெரு மகிழ்ச்சியுடன், யமனை உதைத்தருளிய திருவடிகளின் கீழ் ஒரு விண்ணப் பஞ்செய்து கொள்ளலானர். திருநீறணியும்திருமேனியுடைய எங்கள்புண்

ணியமே! மலையரசன் மகளுக்கிசைந்த மணவாளனே! அடியேன் வடகாசியை விட்டுநீங்கி, உனக்குப்பிரியமான காஞ்சிமாநகரத்தை அடைந்து, பெரும்பேறு பெற்றுக் கடைத்தேறினேன். இப்படிப்பட்ட பெரும்பேறுபெற்ற அடியேன் மனதில்அளவுபடாத ஆசையுடன் ஒரு எண்ணம்இடையறாமல் மேன்மேலும்வளர்ந்தோங்குகின்றது. சிறியேனிடத்தில் மாறாமல் வைத்த பெருங்கருணையால் அந்த எண்ணம்ஈடேறச்செய்தருள்க. என்று வணங்கிச் சகலதீவினைகளையும் வராமற் காக்கிறபடியால் திராவிடம் என்னும் பாஷையைக் குற்றம்இல்லாதபடி நான் நூதனமாக ஏற்படுத்த அநுக்கிரகம்செய்து, அந்தப்பாஷை சகலசாதியாருக்கும் எளிதில்விளங்கவும், தேவர்களுக்கெல்லாம்அமுதம்போல்சுவையுடைத்தாகவும்செய்தருள்க. அறிவுடையோர்கள் அங்கீகாரம் செய்து எடுத்துரைக்கும்சகலபாஷைகளுக்குந் தலைவனே! உயிரொழுத்துப்பன்னிரண்டும்மெய்யெழுத்துப்பதினெட்டும் ஆகமுப்பதெழுத்தால், முடிவதாய், உனக்குப் பிரியமானதாய்த் தோன்றும் அந்தத்தமிழ்ப்பாஷையினால் செய்யப்படும் தோத்திரங்களை உட்கொண்டு மகிழ்ந்தருளி, இந்தத் தமிழ்நாட்டில் வாழ்பவர்களுக் கெல்லாம் வேண்டும் வரம் கொடுத்தருள்க. எம்பெருமானே! அடியேன் இந்தத் தமிழ்ப்பாஷையின் மந்திரங்களைக் கணித்து, நீதிநெறிதவறாமல் இந்தக் காஞ்சிமாநகரத்திலே உமக்கு அருகனாய் இனிது வாழ்ந்திருக்கவும் வேண்டும். இவ்வரங்களைக் கொடுத்தருள்க என்று வேண்டினார். சிரசின்மேற்கை கூப்பிவேண்டிய அகஸ்தியமுனிவருக்கு எம்பெருமான் திருவருள்சுரந்து, தமிழ்ப்பாஷைக்கு ஆசானும் பதவியுடன் எட்டுதிசைகளிலும் சிறந்து விளங்கும் தென்திசையில் வாழும் வாழ்வை அளித்து, மற்றும்வேண்டிய வரமெல்லாம் கொடுத்தருளி, அந்த இலிங்கத்தினிடமாக மறைந்தருளினார். இவ்வண்ணம் எம்பெருமான் திருவருளைப்பெற்ற அகஸ்தியமுனிவர் மெய்ப்பொருள் அமைந்த வேதம்போல், இயல், இசை நாடகம் என்னும் நவரசம் பொழிகின்ற முத்தமிழ்களையும் விளங்கச்செய்து, செவ்வண்ணத் திருமேனியையுடைய சிவபெருமான் சீர்பாதகமலங்களைத் தொழுது துதித்து, நெடுங்காலம் அவ்விடத்திலேயே வாசமாயிருந்தார். ரிஷபவாகனத்தையுடைய சிவபெருமான் வடமொழியைப் பாணினிமுனிவருக்கு வகுத்தருளி, அதற்கு நிகராகத் தென்மொழியை உலகமெல்லாம் தொழுது துதிக்கும் அகஸ்தியமுனிவருக்கு அநுக்கிரகஞ்செய்தார் என்றால், கடல் சூழ்ந்த பூலோகத்திலே இந்தச் செந்தமிழின் பெருமையை அளவிட்டறியவல்லவர் யார்? வடமொழி, தென்மொழி என்னும் இரண்டு பாஷைகளுக்கும் முதல் ஆசிரியர் சிவபெருமான். இரண்டு பாஷைகளையும் இலக்கணக் குறையில்லாமல் விர்த்திசெய்தவர்கள் பாணினிமுனிவர்

அகஸ்தியமுனிவர் என்னும் முனிவரர் இருவர். உலகமெல்லாம் கீர்த்தி விளங்கப்பரவும் இரண்டு பாஷைகளையும் எடுத்துக் கையாடினவர்கள் கல்வி கேள்விகளால் நிறைந்த பெரியோர்கள் என்றால், அறிவுடையோர்கள் நடு நிலையாய்ச் சீர்தூக்கிப் பார்க்குமிடத்தில் இந்த இரண்டு பாஷைகளும் சமம் என்னும் இதற்கு எள் அத்தனையேனும் சந்தேகம் உண்டாகுமோ? உண்டாகமாட்டாது. இப்படிப்பட்ட செந்தமிழை விளங்கப் போதித்துக்கொண்டு அவ்விடத்தில் மகிழ்ந்து வாசஞ்செய்யும் நாளில், இமயமலையில் எம்பெருமான் பார்வதிதேவியாரைத் திருமணம்புரியும் செய்தி உண்டாகவே, சகலலோகத்தாரும் அங்கேபோய்ச் சேர்ந்தார்கள். முனிவுடனே விந்தமலையை அடக்கிய முனிவரும் அதைப்பார்த்து, இமயமலைக்குப்போய்ச் சேர்ந்தார். சகலலோகத்தாரும் அங்கேவந்து சேர்ந்துவிட்டமையால், பூமிதேவி பாரம் சுமக்கமாட்டாமல் ஒருபக்கம் சாய்ந்துபோனாள். தென்திசை உயர்ந்து, வடதிசை தாழ்ந்துபோனதனால் தேவர்கள் எல்லாரும் அவலமும் அச்சமும் அடைந்து, சிவபெருமான், திருவடிகளைத்தொழுது விண்ணப்பம் செய்யலானார்கள். எங்கள் பரமபிதாவே! ஆலகாலவிஷம் உண்டருளிய அருளாளா! தாழ்ந்துபோகின்ற பூமியைச் சமனிலையில்வைத்து, ஆணவாதிமலத்துள் அழுந்தும் அடியேங்களை ஆதரிப்பது உன்கடன். இல்லாவிட்டால் நாங்கள் வாழ்வது அரிது. இப்பொழுதே பாதாளத்தில் விழுந்துபோவது நிச்சயம் என்று தேவர்கள் பயந்து இதைச்சொல்லுதலும், எம்பெருமான் திருமுடியை அசைத்துச் சொல்லுகின்றார். கற்பகப் பூமாலைசூடிய தேவர்களே! சனங்கள் மிக நிறைந்து உண்டானபளுவினால் பூமி தாழ்ந்துபோயிற்று. ஆகையால் நாமாவது நமக்கு நிகரான முனிவராவது இப்பொழுதே தென்றிசைக்குப் போனால், நீங்கள் எல்லாரும் வருத்தம் அடையாதபடி பூமி சமநிலைபெறும், என்று சொல்ல, வருந்தும் தேவர்கள் கேட்டுக் கவலைப்பட்டு, திருக்கல்யாணம் நடக்கும்வேளையில் நம்பெருமான் தென்றிசைக்குச் செல்லத்தகுமோ? அவருக்கு நிகரானவர்கள் வேறு யார்? வேதங்கள் எல்லாம் நம்பெருமானை நிகரில்லாதவன் என்றும் எப்பொருட்கும் இறைவன் என்றும் எவரானும் அறியப்படாதவன் என்றும் முறையிடுகின்றனவே. என்றும் இவைபோல்வனவற்றை எண்ணி, இணையடிகளைத்தொழுது, துதித்து, மூப்புரங்களையும் நீறாக்கிய முதற்கடவுளே! இந்தத் திருமணம்புரியும்வேளையில் தாங்கள்போவது எப்படி? உமக்கு ஒப்பானவர்கள் உண்டென்று எவ்விடத்திலும் சொல்லக்கேள்விப்பட்டதில்லை. என்று சொல்லுதலும், எம்பெருமான் சொல்லுகின்றார். தேவர்களே! நீங்கள் சொல்லியது மெய். இவ்வுலகத்தில் எமக்கு நிகரானவன் அகஸ்தியனே அல்

லாமல் வேறொருவரும் இல்லை என்று சொல்லிய சொல்லைக்கேட்டுத் தேவர்கள் பரமசந்தோஷம் அடைந்து, எம்பெருமானே! சுபகாரியமான திருக்கல்யாணம் நடக்கும்வேளையில், தாங்கள்போவது சரியல்லவே. சங்கரனே! அவ்விடத்திற்குப்போகும்படி செந்தமிழ் முனிவராகிய அகஸ்தியருக்கு விடைகொடுத்தல் தரும் என்று விண்ணப்பஞ் செய்துகொண்டார்கள். கடலில் உண்டான விஷத்தை அமுதமாகக் கொண்டருளிய ஸ்ரீ கண்டப்பெருமானும் அகஸ்தியமுனிவரை அவ்விடத்தில் அழைத்து, நேராகப்பார்த்து, இளநிலாக்கிரணம்போல் விளங்கும் புன்னகையுடன் முகமலர்ந்து பெருங்கருணைவைத்துச் சொல்லுகின்றார். முத்தமிழ்முனிவனே! பூர்வம் வளர்ந்தோங்கிய விந்தமலைசெய்த இடர்களைநீக்கி, மூன்றுலகமும் பிழைக்கச்செய்தாய். இப்பொழுதும் உலகம் உய்யும்பொருட்டாக, நீ பொதியமலைக்கு விரைந்துபோய், இந்தப் பூமியைச் சமநிலையாகச் செய் என்று திருவுளம் பற்றினார். அலைகடலை ஆசமனம்செய்த அகஸ்தியமுனிவர் எம்பெருமானுடைய சீர்பாத கமலங்களைத் தொழுது துதித்து, அதிக துக்கத்துடன் சொல்லுகின்றார். அருள்பெற்ற அடியார்களுக்கு அவர்களைப்பார்க்கிலும் அன்புடையானே! கருணைக்கடலே! அடியேன் உன் திருக்கல்யாணமகோற்சவத்தைக்காணாமல் நீங்கிப்போய்விடுவது நியாயமோ? கலந்தவர்கள் பின்பு கடலிற் கலந்த நதிபோல் பிரிய ஒண்ணாதவனே! இங்கே வந்திருக்கின்றவர்கள் எல்லாரும் உன் திருமணக்கோலத்தைக் கண்டு களிக்கும் செல்வம் பெற்றார்கள். இந்தப் பெரிய திருமணப் பந்தலிலிருந்து. பிரிந்துபோ என்று பிரித்துவிட, அரும்பாவியான நான் என்ன அபசாரம்செய்தேனோ? உன் மணக்கோலத்தைக் கண்டு தொழுது கடைத்தேறும்படி விண்ணுலகத்தாரும் நாகலோகத்தாரும் மண்ணுலகத்தாரும் குடும்பசகிதராய் இன்னமும் வந்துகொண்டே இருக்கிறார்கள். எல்லாருக்கும் முந்திவந்து காத்துக்கொண்டிருக்கின்ற அடியேனைத்தள்ளுவது அழகாகுமோ? விரைந்துவருகின்ற முனிவர்கள் எல்லாம் மணம்வீசும் சுனைகளில் நீராடி, அரசிலை, தருப்பைமுதலானவைகளை எதிரில் வைத்துக்கொண்டு, கலசங்களுக்கு நூல் இழை சுற்றுகின்றார்கள். அந்த முனிவர்களுடன் கலந்துதொண்டு செய்து கழியாமல் கலங்கும்படி சிறியேனைத் தள்ளுவது சீராகுமோ? உன் அன்பர்களில் சிலர் பாடுகின்றார்கள். சிலர் ஆனந்தக்கூத்தாடுகின்றார்கள். சிலர் ஆனந்தக்கண்ணீர்விட்டு அழுகின்றார்கள். சிலர் ஓடுகின்றார்கள். இவர்களுடன் கூடி ஓடி ஆடிப்பாடி ஆனந்தக்கண்ணீர்விட்டழுது பரவசமடையாமல் பரிதபிக்கும்படி அடியேனைத்தள்ளுவது பண்பாகுமோ? சிலர் நவரத்தினங்களை மழைபோற் பொழிவார்கள். சிலர் கற்பகப் பூமாரி பெய்வார்கள்.

சிலர் தேகமெல்லாம் புளகம் அடையப்பெறுவார்கள். சிலர்உன்கீர்த்தி எங்கும்பரவ விளம்பரம்செய்வார்கள். சிலர் அளவில்லாத சந்தோஷம் அடைவார்கள். அவர்களுடன் கலவாமற் கலங்கும்படி கடையேனைத்தள்ளுவது கருணையாகுமோ? எம்பெருமான் திருமணக்கோலத்தைக் கண்டோம். கலிவிண்டோம். இடையறாதோங்கும் சிவானந்தபோகம் பெற்றோம். என்று ஆரவாரம் செய்பவர்களுடன் கூடிக்குலாவாமல் துன்பம் அடையும்படி அடியேனைத்தள்ளுவது தகுதியாகுமோ? இளம்பருவமுள்ள மாதர்கள் தங்கள் கூந்தல் அவிழ்வதையும் குழைகள் நழுவுவதையும் ஆபரணங்கள் சரிந்துபோவதையும் ஆலோசிக்காமல், முகம் முகமாய்நின்று மங்கலவார்த்தை சொல்வதை இருசெவிகளும் நிரம்பக் கேட்காமல் நீங்கும்படி கடையேனைத்தள்ளுவது கடமையாகுமோ? முனிவர்களும் கணநாதர்களும் பிரமவிஷ்ணுக்களும் மற்றவர்களும் அறுகுசாத்தும் வேளையில் பெருங்கூச்சலிட்டு, நான் முன் நீ பின் என்று ஒருவர்மேல் ஒருவர் விழுந்து போராடுவதைப்பார்த்துப் பூரிப்படையாமல், மனம் வருந்தும்படி அடியேனைத்தள்ளுவது மாட்சிமையோ? வட்டமாகச்செய்யப்பட்ட வேதிகளிலும் ஓமகுண்டங்களிலும் சமித்துகளை நிறைத்து, எங்கும் புகை சூழ்ந்துகொள்ள நெய்பெய்து, ஓமாக்கினியில் பொரி இறைப்பதைக்காணமல், விண்டுபோகும்படி அடியேனைத் தள்ளுவது விரும்பத்தக்கதோ? தன்பத்தினியான மேனாதேவியானவள் நவரத்தினகலசத்தில் உள்ள பாலைவார்க்கப் பர்வதராஜன் உன்பாதங்களை அலம்பி மணமலர் தூவி வந்தனை வழிபாடுசெய்வதைக்காணமல் தவிக்கும்படி அடியேனைத் தள்ளுவது தருமமோ? ஆத்திமலரையும் சந்திரனையும் அணிபவனே! பர்வதராஜன் தன் அருமைத்திருமகளைக் கன்னிகாதானமாகக் கொடுக்கும் காட்சியைக்காணமல் பெருந்துன்பம் அடையும்படி அடியேனைத் தள்ளுவது பிரியப்படத்தக்கதோ? ஒருவர்மார்பில் அணிந்தசந்தனம் மற்றொருவர்முதுகில் அப்பிக்கொள்ளவும் மிக்க விலையுள்ள இரத்தின ஆரங்கள்பட்டுத் தேகத்தில் தழும்பு உண்டாகவும் அணி அணியாய் நெருங்கிநின்று உன்னைக்கண்டு சேவிக்கும் காட்சியைக்காணமல், கலங்கும்படி அடியேனைத்தள்ளுவது அழகாகுமோ? குடைகளுடன் குடைகள்தாக்கவும் கொடிகளுடன் கொடிகள்தாக்கவும் ஆயுதங்களுடன் ஆயுதங்கள் தாக்கவும் தேவர்கூட்டத்துடன் ரிஷபவாகனத்தின்மேல் எழுந்தருளும் காட்சியை எதிர்நின்று இருவிழிகளும் களிக்கக்காணமல் கடையனாகும்படி அடியேனைத்தள்ளுவது தகுதியாகுமோ? யானைகள் வரிசை வரிசையாய்ச் சூழவும் தாவிவரும் குதிரைகள் வரிசைவரிசையாய்ச் சூழவும் தேர்கள் வரிசைவரிசையாய்ச் சூழவும் தேவர்கள்எல்லாரும் புடைசூழவும்

அதிக அலங்காரமான நகரத்தில் பவனிவரும் உன் அற்புதக்காட்சியைக் காணுமல், அல்லற்படும்படி அடியேனைத் தள்ளுவது அமையுமோ ! செம்பொன் வளையல்கள் எல்லாம் கழன்று தரையில்விழவும் பயோதரங்கள் மிகப் பூரிக்கவும் மணம்வீசும் கூந்தல் சோர்ந்துபோகவும் மடமாதர்கள் கண்டு மயல்கொள்ள மாடவீதியில் வரும் காட்சியைக் காணுமல் விழலனுக்கும்படி அடியேனைத்தள்ளுவது விதிதானே ? மரகதமாணிக்கம்போலும் திருமேனியையுடைய மலைமகளும் மழவிடைபோலும் மகிழ்ச்சியடைந்திருக்கின்ற நீயும் ஒரு நவரத்தினபீடத்தின்மேல் ஒருங்கு வீற்றிருக்கும் காட்சியை என் இருகண்களும் களிப்புறக்காணுமல் தவிக்கும்படியாக அடியேனைத்தள்ளுவது தகுதியாகுமோ ? திருமணப்பந்தலிலே கூட்டம் கூட்டமாகவந்து, உன் பாதாரவிந்தங்களில் தாழ்ந்து பணிகின்றவர்கள் மேல் வைத்தருளும் கருணைகடாட்சத்தை அடியேனும் அவர்களுடன் தாழ்ந்து பணிந்து மனமகிழ்ச்சி அடையப்பெருமல் நைந்துபோகும்படியாக அடியேனைத்தள்ளுவது நன்மையாகுமோ ? அல்லாமலும் சத்தபுரிகளிலும் தலைமையாய்ச் சிறந்துவிளங்கும் காஞ்சிமாநகரத்தில் உன் சந்நிதானத்திலே வாசஞ்செய்திருக்க முன்பு வரம் அளித்தாய். இப்பொழுது அந்தவரத்தைமாற்றிப் பொதியமலைக்குப்போய் வாழ்ந்திருஎன்று திருவாய்மலர்ந்தருளியது என்னகாரணமோ ? நாயேனையும் அடிமையாகப் படைத்தவனே ! உன் திருவருள் இதுவோ என்று இப்படிப் பலவிதமாகப் பன்னிப் பன்னிப் பரிதபிக்கின்ற அகஸ்தியமுனிவரை நேராகப்பார்த்துக் கல்யாணசுந்தரக் கடவுள் சொல்லுகின்றூர். அருந்தவமுனிவனே ? கேள் நீ அவலம் அடையவேண்டாம். ஆன்மாக்களைச் செவிலித்தாய்போல் ஆதரிக்கும் நீர்வளமுள்ள பாண்டித்திருநாட்டிலே உன்பொருட்டாக மாசில்லா தோங்கும் வேறுகாஞ்சித்தலத்தை உண்டாக்குவோம். அந்தத் தென் காஞ்சியும் எமக்குப் பிரியமானதாம். அவ்விடத்திலே பார்வதியுடன் இந்தத் திருமணக்கோலத்தை உனக்குப் பிரத்தியட்சமாகக் காட்டுகின்றேம். பரமசந்தோஷம் உண்டாக உன் இருகண்களாலும் காண்பாய். அறிவுடையானே ! நீ கண்டுகளிக்கும்படி பூர்வம் வேண்டும் வரம்பெற்ற வடகாஞ்சியிலும் வருஷந்தோறும் நடக்கும் பங்குனித் திருவிழாவின் முடிவில் பங்குனி உத்திரத்தில் எமக்குத் திருக்கல்யாணம் உண்டாகத் திருவருள் செய்கின்றேம். என்று இவைகளைச் சொல்லித் தழுவித் தேற்றி விடைகொடுத்தருளப்பெற்று மகிழ்ந்து, எம்பெருமான் திருவடிகளில் தாழ்ந்து பணிந்து, மீண்டு, தன் பத்தினியாகிய உலோபா முத்திரையுடன் ஸ்ரீசைலம் என்னும் பெரியமலைக்கு வந்து சேர்ந்தார். முனிவர்களை வஞ்சித்துக்கொன்று தின்னும் வைராக்கியம் படைத்திருந்த வாதாவி, வில்வலன்

என்னும் அசுரர்களை வதைத்த மகா தபோபலத்தையுடைய அகஸ்திய முனிவர் அந்தமலையைச் சேர்ந்தவுடன் அலைகடலை ஆடையாக உடுத்திருக்கும் பூலோகமானது பழையபடி சமமாகத் தன்னிலையில் நின்றது. அதைக்கண்டு சகல லோகத்தாரும் பரமசந்தோஷம் அடைந்தார்கள். இப்பால் சிவஞானச் செல்வரான அகஸ்தியமுனிவரும் அவ்விடத்திற் சிலகாலம் வாசஞ்செய்து பின்பு பொதியமலைக்குப்போய்ச் சேர்ந்து தினந்தோறும் தென் காஞ்சிக்கும் வடகாஞ்சிக்கும் சென்று துதிசெய்து சிவபெருமான் திருமணக்கோலத்தைக்கண்டு மனங்களித்து, தன்பத்தியினால் தன்மை, உவமை, உருவகம், முதலியபல அலங்கார வகைகளுடன் நவரசம் பெருகப்பாடிய பலசெந்தமிழ்ப் பாமாலைகளை மனம் வாக்குக் காயங்களைக்கடந்து விளங்கும் மகாதேவனுடைய மலரடிகள்மேல் அணிந்து, வயிறு வருந்தித் தென்றல் என்னும் குழந்தையைப்பெற்று, இனிமையான தாமிரபரணி ஆற்றுநீரில் குளிப்பாட்டி, மணம்வீசும் சந்தனச்சோலையில் முத்தமிழ்ப்பிள்ளைகளுடன் வளர்த்து,மெள்ள மெள்ள உலகம் என்னும் ஒரு வாசலில் விளையாடவிட்டுப் பொதியமலையிலும் ஸ்ரீ சைலத்திலும் அகத்தியீசத்திலும் முறை முறையாக மகிழ்ந்து வாசஞ்செய்துகொண்டிருக்கின்றார். அன்பர்களே ! அகத்தியீசத்தின் வரலாறு இதுவாகும்.

அகத்தியீசன் அடியிணைபோற்றி.

---

## மாதவீச்சரம்.

அன்னம்போல் நடப்பவளான பார்வதிதேவி இந்த அகத்தியீசத்தில் வணங்கி வாழ்த்தி மண்டபவாசல்களிலும் மாணிக்கவாசல்களிலும் அங்கங்கே நெருங்கியிருக்கின்ற கட்டியக்காரர்களும் கணநாதர்களும் வாயில்காப்பவர்களும் தொழுது துதிக்கப்போய் வேதவடிவாய் விளங்கும் ஒரு மாவடியில் வீற்றிருக்கின்ற ஏகாம்பரநாதருக்கு இடப்பக்கத்தில் விளங்கும் மத்தள மாதவீசத்தைத் தரிசித்தாள், என்று சொல்லிய சூதமாமுனிவரை வனஞ்சூழ்ந்தோங்கும் மேருமலையை வில்லாகவளைத்தருளிய சிவபெருமான் சீர்பாதகமலங்களில் படிந்திருக்கும் மனமுடையவர்களான மாதவர்கள் எல்லாரும் புகழ்ந்து, மாதவீச்சரத்தின் வரலாறு சொல்லுக என்றுகேட்டவும் விரித்து விளங்கச் சொல்லுகின்றார்.

மணம் வீசும் துளசிமாலைசூடிய மணிமுடியுடைய மாதவன் மிக்க நீர்வளமும் புகழால்வரும் ஓசையையும் படைத்தோங்கும் காஞ்சிமாநகரத்திலே விண்டுவீச்சரலிங்கப் பிரதிஷ்டைபண்ணித் தொழுது துதித்த

புண்ணியவசத்தால் நான்குவேதங்களும் முழங்க வளர்ந்தோங்கும் பூஞ்சோலையால் சூழப்பட்டிருக்கும் தில்லைத்தலத்தில் பொன்னம்பலத்திலே ஆனந்தக் கூத்தாடுவதைப்பார்த்துப் படகவாத்தியம் வாசிக்கும் பேறுபெற்றபின்பு உண்டாகிய சந்தோஷத்தால், உலகளந்த மாதவன் அந்த ஆனந்தத் தாண்டவத்தின் முடிவில் எம்பெருமானைத் தொழுது துதித்து நிகரில்லாதோங்கும் பெருங் கருணைக்கடலே ! அடியேன் மத்தளம்வாசிக்கப் பெறுதலும் வேண்டும். அநுக்கிரகம் செய்தருள்க என்று போற்றுதலும் மிகக் கூர்மையான சூலாயுதமேந்திய சிவபெருமான் சொல்லுகின்றார். மாதவனே ! நீ இந்தத்தலத்திலே எந்நாளும் படகவாத்தியம் வாசிக்க வரம்பெற்றாய். மத்தளம் வாசிக்கவும் விரும்புவாயாகில், யாம் சொல்வதைக் கேள். அஞ்ஞானக்கூட்டத்தை அறவீசி விளங்கும்; தேவர்கூட்டங்கள் தொழும்படியான மிக்க நீர்வளமுள்ள காஞ்சிமாநகரத்தை முன்போல், விரைந்துசேர்ந்து, அவ்விடத்திலே மத்தள மாதவீசலிங்கப் பிரதிஷ்டை பண்ணித் தொழுது அன்புமிகுந்து ஆகமவிதிப்படி அருச்சனைசெய். அந்தக்காஞ்சிமாநகரத்திலே சிறந்து விளங்கும் பரவெளிப்பிலத்தின் அயலில் யாம் எந்நாளும் காப்புத் திருத்தாண்டவம் செய்துகொண்டிருக்கின்றோம். செல்வம் நிறைந்து விளங்கும் இந்தத்தில்லைவனத்தில் திருச்சிற்றம்பலம் ஒன்றே மனோவாக்குகளைக்கடந்து விளங்கும் பரவெளி என்று சொல்லப்படும். சங்குகள் முழங்கும் வளமான தீர்த்தங்களும் வயல்களும் பூஞ்சோலைகளும் சூழ்ந்தோங்கும் காஞ்சிமாகரத்தின் எல்லைக்குட்பட்ட இடங்கள் எல்லாம் பரவெளி என்றே கண்டுதெளி. ஆதி அந்தம் இல்லாத உண்மை அறிவானந்த சோதியாகிய எம்மைத் தங்கள் இருதயமாகிய குகையினிடத்திலும், தன்னைத் தொழுவோருடைய பிறவித் துன்பங்களைப் போக்கும் காஞ்சிமாநகரம் என்னும் பரவெளியிலும் கண்டு தரிசிக்கப்பெற்றவர்களே வேதாகமசாஸ்திர புராணங்களையெல்லாம் ஓதி உணர்ந்த முனிவர்களும் பெறுதற்கரிய முத்தியின்பம் பெறுவார்கள்.

நெருப்பில்கலந்த பொருள்கள் எல்லாம் உடனே நெருப்பாகிவிடும். அதுபோல் எப்படிப்பட்டவர்களானாலும் பரவெளியான காஞ்சிமாநகரத்தில் அடைந்தமாத்திரத்தில் எமது இயல்பைப் பெறுவார்கள். அதனால் அந்தக்காஞ்சிமாநகரத்திலே இறந்துபோனவர்களுக்கு ஈமக்கடன் கழிப்பவர்களுக்குக்குச் சூதகம் இல்லையாம். சண்டாளர்களைத் தொட்டுக்கொண்டாலும் தீட்டு இல்லையாம். சேஷ சயனமுடையானே ! இப்படிப்பட்ட மகத்துவமுள்ள காஞ்சிமாநகரத்தில் நீ எம்மைப் பூசைசெய்து போற்றுவாயானால், அவ்விடத்தில் யாம் காப்புத் திருத்தாண்ட-

வம் செய்து காட்டுகின்றோம். அந்தக் காப்புத்திருத்தாண்டவம் என்னும் கூத்துக்கு இணங்க மத்தளம்வாசி என்று அடியேன்பாசத்தை நாசமாக்கி ஆட்கொண்டருளிய பரமசிவம் பரிந்துசொல்லிய வார்த்தையைக் கேட்டு, வண்டின்கூட்டங்கள் நுழைந்து வருத்த மலரும் துளசிமாலை சூடிய மாதவன் பரமசந்தோஷம் அடைந்து மிகவும் விரைந்து காஞ்சிமாநகரத்திற்குப்போய்ச் சேர்ந்து, வழுவழுப்பான அடியையுடைய ஒப்பில்லாத ஒருமாவடியின்கீழ்த் தேவர்கள் எல்லாரும் துதிசெய்ய வீற்றிருக்கும் ஏகாம்பரநாதருக்குச் சமீபத்தில் மத்தளமாதவீசலிங்கப் பிரதிஷ்டை பண்ணி, ஆகம விதிப்படி அருச்சனைசெய்யும் நியதிபூண்டனன். நெடுங்காலம் மாசில்லாத மாதவம் புரிந்து சிவானந்தபோகம் தேக்கிட விளங்கும் மாதவன்மேல் பெருங்கருணை வைத்து, மனோவாக்குகளுக்கு எட்டாதவரும் சகலலோகங்களைக் காப்பவரும் ஆன சிவபெருமான் காப்புத்திருத்தாண்டவம் ஆடிக்காட்டினார். எப்படி எனில்:—தடித்திருக்கும் இருட்கூட்டத்தை வாரி வாயிற்போட்டுக்கொண்டு, வெப்பமான கிரணங்களை வீசி ஓங்கும் ஆயிரம் சூரியர்கள் ஓரிடத்தில்ஒன்று சேர்ந்து பிரகாசித்தாற்போல் ஒளிவீசும் அற்புதமான செம்பொற்சபையின் சுற்றுப்பக்கமெல்லாம் பெருஞ்சோதிவீசும் கிரணங்களைப் பரப்பவும் அப்படிப்பட்ட அற்புதமான செம்பொற்சபைக்கு ஓர் அலங்கார பூஷணம்போல் அழகுகாட்டித் திருநீற்றுப்பொலிவுடன் விளங்கும் திருமேனிப் பிரகாசம் வீசவும் வினைமாசுதீர்ந்த விமலஞானிகள் கணமேனும் விட்டுப் பிரியப்பெறாத திருவடிகளின்மேல் அணிந்திருக்கும் நவரத்தின வீரகண்டை கலின் கலின் கலின் என்று கலிக்கவும் நீண்டிருக்கும் செஞ்சடைகள் எட்டு திசைகளிலும் படரவும் தெய்வத்தன்மை பொருந்திய கங்கைதிமுழங்கித் திவலை தெறிக்கவும் இளநிலாக் கிரணம்போல் திருவருள் மிகுந்த புன்னகைதோன்றி, அடுத்திருந்து வணங்கி வாழ்த்தும் அடியார்களுடைய ஆருயிருணா அவசமாக்கவும் செந்தாமரை மலர்போலும் திருமுகம் மலரவும் கடைக்கண்பார்வையானது பஞ்சுபோல் மிருதுவான பாத பங்கயங்களையுடைய பார்வதி தேவியினிடத்தில் செல்லவும், பஞ்ச பூதங்களையும் படைத்துக் காத்து அழிக்கவல்ல பூதகணங்கள் புடைசூழ்ந்து விலாப்புடைக்கத்தோள்தட்டிக்கூத்தாடவும்மாசில்லாதோங்கும்பைங்கொடிபோல் அசைந்து ஒருபக்கத்தில் நின்று இயற்கைமணம் வீசும்கூந்தலையுடைய பார்வதிதேவிகண்டு கண்களிக்கவும் தேவர்கள் எல்லாரும் கற்பகப் பூமாரி பொழியவும் எவ்விடத்திலும் ஹர ஹர சய சய என்னும் முழக்கம்பெருகவும், பெரும் பூதகணங்கள் வார்கொண்டு இறுக்கிக்கட்டிய பேரிகை முதலிய வாத்தியங்களை எட்டுதிசைகளும் சுவர்க்கலோகமும் செவிடுபற்

றிப்போகும்படி முழக்கவும், கின்னரர்கள் தேன் ஒழுகினாற்போலச் செவியெல்லாம் கலந்துகொள்ளும் சுவைமிகுந்த பண்ணுடன் வீணைவாசிக்கவும், மிகுந்த நீரையுடைய பலசமுத்திரங்கள் ஏககாலத்தில் முழங்கினாற்போல் பலவேதங்கள் ஒருபக்கத்திலும் குடம்போல் பருத்திருக்கும் சங்குகள் ஒருபக்கத்திலும் மற்றும் பலவாத்தியங்கள் ஒருபக்கத்திலும் முழங்கும் முழக்கம் ஓங்கவும், நடித்தருளும் அற்புதமான காப்புத்திருத்தாண்டவத்தைக் கண்டமாத்திரத்தில், மணம் வீசும் துளசிமாலைசூடிய மாதவன் தேகமெல்லாம் புளகமடைந்து ஆனந்தக்கண்ணீர்சொரிந்து, நாத்தழும்பேறத் துதித்து, சிரசின்மேற் கூப்பியகைகளுடன் அடியற்றமரம்போல் தரைமேல் விழுந்து எழுந்து மனமகிழ்ந்து, பேரின்பக்கடலில் அழுந்திப் பலமுறை பணிந்து துதிசெய்யும்போது, சந்திரனைச் சடைமுடிமேல் தரித்தவராகிய எம்பெருமான் திருவருள்சுரந்து, அந்தமாதவனுக்கு மத்தளம்வாசிக்கும் தொழிலைக்கொடுத்தருளினர். நீண்ட திருமேனியை யுடைய மாதவன் பரமானந்தபோகத்தை அநுபவித்து, அந்த நடனத்திற்கு இசையும்படி மத்தளம்வாசித்து மத்தளமாதவன் ஆயினன். எம்பெருமான் அந்த மத்தளமாதவன் வேண்டும் வரங்கொடுத்தருளினர். மாதவன் பெற்றுக்கொண்ட வரத்தினால், அந்நாள்தொடங்கிக் காஞ்சிமாநகரத்தில் மத்தளஓசையானது மூன்றுலகங்களிலும் சூழ்ந்துகொள்ளச் சகலாத்துமாக்களையும் பரிந்து பாதுகாத்தருளும் பார்வதிதேவியை இடப்பாகத்தில் உடையவராகிய பரமேஸ்வரமூர்த்தி திருக்கூத்து ஆடிக்கொண்டிருக்கின்றார். செய்வதற்கு உரிமையான தவத்தைச் செய்கின்றவர்களோ? இந்தக் காப்புத் திருத்தாண்டவத்தைக் கண்ணாரக் காணப்பெற்றவர்கள் இருவினைக்கட்டை அறுத்துக்கொண்டு இன்ப வீடு பெறுவார்கள். பிறவியை ஒழித்துப் பேரின்பவீடு கொடுத்தருளும் மத்தளமாதவீசத்தின் வரலாறு இது சொன்னோம். அப்பாற்பட்டதை இனிச் சொல்லுவோம் கேளுங்கள்.

மத்தளமாதவீசன் மலரடிபோற்றி.

எம்பெருமாட்டியானவள் அந்த மத்தளமாதவீசத்தில் வீற்றிருக்கும் பெருமானைக்கண்டு தொழுது துதித்துத் தன்னிடத்தில் அதிக விசுவாசமுள்ள தோழியர் கூட்டத்துடன் நடந்து, திருவேகம்பமுடையவரது திருவருட்பெருமை ஒன்றையே சிந்தித்துச் செம்பொன்னால் செய்யப்பட்டு ஒளிவீசும் மகாமண்டபத்திற்குவந்து சேர்ந்தார்கள். எண்ணிறந்த இரத்தினங்கள் எவ்விடத்திலும் இளஞ்சந்திரிகைவீசவும் மாற்றுயர்ந்த செம்பொற்றூண்கள்வரிசை வரிசையாக விளங்கவும் கண்களுக்கு இனிமையான பேரழகிற்கு ஒரு அலங்காரபூஷணம்போல் அழகுகாட்டி ஆகாய

த்தை அளாவிய கொடிகள் நெருங்கியிருக்கின்ற அந்த மகாமண்டபத்தில் தன்னைச் சூழ்ந்துகொண்டிருக்கும் தோழிமார்கள் வெண்சாமரைகளையும் விசிறிகளையும் கையில்பிடித்து இருபக்கங்களிலும் நின்று பணிவிடை செய்யவும், சற்றுநேரம்தங்கி இளைப்பாறி, மேல் எழுந்து மிகச்செருக்கு அடைந்திருக்கும் இளமுலைகளையுடைய அந்தத் தோழிமார்களுக்கு இது சொல்லலானாள். நிலைபெற்று விளங்கும் உயிர்களெல்லாம் மாயையால் மறைக்கப்பட்டுத் துன்பம் உண்டாக்கும் இருவினையென்னும் பெருவலையில் சிக்கிக்கொள்ளும். இந்தவினைகள் உன்னையும் எம்மையும் எமது அடியார்களையும் சிறிதும் தொடரமாட்டாது, ஆனாலும் எல்லாரும் உணர்ந்து உய்யும்பொருட்டு, விளையாட்டாக எமது கண்களை மறைத்ததனால் உலகமெங்கும் பேரிருட் கூட்டம் மூடி உயிர்கள் எல்லாம் துக்கசாகரத்தில் முழுகிவிட்டன. அதனால் உண்டாகிய பாவத்தைப் பரிகரிக்கக்காஞ்சிமாநகரத்தைச்சேர்ந்து நீ ஆகமவிதிப்படி எம்மைப்பூசைசெய். என்று மந்தரகிரியில் வாசஞ்செய்யும் எம்பெருமான் அனுப்ப இந்த நகரத்திற்கு வந்தேன். வளர்ந்தோங்கும் இளமுலைகளையுடைய தோழியர்களே! இவ்விடத்தில் இருந்து நான் செய்யும் பூசைக்கு இணங்க, என்கட்டளைவழியில் நின்று, அந்தப்பூசைக்குவேண்டும் பொருள்களைக் கொடுத்துக்கொண்டிருங்கள் என்று உணர்த்தினாள். தேவி உணர்த்தியதிருவாய்மொழிகளைக்கேட்டமாத்திரத்தில்மணம்வீசும்கூந்தலையுடைய பாங்கிமார்கள் எல்லாரும் பரமசந்தோஷம் அடைந்து, தேவிபாதாரவிந்தங்களில் விழுந்து பணிந்து எழுந்து, திருப்பாற்கடலில் தோன்றிய அமுதம்போன்ற தாயே! நீ உன் செம்பவள வாய்திறந்து, நாங்கள் செய்யவேண்டிய பணிவிடைகளைத் தனித்தனியாக அடியேங்களுக்கு வகுத்தருள் என்று சொல்லியபடி வகுத்தருள் செய்கின்றாள்.

வாசனையுடன் கலந்து இருள்மிகுந்து குளிர்ந்திருக்கும் கூந்தலையுடையவர்களே! நான் காலம் தப்பாமல் நீராடி அநுட்டானங்களை முடித்துக்கொள்வதற்குச் சீலமுடைய தேவர்களும் விரும்பத்தகுந்த தெண்ணீரையுடைய ஒரு கேணியும், நீலகண்டப் பெருமானுக்கு அபிஷேகம் செய்விக்க ஒரு கேணியும் சிலர் உண்டாக்குங்கள். இலைபோலும் அச்சமான முகத்தையுடைய பொன்னாபரணங்களுடன் வளர்ந்தோங்கும் மார்புடையவர்களே! அலைகளால் முத்துகளை வீசி முழங்கும் நீரையுடைய வேகவதி நதிக்கரையோரத்தில் மலர்களும் பச்சிலைகளும் பழங்களும் நிறைந்திருக்கும் மயிலை, வில்வம், பலா முதலான, பல விருட்சங்களையுடைய நந்தன வனங்களைச் சிலர் வைத்துப் பயிராக்குங்கள். வாசனையுள்ள சந்தனச் சாந்தும் களப கஸ்தூரியும் பச்சைக்கர்ப்பூரமும் குங்கு

மப்பூவும் மற்றும் வாசனைத் திரவியங்களையும் தெய்வத் தன்மையுள்ள இரத்தினபூஷணங்கள் விலை மதிக்கப்படாத பரிவட்டம் முதலியவைக ளையும் சிலர் கொண்டுவாருங்கள். பஞ்சகவ்வியத்துடன் பஞ்சாமிர்தத் தையும் சிலர் சிலர் கொண்டுவாருங்கள். வானத்தை அளாவும்படி மேல் ஓங்கிய கோயில், மாளிகைகள் எங்கும் நவமணிகளாலும் நல்ல புஷ்பங்களாலும் சித்திரப்பூம் பட்டுகளாலும் சிலர் சிலர் சிங்காரம் செய் துவையுங்கள். இந்தப்பிரகாரம் எம்பெருமாட்டி ஏவியவுடன் அந்தத் தோழிமார்கள் எல்லாரும் அழகிது என்று தேவி திருவடிகளில் விழுந்து தொழுது எழுந்து, நாம் முந்திச்செய்வோம், நாம் முந்திச்செய்வோம், என்று அவ்விடத்தில் ஒருவரைப்பார்க்கிலும் ஒருவர்விரைந்து பேரன்புட ன் தங்கள் தங்கள் தொழில்களில் முயற்சிசெய்தார்கள்.

பகைவரைக்கொல்லும் வேலாயுதம்போலும் கண்களையுடைய உமா பத்திரை, கீர்த்திமதி என்னும் இரண்டு தோழிமார்கள் எம்பெருமான் கோவிலுக்கு வடக்கிலும் தெற்கிலும் இரண்டு கேணி உண்டாக்கி, அந் தக்கேணி நீரில் கங்கை, காளிந்தி முதலிய புண்ணிய தீர்த்தங்களைப் பூரி த்து வைத்தார்கள். அந்த இரண்டு கேணிநீரில் குளிப்பவர்கள் துன்பத் திற்கே காரணமான பிறவிப்பெரும்பிணி தீரப் பெறுவார்கள். சிலர் நீண்டிருக்கும் சடாமுடியையுடைய ஏகாம்பர நாதருக்குத் திருவமுது செ ய்யும் பொருட்டு அக்கினி மூலையில் ஒருகேணி உண்டாக்கி அழகுவாய் ந்த மடைப்பள்ளிகளை ஏற்படுத்தி வைத்தார்கள். சிலர் சந்திரனையும் எருக்கம் பூவையும் அணிந்திருக்கும் சடைமுடிமேல் அணிவதற்குக் கா ஞ்சிமாநகரத்தின் மேற்கே விளங்கும் வேகவதி நதிக்கரை யோரத்தில் மாசில்லாதோங்கும் சுத்தபூமியில் பலரும் கண்டு தொழத்தகுந்த மேன் மைபொருந்திய அம்பிகாவனம் என்னும் மலர் மலிந்திருக்கும் நந்தன வனங்களை வைத்து வளர்த்தார்கள். சிலர் நீண்டிருக்கும் இலைகளையுடைய வாழைகளையும் நெருப்புப்போல் சிவந்து பழுக்கும் பழங்களையுடைய பா க்குமரங்களையும் வெல்லக்கட்டியைத் தரும் செங்கரும்புகளையும் தூண் கள்தோறும் சேர்த்துக் கட்டிக் காந்திவீசும் மணிமாலைகளைத் தொங்கவி ட்டு வாசனையுடன் மலரும் பூமாலைகளைச் சரம் சரமாக விட்டுப் பலவர் ணமான சித்திரவிதானத்தை மேலே கட்டித் திருமணிக் கோயிலுக்குச் சிங்காரம் செய்தார்கள். சிலர் மணம் வீசும் புனுகு அப்பி, மகரந்தப் பொடிசேர்த்துக் கூட்டிய பன்னீர் தெளித்து, மணம்வீசும் அகிற்புகை வளர்த்துப் பொன்னைப் பொடியாக உடைத்துக் கரைத்துக் கரைத்து அழகுவாய்ந்திருக்கும் திருமாளிகையின் சுவர்களை யெல்லாம் சுவர்ண மயமாக்கச் சித்திரித்து வைத்தார்கள். சிலர் மேன்மையால் விளங்கும் வாசனைத்திரவியம் கலந்தசாதம், வெறுஞ்சாதம், சர்க்கரைப் பொங்கல்,

ததியோதனம், சுவையுள்ள மற்றச்சாதங்கள் பரிமளம் வீசும்படி தா
ளிக்கப்பட்ட பொரிக்கறி முதலான குடிப்பன, நக்குவன, கடிப்பன
விழுங்குவன என்னும் நால்வகை உண்டிகளைக் கசப்பு, கார்ப்பு, உவர்ப்பு,
துவர்ப்பு, புளிப்பு, தித்திப்பு என்னும் ஆறு சுவைப்படச் சமைத்து வை
த்தார்கள். சிலர் இடையருமல் பெருகும் தேனையுடைய மலர்களைக்கொ
ய்துகொண்டுவந்து சூட்டு, கண்ணி, இண்டை, தொங்கல் முதலியபலவித
மாலைகளாகத் தொடுத்துச்சேர்க்கும்படியான பரிமளப்புகையுடன் சேர்த்
துப் பன்னீர் தெளித்துச் செம்பொன் குடலையில் நிறைத்து வைத்தார்
கள். சிலர் செம்பொற் குடங்களிலே தெய்வத்தன்மையுள்ள மந்திரங்க
ளைச்சொல்லி, பொன்னாடைகொண்டு, அந்தக்குடங்களின் வாய்களைக்க
ட்டி, அலைவீசும் தண்ணீரைவடித்து, எடுத்துக்கொண்டு, பூங்கொடி
போல் அசைந்து நவரத்தின மயமாய் விளங்கும் திருக்கோயிலுக்குள்
அடர்ந்திருக்கும் அண்டாக்கள் நிறைய ஊற்றி வைத்தார்கள். சிலர் கா
ந்திவீசும் செம்பொன் மணித்தட்டுகளுடன் கைமணிமுதலிய பூஜாபாத்
திரங்களைச் சுத்திபண்ணிவைத்து, பத்திரபுஷ்பங்கள் எல்லாவற்றையும்
புழுப்பூச்சிகள் இல்லாதபடி ஆய்ந்து எடுத்து நிறைத்து, வாசனையுள்ள
ஏலம்முதலியவைகளைத் திருமஞ்சனத்திற் கலந்து சித்தப்படுத்தி மனம
கிழ்ந்திருந்தார்கள். சிலர் தொங்கும் இயல்பையுடைய பலாப்பழக் குலை
யுடன்பழுத்த வாழைப்பழம், மாம்பழம், நாரத்தம்பழம், மாதுளம்பழம்,
மணம்வீசும் எலுமிச்சம்பழம், தேங்காய், பாக்குப்பழம், முதலியவைகளை
அங்கே நிறைத்துவைக்கும்பொருட்டுக் கையில் ஏந்திக்கொண்டு வந்தா
ர்கள். சிலர் அநேகம் பசுவின் பாற்குடங்களையும் அநேகம் நெய்க்குடங்
களையும் அனேகம் தேன்குடங்களையும் அனேகம் கருப்பஞ்சாற்றுக் குட
ங்களையும், அநேகம் தயிர்க்குடங்களையும், அநேகம் தேவாமிர்தக் குடங்
களையும் விரைவில் கொண்டுவந்து வைத்தார்கள். சிலர் அழகு மிகுந்தி
ருக்கும் சித்திரப்பூம் பட்டாடைகளையும், பலதீவுகளில்விளையும் வெண்
பட்டாடைகளையும், பச்சைப் பட்டாடைகளையும், இந்திரகோபப்பூச்சி
போல் விளங்கும் செம்பட்டாடைகளையும் செம்பொற் பட்டாடைக
ளையும், நீலவர்ணப் பட்டாடைகளையும், பஞ்ச தருக்கள் உதவும் பல
பட்டாடைகளையும் கொண்டுவந்து வைத்தார்கள். சிலர் கற்பகவிருட்ச
த்தினால் கொடுக்கப்பட்ட நவரத்தின முடிகள், குதம்பைகள், பொன்
னாபரணங்கள், பட்டங்கள், இருள் நீங்க விளங்கும் தோளணிகள், மோ
திரங்கள் கடகங்கள், கண்டசரப்பளிகள், ஆரங்கள் முதலியவைகளைக்
கொண்டு விரைந்து வந்தார்கள். சிலர் உலகமெங்கும் மணக்கும்வாச
னையுள்ள சந்தனக்குழம்பில் புனுகுச்சட்டத்தைப் பிழிந்து வார்த்துப்

பச்சைக்கர்ப்பூரத்தைப் பொடித்துச் சேர்த்துக் குங்குமப்பூவைக் கலந்து பொருந்தக் கரைத்து வடித்து எடுத்த விழுது அமைந்த குடங்களை ஏந்திக்கொண்டு விரைந்து வந்தார்கள். சிலர் கண்ணாடி, வெண்சாமரை, சந்திரவட்டக்குடை, விசிறி, விபூதி, கர்ப்பூரம், தூபம், செம்பொன் மணிக்குடம், தட்டுமுதலியவைகளுடன் பூஜைக்கு உரிய மற்றும் பலவற்றையும் சேர்த்துவைத்தார்கள். சிலர் முறுக்காணிகளுடன் வச்சிரத்தொட்டி அமைந்திருக்கும் இன்னிசை வீணையும், பாடும் பாடலும் ஒன்றுபட்டிணங்கப் பண்ணுடன்பாடுங்கள் என்றும், பல வாத்தியங்களை வாசியுங்கள் என்றும், அந்தவாத்தியங்களுக்கு இசைய ஆடுங்கள் என்றும், தேவர்களுக்குக் கட்டளை யிட்டார்கள். இந்தப் பிரகாரம் பணிவிடைகளை யெல்லாம் பாங்கிமார்கள் செய்துகொண்டிருக்க, எம்பெருமாட்டி அந்தமகாமண்டபத்திலிருந்து புறப்பட்டு, ஆவலுடன் உமாபத்திரம் என்னும் கேணிக்குப்போய்ச்சேர்ந்து, அகண்டபரி பூரணனந்தச் சோதிமயமாய் விளங்கும் பரமேசுவரமூர்த்தியின் பாதாரவிந்தங்களைத் தியானித்து, வேதாகம விதி தவறாமல் ஸ்நானம்செய்து, அந்தத்தோழிமார்கள் எடுத்துக்கொடுத்த சீலையால் ஒற்றித்திருமேனி ஈரத்தை மாற்றிச் சித்திரப்பூம் பட்டாடை இரண்டு உடுத்து, பழிபாவங்களைத் தீர்த்தருளும் திருநீற்றைத் தேகமெங்கும் பூசி, நெற்றியில் திரிபுண்டரமாகத் தரித்து, உருத்திராட்சமாலை விரும்பி அணிந்து, நித்தியானுஷ்டானங்களை முடித்துத் தன் நாயகனைப் பூசைசெய்யும் ஆசைமேலிடவும் தாதிமார்கள் வேண்டும்பொருள்களை எடுத்துக்கொண்டு இருபுடையும் சூழ்ந்துவரவும் நடந்து இரண்டாம் ஆவரணத்திற்கு வந்து சேர்ந்தாள். சங்குகளும் ஊதுகொம்புகளும் தாரைகளும் எக்காளங்களும் திருச்சின்னங்களும் வீணைகளும் புள்ளாங்குழல்களும் இசைக்குழல்களும் பேரிகைகளும் முரசங்களும் திண்டிமங்களும் கடல் உடைந்து பெருகினாற்போல் எங்கும் பெருகி முழங்கவும் கின்னரர்களும் கருடர்களும் கிம்புருடர்களும் கீதம்பாடவும் மடமங்கையர்கள் முகம் முகமாய்க் கலந்து கூத்தாடவும், நெருங்கியிருக்கின்ற முனிவர்களும் வேதியர்களும் வேதபாராயணத்துடன் சூழவும், மகாபாரதத்துடன் ஐந்துவேதங்களையும் ஆறு அங்கங்களையும் ஒரு கையிற்கொண்டுவளரும் தெய்வத்தன்மையுள்ள யானைமுகமுடைய விநாயகமூர்த்தியும், கொய்துகட்டிய வாசனையுள்ள கடப்பம் பூமாலை அணிந்திருக்கும் சுப்பிரமணிய சுவாமியும் பரமசந்தோஷத்துடன் வீற்றிருக்கும் அந்தஇடத்தைப்பிரதட்சிணம்செய்துகொண்டுசெல்லவேண்டினவளாய், நிருதிதிசையிலேவிநாயகமூர்த்தியையும்வாயுதிசையிலே வேலாயுதபாணியாகிய சுப்பிரமணிய சுவாமியையும் பூசையால் மகிழும்படி செய்துபோய், நந்திதேவர் காவலாக வாழ்ந்திருக்கும் திரு

வாசலை அடைந்து, துவாரபாலகருக்குச் செய்யவேண்டிய பூசைகளைச் செய்து, மகிமையுள்ள வேதவடிவமாய் வளர்ந்தோங்கும் ஒருமாவடியில் சிறந்து வீற்றிருக்கின்ற திருவேகம்பமுடையவரைத் தன் இரு கண்களும் களிக்கும்படி கண்டமாத்திரத்தில் உண்டான அன்புடன் விழுந்து பணிந்து எழுந்து, குவிந்த மனதுடன் ஸ்ரீ பஞ்சாட்சரங்களை உச்சரித்துச் சிரசின்மேற் குவிந்த கைகளுடன் பேரானந்த வெள்ளம் பெருக, உள்ளே பிரவேசித்து, எம்பெருமான் சமீபத்தில் பலமுறை வணங்கி வாழ்த்தினுள். வாழ்த்துதல் செய்து ஞானமணம் வீசும் ஒருமாவடியிலே அற்புதரசம் பெருகத்தானே தோன்றிய அருளா ரமுதத்தைக் கண்ணாரக் கண்டு, கருத்தார உட்கொண்டு, பலவிதமாகத் துதிசெய்து, எம்பெருமான் பெருங்கருணையையே வியந்து பரமசந்தோஷம் அடைந்து, ஆனந்தக் கண்ணீர்த் தாரைகள் திருமேனி எங்கும் பெருக நெக்குருகி, உரோமம் சிலிர்த்துச், சொற்கள் தடுமாறிப், பேறறிவிற்குரிய தொழில் அமைந்த சிவபூசை செய்யத் தொடங்கினுள்.

சந்திரசேகரா ! படைப்புமுதலான பஞ்சகிர்த்தியங்களையும் பாழ்ப்படுத்திய பாவத்தீமையைப் பரிகரிக்கும்பொருட்டு உன் பூசையை உன்னருளால் இந்நாள் மறவாமற் செய்வேன். திருவருள் சுரந்து உன்பூசைக்கு வரும் இடையூறுகளை நீக்கி முன்னின்று கொண்டருள்க, என்று சங்கற்பம் செய்து கொண்டு, புஷ்பசுத்தி முதல் பூத சுத்தியும் செய்து, மானத பூசை புரிந்து, மணமலரும் வாசனைத்திரவியமும் கலந்த தெண்ணீரால் பாத்தியம், ஆசமனம், அருக்கியங்களைப் பரிசுத்தமாக்கிச் சத்தி ஆதி சத்தி ஈறுகவிளங்க வாய்ந்திருக்கும் ஆசனத்தின்மேல் வீற்றிருக்கின்ற சதாசிவ மூர்த்தியாய் எங்கும் நிறைந்திருக்கும் பரஞ்சோதி ஆனவரும் திருவேகம்பத்தில் திருவிளக்காய் விளங்குகின்றவரும் அடி நடு முடி இல்லாமல், எங்கும் வியாபித்திருக்கின்ற அகண்ட பரிபூரண நிமல நித்தியானந்தச் செல்வரும், ஆகிய ஏகாம்பர நாதனை, அஞ்ஞான இருளைப்பிளந்து எறியவல்லமெய்ஞ்ஞானக் கண்ணுல் கண்டு, தெளிந்து, துதிசெய்து, பாதங்களில் பாத்தியமும், திருமுகத்தில் ஆசமனமும், திருமுடியில் அருக்கியமும் கொடுத்து, மதுபருக்கம் அளித்துச், சிவாகமவிதிப்படி மறுபடியும் ஆசமனம் கொடுத்து, நெய்யும் பாலும் கலந்து சமைக்கப்பட்ட திருவமுதளித்து, திரு எண்ணெய்க்காப்பும், திருநெல்லிக்காப்பும், திருமஞ்சட்காப்பும் இட்டுப் பஞ்சகவ்வியத்தாலும், பஞ்சாமிர்தத்தாலும், பல குடங்களில் நிறைந்திருக்கும் பாலாலும், தயிராலும், நெய்யாலும், தேனுலும், இளநீராலும் அபிஷேகம் செய்தும், கரும்பின் இரசத்தால் அபிஷேகஞ்செய்தும்,பல கனிவகைகளால் அபிஷேகம்செய்தும்,

சந்தனாபிஷேகம் செய்தும், கீர்த்திமதி என்னும் தோழிமணங்கமழ எடுத்த கேணியின் தெண்ணீரால், உருத்திர மந்திரத்தைச்சொல்லி விதிப்படி பூரணாபிஷேகம் செய்தும், மெல்லிய நூல் ஆடை எடுத்துத் திருமேனியை மெத்சென்று ஒற்றித் தேவர்களும் விரும்பத்தகுந்த செம்பட்டாடையும், வெண்பூணூலும் சாத்தியும், பூஷண வர்க்கங்களையும்; பூமாலைகளையும் சாத்தியும், தூப தீபம் காட்டி, அறுசுவை அமைந்திருக்கும் நால்வகை உண்டிகளைத் திருவமுது செய்வித்துச், சீதளசலம் கொண்டு திருக்கைகளையும் செம்பவளத் திருவாயையும் பூசி, மந்திரம் சொல்லித் தாம்பூலமும், தக்கோலமும் அளித்துத்; தூப தீபங்களை எல்லாம் முறையாகக் காட்டி, மனமகிழ்ந்து, திருஷ்டிபரிகாரமான ஆரதி (ஆலாத்தி) சுற்றிப், பலமுறை பிரதட்சிணம்பண்ணி, வணங்கி, வாழ்த்தி மனதினிடமாக மாறாதிருக்கும் ஸ்ரீ பஞ்சாட்சரங்களைக் கணித்து, இவை போல்வன வெல்லாம் செய்து, பேரன்புடன்செய்யத்தொடங்கிய பூசையைப் பூர்த்திசெய்தாள்.

சிற்றிடையையுடைய எம்பெருமாட்டி செய்யத்தொடங்கிய சிவபூசையை முடித்து, விடைபெற்று, மீண்டு, சோதிமயமாய் விளங்கும் பரவெளிப்பிலத்தின் அருகில் அமர்ந்தருளிப் பெருங் கருணையுடன் முப்பத்திரண்டு தருமங்களும் தழைக்க வளர்ப்பவளாகித் திரிபுரங்களைச் சிரித்து எரித்தருளிய திருவேகம்பனை இவ்வண்ணம் நெடுங்காலம் பூசைசெய்து வாழும் நாட்களில் ஒருநாள் அவ்வண்ணம் பூசைசெய்யும் ஆசை மேன்மேலும் வளர்ந்து ஓங்கியதனால் வேதாகமவிதி தவறாமல் பூசைசெய்து கொண்டிருக்கையில் எம்பெருமாட்டிக்கு நேரிட்டதைச்சொல்லுகிறேன் கேளுங்கள்.

முன்போல் கம்பைநதியில் நீராடித் திருமேனியில் திருக்கண்மணி மாலையும் திருநீறும் தரித்து, நித்தியானுஷ்டானத்தை முடித்துச் சிவபணிவிடைகளில் சிறிதும் தவறாமற்செய்து, சிவபூசைசெய்யத்தொடங்கிச் சிவநேசம் மிகுந்து, திருவேகம்பருக்குத் திருமஞ்சனநீராட்டும்போது, ஞானமணம்வீசப் பூத்திருக்கின்ற ஒரு மாவடியில் வாழ்ந்தருளும் பெருமானார் கருணைமிகுந்த ஒருதிருவிளையாட்டால் எம்பெருமாட்டியின் பத்திவைராக்கிய விசித்திரத்தைச் சோதித்து அறிந்து, அநுக்கிரகம் செய்யநினைந்து, இதைத் திருவுளம் செய்தருளினார். பலகோடி அண்டங்களின் உள்ளும் புறமும் கலந்துகிடக்கும் தீர்த்தங்கள் எல்லாம் ஒருமிக்கச்சேர்ந்துவர நினைத்தார். நினைத்தமாத்திரத்தில் அந்தத் தீர்த்தங்கள் எல்லாம் கம்பைநதியுடன் கலந்து யுகாந்தகால்வெள்ளம் புறப்பட்டு வருவதுபோல்பு

றப்பட்டு வந்தன. அண்டத்தில் அடர்ந்திருக்கும் தேவர்களும் அஷ்ட திக்குப்பாலகர்களும் பூலோகத்தாரும் கண்டு, யுகம் முடியும்நாள் வந்துவிட்டது என்று பயந்து, கூச்சலிட்டழும் கண்ணீர்கள் உபநதிகளாய்வந்து கலக்க, அதிகவேகத்துடன் எவ்வுலகத்திலும் உள்ள நீர்களுடன் ஒன்றுபட்டிருக்கும் கம்பைநதிபெருகிவரத்தொடங்கியது. மேகசாலங்களும் அந்த மேகசாலத்தின்நடுநடுவேவிட்டுவிட்டுப்பிரகாசிக்கும் மாலைபோல்விளங்கும் நட்சத்திரங்களும்மெல்லியபச்சிலைகளையும் அவ்விலைகளின் இடை இடையேபூத்திருக்கும்புஷ்பங்களையும் போன்று விளங்க, ஆகாயத்தையும் அளாவும்படிமேல் ஓங்கிக்கண்டோர்யாவரும் கலங்கப்பெருகிவராநின்றது. இவ்வண்ணம்விரைந்து ஓடிவரும் வெள்ளமானதுபூர்வம்வராகமாய் அடிதேடிச்சென்ற திருமாலைப்போல் பூமியைப்பெயர்க்கும். அன்னமாய்முடிதேடிச்சென்ற திசைமுகனைப்போல், ஆகாயத்தில் தாவிச்செல்ல விரையும். மகா பராக்கிரமசாலிகளான இவ்விருவர் எதிரில் அக்கினிமயமாய்த்தோன்றிய எமது இறைவன்போல் கீழுலகத்திலும் மேலுலகத்திலும் நிலைபெற்றிருக்கும். வாழைப்பழம்,பலாப்பழம், மாம்பழம்,தென்னம்பழம்,அகில் குங்குமம், சந்தனம், புஷ்பம், தேன், கரும்புத்துண்டுமுதல்இவைபோல்வனவற்றை வாரிக்கொண்டு வருவதனால், பார்வதிதேவி ஆகமவிதிப்படிசெய்யும்பூசைக்கு வேண்டும்பொருள்களை ஏந்திக்கொண்டுவிரைந்துவருகின்ற தோழிமார்களைநிகர்க்கும். இரண்டு பக்கங்களிலும்மணிதங்கிய (முழங்கும் மணிகள்தங்க, நவமணிகள் தங்கிய) இருகோடுகளை (இரண்டு தந்தங்களை இருகரைகளை) தனக்கு உரிமையாகக்கொண்டு எதற்கும் அஞ்சாத ஆண்மையுள்ளவர்களும் அஞ்சி அவலமடையும்படி ஆரவாரம்செய்து, ஏலவார் குழலியாகிய எம்பெருமாட்டி பயமடைய வருதலால் கம்பைநதியானது பூர்வம் எம்பெருமானை எதிர்த்த யானையையும் ஒக்கும், மலைவளங்களான சந்தனமரம் குங்குமமரம் தேன் முதலிய திரவியங்களையும் பலமணிகளையும் வாரிக்கொண்டு பெருகி அலைவீசி ஆரவாரம்செய்து பூரித்து ஆகாயமெல்லாம் மறையமூடி அடர்ந்து மேற்பட்டுவரும் வெள்ளத்தை மலையரசன்பெற்றெடுத்த பூரணசந்திரனைப்போலும் திருமுகத்தையுடைய பிராட்டி கண்டமாத்திரத்தில மனந்திடுக்கிட்டுக் கலங்கினள்.

இருபக்கங்களில் சூழ்ந்திருக்கும் தோழிமார்களும் இதில் அடையத் தடையில்லாமல் வருகின்றவெள்ளத்தை எதிர் நோக்கிப்பார்த்துக் கடல் பொங்கிப் பெருகினற்போல் இந்த வெள்ளம் சிவைபூசை நடுவில் திடீர் என்று வந்த காரணம் என்ன? என்று எண்ணி, என்னுடையகுற்றத்தால், யான்செய்யும் பூசைக்கு இடையூறாக இந்தவெள்ளம் வந்ததுபோலும்,

என்று மனவருத்தப்பட்டுச் சந்திரசேகரனுகிய சிவபெருமானுடைய சீர் பாதகமலங்களைத் தியானம் செய்வதற்குமுன் அந்தப் பெருவெள்ளம் விரைந்து மிகச் சமீபமாக வந்துவிட்டது. ஆகவே அவலமடைந்து அதைப்பார்த்துப் பயந்து நடுங்கி ஆ! ஆ! ஆகாயத்தை அளாவிவரும் இந்தப் பெருவெள்ளம் எம்பெருமான்மேல் வந்துவிடுமே! இனி என்னசெய்யலாம் என்று திகைத்து, அவரிடத்தில் வைத்திருக்கும் சத்தியபத்தி தழைத்தோங்கும் மனதுடன் மாற்றுயர்ந்த பசும்பொன்மேனி எங்கும் நடுக்கம் அடையவும், திலதப்பொட் டணிந்திருக்கும் நெற்றிநிரம்பச் சிறுவியர்வைத்துளிகள் தோன்றவும், தாமரை அரும்புபோலும் தனங்களின்மேல் தங்கிய முத்துமாலைகள் ஆடவும், சிற்றிடையானது மிகவருந்தி முறிந்துபோகும் என்று சொல்லும்படி துவண்டு வாடவும், கூந்தலில் முடித்திருக்கும் மணமலர்த்தேனில் முழுகிக் கிடக்கும் வண்டுகள் முழங்கவும், இடையில் சூழ்ந்திருக்கும் மேகலாபரணம் கலகலவென்று ஒலிக்கவும், செம்பொற்சோதிவீசும் கிண்கிணிகளும்சிலம்புகளும் கல்கலவென்று கலிக்கவும், செம்பொற்கடகம் அணிந்திருக்கும் கைவளையல்கள் கலகலவென்று சத்திக்கவும், ஒரு பூங்கொடி தோன்றி, இருபக்கத்திலும் இரண்டு கொழுந்துவிட்டுச் செம்பொன் மலைச் சிகரத்தைத் தழுவிக்கொண்டதுபோல், மரதகமணிப் பாவைபோன்ற பிராட்டியானவள் விரைந்து எழுந்து நறுமணம் வீசும் வேதிமேல், தன் வலப்பக்கத்து முழந்தாளை ஊன்றவைத்துத் தன் கணவனைத் தன் இருகைகளாலும் இறுகக்கட்டித் தழுவிக்கொண்டாள்.

மணிமலைபோலும் கொங்கையாலும் வளையலை அணிந்திருக்கும் செங்கையாலும் இறுக்கிக் கட்டித் தீராக்காதல் பெருகத் தேவி தழுவிக்கொண்டமாத்திரத்தில், ஐயர் அஞ்ஞான இருளை அகற்றும் தமது அற்புத ஆனந்தச்சோதித் திருமேனியில் செங்கைவளைத் தழும்பும் கொங்கைத்தழும்பும் கொண்டு குழைந்து காட்டினர். உடம்பெல்லாம் வற்றி வற்றல்மரம்போல் நின்று மாதவம்செய்து, வேதாகம சாஸ்திர புராணங்களைக் கசடறக் கற்றுணர்ந்தவர் உணர்வையும் கடந்த ஆனந்தப்பெருஞ்சோதிமயமான எமது ஐயன் திருமேனியானது சிற்றிடையையும் தொழில்முற்றிய ஆபரணங்களையும் உடைய தேவி செங்கைவளைத்தழும்பும், கொங்கைத் தழும்பும் கொள்ளப் பெற்றது ஆ! என்ன அற்புதம்? உருவம், அருவம்,அணு, மலை, உள்ளது, இல்லது, இருள், ஒளி, முதலிய ஒன்றும் அல்லாமல் எங்கும்வியாபித்திருக்கும் ஆனந்தப் பெருஞ்சோதிமயமான எமது ஐயன் திருமேனியானது வாசனைமலர்சூடிய கூந்தலையுடைய தேவியின் செங்கைவளைத் தழும்பும் கொங்கைத்தழும்பும் கொள்ளப்பெற்றது ஆ! என்ன

ஆச்சரியம்? பெருவிரல் அளவாய் மனதினிடமாக வாழ்ந்திருந்து, அண்டரண்ட சராசரங்கள் எல்லாம் ஆடாமல் ஆட்டுவிக்கும் ஆனந்தப் பெருஞ்சோதிமயமான எமது ஐயன் திருமேனியானது பெருங்கருணையையும் சிறு புன்னகையையும் உடைய தேவியின் செங்கைவளைத்தழும்பும் கொங்கைத்தழும்பும் கொள்ளப்பெற்றது ஆ! என்ன ஆச்சரியம்? இரேசக பூரக வாயுக்களை ஒடுக்கித் தூங்காமல் தூங்கவல்ல சிவயோகியர் தமது மெய்ஞ்ஞானக்கண்ணால் கண்டு களிக்கும் ஆனந்தப் பெருஞ்சோதிமயமான எமது ஐயன் திருமேனியானது பெண் குயில்போல மதுரமாக வசனிக்கும் தேவியின் செங்கைவளைத்தழும்பும் கொங்கைத் தழும்பும் கொள்ளப்பெற்றது ஆ! என்ன அற்புதம்?

எந்நாளும் ஒருதன்மையராய் நினைப்பு மறப்பு அற்று ஆத்மசொரூபத்தில் அழுந்திநிற்கும் ஞானிகளுடைய அன்பிற்கு எளியவராய் ஆனந்தப்பெருஞ்சோதிமயமாய் விளங்கும் என் அப்பன்திருமேனியானது மெல்லிய தளிர்போலும் சிறு சேவடிகளையுடைய தேவியின் செங்கைவளைத்தழும்பும் கொங்கைத்தழும்பும் கொள்ளப்பெற்றது ஆ! என்ன ஆச்சரியம்? மனதினால் தன் திருவடியை நினைத்தமாத்திரத்தில் நினைத்தவருடைய வினைப்பெரும்பிறவிகளை வேரறவீசும் ஆனந்தப் பெருஞ்சோதிமயமான எமது ஐயன் திருமேனியானது சகலலோக மாதாவாகிய தேவியின் செங்கைவளைத் தழும்பும் கொங்கைத் தழும்பும் கொள்ளப் பெற்றது ஆ! என்ன அற்புதம்? செம்பொன்மலையை வில்லாக வளைத்த செம்பவளமலையானது ஆதி அந்தம் இல்லாத வேதமாவடியில் ஒரு பூங்கொடியின் செங்கைவளைக்கும் கொங்கைக்கும் குழைந்து மெலிந்துபோனது மகா ஆச்சரியம்.

திருவேகம்பமுடையவர் தமது திருமேனியில் செங்கைவளைத்தழும்பும் கொங்கைவளைத் தழும்பும் கொண்டு கருணைமிகுந்து பரமானந்தம் அடைந்தமாத்திரத்தில் விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலும் உள்ள உயிர்கள் எல்லாம்பெருமகிழ்ச்சி அடைந்தன. மண்ணுலகமும் விண்ணுலகமும் மாசில்லாமல் பிரகாசிக்கப்பெற்றன. எண்ணிறந்த வாத்தியங்கள் முழங்கின. தென்றற் காற்றானது புதியவாசனையுடன் மெள்ளத் தவழ்ந்தது. கடல்சூழ்ந்த உலகமெங்கும் தூளிதம் அடங்கியது. ஓமாக்கினியானது வலத்தில் சுழித்து எழுந்து ஓங்கி ஒளிவீசியது. சுவர்ணபுஷ்பமாரி இடையறாமற் பொழிந்தது. பல சந்தங்களை யுடைய வேதங்கள் எல்லாம் தனித்தனியே மகிழ்ந்து எழுந்து முழங்கின. சகலலோகமும் மயக்கத்தால் வருந்துதல் இன்றிமகிழ்ச்சி அடைந்தன.

எவ்விடத்திலும் இந்தப் பிரகாரம் நடக்கும்போது மும்மதங்களையுடைய வெள்ளையானைக்குரிய தேவேந்திரன் முதலான தேவர்கள் அசுரர்கள் எல்லாரும் தங்கள் தங்கள் பத்தினிமார்களுடன் விரைந்து பரமசந்தோஷத்துடன் அங்கேவந்து சேர்ந்தார்கள். தாமரைப்பூம் பொகுட்டில் வீற்றிருக்கும் சதுமுகனும் சீதளவாசத் துளசிமாலைசூடிய திருமாலும் வெண்டாமரை செந்தாமரை மலர்களில் வசிக்கும் சரசுவதியையும் இலட்சுமியையும், அழைத்துக்கொண்டு, இந்தநாள் எங்களுக்குப் பேரின்பம் கிடைத்தது என்று மகிழ்ந்து வந்தார்கள். புகழ்பெற்றோங்கும் நாரதமுனிவர் முதலான தேவரிஷிகளும், வசிஷ்டர் முதலான பிரமரிஷிகளும் அளவில்லாத சந்தோஷத்துடன் கூட்டம் கூட்டமாய்க் கைமேல் திரிதண்டம் முதலியதண்டங்களும் சடைகளும் விளங்க வந்து சேர்ந்தார்கள். பலசத்திகள், திதி, அதிதி, தக்கன்பெற்ற பெண்கள், யோகினிகள், அருந்ததி, உலோபாமுத்திரை, அனசூயை முதலான ஸ்திரீஜனங்கள் எல்லாரும் வந்து சேர்ந்தார்கள். சனகன், சனற்குமாரன், சனந்தரன், சனாதரன் முதலான நால்வர்கள், அகஸ்தியமுனிவர், துருவாசமுனிவர், உபமன்னியர், வீராதிவீரராகிய பூதகணங்கள், உருத்திரர்கள், கணாதிபர்கள், திருநந்திதேவர் முதலிய யாவரும் அங்கே ஒருமிக்க வந்து சேர்ந்தார்கள். எல்லாரும் வந்து சேர்ந்து எம்பெருமாட்டி தழுவக் குழைந்தருளிய ஏகாம்பரநாதருடைய அற்புதச்சோதி யானந்தத் திருமேனியை இடையறாமல் கண்டு ஹர ஹர ஜய ஜய என்று ஆரவாரம் செய்து, பரமானந்தக்கடலில் விழுந்து புரண்டு அலைந்து, இருகண்ணாலும் பெறுதற்குரிய பெரும்பேறு பெற்று, மலர்போல் மலர்ந்திருக்கும் கண்கள் ஆனந்தபாஷ்பம் பொழிய அழுது, தேகமெங்கும் பெருகிய அன்பினாற் புளகம் அடைந்து, இரும்புண்ட நீர்போற் கலந்தவர்களாகி, எம்பெருமானுடைய திருவருட் பெருங்கருணைத் திறத்தையே எண்ணி, ஐம்புலன்களும் ஆனந்தத்தில் அழுந்தச் சிரசின்மேல் கைகூப்பிக்கொண்டு, ஆயிரம் சூரியர்போல் பிரகாசிக்கும் சக்கரம் ஏந்திய விஷ்ணுவும், பிரமதேவனும் இந்த அற்புதக்காட்சியைக் காண்பதற்கு நாங்கள் ஆயிரம் கண்கள் பெற்றிலோம் என்று வருத்தப்பட்டார்கள்.

தேகமெல்லாம் ஆயிரம் கண்பெற்றிருக்கும் தேவேந்திரனும் ஆயிரம் கண்ணும் போதாது என்று சொல்லினன். இந்தப் பிரகாரம் சொல்லி எல்லாரும் விழுந்து தொழுது எழுந்து ஆனந்தக் கூத்தாடி, எழுகடல்முழக்கம்போல் முழங்கித் துதிசெய்து வாழ்த்தினார்கள். அப்பொழுது அவர்களுக்கு உண்டான பேரானந்தத்தைக் கொன்றைசூடிநின்ற தெய்

வமே அறியும். அல்லாமல் மற்று அறிந்துகொள்ள வல்லவர் யாவர்? அந்த வேளையில் பிரம விஷ்ணு ருத்திரர் என்னும் மும்மூர்த்திகளுக்கும் காண்பதற்கு அருமையான பரமசிவம் சுந்தரப் பெருஞ்சோதி லிங்கத்திலிருந்து தேவியின் செங்கைவளைத்தழும்பும் களபச்சந்தனக் கொங்கைத் தழும்பும் படிந்திருக்கும் அற்புதத்திருமேனி விளங்கத் தோன்றினார், சுந்தரப்பெருஞ்சோதி லிங்கத்திலிருந்து தோன்றி, சந்திர கிரணம்பொழியும் சிறு நகை காட்டி, மிக்க விரைவுடன் வரும் வெள்ளத்தைச் சர்வ தீர்த்தம் என்னும் பெயரால் சிறந்து விளங்க நிறுத்தி, எம் பெருமாட்டியைத் தழுவிப் பேரவாவுடன் செம்பவளத் திருவாய் முத்தம் உண்டருளி, கலாபமயில்போலும் சாயலையுடையாளே ! நீ மனம் துடிக்கப் பயப்படாதே. எம்மைத் தழுவிக்கொண்டதனால் யாம் பரம சந்தோஷம் அடைந்தோம் பார் என்று சொல்லுதலும், ஏகநாயகியானவள் தன்மணவாளனுடைய அற்புதத் திருமேனியை இரு கண்களும் களிக்கக்கண்டு தான் இறுகத்தழுவிய கைகளைவிட்டு எழுந்து, பூமியில் தாழ்ந்து, அன்புமிகுந்து அஞ்சலிசெய்து, மாசில்லாமல் விளங்கும் மாணிக்கச் சோதித் திருமேனியைக் காணுந்தோறும் கங்குகரைகாணாமற் பெருகிவரும் பரமானந்தக் கடலில்படிந்து சிவானந்தபோகத்தை அநுபவித்தாள்.

நெடியவனும் பிரமனும் காணாதநிமலஞானக்கொழுந்தே ! சரணம் அடியேனுக்கு அபயம் கொடுத்தருளிய அருட்பெருங்கடலே ! சரணம். பூமிமுதல் முப்பத்தாறு தத்துவங்களாகி, அவைகளுக்கு வேறாய் விளங்கும் பரமனே! சரணம். ஞானமணம் வீசும் ஒருமாவடியில் வீற்றிருக்கும் தெய்வமே ! சரணம் சரணம். அடியேன் இதுகாறும் யாரும்பெறாத பேறுபெற்றேன் சரணம். அணியணியாக அண்டரண்ட சராசரங்களை எல்லாம் படைத்துக் காத்து அழிப்பவனே ! சரணம். பொன்னம்பலத்திலே வீரகண்டை முழங்கப் பஞ்சகிர்த்தியத்தாண்டவம்செய்யும் ஆண்டவனே ! சரணம். நிறைந்திருக்கும் மலர்மணம் வீசும் ஒருமாவடியில் வாழ்ந்திருக்கும் நித்தனே! சரணம் சரணம். நிலம், நீர், தீ, காறறு, ஆகாசம் இந்து, இரவி, இயமானன் என்னும் எட்டுருவம் உடையானே! சரணம் சரணம். சோம சூரியாக்கினி என்னும் திரிநேத்திரங்களையுடையானே! சரணம் சரணம். ஞானமணம் வீசப்பூத்திருக்கும் ஒருமாவடியில் வாழ்ந்திருக்கும் ஞானமூர்த்தியே! சரணம். நீலகண்டப்பெருமானே! சரணம். கண்மணியே ! சரணம். மறந்தாயினும் வந்தனை வழிபாடு செய்பவர்களுக்கும் பேரருள் வழங்குபவனே ! சரணம். வேதவடிவாய் விளங்கும் சூதவிருட்சத்தின் அடியில் வாழ்ந்திருக்கும் வள்ளலே! சரணம். சரணம்.

முந்திப்பிறந்த பொருள்களுக்கெல்லாம் முந்தியிருக்கும் பழையோனே! சரணம். பிந்திப்பிறக்கும் பொருள்களுக்கெல்லாம் பிந்திப்பிறக்கும் புதியோனே! சரணம். அவிவேகமுடையவர்களால் அறியவொண்ணாத அகண்டபூரணனே! சரணம். சின்மயமான திருவேகம்பனே! சிவ சிவபோற்றி போற்றி. என்று மனம் தளர்ந்து எல்லையில்லாத அன்புடையவளாய் மணம் வீசும் மலர் சூடிய கூந்தலையுடைய தேவிபோற்றுதல்செய்ய, எம்பெருமான் திருவருள் சுரந்து மிகுந்த நேசத்துடன்இது சொல்லினார். சுகந்த களபகஸ்தூரி அணிந்திருக்கும் சுந்தரகுஜங்களை யுடையாளே! காளி! யாம் சொல்வதை நீ மகிழ்ந்து கேள்.

பூர்வம் இவ்விடத்தில் நீ எமது உருவத்திலிருந்து எல்லாரும் வணங்கி வாழ்த்தும்படி தோன்றி, அண்டங்களையும் பிரமதேவன் முதல்சகலரையும் படைத்தாய். மற்றொரு கற்பத்திலே எம்மை விட்டுப் பிரிந்து ஞானசத்தியாய்த்தோன்றிப் பிரமதேவனுக்கு அநுக்கிரகம்செய்து சிருஷ்டிக்கும் திறம் அளித்துப் பிரமதேவன் மகனாகிய தக்கன் புத்திரியாகி, அவன் பழித்தபடியால் அவனைவிட்டு நீங்கி, மலையரசன் மகளாகி அன்பு மிகுந்து மறுபடியும் எம்மை திருக்கல்யாணம் செய்துகொண்டாய். ஏலவார்குழலியே! இத்தன்மையான நீ உலகமெல்லாம் உய்யும்பொருட்டு யாம் மந்தரமலைமேல் கட்டளையிட்டபடியே இப்பொழுது பிராயச்சித்தம் செய்துகொண்டாய். உன் விருப்பம் யாது? சொல் என, ஒப்பில்லாதோங்கும் ரிஷபவாகனமுடையானே! இந்தக் காஞ்சிமாநகரமானது மந்தரமலையைப் பார்க்கிலும் சிவலோகத்தைப்பார்க்கிலும் சிறந்து விளங்கி என்றும் நமக்குப் பிரியமானதாம். ஆதலால் இங்கேவசிப்பவர்கள் எல்லாரும் இன்பமுத்தி அடையக் கட்டளை கொடுத்தருள்க. மறந்தாயினும்தருமங்களைப்பிறழவிடாதோங்கும் காஞ்சிமாநகரத்திலே ஒருவர் அறிந்துசெய்த பாவமும் அறியாமற்செய்த பாவமும் அணுகாமலிருக்கவும் செய்த தபோபலன் ஒன்று பலவாகித் தழைத்து அறம் பொருள் இன்பம் முதலிய எல்லாம் அடையவும் நீ கருணை செய்க. எம்பெருமானே! எனக்கு வேண்டும் வரங்கள் இவையென்று பெருங்கருணைநாயகி வேண்டிய மாத்திரத்தில் சங்கக்குழை அணியும் சங்கரன் திருவுள மகிழ்ந்து, அழகு ஒழுகும் திருமேனியுடையாளே! இது கேள் என்று சொல்லுகின்றார். அம்பு தொடுக்கப்பெறும் வில்லைப்போலும் நெடிய புருவங்களையும் முத்துவடமேந்திய புத்தமுத கலசத்தையும் உடையாளே! எம்மிடத்திலும் எமது அடியவரிடத்திலும் பொருந்தச்செய்த குற்றமே அல்லாமல், மற்றத் தீவினைகளும் செல்வம் மிகுந் தோங்கும் காஞ்சிமாநகரத்தில் தேய்ந்து மாய்ந்து, செய்யும் தவம் ஒன்று பலவாகித் த

ழைத்து, அறம் பொருள் இன்பம்வீடு என்னும் நான்கு பிரயோசனங்களை யும் அடைய, ஏற்படுத்தினோம். இன்னும் உனக்குவேண்டியவரம் யாது ? என்று கேட்டலும் தேசுமயமாய் விளங்கும் திருமேனியையுடைய தேவி யானவள் முன் நின்று தொழுது துதித்து இளநகையுடன் முகமலர்ந்து சொல்லத் தொடங்கினாள்.

சந்திரனைத் தரித்திருக்கும் சடைமுடியுடையவனே! செம்பொற் சிக ரங்களையுடைய மந்தரகிரிமேல் முன்பு என்னைக் காளீ ! என்று புதுமையா கப் பெயரிட்டு அழைத்தாய். அப்பொழுது அதைக்கேட்டதும் கேளாத தும்போல் இருந்துவிட்டேன். இப்பொழுதும் அப்படியே அழைத்தருளி னாய். இது எனக்கு மிக வெட்கமாயிருக்கின்றது. ஆதலின் இந்தப்பெய ரை மாற்றிக் கவுர நிறம் பெற்றுக்கொள்ளத் திருவருள் செய்க என்றாள். பெருமான் அதைக்கேட்டுத் திருமுகத்தில் புன்னகை தோன்றச் சொல் லுகின்றார். பெண்ணரசியே ! மிக்க பராக்கிரமசாலிகளாகிய அசுரர்களால் இந்த வுலகம் வருத்தமடைந்தது. வருத்தமடைந்த உயிர்கள் எல்லாம் மகி ழ்ந்து வாழ்வதற்கு எண்ணி இப்பொழுதும் அப்படியே அழைத்தோம். இ ந்தக் கருநிறக்கோசத்தை ( சட்டையை ) இந்தக்ஷணமே நீக்கி நீ விரும்பி யபடி கவுரநிறம் பெறுவாய். நீக்கப்பட்ட அந்தக்கோசத்திலிருந்து யமன் போல் கொடுமையுள்ள சும்பனையும், நிசும்பனையும் கொல்லும் பொருட் டாக மகா பராக்கிரமசாலியான துர்க்கை இனிப்பிறப்பாள் - இதோ பார் என்று திருவுளம் பற்றினார். செம்பொன்வளையலை அணிந்திருக்கும் தேவி யும் அந்தக்ஷணமே பாம்பின் தோல்போல் கருமேனியை மாற்றிக் கவுர மேனிபெற்றுத் தன் நாயகனை வணங்கிச் சொல்லுகின்றாள். நாதனே ! உன் அருளால் இப்பொழுது காளநிறத்தைமாற்றிக் காதல் விளைக்கும் கவு ரி என்று விளங்கினேன். ஆதலால் மந்தரகிரியில் நடந்தாற்போல் தேவர் கள் எல்லாரும் சூழ்ந்திருக்கும் இந்தக் காஞ்சிமாநகரத்தில் இந்த நாள் நம க்குத் திருக்கல்யாணம் உண்டாக விரும்புகின்றேன். உருத்திரர்கள், கண நாதர்கள், தேவகணங்கள், கருடவாகனனாகிய திருமால், வாசனையுள்ள தா மரைப்பூவில் வாழ்ந்திருக்கும் சதுமுகன், ஐம்புலன்களை அடக்கிய முனிவர் கள் மற்வர்கள் எல்லாரும் மனமகிழ்ச்சியுண்டாகத் தங்கள் தங்கள் பத்தினி மார்களுடன் எம்மைக் கண்ணுற்காணும் ஆசைகொண்டு ஒருமிக்க இங்கே வந்து இருக்கின்றார்கள். திருவருள் செய்வாய் என்று பின்னும் வேண்டுகின் றாள். எம்பெருமானே ! இந்தத்திருக்கல்யாணம் கவுரி கல்யாணம் என்று உலகத்தில் வழங்கவேண்டும். ஐந்துவயதுள்ள சிறுபெண்ணாக யான் இங் கே விளங்கியபடியால் கடல் சூழ்ந்த உலகத்திலே ஐந்துவயது படைத்த

பெண்கள் எல்லாருங்கவுரியர் என்று ஆகவேண்டும். நீலகண்டப்பெருமானே ! ஐந்துவயதுற்ற கன்னியைச் சைவசமயாசார வேதியருக்குக் கன்னிகாதானமாகக் கல்யாணம்செய்து கொடுப்பவர்களுடைய குலத்திற் பிறந்தவர்களும் சிவலோகத்திலே சாரூபபதவி பெறவும் வேண்டும். என்று தொழுது வணங்குதலும் காமனை நீறுக்கிய கடவுள் திருவுளம் செய்தருளிப் பெருங்கருணை கூர்ந்து சொல்லுகின்றார். செல்வத் திருக்காஞ்சியில் வருஷந்தோறும் பங்குனி உத்திரத்தில் யாவருக்கும் ஆசைதரும் திருவிழாநடந்து முடிவில் நமக்குத் திருக்கல்யாணம் நடக்கும் நீ காண் என்று பூர்வம் அகஸ்தியமுனிவருக்கு அநுக்கிரகம் செய்திருக்கின்றேம். அதனால் பாவத்தை வேரறப்போக்கும் பரவெளிப்பிலத்தின் அயலில் வருஷந்தோறும் நமக்குத் திருக்கல்யாணம்நடப்பதாக. திருக்கல்யாண மண்டபத்தில் உனக்குரிய பணிவிடைகள் எல்லாம் சைவப் பிராமணப் பெண்கள் செய்யக்கடவர். மற்றெல்லாரும் இதைக்கண்டு களிப்படையக்கடவர். இன்னும் உனக்கு வருஷந்தோறும் நல்லறங்களை வளர்ப்பதற்கு மூலமாக இருநாழிநெல் அளிப்போம், அந்தநெல்லாலேஇகபரத்தில் உள்ள உயிர்களாகியபயிர்கள்தழைக என்று ஏற்பாடுசெய்தார். அவ்வண்ணம் பெறுதற்கரியபெருவரங்களைக் கொடுத்தருளிச் சகல லோகங்களையும் பெற்றெடுத்த தேவியின் திருவுள்ளக்கருத்து நிறைவேறவும் பொதியமலையில் வாழ்ந்திருக்கும் அகஸ்தியமுனிவருடைய தபோபலம் நிறைவேறவும் செம்பொற்சோதிமயமான திருவேகம்பமுடையவர் கவுரி திருக்கல்யாணத்தின்மேல் திருவுளம் வைத்தருளினார்.

தழுவக்குழைந்தார் சரணமேசரணம்.

---

## ஐம்பத்தேழாவது
## திருமணப்படலம்.

சிவானந்தச் செல்வர்களே ! ஆகாயத்தை அளாவும்படி ஓங்கிய ஒரு மாவடியில் தானே முளைத்தெழுந்த சதாசிவமூர்த்தியின் ஆனந்தப்பெருஞ்சோதிமயமான அருமைத்திருமேனியை மேன்மேற் பெருகும் அன்புடன் காமாட்சிதேவி தழுவக்குழைந்தருளியது சொன்னேம். இனிக்கண்களிக்கக் கண்டவர்கள் ஆணவம் முதலான மலச்செருக்கை அகற்றி, அனந்தானந்தப் பெருஞ்செல்வம் அடையக் கருணைபொழியும் கவுரிதிருக்கல்யாணப்பெருமைசொல்வோம், கேளுங்கள், என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

திருவேகம்பத்திற் சிறந்து வீற்றிருக்கும் தேவாதிதேவனாகிய சிவபெருமான், தன்பக்கத்தில் நின்றுகொண்டிருந்த மாயவன்முகத்தைப்பார்த்து, காமாட்சிக்கும் எமக்கும் வேதாகமவிதிப்படி திருக்கலியாண மகோற்சவத்திருநாள் விளங்கச் செய்க என்று கட்டளையிட்டருளினார். இருபக்கத்திலும், எண்ணிறந்தவர்கள் நின்றுகொண்டிருக்க, அவர்களில் ஒருவருக்கும் கட்டளையிடாமல் தன்னைப்பார்த்துக் கட்டளையிட்டருளிய பெருங்கருணையைத் தன் கருத்திற்கொண்டு, பகைவர்கள் பயப்படும் நிகரில்லாத சக்கரமேந்திய திருமால், பரமசந்தோஷம் அடைந்து, ஆண்டான் சொல்வழியில் நின்று, திருக்கல்யாணத்திற்கு உரியதொழிலில் முயன்று, அதற்குவேண்டும் பொருள்கள் அனைத்தையும் விரைந்து கொண்டுவாருங்கள் என்று தேவர்களுக்கு விடைகொடுத்தனுப்பிச் செங்கைவளைத் தழும்பு கொண்டருளிய திருவேகம்பருக்கும், கலாபமயில்போலும் காமாட்சிதேவிக்கும் பங்குனி உத்திரத்திருவிழாமுடிவில் திருக்கல்யாணம் என்று நகரத்தில் எல்லாரும் அறியப்பறை அறைவித்துக்கொடிகட்டி ஓங்கும் மாடமாளிகைகளையும் திருக்கல்யாண மண்டபங்களையும் அலங்கரிக்கும்படி தெய்வத் தச்சர்களை அழைத்துக் கட்டளையிட, அந்தத்தச்சர்களும் அலங்காரஞ் செய்தார்கள். எப்படி எனில்:—மாற்றுயர்ந்த செம்பொன்னால் பூமியைத் தளவரிசைசெய்து, ஆயிரம் சூரியர் ஒளிமழுங்க விளங்கும் செம்பவளத் தூண்களை வரிசை வரிசையாக நிறுத்தி, அந்தத்தூண்களின் மேல் மரகதப்போதிவைத்து, மாசில்லாதோங்கும் வயிரமணியால் உத்திரங்களும் பாய்ச்சினார்கள். தங்கரேக்குகளில் நவரத்தினங்களை நெருங்கவைத்து இழைத்துச்சித்திரம் எழுதியவிசித்திரப்பலகைகளை இணக்கிச் சந்திரகாந்தி வீசும் வெண்பளிங்கினால் சுவர்களை உண்டாக்கினார்கள். மெத்தைமேடைகள் மாளிகை சூளிகைகள் மற்றவைகளையும் அனந்தமாக இயற்றி மாணிக்கம் வயிடூரியம் முதலான மணிகளால் இழைக்கப்பட்ட செம்பொற்சிகரங்களை அவற்றின் முடிக்கு முடியாகச் சூட்டினார்கள்.

நீலமலர்போல் அழகுவாய்ந்திருக்கும்கண்களையுடையமாதர்களை விரும்பும் காமுகருடைய உயிரும் மனமும் அழிந்து ஆசையால் தாழ்ந்துகிடக்கச்சித்திர விகற்பங்களை எல்லாம் அரம்பையர்போல் அழகு ஒழுகும்படிசிற்பசாஸ்ரவிதி விளங்கச்செய்து வைத்தார்கள். மலையிலிருந்து மாலைபோல் இறங்கும் அருவிகளோ என்று கண்டோர் சந்தேகம் அடையவிளங்கும் முத்துமாலைகளைச் செம்பொற் சுற்றுப்பக்கமெல்லாம் சரம்சரமாகக் கட்டிப் பூமியில் புரளத்தொங்கவிட்டார்கள். நவரத்தின மாலைகளுக்கு நடுநடுவே மாசில்லாமல் விளங்கும் கண்ணாடி விடாமற் பிரகாசிக்கும்

வெண்சாமரை, மலர்ப்பூந்துராக்கள், தேன் ஒழுகும் கனிவர்க்கங்கள்முத லானவைகளை அலங்கரிக்கும் முறையில் விளங்கத் தொங்கவைத்தார்கள். விட்டுவிட்டு ஒளிவீசி இருளைவிழுங்கும் தூண்கள்தோறும் நீண்டிருக்கும் இலைகளையுடைய வாழைகளும்பசுங்கமுகுகளும் தேன் உமிழும்செங்கரும் புகளும்கற்பகவிருட்சங்களும் மலர்களையும், காய்களையும், கனிகளையும் ஈனு ம்படிகட்டிவைத்தார்கள். பூங்கொடிகளும், பூமரங்களும், பூந்தடங்களும், பஞ்சவர்ணக்கிளிகளும், பலவர்ணப்பறவைகளும், மயில்களும், மற்று ம் குயில்களும்முதலியபட்சிகளும் விளங்கப்பஞ்சவர்ண ங்களைச்சேர்த்து எழுதிய செம்பொற் பட்டுச்சீலையால் விதானம் (மேற்கட்டி) செ ய்தார்கள். முத்துமாலைகளும், நவரத்தின சித்திரமாலைகளும், செம்பொ ன்மாலைகளும், வண்டுகள் சூழ்ந்திருக்கும் மலர்மாலைகளும் நெருங்கத் தொடுத்தார்கள். இப்படிப்பட்ட மகாமண்டபத்தின்நடுவில் திருவேகம் பமுடையவர் தேவி காமாட்சியுடன் மகிழ்ந்து வீற்றிருக்கச் சித்திரவிசித் திர மணிப்பீடம் ஒன்று உண்டாக்கி, அதன் சுற்றுப்பக்கங்களில் எல்லாம் தேவர்களும் முனிவர்களும் வசிப்பதற்குரிய ஆசனங்களை வகுத்து வைத் தார்கள். தேவர்களும் முனிவர்களும் கண்டு வியக்கும்படி, யாககுண்ட ங்களையும், வேதிகளையும், ஆவரணங்களையும், சிவாகமவிதிமுறையால் அழ குபெறச்செய்துவைத்தார்கள். வாசனைவீசும் சந்தனக்கட்டை, அகிற்கட் டை, குங்குமப்பூ, பச்சைக் கர்ப்பூரம், குரா, புனுகு முதலியவைகளை எல்லாரும் விரும்பத்தகுந்த வாசனை வீசும்படி புகைத்து, எங்கும் வெண் கடுகுகளை இறைத்துச் சிங்காரஞ்செய்து வைத்தார்கள். பக்கங்களில் எல்லாம் புஷ்பத்தால் பந்தல்போட்டுக் கட்புலனைக் கவரும்படியான அழகுவாய்ந்திருக்கவகுத்து, கஸ்தூரி மணம்வீசும் பன்னீர் தெளித்து உள் இடங்களில் எல்லாம் வெண்மணல்போல் முத்துகளைப் பரப்பிவைத் தார்கள். பந்தல்களின் பக்கங்களில் எல்லாம் தேவர்கள் ஸ்நானம் செய் வதற்குச் செந்தாமரைக்குளங்களும் சந்தனம், கற்பகம் முதலிய பஞ்சத ருக்கள் மலிந்திருக்கும் சிங்காரப்பூஞ்சோலைகளை அடர்ந்திருக்கவைத்தார் கள். தச்சர்கள் தொழில் இத்தன்மையதாக இப்பால் கவுரி கல்யாணம் என்று முழங்கும் திருச்சின்னங்களின் மங்கள ஓசையைக்கேட்டமாத்திர த்தில் நகரவாசிகள் எல்லாரும் பரமசந்தோஷம் அடைந்தார்கள். பரம சந்தோஷம் அடைந்து, இடையறுமல் சஞ்சரிக்கும் சனங்களின் நெருக் கத்தால் அற்றுவிழும் மணிமாலைகளும், கணவருடன் ஊடிக்கலக்கு மட மாதர்கள் அவிழ்த்து எறிந்த ஆபரணங்களும், அடர்ந்து ஒளிவீசும் வீதிக ளில் குப்பையாய்க்கிடக்க, அவைகளை வாரி அப்புறத்தில் விட்டு எறிவா ர்கள். வாசனை மிகுந்த செம்பொற்சுண்ணத்தையும் பச்சைக் கர்ப்பூரத்

தூள்களையும், பன்னீரிற் கரைத்துப் பந்துபோல் உருட்டிய சிலையைத் தோய்த்து எடுத்துவீதி எல்லாம் மெழுகிச்சீதளத்தால் நடுக்கம் அடைவார்கள். பழமையானவைகளைமாற்றிப் புதியனவாகப்பூப்பந்தல்போட்டுவிருதுக்கொடிகளையும், மாணிக்கத்தோரணம், மாவிலைத்தோரணங்களையும் நாட்டிவைப்பார்கள். செம்பொன்வேதிமேல் பூமாலைகளைத்தொங்கவிட்டுப் பூரணகும்பங்களையும், பாலிகைகளையும், தூபதீபங்களையும் எங்கும் நிறைத்து வைப்பார்கள். முத்துகளைச் சுண்ணம்செய்து செம்பொன்வேதிமேல் சித்திரக்கோலம் இட்டுச் செம்பொன் மாளிகைச் சுவர்களில் கண்டோர் காதல்கொள்ளச் சித்திரம் எழுதிவைப்பார்கள். சிலர் வரிசைவரிசையாய் விளங்கும் மாளிகைகளைப் பழுதுபார்ப்பார்கள். எண்ணிறந்தவர்கள் எங்கும் கூடி இருசெவித்துளைகளிலிருந்து மதவெள்ளம் பொழியும் யானைகளை அலங்கரிப்பார்கள். அதிவேகமாய்த் தாவி ஓடும் குதிரைகளை அலங்கரிப்பார்கள். பூமியைப் பள்ளமாக்கும் சக்கரத்தேர்களைச்சிங்காரிப்பார்கள். செம்பொன் நிலைத்தேர்களை நிறுத்திவைப்பார்கள். நவரத்தினத் தூண்களுக்கு நெடிய உறைபோட்டு வைப்பார்கள். திருக்கல்யாணத்திற்கு வருபவர்கள் எல்லாருக்கும் வசதியான இடம் ஏற்படுத்துவார்கள். எதிர்ப்படும் எல்லாரையும் உபசரித்து வேண்டி அழைத்துக்கொண்டுபோய் விருந்துசெய்விப்பார்கள். காஞ்சிமாநகரமெங்கும் இந்தப்பிரகாரம் அலங்கரிக்கும்சிறப்பு ஓங்கவும், மூன்றுலகங்களில் வாசம்செய்பவர்கள் எல்லாரும் கூட்டங்கூட்டமாய் எங்கும் நிறைந்திருக்கவும்; தேவர்கள் எல்லாரும் ஆவலுடன் திருக்கல்யாணத்திற்கு வேண்டும் பொருள்களைக்கொண்டுவந்து எங்கும் அடர்ந்திருக்கவும், மங்கலவோசைமிகுந்து விளங்கும் வேளையில், திருவேகம்பர் திருவருளைப்பெற்றுச் சங்கபாணியாகிய திருமால் பிரமதேவனுடனும், முனிவர்களுடனும்விசாரித்து அறிந்துகொண்ட சுபதினத்தில் செம்பொன்மணிப் பாலிகைகளில் நவதானியமுளைகளைவித்துதல்செய்து, ரிஷபக்கொடி ஏற்றிய, எம்பெருமான் பார்வதிதேவியாருடன் பவனி வந்தருளும் திருவிழாவை ஆரம்பித்து, ஒன்பதுநாள் திருவிழா நடந்த பின்புப் பத்தாநாள் பரமானந்தம் தருவதான பங்குனி உத்திரத்திலே தேவர்கூட்டங்களும், மனிதர் கூட்டங்களும் மகிழ்ந்து எழுந்து ஆரவாரம் செய்துகொண்டிருக்க, எம்பெருமான் திருமணக்கோலம் கொள்ளும் பொருட்டுத் திருமஞ்சனச்சாலைக்கு எழுந்தருளினர். எழுந்தருளுதலும் திருமகள் தங்கும் திருமார்புடைய திருமால்செய்த தபோபலம் வாய்த்து, வாசனைவீசும் கொன்றைப்பூமாலை சூடியசடைமுடியையுடைய சிவபெருமான் திருமேனியைத் தீண்டப்பெற்றுச் செம்பொற்குடத்து நீரால் திருமஞ்சனமும் மற்றும் அபிஷேக

ங்களையும்செய்து, அன்புமேலிட்டுமெல்லிய வஸ்திரத்தால்திருமேனியை
ஒற்றி ஈரத்தைமாற்றி, ஒருவர்கையாலும் செய்யக்கூடாததாய்க் கற்பக
விருட்சம் கொடுக்கவந்த அற்புதச் செம்பட்டினால் உள்ளாடைசாத்தி
மன்மதனுடைய வில்லைப்போல் விளங்கும் புருவங்களையுடையமாதர்கண்
களைக் கவரும்படி அதன்மேல் இருளற ஒளிவீசும் செம்பொற்பீதாம்பரம்
சாத்திப் பன்னீர் விட்டு உரைத்த சந்தனக்குழம்பும்பச்சைக்கர்ப்பூரமும்
குங்குமப்பூவும், கஸ்தூரியும், சவ்வாதும்சேர்த்துக்குழைத்திருக்கும் கல
வைச்சந்தனத்தை எம்பெருமான் திருமேனி எங்கும்பரிமளம் வீசப்பூசிக்
கிறுதல்செய்து, தேசுமயமாய்விளங்கும்மேருமலையில்பெயர்த்துஎடுத்துச்
சன்னமாக இடித்துப் பொடியாக்கப்பட்டசெம்பொற்சுண்ணத்தைக் கற்
பகப்பூவிலிருந்து எடுக்கப்பட்ட மகரந்தப்பொடியுடன்கலந்து அந்தச்சந்
தனக்கோலத்தின்மேல் அப்பி, அந்த ஈரம் உலரும்படி அன்புமிகுந்து
அகிற்புகைமுதலியதூபம் ஏற்றிப்போற்றுதல்செய்யும் அடியார்களுடைய
ஆணவாதிமலங்களை அகற்றவல்ல செங்கமலத்திருவடிமேல் சிங்கத்தொனி
செய்யும்சிலம்பு அணிந்து, அஞ்ஞான இருள்அனைத்தையும் அழிக்கும்படி
யான சோதிவீசும் வீரகண்டை, கலீல் கலீல் என்று கலிக்கத்தரித்து
இடையிற் கட்டிய பட்டாடைமேல் நவரத்தினம் இட்டிழைத்த செம்
பொன் அரைஞாண்சாத்திக், காந்திவீசும்பதுமராகத்தால் செய்யப்பட்ட
உதரபந்தனம் சாத்தி, முத்துமாலைகள் பொன்னரிமாலைகள், பூமாலைகள்ச
ன்னவீரம் வெற்றிலை முகப்போலும் அச்சவடிவாகச்செய்யப்பட்ட ஆபர
ணங்கள் செம்பொற் பூணூல் முதலிய ஆபரணங்கள் எல்லாம் பேரொளி
வீசும்படி திருமார்பினிடமாகச்சாத்தி, ஸ்ரீகண்டத்திலேநவரத்தினமாலை
சாத்தி, ஒளிபெற்று விளங்கும் நாகரத்தினம் வைத்திழைக்கப்பட்டமோ
திரங்களை விரல்களுக்கெல்லாம் கோத்தணிந்து, கையிலே வயிடூரியத்தா
ல் செய்யயப்பட்ட செம்பொற் கடகம்மாட்டிச்சந்திரகாந்திவீசும் முத்து
களால் இயற்றப்பட்ட அங்கதங்களைத்தோளில் பூட்டிச் சங்கக்குழையும்
செம்பொற்றோடும் நீண்டு இரண்டு தோள்களின்மேல் அசைவாடச் செ
விகளில் அணிந்து, நெற்றிமேல் செம்பொன்மணிப்பட்டம் கட்டி, தெய்
வத்தன்மையுடன் செகச்சோதிமயமான செம்பொன்மணி மகுடத்தைச்
செம்பவள்ச்சடைமுடிமேல் விளங்கச்சூட்டி, இவ்வண்ணம்திருவாபரண
ங்களைச்சாத்திப் போற்றுதல்செய்யச்சிவபெருமான் எழுந்து, பூரணகும்ப
ம், இருகயல், வெண்சாமரை, அங்குசம், கண்ணாடி, வெற்றிக்கொடி, முர
சு, திருவிளக்குமுதலான அஷ்டமங்கலங்களை அரமகளிர் எதிர்கொண்டுவ
ரச்சென்று, தெய்வத்தச்சர்கள் செய்ததிருக்கல்யாணமண்டபத்தில் பிர
வேசித்துப் புஷ்பாசனத்தில் எழுந்தருளி, உருத்திரர்முதலானவர்கள் தங்
கள் தங்கள் ஆசனங்களில் உட்காரும்படி திருவருட் கண்ணோக்கம் செய்

து சிறந்து வீற்றிருந்தபின்பு, வண்டுகள்விருந்ினர்போற்கூடிஅமுதம்போலும் பாடல்களை விளரி என்னும் இராகத்துடன் பாடச்சிவந்து மணக்கும் துளசிமாலை சூடிய மார்பையுடைய திருமால் தன் இல்வாழ்க்கைக்குரிய திருமகள் முகத்தைப்பார்த்துப் பெண்ணே ! நீ வண்டுகள் முழங்க மணமலர் சூடிய கூந்தலையுடைய கவுரியைப் பலவகையான ஆபரணங்களால் அலங்கரித்து அழைத்துக்கொண்டு வருக என்றுசொல்லிய மாத்திரத்தில் சுனைகளில்புஷ்பிக்கும் நீலமலர்போலும் கண்களையுடைய இலட்சுமி பெருமகிழ்ச்சியுடன் சென்று, அந்தப்புரத்தை அடைந்து வேண்டும் ஆடையாபரணங்கள் எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு போய் அண்டரண்டசராசரங்கள் அனைத்தையும் பெற்றும் இன்னும்சிறுகன்னியாகவே பேரழகு வாய்ந்திருக்கும் பிராட்டியைச் செம்பவளப் பலகைமேல் உட்காரவைத்துக் கூந்தலை அவிழ்த்து, எண்ணெய் அள்ளிச்சாத்தி நெல்லி விழுதையும் மஞ்சள் விழுதையும் திருமேனி நிறையப்பூசி, அன்புமிகுந்து, கதம்பம் முதலியவைகளைத் தரித்து, வாசனை யூட்டிய நீரால் திருமஞ்சனம் செய்வித்து மெல்லிய வஸ்திரத்தால் ஒற்றித் திருமேனியில் உள்ள ஈரத்தைப் போக்கிக் கற்பகத்தரு கொடுக்கக் கொண்டுவந்த சித்திரப்பூம் பட்டாடைசாத்தி, நவரத்தின பீடத்தின் மேல் எழுந்தருளவைத்து, யானைத்தந்தச் சீப்புகொண்டுநெடியகூந்தலைச்சிக்கறுத்து, நேர்மையாக வாரி, மணம் வீசும் கஸ்தூரி பூசி அகில் சந்தனம் முதலியவைகளைச்சேர்த்து நெருப்பிற்போட்டுப் புகையும் தூபம் பரிமளம் கமழஊட்டி, மகர மச்சம் நாணும்படி விளங்கத் திருத்திச் செம்பொற் கட்டுக்கயிற்றால் கட்டிப் பனம்பழம்போல் உருண்டு திரண்டு விளங்கும் கொண்டைபோட்டுச் சந்திரகாந்தி வீசும்முத்துக்களைமாலையாகக் கோத்துப்பிடரியின்மேல் தொங்கி அசைந்து ஒளிவீசும்படி அந்தக் கொண்டையில் சொருகி, வாசனையுடன் அரும்பு அவிழப்பூத்த பூமாலைகளால் சூழப்பட்டு, ஒளிவீசும் பொன்மாலைகளும் நவரத்தின மாலைகளும் அளகபாரத்தில் விளங்கத்தரித்து, பேரொளி வீசும் தெய்வ உத்தி, மயில் என்னும் தலைக்கோலங்களை மிக்க அழகு பொழிய அணிந்து, அளகபாரத்தின் நடுவே, வகிர்ந்தெடுத்த வடுவில் சூரிய கிரணம் தங்கினாற்போல் குங்குமப் பொடிஅணிந்துநெற்றியிலேசெம்பொற்பட்டம்கட்டிச்சேர்த்துக் குழைத்துஇழைத்து எடுத்த சிந்தூரத்திலதப்பொட்டிட்டு, நீலமலர்போலும் கண்களுக்கு மை எழுதி, பூரண சந்திரனைப்போல் விளங்கும் திருமுகத்தில் நாசிக்கு நவரத்தின நத்து முதலியவைகளை மாட்டிச் செவிகளில் மாணிக்கத்தால் இழைக்கப்பட்ட தோடும் நவமணிக்குழையும் பூட்டிக் கழுத்தில் விட்டுவிட்டு ஒளிவீசும் இரத்தின அட்டிகைகட்டி, முத்துவைத்து இழை

க்கப்பட்ட தோளணிகளைத்தோளில் சாத்திச் சோதிமயமான முன்கைக ளில் நவரத்தின கடகமும் செம்பொன் வளையலும் போட்டுச் செம்பொ ன்மணி மோதிரங்களை விரல்களில் அமையும்படிகோத்து, மிக்கவாசனை யுள்ள சந்தனக்குழம்பை அள்ளி முதுகில் பூசிக் கை நகத்தினுல் சித்திரி த்து, அதிகமண்ம் வீசும் களபச்சந்தனக் குழம்பினுல் தாமரை அரும்பு போலும் தனங்கள் மறைந்துபோகும்படி கோலம் எழுதி, அந்தச் சந்தன க்கோலத்தின்மேல் மணம் வீசும் மகரந்தப்பொடிகளை ஒற்றி, அகிற்புகை காட்டியும் விசிறி எடுத்து வீசியும் உலர்த்தி அதன்பின்பு முத்துமாலைக ளும் செம்பவளமாலைகளும் மாணிக்கமாலைகளும் மரகதமாலைகளும் பூமா லைகளும் பொன்மாலைகளும் மற்றும் நீலமணிமாலைகளும் தண் ஒளிவீசும் படி சாத்தி, அக்கினிச்சுவாலை தோன்றுவது போல்தோன்றும் நாகசிரோ ரத்தினம் முதலிய இரத்தினங்களால் முறையே ஏழுகோர்வையாகவும் எட்டுகோர்வையாகவும் பதினுறுகோர்வையாகவும் பதினெட்டுகோர்வை யாகவும் முப்பத்திரண்டு கோர்வையாகவும் இழைக்கப்பட்டிருக்கும்மேக லை, காஞ்சிகலாபம், பருமம், விரிசிகை என்னும் ஆபரணங்கள் ஐந்தையும் யானைத்தலையில் உள்ள மத்தகம்போலும் கடிதடத்தில் கலகலவென்று ஒலிக்கும்படி சாத்தி, கிண்கிணி, பரியாகம், சிலம்பு, பாடகம் என்ற இவைகளைப் புறவடியில் விளங்கச்சாத்தி, செந்தாமரைப்பூ வெட்கிப்போ ம்படி மிகச்சிவந்து விளங்கும் சிறுசேவடிகளில் செம்பஞ்சின் குழம்பை அள்ளி ஊட்டித் தாழ்ந்துவணங்கிநின்ருள்.

அழகுகளுக்கெல்லாம் இருப்பிடமான பார்வதிதேவியின் திருமேனி யைக் கலந்தபடியால்பேரழகுவாய்ந்துவிளங்கும்ஆபரணங்களைப்பார்க்குந் தோறும் அந்த ஆபரணங்களைஅணிந்துவணங்கிநின்ற இலட்சுமியானவள் இது நான் அலங்கரித்த ஆபரணந்தானே என்று சந்தேகம் அடைந்தாள். தெய்வப்பெண்கள் எல்லாரும் தங்கள் கட்புலனைக்கவரும் படியான பேரழகைக் காணுந்தோறும் பரமசந்தோஷம் அடைந்து மங்கலவார்த்தை சொல்லி, எம்பெருமாட்டியை வாழ்த்தினுர்கள். இப்படி இருக்கையில் பார்வதிதேவியும் இலட்சுமியினுடைய செந்தாமரைமலர் போலும் கைக ளைப் பிடித்துக்கொண்டு, அவ்விடம் விட்டு எழுந்து, தேவர்கள் எங்கும் புஷ்பமாரி பொழியவும் மங்கலவாழ்த்தின் ஒலி பெருகவும் எழுந்தருளி னுள். மழைபோற் குளிர்ந்து மதர்த்திருக்கின்ற கண்களையுடைய அரமக ளிர்கள் தங்கள் கையில் சந்திரவட்டக்குடை, கொடி, வெண்சாமரை, ஆலவட்டம் முதலியவைகளை ஏந்திக்கொண்டு பணிவிடைசெய்துவரவும், பூமிமேல் விரித்துப் பரப்பிய சித்திரப் பூம்பாவாடை மேல் மெள்ள மெ ள்ள நடந்து, பலவிசித்திரமாக அலங்கரிக்கப்பட்டிருக்கும் திருக்கல்யா

ண மண்டபத்தில் புஷ்பாசனத்தின் மேல் வீற்றிருக்கும் எம்பெருமான் இடதுபக்கத்தில் சித்திரக் கொழுந்து போற் சிறந்து வீற்றிருந்தாள்.

சித்திராலங்கார பீடத்தின் மேல்திருவேகம்பமுடையவர் தேவியுடன் தங்கி இருக்கும் திருக்கோலத்தைக் கண்டு, உருத்திரர்முதல் எல்லாரும் தொழுது எழுந்து பரமசந்தோஷம் அடைந்தார்கள். மணம்வீசும் துளசி மாலேசூடிய மாயவன் எம்பெருமானுடைய மலர்போலும் பாதபூசை பண்ணச் சென்றான். அண்டங்களெல்லாம் படீல் என்றுவெடித்தாற் போல் பல வாத்தியங்கள் முழங்கியதுகள். இலட்சுமியானவள் வணங்கிக்கையில் ஏந்தியசெம்பொற் கரகத்தால் பால்வார்க்கத்திருமால் எமது ஐயன் மலரடிகளை விளக்கித்தொழுது மெல்லிய பட்டு வஸ்திரத்தால் மெள்ள மெள்ள ஒற்றி ஈரத்தைமாற்றி, அன்பு மிகுந்து பெருஞ்சோதி மயமாய் விளங்கும் சீர்பாத பூசை பண்ணிய தீர்த்தத்தை அள்ளி உட்கொண்டு, சர்க்கரை நெய் பால் பழம் மணக்கும் மதுபருக்கம் அளித்து, நாயேனையும் அடிமையாகக்கொண்டருளும் எம்பெருமானுடைய செந்தாமரை மலர்க் கைமேல்,அண்டரண்ட சராசரங்கள் அனைத்தையும் பெற்றெடுத்த பிராட்டியான கன்னிகையின் செங்காந்தள் மலர்க் கைகளை வைத்துத்தான நீர் வார்த்துத் தத்தம்செய்துகொடுத்தான். சங்குகள் முழங்கியதுகள்; துந்துமிகள் முழங்கியதுகள்; பல வாத்தியங்கள் முழங்கியதுகள்; மங்கலவார்த்தைமுழுங்கியதுகள்; நான்கு வேதங்கள்முழங்கியதுகள்; ஆகமங்கள் எல்லாம்முழங்கின; பல புராணகலைஞானசாஸ்திரங்கள் எல்லாம் முழங்கின; ஆசீர்வாத மொழிகள் முழங்கின; தேவர்கள் எல்லாரும் கற்பகப் பூமழை பொழிந்தார்கள். பாடல்களின் நவரசத்தேன் மழை வெள்ளம்போற் பெருகி வழிந்தது; அடியவர்களுடைய கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் மழை தாரை தாரையாய் இறங்கியது; பாவங்கள் எல்லாம் மாயமாய்ப் பறந்து ஒழிந்து போய் விட்டன. அந்த வேளையில் எம்பெருமான் பிரம தேவனைப் பார்த்துத் தான் திருவாய் மலர்ந்தருளிய வேதாகம விதிப்படி ஓமம் வளர்க்கச் சொல்லிப் பார்வதிதேவியின் ஸ்ரீகண்டத்தில்மங்கலநாண்சாத்தினார். பிரமதேவனும் எம்பெருமான் கட்டளையைத் தன்கருத்திற் கொண்டு வேதாகம விதிதவறுமல் ஓமாக்கினி வளர்த்து வாசனை வீசும் நெய்மொண்டு வார்த்துத், திருக்கல்யாணச் சடங்குகளைப் பூர்த்தி செய்தான். அகஸ்திய முனிவருடைய அபிப்பிராயமும் கவுரியின் கருத்தும் நிறைவேறின. தன் அடியார்கள் வேண்டிய பொருள்களை வேண்டியபடியே விரைந்து கொடுத்தருளும் திறத்தை எம்பெருமான் செய்து கொண்ட திருக்கலியாணத்தினால் வெளிப்படையாகத் தெரிவித்தார்.

இப்பால் அந்த நாள்திருமணக்கோலங் கண்டவர்கள் எல்லாரும் செழுந் தேனைஉண்ணும் தேன் வண்டுகள் போல் ஆனந்தக் கடலில் அழுந்தி நெருப்பிலிட்ட மெழுகுபோல் மனம் உருகி வாயாரவாழ்த்தி இருகைகளையும் சிரசின் மேற்கூப்பிக்கொண்டு ஆனந்தக்கண்ணீர் மழைத் தாரையில் முழுகிப் பரமசுகம் அடைந்தார்கள். பரமானந்தம் அடைந்து பார்வதி தேவியாருக்குண்டாயிருக்கின்றஅற்புதகவுரத்திருமேனிஅழகையும் எம்பெருமானுக்குக் கொங்கைத்தழும் புடன் செங்கைவளைத் தழும்பினால் உண்டாயிருக்கும் அழகையும் வியந்து நோக்கி இமயமலையில் நடந்த திருக்கல்யாணத்தைப் பார்க்கிலும் இதுசிரேஷ்டமானது என்று பெருமகிழ்ச்சி அடைந்தார்கள். அளவில்லாத சந்தோஷம் அநுபவிக்கும் படி எமக்கு இந்தப்பேறளித்த அகஸ்திய முனிவர் நீடூழி வாழ்க வாழ்க என்று வாழ்த்தி மங்கலப் பல்லாண்டு பாடி மனங்குழைந்தார்கள். பார்வதி பாகனும் அவரவர்களுக்கு அநுக்கிரகம் செய்து, எட்டுத்திசைகளில் உள்ள எட்டு யானைகளும் உடல் நடுங்கப் பெருமூச்சு விடும்பேராண்மையுள்ள வெள்ளை ரிஷபத்தின் மேல் பார்வதி தேவியாருடன் மகிழ்ந்து ஏறிக்கொண்டு, அன்பர்கள் எல்லாம் துதி செய்யும்படி திரு வீதியில் திருவுலாவாக வந்தருளினார்.

பிளிறு ஒலிசெய்யும் கொடியமதயானையின் முதுகின்மேல் வைத்துக்கட்டப்பட்ட பேரிகை, மத்தளம், தாளம் முதலிய வாத்தியங்களும் தேவர்கள் முழக்கும் வாத்தியங்களும் திசாதிசைகள் எங்கும் செவிடுபடுப்போகும்படி முழங்கவும், பாணுகம்பன் என்னும் மகாவீரன் ஆயிரம் சங்குகளைப்பிடித்துத் தன் ஆயிரம்வாய்களிலும் வைத்துஊதவும், வாணாசுரன்தன் ஆயிரங்கைகளால் குடமுழாவாத்தியம்வாசிக்கவும், மத்தளமாதவன்மத்தளம்முழக்கவும், கமாட்சிதேவியைத்திருக்கல்யாணம் புரிந்தருளும் காதலன் வந்தான் என்றும் கொங்கைத்தழும்பேற்றருளியகோமான் வந்தான் என்றும் நாமெல்லாரும் கடைத்தேறும்படிதானே தோன்றினவன் வந்தான் என்றும் முத்துமாலைகட்டிய திருச்சின்னங்களும் எக்காளங்களும் முழங்கவும் புள்ளாங்குழல் ஓசையும் வீணையின் ஓசையும் எங்கும் பரவவும், பரதநாட்டியவிதிப்படிமாதர்கள்நடனம்செய்யவும், தேவர்கள்பொழியும் புஷ்பமாரியானதுபூலோகத்தைமறைக்கவும் திருவீதியிலே திருவிழாவைக்கண்டு சேவிக்கவந்த பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவைதெரிவை, பேரிளம்பெண் என்னும் எழுவகைப்பருவமுள்ள பெண்கள் எல்லாரும் * நாணத்தையும்வளையல்களையும் ஆடைகளையும் இழந்து, மோ

* திருவுழாவரும்போது எழுவகைப்பருவமுள்ளபெண்கள் பரவசமாய்விடுவதை, ஆதியுலாவிலும், ஏகாம்பரநாதர் உலாவிலும்காண்க.

கத்தைமூட்டும்மன்மதன் வில்லில்தொடுக்கும்பஞ்சபுஷ்பபாணமழைநீரிற்குளிக்கவும், சாமரைகளும் சந்திரவட்டக்குடைகளும் கொடிச்சீலைகளும் நெருங்கவும் நிகரில்லாதோங்கும் நகர்ப்பிரதட்சிணம் செய்தருளி மதுரவசனத்துடன் மங்கலவாழ்த்தொலி மலியவும் திருஉலாக்காணும் புண்ணியஞ்செய்தவர்களுக்கெல்லாம்கருணைகடாக்ஷம்வைத்தருளிமீண்டு, கோயிலுக்குட்சென்று, மெல்லிய புஷ்பாசனத்தின்மேல் பார்வதிதேவியாருடன் வீற்றிருந்து, சுற்றுப்பக்கமெல்லாம் சூழ்ந்து நின்றிருக்கும் அரி அயன் முதல் அனைவரையும்பார்த்து, இவ்விடத்தில் நீங்கள் வேண்டும் வரங்களைப்பெற்றுக்கொள்ளுங்கள் என்று சொல்லிய மாத்திரத்தில் தேவர்கள் அன்னை அப்பராம் அவர்கள்பாதங்களைவணங்கி, நாங்கள் எல்லாரும் உங்கள் திருக்கல்யாணமகோற்சவம் பார்த்துக் கடைத்தேறினோம். கடல் சூழ்ந்தஉலகத்திலே கல்யாணம்நடக்கும் இடங்களில் எல்லாம் நீங்கள் இருவரும் தங்கி இருந்து கல்யாணப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் இகபரசுகம்அளித்தருளவேண்டுமென்றார்கள். இந்தவரம்கொடுத்தோம். இனிநீங்கள் எல்லாரும் காஞ்சிமாநகரத்தில் காவல் செய்துகொண்டு சுகமாய்வாழ்ந்திருங்கள் என்று சிவபெருமான் கட்டளை இடுதலும் தேவர்கள் எல்லாரும் அந்தக்கட்டளையைச் சிரசின்மேற்கொண்டு மனமகிழ்ந்து காஞ்சிமாநகரத்தைக்காவல்செய்வதுடன் களிப்படைந்து வாழ்ந்திருந்தார்கள். துன்பங்களையெல்லாம் தொலைத்தருளும்கவுரிதிருமேனியிலிருந்துதோன்றிய துர்க்கையும், அடியேனைக்கல்யாணம் செய்துகொண்டருள்க என்று வணங்கிநின்று வேண்டிக்கொள்ளவே, அந்நாள் கல்யாணத்தை முடித்துத், துர்க்கையே! நீ காஞ்சிமாநகரத்தைப் பாதுகாத்துக்கொண்டு, இங்கே வாசம்செய்திரு என்று அநுக்கிரகம் செய்யப்பெற்றுக் கன்னிகாப்பு என்னும் ஒருபெயர்பெறும்படி அந்தக்கவுசிகி யென்பவள்காஞ்சிமாநகரத்தைக்காவல்செய்துகொண்டு, ஆனந்தப்பெருஞ்சோதிமயமாய்விளங்கும் கவுசிகேசனைப் பிரதிஷ்டைபண்ணி, அன்பு மிகுந்து ஆகமவிதிப்படி அருச்சனைசெய்து, உயிர்கள் எல்லாம் யாதொரு துன்பமும் இல்லாமல் சுகித்து வாழ்ந்திருக்கத்தானும் வாழ்ந்து கொண்டிருக்கும் நாளில் சும்பன், நிசும்பன் என்னும் அசுரர்கள் உயிர்களையெல்லாம் நடுங்கச்செய்வதைப்பார்த்துப்பிரமதேவன் காஞ்சிமாநகரத்திற்குவந்து, எம்பெருமானிடத்தில் விண்ணப்பம்செய்துவேண்டிக்கொண்டதனால், அவர் கட்டளைப்படி அந்தக்கவுசிகி என்பவள் விந்தமலைக்குப்போய், அவ்விடத்தில் வாசம் செய்து, அந்த அசுரர்களை நாசமாக்கி மீண்டு, காஞ்சிமாநகரத்திற்கு வந்து மகிழ்ந்து வாழ்ந்திருந்தாள்.

அன்பர்களே! நாம் இப்பொழுது சொல்லிய பெருஞ்சிறப்பு அமைந்த கவுரிகல்யாணமகிமை விளங்கமனமகிழ்ந்து வாழ்த்தினவர்கள், கண்டவர்கள் கண்டோர்சொல்லக்கேட்டவர்கள், கண்டுகேட்டு நன்முக நினைந்தவர்கள் எல்லாரும் நற்குணநற்செய்கைகளையுடைய கன்னியரை அடையும் கல்யாணபோகத்துடன் யாவராலும்சொல்ல ஒண்ணாத பரமானந்த போகத்தையும் அடைந்து நீடூழிவாழ்ந்திருப்பார்கள்.

கவுரிமணவாளன்கனைகழல்போற்றி.

---

ஐம்பத்தெட்டாவது.

## விம்மிதப்படலம்.

(விம்மிதம் அதிசயம்.)

தபோநிதிகளே! சாமகண்டர் ஆகிய சிவபெருமான் கட்டளையிட்டபடி, உயிர்கள் எல்லாம் தழைக்கும்பொருட்டுக் காமாட்சிதேவி முப்பத்திரண்டு தருமங்களையும் செய்துகொண்டிருக்கும் காஞ்சிமா நகரத்திலே அநேக அற்புதங்கள் உண்டு. அந்த அற்புதங்களில் சில அற்புதங்களைச் சொல்லுகிறோம் கேளுங்கள்.

சமுத்திரமானது நவரத்தினங்கள் அடர்ந்து இருக்கிறபடியால் இரத்திநாகரம் என்று சொல்லப்படுவதுபோல, காஞ்சிமாநகரமானது சிவபெருமான் திருவருளால் உண்டாகும் பல அற்புதங்கள் நிலைபெற்று வசிக்கும் இடமாயிருக்கின்றது. தொட்டமாத்திரத்தில் எல்லாப்பொருள்களையும் செம்பொன்னாகச் செய்பவைகளும் எண்ணிறந்த சித்தர்களால் வந்தனை வழிபாடு செய்யப்பெற்றவைகளும், வேண்டும் பொருள்கள் எல்லாவற்றையும் விரைந்து கொடுப்பனவும் ஆகித் தவமுடையவர்களால் தரிசனம் செய்யப்படும் பல சிவலிங்கங்கள் அந்த நகரத்திலே உள்ளன. ஒருபரம்பொருள் இரண்டு பொருளாகி அவ்விரண்டு பொருள்களும் தம்மில் அபேதமாய்க் கலக்கும் அற்புதமும் அந்த நகரத்தில் உண்டு. அது யாது? எனில், ஒரு பரம்பொருள் சிவன் சத்தி என்னும் திருவேகம்பர் காமாட்சி என்று இரண்டு பிரிவாகித் தம்மில் கலந்து மீண்டும் ஒருபொருளேயாய் விளங்குமென்றறிக. இருமையாகிய ஒருபொருள் பலபொருள் ஆவதையும் பலபொருள் ஒருபொருளாவதையும் உடையது. அதை விரித்துச் சொல்லுமிடத்தில் ஏகனாகிய சிவபெருமான் அநேகராய் வீற்றிருப்பர். பலவேதங்கள் ஒருமாமரமாகி விளங்கும்.

மேலும் மூன்று அற்புதஸ்தானங்களும் மூன்று அற்புத பீடங்களும் மூன்று அற்புதக் கழனிகளும் நான்கு அற்புத சிம்மாசனங்களும், ஐந்து அற்புத விருட்சங்களும், ஐந்து அற்புதத் தடாகங்களும், ஆறு அற்புதப் பட்சிகளும், ஏழு அற்புதப் பொதுஸ்தானங்களும், எட்டு அற்புதப் பூம் பொய்கைகளும், ஒன்பது அற்புதக் கல்லுகளும், ஒன்பது அற்புதப் பூஞ் சோலைகளும், பத்து அற்புதச் சபைகளும், பதினொரு அற்புதக் கிணறுக ளும் சிறந்து விளங்கும். மூன்று அற்புதஸ்தானங்களில் ஒரு அற்புத ஸ்தானமானது பலபிறவிகளில் பெற்ற தகப்பன்மார்களைக் காணவேண் மொனால் காண்பிக்கும். ஒரு அற்புத ஸ்தானமானது பல பிறவிகளில் பெற்றெடுத்த தாய்மார்களைக் காண்பிக்கும். ஒரு அற்புத ஸ்தானமானது பலபிறவிகளில் பந்துஜனங்களாய் இருந்தவர்களைக்காண்பிக்கும். மூன்று அற்புதபீடங்களில் ஒரு அற்புத பீடம் தன்னைவந்து அடுத்தவர்களுக்குச் சாதமும் தண்ணீரும் கொடுக்கும். ஒரு அற்புதபீடம் வேண்டிய பொருள் களையெல்லாம் விரைந்துகொடுக்கும். ஒரு அற்புதபீடம் ஊமை பேசவும் பேசினவன் ஊமையாய்விடவும் செய்யும், மூன்று அற்புதக்கழனிகளில் ஒரு அற்புதக் கழனியானது விளைந்திருக்கும் நெல்லுப் பயிரை மீளமீள அறுக்குந்தோறும் விளைந்துகொண்டேயிருக்கும். ஒரு அற்புதக்கழனியா னது விதைவிதைத்தநாளே விளைந்து பலன்கொடுக்கும். ஒரு அற்புதக் கழனியானது ஏர்கட்டி உழுதல் இல்லாமலே தக்கபயிர்களைவிளைவிக்கும். நான்கு அற்புதச் சிங்காதனங்களில் ஒரு அற்புதச் சிங்காதனமானது தன க்கு உரிய மும்மூர்த்திகளுடன் முனிவர்களும், தேவர்களும் துதிசெய்ய வாழ்ந்திருக்கும் பிரமதேவனைக் காண்பிக்கும். ஒரு அற்புதச் சிங்காதன மானது தனக்கு உரிய மும்மூர்த்திகளும், இலட்சுமி முதலானவர்களும் சூழ்ந்திருக்க வீற்றிருக்கும் விஷ்ணுவைக் காண்பிக்கும். ஒரு அற்புதச் சிங்காதனமானது தனக்கு உரிய மும்மூர்த்திகளும் பூதகணங்களும் போ ற்றுதல் செய்ய வீற்றிருக்கும் காலாக்கினி ருத்திரனைக்காண்பிக்கும். ஒரு அற்புதச் சிங்காதனம் தனக்கு உரிய மூர்த்திகளுடன் வாழ்ந்திருக் கும் சூரியபகவானைக்காண்பிக்கும். பொன்போல்மலரும் சூதவிருட்சம் இடையறுமல்செந்தேன்பொழியாநிற்கும். காஞ்சிவிருட்சம் தன்னிழலைப் பிறருக்கு உதவாமல் தன்னில் அடக்கிக்கொள்ளும். உறங்காப் புளிய மரமானது பூவாமலும் காய்க்காமலும் பழங்களைக் கொடுத்துக்கொண்டிரு

*சிவபெருமானுக்கு, பிரமா, விஷ்னு, உருத்திரன்போல, பிரமதேவனுக்குவிராட்டு, காலன், புருஷன் என்னும் மூவரும் விஷ்ணுவுக்குச் சங்கரிடணன், பிரத்தியும்நன், அநிருத்தன் என்னும் மூவரும் உருத்திர னுக்கு அரன், மிருடன், பவன்என்னும்மூவரும் படைத்தல், காத்தல், அழித்தல்களில் அதிகாரம்பெற்ற வியூகர்களாம், என்பதை வாயுசங்கிதைமுதலியவைகளிற் காண்க.

க்கும். இருப்பைமரம் பலவகையான புஷ்பங்களைக் கொடுத்துக்கொண்டிருக்கும். அத்திமரம் செம்பொன்மலர் கொடுத்துக் கொண்டிருக்கும். இத்தன்மையான தெய்வத்தன்மையுள்ள விருட்சங்கள் ஐந்தும் தேவாதி தேவனாகிய சிவபெருமான் சிறந்து வீற்றிருக்கும் காஞ்சிமாநகரத்திலே அதிசயமாக வளர்ந்தோங்கி இருக்கும். ஐந்து அற்புதத் தடாகங்களில் ஒரு அற்புதத்தடாகம் இரவில் தாமரையும் பகலில் அல்லியும் மலர்ந்து மதுரமான தேன்பொழியாநிற்கும். ஒரு அற்புதத்தடாகம் ஒரு காம்பிலே மூன்று தாமரைமலர்களைத் தாங்கிக்கொண்டிருக்கும். ஒருஅற்புதத்தடாகம் தன்னிடத்தில் வந்து குளித்தவர்களை விரைவில் குரங்கு ஆக்கிவிடும். ஒரு அற்புதத்தடாகம் தன்னிடத்தில் வந்து முழுகினவர்களுடைய சத்துருக்களுக்குச் சங்கடம் தருவதாகும். ஒரு அற்புதத்தடாகம் தன்னில் வந்து ஸ்நானம் பெற்றவர்களுடைய சுற்றத்தாருக்குச் சுகம் தருவதாகும். மயூரபட்சியானது (மயில்) மழைபெய்யாதகாலத்தில் அகவி மழையைவருவிக்கும். கிளிப்பிள்ளையானது வேதாகமசாஸ்திரங்களை எல்லாம் விளங்க எடுத்துச்சொல்லும். ஆந்தையானது கணித நூல் எல்லாவற்றையும் கசடறக்கற்பிக்கும். கபோதபட்சியானது (புறா) சோதிடசாஸ்திரங்களையெல்லாம் தெரிந்து சொல்லும். நாகணவாய்ப்பட்சியானது சங்கீத சாஸ்திரமுறைப்படி பாடும். சக்கரவாகப்பட்சியானது வேண்டிய பொருள்கள் எல்லாவற்றையும் வரையாது கொடுக்கும். இவ்வண்ணம் ஆறு அற்புதப்பட்சிகள் அந்நகரத்தில் நிலைபெற்று வாழ்ந்திருக்கின்றன. ஒரு பொதுஸ்தானத்தில் தேவர்கள் பேசுவது மனிதர்செவிகளில் கேட்கும். ஒரு பொதுஸ்தானத்தில் சிறியமுயலானது பெரிய யானையை எதிர்த்துத் துரத்திவிடும். ஒரு பொதுஸ்தானத்தில் தேவலோகம் மனிதர் கண்களுக்குப் புலப்படும். ஒரு பொதுஸ்தானத்தில் வந்து சேர்ந்தவர்களுக்குத் திசை தெரியாத மயக்கம் உண்டாகும். ஒரு பொது ஸ்தானத்தில் நெய்யில்லாமலே விளக்கு எரிந்துகொண்டிருக்கும், ஒரு பொதுஸ்தானத்தில் பாதாளத்தில் வாசம்செய்கிறவர்கள் பேசும் சொல்கேட்கும். ஒரு பொதுஸ்தானத்தில் பஞ்சவாத்தியங்கள் எப்போதும் ஓயாமல் முழங்கிக்கொண்டிருக்கும். இப்படியாக ஏழுஅற்புதப்பொதுஸ்தானங்கள் அந்நகரத்தில் விளங்கும். ஒருபொய்கை தன்னிடத்தில் முழுகினவர்களுக்குப் பொன்மேனிகொடுக்கும். ஒரு பொய்கை மாணிக்கமேனி கொடுக்கும். ஒரு பொய்கை தேவேந்திரபோகம் கொடுக்கும். ஒருபொய்கை மனோரம்மியமான பொருள் எல்லாவற்றையும் கொடுக்கும். ஒரு பொய்கை வேண்டியதெல்லாம் கொடுக்கும். ஒருபொய்கை பெரியோரால் விரும்பப்படும் மெய்ஞ்ஞானம் கொடுக்கும். ஒரு பொய்

க்கை சத்தியஞானனந்த வீடுகொடுக்கும். ஒரு பொய்கை கர்மவியாதிகள் அனைத்தையும்போக்கிவிடும்.

இப்படியாக ஆணவாதிமலங்களை அழிக்கும் எட்டு அற்புதப் பொய்கைகள் அந்த நகரத்தில் இருக்கின்றன. ஒருகல் தன்னைத் தொட்டவர்களைத் தேவர்களாகச் செய்யும். ஒருகல் பாம்புக்கடி விஷத்தை நீக்கிவிடும். ஒருகல் அணிமாமுதலிய அஷ்டமாசித்திகளைக் கொடுக்கும். ஒருகல் உடலைவிட்டுப் பிரிந்தஉயிரை மீளக்கொடுக்கும். ஒருகல் நடுநிலையாய் நின்று, வழக்குகளைச் சிக்கறுத்து வாதிபிரதிவாதிகளுக்கு நியாயம் கிடைப்பிக்கும். ஒருகல் குஷ்டரோகம் முதலிய கொடிய நோய்களைப்போக்கும். ஒருகல் உடலில் அறுபட்ட உறுப்புகளைப் பழையபடிபொருந்தச்செய்யும். ஒருகல் பிறவிகள் தோறும் விடாமல் தொடர்ந்துவரும் பெரும் பாவங்களைப் போக்கும். ஒருகல் பரஞானம்பாலிக்கும். இப்படியாக ஒன்பது அற்புதக்கல்லுகள் அவ்விடத்தில் அதிசயமாக ஓங்கும். ஒருபூஞ்சோலையில் வந்து அடுத்தவர்கள் பெறும்படி பொன்மழை பொழியும், ஒரு பூஞ்சோலையில் வெள்ளி மழைபொழியும். ஒருபூஞ்சோலையில் முத்து மழை பொழியும், ஒரு பூஞ்சொலையில் குருவிந்தமழை பொழியும், ஒரு பூஞ்சோலையில் வயிரமழை பொழியும், ஒரு பூஞ்சோலையில் வயிடூரிய மழை பொழியும், ஒரு பூஞ்சோலையில் புஷ்பராக மழை பொழியும், ஒரு பூஞ்சோலையில் கருடப்பச்சை மழை பொழியும், ஒரு பூஞ்சோலையில் இந்திர நீல மழை பொழியும், இவ்வண்ணம் நவரத்தின மழை பொழியும் நவமலர்ச்சோலைகள் நன்குவளர்ந்தோங்கும், ஒருசபை தன்னிடத்தில் பாவஞ்செய்தவர்கள்வந்தால் அவர்களைஊமைஆக்கிவிடும். ஒருசபை திருடர்களைத்திசைதெரியாமல் தியங்கச்செய்யும், ஒருசபைகல்வி அறிவைவிளங்கக்கற்பிக்கும். ஒருசபை பலவிதமான ரூபங்களைக்கொடுக்கும். ஒரு சபை சாகாதிருக்கும் தன்மை தரும். ஒருசபை பாதாளத்திற்குப் போகும் வழிகாட்டும். ஒருசபைசமர்த்தர்களுக்கும் திக்பிரமை உண்டாக்கும். ஒரு சபை மாணிக்க மழைபொழியும். ஒரு சபை பகலை இரவாகவும் இரவை ப்பகலாகவும் காண்பிக்கும். ஒருசபை தன்னிடத்தில் வந்தவர்களைப் பிறர் காணமல் ஆச்சரியம் அடையச்செய்யும். இப்படியாகப்பத்து அற்புத சபைகள் அந்தநகரத்தில் விளங்கும். தயிர்க் கிணறு, பாற்கிணறு, நெய்க்கிணறு, தேன் கிணறு, கருப்பஞ்சாற்றுக் கிணறு, முத்திநெறிக் கிணறு, சுவர்க்க நெறிக்கிணறு, உலகநடைக் கிணறு, அதிசயமாக எட்டிப்பார்த்தவர் நிழலைத் தன்னில் மறைக்கும் கிணறு, வித்தில்லாமலே விளைவுசெய்யும் நீர்க்கிணறு, விரைந்து வந்தவர்களை மீண்டு போகச்செய்யும் கிணறு

ஆகப்பதினொரு அற்புதக்கிணறுகள் அவ்விடத்தில் அதசயமாகவிளங்கும், இவை அல்லாமல் தன்னிடத்தில் எள்போட்டால் மற்றொரு பக்கத்தில் எண்ணெய் தோன்றச்செய்யும் ஒரு செக்கு உண்டு. அவரவர்கள் செய்த வினைகளை அவரவர்களே அநுபவிக்கச்செய்யும் ஒரு கல்லும் ஒரு கற்பாவையும் உண்டு. காஞ்சிமாநகரத்தைக் காவல்செய்யும் வயிரவக்கடவுள் நடனம்புரிந்தருளும் சீர்பாதச்சிலம்புகள் கலிக்கலில்என்று இடையறாமல் முழங்கும் முழக்கம் எல்லாரும் ஆச்சரியம் அடைய ஒரு பக்கத்தில் கேட்கும். மற்றும் உள்ள இப்படிப்பட்ட அதிசயங்களுக்கு ஓர் அளவில்லை. அந்த அதிசயங்களை எல்லாம் அறிந்தவர்களும் இல்லை. அந்த அதிசயங்கள் எல்லாம் கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகங்களில் எல்லாருக்கும் புலப்படும்.

கடையுகமான கலியுகத்திலே தவம்செய்வோராகிய சிலருக்கே அன்றி, மற்றவர்கள் கண்ணுக்குப் புலப்படமாட்டா. சிவபெருமான் தன்னருளால் முத்திஅடைந்தவர்கள் கண்டுகளிக்கும்படி சிவலோகத்தில் பலஅற்புதங்களை ஏற்படுத்திவைத்திருப்பதுபோல் இந்த அற்புதங்கள் எல்லாம் காஞ்சிமாநகரத்தில்வாழ்கின்றவர்கள் கண்டு மனமகிழ்ச்சியடைய ஏற்படுத்திவைக்கப் பட்டனவாம். இவ்விடத்தில் யாம் சொல்லிய மகிமைகள் எல்லாம் கண்ணாரக்கண்டும் காதாரக்கேட்டும் இந்நகரத்திலே பாவம்செய்வார்கள் ஆனால் அவர்கள் கயவர் (மூடர்கள்) என்று சொல்லப்படுவார்கள்,

"மக்களே போல்வர் கயவரவரன்ன ஒப்பாரியாங்கண்டதில்.

ஐயோ! மடமையின்கொடுமையால் அறியாமல் செய்தபாவமெல்லாம் பரிகரிக்கப்படும். அறிந்துசெய்வார்கள் ஆனால், அந்தப்பாவங்களைப்போக்குவது அசாத்தியம். ஆகையால் அறம், பொருள், இன்பம், வீடென்னும் நான்கு பிரயோசனங்களை அடையவேண்டும் என்று அந்த நகரத்தில் வாசம்செய்கின்றவர்கள் தங்கள் தங்கள் வருணாசிரம தருமங்களில் தினையளவேனும் தவறாமல் நடந்து, திருவேகம்பருடைய திருவருட்பிரசாதத்திற்கு உரியவராகக்கடவர்.

திருவேகம்பர் திருவருள்வாழ்க.

---

ஐம்பத்தொன்பதாவது

## ஒழுக்கப்படலம்.

**ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம் உயிரினு மோம்பப்படும்.**

ஒழுக்கந்தவறாத உத்தமர்களே ! ஒழுக்கங்களைச் சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

கொண்டபத்தினியை வேரற்றுவாடுங் கொடிபோல் வாடவைத்துக் கண்டமாதரை விரும்பும் விவேக சூனியனும், பத்துமாதஞ் சுமந்து வருந்திப் பெற்ற தாயைப் பிரியமாய் நடத்தாமல் கொடுமைசெய்யும் துஷ்டனும், ஆகிய இவர்கள் எல்லாம் சிவஸ்தலங்களில் இப்படிப்பட்ட பாதகம் செய்யாதிருத்தல் வேண்டும். ஒருவேளை செய்வார் ஆயினும் சிவஸ்தலங்களில் சிறந்துவிளங்கும் காஞ்சிமாநகரத்தில் ஒருபோதும் செய்ய ஒண்ணாது. தினையளவேனும் தீமைசெய்யாமல் வேதாகமங்களின் விதிப்படி நடந்துகொள்வதே முறைமையாம்.

சூரியன் உதயமாவதற்கு ஐந்து நாழிகைக்குமுன் நித்திரை தெளிந்து எழுந்து, நெற்றியில் விபூதியணிந்து, ஏகாம்பரநாதரையும் காமாட்சி தேவியையும் தியானித்துத் துதிசெய்து, தான்செய்யவேண்டிய சத்காரியங்களை நினைத்து, சலபாத்திரமும் நண்டும் கையில் எடுத்துக்கொண்டு ஊருக்குத் தென்மேற்கில் சென்று, பூணூலைக் கழற்றி வலதுகாதிலே மாட்டித் துரும்புகிள்ளித் தரையில்போட்டுக் காலையிலும் மாலையிலும் உச்சிப்பொழுதிலும் வடதிசையாகவும் இரவில் தென்திசையாகவும் நோக்கி உட்கார்ந்து, மலசலங்களை ஒழித்துக் கோசத்தை இடதுகையால் பிடித்துச் சென்று, தண்ணீர்மொண்டு சௌசம் பண்ணி, ஒருதரம் தண்ணீராலும் மண்ணாலும் கோசத்தைச் சுத்தமாக்கி, மூன்றுமுறை மண் இட்டுக் குதத்தைக் கழுவியக்கையைப் பத்துமுறையும் இரண்டுகைகளையும் சேர்த்து ஏழுமுறையும், கால்களை ஏழுமுறையும் தண்ணீரால் சுத்திசெய்யக் கடவர். இப்படிச் செய்வது கிரகஸ்தர்களுக்கு உரியதாம். இதன் இருமடங்கு பிரமசாரியும், மும்மடங்கு வானப்பிரஸ்தனும், நான்கு மடங்கு சந்நியாசியும் செய்தல்வேண்டும். கரகத்தில்மொண்டு வந்த ஜலத்தை வாயில்விட்டுக் கொப்புளித்துச் சுத்தி அடையும்பொருட்டு இரண்டுதரம் ஆசமனஞ்செய்து, பின்பு (கரநியாசம்) விரல் உறுப்புகளைத் தீண்டக்கடவர். ஸ்திரீபோகம் செய்தால் முப்பத்திரண்டு தரமும், போசனம் செய்தால் பதினாறுதரமும், மலசல விசர்ச்சனம்செய்தால் எட்டுதரமும், வாய் கொப்புளிக்கவேண்டும். ஆணவமலம், காமியமலம், மாயாமலம்

என்னும் மும்மலங்களை அகற்றும் சிவபெருமான் திருவாய் மலர்ந்தருளிய ஆகமங்களை அநுஷ்டிக்கும் சைவர்கள் மலசல விசர்ச்சனம் செய்யும்போதும், மாதர்லீலையிலும், நித்தியாக்கினி வளர்க்கும்போதும், பல்லுக்கொம்புகொண்டுதுலக்கும்போதும், நீராடும்போதும், போசனஞ்செய்யும் போதும் பேசமாட்டார்கள். இன்னாருக்கு இத்தனை அங்குலம் நீளமாயிருக்கவேண்டும் என்று விதித்த அளவுள்ள கொம்புகொண்டு பல்துலக்கி நீராடித் தேகமெல்லாம் விளங்கத் திருநீறுபூசி அன்புமிகுந்து நாள்தோறும்தவறாமல் சிவலிங்கபூசை செய்து புகழ்ந்து, திருவேகம்பமுடையவனைக் காலந்தப்பாமல் கண்டு தொழுது துதித்தல் வேண்டும்.

இப்படிப்பட்ட ஒழுக்கத்தில் தவறாமல்நடக்கும் பிரமசாரியானவன் மாணிக்கச்சோதி மயமானதிருவேகம்ப முடையவரது திருவருளை அடையும்பொருட்டு, ஐயம் திரிபு அறஓதி உணர்ந்த ஆசானிடத்தில் வேதங்களையெல்லாம் முறைமையாக வோதல்வேண்டும், இருக்கு, யசுர், சாமம் என்னும் மூன்றுவேதங்களில் இரண்டு வேதங்களையாவது ஒருவேதத்தையாவது முற்றிலும் நன்றாய்க் கற்றுக்கொள்ளவேண்டும். ஆவணிமாசத்திலும் புரட்டாசிமாசத்திலும் பௌர்ணிமியில் வேதங்களைப்படிக்க ஆரம்பிக்கவேண்டும். தைமாசம்பௌர்ணிமியில் முடிக்கவேண்டும். மறுபடியும் சுக்கில பட்சத்தில் ஆரம்பித்துச் சுக்கில பட்சத்திலேயே முடித்தல் வேண்டும்.

மந்திரம், வியாகரணம், நிகண்டு, சந்தோபிசிதம், நிருத்தம், சோதிடம் முதலிய ஆறுஅங்கங்களைக் கிருஷ்ணபட்சத்தில் ஓதுவதற்கு ஆரம்பிக்கவேண்டும். விலக்கு நாள்களில் ஓதுவதுகூடாது. அவரவர்களுக்கு வெவ்வேறாக வேதங்களில் விதித்தபடி அந்தணர், அரசர், வைசியர் என்னும் இருபிறப்பாளர் மூவரும் தத்தமக்குரிய அரைஞாண், உடை, தண்டம், பூணூல் உத்தரீயம் முதலியவைகளை முறைமையாகக் கொள்ளக்கடவர். விதிப்படி நித்தியாக்கினி வளர்த்து அதில் உண்டாகும் விபூதி அணிந்து கொள்ளக்கடவர். அந்தணர் பிச்சை எடுக்கப்போனால் பவதிபிக்ஷாந்தேகி என்றும் அரசர்கள் பிக்ஷாம்பவதிதேகி என்றும் வைசியர்கள்பிக்ஷாம்தேகிபவதி என்றும் சொல்லிப் பிச்சை எடுப்பது முறைமையாம். வயசில் குறைந்தவர்கள் வயசில் முதிர்ந்தவர்களைக் கண்டால் வணங்குக. தம்மை வணங்கியவர்களைப் பெரியோர்கள் ஆசீர்வதிக்க. இப்பொழுது யாம்சொல்லிய பிரமசாரி ஒழுக்கத்தில் சிறிதும் தவறாமல் நின்று, ஓதிஓதி உணருந்தோறும் உணர்ச்சி உதவும் வேதவேதாந்தங்களை ஓதி உணர்ந்த

வர்கள் முனிவர்கடன் கழித்து, வேதவடிவாய் விளங்கும் ஒரு மாவடியில் இனிது வீற்றிருக்கும் ஏகாம்பரநாதருடைய இன்னருள் பெற்று நிமல நித்தியானந்த வீட்டுக்கு உரியவர் ஆவார்கள்.

நான்காவது சாதியார் ஆகிய சூத்திரர்கள் அகப்பற்று, புறப்பற்று, என்னும் இரண்டு பற்றுகளைப் பற்றறத் தொலைத்துப் பத்திமிகுந்து, காஞ்சிமாநகரத்தில் நிலையாக வாசம் செய்ய விரும்புவார் ஆயின் திருவேகம்பத்தைச் சூழ்ந்து விளங்கும் ஏகாம்பரபுரத்தில் தங்கித் திருநீறும் திருக்கண்மணிமாலையும் தேகத்தில் விளங்கத் தரித்துச் சிவதொண்டுகள் பலவும்செய்து, மாவடியில் பெருஞ்சோதி மயமாய் விளங்கும் ஏகாம்பர நாதனைத் தினந்தோறும் காலம் தப்பாமல் கண்டு தொழுது வாழக்கடவர்.

பிரமசாரியானவன் வேதவேதாங்கங்கள் எல்லாவற்றையும் ஓதி உணர்ந்தபின்பு இல்வாழ்க்கையில் இச்சை இல்லாதவன் ஆனால், தன் ஆசிரியனிடத்திலேயே சுகமாய்வாழ்ந்திருக்கவேண்டும். இச்சை இருந்தால் தன் அருட்குருவின் அனுமதி பெற்றுத் தேவர்கடன் பிதிரர் கடன்களைத்தீர்க்கும்பொருட்டு, அழகினாலும் கற்பினாலும்சிறந்துவிளங்கும் ஓர்கன்னிகையைவிதிப்படி மணம்புரிந்து மனைவாழ்க்கையில் மகிழ்ந்துவாழ்வது நியாயமாம். முப்பத்திரண்டு கவளம் விழுக்காடு பகல் இரவு என்னும் இரண்டு வேளைகளில் போசனம்செய்வதும் ஐந்துவகையானயாகங்களைச்செய்வதும் விதிக்கப்பட்ட நாள்களிலே தன்மனைவியை மருவுதலும் இவைபோல்வனவும் இல்வாழ்க்கையில் இருப்பவர்களுக்கு உரியவைகளாம். ஓமம்வளர்த்தல் தெய்வயாகமாம். நீர்க்கடன் ஆற்றல் பிதிர்யாகமாம். பூதபலியிடுவது பூதயாகமாம். வேதியர்க்கு அன்னமிடுவது மானிடயாகமாம். வேதம் ஓதுதல் பிரமயாகமாம். இந்து ஐந்துவகையான யாகங்களிலேபிரமயாகமானது மேற்பட்டுவிளங்கலால் வேதியர்கள் இந்தப்பிரமயாகத்தை அவசியம் அநுஷ்டிக்க வேண்டும். விடியற்காலையில் நித்திரை தெளிந்து எழுந்து செய்யவேண்டிய காரியங்களைச் செவ்வையாய்ச்செய்து, நகரத்தின் புறத்தில் செல்லும் தெய்வத் தன்மையுள்ள வேகவதிக்குச்சென்று நீராடி, இரண்டு வெள்ளைவேஷ்டி உடுத்துத் திருக்கண் மணிமாலையும் திருநீறும் தரித்துப் பின்பு தர்ப்பாசனத்தின்மேல் தங்கி வேதங்கள் மகிழும்படி மூன்றுதரம் ஆசமனம்செய்து வாயைத் துடைத்து முறையாகத் தொட்டு வேப் பண்ணுடன்கூடிய வேதங்களைக் கிரமமாய் வாசித்தல்வேண்டும். வேதங்கள் செய்த தபோபலத்தால் சூதவிருட்சமாகிக் குளிர்ந்தநிழலைத் தருவதனால் ஏகாம்பர நாதருக்கு இனிமை யுள்ளதான இந்தப்பிரமயாகம்

மற்றத் தருமங்கள் எல்லாவற்றிலும் மேற்பட்டு விளங்கும். ஆதலின் தங்கள் சத்திக்குத்தக்கபடி வேதத்தில் எவ்வளவாகிலும் வாசித்துக் காயத்திரி சதஉருத்திரம், பஞ்சாட்சரம் என்னும் மந்திரங்களை விதிப்படி கணித்து, எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்கும் நிறைந்திருக்கும் சிவபெருமானைப் பூசிப்பதற்குவேண்டும் புஷ்பங்களைக் கொய்து, கொண்டுபோய் வீட்டில் வைத்துவிட்டுப் பின்பு வீட்டிற்குரிய வேலைகள் எல்லாவற்றையும் செய்து, உச்சிவேளையில் சிவகங்கைக்குச் சென்று நீராடி அநுஷ்டானங்களை முடித்து, ஆலயத்துள் முறையாகச் சென்று திருவேகம்ப முடையவரைக்கண்டு தொழுது துதிசெய்து மீண்டு தன்வீட்டிற்கு வந்து, தன் த்மார்த்த சிவ லிங்கமூர்த்தியை அன்புடன் பூசைசெய்து, சிவபூசைக்குச் சிறந்த அங்கமாய் விளங்கும் ஓமாக்கினியை வளர்த்து, அறம்முதல் இளைஞர் ஈறானவைகளுக்குப் பலிகொடுத்துப் பிரமயாகம் முதலிய ஐந்து வகையான யாகங்களைச் செய்து, அவ்வுச்சிப் போதில் வந்த அதிதிகளை, உபசரித்து உண்பித்து, அகதிகளுக்கு ஐயமிட்டு, நோயாளிகளையும் கர்ப்பிணிகளையும் பிள்ளைகளையும் கிழவர்களையும் முந்தி உண்ணச்செய்து, பின்பு தன் சுற்றத்தாருடன் கூடி மகிழ்ந்து உண்பது தகுதியாம், உண்ணும்போது சிவ பெருமானைத் தியானித்துப் பிராணவாயுவினால் உதராக்கினியை எழுப்பி, ஆகுதிச் செய்கைக்கு ஒப்பாகக் கறி, தயிர், நெய்யுடன் முப்பத்திரண்டு கவளம் உண்டு கை அலம்பித் தாம்பூலந்தரித்துப் பின்பு தன் சுற்றத்தாருடன் அன்பு மிகுந்து காஞ்சிப்புராணம் கேட்டல் வேண்டும். நான்கு வேதப் பொருள்களாய்க் கதைகளுக் கெல்லாம் இடமாய் அறம் பொருள். இன்பம் வீடென்னும் நான்கு பயன்களைத் தரும் திருவேகம்பர் மகிமையையும் காமாட்சிதேவி மேன்மையையும் விளங்கச் சொல்லுவது இதுவே. சாஸ்திர சாம்பிரதாயங்களையும் வருணாசிரம தர்மங்களையும் நுட்பமாய்த் தெரிவிப்பதும் இதுவே. ஆதலின் இந்தக் காஞ்சிப் புராணத்தை எந்நாளும் பெரியோர் படிக்கக்கேட்பது முறைமையாம்.

கல்வி கேள்விகளாற்சிறந்த பெரியோர்கள் சூரியன் அஸ்தமிக்கிற வரையில் வாசிக்கக்கேட்டு, அந்திவேளையில் செயயும் அநுஷ்டானங்களை முடித்து, ஆலயத்திற்குச் சென்று திருவேகம்ப முடையவரைக் கண்டு தொழுது, வீட்டிற்குப் போய்ச் சமிதைகொண்டு அக்கினியை வளர்த்து, மனமகிழ்ந்து விருந்தினர் முதலானவர்களுடன்கூடி உண்டு, இரவில் தன்பத்தினியுடன் பள்ளிஅறையிற்சென்று பள்ளிகொள்வது முறைமையாம். பேரழகுவாய்ந்திருக்கும் பிறர்பத்தினிகளைத் தன்தமக்கைபோலவும் தங்கைபோலவும் எண்ணக்கடவர். உருத்திரகணிகையரான தாசிகளைத்

தாய்போல்நினைத்தல்வேண்டும். வெள்ளாட்டியுடன்கலத்தல்கூடாது.வைணவப்பெண்களுடன் கலத்தல் அவ்வெள்ளாட்டிப் பெண்களுடன்கலத்தல்போலாம் ஆதலின் நல்லோர்கள் வைணவப் பெண்களைச் சொப்பனத்திலும் நினைக்கமாட்டார்கள். தன்பத்தினி போகமும் சந்ததியின் பொருட்டே ஆதலின் விலக்கப்பட்ட நாள்களை ஒழித்து, விதித்தநாளிற் புணர்ந்து நீங்கிப் பின்பு சிவபெருமானுடைய சீர்பாத கமலங்களைத் தியானித்தலுடன் நித்திரைசெய்க, இவ்விடத்தில் யாம்சொல்லியபடி எந்நாளும் தவறாமல் நடக்கின்றவர்கள் எம்பெருமானுடைய திருவருளுக்கு உரியவர் ஆவார்கள்.

காஞ்சிமாநகரத்திலே திருவேகம்பர் சந்நிதானத்தில் மெய்யறிவுடைய பெரியோர்கள் கொள்ளும்படி அஸ்வதானம், வஸ்திரதானம், அன்னதானம் முதலிய தானங்களில் தமக்கு இசைந்த தானம் செய்தலாவது, அந்தந்தத்தானம் ஒவ்வொன்றும் அனந்தமாய் விளங்கும். அந்த ஸ்தலத்தில் மெய்யறிவு விளங்கப் போதிக்கிறவன் வீட்டின்பம் அடைவான். ஓதல், ஓதுவித்தல் வேட்டல், வேட்பித்தல், ஈதல், யாசித்தல் என்னும் இவ்வாறு தொழிலும் அந்தணர்களுக்கு உரியனவாம். ஓதல், வேட்டல், ஈதல், உலகத்தைப் பாதுகாத்தல், ஆயுதப்பயிற்சி, பொருதல் என்னும் இவ்வாறு தொழிலும் அரசர்களுக்கு உரியனவாம். ஓதல் வேட்டல், ஈதல், வர்த்தகம்செய்தல், பசுகாத்தல், ஏருழுதல் என்னும் இந்த ஆறு தொழிலும் வைசியருக்கு உரியனவாம். மேற்சொல்லியவைகளில் ஓதுவித்தல், வேட்பித்தல், யாசித்தல் இம்மூன்றும் அந்தணருடைய சீவனவிருத்திக்கு உரியவைகளாம். உலகத்தைப் பாதுகாத்தல், படைக்கலம் பயிலுதல், போர்செய்தல், இம்மூன்றும் அரசருடைய சீவனவிருத்திக்கு உரியனவாம். பொருள் ஈட்டல், பசுக்காத்தல், ஏருழுதல் இம்மூன்றும் வைசியருடைய சீவனவிருத்திக்கு உரியனவாம். கல்வி கேள்விகளிற் சிறந்த பெரியோர்களுக்கு இருதவிருத்தியும் அமிர்தவிருத்தியும் தகும். மிருதவிருத்தியும் ஆகும். பிரமிருதவிருத்தியையும் சத்தியாநிருத விருத்தியையும் நாய்விருத்தியையும் தள்ளிவிடவேண்டும். உபாதானம் வாங்குவதாகிய உஞ்சவிருத்தி இருதவிருத்தியாம். கொஞ்சமேனும் யாசகம் செய்யாமல் உள்ள பொருளைக்கொண்டுவாழ்வது அமிர்தவிருத்தியாம். பிச்சை எடுத்து உண்டுவாழ்வது மிருதவிருத்தியாம். ஏருழுது பயிரிடலால் வருவது பிரமிருதவிருத்தியாம். வர்த்தகம்செய்வதுசத்தியாநிருத விருத்தியாம். சேவகம் செய்வதுநாய்விருத்தியாம். ஆதலின் அதமம்சேவகாவிர்த்தி என்னும்நாய் விருத்தியைநீக்கி, இருபிறப்பாளர்கள் தங்கள்சாதிக்குத்தக்க விருத்தியால்

தங்களைக்காப்பாற்றிக்கொண்டு, மெய்ஞ்ஞான சாஸ்திரம் பலவாசித்து, தங்கள் தங்களுக்கு உரிய ஒழுக்கங்களில் தவறாமல் நடப்பது முறைமையாம். கைகளிலும் காதுகளிலும் தலையிலும் கழுத்திலும் எப்போதும் உருத்திராட்சம் அணிதலும், தேகமெல்லாம் திருநீறுபூசி, நெற்றி, மார்பு, நாபி, முழந்தாள்கள் இரண்டு, புயங்கள் இரண்டு, முழங்கைகள் இரண்டு, மணிக்கட்டுகள் இரண்டு, விலாப்புறம்இரண்டு, முதுகு, கழுத்து என்னும் பதினைந்து இடங்களிலும், ஒரு அங்குல அளவு இடைவெளியுற்றதாய் ஒன்றை ஒன்று தீண்டாதபடி திரிபுண்டரம் தரித்தலும் ( திரிபுண்டரம் மூன்றுகுறி சிரசுடன் பதினாறு இடமாகவும் கொள்வதுண்டு ) வைதிக மார்க்கத்தை அநுசரிப்பவர்களுடைய மரபு என்று சுருதிகள்சொல்லும், ஆதலால் இந்தவிதிகளை எந்நாளும் கைசோரவிடாமல் உறுதியாய்ப்பிடிக்கக்கடவர். கைசோரவிடுவார் ஆயின் கடையர் ஆவார்கள், வேதாகமசைவமார்க்கங்களை ஆதரவாகக்கொள்ளும் தன்மையில்லாத சூத்திரர்கள் முதலானவர்களுக்கு மேற்சொன்னபடி திரிபுண்டரம் முதலியவைகளைத் தரித்துக்கொள்ளலாம். மற்றவர்களுக்கு ஆகாது. உடல் உயிர்களுக்கு உறுதியைத் தேடினவர்கள் உண்மையால் விளங்கும் வேதாகமங்கள் விதித்த காரியங்கள் ஆகிய இவைகளையும் மற்றும் இவைபோல்வனவற்றையும் கைவிடாமல் அநுசரித்து விலக்கப்பட்டவைகளை விலக்கிவிடுவது முறைமையாம்.

தவத்தினால் செருக்கு அடைதல், கண்டபடிபிதற்றல், பொய்சொல்லுதல் ஐம்புலன்களை அறிவால் அடக்கிய அந்தணரைத் தூஷித்தல், தான் செய்த உதவியைத்தானே புகழ்ந்துபேசுதல், எந்தஉயிரையாயினும் கொல்லுதல், பிறருக்கு இடர்செய்தல், கோள்சொல்லுதல்; மாதவிடாய் அடைந்திருக்கும் மனைவியைத்தொடுதலும் வழுஎன்று சொல்லப்படும், மனையாளுடன் உண்ணுதல், அவளுடன்படுத்து உறங்கல், மனைவி கொட்டாவிவிடும்போதும் பசித்திருக்கும்போதும் வேலையில்லாமல் சும்மா இருக்கும்போதும் உண்ணும்போதும்அந்த மனைவியைப்பார்த்தலும் சூரியபகவான் கிழக்கே உதிக்குங்காலத்திலும் மேற்கேஅஸ்தமிக்கும்வேளையிலும் உச்சியில் வரும்பொழுதிலும் அந்தச் சூரியபகவானைப் பார்த்தலும் பழுது என்று சொல்லப்படும். ஆடையில்லாமல்நீராடுதலும் ஒற்றைவஸ்திரம் உடுத்து உண்ணுதலும் நடக்கும்வழிநடுவிலும் சாம்பலுக்குள்ளும் பசுமாட்டுத்தொழுவத்திலும் நெருப்பிலும் நீரிலும் மலவிசர்ச்சனம்செய்தலும் அந்த இடங்களில் எச்சில் உமிழ்தலும் நிருவாணமாயிருக்கும் பெண்ணைப் பார்த்தலும் கால்களை நெருப்பிற்காய்ச்சுதலும் அந்திவேளையில் சாதம்சாப்பிடுவதும் ஆகிய இவைகள் எல்லாம் விலக்கு என்றுசொல்லப்படும். வானத்தில் இந்தி

ரதனுசைப்பார்த்து அதை மற்றவர்களுக்குக்காண்பித்தலும் வீணே தூஷித்தலும்பெருஞ்சண்டைவிளைத்தலும்கைகளைக்குவித்துத் தண்ணீர்குடித்தலும்அக்கினி, சிறந்தபசு, பார்ப்பார், தேவர்கள், சூரியன், பெரியோர்கள், சந்திரன்இவர்களுக்குமுன் தன்இஷ்டப்படி உட்காந்திருத்தலும் இவைபோல்வன பிறவும் தீங்கு என்று சொல்லப்படும். நகத்தையும் உரோமத்தையும் அறுத்து எறிதலும் நகத்தினல் பல்லைக்கிண்டுதலும் பாழ்மனையில் தனியே படுத்துத் தூங்குதலும் தூங்குகிறவர்களை எழுப்புதலும் தலையை வடக்கேவைத்துக்கொண்டு தூங்குவதும் துரும்புகிள்ளுதலும் ஓட்டைத் தட்டுவதும் தனியே ஊர்ப்பிரயாணம் செய்தலும் பிறர் அணிந்த வஸ்திரம், செருப்புமுதலியவைகளை அணிதலும் ஆகிய இவைகளை எல்லாம் ஒழித்தல்வேண்டும், பாவமே மிகுந்திருக்கும் ஊரிலும் பெருநோய் உலாவும் ஊரிலும் சண்டை விளைக்கும் இழிகுலத்தாரும் சாதி ஆசாரங்களில் தப்பினவர்களும் கொடுமை செய்கின்றவர்களும் வசிக்கும் ஊர்களிலும் வாசம்பண்ணுவதும், மலைகளில் நெடுங்காலம் வசித்தலும், கடப்பதற்கு அருமையான கணவாய்களில் ஏறுதலும் இறங்குதலும், இளவெயிலில் காய்தலும், நீராடாமலும் சிவலிங்கபூசை செய்யாமலும் போசனம் செய்வதும் வழு என்று சொல்லப்படும்

வீடுதூரம் ஆனவளையும் சாதிசமயா சாரங்களில் தவறிப்போனவனையும் சண்டாளனையும் பிணத்தையும் புத்தர்களையும் சங்கு சக்கர முத்திரையிடப்பெற்றவர்களையும் தீண்டுதலும் காணுதலும் விலக்கேயாம். ஆதலின் இப்படிப்பட்டவர்களைத்தீண்டுதலும் காண்பதும்கூடாது. சந்திரகிரணம் பொழியும் திரிபுண்டரம் இல்லாமல் தேகத்தின்மேல் திருநீறு பூசிக்கொண்டிருக்கின்ற பிராமணர்களுடைய முகத்தை மறந்தாயினும் பார்த்தவர்கள் உடனேபோய்த் திருவேகம்பமுடையவரைத் தரிசித்தால் சுத்தம் அடைவார்கள். வேதங்களுடன் அவற்றிற்கு அன்னியமான நூல்களையும் யாகத்துடன் மற்றப் புண்ணியங்களையும் மாசுமறு வில்லாத பார்ப்பாருடன் சூத்திரரையும் காஞ்சிமாநகரத்துடன் வேறு நகரத்தையும் சந்திரசேகரனுகிய சிவபெருமானுடன்பிரமவிஷ்ணுக்களையும் ஒப்பென்று ஒருபோதும்சொல்லாதிருக்கக்கடவர். சொல்லின் மீளாநரகத்திற்கு ஆளாய் நெடுங்காலம்வருந்துவர் என்பதற்கு எவ்வளவும்சந்தேகமில்லை. வேதாகமஙகள் இவைபோல்வன வற்றையெல்லாம் விலக்குகளாக விளம்பும் ஆதலின் இந்த விலக்குகளை வில்க்கிவிடுக, வேதாகமங்களுக்குப் புறம்பான நூல்கள் எல்லாம் கெடுதியேதரும். ஆதலின் அந்த வேதாகமங்களுக்குப் புறம்பான நூல்களைத் தள்ளி விட்டுச் சத்திய வேதமார்க்கத்தில் தவறாமல் ஒ

மூகிப் பூஞ்சோலை சூழ்ந்து விளங்கும் காஞ்சிமாநகரத்தில் திருவேகம்ப முடையவரது திருவருளுக்கு உரியதொண்டருடன் கலந்துகொண்டாடு வது முறைமையாம்.

மற்றைய ஸ்தலங்களில் செய்யும் புண்ணியங்களெல்லாம் காஞ்சிமா நகரத்தில் செய்யும் புண்ணியத்திற்குச் சிறிதும் இணையாகமாட்டாது. ஆதலின் தாய்தந்தையர் இறந்துபோன மாசமும் திதியும் வருஷந்தோறும் வரும்போதும் யுகாதியிலும் மனுவாதி அமாவாசை முதலிய நாள்களிலும் தென்புலத்தார்களைக்குறித்து வேதாகமங்கள் ஓதி உணர்ந்தவேதியர்க்கு முறைமையாகச் சமாராதனை செய்க.

தென்புலத்தார் யார் எனில் பிரமதேவன் பெற்ற மரீசிரிஷி முதலான சிறுவர்கள், அவர்களில் மகிழ்ச்சி அடையும் மரீசி விராட்டு முதலானவர்கள் பெற்றபிள்ளைகளான சுரர் அசுரர் முதலானவர்களுக்கு அன்புடைய பிதிரர் ஆவார்கள். கவிரிஷிபெற்றபிள்ளைகள் அந்தணருக்கும் அங்கிராரிஷி பெற்றபிள்ளைகள் அரசருக்கும் புலத்தியரிஷிபெற்றபிள்ளைகள் வைசியருக்கும் வசிஷ்டரிஷிபெற்றபிள்ளைகள் சூத்திரருக்கும் பிதிர்த்தேவர்கள் ஆவார்கள். முனிவர்களுக்குத் தென்புலத்தார் பிறந்தார்கள். அத்தத்தென்புலத்தார்களுக்குத் தேவர்களும் அசுரர்களும் பிறந்தார்கள். தேவர்களால் சராசரப் பொருள்கள் எல்லாம் உற்பத்தியான முறைமையால் இத்தன்மையான சிறப்பமைந்த பிதிரர்களைக் குறித்துச் சிவபத்தராகிய சைவப் பிராமணர்கள் மனமகிழும்படி இந்தக் காஞ்சிமா நகரத்தில் சமாராதனை செய்வது தகுதியாம்.

இந்தப்பிரகாரம் இல்வாழ்க்கையில் இருபத்தைந்து வயசுமுதல் ஐம்பதுவயசுவரையில் சுகமாயிருந்து, பின்பு நரைதிரைமூப்புவருவது உண்மையானபடியால் அறிவிற்சிறந்த பெரியோர்கள் மனைவியைமகனுடைய சம்ரட்சணையில் வைத்தாவது வாவென்று தன்னுடன் அழைத்துக் கொண்டாவது வனத்திற்போய் வாசம் செய்ய வேண்டும். யாவராலும் விரும்பப்படும் காஞ்சிமாநகரத்திற்குப் புறமான இடத்தை அடுத்துப் பர்ணசாலையில்வசித்துக் கோடைகாலத்தில் பஞ்சாக்கினி நடுவிலும் மழைகாலத்திலும் பனிக்காலத்திலும் சலத்திலும் தங்கி அருந்தவம்செய்து, மனங்குழைந்து உஞ்சவிருத்தி கொண்டு காலக்ஷேபம் செய்க.

உருத்திராட்சமும் விபூதியும் அணிந்து, திருவேகம்பரையும் தேவி காமாட்சியையும் தியானித்துப் பஞ்சாட்சரங்களைச் செபித்துச் சிவபூசை

செய்து, அவ்வண்ணம் வாசம் செய்த பின்பு வனவாசம் செய்து பண்ணிய தபோபலத்தால், மாசில்லாத ஞான முடையவராகி இவ்வுலகவாழ்வையும் பிரமலோக முதலிய தேவலோக வாழ்வையும் பற்றறவெறுத்து மோட்சதாகம் உடையவனுகித் துறவறத்தை அடைந்து, வேதாந்த விசாரணை செய்தல் வேண்டும். ஐம்புலன்களால் வரும் ஐந்து ஆசைகளை ஒழித்து மாசில் மணிபோல் விளங்கும் ஆசாரியனிடத்தில் ஆத்மஞான சாத்திரம் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிஷ்டை கூடும் இந்த முறைகளைக் கிரமமாய் அடையும் நெறியில் நிலை நின்று, சிவபெருமானுடைய சீர்பாத கமலங்களைச் சிந்தையில் கொண்டு செல்லுவது தகுதியாகும்.

## வேதத்தின் உட் கருத்தாவது.

பாசத்தை நீக்கிப் பசுக்களை வீட்டிற்குஅனுப்பும் பொருட்டுப் படைத்துக்காத்து அழிக்கும் பரமபதிசிவபெருமானே என்று உபக்கிரமம் உபசங்காரம் முதலான இலிங்கங்களால் நிச்சயப்படுத்துவது கேள்வியாம். உபமானத்தாலும் ஏதுவினுலும் தான்கேட்டதை மனதிற்கொள்ள நன்கு நினைப்பது சிந்தனையாம். அதனைப் பலமுறைபொருந்தப் பழகுதல் தெளிதலாம். சுவாநுபூதியில் விளக்கமுறக்காண்பதே நிஷ்டைஎன்று அறிவிற்சிறந்த பெரியோர்கள் சொல்லுவார்கள். இவ்வண்ணம் கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிஷ்டை கூடல் என்பவைகளைச் சாதித்து. யான் என்னும் அகப்பற்றையும் எனது என்னும் புறப்பற்றையும் ஒழித்த உத்தமத் துறவிகள் உளரால் ஒருநாள் ஒருபோது மாதோவரம் எடுத்துச் சுத்தசலத்தில் அலம்பிச் சிவபெருமானுக்கு ஆராதனைசெய்து, அந்தவிதிப்படி ஒரு நாளைக்கு ஒரேவேளையாக எட்டுபிடிசாதம் உட்கொள்ள வேண்டும். பாவமென்று சொல்லப்பட்டவைகள் எல்லாவற்றையும்பரிகரித்தல், சான்றோர்கள் கட்டிக் கழித்த வஸ்திரத்தில் காவிதோய்த்து உடுத்தல், பெரிய மரத்தடியில் தங்குதல், எறும்பு முதல் யானை ஈறுகவுள்ள சகல சீவன்களையும் சமமாகப்பார்த்தல், தனியே செல்லுதல், அற்பசகவாசத்தை அறவிடுதல் ஐம்பொறிகளின் வழியில் மனதைச் செல்ல விடாமல், அடக்குதல், கால் அடிகளைப் பார்த்தபடி எடுத்து வைத்தல் வஸ்திரத்தால் வடித்தெடுக்கப்பட்ட தண்ணீரைக் குடித்தல், மனதில் பரிசுத்தமானதை நினைத்தல், பொய்சொல்லாமல் மெய்யே பேசுதல், நன்மை உண்டாகும்படி பேசுதல் முதலிய எல்லாம் சீவன் முத்தனுகிய துறவிக்கு உரிய இலக்கணம் என்று அறிவுடையோர் சொல்வர்.

தனக்கென்று வீடு கட்டிக்கொள்ளுதல், அக்கினி வளர்த்தல், கல்வி கற்பித்துச் சீவனம் செய்தல், சிறைக்கு ஒப்பான தேகத்தின் பொருட்டுக் கோபித்தல், அதிகமாய்ப் பேசுதல், காணு இடத்தில் இகழ்ந்து பேசுதல், பிச்சையின் பொருட்டே அல்லாமல் வேறுகாரியமாய் ஊருக்குட்

செல்லல், தனக்குத் துன்பம் செய்கிறவர்களையும் கோபித்தல் முதலிய இவைகள் எல்லாம் துறவிக்கு வேண்டுவனவல்ல. சிவபூசை, உருத்திராட்சம், விபூதி முதலியவைகளைக் கனவிலும் மறவாமற் கொள்ளுவதும், யாகத்தில் கொள்ளும் (சமசம்) மண்மரப் பாத்திரம் போல் பொன், வெள்ளி, முதலிய உலோகங்களால் செய்யப்படாத வேறு மண்மரப் பாத்திரங்களில் கொள்ளும் சலத்தால் பரிசுத்தப் படுத்திக் கொள்வதும் துறவிகளுக்கு உரியனவாம் என்று பெரியோர் சொல்லுவர்.

எலும்புகளை நரம்பினால் பின்னிக்குடலும் வழும்பும் தசையும் மெத்தென்று வைத்துப் புழுநிறைந்து புண் அழுகி உதிரம் பெருகித் துர்க்கந்தம் வீசித் துன்பம் தரும் நோய்களுக்கெல்லாம் இடமாய்ப் புறத்தில் தோலால் மூடப்பட்டிருக்கும் அசுத்தமான இந்த மாமிச தேகமே உயிரை வருத்தும் பிணியாம். இந்தத் தேகத்தைப்போல் உயிரை வருத்தும் பிணி வேறில்லை. ஆதலின் பிறவிப்பெரும்பிணிக்கு அஞ்சுகிறவர்கள் பெரும் பிணிகளுக்கெல்லாம் இடமாயிருக்கும் பிறவியைப் போக்கிப் பேரின்ப வீடு கொடுக்கும் தரும வயித்தியன் பிறவி யில்லாப் பரம் பொருளான சிவபெருமான் ஒருவரே என்று தமக்குள் தேறித்தெளிந்து, அந்தப் பரம்பொருளான தட்சிணா மூர்த்தியை விரும்பிச் சரணாகதியாக அடுத்து ஆனந்த வீடு பெறக்கடவர். மற்றைத் தெய்வங்கள் எல்லாவற்றையும் விடுத்து, வேதமா வடியில் வீற்றிருக்கும் திருவேகம்பர் திருவடிகளே துணை என்னும் கருத்து உடைய வராய் வாழ்வு வந்தாலும் தாழ்வு வந்தாலும் சுகதுக்கங்களை அடையாமல், எப்பொழுதும் சுகதுக்கங்களைச் சமமாகக் கொண்டு ஒழுகுவது துறவிகளுக்கு இயல்பாம். பொறுமை, கல்வி, உண்மை, பரிசுத்தம், ஐம்பொறி அடக்கல், அடக்கம், உறுதி, நாணம், கோபியாமை, திருடாமை' விபூதி உருத்திராட்சம், சிவபூசை, தியானம் என்னும் பதினான்கு தருமங்களும் துறவிகளுக்கு உரியனவாம். மேலே சொல்லிய பிரமசாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி என்னும் நால் வருக்கும் உரிய நிலைகளில் தவறாமல் நடந்து மாவடியில் வாழ்ந்தருளும் திருவேகம்பருடைய ஆலயத்திற்கு உரிய தொண்டு செய்து கொண்டு நீடூழியாக விளங்கும் காஞ்சிமா நகரத்தில் வாசம் செய்கிறவர்கள் ஆணவாதி மும்மலங்களை அறுத்து விட்டு அனந்தானந்த முத்தி வீடு பெறுவார்கள்.

இழுக்க லுடையுழி யூற்றுக்கோலற்றே
ஒழுக்க முடையார் வாய்ச்சொல்.

ஒழுக்கமுடையார் உபயத்தாள் போற்றி.

---

அறுபதாவது.

## சிவபுண்ணியப்படலம்.

பெரியோர்களே! காஞ்சிமாநகரத்தில் வாஞ்சையுடன் வாசஞ்செய்யும் நியதி உடையவர்களாய்த் திருவேகம்பர் திருவடிகளைத் தொழுது துதிப்பவர் பெருமையைச் சிறியேனுடைய நாவோ சொல்லமாட்டுவேன்? இனி மூன்றுலகத்தாரும் புகழ்ந்துபேசும் பன்னிரண்டு திருப்பெயர் படைத்து விளங்கும் அந்தக்காஞ்சிமா நகரத்திலே செய்யத்தக்க சிவ புண்ணியங்களையும் சொல்வோம் கேளுங்கள் என்று சூதமாமுனிவர் சொல்லத்தொடங்கினர்.

எந்தத் தருமமானாலும் காஞ்சிமாநகரத்தில் செய்யப்பட்டால் அது மேன்மை பெறும். அந்தத் தருமங்களில் சிவதருமமே சிறந்தது. சிவதருமங்கள் சிவலிங்கப்பிரதிஷ்டை, திரு உருவப்பிரதிஷ்டை, திருகோயிற் பணிவிடை, பூசை, திருவிழா, சிவனடியார்க்குத்தொண்டுசெய்தல் முதலாகப் பலவகைப்படும். அவைகளில் சிவபெருமான் மகிழ்ந்தருளும் சிவலிங்கப்பிரதிஷ்டையானது பாவம் என்னும் கட்டறுத்துப் பிரபஞ்ச வியாபாரத்தைப் பொடியாக்கி, வினை என்னும் பகையையும் பிறவி என்னும் பெரும்பகையையும் அற வீசிச் சிவலோகத்திற் செலுத்த வல்ல ஒரு வாளாயுதமாய் மாறாப் பெருவாழ்வுதரும். அறிவிற் சிறந்த பெரியோர்களே! பிரமதேவன், விஷ்ணு, தேவேந்திராதி தேவர்கள், முனிவர்கள், சித்தர்கள் எல்லாரும் மலைகளிலும், வனங்களிலும், நதி ஓரங்களிலும், கடற்கரைகளிலும் எங்கெங்கும் சிவபெருமான் மகிழ்ந்தருளும் சிவலிங்கப்பிரதிஷ்டை ஒன்றே தங்கள் பெயர்விளங்கச் செய்துவைத்தார்களே அன்றி வேறு என்ன செய்தார்கள்? மேலான தவம், தீர்த்தம், தானம், யாகம், துறவு, விரதம் எல்லாம் சிவலிங்கப்பிரதிஷ்டை செய்வதனால் வரும் பிரயோசனத்தின் கோடிபங்கில் ஒரு பங்குக்கு ஆயினும் ஒப்பாக மாட்டாது. ஆதலின் இப்படிப்பட்ட சிவலிங்கத்தை வேதிகையுடன் சிலையால் பிரதிஷ்டை செய்கிறவர்கள் எல்லாரும் எடுத்த தேகத்தினால் உண்டான பாவங்களைப் பரிகரித்துப் பரமானந்த வீடு பெறுவார்கள். இதற்கு எவ்வளவேனும் சந்தேகம் அடையவேண்டாம். இந்த முறையாக ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் சிவலிங்கங்களைக் கண்டு கைகூப்பித் தொழுகின்றவர்களும் நவரத்தினச்சோதி விமானத்தின்மேல் ஏறிக்கொண்டு, அரம்பையர் வெண்சாமரை போடவும், அமரர்கள் எல்லாரும் போற்றவும் பலவாத்தியங்கள் எங்கும் முழங்கவும், தேவேந்திராதி தேவர்கள்கண்டு இவ்வளவு வைபவம் நமக்கில்லையே என்று பொறாமை அடை

யவும், மகிழ்ந்துபோய்ச் சிவலோகத்தை அடைந்து சிவானந்த போகத்தை அநுபவிப்பார்கள். மற்றும் திரு உருவப்பிரதிஷ்டை முதலியவற்றின் பிரயோசனங்களையும் சொல்லுகின்றோம் கேளுங்கள்.

சக்கரபாணிமுதலிய தேவர்கள் எல்லாரும் துதி செய்யச் சிங்கத்தின் மேற் சிறந்துவிளங்கும் நவரத்தின பீடத்தில் பார்வதிதேவி ஒரு பக்கத்தில் இருக்கச் சுப்பிரமணியசுவாமி நடுவில் இருக்க மாயப்பிறவிக்கு மருந்தாய் விளங்கும் மகாதேவனுடைய திரு உருவம், அடுத்தவர்களுக்கு அநுக்கிரகம் செய்தருளும் ஒருபாதமும் மூன்று கண்ணும் நான்கு புஜமும் சூலாயுதமும் அழகு வாய்ந்து விளங்க இடப்பாகத்தில் அரியையும் வலப்பாகத்தில் அயனையும் நடுப்பாகத்தில் இருபத்தெட்டுகோடி உருத்திரரையும் உண்டாக்கி இருபத்தைந்து தத்துவவடிவங்களும் தோன்றச்செய்து, இடப்பாகத்தில் பிரகிருதியையும் புத்தியில் புத்தியையும் அகங்காரத்தில் தன்மாத்திரைகளையும் தன்மாத்திரைகளில் பொறிகளையும் பொறிகளில் அவ்வவ்விஷயங்களையும், பாதம், குய்யம் உந்தி, கண்டம், தலைகளில் முறையே நிலம், நீர், தீ, காற்று ஆகாயங்களையும் வலக்கண் இடக்கண் என்னும் இரண்டு கண்களிலிருந்து சூரிய சந்திரர்களையும் படைத்துத் திருவடியில் அடங்கி யிருக்கும் கீழ் உலகங்களையெல்லாம் அத்திருவடியினிடமாகவே உற்பத்தியாக்கித் திருமுடியில் அடங்கியிருக்கும் உலகங்களையெல்லாம் அத்திருமுடியினிடமாகவே படைத்தருளிப் பெருங்கருணை வடிவமாகித் தன்னைப்புகழும் அடியார்களுடைய மனவிளக்கு ஆகி, ஆணவாதிமலங்களை ஒழித்தருளும் எம்பெருமானுடைய திரு உருவம், பெருங்கருணை ஒன்றும் முகங்கள் இரண்டும், பாதங்கள் மூன்றும், கூர்மையான தந்தங்கள் நான்கும் காத்தருளாய் என்றவருடைய மலங்கள் ஐந்தும் அறுமாறளிக்கும் கரங்கள் ஏழும் படைத்திருக்கும் எச்சத்தலைவனும் யக்கியபதியின் திரு உருவம், பகைகொண்டு எதிர்த்தவர்களுடைய குடல்குழம்பும்படி இடிபோல் முழங்கி எதிர்த்துச் சூழ்ந்திருக்கும் சேனைகளை எல்லாம் தொலைத்துத் தொலையா வீரமும் பயங்கரமான பார்வையும் படைத்து, வெள்ளிமலை நடந்துவருவதுபோல் விளங்கிவரும் ரிஷபவாகனத்தின்மேல் பார்வதிதேவி சமேதராய்ப் பவனிவந்தருளும் பரமேசுவர மூர்த்தியின் திரு உருவம், உமையவள் ஓரிடத்தில் வீற்றிருக்கும் சமயம் பார்த்து உள்ளே பிரவேசித்து, நெருங்கிநிற்கும் தேவர்கள் விலகும்படி பிரம்பு எடுத்து அடிக்கும் நந்திதேவருக்கு வரங்கொடுத்துக் கணங்கள் எல்லாம் புடை சூழ்ந்து போற்ற மகிழ்ந்துவீற்றிருக்கும் பெருமானுடைய திரு உருவம், சிலம்பின் ஓசை கேட்டுமகிழ்ந்து அருகேவந்து சேரும் அன்

ணப்பெடைபோல் உமையவள் மகிழ்ந்து நோக்கிப் பக்கத்தில் நிற்கவும்
வேதங்கள் முறையிடவும் தேவர்கள் துதிக்கவும் சடைமுடிமேல் ஆகாய
கங்கை அலம்பவும் பேரானந்தக்கூத்தாடும் பெருமானுடைய திரு உரு
வம், செம்பொன் மலைபோல் நான்குபுஜங்களும் செந்தாமரை மலர்போல்
மூன்று கண்களும் உருத்திரவடமும் பாம்பு அரைஞாணும் கபாலம் ஏந்
திய கரமும் அக்கினிபோற் சிவந்திருக்கும் சடைமுடியும் வெண்ணிறமும்
கொண்டு விளங்கும் பெருமானுடைய திரு உருவம், யானையை உரித்து
ப்போர்வையாகப் போர்த்தருளும் கோலமும் புகைவடிவும் சிங்கத்தின்
தோலால் ஆகிய உத்தரீயத்தின் அழகும் செந்தாமரை மலர்போலும்
மூன்று கண்களும் வெண்டலையும் தண்டமும் தாங்கிய கைகளும் கூர்மை
யான தந்தங்களும் பிரமதேவன் படைத்த உலகங்களையெல்லாம் பொரி
போல் கொறித்துக் கொறித்து உமிழும் ஆண்மை படைத்த கொக்காகிய
அசுரனைக் கொன்று வெள் இறகைப் பிடுங்கிச் சந்திர பிறைக்குக்
கலை வளர்ந்து விளங்கினாற்போல் அந்தச்சந்திர பிறையின் பக்கத்தில்
விளங்கச் செருகிய திருமுடியையும், மாயவன் கையில் ஏந்திய சங்கு
மாலைவிளங்கும் தோள்களையும் விளங்கக்காட்டிச் சமுத்திரத்தை வற்றிப்
போக உண்டும் உங்காரத்தொனிசெய்தும் வீரநகைசெய்தும் பூதகணங்
கள் புடைசூழ்ந்து போற்ற ஆனந்தக் கூத்தாடும் ஐயனுடைய திரு உரு
வம், சத்தியும் சிவமும் வேறல்ல என்பதைத் திருமேனியிடமாகவும் பிர
த்தியட்சமாகக் காட்டுபவனைப்போல் பார்வதிதேவியைப் பாதிதிருமேனி
யிற்கொண்டு, நான்கு கைகளிலும் பொருந்தும்படி செந்தாமரைப்புஷ்
பம், திருச்சூலம், அபயம், வரதங்களைக்கொண்டிருக்கும் பெருமானுடை
ய திரு உருவம், உயிர்க்கு உயிராய் விளங்கும் பரம்பொருளை அநாதியே
கலந்துகொள்ள ஒட்டாமல் தடுத்து, விஞ்ஞான கலர், பிரளயாகலர், சக
லர் என்னும் மூவகை உயிர்களின் உணர்வை மறைக்கும் ஆணவாதி மல
ங்கள் எல்லாம் பயந்து ஓடிப்போகக் கருணைத் திருநோக்குடன் சனகாதி
யருக்குப் பொருள்நிலை உணர்த்தும்பொருட்டுச் சின்முத்திரையாகக் கை
யெடுத்துக்காட்டிய கடவுள் நாயகனுடைய திரு உருவம், ஓம்,நீலகண்டா
யநம என்னும் எட்டெழுத்தை உச்சரிப்பவர்கள் மறுபடியும் மாயாதேகங்
கொண்டு மண்ணுலகத்தில் வராமல் மாறுவாழ்வு பெறும்பொருட்டாகவும்
தேவர்கள் பயப்படாமலிருக்கவும் ஆலகாலவிஷத்தைக் கையில் ஏந்திச்
சிங்கா தனத்தின்மேல் சிறந்துவீற்றிருக்கும் சிவபெருமானுடைய திரு
உருவம், சலந்தராசுரனை இரண்டுதுண்டமாக மடித்து, மடித்த அந்த வடி
வம் அருகிலே வணங்கி நிற்க, அதைச்சுதரிசனம் என்னும் சக்கராயதமா
க்கிச் செந்தாமரை மலர்க்கைமேல் ஏத்திக் கொன்றைப் பூமாலையையே

வெற்றிமாலையாகக் கொண்டு தெரிசனம் கொடுத்தருளிய தேவர்கோமானுடைய திரு உருவம், வண்டுகள் மதுபானம் செய்து மதுரகீதம் பாடும் செந்தாமரை மலர்களில் ஒருமலர் காணுமற் போனமையால் உடனே கண்மலரைப்பறித்து அருச்சனைசெய்த மாயவனுக்கு அந்தச்சக்கராயுதத்தைக்கொடுத்தருளிய தேவாதி தேவனுடைய திரு உருவம், எப்படிப்பட்டவர்களுக்கும் அஞ்சாத ஆண்மை படைத்துள்ள நிகும்பன்மேல் ஒருபாதத்தை ஊன்றி நின்று சூலாயுதத்தை ஒருகையில் வைத்து, ஒருகையால் உமையவளைத் தழுவிக் கைகூப்பித் தொழுது நிற்கும் அந்தகனை நோக்கி வீரகண்டையணிந்து, திருமால் முதலிய தேவர்கள் எல்லாம் தொழுது துதிசெய்யச் சிறந்து வீற்றிருக்கும் சிவபெருமானுடைய திரு உருவம், மேருவை வில்லாகவளைத்து, வாசுகியை நாணுகப்பூட்டி, விஷ்ணு பாணமாகவும், வாயு அலகாகவும் அக்கினி கூராகவும் அமைந்த ஒரு அம்பு தொடுத்துப் பிரமதேவன் சாரதியாய் வேதக்குதிரை கட்டிச் செலுத்திய பூத்தேர்மேல் வீற்றிருந்து திரிபுரங்களும் வெந்து சாம்பலாகப் புன்னகை செய்தருளிய திரிபுராந்தகன் என்னும் திரு உருவம், ஆகாயத்திலிருந்து வெகுண்டு ஆரவாரம் செய்து முழங்கிக்கொதித்து விழுந்த கங்கையைத் தன் சடைமுடியின் ஒரு உரோமத்தின் நுனியில் அறுகு நுனியிற் பனிபோல் அடங்கவைத்துப் பாவக்கணவாய் கடந்து விளங்கும் பகீரதன் பணிந்து வேண்ட மகிழ்ந்தருளிய பரமபதியின் திரு உருவம், கணங்களும், விநாயகக்கடவுளும், சுப்பிரமணிய சுவாமியும், சத்தமாதர்களும், பிரம விஷ்ணுக்களும், நவக்கிரகங்களும், நாற்பத் தெண்ணாயிரம் முனிவர்களும் அருகில் சூழ்ந்திருக்கச் செம்பொற் பீடத்தின்மேல் சிறந்துவிளங்கும் ஆவற்சகாயன் என்னும் திரு உருவம், யுகாந்தகால வெள்ளத்தின் நடுவில் விளங்கும் தேசோமய லிங்கத்தில் சந்திரபிறை சடைமுடிமேல் விளங்கத் தோன்றி மேலே அன்னமும் கீழே வராகமும் தங்கி விளங்கச் சிரசின்மேல் கைகூப்பிக்கொண்டு பிரம விஷ்ணுக்கள் இடத்திலும் வலத்திலும் நின்று துதிக்க வீற்றிருக்கும் விமலனுடைய திரு உருவம், தேவர்கள் எல்லாரும் துதிசெய்யச் செம்படவர் வேடம்பூண்டு வலைவீசிமாயவனுகிய மச்சம்பிடித்து அதன் கண்ணைப்பறித்துச் சகலாத் மாக்களுக்கும் சிவபெருமானே தெய்வம் என்னும் ஞானோதயம் உண்டாகும்படி விரல் மோதிரத்தில் இரத்தினம்போற்பதித்து அணிந்திருக்கும் அழகனுடைய திருஉருவம், மகரமச்சங்கள் உலாவும் கடலைக்கலக்கிய மாயவனுகிய ஆமையைப் பிடித்து, அதன்முதுகு ஓட்டைக்கழற்றி வெண்டலைமாலையில் நடுநாயகமாகக் கோத்து அணிந்து கொண்டிருக்கும் கோமானுடைய திருஉருவம், எழுகடலை வற்றும்படி செய்து எழுமலைகளையும் தவிடு

பொடியாக்கிய மாயவனுகிய வராகத்தை வேடரூபங்கொண்டு வேட்டை யாடிவதைத்து, அதன்இரண்டு தந்தங்களில் வலப்பக்கத்தில உள்ள ஒரு தந்தத்தைப் பிடுங்குதலும் அதுசெய்த பிரார்த்தனையைக் கேட்டுத்திரு வருள் சுரந்து இடப்பக்கத்தில் உள்ள தந்தத்தைப் பறிக்காமல்விட்ட ப கவானுடைய திருஉருவம், எட்டுதிருவடியும் நீண்டதோகையும் இரண்டு திருமுகமும் பெருஞ்சிறகும் உருத்திரமும் பெருந்தொனியும்விளங்கக் கா ண்பித்து, இரணியன் உதிரத்தைக்குடித்து இறுமாப்பு அடைந்திருந்த நர சிங்கத்தைக்கொன்று, அதன்தோலை உரித்து உத்தரியமாகப் போர்த்துக் கொண்டு சத்துருக்களை அழித்தருளும்சரபத்திருவுருவம், வாமனனுய் வந் து மூன்றடிமண்யாசித்து நீண்டு வளர்ந்து மூவுலகங்களையும் அளந்து மாவ லியைச் சிறைப்படுத்தி இறுமாப்படைந் திருந்தவனைமடித்து முதுகெலு ம்பைக் கங்காளம் என்னும் ஆயுதமாகக்கையில்கொண்டருளிய கடவுள் காயகனது திருஉருவம், பொன்னிறமான உரோமமும் முகத்தில் மீசை யும் விளங்கவும் உமையவளுடன் செந்தாமரை மலர்போல் மலர்ந்திரு க்கும் கண் இரண்டும் அதன் அரும்புபோலும் கண் ஒன்றும் விளங்கவும் பிரமவிஷ்ணுக்கள் போர்செய்யும் போது, நடுவில் தோன்றிச் சொற்புத்தி கேளாமையால் பிரமதேவனுடைய ஐந்துதலைகளில் ஒருதலையை நகத்தா ல்கிள்ளியேந்திய வயிரவமூர்த்தி என்னும் திருஉருவம், பாதங்களில்பாது கையும் தளர்நடையும் சாமகண்டமும் கொண்டு தாருகாவனத்தில் நடந் தருளிப் பிச்சையிடவந்த ரிஷிபத்தினிகளுக்கும் தெய்வப்பெண்களுக்கும் மோகமூட்டிப் பேரழகுபடைத்திருக்கும் பெருமானுடையதிருஉருவம், என்று வேதாகமங்கள் வகுத்துச் சொல்லும் இத்தன்மையான திருஉரு வங்களில் ஒரு திருஉருவத்தைக் காஞ்சிமா நகரத்தில் சொல்லுவார்சொ ல்லும்வண்ணங்களை எல்லாம் உடையபெருமான் ஆன்மாக்களுக்கு அநுக் கிரகம் செய்யவீற்றிருக்கும் திருவேகம்பத்தில் விதிப்படி பிரதிஷ்டை செய்விக்கும் புண்ணியம் உடையவர்கள் பலகோடி சூரியர்போல் விள ங்கும் மாணிக்க விமானத்தின்மேல் ஏறிக்கொண்டு, இருபுடையும் வெண் சாமரை வீசவும் தேவர்கள் எல்லாம் திருவடியில்விழுந்து தெண்டனிட வும் புஷ்பமாரிபொழியவும் சந்திரவட்டக்குடை மேலேநிழல்செய்யவும், மிதுன யாழ்போல் கீதம்பாடும் கின்னரப் பட்சிகள் பரவசமடைந்து பக்கத்தில் விழவும் தருக்கள் எல்லாங் கனிந்து உருகிப் புதுமலர்க்கிளைக ளின் தலைசாயவும், மாதர்பாடும் மணிமிடற்றோசையும் குழலோசையும் யாழ் ஓசையும் எங்கும் பரவவும், மழலைச்சொல் என்னும் தேன் துளிக் கவும் கூந்தல் மலர்த்தேன் துளிக்கவும் கண்ணும் விரலும் கலந் து அசையவும் கண்டோர் மனமும் களித்து அசையவும் மேகலாபரணங்

கள் களிக்கவும் வாடும் இடைக்குமன்மதன் மனம் இரங்கவும் அரமங்கையர் மின்னற்கொடிபோல் எதிர்நின்று நடனமாடவும், போய்ச்சேர்ந்து நெடுங்காலம் சிவலோகத்தில் பரமானந்தபோகம் அநுபவித்துப் பின்பு பிரமா, விஷ்ணு, தேவேந்திரன் முதலிய பெரிய தேவர்கள் பதவிகளை முறையே அடைந்து, நெடுங்காலம் அங்கங்குள்ள போகங்களை அநுபவித்துவாழ்ந்ததன் பின்பு பூலோகத்தில்பிறந்து, உலகமெல்லாம் ஒருகுடையின்கீழ்த் தங்கும்படி அரசாட்சிசெய்து, மறுபடியும் காஞ்சிமாநகரத்தில் திருவேகம்பமுடையவரது சீர்பாதகமலங்களைத்தொழுது துதித்துச் சிவாநுக்கிரகத்தால் சதானந்த முத்தியில் சலனம் இல்லாமல் வாழ்ந்திருப்பார்கள்.

திருவேகம்பர் சந்நிதானத்திலே திருநந்தி தேவரையும் அந்தச்சந்நிதானத்தில் வசிக்கும் தருமரிஷபத்தையும் துவார பாலகர்களையும் பிரதிஷ்டைசெய்பவர்கள் செல்வத்தாற் சிறந்துவிளங்கும் சிவபுரத்தை அடைந்து, சிவபோகம் அனுபவித்துப்பின்பு சிவானந்தவீடுபெறுவார்கள். நான்கு கைகளிலும் அங்குசம், பாசம், அபயம், வரதங்களைப் பொருந்தக்கொண்டு, இலட்சுமி சரசுவதி முதலிய பாங்கியர் புடைசூழ்ந் திருக்கப் பத்திராசனத்தின்மேல் கொலுவீற்றிருக்கும் தேவிதிருஉருவமும் மற்றும் திரு உருவங்களும் செய்து காஞ்சிமாநகரத்தில் பிரதிஷ்டை செய்பவர்கள் சுற்றம் தழைக்க நெடுங்காலம் சுகித்துவாழ்ந்து முடிவில் திருவடி நிழலிற்சேர்ந்திருப்பார்கள், விநாயகக்கடவுள், சுப்பிரமணியசுவாமி வீரபத்திரசுவாமி க்ஷேத்திரபாலனம் செய்யும் வயிரவமூர்த்தி முதலானவர்களைப் பிரதிஷ்டை செய்பவர்களும் துர்க்கை, மாயவன், பிரமதேவன் முதலானவர்களைப் பிரதிஷ்டை செய்பவர்களும் அந்தந்தத் தேவர்கள் பதவிகளை அடைந்து ஆனந்தபோகம் அடைவார்கள்.

தருமவழியில் நடந்து வேதம், ஆகமம், பஞ்சாட்சரம் இவற்றின் உண்மையை ஓதி உணர்ந்து, விதிப்படி உருத்திராட்சம் பூண்டு, தேகமெல்லாம் திருநீறுபூசிச் சிவபெருமான் திருவடியில் பூரணபத்திவைத்து ஒழுகும்பத்தர்கள் அந்தணர், அரசர், வைசியர், வேளாளர், மற்றும் அநுலோமர், பிரதிலோமர் முதலிய எந்தச்சாதியார் ஆனாலும் ஆகுக, பிரமசாரி, கிரகஸ்தன், வானப்பிரஸ்தன் ஆனாலும் ஆகுக, அவர்களுக்கு வீடு, பொருள் முதலியவைகளைக் கொடுத்துக் காஞ்சிமாநகரத்தில் கவலை இல்லாமல் வாழ்ந்திருக்க வைக்கின்றவர்கள் சிவபெருமான் திருஉருவப் பிரதிஷ்டைசெய்து வைத்தவர்கள் பெறும்பேறு, பெறுவார்கள், பற்றெல்

லாம்சிவபெருமான்திருவடியில்பதியவைத்துச் சுற்றத்தைத்தூரமாகநீக்கி யதறவிகளுடைய துணையடிகளைத்தொழுதுதுதிசெய்து காஞ்சிமாநகரத் தில் வாஞ்சையுடன் பிச்சை செய்விப்பவர்கள் பெறும் பேறு இப்படிப் பட்டது என்றுசொல்ல ஆயிரம் நாவுபடைத்திருக்கும் ஆதிசேஷனாலும் முடியாது. பொருள் அளவுக்குத் தக்கபடி சுவர்களில் ஆவது சீலைகளிலா வது மேற்சொல்லிய திருஉருவங்களைஎழுதி வைக்கின்றவர்கள் பாசத்தை நாசமாக்கிப் பரமானந்த வீடுபெறுவார்கள். மருள் இல்லாமல் விளங்கும் மாதவர்களே! இப்பொழுது யாம்சுருதிஸ்மிருதி ஆகமம், புராணங்களில் சொல்லி யிருக்கிறபடி திருஉருவப் பிரதிஷ்டை செய்பவர்கள் பெறும்பே றுகளை எடுத்துச் சொன்னோம். மற்றுமுள்ள சிவ தருமங்களையும் சொல் லுகிறோம் கேட்பீர்களாக.

மாறுவளம் பெற்றோங்கும் காஞ்சிமாநகரத்திலே தெருவில் விளையா டும் சிறுவர்களும் மண்ணில் சிவாலயம் வகுத்து மனமகிழ்ந்து போற்றினு லும் மறுமையில் சிவலோகம் அடைவார்கள் என்றால், நகரங்கள் எல்லா வற்றுள்ளும் சிறந்து விளங்கும் காஞ்சிமாநகரத்தில் சிவாலயம் உண்டாக் கவே வேண்டும்.

ஒருவர் தாம்தேடும் பொருள்வரவுக்குத்தக்கபடி நவரத்தினங்களாலா வதுபொன்னாலாவதுவெள்ளியினாலாவதுமற்றைய உலோகங்களாலாவது சுண்ணாம்பினாலாவது செங்கல்லினாலாவது மரத்தினாலாவது மண்ணினா லாவது கந்த மாதனகிரி, இமயமலை, நீலகிரி, கைலாயம், மந்தரகிரி, ஏம கூடம், நிடதகிரி, மேருகிரி என்னும் அஷ்டகுல பர்வதங்களில் ஒவ்வொ ரு பர்வதத்தின் பெயரால் கோபுரங்களும் மண்டபங்களும் விளங்கவும், ஆலகாலவிஷம் உண்டருளி அனைவரையும் காத்தருளிய சிவபெருமானு க்குச் சமஸ்கிருதம் தமிழ், வேசரம் முதலியபாஷைகளில் விதித்திருக்கும் முறைமையின்படி அன்புகூர்ந்து ஆலயம்அழகுபெறவும் அமைப்பவர்கள் மேற்சொல்லிய அந்தந்தமலைபோலும் மாணிக்கச்சோதி விமானத்தின்மே ல் ஏறிக்கொண்டு, தேவர்களும்பிரமவிஷ்ணுக்களும் முனிவர்களும் சித்தர்க ளும்புடைசூழ்ந்துதுதித்தவர, எம்பெருமான் இனிதுவீற்றிருக்கும்கைலாச கிரியைஅடைந்து அங்குள்ளபோகமெல்லாம் அநுபவித்துப்பின்பு ஆனந்த வீட்டில் அமர்ந்துவாழ்வார்கள். முரிந்துவிழுந்துபோனவைகளும்வெடித்து ப்போய்விட்டவைகளும் உடைந்துபோனவைகளும் பழமையானவைக ளும் நெரிந்துபோனவைகளும் ஆகிய கோபுரம், மதில், மண்டபம் முத லியவைகளைக் கண்ணுற் பார்வையிட்டு, முன்போல்விளங்கச் செப்பனி

ட்டு வைப்பவர்கள் பூர்வம் அவைகளைச்செய்து வைத்தவர்கள் அடைந்த புண்ணியத்தில் நான்கு மடங்கு அதிகமாகவே அடைவார்கள். சிவாலயத்திலே சிவனத்திற்காக வேலை செய்தவர்கள் பெறும்பிரயோசனமும் யாகமெல்லாம் செய்து முடித்தவர்களுக்கும் கிடைக்கமாட்டாது என்றால், கடைத்தேறும்பொருட்டு விடாமுயற்சியுடன் தங்கள் கைப்பொருளைச் செலவிட்டுச் செய்துவைப்பவர்கள் பெறும் பேறுசொல்ல முடியுமா? முடியாதே.

இருவினைகளை ஒழித்து ஐம்புலன்களை அடக்கிய அந்தணர்களே? எட்டுச்செங்கல்லினுலாவது சிவாலயத்தில் திருப்பணி செய்து வைப்பது பெறுதற்கரிய மானிடதேகத்தினுற் பெறும் பேறும் என்று கண்டு தெளியுங்கள். ரிஷபாரூடரானசிவபெருமான் சிறந்துவீற்றிருக்கும் சிவாலயத்தில் திருப்பணி செய்வதற்குத் திரவியம் இல்லை ஆயின் சிவாலயத்தில் உள்ளும் புறமும் பழுதுவாமற் பாதுகாத்துச் சிற்றெறும்பிற்கும் துன்பம் உண்டாகாதபடி மெத்தென்று திருவலகிடுதலால் வரும்புண்ணியம் பதினுயிரம் சாந்திராயணங்களாலும் கிரிச்சிரம் என்னும் விரதங்களாலும் வரும் புண்ணியங்களுக்கு ஒப்பாகும்.

குடம்போல் பருத்திருக்கும் மடியினிடமாக மதுரமான பால்சொரியும் பசுவின்சாணம் பூமியில் விழுவதற்குமுன் இரண்டுகைகளாலும் ஏந்திக்கரைத்து வடித்த நீரால் எம்பெருமான் ஆலயத்தில் எந்நாளும் மெழுகுதல் செய்பவர்களுக்கு உண்டாகும் பலன் அதைக்காட்டிலும் நூறுமடங்காம் என்று நூல்கள்சொல்லும், சந்திரசேகரனை சிவபெருமான் சடைமுடிமேல் பூமாலை சூட்டுவதனுல் வரும் புண்ணியம் அதைப்பார்க்கிலும் பதினுயிரம் மடங்கு அதிகமாம். தேவர்கள் மனமகிழ்ந்து புஷ்பங்கள் தோறும் வாழ்ந்திருப்பார்கள். அப்படிப்பட்ட புஷ்பங்களைக்கொண்டு பூசித்தல் எம்பெருமானுக்கு மிகப்பிரீதியாம் என்று உணர்க. கோங்கு புஷ்பத்தில் சரசுவதியும் அலரிப்பூவில் பிரமதேவனும் வன்னியில் வன்னியும் (அக்கினிபகவானும்) நந்தியாவட்டத்தில் நந்திதேவரும் புன்னையில் வாயுபகவானும் நமேருவென்னும் தேவதாருவில் கணங்களும் எருக்கம்பூவில் செவ்வாயும் சண்பகப்பூவில் சண்முகக்கடவுளும் வில்வத்தில் இலட்சுமியும் மல்லிகையில் மாயவனும் வருணபுஷ்பத்தில் வருணனும் மகிழம்பூவில் சுயசையும் வாகைப்பூவில் நிருதியும் சாதிமல்லிகையில் ஈசானமூர்த்தியும் செங்கழுநீர்ப்பூவில் சூரியனும் அல்லிப்பூவில் சந்திரனும் மந்தாரபுஷ்பத்தில் இந்திரனும் பொன் ஊமத்தம் பூவில் குபேரனும் நாயு

ருவியில் இயமனும் ஆகமனமகிழ்ந்து வாழ்வார்கள். மலர்களிற் சிறந்த தாமரை மலரில் தேவர்களிற் சிறந்த சிவபெருமானே வாசம் செய்வர். நீலோற்பத்திலே பார்வதி தேவி வாசம்பண்ணுவள். இதல்லாமலும் அந்தத்தேவி வாசனையுள்ள புஷ்பங்களில் எல்லாம் மகிழ்ந்து வாசம்செய்வாள். ஆதலால் இத்தன்மையான புஷ்பங்களில் அமைந்திருக்கும் புஷ்பங்களைக் கொண்டு செய்யும் பாதபூசைக்குத் திருவேகம்பர் திருவருள் செய்வர். மாலையாகத் தொடுத்துத் தோள்மேல் சாத்துபடி செய்தல் மேன்மையுள்ளதாம், செந்தாமரை மலர்மாலை அவைகளைப்பார்க்கிலும் சிறந்ததாம். எல்லாவற்றுள்ளும் சிறந்து விளங்கும் செங்கழுநீர்ப்பூவில் ஆயிரம்பூஎடுத்து மாலையாகத்தொடுத்துச் சாத்துபடி செய்தால் பிறவித்துன்பங்களைப் போக்கிப்பேரின்பவீடுகொடுக்கும். ஊழிதோறும் ஓங்கிவிளங்கும் திருவேகம்பமுடையவரது சந்நிதானத்தில் நெய்விளக்கு, தூபம் அமைத்தால் நறுமணம் வீசிப் பெருஞ்சோதிகாட்டுந் திருமேனி பெற்றுத் திருக்கைலாசத்தை யடைந்து சிவானந்தபோக சாகரத்தில் படிந்து வாழ்வார்கள் வாசனைவீசும் பூஞ்சோலைகளால் சூழப்பட்டிருக்கும் திருவேகம்பத்தில் கிருஷ்ண பட்சத்து அஷ்டமியிலும் சதுர்த்தசியிலும் அன்பு மிகுந்து நெய்விளக்கும் தூபமும் இட்டவர்கள் செய்த குற்றங்களையெல்லாம் எம்பெருமான் பொறுத்தருள்வார். வடித்தெடுத்த நீரில் வாசனை ஊட்டி எம்பெருமானுக்கு அபிஷேகம் செய்தால் பூலோகத்தில் ஆயிரம் யாகம் செய்தபலன் உண்டாகும். மணம்வீசும் எண்ணெய், பசுநெய், பஞ்சாமிர்தம், பஞ்சகௌவியம் இவைகளால் செய்தால், ஒன்றைப்பார்க்கிலும் ஒன்று விசேஷமாம். அன்பு முதிர்ந்து ஆவின்பால்கொண்டு அபிஷேகம் செய்பவர்களிடத்தில் எம்பெருமான் மேன்மேலும் சந்தோஷம்வைத்தருளுவார்.

தயிராலும் கருப்பஞ்சாற்றினுலும் தேனுலும் மற்றும் கனிவகைகளாலும் அபிஷேகம் செய்வித்தால் தேவயாகம்முதலிய யாகங்கள் எல்லாம் செய்த பலன் உண்டாகும். மந்திரம் சொல்லித்திருமேனியில் ஒற்றும் ஒற்றுடை சாத்திக்கலவைச்சந்தனம் அணிந்து, விசிறிஎடுத்து வீசும் பணிவிடைசெய்பவர்கள் தங்கள் மரபில் கோடிதலை முறையானவர்களை நரகத்தில் விழச்செய்யாமல் சுவர்க்கத்திற்கு அனுப்பித் தாங்களும் எம்பெருமானுடைய இணையடி நிழலில் மகிழ்ந்துவாழ்வார்கள்.

பருத்தினால் ஆடை வெண்பட்டுவஸ்திரம் தீவாந்தரங்களிலிருந்து கொண்டுவரப்பட்ட விசித்திர வஸ்திரங்கள் ஆகிய இவைகளை அன்புமிகுந்து எம்பெருமானுக்குச் சாத்துபடிசெய்வார்களானல் மறுமையில் சிவ

லோகம் அடைந்து தாங்கள் சாத்துபடி செய்த வஸ்திரங்களில் உள்ள இழை ஒன்றுக்கு ஆயிரம் கற்பகாலமாக இனிதுவாழ்வார்கள். நான்குவிரல் அளவுகொண்டது ஒரு இழை, அந்த இழைதொன்னூற்ருறில் மும்மூன்ருக முறுக்கப்பட்ட வடம்மூன்று கொண்டிருக்கும் பூணூலை ஆசாரம்தவருமல் எந்நாளும்தரிக்கும் சைவப்பிராமணர்களைத்தரிசித்தால் தரிசித்தவர்கள் புலையர்களே ஆனுலும் மறுபிறப்பில் மறையவராப் பிறப்பார்கள். எம்பெருமான்திருமுடிமேல் இம்மியளவுபொன்சாத்துவார் ஆயின், அவர்கள்பெறும்பேறு சொல்ல ஆயிரம் நாவு படைத்திருக்கும் ஆதிசேஷனுலும் முடியாது. திரண்டசெல்வமுடையவர்கள் உள்ளன்பில்லாமல் கோடிசெம்பொன் கொடுப்பதும் உள்ளன்புடைய ஏழைகள் விசுவாசத்துடன் கொடுக்கும் எள்ளத்தனைபொன்னுக்கும் ஈடாகமாட்டாது, மணம்வீசும் மலரால் தொடுக்கப்பட்ட சுருக்குமாலை பரிமளதூபம் தீபம் அறுசுவை அன்னம் தாம்பூலம், குடை வெண்சாமரை மற்றும் பூசைக்கு வேண்டுவனவெல்லாம் விருப்பத்துடன் ஏற்படுத்தி வைப்பவர்கள் இன்பமுத்திக்கு உரியவர் ஆவார்கள். நித்தியத் திருவிழா, பட்சத்திருவிழா, மாசப்பிரவேசஉற்சவம், வசந்தகால உற்சவம், முதுவேனிற்பருவத்தில் தெப்பத்திருநாள், மழைக்காலத்தில் பவித்திரோற்சவம், கூதிர்க்காலத்தில் ஐப்பசிப்பூரத்திருநாள்: முன்பனிப்பருவத்தில் விடியற்காலபூசை பின்பனிப்பருவத்தில் திருப்பொன்னூசல் ஆட்டௌன்னும் உற்சவங்களைச் சிறப்பாகச் செய்பவர்கள் சிவானந்த வீடுபெறுவார்கள்.

உலகமாதாவான உமையவளுடன் ஒருமாவடியில் ஆன்மாக்களுக்கு அநுக்கிரகம் செய்ய அருள்சுரந்து வீற்றிருக்கும் ஏகாம்பரநாதருக்கு வருஷம் தோறும் பங்குனித்திருநாள் பழுதில்லாமல் நடக்கும்பொருட்டு வேதாகம விதிப்படி ரிஷபக்கொடி ஏற்றி, மத்தளம் திண்டிமம் பேரி முரசு காகளம் முதலியவாத்தியங்கள் கடல் போல் முழங்கவும் அந்தக்கடலில் அடர்ந்திருக்கும் நுரைகள்போல் சந்திரவட்டக்குடைகள் நெருங்கவும் அந்தக்கடல் அமுதம் போல் மாதர்கள் பாடலும் மங்கல ஓசையும் வேதமும் பத்தர்கள் பாடலும் எங்கும் பரவவும், இமயமலை முதலான பொன் மலைகள் எல்லாம் தம்மிடத்தில் வசிக்கும் பார்வதிதேவியாருடன் எம்பெருமான் பவனி வந்தருளும் திருவிழாவைக் காணவந்து தங்கினுற்போல் அலங்காரத் தேர்கள் அங்கங்கே விளங்கவும், கிண்கிணி ஓசையும் சிலம்போசையும் மேகலை ஓசையும் மிகுந்து ஓங்க, அன்ன நடைபோல் நடையும் அரம்பையர்போல் அழகும் உள்ள நாட்டியப்பெண்கள் கூட்டமாய்க்கூடி எங்கும் நாட்டியமாடத் தொடங்கவும் மாடமாளிகைகளில்

கட்டிய மகரதோரணங்களில் உள்ள நவரத்தின ஒளிவீசும் வீதிகளும் சித்திரம் எழுதினாற்போல் சிறந்து விளங்கவும், பாக்குமரங்களும் பசுங்குலை வாழைமரங்களும் கட்டி ஆகாயத்தை அளாவ ஓங்கியிருக்கும் பந்தல்களும் பூரணகும்பங்களும் போகும் இடங்களில் எல்லாம்பொலிவுற்றுவிளங்கவும், தென்றற்காற்று உலாவும் மாடமாளிகை கூடகோபுரங்களின்மேல் எல்லாம்மலைகளின்மேல் மலர்க்கொடி பூத்தாற்போல் மடமங்கையர்தங்கிக்கைகூப்பித்தொழவும் குங்குமக்குழம்பும் குளிர்ந்திருக்கும்சந்தனமும் பன்னீருடன் கலந்து பருவமுள்ள பெண்கள் பந்துபோல் வீசுவனவாகி எங்கும் சேறுபட்டு அடர்ந்து நடப்பவர்களுடைய கால்கள் சறுக்கவும், முடிகளுடன் முடிகள் உராய்ந்து நவரத்தினக் கல்லுகள் பலபல வென்று பூமியில் உதிர்ந்தமையால்நாங்கள்விலகிஓடினோம். அந்த இரத்தினக்கல்லுகளைப்பொறுக்கிக்கொள்ளுங்கள் என்று உடையவர்களுக்குக்காட்டி அறிவித்து அப்பால் அடிபெயர்த்து வைக்கமாட்டாமல் அங்கங்கே திகைத்து நிற்கவும்தாம்பூலம், பொன், நவரத்தினம், பொரி, பல. புஷ்பம் பலகனிகள் இறைக்கப்பட்டு வீதிகள் எல்லாம்குளிர்ந்து குவியல்குவியலாய் அங்கங்கே திட்டுஉண்டாக்கவும்.

கவளயானைகளின் மதசலவெள்ளமும் குதிரைவாய்நுரையும்கூடி ஒருசமுத்திரமாகி மேற்சொல்லிய திட்டுகளை மோதிப்படர்ந்து போகவும், பார்வதிதேவி, சுப்பிரமணியசுவாமி, விநாயகக்கடவுள், மற்றும்கணங்கள் சூழ்ந்துவரப் பலவகையான வாகனங்களின் மேல் சோதிமயமாய் விளங்கும் இராஜவீதியிலே சகலாத்து மாக்களுக்கும் தண்ணருள்சுரந்து தேசோமயானந்தமாய் விளங்கும் திருவேகம்ப முடையவர் திருஉலாவாக எழுந்தருளச்செய்பவர்கள். மேலானதவம் தானங்கள் வேள்விகள் எல்லாம் செய்தவர்களுக்கு வேதாகமங்களால் சொல்லப்பட்ட பலனில் கோடி பலன் உடையவர்களாய்ப் பலகோடி பந்து ஜனங்களுடன் சிவலோகத்திலே சுகித்து வாழ்ந்திருந்து பிறப்பு இறப்பு இல்லாத பதிஞானம் அடைந்து கடைத்தேறுவார்கள். இத்தன்மையான திருவிழாவைப்பார்த்துக் கும்பிடுகிறவர்களும் திருவிழாவின் முடிவில் தீர்த்தநீர் ஆடுகிறவர்களும் பார்வதி சமேதனாகிய பரமபதி திரு ஓலக்கமாய் வீற்றிருக்கும் கைலாசத்தை அடைந்து மகாபராக்கிரமம் உள்ள கணங்களுக்குத் தலைவர் ஆவார்கள்,

ஏழு முழம் உயர்ந்து சத்ததீவுகளில் உள்ள இலக்கணம்நிறைந்திருக்கும் யானைகளுக்கு மணி அணி பூட்டி அலங்கரித்துச் சீவன விருத்தியுட

ன் வேதமாவடியில் வீற்றிருக்கும் திருவேகம்பமுடையவர்க்குத் தானமாகக் கொடுத்தவர்கள் பாசபந்தத்தை நாசமாக்கிப் பரமானந்த வீடுபெறுவார்கள்.

இலக்கணம் அமைந்தகுதிரைகள் கறவைப்பசுக்கள். நாட்டியப்பெண்கள், நன்செய் புன்செய் நிலங்கள், நகரங்கள், நாடுகள் முதலானவைகளை வேதமாவடியில் வீற்றிருக்கும் ஏகாம்பரநாதருக்குத் தானமாகக் கொடுத்தவர்கள் கைலாசபதவி அடைந்து நீடூழிகாலம் வாழ்ந்து பின்பு சாயுச்சியபதவிபெறுவார்கள். மேன்மைபொருந்திய வேத சாஸ்திரங்களைப் புஸ்தகத்தில் எழுதித் திருவேகம்ப முடையவர் செல்வத்திருக்கோவிலில் வைக்கின்றவர்கள் கைலாச பதவி அடைந்து ஒவ்வொரு எழுத்திற்கு ஆயிரம் கற்பகாலமாக மகிழ்ந்துவாழ்வார்கள். சிவாகமங்களை எழுதிவைக்கும் பேறு பெற்றவர்கள் அடையும்பலன் சொல்ல யாரால் முடியும் வண்டுகள் முழங்கும் ஒருமாவடியில் வீற்றிருக்கும் ஏகாம்பரநாதருக்கு அன்பு மிகுந்து முன்னோர் செய்து வைத்த இந்தத் தருமங்களைப் பாதுகாப்பவர்கள், அந்தத் தருமங்களைச் செய்துவைத்தவர்கள் அடையும்பலனில் பதின்மடங்கு அதிகமாகப் பெறுவார்கள். உலகவாழ்வையே மேலானதாகநினைத்து மதிமயங்கி இந்தத் தருமங்களைப் பரிபாலனம் செய்யாத அரசர்கள் மீளா நரகத்தில் விழுவார்கள். இதுசத்தியம். ஆதலின் இந்தத் தருமங்களுக்குப் பழுதுவராமல் பாதுகாப்பது அரசன்கடமையாம். மதிமயக்கத்தால் அந்தப் பொருள்களில் எந்தப்பொருளை ஆயினும் அபகரிப்பவர்கள் எவ்வளவும் சந்தேகமில்லாமல் தங்கள்சுற்றத்தாருடன் நாசம் ஆய்விடுவார்கள். இதனால் தனங்களும் பந்துசனங்களும் தழைக்கவேண்டும் அரசர்கள் காஞ்சிமாநகரத்தைக் கண்ணிமைபோல் ஊக்கத்துடன் காக்கக்கடவர், காஞ்சிமாநகரத்திலே தடாகங்களும் கிணறுகளும்பூஞ்சோலைகளும் உண்டாக்கிப்பாதுகாத்துச்சிவநேசம் உடையவர்களுக்குச்சுவர்ணதானம் பூதானம் கன்னிகாதானம் செய்கின்றவர்களும் தினந்தோறும் அன்னதானம்செய்கின்றவர்களும் பெறும்பிரயோசனம் பார்வதிபாகனாகிய பரமசிவனே அறியவல்லவர்.

யாம்சொல்லிய இந்தச்சிவபுண்ணியங்களில் ஏதாயினும் ஒருபுண்ணியத்தைச்செய்யவல்லவர்களானாலும் செய்யமாட்டாதவர்கள் ஆனாலும் சந்திரசடாதாரியாகிய சிவபெருமானுக்கு இராஜதானியாய் விளங்கும் காஞ்சிமாநகரத்தில் ஒருநாள் அல்லது ஒருக்ஷணம் ஆனாலும் தங்குவார்கள் ஆனால் பிறவித்துன்பங்களை ஒழிப்பார்கள். திருக்கண்மணிமாலையும் திரு

நீறும் அணிந்து காலையிலும் மாலையிலும் சிவபெருமானுடைய திருவடிக ளைப் போற்றிச் சிவனடியார்களுக்கு உரியபூசை செய்து. திருப்பணிசெய் து கொண்டு அவ்விடத்தில் வாசம் செய்யும் உத்தமர்களுக்குத் திருவேகம் பத்தில் பார்வதிசமேதராய் வீற்றிருக்கும் ஏகாம்பரநாதர் திருவருள் சுரந்து சிவானந்த வீடு கொடுத்தருளுவார். யாம்பன்னிப் பேசுவதில் பயன் என் னை; நரகவேதனைகளையும் பலவகைப் பிறவிகளில் மாறி மாறிப் பிறந்து, உழலும் துன்பங்களையும் செல்லும் இடங்களில் எல்லாம்வந்து நேரிடும் ச ங்கடங்களையும் நன்குய் ஆலோசித்து, இத்துன்பங்களை எல்லாம் ஒழிக்க வேண்டும் என்று நினைக்கிறவர்கள்காஞ்சிமாநகரத்தில் வாஞ்சையுடன் வா சம் செய்தல் வேண்டும். பல்லக்குச் சுமந்தாயினும் காவடி சுமந்தாயினும் பிறருடைய சுமைகளைச் சுமந்தாயினும் சண்டாளர்களைச் , சாமி என்று தாழ்ந்து பணிவிடை செய்தாயினும் காஞ்சிமா நகரத்தில் வாஞ்சை யுடன் வாசம் செய்தல் வேண்டும். கழுதை மேய்த்தாயினும் மற்றும் இழிவானதொழில் செய்தாயினும் பிச்சை எடுத்து வயிறுவளர்த்தாயினும் பத்திவைராக்கிய முடையவர்களாய்க் காஞ்சிமாநகரத்தில் வாசம் செய்த ல்வேண்டும். பெரும்பாவம் செய்தவர்கள் சாதிசமயங்களில் தள்ளுண்டவ ர்கள் முன்கோபக்காரர்கள் முழுமூடர்கள் புலையர்கள் ஆனுலும் கலியுகத் திலே காஞ்சிமாநகரத்தில் வாசம் செய்வார்கள் ஆனல் முத்திஅடைவார் கள். பொருமை கொலை களவு முதலிய தீமைகள் அடர்ந்து உலாவும் கலியுகத்தில் தெய்வீகமாய் விளங்கும் காஞ்சிமாநகரத்திலே அல்லாமல் மற்றெங்கேபோனுலும் கதிகிடைக்கமாட்டாது. கலியுகத்திலே வேதநெ றி இல்லை. தருமங்கள் இல்லை. அந்தணர். அரசர், வைசியர் என்னும் சாதிபேதங்களும் பிரமசரியம் முதலிய ஆச்சிரமங்களும் இல்லை. மெய்ய ன் புடைய சிஷர்கள் இல்லை. மெய்ஞ்ஞான தேசிகர் இல்லை. நல்லொழு க்கமும் இல்லை. என்றுபெரியோர்கள் சொல்லுவார்கள். அந்தணர் அரசர் வைசியர் என்னும் இருபிறப்பாளர்களுக்கு வேதங்களையும் சிவாகமங்களை யும் மேலாகக்கொள்ளும் கொள்கை இல்லை. ஸ்ரீபஞ்சாட்சரத்திலும் உருத்திராட்சத்திலும் விபூதியிலும் சிவபெருமானிடத்திலும் சிரத்தை இல்லாமற்போய்விடும். பிராமணர்களுக்குப்பிருகுமுனியும் ததீசிமுனியும் கௌதமமுனியும் இட்டசாபத்தால் அன்றியும் கலிதோஷத்தால் பொய் யாகக்கட்டிய பாஞ்சராத்திரநூலிலும் பவுத்தநூலிலும் பற்றுஉண்டாகும் என்றுசொல்லக்கேட்ட முனிவர்கள் எல்லாரும் கலியுகம் என்பதுயாது அதன் இயல்பையும் அதற்குத் தோஷம் உண்டானதையும் அதனுல் வ ரும் துன்பங்களையும் அடியேங்களுக்கு விரித்து விளங்கச்சொல்ல வேண் டும் என்று வேண்டுதலும் சூதமாமுனிவர் சொல்லுகின்றார்.

சோமசூரியாக்கினி என்னும் மூன்றுகண்களையுடைய எம்பெருமான் அண்டாண்ட சராசரங்கள் அனைத்தையும் தன்உள்ளத்தில் ஒடுக்கிப் பகலும்இரவும் உண்டுஇல்லை என்னும்பகுப்புஇல்லாதகாலத்தில் மாறுப்புகழ் படைத்தோங்கும் தான்ஒருவனே தனித்து மகிழ்ந்திருந்து, பழையபடி சகலலோகங்களையும் படைக்கத்திருவுளம் புரிந்து ஞானசத்தி, இச்சாசத்தி, கிரியாசத்தி என்னும் மூன்றுசத்திகளைஉண்டாக்கி, முந்திப் பிரமதேவனைப்படைத்து, அந்தப்பிரமதேவனைக்கொண்டு மாயவனையும் தேவேந்திராதிதேவர்களையும் உலகங்களையும் படைப்பித்தார், நான்குவேதங்களையும் அந்தணர் அரசர் வைசியர் சூத்திரர்என்னும் நான்குசாதியாரோடு அறம் பொருள் இன்பம் வீடுஎன்னும் நான்குபயன்களை அடைய உண்டாக்கிக் கிரோதாயுகம் திரேதாயுகம் துவாபரயுகம் கலியுகம் என்னும் நான்கு யுகங்களைப்படைத்தார். அந்தயுகங்கள் நான்கும் அன்புமிகுந்து, காஞ்சிமாநகரத்தைச்சேர்ந்து, அனந்தபத்மநாபேசத்திற்கு வடக்கில் சிவலிங்கப்பிரதிஷ்டைபண்ணிப் புதியமலர் கொய்து பூசைசெய்து அருந்தவம் புரியும்போது திருவேகம்ப முடையவர் ரிஷபவாகனத்தின்மேல் காட்சிகொடுத்தருளி, நீங்கள் வேண்டும் வரம்கேளுங்கள் தருகின்றோம் என்றுதிருவாய்மலர்ந்தருள, அவைகள் மணமலர் தூவித்தொழுது வணங்கிவாழ்த்தி எம்பெருமானே! நாங்கள் இமயமலைக்குத் தெற்கில் உள்ளதாய் நரகமும் சுவர்க்கமும் தருவதாய் விளங்கும் கருமபூமியைப் பங்கிட்டுக்கொண்டு, ஆளும் ஆவல் உடையோம், ஆதலின் அந்தக் கருமபூமியை அடியேங்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தருள்க என்று சீர்பாத கமலங்களில் விழுந்துபணிந்து வேண்டுதலும், எம்பெருமான் யுகங்களே!

கருமபூமியாகிய பரதகண்டத்தில் காலம் என்னும் அரசாட்சியை உங்களுக்குக் கொடுத்தோம். அந்தக்காலத்திற்கு உரியவருஷம் நாற்பத்து மூன்றுலட்சத்து இருபதினாயிரம். இந்தவருஷங்களைத் தகுந்தபடி உங்களுக்குப் பங்கிட்டுக் கொடுப்போம் என்று பங்கிடத் தொடங்கினர். ஞானத்தால் உண்டாகும் வீட்டின்பத்தைக் கொடுக்கும். புத்திரனாகிய கிருதயுகமே! நீமற்றமூவரிலும் மூத்தவன். ஞானத்திற்குக் காரணமான தருமத்தைக் கொடுக்கும் திரோதாயுகமே! நீ இளையவன். தருமத்திற்குத் துணையாகிய பொருளைக் கொடுக்கும் துவாபரயுகமே! நீஇவ்விருவருக்கும் இளையவன். காமத்தை உண்டாக்கும் மருளைவிருத்திசெய்யும் கலியுகமே! நீஇந்த மூவருக்கும் இளையவனாகி விளங்குவாய். கிருதயுகம் சாதியில் வேதியன். திரோதாயுகம் அரசன். துவாபரயுகம் வைசியன். கலியுகம், சூத்திரன், இந்தமுறையால் உங்களுக்கு ஏற்படுத்தி வைத்த நாற்பத்து

மூன்றுலட்சத்து இருபதினாயிரம் வருஷங்களைப் பத்துப்பங்காகப் பங்கிட்டு, அந்தப்பங்குகளில் கிருதயுகமே! நீ நான்குபங்கும் திரேதாயுகமே! நீ மூன்று பங்கும் துவாபரயுகமே! நீ இரண்டுபங்கும் கலியுகமே! நீ ஒருபங்குமாகப் பெற்றுக்கொள்ளக் கடவீர்கள். வேதவிதிப்படி அந்தணர் அரசர் வைசியர் சூத்திரர் என்னும் நான்குசாதியாருடைய மனைவியர்வயிற்றில் பிறக்கும் பிள்ளைகளுக்கு வரும்பங்கும் முறையேநான்கும் மூன்றும் இரண்டும் ஒன்றுமாக வழங்குக.

கிரேதாயுகம் முதலானவர்களே! ரிஷபவாகனமாய் விளங்கும் இந்தத் தருமக்கடவுள் முறையே நான்கு பாதத்தாலும் மூன்று பாதத்தாலும் இரண்டு பாதத்தாலும் ஒரு பாதத்தாலும் உங்களை நடத்த நீங்கள் உலகியலை நடத்துங்கள். கிரேதாயுகம், திரேதாயுகம் துவாபரயுகம் என்னும் மூவருக்கும் முறையே பிரமதேவனும் சூரியனும் விஷ்ணுவும் அதிதேவர்கள் ஆவார்கள். மிகுதியும் தீமையையே மேற்கொண்டிருக்கும் கலியுகமானது இந்தப் பிரமதேவன் முதலானவர்களால் பரிபாலனம் செய்ய முடியாது ஆதலால் பயங்கரத்திற்கு ஏதுவான கலியுகத்தில் மனிதர்களை எல்லாம் காப்பாற்றுவதற்கு நாமே காத்துக்கொண் டிருக்கின்றோம். யுகங்களே! இன்னும் ஒருவார்த்தை கேளுங்கள். யாம்வாஞ்சையுடன் வாசம்செய்யும் காஞ்சிமாநகரத்திலே உங்களால் வரும் பீடைகள் ஒன்றும் அணுகாதிருக்கக்கடவது. கொடியகலிதோஷம் கொஞ்சமாயினும் இந்தக்காஞ்சிமாநகரத்தில் அணுகக்கூடாது. இந்தப்பிரகாரம் நீங்கள் நமதுகட்டளைவழியில் நடந்து கடைத்தேறக்கடவீர் என்று திருவேகம்பமுடையவர் வரம்கொடுத் தருளினர். ஆகையால் இந்தக்கலியுகத்தில் முத்தி அடைய விரும்புகிறவர்கள் காஞ்சிமாநகரத்தை விட்டுப் பிரியாமல் வாசம் செய்யவேண்டும்.

அறிவிற் சிறந்த பெரியோர்களே! நந்திதேவர் அநுக்கிரகம் பெற்று, சனற்குமார மாமுனி உபதேசித்தபடி எமது அருட்குருவாகிய வியாச முனிவர் சந்திர சடாதாரியாகிய சிவபெருமானுடைய சீர்பாதகமலங்களைக்கண்டு அடைவதற்கு இதுவேகாரணம்என்று அடியேனுக்கு உபதேசித்தருளிய காஞ்சித்தலமகிமை இவ்விடத்தில் உங்களுக்குச் சொன்னேன் தெரிந்துகொள்க என்று கல்விகேள்விகளால் நிறைந்து விளங்கும் சூதமாமுனிவர் மற்றமாதவர்களுடைய மனமெல்லாம் மாசிலா மணிபோல் விளங்கத்தெரிவித்தார்.

கழுகாய் மணிப்பருந்தாய்க் காஞ்சிசூழ் நாட்டிற்
புழுவாய்ப் பிறக்கினும்போதும் வழுவாத
சந்திரராய்ச் சூரியராய்த் தானவராய் வானவராய்
இந்திரராய்த் தான்பிறப்பதில்.

வாழி திருக்காஞ்சி வாழிதிரு வேகம்பம்
வாழிகாமாட்சியெனு மாதுமையாள் - வாழியரோ
மூத்தோ னிளவல் மூதும்மறையோற் நன்னுந்தி
பூத்தோ னெஞ் ஞான்றும் பொலிந்து.

தேவிகாமாட்சி திருவருள்வாழ்க
திருவேகம்பர் திருவடிபோற்றி
சூதமாதவர் துணையடிபோற்றி
சிவஞானயோகிகள் திருவடிபோற்றி
கச்சியப்பமுனிவர் கழலிணைபோற்றி.
சிவநேசமுடையார் திருவடிபோற்றி.

---

# பிழை திருத்தம்.

## காஞ்சிப்புராணவசனம்முதற்பிரிவில்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 2 | 15 | திருமாலுக்கு | திருமாலுக்குப் |
| 7 | 13 | முரிஆவிகாரப்பட்டன | முரிஆனவிகாரப்பட்டன |
| 11 | 13 | புண்ணியபயனுகியும் | புண்ணியப்பயனுகியும் |
| 18 | 25 | ச்கிக்கமாட்டாமல் | சகிக்கமாட்டாமல் |
| ,, | 26 | பெய்யாமல | பெய்யாமல் |
| ,, | 27 | செங்கஈந்தள் | செங்காந்தள் |
| ,, | 32 | மரங்கலெல்லாம் | மரங்களெல்லாம் |
| 32 | 17 | மிதித்தெடுத்து | மதித்தெடுத்து |
| ,, | 23 | விலர்சமாகிய | விசாலமாகிய |
| 60 | 18 | தலையைதுண்டித்து | தலையைத்துண்டித்து |
| 74 | 19 | வாருங்கன் | வாருங்கள் |
| 77 | 4 | வாகன்த்தையுடைய | வாகனத்தையுடைய |
| 79 | 26 | திருவடிகளைணங்கி | திருவடிகளைவணங்கி |

## இரண்டாம்பிரிவில்.

### திருநெறிக்காரைக் காட்டுப்படலம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 3 | 1 | நுக்கிரகம் | அநுக்கிரகம் |
| 16 | 8 | எமுந்தருளியதுபோல் | எழுந்தருளியதுபோல் |
| ,, | 31 | அந்தச்சங்ம | அந்தச்சங்கு |
| 24 | 18 | பெறிருக்கும் | பெற்றிருக்கும் |
| 51 | 2 | வீற்றிருத்தருளும் | வீற்றிருந்தருளும் |
| 58 | 27 | முயல்கன் | முயலகன் |
| 64 | 25 | பரமவிதா | பரமபிதா |
| 68 | 14 | பதிற்றொன்பதாவது | பத்தொன்பதாவது |
| 69 | 27 | தானே | தாமே |
| 76 | 14 | வாழ்க்திருப்பாயாக | வாழ்ந்திருப்பாயாக |
| 78 | 10 | சிவமெருமான் | சிவபெருமான் |
| 92 | 4 | கலகத்தைகண்டு | கலகத்தைக்கண்டு |
| 94 | 23 | இரத்தைக் | இரத்தத்தைக் |
| 97 | 12 | விடுவசேனு | விடுவச்சேனு |
| ,, | 26 | விகடகூத்து | விகடக்கூத்து |
| ,, | 32 | விடுவசேனன் | விடுவச்சேனன் |
| 99 | 26 | வீடென்றே | வீடொன்றே |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 102 | 4 | தக்கணைசிறிச்சினந்து | தக்கணைச்சிறிச்சினந்து |
| ,, | 36 | கணவீரகளே! | கணவீரர்களே! |
| 104 | 33 | [illegible]தத்துக்கொலை | பலகைத்துக்கொலை |
| 112 | 21 | காஞ்கிமா | காஞ்சிமா |
| 113 | 30 | தூக்கிபிடி | தூக்கிப்பிடி |
| 116 | 1 | எப்பெருமான் | எம்பெருமான் |
| ,, | 9 | செம்பளவ | செம்பவள |
| 120 | 7 | வாணிசப்படலம் | வாணீசப்படலம் |
| 141 | 35 | வாட்டம | வாட்டம் |
| 175 | 28 | பார்செய்து | போர்செய்து |
| 177 | 16 | அபபடியே | அப்படியே |
| 180 | 34 | அதைகண்டு | அதைக்கண்டு |
| 181 | 3 | எம்மெருமான் | எம்பெருமான் |
| 199 | 32 | மேலிந்து | மெலிந்து |
| 216 | 6 | சொல்லலுங்கள் | சொல்லுங்கள் |
| 225 | 17 | காஞ்சித்தலதிற்கு | காஞ்சித்தலத்திற்கு |
| ,, | 24 | செங்கைக்கூப்பி | செங்கைகூப்பி |
| 228 | 22 | போகும்படித்தழுவி | போகும்படிதழுவி |
| 238 | 30 | அமுதம்போல | அமுதமும்போல |
| 240 | 14 | சத்தினிபா | சத்திநி |
| 242 | 32 | வேடிக்கமாட்டாதுகள் | வெடிக்கமாட்டாதுகள் |
| 246 | 23 | எழுதுங் | எழுந்து |
| 249 | 35 | கழ்ந்து | புகழ்ந்து |
| 252 | 16 | பிரதட்சணமாக | பிரதட்சிணமாக |
| 253 | 9 | பிரதக்ஷணம் | பிரதட்சிணம் |
| 255 | 8 | அறிந்துக்கொள்ளுங்கள் | அறிந்துகொள்ளுங்கள் |
| ,, | 35 | செம்பொனஆடை | செம்பொன்ஆடை |
| 260 | 3 | எழுந்து | எழுந்து |
| 267 | 21 | தவிக்கும்மடி | தவிக்கும்படி |
| 274 | 13 | எம்மெருமான் | எம்பெருமான் |

288ஆம் பக்கத்தின்மேல் இலக்கம் பிழையாயிருக்கிறபடியால்
289 முதல் 326ஆகக் கூட்டிக்கொள்க.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 294 | 34 | திருவுழா | திருவுலா |
| 303 | 11 | ஓதிஉணதபின் | ஓதிஉணர்ந்தபின் |
| ,, | 19 | இவைபோல்வளவும் | இவைபோல்வனவும் |
| 304 | 9 | தன்த்மா | தன்ஆத்மா |